உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

(மூலமும் உரையும்.)

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியன்.





தூத்துக்குடி
வேலாயுதம் பிரிண்டிங் பிரஸில் பதிப்பிக்கப் பெற்றது.

கூா-ம் ஆண்டு ஆவணி மீ,



குமரன் துணை.

# முன்னுரை.

தெய்வப் புலமைத் திருவள்ளுவப் பெருந்தகை அருளியுள்ள "திருக்குறளின் கருத்துக்களுக்குப் பொருத்தமான கதைகளை இராமாயணம் பாரத முதலிய இதிகாசங்களினும், காந்தம் பாகவத முதலிய புராணங்களினும், சிந்தாமணி சிலப்பதிகார முதலிய காவியங்களினும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களினும், வேறு பல நூல்களினும் இருந்து தெரிந்தெடுத்து எமது குலதெய்வமாகிய குமரேசனது முன்னிலையில் விண்ணப்பித்து அவற்றிற்கு விடை கூறுமுறைமையில் குறள்களை உதாரணமாக எடுத்துக்காட்டி யிற்றைக்கு மூன்று வருடங்கட்கு முன்னரே யிந்நூலை முடித்து வைத்தும் வெளிப்படுத்தக் கூசி வாளா விருந்தேன். இங்ஙனமிருப்ப, அறிஞர் பலர் இந்நூலுட் சில பாக்களைக் கேட்டு மகிழ்ந்து இதனை அச்சிலேற்றி அனை

வருக்கும் உபகரிக்கவேண்டுமென்று என்பால் அன்பால் என்னைத்தூண்டினர். அன்னார் வேண்டுகோளைச் சிரமேற்கொண்டு இது பொழுது இதனை வெளிப்படுத்துகின்றேன்.

கதைகளைக் குறட்பாவில் அமைத்தது திருக்குறள்களோடிணைதரத் தனிச்சீரும் சேர்த்திருத்தலினால் இந்நூல் முழுதும் நேரிசை வெண்பாவால் நிறைந்துள்ளது. தெய்வ வணக்கமும் அவையடக்கமும் உட்பட இதில் 1332 வெண்பாக்கள் அடங்கியுள்ளன.

செவிக்கும் வாய்க்கும் சிந்தைக்கும் இனியவாய சிறந்த சொற்செறிவும் இருவினையும் நீக்கும் அறமருந்தனைய உயர்ந்த பொருட் பொலிவும் பொருந்தி விளங்கும் [நமது தமிழ் வேதத்தின் அமிழ்தமயமான நீதிபொழுக்கங்களையும் பொருள் நுணுக்கங்களையும் அறிந்தனுபவிக்க ஆர்வமுடைய மக்கட் பிறப்



பின் மாண்பயனாகும். அருமையான இத்தரும நூலை யருளிய நாயனாரே நமக்கு நல்ல தாயாராவர். தாய்மார் தனவமுதூட்டி உடற்குறுதி செய்வர். நாயனார் குறளமுதூட்டி உயிர்க்குறுதி செய்கின்றார். இக்கருணை வள்ளல் காட்டியுள்ள குறள் நீதிகளும் அவற்றிற்கு உரிமையான பல அரிய சரிதங்களும் இதில் ஒருங்கமைந்துள்ளன. பாலொடு கலந்த நீர் பாலாகுமாறு போல் வள்ளுவர் நூலொடு கலந்த இதுவும் ஓர் நூலாகும் என்பது சால்பாம்.

எவ்வகையினுலாவது திருக்குறளின் பயனை எல்லாரும் பெற்று இன்புற வேண்டுமென்பதே என் வேட்கை. இவ்வேட்கையே யெனது நாணத்தை ஒருபுறமொதுக்கி யென்னை யிந் நூலியற்றும்படி செய்தது. இந்த எண்ணத்தை என் உள்ளத்தில் தோற்றுவித்து அதனை நிறைவேற்றிய திருவருளையும் குருவருளையும் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

ஜேகவீரபாண்டியன்.

---

# Introduction.

---

1. The present volume is a fitting companion to Thirukural, the divine work of great creative genius Thiruvalluvar who is universally revered as a saint throughout the Tamil World.

2. This book, the first of its kind in the field of Tamil Literature, is composed by the Great Scholar and Poet **Jagaveerapandian** of Ottanatham and every page of it, which is replete with the grace and splendour of word beauty enhanced by the ethical import of each couplet, is a clear proof of the author's deep penetration and critical powers of research in the

religious literature of the land.

3. The abstract ethical import of each couplet of the Kural is illustrated by suitable anecdotes culled out from the Puranic and other Hindu literature of the past and is written in the very same sweet rythym as that of the Kural which is a striking evidence of the author's poetic composition which is as much inspired as the original itself. For the reason that each Kural is definitely backed and aptly illustrated by some Puranic anecdotes and other, the value of original work is enhanced hundread fold, its meaning of each couplet being made richer and fuller. Hence such a useful and interesting work as the present, which is a genuine and patriotic attempt on the part of the author to renovate the past will surely attract the attention of the Tamil world.



4. At the same time, wherever the reader may turn his eye through the 1332 stanzas of this volume, each section bears the strong impression of the author's profound scholarship, critical powers of research and admirable talents of poetic composition. For the

reasons stated above it is no doubt that the present volume is a rich addition to the Tamil literature, the Tamil world itself owes a deep debt of gratitude to the author for having broken a new ground in the field of research.

5. This book must be in the hands of all lovers of Tamil literature, especially the readers of Kural if the full meaning of the divine work should be understood in its proper setting. Also the work may be placed in the hands of school boys and taught regularly as class lessons to them to produce in them a love and reverence for the past.

6. It is finally hoped that by the kind of reception given to the present volume by Tamil reading public, the author would be spurred into fresh composition of a similar nature and thus enrich the Tamil Literature.

**Swami Vidyanantha,**
*Madras.*

மதிப்புரை.

திருவள்ளுவநாயனார் தமது திருக்குறளில் அமைந்த பொருளின் சிறப்பை எடுத்துக்காட்டிய புலவர்கள் ஐம்பத்துமூவர். அந் நூலில் அமைவுற்ற ஆயிரத்து முந்நூற்று முப்பது அரிய குறள் வெண்பாக்களுக்கும் உரைதந்தவர் பதின்மர். அவருள் பரிமே லழகர் செய்துள்ள உரையே தற்காலம் ஆதரிக்கப்பட்டு வருகின் றது. இவ் உரை வித்வான்களுக்கன்றி ஏனையோருக்கு எளிதில் விளக்காமைபற்றி பண்டிதர்கள் பலர் இவ் உரைக்கு விளக்க உரைகள் எழுதித்தந்தனர். அன்றியும் கால நிலைமைக்கேற்ப குறள் வெண்பாக்களை வசன ரூபமாகவும் இயற்றியுள்ளார் சிலர். இவ்வாறு திருக்குறளின் அருமை நோக்கி தமிழ் மக்கள் எளி திற் கற்றுணருமாறு பண்டிதர்கள் பரிவுடன் பல்லாற்றானும் முயற்சி புரிந்திருக்கின்றனர். நிற்க.

நீதிகளைப் போதிப்பதே காவியங்களின் கருத்தாகும். காவி யங்களோ கதாரூபமாயுள்ளன. கதாரூபமாகத் திருக்குறளின் கருத்துகளை விளக்கி உணர்த்துவதால் கற்பவர்மனதில் நீதிகள் அழுத்தமுற்று அனுட்டானத்திற் கைகூடுமென்பது கருதி மாத வச் சிவஞான சுவாமிகள் திருக்குறளின் அதிகாரந்தோறும் குறிப்பிட்ட ஒவ்வோர் குறளைப்பொறுக்கி அதன் கருத்திற்கு இணங்கிய கதைகளைப் புகுத்து சோமேசர் முதுமொழி வெண் பா என ஒரு நூல் இயற்றி அளித்துள்ளார். அப்பெரியார து நெறியைப் பின்பற்றி, திருவாளர் ஜெகவீரபாண்டியன் அவர்கள் ஆயிரத்து முந்நூற்று முப்பது அரிய குறள்களுக்கும் பொருந் திய கதைகளை அமைத்து "திருக்குறட் குமரேச வெண்பா" எனும் இந்நூலை ஆக்கி அளித்திருக்கின்றனர். இந்நூலில் திருக் குறள்தோறின் அரும்பதங்களுக்குக் குறிப்புரையும், குறித்த

கதைகளுக்கு விளக்க வசனங்களும் எழுதப்பட்டுள்ளன. இக் கதைகள் இதிகாசங்கள் புராணங்கள் முதலிய பெரும் நூல் களினின்றே பெரிதும் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. குறள்களின் கருத்துக்களையும் அவற்றிற்கிணங்க எடுத்தாளப்பட்டுள்ள கதை



களின் கருத்துக்களையும் ஒப்பநோக்கில் இன்பமும், அன்பும், வியப்பும் விளைகின்றன. இதனால் இந்நூலாசிரியரது விரிவுற்ற கல்வி ஆராய்ச்சியும் திருவள்ளுவர் மீதுள்ள இவர்களது மெய்யன்பும் வெளிப்படுகின்றன.

தமிழுலகத்திற்கு இவர்கள் செய்துள்ள உபகாரம் மிகவும் பாராட்டற்பாலதாம். இப்பெருந்தகைமைக்குத் தமிழுலகம் செய்யும் கைம்மாறு யாதோ? "கைம்மாறு வேண்டா கடப்பாடு." ஆதலின் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் இந்நூலைப் பெற்றுக் கற்றுணர்ந்தொழுகுவதே தக்க பயனாகும். "நன்றி மறப்பது நன்றன்று" எனும் திருக்குறளைச் சிந்தித்து இந்நூலாசிரியரது நன்றியை மறவாமையே நம்மவர் கடமை.

இந்நூலாசிரியர் இறைவன் திருவருளால் நீடிய நீடிய ஆயுளும் பெறுவாராகுக.

இலக்குமணப்போற்றி.



# நூன்முகம்.

---

புனிதம் நிறைந்த இனிய இந்நூலே
நூலென நினைந்து சாலவும் மகிழ்ந்தேம்.

இந்நூல் பொய்யாமொழியைத் தழுவியுள்ளது. புராதனமான பல சரிதசாரங்களை உதாரணமாக எடுத்துக்காட்டிக் குறள் நீதிகளை யினிதாகவும் தெளிவாகவும் விளக்குகின்றது. திருக்குறளுக்கு எளிய நடையில் தெளிய எழுதிய ஒரு சிறந்த விரிவுரையென்றே யிதனைச் சொல்லிவிடலாம். இவ்வரிசையில் முன்னரே பெரியோர்களால் சில நூல்கள் செய்யப்பட்டுள்ளன. ஆயின், அவற்றிற்கும் இந்நூலுக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. அவை அதிகாரத்துக்கு ஒவ்வொரு குறளையே தெரிந்தெடுத்துச் செய்யப்பட்டன. இது குறள்கள் முழுமையும் தழுவியுள்ளது.

ஆயிரத்து முந்நூற்று முப்பது அரியகுறள்களுக்கும் பொருத்தமான கதைகளைத் திருத்தமாக இணைத்து இந்நூல் செய்யப்பெற்றிருக்கிறது. இதனானே இதன் அருமையும் பெருமையும் இனிதுபுலனும். இது சிறந்தவுரையும் நிறைந்த கதை விளக்கமும் திருந்தியகலனும் பொருந்தியுள்ளது.

இந்த அரிய நூலை ஸ்ரீமான் ஜெகவீரபாண்டியனவர்கள் செய்து உதவியிருக்கிறார்கள். இவர்கள் நண்ணிய நூலறிவோடு தண்ணிய சீலமும் வாய்ந்தவர்கள். இந்நூலை முடித்ததிறமே இவர்களது கல்வித்திறத்தை யினிது காட்டும். இதனைப் படித்தவுடனே பாண்டியனவர்களுடைய கவித்துவசக்தியும மதி நுட்பமும் ஆராய்ச்சித்திறனும் பயிற்சியின்பரப்பும் எவர்க்கும் நன்கு

தெளிவாம். உலகுக்கெல்லாம இஃதொரு கல்விநற்பாக இருக்குமென்று நம்புகின்றேன். இந்நூலின்பயனை யெல்லாரும் எய்தி இன்புறுமாறு திருவருளைச் சிந்திக்கின்றேன்.

திகம்பரவித்தியானந்த சுவாமிகள்,
சென்னை.

உ

# சிறப்புப்பாயிரம்.

---

வள்ளுவர்வாய் வந்ததிருத் தெள்ளமுதாந் திருக்குறளை
மருவி யின்பம்
அள்ளுமபர் குமரேச வெண்பாவொன் றலகுவந்து
அதிககச் செய்தான
கொள்ளுமியற் புலமையொடு கோதறுநற் குணங்கள்குடி
கொண்ட தூயோன்
தெள்ளு புகழ்ச் செகவீர பாண்டியனும் கவிராஜ
சிங்கமன்னே.

உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

## காப்பு

போதந் தருசெய்ய பொய்யா மொழிபுணர்த்தி
ஓதுகின்ற இந்நூற் குறுதுணையா—சோதிமிகு
மாதங்கங் கொண்டே மகிழ்பரமன் தந்தவொரு
மாதங்கங் கொண்டேன் மனம்.

இதன் பொருள்

மெய்யுணர்வைத் தருகின்ற செவ்விய திருக்குறளை விளைத்துச் சொல்லுகின்ற இந்நூலுக்கு நல்ல துணையாக, ஒளிமிக்க உமாதேவியைப் பொருபாகத்தில் வைத்து மகிழ்கின்ற பரமபதி தந்த ஒரு மாதங்கத்தை மனத்துட் கொண்டேன் (என்பதாம்)

மனத்துட் கோடல்=நினைத்துத் துதித்தல்.

பொய்யாமொழி யென்றது திருக்குறளை.

மெய்யான நூல் ஆதலால் இஃது இப்பெயர் பெற்றது.

தான் உணர்த்திய நெறியில் வழுவாது ஒழுகுவார்க்குப் பொருந்திய பயனைப் பொய்படாதபடி விளைவிக்கும் திருந்திய மெய் மொழிகளால் தேவர் இந்நூலைச் செய்துள்ளமை தேற்றம். செய்ய பொய்யாமொழி=செம்மையும், மெய்ம்மையும் சேர்ந்த மொழி.

மாதங்கம்= யானை. அது தனது முகத்தையுடைய விநாயக மூர்த்தியை யீண்டுவிளக்கி நின்றது.

மாதை அங்கத்தில் வைத்து மகிழ்பரமன் தந்த ஒரு மாதங்கத்தை யெனது மனத்தில் வைத்து யான் இந்நூலைச் செய்கின்றேன் என்பதாம்.

இதனால் இஃது இனிது முடியும் என்பது துணிபு.

இஃது இந்நூல் மங்கலமா முடியும் பொருட்டு ஐங்கரக்கடவுளை வாழ்த்திய தென்க.

10 அவையடக்கம்

திருக்குறளைத் தழுவிக் குமரேசனை முன்னிலையாகக்கொண்டு வெண்பாவால் செய்தபடியால இந்நூல் திருக்குறட் குமரேச வெண்பா எனப்பெயர் பெற்றது.

அவையடக்கம்.

அங்கணநீர் கங்கை படர்ந்தவுடனேபுனித
மங்கலநீர் ஆகி வயங்காதோ — இங்கெனது
புன்பாவும் வள்ளுவர்தம் பொன்பாவைச் சேர்ந்ததனால்
இன்பாகு மன்றோ இனி

புன்மை, எளிமையைக்குறிக்கும்; பொன்மை அருமையையுணர்த்தும்.

நதிகள் எல்லாவற்றினும் சிறந்த புனிதமும் இனிமையும் பொருந்தித் தன்னைச் சார்ந்தவுயிர்களுக்கு நலங்கள் பலவுந் தந்து வருகின்ற தெய்வ நதியாகிய கங்கை, எல்லா நூல்களினுஞ் சிறந்த தூய்மையும் வாய்மையும் தோய்ந்து, ஆழமும் தெளிவும் வாய்ந்து தன்னைப்பயந்த மக்களுக்கு எல்லா நலங்களையும் இனிது உதவிவருகின்ற தெய்வ நூலாகிய திருக்குறளோடு இங்கு உவமை கூறப்பெற்றது.

அங்கண நீர் கங்கை நீரோடு கலந்தவுடனே தனது இழிவு நீங்கி விழுமிய தீர்த்தமாதல்போல, எனது எளிய பாவும் வள்ளுவரது அரிய பாவைத் தழுவியுள்ளதனால் அதன் எளிமை நீங்கி அருமையும் பெருமையும் அடையும் என்பது கருத்து.

இதனால் அவையடக்கம் கூறப்பட்டது.

உ

சிவமயம்

# திருக்குறட் குமரேச வெண்பா.

## முதல் அதிகாரம்.

### கடவுள் வாழ்த்து.

பூவுலகோ டெங்குமேர் பூண்ட துமைகேள்வன்
கோமுகிழ்த்த தன்மை குமரேசா— மேவும்
அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.

இதன் பொருள்.

குமரேசா! உமைகேள்வனை கோமுகிழ்த்த தன்மை பூவுலகோடு எங்கும் ஏர் பூண்டது எனின்? எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதன்மையாக உடையன; அதுபோல, உலகம் ஆதி பகவனை முதன்மையாகவுடையதெனக.

கோ = கண.

எழுத்து உயிரும் ஒற்றும் என இருவகைப்படும். உலகம் உயிருடைப்பொருளும் உயிரில பொருளும் என இருவகைப்படும். அகரம் எல்லா எழுத்துக்களையும் கலந்து இயக்கித் தானும் தனித்து இயங்கும். ஆதிபகவனும் எல்லாப்பொருள்களையும்

கலந்து இயக்கித் தானும் தனித்தியங்குவன. அகரம் இயங்காவழி அனைத்தெழுத்தும் எனைத்தும் இயங்கா. அவன் அசையாவழி அணுவும் அசையாது இவ்வுண்மை உமைகேள்வன் திருக்கண் குவித்த காலத்தில் காணப்பட்டது. அது பின்வரும் சரிதத்தாற் காட்டப்படும்.

நம்மால் காணப்படுகின்ற இவ்வுலகத்தைக்கொண்டு காணப் படாத கடவுள் உண்மையை நயக்துக் காட்டவந்த நாயனர், நம் அறிந்துள்ள அகரமாகிய எழுத்தின் தன்மையைக்காட்டி நம் அறிவுச்செட்டாக ஆதிபகவனது இயல்பை இவ்வாறுணர்த்தினர்.

12 திருக்குறட் குமரேச வெண்பா.

இறைவன் அடங்கினல் எல்லாம் அடங்கும், அவன் அசைந் தால் அகிலமும் அசையும் என்னும் இந்தநிலைமைத்தன்மை அக ரத்துக்கும ஒருவகையில் அமைந்திருத்தலால் அஃது இங்கு ஆதிபகவனுக்குவமையாக வந்தது.

ஆயின, அகரம் அறியார்க்கு இது கருவியன்றே யெனின்? கடவுளது உண்மையை வெளிப்படுத்திக்காட்டும இவ்வுவமையானது எழுத்தறிவுடையார்க்கே அமையுமென்று கொள்க அறியார்க்கு வேறு வகையான் உணர்த்தப்படுமெனக. ''உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே'' என்றது தொல்காப்பியம்.

நமது தேவர் அருளியுள்ள திருக்குறளானது தமிழ்ச்சுவை முழுவதுங்கமழ்ந்து தமிழுலகுக்கே பெருஞ்சிறப்பாக அமைந்துள்ள ஒருதனி நூல் என்பது அதில் காணப்படும் சில குறிப்புகளை உய்த் துணர்வார்க்கு இனிது புலனும். அவற்றுட் சிலவருமாறு:— 'அகர முதல் னகர இறுவாய்' என ஆசிரியர் தொல்காப்பியனர் அருளி யபடி தமிழ் மொழியானது தனது எழுத்துக்களுள் அகரம் முத லிலும் னகரம் இறுதியிலும் அமையப்பெற்றுள்ளது. திருக்குற

ளும் அவவுரிமைதோன்ற முதலில அகரமும முடிவில னகரமும் பெற்று விளஙகுகின்றது. எங்கே பேசிறனின! "அகரமுதல" என ஆதியில தொடஙகியும, "முபககபபெறின" என முடிவில் முடிந்தும கிலவுதலகாண்க. இனனும தமிழெழுத்துக்கள் உயிரும் மெய்யும் என இருவகையாய் முப்பதென்னும ஒரு தொகையுள் அடங்கும். அவை உயிர்க்கணம், வனகணம், மென் கணம், இடைக்கணம் என நாலவகைக் கணங்களாகவும் வழங்கப் படும். இவ்வினமுமதோன்ற முதற குறள் முதல், நான்காவது வரை இக்கணங்கள் நான்கும முறையே இணங்கியுள்ளன.

இன்னும், நுண்ணுணர்வான் ஆராய்வார்க்குப்பல நலன்களும் நயங்களும் இதில தோன்றும். அவையெல்லாம் திருக்குறளானது தமிழுக்கே உரிமையும் பெருமையும் தாவந்த ஒரு தனி நூல் என்பதை பினிதுணர்த்தும் என்க.

கடவுள வாழ்த்து. 13

## கதை

உமைகேள்வன் கோமுகிழ்த்ததன்மை:—பிரமனின் மானச புத்திரர்களாகிய சனகாதியர் நால்வரும் உமாபதியை பணிந்துத் தங்களுக்குத் தத்துவ ஞானத்தை யுணர்த்தும்படி வேண்டினர். அது வாக்காற் சொல்லிப் போதிக்கும் இயல்பினையுடையதன்றாதலால் அப்பரமன் சொல்லாமற் சொல்லல் என்னும் மோன நிலையால் அவர்கட்கு ஞானநிலையை யுணர்த்தினார். என்னுள் என்னைப்போல் எங்கும் நிறைந்துள்ள அம் முழுமுதற் பரமன் அங்ஙனம் உணர்த்துங்கால் திருக்கண் முகிழ்த்துச் செங்கை குவித்துச் சின் முத்திரை தரித்தார் சிறிதுபொழுது அசைவற்று

மோனமுற்றிருந்தார். அவ்வமையம் அகிலமும் அவ்வண்ணமே யடங்கியிருந்தன. உயிர்களெல்லாம் முயற்சியும் இச்சையும் முற்றாகத்துறந்தன. அலைகின்ற காரணங்கள் அடங்கி நின்றன. பின்னர் மோனம் நீங்கி விழித்தார். எல்லாவுயிர்களும் இச்சை யுற்றெழுந்தன. உலகபோகங்களை நாடின. முயற்சியைக் கூடின, என்பதாம்.

உடலில் உயிர்போல் எல்லாவற்றுள்ளும் கலந்து இறைவன் எழுந்தருளியிருக்கின்றார் என்பதும், சகல சீவகோடிகளும் அண்ட கோடிகளும் அவருக்குத் திருமேனிகளாக அமைந் துள்ளன என்பதும், அவரே உலக முதல்வன் என்பதும், இதனால் இனிது புலனாம்.

இச்சரித்திர வுண்மைகள் இதனடியில் வருகின்ற கவிகளில் நன்கு தெளிவாம்.

காரணமுதல்வன் மோனக் காட்சியால் அமரரெல்லாம்
சூர் அரமகளிர் தங்கள் துணைமுலைப் போகமின்றி
ஆரிடர் நிலைமை தன்னை படைத்தனர் அனக்கர் சூழ்ந்த
பாரிடையுயிரும் காமப்பற்றுவிட்டிருந்த வன்றே.
ஆரணன் தனது மைந்தர்க் கரும்பெறல் ஞானபோதம்
ஓரிறை காட்டு முன்னர் உலகெலாம் ஒருப் பாடொன்றி
14 திருக்குறட் குமரேச வெண்பா.
யீருடல் முயக்கும் ஆர்வமின்றியே யிருந்த பார்க்கும்
காரணன சிவனே பெண்கை சுற்றவும் வேண்டற் பாற்றே.
(கந்தபுராணம்)

இனி, உமை, கேள்வன்கோவை முகிழ்த்த தன்மையென்று கொண்டு உமாதேவி பரமன் திருக்கண்களைப் புதைத்தபொழுது நிகழ்ந்ததையும் கொள்ளலாம். அது வருமாறு:—

பண்டொரு காலத்தில் ஈசனும் பார்வதியும் ஓர் ஆசனத்தில் எழுந்தருளியிருந்தனர். அப்பொழுது இனிய பலமொழிகள் இடையே நிகழ்ந்தன. முடிவில் அம்மையார் ஐயனை நோக்கி, "தேவே! சூரியனும் சந்திரனும் தேவரீருக்குத் திருக்கண்களாக அமைந்துள்ளன என்று தத்துவ நூல்கள் சாற்றுகின்றனவே அஃதுண்மைதானோ?" என்று புன்னகையோடு வினவினர். இறைவன் உள்ளதுதான் என்றார். பகலொளியும், இரவொளியும் தேவரீரது விழிஒளிகளாகவா விளங்குகின்றன என்று வியந்தார். மகிழ்ந்தார். உடனே விநோதமாக அம்மையார் ஐயன் திருக்கண்களைப் புதைத்தார். உலகம் முழுதும் இருண்டது. உயிர்களெல்லாம் இருளில் மருள் அடைந்தன. துயர் என்று பயந்து அம்மையார் கையை எடுத்தார். உடனே வையமெங்கும் வான்ஒளி பரந்தது. மருண்ட வுயிர்களும் தெருண்டெழுந்தன. இவ்வுண்மை பின்வரும் கவிகளில் இனிது தோன்றும்.

ஈசனார் விழி புதைத்தலும் இருட்பிழம் புருக்கிப்
பூசினாலென இருண்டன திசைகளும் புவியும்
மாசில நீலமால் வரைஎனக் கருகின மலைகள்
காசலாவிய நதியெலாம் பழனை போற் கருத்த

மறைபவனும் காரணனும் முனிவர்களும் வசுக்களும் நான்
மறையும் வானோர்
இறைவனும் விழிஒளி போயப் பிறவிக்கெடுக் குருடரென
இருந்தார் மற்றைக்
கடவுள் வாழ்த்து 
தலைவிரை முதல்விலங்கு பறவைகளும ஒளியிழந்த
கண்ணவான
அறவறமும் பிறவறமுந் தொலைந்தன மற்றுள தொழிலும்

தொலைத்ததன்றே. (அருணாசலப்புராணம்.)

இனி, கோ என்பதற்கு அரசன் என்று பொருள்கொண்டு அருச்சுனனையும் பாண்டியனையும் கொள்ளலாம். வில்லாலும் பிரம்பாலும் இவ்விருவரும் பரமனையடித்தபொழுது அவ்வடி உயிர்களிலும் பரந்து நின்றமைதெளியப்படும் இப்பொருளில் மை கேள்வனை, கோ கைமுகிழ்த்த தனைமையென்று கொள்ளுதல் வேண்டும்.

## அருச்சுனன் வில்லாலடித்த கதை

அருச்சுனன் சிவபெருமானை நோக்கி அருந்தவஞ்செய்தான். அக்காலத்தில் நிகழ்ந்தவாகக்காக அப்பெருமானை வில்லால் அடித்தான். அவ்வடி உலகெங்கும் சென்று பரந்தது. இதனை வில்லியாழ்வார் சொல்லியுள்ள இன்கவிகளால் நன்குணரலாம்.

அவை

வேதம் அடியுண்டன விரிந்தபல ஆகம
விதங்கள் அடியுண்டன ஐம்
பூதம் அடியுண்டன வினாழிகை முதற்புகல் செய்
பொருளொடு சலிப்பில் பொருளின்
பேதம் அடியுண்டன பிறப்பிலி பிறப்பிலி
பிறங்கல் அரசன்றன் மகளார்
நாதன் அமலன் சமரவேட வடிவங்கொடு
கன்கை படியுண்ட பொழுதே.

விண்ணிலுறை வானவரில் பாரடிபடாதவர்
விரிஞ்சன் முதலோர் உதறிலும்
மண்ணிலுறை மானவரில் பாரடி படாதவர்
மனுக்கள்முதலோர்கள் அதலக்



கண்ணிலுறை நாகர்களில் பாரடிபடாதவர்கள்
கட்செவி மகிபன் முதலோர்

எண்ணில் பலயோனியிலும் பாவம் படாதன
இருந்துழியிருந்துழியரோ.

(பாரதம்)

## பாண்டியன் பிரம்பால் அடித்த கதை

முன்னொரு காலத்தில், வைகை நதியில் பெருவெள்ளந் தோன்றி யிருகரைகளையும் உடைத்துச் சென்றது. பாண்டிய மன்னன் ஏவலால் மதுரை நகர்வாசிகள் எல்லாரும் அக்கரைகளை ஒழுங்கு படுத்தச் சென்றனர். அந்நகரில் பிட்டு விற்று வரும் கரைமூதாட்டி ஒருத்தியிருந்தாள். அவள் பங்குக்கு ஆள் வரவில்லை. அதனால் அவள் வருந்தினாள். அரசனது தண்டனை வருமென நினைந்து நடுங்கினாள். அருள்வள்ளலாகிய பரமன் இவளது நடுக்கத்தைத் தீர்க்கத்துணிந்தார். ஒரு கூலியாள்போல் வடிவங்கொண்டார். இவளிடம் வந்தார். கூலிக்காக கொஞ்சம் பிட்டுவாங்கினார். இன்றூர் அவள் பங்கின் கரையை அடைக்கச் சென்றார். சென்றவர் உள்ளபடி வேலைசெய்பவரில்லை. செய்வது போல்நடித்தார். அங்கும் இங்கும் அலைந்து நின்றார். இந்நிலையைத் தானைத்தலைவர்கள் அறிந்தார். அரசனுக்கு அறிவித்தார். அரசன்சினந்தான். ஐயன் முதுகில பிரம்பால் அடித்தான். அவ்வடி உலகமெங்கும் ஒருங்கே பட்டது.

இவ்வுண்மை யிதன் அடியில் வருகின்ற கவிகளால் இனிது தெளிவாம்.

வன்னல்தன் கோபங்கண்ட மாறுகோற் கையர் அஞ்சித்
தன்னருஞ் சினத்தராகித் தடக்கைதொட் டீர்த்துப்பற்றி
உன்னொடு புறக்கீழ் மேலா யுயிர்தொறு ஒளித்துநின்ற
கள்வனை யிவன்றான் வந்தி யாளெனக் காட்டிநின்றார்.

கண்டனன் கனன்று வேந்தன் கையிற்பொற் பிரம்புவாங்கி
அண்டமும் அளவிலாதவுயிர்களும் ஆகமாகக்
கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன் கூடையோடு
மண்டனை யுடைப்பிற்கொட்டி மறைந்தனன் நிறைந்தசோதி.

பாண்டியன முதுகிற்பட்டது செழியன்
பன்னியர் உடம்பினிற்பட்
டாண்டகையமைச்சர் மேனிமேற்பட்
டரசிளங் குமரர் மேற்பட்டது
ஈண்டியகழற்கால வீரர்மேற்பட்டது
இவுளிமேற் பட்டது பருமம்
பூண்டவெங் கரிமேற் பட்டது எவ்வுயிர்க்கும்
போதன் மேறபட்டது அதத்தழும்பு.

பரிதியும மதியும பாம்பும மீன்கோளும
பன்னிறம படைத்த தாண்மீனும்
இருநிலம புனல்கால எரிகடுங் கனல்வான்
என்னும் ஐம்பூதமுங் காரும்
கருதியும் ஆறு சமயவானவரும
சுரர்களும் முனிவரும் தொண்டின
மருவிய முனிவர் கணங்களும் பட்ட
மதுரை நாயகனடித்தழும்பு

வானவர் மனிதர் நாகர் புள்விலங்கு
மாகணஞ்சிதல எறும் பாதி
யான பல்சாமும் மலைமரம்கொடி புல
ஆதியாம் அசரமும பட்ட

ஆனவை கருவும் பட்டன தழும்போடு
உதித்தன வுயிரில் ஓவியமும்
தானடிபட்ட சராசர சடங்கள் தமக்கு
உயிராயினோன் தழும்பு. (திருவிளையாடற் புராணம்)



இவ்வெல்லாவற்றாலும கடவுள் ஒருவர் உளர் என்பதும், அவர் அகரம்போல் உலகு உயிர் எங்கும் ஒழிவற நிறைந்த ஒண்பொருள் என்பதும் தெளியப்படும.

கடவுளது உண்மையும் தன்மையும் இச் செய்யுளால் கூறப்

கற்றிருந் தாருவனர் கல்விநலம் எய்தாமல்
குற்றமுற்றார் என்னே குமரேசா—வெற்றிபெறக்
கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். உ

இ—ள.

குமரேசா! தாருவனர் கற்றும் அறிவுற்றிருந்தும் கல்வி நலத்தை அடையாமல் ஏன் குற்றமுற்றார் எனின், வாலறிவனது நல்ல தாளைத் தொழாதவர்கட்குக் கற்றதனால் ஆயபயன் இல்லை என்க.

வாலறிவு=மெய்யுணர்வு. அதனை யியல்பாகவே யுடையவன் என்பார் வாலறிவன் என்றார் தொழுவார்க்குத் துன்ப நீக்கமும் இன்பப்பேறும் நல்கும் நலங்கருதி நற்றாள் என்றார்

இறைவன் மெய்யறிவுடையான் என்பதும், தன்னைத் தொழுவார்க்கு அழிவில் இன்பத்தை அருளுவான் என்பதும், கல்வியறிவுடையார் எவரும் அவனது அடிகளைத் தொழுதல் வேண்டுமென்பதும், தொழவில்லையானால் அவ்வறிவாற் பயனில்லையென்பதும், இதற்குச் சான்றாகத் தாருவனர் கற்றிருந்தும் தாள் தொழாமையால் பயனைப் பெற்றிலர் என்பதும் இதில் காணப்

பமும்.

கதை

பூர்வகாலத்தில, இமயமலையருகில தாருகம் என்றொரு வனம் இருந்தது. அதில முனிவர் பலர் வாசஞ்செய்திருந்தனர். இவர் யோக நெறிகளில தேர்ந்தவர். நூல் பல கற்று நன்னறிவு பெற்று மேன்மையுற்றிருந்தனர் தாம் செய்கின்ற

கடவுள் வாழ்த்து. 19

வேள்வி முதலிய நல்ல கருமங்களே கருதியபயன்கள் எவற்றையும் தருமென்று உறுதியாகத் துணிந்தனர் அதனால் மற்றொரு கடவுளை வழிபடல் வேண்டாமென்று மனச்செருக்குற்று மதியாதிருந்தனர் இங்ஙனம் இருந்த இவர்களை உய்விக்கும் பொருட்டு கண்ணுதற் பரமன் எண்ணினர். கண்டார் எவரும் காதல் கொளளததக்க ஒரு புருட வேடந்தாங்கினர். திருமாலை மோகினி வடிவெடுக்க உடனவரச் செய்தார் அவ் வனத்திற் புகுந்தார் அம்முனிவரையும் அவர் தம பத்தினிமாரையும நிலை குலைந்து அவர் கொணடிருந்த மனச செருக்கை யகற்றித் தெளிவித்தார். அவரும் தெளிந்தார் தங்கள் சிறுமையை யுணர்ந்தார். பின்னர் நற்றாள தொழுதார். நற்பயன பெற்றார். இதன் விரிவைக் கந்தபுராணத்தில காண்க

வாலறிவனை தொழுதலே நூலறிவுக்குப் பயன் என்பது இதனால கூறப்பட்டது



நீடிய வாழ் வெய்தி நிலமிசையேன மார்க்கண்டர்
கூடினர்பே றின்பம குமரேசா—நாடி
மலர்மிசை யேகினன மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

இ—ள.

குமரேசா! மார்க்கண்டர் நீடிய வாழ்வையும் பேரின்பத்தையும் ஏன் கூடினார் எனின், மலர்மிசை யேகினானது மாணடிகளைச் சேர்ந்தவர் நிலமிசை நீடுவாழ்வார் என்க.

மனம் தாமரைபோன்ற வடிவினையுடையதென்பது தத்துவ நூலார் துணிபு. ஆதலால் இங்கு மலர் என்றது மனமாகிய தாமரையை எனக. இதனை உள்ளக் கமலம் என்று குலபதி நாயனாரும் கூறியுள்ளார். சேர்ந்தாரை நீடுவாழச் செய்யும் சிறப்பு நோக்கி மாணடி யென்றார். உரு உடம்பால் இத் திருவடியைச் சேர இயலாதாதலின் சேர்தல் என்றது இங்கு நினைத்தல் என்னும் பொருளைக் குறித்து நின்றது.



அன்போடு நினைப்பவரது நெஞ்சத்தில் இறைவன் இன்போடு எழுந்தருளி யிருப்பன் என்பதூஉம், அவனது அடிகளைச் சேர்ந்தவர் அழியாவாழ்வும் கழியா இன்பமும் பெறுவர் என்பதூஉம் இதில் காட்டப்பட்டன. இவ்வுண்மை மார்க்கண்டர்பால் காணப்படும்.

கதை

பூர்வகாலத்தில் கடக நகரத்தில் குச்சகன் மரபில் மிருகண்டு என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவர் மருத்துவதி யென்னும் உத்தமியை மணந்து இல்லறம் புரிந்து இன்புடன் வாழ்ந்தார். பொறையும் அருளும் பூண்டொளி சிறந்தார், நூலறிவுடனே சீலமும் வாய்ந்தார். ஆயினும் மகப்பேறு இன்மையால் மனமிக மெலிந்தார். இறைவனை நோக்கி யருந்தவஞ் செய்தார். அருளுடைய பரமனும் இவர் தம் அன்புக்கிரங்கி,

மாதவத்தோய் !

தீமைதரு குணமே மிக்குச சிறிதுமெய் யுணர் விலாமல
மூடமையுட வெதிருமாகி முடமுமாய் விழியு மின்றி
யோகமிய ஆணடு நூறும உறுதணியுமபபோனுகி
மீதமொரு புதலவன றனனை மீறுமோ? அலலது
கோலமெய் வனப்புமிகுக் குறைவிலா வடிவமெய்தி
வேறுறு பிணிகளஇன்றி யெமகரும அனபுடையோனுகிக்
காலமஎண்ணிரண்டே பெயறுககலைபல பயினறுவலல
பாலனைததருதமோ நினஎண்ணம எனபகர்தி யென்றான்.

இறைவன் அருளிய இததிரு மொழிகளைக் கேட்ட மிரு கண்டு முனிவர் சிறிதுபொழுது சிநதிததார். பின் அந்திவன் னை வந்தித்தார். ஆயுள் சிறிதுடையனுயினும் அறிவு பெரி துடையனே எனக்கு வேண்டுமென வேண்டினர். அங்ஙனமே யருள அருமையான ஆண்மக வொன்று இவர் மனைவிபால் வந்துதித்தது. மார்க்கண்டேயன் என்று அம்மகவுககுப் பெய ரிட்டனர். பிறைபென காளும பெருகி வளர்ந்தது, வளர்ச்சி



யில் மகிழ்ச்சியுற்றிருந்த பெற்றேர் அப் புதல்வனுக்கு வயது பதினறே யென்று இறைவனருளியிருந்த உண்மையை யெண்ணி யெண்ணி வருந்தினர் மகனும் வளர வளர இவர் மனத்தில் வருத்தமும் மிகுந்து வளர்ந்தது. பெற்றேர் கவலையைக் குறிப் பாலுணர்ந்த இம் மகன் உண்மையை வினவியோர்ந்தான். தாயை யும் தந்தையையும் தேற்றினன். தவததால் எவற்றையும் பெறலாமென்று அவிநாசன, மணிகர்ணிகையை யடைந்தான். பெருமானை நினைத்துப் பெருந்தவஞ் செய்திருநதான். காலனும் காலம் பார்த்து இப்பாலன்பால வந்தான், அழைத்தான். அதட்டி னன். வெகுண்டான. மருட்டினன். வெருட்டினன் பாலன் ஒன்றுக்கும் அஞ்சவில்லை முடிவில காலன் பாசததால பாலனை யீர்த்தான் உடனே பரமன் தோன்றிப் பாலனைக் காத்துக்

காலனை வீழ்த்தினர் "இத் தவப் புதல்வனுக்கு முன்னர் யாம் தந்த வயது பதினாறு என்றெண்ணற்க. என்றும் பதினாறென்றே யெண்ணுக" என்று திருவருள் செய்து காலனையும் மகிழ்வித்து மறைந்தார். மார்க்கண்டேயரும் அழியாவாழ்வு பெற்றானந்தம் அடைந்தார். இதன் விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

மார்க்கண்டர் தமக்குக் கருவிலே யமைந்த பதினாறு வயதை இறைவன் அருளால் என்றும் பதினாறாகப் பெற்று இன்றும் வாழ்ந்து வருதல் தேற்றம்.

இறைவன் அடிசேர்ந்தார் கேடு தவாழ்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

எள்ளிச் சமணர் இடும்பைசெய்தும் அப்பரேன்
கொள்ளவில்லை துன்பம் குமரேசா—உள்ளியொன்றை
வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில.

இ—ள்.

குமரேசா! சமணர்கள் இகழ்ந்து இடும்பைகளைச் செய்திருந்தும் அத்துன்பங்களை யேன் அப்பர் அடையவில்லை



யெனின், வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவனது அடிகளைச் சேர்ந்தவர்க்கு இடும்பைகள் யாண்டும் இல்லை என்க.

எக்காலத்தும், எவ்விடத்தும், எவராலும், எவற்றாலும், எவ்வகையாலும் என்பார் யாண்டும் என்றார். இடும்பை = துன்பங்கள். அவை தன்னால் வருவன, பிறரால் வருவன, தெய்வத்தால் வருவன, என மூவகைப்படும். இவற்றைத் தாபத்திரயம் என்பர். வேண்டிய பொருள் கிடையாமையால் துன்பம். வேண்டாதன எய்தினும் துன்பம். ஆதலால் விருப்பும் வெறுப்பும் துன்பங்கட்கே துவாரமாம். இவை ஒழிந்த உயிர்க்கு இருவகை யேதுவான் மூவகைத் துன்பங்கள் வாராமை தெளிவாம்.

எல்லாம் அறிந்து எங்கும் நிறைந்து என்றுமுள்ள பரம்பொருள் விழைதற்குரிய வெறுத்தற்குரியதொரு பொருள் ஒன்றும் இன்மையால் அப்பரம்பொருளுக்கு வேண்டுதல் வேண்டாமையிலான் என்று பெயரிட்டனர்.

கடவுள் விருப்பும் வெறுப்பும் இல்லாதவர் என்பதும் அவரது திருவடிகளைச் சேர்ந்தாருக்குத் துன்பங்கள் சேரா என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை திருநாவுக்கரசர் என்னும் அப்பரால் உணரப்படும்.

### கதை

அப்பர் சைவசமய குரவர் நால்வருள் ஒருவர். இவர் திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே, வேளாளர் குலத்திலே, கொறுக்கையர் குடியிலே தோன்றியிருந்த புகழனாருக்கும் மாதினியாருக்கும் புதல்வராய்த் தோன்றினார். இளமைப் பருவத்திலேயே பலகலைகளையும் வழுவறக் கற்றார். அதன் பின் சமண மதத்தைச் சார்ந்தார். அம்மத நூல்கள் பலவற்றையும் ஆய்ந்தார். புலமையும் போதனா சக்தியும் வாய்ந்தார். இவரது பெருமையைக் கண்ட சமணர்கள் இவரைத் தங்கள் மதத்துக்குத் தலைவராக்கித் தருமசேனர் என்ற பட்டமும் தந்து வழிபட்டு வந்தார். மருணீக்கியார் என்பதுதான் இவரது பிள்ளைத் திருநாமம். இங்ஙனம் இருப்ப, இவருடன் பிறந்த திலகவதியார்



என்னும் அம்மையார் தம் தம்பி சமணபோதகனாய் நின்று வரும் நிலைமையை நினைந்து மிகவும் வருந்தினார். தாம் எழுந்தருளியிருந்த திருவதிகை வீரட்டானத்துச் சிவபெருமானை வணங்கித் தம்பி சமண மதத்தைக் கைவிட்டுச் சைவமதத்தைச் சாரவேண்டுமென்று மனமுருகி வேண்டினார். பெருமானும் அவ்வம்மையார் வேண்டுகோட்கிரங்கித் தருமசேனரைச் சூலைநோயால் வருத்தியாட்கொண்டார். சைவமதத்தை இவர் சார்

தனையைச் சமணர்கள் அறிந்தனர். உடனே வெருண்டு திரண்டார். தமது மதம் இனி நில்லாதெனப் பெரிதும் மருண்டார். அக்காலத்தில் தங்கள் மதத்தைத் தழுவியிருந்த பல்லவராஜனை வந்து கண்டார். அவன்பால் உற்றதை முற்றும் ஒழியாதுரைத்தார். அடக்காக் கோபம் அவனும் அடைந்தான். அவனது உதவியால் நமது அப்பருக்குச் செப்புதற்கரிய பெருந் துன்பங்களைச் சமணர்கள் துணிந்து செய்தனர். முதலில் யானையை மேலே ஓட்டினர். நஞ்சையுள்ளே யூட்டினர். நீற்றறையில் ஆழ்த்தினர். கல்லுடன் பிணித்துக் கடலில் வீழ்த்தினர். இன்னும் பலவே இவர் செய்த கொடுமைகள். இவற்றால் ஒருசிறிது துன்பமும் நமது நாயனார் அடைந்திலர். மகிழ்ச்சியும் இன்பமும் மாறாதிருந்தனர். மண்டியெரிகின்ற நீற்றறையினுள்ளே தனியேழு நாளளவும் அடைப்பட்டிருந்தனர். அதில் நமது ஐம்புலன்களும் அளவில் இன்பத்தை யனுபவித்தன. இவ்வுண்மையை, நமது அப்பர் அப்பொழுது செய்த அருமைத் திருவிருத்தம் தெளிவுறுத்துகின்றது. அதுவருமாறு:—

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
யீசன் எந்தை யிணையடி நீழலே. (தேவாரம்)

இறைவன் அடிசேர்ந்தாருக்கு யாண்டும் இடும்பையில் என்னும் உண்மையை யிப்புனித வாக்கால் நாம் இனிதுணர்கின்றோம். இதன் விரிவைப் பெரியபுராணத்தில் காண்க

24 திருக்குறட் குமரேச வெண்பா.

இறைவனது அடிகளைச் சேர்ந்தாரை இடும்பைகள் சேரா என்பது இதனால் கூறப்பட்டது

வாட்புலிபோற் பாய்ந்துகொன்ற வல்வினையேன் சோவில்லை

கோட்புலியார் தமமைக குமரேசா—கேட்பின்
இருளசேர் இருவினையும சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிநதார் மாட்டு.

இ—ள்.

குமரேசா! கோட்புலி நாயனார் புலிபோற் பாய்ந்து தமது சுற்றத்தாரைக் கொன்றார். அக் கொலைவினையானது ஏன் அவரைச் சேரவில்லை யெனின், இறைவனது பொருள் சேர்ந்த புகழை விரும்பினமையினாலே இருள் சேர்ந்த இருவினைகளும் சேரா என்க.

வினைகள் மயக்கத்தால் வருமென்பார் இருள் சேர்வினை யென்றார். உண்மையான புகழென்பார் பொருள் சேர் புகழ் என்றார். இருவினை=நல்வினை தீவினை. இந்த இரண்டு வினைகளும் மூன்று காரணங்களின் வழியாக உளவாம்.

அறக்க முதலிய சிறந்த இன்பங்களையூட்டி உயிர்களைப் பேரின்பத்தைப்பெற வொட்டாதபடி தடுத்தலினால் நல்வினையுஞ் சேரா தென்றார்.

இறைவன் மெய்ப்புகழுடையான் என்பதும அவனது கலியாணகுணங்களை விரும்பிக் கருதித்தல் வேண்டு மென்பதும், அன்னம் துதிப்போரை வினைகள் சேரா என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கோட்புலி நாயனாரிடம் உணரப்படும்.



கதை

கோட்புலிநாயனர் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழ நாட்டிலே வேளாளர் குலத்திலே நாட்டியத்தான் குடியிலே பிறந்தவர். சிவபக்தியிற் சிறந்தவர். அஞ்சா நெஞ்சம் எஞ்சாவலிமையும் வாய்ந்தவர். வாள்வேல் முதலிய ஆயுதப் பயிற்சியில் தேர்ந்தவர். அந்நாட்டு அரசனிடத்தில் சேனைத் தலைவராயமர்ந்திருந்தார். தாம் ஈட்டிய பெரும் பொருளைச் சிவாலயங்களுக்கும் சிவனடியார்க்குமே, மகிழ்ந்து உதவிவந்தார். இங்ஙனம வருநாளில் பொருபடைகொண்டு ஒரு போர்முனைக்குப் போகும்படி அரசன் இவரையேவினன். போர் மேற்சென்று மீண்டு வருமின்றளவையும சிவாலயங்களுக்குச் செவ்வையாகத் திருவமுது செய்யும்படி திட்டஞ்செய்தார். அதன் பொருட்டு வேண்டிய நெல்லைத் தொகுத்தார். சேமஞ் செய்தார். தமது சுற்றத்தாரை யழைத்தார். எவ்வித காரணத்தாலும் இந்நெறபொதியிற் சிறிதும எடுத்தலாகாது என்று அவர்கட்குக் கட்டளையிட்டார். அரசன் கட்டளைப்படி தாமும போர் மேறபோனர் போனவர் பகைவரைப் பெருதுடன் வென்றார். வெற்றியும் புகழும முறறவும பெற்றார். இவர் சென்றிருந்த சில காலத்துள் தமது நாட்டிற் பஞ்சநேர்ந்ததினால் இவரது பெற்றோரும சுற்றத்தாரும சேமஞ்செய்திருந்த நெலபொதியிற் சிறிதெடுத்துச் சிவித்திருந்தனர் வெற்றிபெற்று மீண்டுவந்த நாயனர் ஆண்டு நிகழ்ந்ததைக் கேட்டறிந்தார். கொண்டார் கோபம், எடுத்தார் வாளை. தமது மனைவி முதலிய சுற்றத்தார் அனைவரையும வாளால் வீசித் துணித்தார். இறுதியில் அங்கோர் இளங்குழவியையும் வெட்டச் சினந்தார். அதுகண்ட சிலர் கடுமெய்கி "ஐயா! இப்பசிய பாலன் தமதுநெல்லின் அன்னத்தை புண்ணவில்லையே" எனவேண்டினர். இக்குழவி யெனது நெலலின் அன்னத்தை உண்ணவில்லை யெனபதுண்மை ஆனாலும் அவ்வன்னத்தை உண்ட தாயின்பாலை உண்டிருக்கு மல்லவா என்று மொழிந்து பாலனை மேலே வீசி யெறிந்தார் தமது

வாளால் கூசாது அரிந்தார். உடனே பரமன் இவரது திடபக்தி யைக்கண்டு வியந்து மகிழ்ந்தார். காட்சி தந்து கருணைசெய்தார். அன்பனே! உனது வாளால் மடிந்த உன் சுற்றத்தாரனைவரும் துறக்க இன்பந்துய்க்கின்றனர். நமபால்வைத்த உனது அன் பிற்கு யாம் அகமிக மகிழ்கின்றோம். நீயும் பெறுக பேரின்பம் என்றுபெருமான் அருளினர். யாவரும் இருவினை நீங்கினர். இன்பம் எய்தினர். இதன் விரிவு பெரிய புராணத்தில் காணப் படும்.

இறைவனது அருள் சேர்ந்தாரை இருவினைகள் சேரா என் பதிதனுள் கூறப்பட்டது.

நாடி நெறிநின்ற நல்சன காதியரேன்
கூடினர்நீள் வாழ்வைக் குமரேசா—ஓடும்
பொறிவாயில் ஐந்தவித்தான்பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். ௬

இ—ள்.

குமரேசா! சனகர் முதலிய நால்வரும் என்றும் அழியாத வாழ்வை யேன் எய்தினர் எனின், பொறிவாயில் ஐந்து அவித்தா னது பொய்தீர்ந்த ஒழுக்கநெறியின்கண் நின்றவர் நீடுவாழ்வர் என்க.

சனகாதியர் என்றது சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் என்னும் முனிவர் நால்வரை. பொறி என்றது மெய் வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐந்து ஞான இந்திரியங்களை.

பொறிகளின் வழியாகச் சென்று சத்தம் பரிச முதலிய புலன்களை நாடிப்பற்றும் புன்மை இறைவனுக்கு இன்மையால் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்றார்.

அவித்தவிதை உருவுடன் காணப்படும். ஆனால் முளைக்காது அதுபோல் பொறிகள் இருக்கும். புலன்களைப் பற்று என்பதாம்.

கதை

ஐந்தவித்தான் அருளிய ஞான நெறியில் சனகாதியர் நால்
வரும் வழுவாமல் நின்றார் மனத்தைப் புறத்தில் செலுத்தாமல்



பரத்திற் செலுத்தினர். அதனால் அந்தமில் இன்பத்தை அடை
ந்தார். சிவயோகிகள் என்னும் சிறப்பினைப்பெற்றார். சித்திபவுல
கில் நீடுவாழ்வுற்றார்.

இதன் விரிவைச் சிவமகாபுராணத்தில் காண்க.

இறைவனருளிய மெய்ந்நெறி நின்றார் எய்தும் பேறு இதனால் கூறப்பட்டது.

வானவரேன் நஞ்சினால் வந்ததுன்ப மாற்றவுமை
கோனடியைச் சேர்ந்தார் குமரேசா—எனோர்
தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

இ—ள்

குமரேசா! நஞ்சினால் வந்த துன்பத்தை மாற்றுதற்காக வானவர் என் உமைகோன் அடியைச் சேர்ந்தார் எனின் தனக்கு உவமை யில்லாதவனது தாள்களைச் சேர்ந்தவர்க்கல்லது மனக்கவலையைமாற்றல் அரிது என்க.

ஆதியும் நடுவும் அந்தமும் இன்றி, அநாதியாய் அருமறைகளுக்கும் ஓதவும எட்டாது உயர்ந்து, என்றும் நின்றான் ஒருவனே யென்பதுகருதி "தனக்குவமை யில்லாதான்" என்றார். உவமை யில்லாதவன் தாளைச்சேர்ந்தவரே கவலையில்லாதவராயிருப்பர். பிறர்க்கு அஃது உண்டென்க தனக்கு உவமையில்லாதவனதாளே மனக்கவலை மாற்றும மருந்து என்பது கருத்து.

"ஒப்புஇல்லாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த் திருப்பா

த்த அப்பன்'' என்றது திருவாசகம்.

எவ்வகையினும் எவரும் தனக்கு நிகரில்லாதவன் இறைவன் என்பதும், அவனது அடியைச் சேர்ந்தவர்க்குத் துன்பம் நீங்கும் என்பதும், இதற்குச் சான்றாகத் தேவர்கள் நஞ்சினால் நேர்ந்த கவலையை இறைவன்தாள் சேர்ந்து நீங்கினர் என்பதும் இதில் உணரப்படும்.



கதை

முன்னொருகாலத்தில் துருவாசரது சாபத்தால் துறக்கப் பொருள்கள் எல்லாம் கடலிடைப்புகுந்தன. அவற்றை மீண்டு பெறுதற் பொருட்டுச் சுரரும் அசுரரும் பாற்கடல் கடையத் துணிந்தார். மந்தரமலையை மத்தாக நாட்டினர், சந்திரனைத் தூணாக அமைத்தார். வாசுகி யென்னும் பாம்பை காணாகப பிணித்தார். இரு திறத்தாரும் கடைந்தார். வலிந்தும் நலிந்தும் கடையும் பொழுது காணுறவ வாசுகியிடமிருந்து நஞ்சு வெளிவந்தது. அப்பெரு நஞ்சு மண்டி மேல்எழுந்தது வானவர் கண்டு பயந்தார். மருண்டு வெருண்டார் என்செய்வோமென்று திரண்டு ஓடினர். அஞ்சி ஓடிய தேவர் முடிவில் உமாபதியே தஞ்சமென்றடைந்தார். அப்பதியும், "அஞசன்மின்" என்று அவர்கட்கு ஆதரவு செய்து மண்டிவந்த நஞ்சை தம் செங்கையில் கொண்டார் கண்டமட்டும் உண்டார். அது கண்டம் மட்டில நின்றது. நீலகண்டன் எனப்பெயர் பெற்றார். வானவர் கவலை நீங்கினர். பரமனை வாழ்த்தி மகிழ்ந்தார். என்பதாம். இதன் விரிவை இராமாவதாரத்தில் தெளிக.

துறக்கம் = சுவர்க்கம்.

உயிர்கள் மனக்கவலை மாற்றுதற்கு வழி இதனால் கூறப்பட்டது.

காதற கடலைக் கடந்தான் சனகனேன்

கோதற்றார் மற்றோர் குமரேசா—நீநில்
அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

இ—ள்.

குமரேசா! சனகன் காதற் கடலைக்கடந்தான், மற்றவரேன் அதில் ஆழ்ந்தார் எனின், அறவாழி அந்தணனது தாளைச் சேர்ந்தவர்கட் கல்லது பிறவாழியை நீந்துதல் அரிது என்க. பிற என்றது, ஈண்டு பொருளையும் இன்பத்தையும் சுட்டி நின்றது.



மறத்தையும் குறிக்கும். இனி பிறவாழி, பிறவிக்கடல் எனவும்படும். மற்றவர் என்றது சூரன், கனகன், சூரிபோதலன் முதலாயினோரை.

இறைவன் தரும உருவினன் என்பதும், தண்ணளியுடையவன் என்பதும், அவனது தாளைச் சேர்ந்தவர் காதற்கடலைக் கடப்பர் என்பதும், சனகமன்னன் இவன் தாளைச்சேர்ந்து பிறவாழி நீந்தினன் என்பதும் இதில் தெளியப்படும்.

கதை

சனகன் என்பவர் விதேக நாட்டு வேந்தன் சீதைக்குத் தாதை. தசரத ராமனுக்கு மாமன். மெய்யுணர்வுமிக்கவர். இல்லற ஞானிகட்கு ஓர் எடுத்துக் காட்டாகவுள்ளவர். முற்றத் துறந்த சுகமுனிவரும் தம்மிடம் வந்து தத்துவ உபதேசம் பெறும்படி நின்ற உத்தமர். அருளும் பொறையும் அறிவும் நிறைந்தவர். பற்றற்ற பரமயோகி. ''அறன் நிரம்பிய அருளுடையருந்தவர்க் கேனும், பெறலருந் திருப்பெற்றபின் சிந்தனை பிரிதாம்'' என்றபடி பொருட்செல்வமானது எத்தகைய பேரறிவாளரையும் மயக்கிச் செருக்கையுண்டாக்கும் இயல்பினையுடையது. அதை இவர் அளவறப்பெற்றும் அரசபதவியையுற்றும் அகங்கார முதலிய இழிகுணங்கள் சிறிதும் இலராய், பொருளினால் உளவாம் சிற்றின்பங்களில் அழுந்தாமல் பேரின்பம் பேணிப் பிறவாழி நீந்

சனகன் இறைவன் தாள் சேர்ந்து பிறவாழி நீந்தினான் என்பது இதனால் கூறப்பட்டது.

வேதன் உயர்தலையும் வெண்டலையாய் வீழ்ந்துபலிக்
கோதடைந்த தென்னே குமரேசா — பூதலத்திற்
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத தலை.

இ—ள்.

குமரேசா! வேதனது உயர்ந்ததலையும் வெள்ளிய தலையாய் மாறி யேன் குற்றமுற்றதெனின், எண் குணத்தானது தாளை வணங்காத தலைகள் கோள் இல் பொறியிற் குணம் இல என்க.

30 திருக்குறட் குமரேச வெண்பா.

உம்மை சிறப்பும்மை. கோள் இல்பொறி = புலன்களைக் கொள்ளுதல் இல்லாத பொறிகள். இனி அறிவு இல்லாத பாவைகள் எனவுமாம். எண் என்றது எட்டு என்னும் தொகைப் பெயரைச் சுட்டி நின்றது. இது வினை முதலானால் எண்ணு நின்ற குணத்தான் எனப்படும்.

தலைமை, தூய்மை, தத்துவவுணர்வு, அருள், வலி, இன்பம், அமலம், தெளிவு, என்னும் எண்வகைக் குணங்களையும் தனக்கு இயல்பாகவே உடையான் என்பார் எண்குணத்தான் என்றார்.

பரிசம் தெரியாத மெய்யும், சுவையை உணராத வாயும், ஒளியைக் காணாத கண்ணும், நாற்றத்தை அறியாத மூக்கும், ஓசையைக் கேளாத செவியும், உருவுடன் இருப்பினும் அவை எவ்வாறு பயன்படாவோ, அவ்வாறே, இறைவனது தாளை வணங்காத தலை உருவுடன் இருப்பினும் பயன் இல்லை என்பார் "கோள் இல் பொறியிற்குணம் இல" என்றார்.

இறைவன் எண் வகைக்குணங்களையுடையவன் என்பதும்,

அவனது தாளை வணங்குதலே ஒருவன் பிறவிக்குப்பயன் என்பதும், வணங்காத தலை பிழிவுறுமென்பதும், இதற்குச் சான்றாக வணங்காத பிரமனது சிறந்த தலையும் இழிந்ததென்பதும் இதில் உணரப்படும்.

## கதை

ஒரு காலத்தில் பிரமன் தாமே தலைமைக் கடவுள் என்று எண்ணிச் சிவபெருமானை வணங்காமல் செருக்குற்று இருந்தார். அதனை யறிந்த பரமபதி அப்பிரமனது தலைகளுள் ஒன்றைக் கிள்ளி யெறிந்தார். கிள்ளப்பட்ட அத்தலை பெருமையிழந்து பிச்சைப்பாத்திர மாயிற்று. இதன் விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

பெருவிதியும் சிறுவிதியும் பெருமானை வணங்காமல்
பிணங்கி யக்கோ
இருதலையும் இழந்திழிந்தார் என்பதனைமன் பதைகள்
இனிது தேர்ந்தும்
-வுள் வாழ்த்து. 31
அருமறைகள் புகழ்ந்து மகிழ் அவன்தாளை வணங்காமல்
ஆசை கோபால்
கருமமிகப் புரிந்துபிறந் திறந்துபவக் கடல் விழுந்து
கவல்வதென்னே,

என்றதுங்காண்க. பெருவிதி=பிரமன். சிறுவிதி = தக்க தக்கன் சிவபிரான் தாளை வணங்காமையால் தனது சிறந்த தலையை யிழந்தான். இழிந்த ஆட்டுத்தலையை யடைந்தான். இதனால் ஒருவன் தலைக்குப்பயன் சாற்றப்பட்டது.

சேர்ந்தவின்னா வெம்பிறவி தீர்ந்தார்பின் சேராதார்
கூர்ந்தாழ்ந்தார் என்னே குமரேசா—ஆர்ந்த
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார். ௰

இ—ள்.

குமரேசா! இறைவன் அடியைச் சேர்ந்த திண்ணனார் பிறவியைத்தீர்ந்தார். அதனைச்சேராதார் அதில் ஏன் அழுந்தினர் எனின், இறைவனது அடியைச் சேர்ந்தவர் பிறவிப்பெருங் கடலை நீந்துவர், சேராதார் நீந்தார் என்க.

திண்ணனார் = கண்ணப்பர்.

சேராதார் என்றது கண்ணப்பருடைய வேட்டைத் தோழர்களை. முடிவின்மையும், கடத்தற்கு அருமையும் கருதி பிறவியைக் கடல் என்றார்.

பிறவியானது கடத்தற்கு அரியது என்பதும், அது கடலினும் பெரியது என்பதும், இறைவனது அடியென்னும் புணையைச் சேர்ந்தவரே அதனை நீந்தி பெறுவர் என்பதும், அல்லாதார் அதனில் வீழ்ந்து வருந்துவர் என்பதும், கண்ணப்பரே அப்புணை துணையாக அதனை நீந்தினர் என்பதும் இதன் பொழிப்பாம்.

புணை = தோணி.



கண்ணப்பர் என்பவர் பொத்தப்பி நாட்டி லுள்ள உடுப்பூரிலே வேடர்களுக்குத் தலைவனாகிய நாகன் என்பவனுக்கும் தத்தை யென்பவளுக்கும் புத்திரராய்த் தோன்றினர். பிறந்தபொழுதே இவர் தேகம் திண்மையா யிருந்தபடியால் பெற்றோர் இவருக்குத் திண்ணனார் என்று பெயரிட்டனர். பருவம் வந்தபின் இவர் தமது மரபுக்குரிய வேட்டைத்தொழிலை மேற்கொண்டு வேடர் சிலருடன் காட்டில் புகுந்தார். பல மிருகங்களையும் வேட்டையாடிச் சென்றார். சென்றவர், தெய்வாதீனமாகத் திருக்காளத்தி மலையைக் கண்டார். அதின் மேல் ஏறினர். அங்கு விளங்கி யிருந்த சிவலிங்கத்தை அணுகினர். உடனே அன்பால் உரு

னர். உண்ணும் உணவும், பருகும் நீரும் இறந்தார். ஆறு தினங்களாக இரவும் பகலும் அமரூர்த்தியையே கண்ணும் கருத்துமாகக் காத்தார். பலவகையிலும் அன்பு செலுத்தினர். என்பும் உருகும் இயல்பில் உரிமை பூண்டிருந்தார். இங்ஙனம இருப்ப ஆறுவது நாளில் அசிவலிங்கத்தின் வலக்கண்ணில் உதிரம் வரும்படியான ஒரு சோதனை நிகழ்ந்தது. அதனைக் கண்டவுடனே யிவர் உளம் பதைத்தார். உடல் துடித்தார். ஐயகோ! என் ஐயன் கண்ணில இரதகம் தோன்றிற்றே! யென்று அலறினர். அழுது ஓடிப் பல பசிய இலைகளைக்கொண்டு வந்தார். தமது வலிய காத்தில் வைத்து கவியப பிசைந்தார். அச சாரத்தை அக் கண்ணில் பிழிந்தார். குணமின்மை கண்டார். வருந்தினர். தமது வலக்கண்ணையே தோண்டியதில் அப்பினர். உடனே யிடக் கண்ணிலும உதிரம் பெருகினது. அது கண்ட திண்ணனர் தமது இடக்கண்ணையும் அப்புதற்கு ஒப்பிக் கையிலிருந்த கூரிய அம்பால் அதனைக் கிளறித் தோண்டினர். உடனே எம்பெருமான் தோன்றி "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப, என் அன்புடைத்தோன்றல், நிலு கண்ணப்ப" என்று கூவித் தமது செங் கையால் அவரது திண்கையைப் பிடித்துத் தடுத்து ஆட்கொண்டார். கண்ணை அப்பினதினுலே கண்ணப்பன் என்னும் பெயரைப்பெற்றர். பிறவிப் பெருங்கடல் நீந்திப்பேரின்பம் உற்றர்.

கடவுள் வாழ்த்து. 33

ன் சென்ற வேட்டைத்தோழர்களாகிய நாணன், காடன் என்பவர் களை நோக்கி மீண்டார். பின் பிறவியை படைந்தார். இதன் விரிவு பெரியபுராணத்தில் இனிது புலனும்.

இறைவனது அடிகளை அடைந்தார் பிறவியை அடையார் என்பது இதனுல் கூறப்பட்டது.

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கடவுள் ஒருவர் உளர். அவர் அகரம்போல் உலகு உயிரெங்கும் ஒழிவற நிறைந்த ஒண்பொருள். அப்பொருளின் அடிகளைத் தொழுதலே அறிவுடைமைக்குப் பயன். அங்ஙனம் தொழுபவர் அழிவில் வாழ்வையடைவர். அவரைத் துன்பங்கள் தொடரா. வினைகள் சேரா. அவர் இன்பவாழ்வை எய்துவர். அவரைக் கவலைகள் கதுவா. பற்றுக்கள் பற்றா. தலைவனது தாளை வணங்குதலே தலைக்குப் பெருமை. தாளையடைந்தார் பிறவியை யடையார் என்பனவாம்.

பின்வரும் திருநாமங்கள் கடவுளைக் குறித்து முறையே யிவ்வதிகாரத்தில் வந்துள்ளன.

1. ஆதிபகவன்.
2. வாலறிவன்
3. மலர்மிசையேகினான்.
4. வேண்டுதல் வேண்டாமையிலான்.
5 இறைவன்.
6. பொறிவாயில் ஐந்தவித்தான்.
7. தனக்குவமையில்லாதான்.
8. அறவாழியந்தணன்.
9. எண் குணத்தான்.
10. இறைவன்.



## உ-ம் அதிகாரம்.

### வான் சிறப்பு.

அஃதாவது மழையினது பெருமை.

11. ஏனை அமிழ்தியான் இந்திரன்முன் வானையிரக்கச்

கோனுலகுக் கிந்தான் குமரேசா—ஆனமல்
வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று. (௧)

இ ள்

குமரேசா! முன்னர் இந்திரன் அமிழ்தத்தைக் கொடுக்காமல் ஏன் இவ்வுலகுக்கு மழையைக் கொடுத்தானெனின், வான் நின்று உலகம் வழங்கிவருதலால், தான் அமிழ்தம் என்று உணரும் தன்மையையுடைய தெனக.

வான் = மழை

தான் என்றது அம்மழையை. அமுதம்போல், மழையும் உயிர்களை நிலைத்து வாழச்செய்து வருகின்றது, ஆதலால் அதன் பெருமையை நினைந்து போற்றுக என்பது குறிப்பு. தோட்ட இடமெல்லாம் தோன்றும் நீர்தானே என்று மழையை இகழற்க; தோன்றும் துணையாய் நின்று உயிர்களைக் காத்துவரும் அமிழ்தம் என்று அதனைப்புகழ்க என்றபடி.

மழையினாலேதான் உலகம் நிலைபெற்று வருகின்றது என்பதும் அஃது உயிர்களுக்கு அமிழ்தம்போல்வது என்பதும் அமிழ்தத்தையுடைய இந்திரனும் முன்னொருகாலத்தில் தான் நன்மைசெய்ய விரும்பிய உயிர்கட்கு இம்மழையையே புதவினான் என்பதும் இதில் காணப்படும்.



கதை

ஒருகாலத்தில் இவ்வுலகில் மழைபெய்யாது பொய்த்தது. உயிர்களெல்லாம் வருந்தி சோர்ந்தன. அக்காலத்தில் ஆபுத்திரன் என்பவன் ஒருவன் இருந்தான். இவன் வாரணாசியென்னும் ஊரிலே பிறந்திருந்த அபஞ்சிகன் என்னும் அந்தணன் மனைவியாகிய சாலியென்பவளுடைய மகன். ஒருகாரணத்தால் தாய் இவனை ஒருகாட்டில் விட்டுப்பிரிந்தாள். இவன் பசிநோயால் வாடியழுதான். அப்பொழுது தெய்வப்பசு ஒன்று இவனை பணு மிப்பாலூட்டி வளர்த்தது. ஆ ஆதரித்த காரணத்தால் இவன் ஆபுத்திரன் எனப்பட்டான். பெரியவனான பின் தென்மதுரையைச் சேர்ந்தான். அங்குப் பசியால் வருந்திய அவ்வுயிர்களைக் கண்டான்; இரங்கினான். தான் பெற்றிருந்த அக்ஷயபாத்திரத்தின் மகிமையால் அவற்றிற்கு நல்லுணவூட்டினான். எல்லாவுயிர்களும் உண்டு மகிழ்ந்தன. பசிநோயகன்றன. இந்த வண்மையை இந்திரன் அறிந்தான். ஆபுத்திரன்பால் அன்புடன் வந்தான். நின் புண்ணியத்துக்கு மகிழ்ந்தேன். என்னுலகம் வா என்றான். பசிநோயகற்றி உயிர்களை மகிழ்விக்கும் இப்பெரும் பேற்றையிழந்து நின்னுடன் வருதற்கு இசையேன் என்று இவன் மறுத்தான். உடனே எல்லாவுயிர்களுக்கும் பசியிலவாம்படி செய்ய இந்திரன் நினைத்தான். தன்பால் உள்ள எதையும் உதவவில்லை. மழையையே உதவினான். அன்று முதல் எல்லாவுயிர்களும் பசி நோயகன்றன. உயிர்களும் நிலைத்து ஒரு நிலை நின்றன. மழையை உருவம் நோக்கி நீர் என நினையாமல் உலகம் அதன் தன்மையை எண்ணி அமிழ்தென உணர்ந்தது. இதன் விரிவை மணிமேகலையிற் காண்க. மழையை அமிழ்தமென்று மதிக்கவேண்டும் என்பதறிதற்குக் கூறப்பட்டது.



12 உண்டிதரும் நீரும் உணவாகச் செய்தபண்டே
கொண்டிருந்தான் என்னே குமரேசா—உண்டிதனைத்
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்

வினா.

குமரேசா! சீதை நீரையே உணவாகவும் ஏன் கொண்டிருந்தாள் எனின்? துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழையென்க. துப்பார்=உண்பார். துப்பாய துப்பு—நல்லுணவு. துப்பாய தூஉம்—உணவாயதூஉம்.

துப்பு— உணவு சுத்தம் வலிமை முதலிய பலபொருள்களையும் குறித்து வரும் ஒருசொல்.

மழையானது உயிர்களுக்கு நல்ல உணவுகளை யுளவாக்கி உதவுவதோடு தானும் நீராய் நின்று அவ்வுயிர்கள் உண்ணும் படி அமைந்து உதவிவருகின்றதென்பது கருத்து.

மழை பலவகையானும் உயிர்களது பசியையும் தாகத்தையும் நீக்கிவருகின்றதென்பதும் ஒரு காலத்தில் சீதை தனி நீரையே தனதுணவாகக் கொண்டிருந்தாள் என்பதும் இதில் உணரப்படும்.

கதை.

சீதை இலங்கையில் சிறைவாசஞ்செய்யும் பொழுது நீரையே பருகி உயிர் வாழ்ந்திருந்தாள். இந்த வுண்மை தூது வந்த அநுமன் பால் அந்த அம்மை அருளியுள்ள திருமொழிகளால் இனிது புலனும். அவை அநுமனே! "இந்த இடத்தை விட்டு யான் வேறெங்கும் செலவதில்லை. தளர்கின்ற எனது அரிய உயிரைக்காக்கும் பொருட்டு சிறிது நீர் பருகுதற்காக சிற்சில சமயங்களில் சுருவீரனது திருமேனியை பொதிந்திருக்கிற இதோ தோன்றுகின்ற நீர் நிலைக்குமட்டும் செல்வேன்" என்பனவாம்.

தீர்கிலேன் இது ஒரு பகலுஞ்சில
வீசன்மேனியை மறுவில் வீங்குநீர்
வாச நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்

சோறும் ஆருயிர் காக்கும் துணிவினுல். (இராமாயணம்)

கண்ணுவேன் என்றதனுல் மிக்க வீரனது மேனியைப்போர்த்த நீர் நிலையின் கட்டியால் சோர்வு நீங்கி உயிர் பிழைத்தனர் என்பது மாம். மழையினது அரிய புகழ்கள் இதில் காட்டப்பட்டன.



13. தேசமிகு கோசிகனும் செத்தநா யூனையுண்ணக்
கூசாத தென்னே குமரேசா—மாசகன்ற
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. (௩)

-ள.

குமரேசா! கோசிக முனிவரும் நாயின் ஊனை ஏன் கூசாமல் தின்னத் துணிந்தார் எனின்? விண் நின்று பொய்ப்பின் விரிந்த நீர்மையுடைய அகன்ற வுலகத்தில் பசி நின்று உடற்றும் என்க.

விண் என்றது மழையை. விரி நீர்=கடல்

மழை நீர் இல்வழி விரி நீரால் பயன் இல்லை யென்பது குறிப்பு.

மழை நிலைத்து மறுத்தால் பசிநிலைத்து வருத்தும் என்பார் விண்ணின்று பொய்ப்பின் பசி நின்று உடற்றும் என்றார்.

மழை நெடுநாள் இல்லையானுல் உலகிலுள்ள உயிர்கள் பசி நோயால் வருந்தும் என்பதும், சிறந்த முனிவராகிய விசுவாமித்திரரும் பசிக்கொடுமையால் நாயின் ஊனையும் தின்னத்துணிந்தார் என்பதும் இதில் உணரப்படும். உம்மை முனிவரது பெருமையை விளக்கி நின்றது.

கதை

கோசிகனர் காதி என்னும் மன்னன் மகன். நிறைந்த அறி

வும் சிறந்த வீரமும் உடையவர். மிக்க கீர்த்தியோடு அரசு புரிந்து வந்தார். ஒரு நாள் வேட்டைக்குச் சென்றார். தவத்தின் பெருமையை வசிட்டரிடத்தில் நன்கு தெளிந்தார். அதனால் அரசைத் துறந்தார். அருந்தவஞ் செய்ய வனத்தில் புகுந்தார். பல வருடங்களாக அரியபெரிய விரதங்களை மேற்கொண்டு தவமும் புரிந்தார். கண்மூடி மௌனியாகி நீண்டகாலம் யோகத்திலிருந்த இவர் ஒரு சமயம் விழித்தார். மழையில்லாதபடியால் உலகம் நிலைகுலைந்திருந்தது. பலவுயிர்களும் மடிந்து கிடந்தன.

2ம் அதிகாரம் வான சிறப்பு.

இக்கொடுங் காட்சிகளைக் கண்டார். தாமும் பெரும் பசியால் வருந்தினர். உணவுப் பொருள்களை நாடித்தேடினர். ஒன்றுந் தோன்றவில்லை முனிவர் பலவுந்தேடி முடிவில் இறந்து கிடந்த ஒரு நாயின் பிணத்தைக்கண்டார். பசிக்கொடுமையால் அந்த நாயின் வாலைத் தின்னத் துணிந்தார் உடனே இந்திரன் வந்து தடுத்து மழை வளம்பெருகச் செய்தான். அதன் பின் உலகம் செழித்தது. உயிர்கள் பசிநோய் நீங்கி மகிழ்ந்தன.

(இதன் விரிவை மணிமேகலையிற் காண்க)

இதனால் உற்றநோய் ஆற்றும தவத்தினரும் பசிநோய் ஆற்றாது பதைப்பர் என்பதும் அது தன்னையுடையாரை மானமுதலியவற்றை யிழப்பித்து இழிவுறும்படி தூண்டும் என்பதும் தெளியப் படுதல் காண்க.

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாண் அணி களையும் மாண்எழில் சிதைக்கும்
பூண்முலை மாதரோடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி. (மணிமேகலை)

மானங் குலங்கல்வி வண்மை யறிவொழுக்கம்
தானம் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்பால் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப் பறந்து போம் (நீதி வெண்பா)

இவற்றால் அப்பசிக்கொடுமை விளங்குத லுணர்க.

மழை மறுத்தால் பசிவருத்தும் என்பதுஇதனுல் கூறப்பட்

---

14. ஏர்நிலங்கள் வைத்திருந்தும் ஏனுழவு செய்யவில்லை
கூருண்சேர் நல்லான் குமரேசா—சீர் நிறைந்த
ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். (௪)



இ—ள்.

குமரேசா! நல்லான் என்பவர், ஏர்களையும் நிலங்களையும் வைத்திருந்தும் ஏன் உழுதலைச் செய்யவில்லையெனின்? புயல் என்னும் வாரிவளங் குன்றினுல் உழவர்கள் ஏர்களால் உழுதலைச் செய்யார் என்க.

புயல் = மழை.

பசி நோய்க்கு மருந்தாகிய உணவுப்பொருள்களை உளவாக்குதற்கு நீர் நிலம் ஏர் எரு முதலிய உபகரணங்கள் பலவேண்டும். ஆயினும் அவற்றுள் முக்கியமானது நீர் ஆதலால் அஃதில்லையானல் அவைபயன்படா என்பார், புயல் என்னும் வாரி வளங் குன்றிபக்கால் ஏரின் உழார் என்றார்.

மழையின்மை உழவின்மைக்கும் உழவின்மை உணவின்மைக்கும், உணவின்மை யுயிரின்மைக்கும் உயிரின்மை உலகின்மைக்கும் ஏதுவாம் என்க. எனவே மழையால் உழவும், உழவால் உணவும் உணவால் உயிரும், உயிரால உலகும், உளவாம் எனபதாம்.

முதல் இரண்டு பாவில் மழையானது அமிழ்தம் போல்

உயிர்களது பசியையும் நீர் வேட்கையையும் நீக்கும் என்றும், மூன்றாவதில் அம்மழையில்லையானால் பசி உண்டாம் என்றும், கூறி இதில், அப்பசியுண்மைக்கு வகை கூறினார்.

மழையில்லையானால் உழவர் தங்கள் நிலங்களை யுழார் என்றும் உண்மையை நல்லான பால் காண்க.

கதை

நல்லான் என்பவர் மதுரையில் இருந்தவர். வேளாள குலத்தில் பிறந்தவர். விரிந்த நிலங்களும் நிறைந்த செல்வமும் உடையவர். மிக்க வள்ளற்குணம் வாய்ந்தவர். தமது செல்வத்தைப் பலர்க்கும் பகுத்து உதவிசெய்து வந்தார். சிறப்பாகச் சிவனடியார்க்குச் செய்தார். அதனால் "உழவோருள் நல்லான் அடியார்க்கு நல்லான் அறத்திற்கும்நல்லான் பொருட்கும் நல்லான்,



அனைவர்க்கும் நல்லான்" என்று புகழ்ப்பெற்றார். இங்ஙனம் வாழ்ந்துவருநாளில் ஒரு காலத்தில் மழைவளங் குன்றினது. அதனால் இவர் நிலவளங்குறைந்தது. பல ஏர்கள் வைத்திருந்தும் உழுதலைச் செய்யமுடிய வில்லை. வறுமை கூர்ந்தார். வருந்தினார். அதன்பின் சோமசுந்தரப் பெருமானிடம்போய் முறையிட்டார். அப்பெருமான் அருளால் இவர் உலவாக்கோட்டை பெற்றார். உவந்தார் என்பதாம். இது திருவிளையாடலில் காணப்படும்.

உலவாக்கோட்டை = குறையாத நெற்பொதி.

வாரிவளங் குன்றினால் ஏர்வளங் குன்றுமென்பது இதனாற் கூறப்பட்டது.



15. உற்றமழை பெய்ய உசோமபதன் கேடகன்று

சொற்றமுற்றான் என்னே குமரேசா—வற்றிக்
கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லா மழை. (௫)

இ—ள்

குமரேசா! மழையின்மையால் கேடுற்றிருந்த உரோமபதன் என்னும் அரசன் அது பெய்தவுடன் கேடுநீங்கி பேர் மேன்மையுற்றான் எனின், மழை பெய்யாது நின்று ஒருவனைக் கெடுக்கவும் வல்லது; பெய்து அவனை எடுக்கவும் வல்லது என்க.

சார்வு = துணை

முயற்சியால் ஆக்கமும் மடியால் கேடும் ஒருவனுக்கு வருவது உண்மை. எனினும் அம்முயற்சியும் மடியும் மழையினது உண்மை இன்மைகளால் நிலைபெறுதலின் மழையே ஆக்கமும் கேடும் ஆக்கவல்லது என்றார்.

மழை, பெய்யாமல் நின்று உலகத்தைத் தாழ்விக்கும் என்பதும் பெய்து அதனை வாழ்விக்கும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உரோமபதன் பால் உணரப்படும்.



கதை

உரோமபதன் என்பவன் உத்தானபாதன் என்னும் அரசன் புதல்வன். தசரதன் காலத்தவன். வீரமும் அறிவும் மிகவும் வாய்ந்தவன். ஒரு குடை நிழலில் இரு நிலம் புரந்தவன். ஒரு காலத்தில் தன்னாட்டில் மழை பெய்யாமல் நின்றது. அதனால் பெருங்கேடடைந்தான். மழை வளங்கருதிப் பலவகைத் தானங்கள் செய்தான் அவற்றாலும் பயன் ஒன்றுங்கண்டிலன் கலைக்கோட்டு முனிவரைத் தனது நாட்டுக்குக் கொண்டுவந்தான். அம்மாதவன் வருகையால் மழைவளஞ்சுரந்தது. மாநிலஞ் செழித்தது. கேடு நீங்கிற்று. நாடும் நகரமும் நலமுற வாழ்ந்தன. மன்னுயிர்களும் இம்மன்னனும் மகிழ்ந்தனன். இதன் விரிவு இராமாயணத்தில் காணப்படும்.

புகதான கொடியினேயோட்ருநதுயரம் போபொளிப்பப்
புவனந்தாங்கும்
சத்தானகுண முடையான தயைபிறெடு தண்ணளியின்
சாலேபோல்வான்
எத்தானும் வெலற்கரியான் மனுகுலத்தே வந்துதித்தோன்
இலங்குமௌளி
உத்தான பாதன் அருள் உரோமபதன் என்றுளன் இவ்
வுலகையாள்வான்.

அன்னவன்றன் புரந்தளிக்குந் திருநாட்டில் நெடுங்கால
மளவதாக
மின்னிபெழுமுகினின்றி வெந்துயரம் பெருகுதலும்
வேத நன்னூல்
மன்னுமுனிவரையழைத்து மாதானம் கொடுக்கினும் வான்
வழங்காதாகப்
பின்னுமுனி வரர்க்கேட்பக் கலைக்கோட்டு முனிவரின்வரன்
பிணிற்றுமென்றார்.

2ம் அதிகாரம் வான்சிறப்பு. 48

வளாகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான் மிசைச்
சளசள வெனமழைத் தாரைகான்றன
குளனெடு நதிகள்தம் குறைகள் தீரவே.

(இராமாயணம்)

எனவரும் இவற்றுல் மேற்குறித்த உண்மைகள் நன்குண
ரப்படும்.

மழையினது வன்மையும் நன்மையும் இதனுல் கூறப்பட்



16. பண்டோர் பசும்புல்லும் பாரா திடைக்காடர்
கொண்டார் வரகை குமரேசா — கண்ட
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. (௬)

இ—ள்.

குமரேசா! இடைக்காடர் ஒரு பசியபுல்லையுங்காணாமல் ஏன் வரகையே உணவாகக்கொண்டார் எனின், விசும்பிலிருந்து துளி வீழ்ந்தால் அல்லது பசும் புல்லினது தோற்றத்தையும் காண்டல் அரிது என்க.

விசும்பு=மேகம்.

விசும்பு துளியை வீழ்த்தினால் நிலம பசும்புல்லைக்காட்டும். இல்லையானால் காட்டாது என்பதாம்.

ஓர் அறிவுயிரும் தோன்றாதெனவே மற்றையவுயிர்களின் தோற்றம் சொல்லவேண்டாவாயிற்று.

மழையில்லையானால் இவ்வுலகில் ஓரறிவுயிரும் உண்டாகா தென்பதாம். இவ்வுண்மை இடைக்காடர் காலத்தில் காணும்

திருக்குறட் குமரேச வெண்பா.

கதை

இடைக்காடர் என்பவர் கடைச்சங்க காலத்தில் இருந்த ஒரு பெரியவர். சோதிடத்தில் சிறந்தவர். சித்திகள் பல கைவரப் பெற்றவர். நல்ல வுத்தமர். இவர் ஒரு காலத்தில் பன்னிரு வருடங்கள் வரையும் இந்நில வுலகத்தில் மழை பெய்யாதென பதைத்தமது நுண்ணறிவால் முன்னுணர்ந்தார். அதனால் பின் வரும் தம் வாழ்வுக்கு வரகைச் சேகரித்து வைத்தார். காய சித்

தியால் வாழ்ந்தார். அப்பஞ்ச காலத்தில ஒரு பசும்புல்லேனும் இவர் காண்பதரிதாயிருந்தது. புலவர் புராண முதலிய பல நூல்களிலும் இச்சரிதம் காணப்படும்.

நிலம் உளதாயினும் மழையிலதாயின் அதனாற்பயனில்லை யென்பதிதனாற் கூறப்பட்டது.



17\. மண்டுகடல் பெற்றிருந்தும் வான்போயெண் பண்டுமழை
கொண்டுவந்தார் மூவர் குமரேசா—கொண்ட
நெடுங்கடலும் தன்னீர்மைகுன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். (எ)

இ—ள்.

குமரேசா! மூவர் கடல் பெற்றிருந்தும் வான் போய் ஏன் பண்டு மழையைக்கொண்டு வந்தார் எனின், எழிலி நல்கா விடின் கடலுந்தன் இயல்பு குறையும் என்க.

எழிலி=மேகம்.

மூவர் என்றது சேரசோழ பாண்டியர் என்னும் மூவரசரை.

மேகமானது கடல்நீரை மொண்டு நிலத்தின்கட் பெய்ய வில்லையானால் அக்கடலும் தன் தன்மைகுன்றும் என்பதாம். உம்மை சிறப்பை விளக்கிற்று. நெடுமை அளவின்மையைக் குறித்தது. நிலத்துக்கே யன்றிக் கடலுக்கும் மழைவேண்டும் என்றபடி.



மழையில்லையானால் நீர் நிறைந்த கடலிருந்தும் பயன் இல்லை யென்பதாம். இவ்வுண்மை மூவேந்தர் பாலும் ஒரு காலத்தில் காணப்பட்டது.

கதை

சோணாடு சோழநாடு பாண்டிநாடு என்னும் இம்மூன்று நாடு

களும் ஒரு காலத்தில மழை வளங்குன்றி வறுமை மிக்கிருந்தன. அதனால் துயர்பல தொடர்ந்தன. அந்நாட்டு அரசர் மூவரும் இக்குறையை நினைந்தார். உளமிக நொந்தார். ஒன்று சேர்ந்தார். அகத்திய முனிவரிடம் சென்றார் உற்றதை யுரைத்தார். அம் முனிவர் பெருமானும் கோள்கள் நிலைமாறியுள்ளமையைத் தெளிந்து, நீவிர் மூவரும் இந்திரனை யெய்தி மழை வளங்கொண்மின் என்று பணித்தார் விண்ணுலகம் போதற்குரிய விரதமந்திரங் களையும் உபதேசித்தார். இவரும் அவற்றின்படி நடந்து வான் புகுந்தார். வானவர்கோனைக் கண்டார். மகிழ்ந்தார். அவ்வமரர் கோனும் இவர்களை ஆதரித்து வேண்டிய மழை வரம் விருப்புடன் தந்தான். விடைபெற்றிவரும் விரைவுடன் மீண்டார். மழை பெய்தது. தம்முடைய நாடுகள் நன்னிலையுற்றன. கடல் நீர் இருந்தமை மழை நீர்க்காக இம்மன்னர் மூவரும் வானம் புகுந்தனர். அதன் பின் அம் மூந்நாடும் நன்றாய் நன்கு செழித்தன.

மழையில்லையானால் கடலும் நிலைகுலையுமென்பது இதனால் கூறப்பட்டது.



18. வென்றி மதுரையில்முன் மெய்ச்சிறப்பும் பூசையும்
குன்றி நின்ற தென்னே குமரேசா — என்றும்
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. (அ)



குமரேசா! மதுரையில் முன்னம் பூசையும் சிறப்பும் ஏன் குன்றி நின்றதெனின், வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்

டுச்செய்யப்படும் சிறப்பும் பூசையும் செல்லாதென்க.

சிறப்பு=திருவிழா. செல்லுதல்=நடத்தல்.

வறத்தல்=பெய்யாது புலர்தல.

மழை பொழியாதாயின் இவ்வுலகத்தாரால் தேவர்கட்குச் செய்யப்படும் சிறப்பும் பூசையும் நடவாதென்பதாம். ஆலவாழி பாடுகள் குன்றும் என்றபடி. இவ்வுண்மை நெடுஞ்செழியன் காலத்தில் மதுரையில் காணப்பட்டது.

முன்னொரு காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த நெடுஞ்செழியன் என்னும் அரசர் பெருமான் கோவலனை ஆராயாமல் கொல்வித்தான். அத்தீவினையால் அவனது நாட்டில் மழை பெய்யவில்லை. நகரிலும் நாட்டிலும் துயர்பல நிறைந்தன. வறுமையும் நோயும் பெருகி வளர்ந்தன அக்காலத்தில் தெய்வங்கட்குச் செய்யத்தக்க சிறப்பும் பூசையும் செல்லாவாயின. வளமலி மதுரையும் பொலிவிழந்திருந்தது. இது நீங்கும் பொருட்டு அத்தீவினைக்குப் பிராயசித்தம் ஒன்று செய்தனர் அதன்பின் மழைபெய்தது. பூசையும் சிறப்பும் பொலிவுற நடந்தன.

மழையில்லையானால் விழவும் பூசையும் உளவாகா என்பது இதனால் கூறப்பட்டது.



19. பண்பெலர் சோர்பிழந்தார் பாண்டியனும் பாவலரைக்
கொண்டிலன்என் விட்டான் குமரேசா—கொண்டதொரு
தானந் தவமிரண்டுந் தங்காவியனுலகம்
வானம் வழங்கா தெனின். (௯)

2ம் அதிகாரம் வான்சிறப்பு. 47

குமரேசா! பண்டொரு காலத்தில் பலர் தவத்தை யிழந் தனர், பாண்டியனும புலவர்களைப் போற்றாமல் என் கைவிட்டான் எனின், வானம் வழங்காதெனின் வியனுலகத்தில் தானமும் தவ மும் ஆகிய இரண்டறங்களும் தங்கா என்க.

வியன் உலகம் = அகன்றவுலகம்.

உம்மை அவனது வள்ளற் குணத்தை விளக்கி நின்றது. தங்குதல் நிலைத்தல். பலர் என்றது கௌதமர் முதலிய மாதவர் களை வானம் வழங்குதல = மழை பெய்தல.

மழையில்லையானால் நெல்மணி முதலிய பொருள்கள் இவ் வுலகில் இலவாய் முடியும். அதனால ஒரு பொருளை ஒருவருக் குக்கொடுத்தலாகியதானம் தங்காதாயிற்று. எத்தகைய தவசி களாயினும் உயிர் உடலில் நிலைத்திருத்தற்பொருட்டு உணவே னும் நீரேனும சிறிது உட்கொள்ளல் வேண்டும. அவ்வுணவும் நீரும மழையில்வழியில்லை ஆதலால் தவம தங்காதாயிற்று.

மழை பெய்யாதாயின இவ்வுலகில் தானமும் தவமும் நில்லா என்பதாம். தானம் நில்லாமை பாண்டியன்பாலும் தவம் நில்லாமை கௌதமர் முதலிய மாதவர் பாலும் காணப்படும்.

கதை 1.

இற்றைக்கு இரண்டாயிர வருடங்கட்கு முன் மதுரையம பதியில் அரசர் பெருமானாகிய பாண்டியன் ஒருவர் இருந்தார். இவர் அருள்திறலும் பெரும்புலமையும் ஒருங்கு நிறைந்தவர் பல்லாயிரம் புலவர்களை ஒருங்குசேர்த்து ஆதரித்து வந்தனர். வருநாளில் அங்கு மழை பெய்யவில்லை புலவர்களைப்பாது காக்க முடியாமல் அரசன் வருந்தி, புலவீர்! என் நாடு நலமடை ந்த பின் வம்மின்; இப்பொழுது செழித்த நாட்டைச் சேர்மின் என்று அவர்களனைவரையும் அனுப்பினர்.

## கதை 2

கௌதமர் அநேகமுனிவர்களுடன் தென்றிசையில் பிரம கிரியில் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார். அக்காலத்தில் பல வருடங்களாக மழை பெய்யாது பொய்த்தது. உயிர்கள் பல மாண்டன. முனிவர் பலரும் தவநிலை குலைந்தார். பதைத்தார். பல திசைகளிலும் பிரிந்தகன்றார். கௌதமர் மட்டும் கலங்காமல் நின்றார்; வருணனைக் கருதினார். இவரது தவமகிமையால் அவன் வந்தான். அவன் பால் இவர் மழை வேண்டினார். அவன் என்றுங்குன்றாத ஒரு நீர் நிலையை அருளிப்போயினான். கௌதமர் அதனால் களிப்புற்று வாழ்ந்தார். இதன் விரிவு ஞான சம்ஹிதையில் காணப்படும்.

தானமும் தவமும் உளவாதற்கு மழையே காரணம் என்பது இதனாற் கூறப்பட்டது.

---

20. வானீர் இலாமையினால் மாதவரும் அத்திரிப்பேர்க்
கோனுமேன் னொந்தார் குமரேசா—ஊனமிலா
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு (௰)

இ—ள்.

குமரேசா! அத்திரி முனிவரும் மற்றை மாதவரும் வான் நீர் இலாமையால் ஏன் வருந்தினர் எனின், யார் யார்க்கும் மழை யையின்றி உலகொழுக்கம் அமையாதென்க.

எவ்வகைப்பட்ட சிறப்பினையுடையார்க்கும் என்பார், யார் யார்க்கும் என்றார். முற்றத்துறந்த முனிவரும் நீர் இல்லாமல் உலகில் ஒரு கருமமும், செய்ய முடியாதென்பதாம்.

உலகியல் ஒழுங்காக நடைபெறுதற்கு மழையே காரணமென்பதும் அச்சீரும் மழையினாலேதான் உளதாகின்றதென்பதும் இம்மழையில்வழி பெத்தகையோர்க்கும் ஏதுவும் செய்ய முடியாதென்பதும் இதில் காட்டப்பட்டன. இவ்வுண்மை அத்திரி முனிவர்பால் காணப்படும்.



## கதை

முன்னொரு காலத்தில் காமதம் என்னும் வனத்தில் அத்திரி முனிவர் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார். அவ்வனம் பசிய இலைகளையும் இனிய கனிகளையுமுடைய பலவகை மரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இளஞ்செடிகளும் செழுங்கொடிகளும் அதில் நிறைந்திருந்தன. விழுமிய முனிவர் பலர் குழுமியிருந்தனர். இங்ஙனம் இருந்துவரு நாளில் பலவாண்டுகளாக உலகில் மழை பெய்யாது நின்றது. உயிர்கள் பலவும் மறுகி மாண்டன. புல் மரமெல்லாம் பொரிந்துகரிந்தன. குழுமியமுனிவரும் குலைந்து நடுங்கினர். ஐம்பத்து மூன்று வருடம்போகத்திலிருந்த அத்திரி முனிவரும் தக்களித்தார். விழித்தார். நீர் இன்மையை நினைந்தார். நெஞ்சுருகினார். சில வருடங்கள் கழிந்தபின் இறைவனருளால் மழை பெய்தது. அதனால் அளவில் இன்பம் அடைந்தார். உலகியலும் நல்முறை நடந்தது. பொருளும் இன்பமும் பெருகி வளர்ந்தன. இதன் விரிவு சிவமகா புராணத்தில் காணப்படும்

எல்லாவற்றிற்கும் மழையே காரணம் என்பது இதனால் கூறப்பட்டது.



### இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்

மழை அமிழ்தம்போல்வது. அது பலவகையிலும் உயிர்

களுக்கு உதவி புரிகின்றது. மழை பெய்யாது மறுதலால் பசி உயிர்களை வருத்தும். மழைபொழியாதாயின் உலகில் உழவு தொழில்கள் நடவா. மழையே ஆக்கமும் கேடும் ஆக்கவல்லது. அஃதில்லையானால் உலகில் ஓரறிவுயிரும் இல்லை. மழை நீர் இன்றேல் கடல் நீரும் தன்னியல்குன்றும். மழைபொழியாதாயின் விழவும் பூசையும் நடவா. அஃதில்லையானால் தானமும் தவமும் இல்லை. அஃதுள்ளதானால் உலகியல் நன்கு நடைபெறும். என்பனவாம்.

## ங-ம் அதிகாரம்.

### நீத்தார் பெருமை.

அஃதாவது துறந்தாரது பெருமை.

21 மண்டுபுகழ் மாணிக்க வாசகர்சீர் மாப்பனுவல்
கொண்டுபுகல வாரோனை குமரேசா—கொண்டாட
ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

இ—ள்

குமரேசா! மாணிக்கவாசகரது பெருமையை நூல்கள் என் மகிழ்வுகொண்டு புகலகின்றன எனின், ஒழுக்கத்தின்கண் நின்று துறந்தாரது பெருமையைப்பனுவல்களது துணிவு விழுப்பத்து வேண்டும் என்க. பனுவல்துணிவு = நூல்களின்முடிவு. விழுப்பத்து வேண்டும் = மேன்மையாக விரும்பும்.

துறந்தார்பெருமையை விழுமிதாக விரும்புவதே நூல்களின் சிறந்த நோக்கம் என்பதாம். நீத்தல் = துறத்தல்.

அஃதாவது அகம் புறம் என்னும் இருவகைப்பற்றுக்களை யும் ஆறவே விடுத்தல்.

ஒழுக்கமுடையராய்த்துறந்தாரே பெரியார் என்பதும் அவரது பெருமையை நூல்கள் விருப்பமாகவிரும்பும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை மாணிக்கவாசகர் பால் உணரப்படும்.

## கதை.

மாணிக்கவாசக சுவாமிகள் சைவசமய குரவர் நால்வருள் ஒருவர். பாண்டிய நாட்டிலே திருவாதவூரிலே அந்தண வருணத்திலே அமாத்தியர் குலத்திலே அவதரித்தார். இவரது தாயார் சிவஞானவதியார். தந்தையார் சம்புபாதாசிரியர். இள



மையிலேயே வேதங்கள் ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலிய பல நூல்களையும் வழுவறக்கற்றார். நிறைந்த அறிவும் சிறந்த ஒழுக்கமும் பெற்றார். அக்காலத்தில மதுரையில் அரசு புரிந்துவந்த அரிமர்த்தன பாண்டியனுக்கு அமைச்சராயமர்ந்தார். அவ்வரசன் இவருக்குத் தென்னவன் பிரமராயன் என்ற பட்டமுதந்து, சீர்கள் பலசெய்தான். இவரது பெருங்குணங்களைக்கண்டு மகிழ்ந்து புகழ்ந்தான் அன்புமிகுந்தான ஆதரித்து வந்தான். ஆயினும், இவர் இம்மை மறுமையின்பங்களை வெறுத்து பேரின்பத்தையே நாடினார். ஒழுக்கநெறியில் நின்று வழுவாமல் ஒழுகினார். துறவுற்றார். மெய்யுணர்வு பெற்றார். இருவகைப்பற்றுக்களையும் இகந்தார். இறைவன் திருவருளைப் பெற்றனர். இவ்வுண்மை,

சுற்றமுந் தொடர்பும நீத்தேம் துன்பமும
இன்பும் அறுத்தேம்
வெற்றுடல் மானம நீத்தேம் வெறுக்கைமேல்
வெறுக்கைவைத்தேம

செற்றமும் செருக்கும் காய்ந்தேம் நின்னை
யிரண்டுமே நீத்தேம்
கற்றைவார் சடையான் கோலங் காட்டியாட்
கொண்ட அன்றே.

என்ற இவர் திருவாக்கால் நன்குதெளிவாம்.

திருவாதவூர்ப் புராண முதலிய பல நூல்களும் இவரது பெருமையை விழுமிதாக விரும்பிப்பாடுகின்றன.

வெறுக்கை=பொருள்.

நீத்தார் பெருமையையே நூல்கள் மேன்மையாக விரும்பும் என்பது இதனுல் கூறப்பட்டது.





22. பண்டு கடல்பருகிப் பார்சமன்செய் மாதவன்சீர்
கொண்டதனை என்னே குமரேசா--கண்டு
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று. (உ)

இ—ள்.

குமரேசா! கடலைக்குடித்து இவ்வுலகத்தைச்சமன் செய்த அகத்திய முனிவரது பெருமையின் அளவு என்னெனின், துறந்தாரது பெருமையை அளவிட்டு அறியப்புகுதல் இவ்வுலகத்தில் இறந்தாரை இத்துணையரென எண்ணி அறியப்புக்கதுபோல்வதாம் என்க.

அப்பெருமை அளவிடமுடியாதென்பது குறிப்பு. கொண்டால் என்பதுகொண்டு எனநின்றது. துறந்தவர் பெருமைக்கும் இறந்தவர் தொகைக்கும் அளவில்லை என்பதாம்.

இறந்தார் தொகைமேல்வைத்துத் துறந்தார் பெருமைக்கு இதில் வரம்பின்மை கூறினர்.

கதை

அகத்தியர் என்பவர் முற்றத்துறந்த முனிவரெவரினும் முதன்மைவாய்ந்தவர். முன்னொருகாலத்தில பிரமன் ஒருவேள்வி செய்தான். அதில் அமைந்துள்ள கும்பம் ஒன்றில் இவர் உற்பவித்தார். அதனால் உம்பரும் இம்பரும் இவரைக் கும்ப முனிவர் என்றழைத்தார்கள். இருவகைப் புலவரும் இவரதுபெரும் புகழை விரும்பிப்போற்றுவர். இவர்செய்துள்ள அற்புதங்கள் அளவிடலரியன. இவர் ஏவலைச்செய்ய தேவரும் ஆவலுறுவர். தேவர் கோனும் இவரது சாபமெய்தினன். திருமாலையும் சிவபெருமானாக இவர்செய்தார் எனின், வேறுகூறுவதென். திருக்குற்றாலத்து மாலடியார் இவரோடு மாறுகொண்டு வாதுபுரிந்த காலத்தில் இவர் வைணவ வேடங்கொண்டார். ஆலயத்துட் புகுந்தார். திருமால் வடிவோடு அங்கு எழுந்தருளியிருந்த



மூர்த்தியைக்கண்டார். அணுகினர். வைணவவேதியர் பலருங் காண அம்மூர்த்தியின் முடிமேல் தமது செங்கையை வைத்தார். சிவமாகச் சிந்தித்தார். உடனே

முறுகுவலம் புரிக்காத்து மான்குறுகப் பெரியதுழாய்
முடியின் மீது
சிறியமதிக் கலைகுறுகத் திலகநுதல் விழிகுறுகச்
செழும்பூண் மார்பில்
நிறையரவப் பணிகுறுக நிகிலவுலகமும் நிறைந்து

குறுகுறு கெனப்பாவித் திருவடிக்கீழ்க் குறுமுனிவன்
குறுகுங் காலே.

தவம்பெருக அறம்பெருகப் பொருள்பெருகத், தெருள்
பெருகச் சைவம் ஓங்கச்
சுவம்பெருக மனுநீதித் துறைபெருக நிறைபெருகச்
சுருதி வாய்மை
நவம்பெருகச் சரியாதி சதுட்டயங்கள் நனிபெருக
ஞால மெல்லாம்
சிவம்பெருகக் குறுமியருள் பெருகினன் குற்றாலத்
தேவ தேவன்.

வேறு

சித்திரற் கரும்பொன்மேனி செம்பொனும் படிபோற் கும்பன்
பத்திபால் உருகி மாலாம் படிவனே பரம ஞானன்
சத்துடன் அசத்து மாகிச் சதசத்து மான ஞான
நித்திய நிமலா னந்த நிட்களை சகள மூர்த்தி.

(திருக்குற்றாலத்தலபுராணம்.)

கடல் குடித்த கதை.

விருத்திரன் என்னும் அசுரன் இந்திரனோடு பெரும்போர் புரிந்தான். முடிவில் ஆற்றாமல் கடல்புக்கொளித்தான். இந்திரன்



அகத்தியனையணுகி யிதனை அறிவித்தான். முனிவர் கடல்நீரைக் கையிலேந்தி முற்றவும் வற்றப்பருகி யவ்வசுரனை அமரர் கோனுக்குக் காட்டினார். அவனுங்கண்டான். குலிசத்தால் அவனைக்கொன்றான். வென்றிகொண்டான். முனிவரும் பருகிய கடலை மீண்டு உமிழ்ந்தார். அனைவரும கண்டார். அன்புடன் வியந்தார். இதன் விரிவு திருவிளையாடற் புராணத்தில் காணப்படும்.

பார்சமன் செய்தது:—இறைவனது திருக்கலியாணகோலத்

தைத் தரிசிக்கும் பொருட்டு எல்லாவுயிர்களும் இமயஞ் சார்ந்தன. அதனால் வடதிசை தாழ்ந்தது உலகம் தலாது நிலைகுலைந்தது உயிர்கள் அஞ்சி அலமந்தன தேவர்களும் தியங்கினர். மாதவர்களும் மயங்கினர். மேருவுந் தளர்ந்தது. சேடனுங் கலங்கினன். அப்பொழுது எல்லாம்வல்ல இறைவன் மகத்துவ மிகுத்தநமது அகத்தியமுனிவரை நோக்கினர். முனிவர் திலகமே! இங்குவருக வென்றழைத்தார். அவரும வந்து வணங்கினர். அருந்தவமிகுந்த பெருந்தகையே, நீதென்திசை சென்று பொதிகையில் நின்றால் இவ்வுலகம சமமாய் நிலைபெறும. உயிர்களும் நலமுறும் என்றுபாமன் பணித்தார். முனிவரும் அப்பணியைத் தலைமேற்கொண்டார். திருவுருவை உளத்தில் சிந்தித்தார்

தென்திசைநோக்கி நடந்தார் பொதிகை மலையை வந்து நண்ணினர். நண்ணலும உலகம சமமாய் நன்னிலையுற்றது. வருந்திய

வுயிர்களும் மகிழ்ந்திருந்தன. தேவர் முதலிய யாவரும் குறுமுனியின் பெருமையை வியந்து புகழ்ந்தார். இதனால் அளவிடலரிய பெருமை நமது முனிவர்பால அமைந்துள்ளமை தெளியப்படும்.

பொதியமதென்னும வெற்பில் புனிதமா முனிவன் வைகத்
திதியுறு வடபாற் றென்பாற் புவனியோர் துலைபோலொப்ப
அதுபொழுதுயிர்களானோர் அணங்கொரீஇ யாவேயத்தி
மதிமகிழ்ந் தமர்ந்தார் தொல்லை வருவையின் செய்கை சொல்வாம்.

அணங்கு—வருத்தம், ஒரீஇ—நீங்கி. (கந்தபுராணம)

துறந்தார் பெருமையே சிறந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

23. பண்டு துறவுகொண்ட பட்டினத்தார் மாண்புலகில்
கொண்டதுயர் வெவனே குமரேசா—கண்ட
இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. (௩)

குமரேசா! துறவுகொண்ட பட்டணத்தாரது பெருமை ஏன் உலகில் உயர்ந்து விளங்கியதெனின், இருமைவகை தெரிந்து ஈண்டு அறம்பூண்டாரது பெருமையே உலகின்கண் உயர்ந்ததென்க.

இருமை என்றது பிறப்புவீடு என்னும் இரண்டனை. வகை தெரிதலாவது, அவற்றின் துன்ப இன்ப கூறுபாடுகளை முறையே ஆராய்ந்தறிதல். ஈண்டு அறம் என்றது துறவறத்தை.

பிறங்குதல்—மிகுந்து விளங்குதல்.

துன்பந்தோன்றின எவரும் துறந்து ஏகாய்த் தனித்தே யின்பந்தேடல் இயற்கை ஆதலால் இருமைவகை தெரிதலே துறவு பூணுதற்கு ஏதுவாயிற்று.

உலகப்பொருள்கள் முழுவதுமுடைய அரசர் பெருமையினும் அவற்றை முற்றவுந்துறந்த முனிவர் பெருமையே சிறந்ததென்பதாம்.

இருமைவகை தெரிதலே துறவு பூணுதற்கு ஏது என்பதும் அவ்வறம் பூண்டவர் பெருமையே புவியில் சிறந்ததென்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை பட்டினத்துப் பிள்ளையாரால் உணரப்படும்.

# கதை

பட்டினத்தார் என்பவர் உத்தமத்துறவு பூண்ட ஒருதத்துவஞானி. இவர் பிறந்தவூர் காவிரிப்பூம் பட்டினம். வணிககுல திலகரான இவர் சென்னையில் வசித்திருந்தார் என்பர். இவரது பிள்ளைத்திருநாமம் திருவெண்காடர் என்பதே. இவர் பல மரக்



கலங்களுக்குத் தலைவராய் விளங்கினர். இவரது கலங்கள் கலவாக்கடல்களேயில்லை. மறுபுலத்தவரோடும் வாணிகஞ்செய்தார். அரசரும் விரும்பும் பெரும்பொருள் பெற்றார். உலகபோகங்களுக்குரிய எல்லா நலங்களும் இவர்பால் ஒருங்கே அமைந்திருந்தன. வர்த்தகமுறையில் இவரது பெரும்புகழ் எங்கும் பரவி நின்றது. இம்மையின்பங்களில் இவர்மனம் செம்மையாக அழுந்தியிருந்தது. இங்ஙனம் இருந்துவரும் நாளில் இவர் பண்ணியிருந்த புண்ணிய பலத்தால ஒருபெரியவர் இவர்பால் நண்ணினர். தம்பால் வந்த அந்தச் சந்நியாசியை இவர் நன்றாக உபசரித்தார். அன்பு செய்தார் உலக இன்பத்தில் இவர் மனம் ஊன்றி நிற்கும் தன்மையை அப்பெரியவர் ஓர்ந்தார். உண்மையான இவரது பரிபக்குவத்தையும் தெளிந்தார். ஒரு முறியில் ஒருசிறு வாக்கியத்தை எழுதி இவர் மனைவிபால் தந்து இவரிடம் சேர்க்கும்படி கட்டளையிட்டுச் சென்றார். துறைமுகம் போயிருந்த இவர் மனையகம்புகுந்தார் உண்டு மகிழ்ந்தார். அப்பொழுது மனைவி வியப்பாக அம்முறியினை இவரிடம் தந்தாள். தந்ததை வாங்கித் தனியே நோக்கினர். அதில், "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என்று எழுதியிருந்தது. அதின் கருத்தைத் தமது கருத்தில் இருத்தினர், சிந்தித்தார். பிறவியிலுளவாகும் துன்பக் கூறுபாடுகளையும், வீட்டில் உளவாகும் இன்ப நலங்களையும் நன்கு தெளிந்தார். அரும்பொருளனைத்தையும் விடுத்தார். துறவறம் பூண்டார் அதன்பின் இவரது பெருமை உலகமெங்கும் பரவியோங்கி உயர்ந்தது. இவரது சிறந்த துறவைக்

குறித்து உயர்ந்த நூல்கள் பல உவந்து கூறுகின்றன.

"பட்டினத்துப் பிள்ளையைப்போல் யாரும் துறக்கை
அரிது அரிது" (தாயுமானவர்)

"பட்டினத்துப்பிள்ளையைப் பத்திரகிரியைப் பாவி
விட்டுவிடமாட்டார் வெறு விடர்" (ஒழிவிலொடுக்கம்)

துறவியின் பெருமையே யிவ்வுலகில் உயர்ந்ததென்பதித நூல் கூறப்பட்டது.



3ம் அதிகாரம் நீத்தார் பெருமை. 57

24. கொண்டபொறி கொண்டென்றும் கொள்ளாத நம்மாழ்வார்
கொண்டனர்வீ டென்னே குமரேசா—கொண்ட
உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (ச)

இ—ள்.

குமரேசா! பொறிகளால் புலன்களைக் கொள்ளாத நம்மாழ்வார் என் வீட்டின்பத்தைக் கொண்டார் எனின், அறிவென்னும் தோட்டியால் ஐம்பொறிகளையும் அடக்கினவர் வீட்டு நிலத்துக் கோர் வித்து ஆவர் என்க. வரன் என்னும் வைப்பு—மேலான இடம்; அஃதாவது முத்தி நிலம்.

தோட்டி—யானையையடக்கும் கருவி. அஃது அங்குசம் எனப் படும்,

அறிவைத் தோட்டி யென்று உருவகஞ் செய்தமையால், ஐம்பொறிகளும் யானைகளாகக் கொள்ளப்பட்டன. புலன் மீறிச் செல்லும் பொறிகளை மதமீறிச் செல்லும் யானைகளாகக் கருதி யிதுகூறினர். ஐம்பொறிகளையும் அடக்கினவனே முத்தி நிலத்

தில் மூழ்த்துக் கிளைத்து விளங்குவான் என்பர் "ஈதலுங் காப்பான் வான் என்னும் வைப்பிற்கு ஓர் வித்து" என்றார். ஓர் என்பது அருமையை யுணர்த்திற்று.

முத்தி நிலத்துக்கு வித்து என்றதனால் இந்த நிலத்தில் வந்து பிறந்து வருந்தான் என்பதாம். சிற்றின்பத்தில் சிந்தையைச் செலுத்தாதவன் பேரின்பத்தில் நின்று பெருமை படைவான் என்றபடி.

பொறிகள் எப்பொழுதும் புலன்களையே நாடிச் செல்லும் என்பதும் அறிவால் அவற்றை அடக்கவேண்டும் என்பதும், அங்ஙனம் அடக்கினவனே வீட்டினை படைவான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நம்மாழ்வார் பால் உணரப்படும்.



## கதை.

நம்மாழ்வார் என்பவர் இற்றைக்கு 5000 வருடங்கட்கு முன்னமே பாண்டிய நாட்டிலே திருநகரி யென்னும் திருக்குருகூரிலே வேளாள வருணத்திலே சிறந்திருந்த காரியார்க்கும் உடைய நங்கையார்க்கும் புத்திரராய்வந்து அவதரித்தார். இவர் கருவிலே திருவுடையவர், தெய்வத்தன்மை நிறைந்தவர் ஆன்மா உடலோடுகூடி யிவ்வுலகில் உருவாகத் தோன்றியவுடனே ஒரு விக வாயுவந்து அதனைப் பற்றும். அப்பற்றுதலால் அது தனது பூர்விக அறிவையும் பெருமையையும் இழந்து அவிச்சையின் வயப்படும். அதன்பின் அழுகை, ஆற்றுதல், பருகுதல், முதலியவற்றைச் செய்து உலகவாசனையை யெய்தும். இதுஜட வாயு எனப்படும். இவ்வாயு தனதியல்பால் இவர் தோன்றியவுடனே இவரையும் தொடுதற்கு வந்தது. தன்னையணுகு முன்னமே யிவர் அதனை உங்காரத்தால் அதட்டி ஓட்டினர். அதனால் இவர் சடகோபர் என்னும் பெயரை எய்தினர் மாறனார் என்பது

தான் இவருக்குப் பெற்றோர் இட்டபெயர். வேறு நாட்டமின்றி உலகியலுக்கு மாறாக இருந்தமையால் இவருக்கு இப்பெயரிடப் பட்டது. இவரது பிறப்பும் வளர்ச்சியும் மிக்க அற்புதமுடையன. பதினாறு பருவம் வரையும் இவர் கண் விழியாமல் மௌனமாக இருந்தார். ஓதாதனைத்தையும் ஒழிவறவுணர்ந்தார். தத்துவவுணர்வை முற்றவும் பெற்றார் திருமால் அடிக்கே பெருமால் கொண்டார். அவரது அடியார் எவரினும் முடியாய் நின்றார். பகவானது கலியாண குணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஆழ்ந்திருப்பவராதலால் மாலடியவர் ஆழ்வார் எனப்பட்டார். அவரெல்லாருள்ளும் பிரித்து நம்பெருமானால் இவர் நம்மாழ்வார் என்று அழைக்கப்பட்டார். திருமாலும் தமது மலர்வாய்திறந்து "நம்" என்னும் அடைகொடுத்து இவரை அழைத்தார். அது முதல் இவர் நம்மாழ்வார் என்னும் நற்பெயர் பெற்றார். இஃதொன்றே இவரது பெருமையை நன்கு விளக்கும். இவர் பொறிகளைப் புறத்திற் செலுத்தாமல் அகத்திற் செலுத்தினர். அதனால் பிறவிதீர்ந்தார். முத்தியுலகில் நித்த



ராய் முனைந்தார் திருநகரி என்னும் ஊர் இவர் அவதரித்த பின்னர் ஆழ்வார் திருநகரி யென்று வழங்கிவருகின்றது.

ஐம்பொறிகளை யடக்கினவனே வீட்டினை யடைவான் என்பது இதனால் கூறப்பட்டது

——

மாதவத்துக் கோதமன்றன் வாய்மொழியின் வன்மை யெவர்
கோதகலக் கண்டார் குமரேசா— பூதலத்தில்
ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான் (௫)
இந்திரனே சாலுங் கரி.

குமரேசா! கோதமனது வலிமையைக் குறமறக்கண்டார்யாவர் எனின், இந்திரனது ஆற்றலுக்கு அகனறவானக்துள்ளார் இறைவனாகிய இந்திரனே தக்க சான்று என்க.

கோமான் இந்திரன் --இருபெயரொட்டு.

கரி=சான்று

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம என்னும் புலன்கள் மேற்செல்கின்ற அவா ஐந்தையும் அடக்கினனது பெருமையும் அவற்றை யடக்காதவனது சிறுமையும் கூறுவார் ஐந்தவித்தான் ஆற்றற்கு இந்திரனே கரி என்று கூறினர்.

இங்கு ஐந்தவித்தான் என்றது கௌதமனை. இவரது வலிமையை உலகிற்கு நன்கு காட்டினன் இந்திரனே ஆகலால் அவனைச்சானுங்கரி என்றார்.

ஐந்தவித்தானுக்கே அளவில் ஆற்றல் உளதாம் என்பதும் வேறு ஒருவன் எவ்வகையாற்றல யுடையவனாயினும் அவனுக்கு ஈடாகான் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கௌதமர்பாலும் இந்திரன்பாலும் காணப்படும்.



கதை

கௌதமர் என்பவர் பெருந்தன்மை நிறைந்த ஓர் அருந்தவர். நெறிதிறப்பா சீர்மையர். மாசற்ற மனமுடையவர். இவர் அகலிகை யென்னும் மனைவியோடு மகிழ்ந்து வாழ்ந்திருந்தார். இவள் அழகனைத்தும் ஒருங்கே குடிகொண்ட திருமேனியையுடையவள். உத்தம குணங்கள் முற்றும் வாய்ந்தவள். இந்திரன் இவள்மீது பெருங்காதல்கொண்டான். இவளது அழகென்னும் பெருங்கடலில் விழுந்து கரைகாணாது வருந்தினன். எவ்வகையிலும் இவளைக்கலந்து இன்புறவேண்டுமென்று கருதினன். கலங்கினன். தெய்வபோகங்கள் அனைத்தையும் வெறுத்தான். அயலொன்றையும் நாடான். மயலேயேகொண்டான். பல காலமும் முயன்றான். ஒரு நாள் நடுநிசியில் முனிவரது ஆச்சிரமத்துக்கு வந்தான். கோழிபோல் கூவினன். விடிந்தது பொழுது என்று கருதி முனிவர் எழுந்தார். காலைக்கருமங்களைச்செய்ய நீர் நிலையை நோக்கிப்போனர். உடனே இந்திரன் முனிவர் உருவங்கொண்டான். உள்ளே புகுந்தான். பேதை அகலிகையும் பேதந்தெரிந்திலள். தமது கணவன் என்றே முழுதும் நம்பினள். கள்ள இந்திரனும் மெள்ள நெருங்கினன். அகலிகையை அணைத்தான். அவளும் இணங்கினள். இருவரும் கலந்தார் இன்பந்துய்த்தார். நீர் நிலையை நோக்கிச்சென்ற கௌதமர் உரிய காலம் வரவில்லை யென்றுணர்ந்தார். மனையில் நிகழும் வினையைத் தமது ஞானத்தால் தெளிந்தார். விரைந்து மீண்டார். புகுந்தார் மனையுள். வந்தனர் முனிவரென் றிந்திரன் கண்டான். உள்ளங்கலங்கினன். உடலும் நடுங்கினன். புரந்தரன் பயந்து ஒரு பூனையாய் ஓடினன். முனிவர்பெருங்கோபங் கொண்டார். அவன் உடல் முற்றும் பெண் குறிகளாகக் கடவதென்று சபித்தார். அவை யெல்லாம் அவ்வாறே யுடனே அவனுடலில் வந்தமைந்தன. திரும்பினர். அங்கிருந்த அகலிகையை நோக்கினர். சீறினர். நீ பொல்லாதது புரிந்தாய். ஆதலால் கல்லாகுக என்று சபித்தார். சபிக்கு முன் கணவன்காலில் அகலிகை விழுந்தாள். அறியாமல் அடியாள் அரும்பிழை செய்தேன். இதற்கொரு

முடிவை எனக்கருள் என்றாள். தசரதராமன் திருவடித் துகள் படிமேல் இக்கல்லுருவம் நீங்கி நல்லுருப்பெறுவாய் என்று கௌதமர் கருணை செய்தார். அதன்பின் மனையை யிகந்தார். வனமே புகுந்தார்

இவ்வுண்மை யிதனடியில் வருகின்ற கவிகளில் இனிது தெளியப்படும்.

தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும்பாய
உய்யலாம் உறுதிநாடி யுழல்பவன் ஒருநாளுற்ற
மையலால் அறிவுநீங்கி மாமுனிக்கு அற்றஞ்செய்து
பொய்யிலாவுள்ளத்தான்றன் உருவமே கொண்டுபுக்கான். (௧)
புக்கவ ளோடும் காமப் புதுமண மதுவின்றேறல்
ஒக்கவுண்டிருந்தலோடும் உணர்ந்தனளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்ன வோராள் தாழ்ந்தன ளிருப்பத்தாழா
முக்கணான் அனைய வாற்றல் முனிவனு முடுகி வந்தான். (௨)
சரந்தருசாபமல்லால் தடுப்பருஞ்சாபம வல்ல
வரந்தருமுனிவ னெய்தவருதலும் வெருவி மாயா
நிரந்தரம் உலகினிற்கும் நெடும்பழிபூண்டாளை நின்றான்
புரந்தரன்நடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போகலுற்றான். (௩)
தீவிழிசிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவன் அவனை நின்கைச்சுடுசரம் அனையசொல்லால
ஆயிரமாதர்க்குள்ள அறிகுறி உனக்குண்டாகென்
றேயினன் அவையெலாம்வந்தியைந்தன இமைப்பின்
முன்னம். (௪)
எல்லையில் நாணமெய்தி யாவர்க்கும் நகைவந்தெய்தப்
புல்லியபழியினோடும் புரந்தரன்போயபின்றை
மெல்லியலாளை நோக்கி விலைமகளனையநீயும்

திருக்குறட் குமரேச வெண்பா.

பிழைத்தது பொறுத்தலென்றும் பெரியவர்கடனே யென்பர்
அழற்றருங்கடவுளன்னுப் முடிவிதற்கருளுகென்னத்
தழைத்தவண்டி மிருந்தண்டார்த் தசரத ராமன்என்பான்
கழற்றுகள் கதுவ இந்தக் கல்லுருத் தவிர்நி யென்றான். (க)

(இராமாயணம்)

மிதிலைக்குவரும் வழியில் இராமனபால் விசுவாமித்திரர் அகலிகை சரிதத்தை யிவ்வாறு கூறினர். எனவேயிது இராமாவதாரத்துக்கு வெகுகாலத்துக்கு முன்னரே நிகழ்ந்துள்ளமை பெறப்படும், தவவலியானது தெய்வவலியினும் சாலச்சிறந்ததென்பது இதில் காணபபட்டது.

பிறப்பால் மனிதனுயினும் ஐந்து அவித்தவன இந்திரனினும் சிறந்தவன் என்பது குறிப்பு.

கௌதமனது பெருமைக்கும இந்திரனது சிறுமைக்கும் ஏது இதனல் கூறப் பட்டது.



26. வீடுமனர் மெய்த்தவத்தை மேவினர் சந்தனுவேன்
கூடினன் காமம குமரேசா—நாடிச்
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (க)

இ—ள்.

குமரேசா! வீடுமன் மனத்தை படக்கித் தவத்தைச செய்தான் சந்தனு என் அதனை அடக்கமாட்டாமல் காமத்தைக் கூடினன எனின், பெரியோர் செய்தற்கு அரியனவற்றைச் செய்வார். சிறியோர் அவற்றைச் செய்யமாட்டாமல் எளியவற்

றைச் செய்வார் என்க.

அறிவது, ஐம்பொறி அடக்கம் எளியது. அஃதின்மை. செயற்கரிய செய்வார் பெரியர் எனப்பொதுவாகக்கூறினபடி யால் இதுதான் செயற்கு அரியது, இதுதான் செயற்கு அரியது



என ஒவ்வொருவருந்தத்தமக்கு வேண்டியவாறே கூறலாம்; ஆயி னும் பிற்காலத்துப் பெரியார் ஒருவர் அதனை வரையறுத்துளார். அஃது இதனடியில் வருகின்றது.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்
　　கரடிவெம் புலிவா யையும்
கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
　　கட்செவி எடுத்தாட்ட லாம்
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
　　வேதித்து விற்றுண்ண லாம்
வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
　　விண்ணவரை யேவல் கொளலாம்
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் மற்றொரு
　　சரீரத்தி னும்புகுத லாம்
சலமேல் நடக்கலாம் கனன்மேல் இருக்கலாம்
　　தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற
　　திறம் "அரிது" சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
　　தேசோம யானந்தமே. (தாயுமானவர்)

கட்செவி=பாம்பு.

செயற்கு அரியது இதுவென இதனால் இனிது புலனும்.

பெருமைக்கும் சிறுமைக்கும் உரிமையான உண்மைக் கருவியை யிதில் ஒருங்குணர்த்தினர்.

கல்வி செல்வம் குலம் அதிகாரம் பருவம் உருவம் முதலிய வற்றால் சிறியராயினும் அரியன செய்வரேல் அவரே பெரியர் என்பதும் அவற்றாற் பெரியராயினும் அரியன செய்யாரேல் அவர் சிறியர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண் மை விடுமன்பாலும் சந்தனுபாலும் உணரப்படும்.



கதை

சந்தனு என்பவன் சந்திரகுலவேந்தன். வருணனது அமிச மா வந்து பிறந்தவன். இப்பரதகண்டத்தில அஸ்தினபுரியிலி ருந்து அரசுபுரிந்தான். பேரழகும் வீரமும் ஒருங்கே உடைய வன். கங்கை என்னும் தெய்வமகளை மணந்து விடுமன் என் னும் மெய்மகனைப்பெற்றான். மகனும் பருவமடைந்து மகிமை யைத்திகழ்ந்தான். இங்ஙனம் வருநாளில் ஒருநாள் சந்தனு வேட் டைமேற் சென்றான். யமுனாநதியை யணுகினன். அங்கே மச் சகந்தியைக்கண்டான். இவள் அந்நதியில் நாவாய் விடுகின்ற பரதவர் பதியின் மகள். இவளது திருமேனியின் நறுமணம் வெகுதூரம் சென்று வீசுகின்றபடியால யோசனை கந்தியெனவும் பரிமளகந்தியெனவும் புகழப்பட்டாள். அரசன் இவளைக்காத லித்தான். மணஞ்செய்யக்கருதினான். தனது கருத்தை யிவ ளது தந்தைக் குணர்த்தினான். நின்முதன்மகன் இருப்ப என் புதல்வியை நல்கேன் என்று தந்தை மறுத்தான் அரசனும் மனந் தளர்ந்தான். உடல் மெலிந்தான். நகையடைந்தான். மாளி கையிற்புகுந்து வாடியிருந்தான். இளவரசாகிய விடுமன் தந்தை யின் நிலைமையை வினவியறிந்தான். பரதவர்பதிபாற் சென்

ஞன். பாட்டா! என்று விளித்தான். நின்மகளே எனக்குத் தாய் என்றான். இத்தாய் வயிற்றில தோன்றிய புதல்வர்கட்கே அரசுரிமை உண்டு. எனக்கு அரசுரிமை வேண்டாம். என்றும் மணத்தை யான் இனிச்செய்யேன்; என்னும் உறுதியை முன்னே கூறினான். பரிமளகந்தியைக் கொணர்ந்தான். தந்தைக்கு மணமுடித்தான். தந்தையின் பொருட்டுத்தான் ஐம்பொறி படக்கினன். அரிய விரதத்தை உரியவாக்கொண்டான். சந்தனு அவளை மணந்தான். இன்பந்துய்த்தான்.

பருவத்திற் சிறியராயிருந்தும அரிய செய்து வீடுமர் பெரியர் ஆயினர். அதிற்பெரியராயிருந்தும் சந்தனு எளிய செய்து சிறியராயினர். இதன் விரிவைப்பாரதத்தில் காண்க.

65 3ம் அதிகாரம் நீத்தார் பெருமை.

செயற்கரிய செய்து வீடுமர் பெரியராயினர் என்பது இதனுல் கூறப்பட்டது.



27. உற்றசுகன்பால் உலகொடுங்கி நிற்கவவன்
கொற்றமுற்ற தென்னே குமரேசா—முற்றும்
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
ான் கட்டே யுலகு. (எ)

குமரேசா! உலகமானது சுகமுனிவரது அறிவில் அமைந்து நிற்ப அவர் மேன்மையுற்றது என்னே எனின், சுவைமுதலிய ஐந்தனது வகையினை ஆராய்வானது அறிவின் கண்ணே உலகம் அடங்கிநிற்கும் என்க.

காணப்படுகின்ற இத்தூலவுலகத்திற்கு மூலமானசூக்கும காரணங்களை ஆராய்ந்து தெளிந்தவன அதன்தோற்றத்தைக் கண்டு மயங்காமல் தத்துவஞானியாய் விளங்குவான் என்பார்

உலகுவகை தெரிவான் கண்ணதே என்றார்.

புலகம் ஐவகைப்பூதங்களின் காரியம் என்பதும், இத னைத்தெரிதலே மெய்யுணர்வு என்பதும் இவ்வுணர்வுடையவன் அதன் தோற்றத்தில மயங்கான் என்பதும் இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை சுகமுனிவர்பால் உணரப்படும்.

கதை.

சுகர்என்பவர் வியாசருடைய பிள்ளை. பிறந்தபொழுதே துற ந்து சென்றவர். உலகியலையும் உணர்வியலையும் நன்குதெரிந்தவர். சுகம்என்பது கிளியென்னும் ஒரு பறவைக்குப் பெயர். அதன்மு கம் போன்றமுகத்தை இவர் பெற்றிருந்தமையால் சுகன் என்னும் பெயரை இவர் பெற்றார். இவர் தந்தையினும் சிறந்த தத்துவவு ணர்வினர். உலகப்பற்றைமுற்றத்துறந்து விரைந்துசென்றார். தந்



தை மகவாசையால் பின்தொடர்ந்தார். அழைத்தார். அப்பொ ழுது எல்லாப் பொருள்களும் என்னே என்னே என்று எதிர் மொழிதந்தன. வகைதெரிவான் கண்ணதே உலகம் என்பது இவர் பால்காணப்பட்டது. இதனை இதனடியில்வருவதால் காண்க

பிறந்தபொழுதே துறந்து பிறைக்குழவி போல் கடப்பா
பின்போய்த் தொன்னூல
அறைந்த புகழ்வியாதமுனியாதரத்தால மதலாய் என்
றழைப்பசெவ்வாய்
திறந்துரைறை பொழியுமலர்ச்செழுந்தருவும் என் என்ன
உயிர்கள்யாவும்
நிறைந்துறையும் சுகமுனிவனிரையிதழுகதா மரைமலர்த்
தாள நினைதல் செய்வாம். (பாகவதம்)

சுகமுனிவர் மெய்யுணர் வுடையராய்த் துறந்தார் என்பது

28. காட்டினகக் கீரன்சீர் கம்பன் பெருமையவர்
கூட்டுமொழி யென்னே குமரேசா — பாட்டில
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (அ)

இ—ள்

குமரேசா! நக்கீரரது சீரையும் கம்பரது பெருமையையும் என் அவர் மொழிகளே காட்டின எனின், நிறைந்த மொழியினை யுடைய மாந்தரது பெருமையை நிலவுலகத்தில் அவர் அறைந்த மொழிகளே காட்டிவிடும் என்க

நிறைமொழி = அறிவும் தவமும் நிரம்பிய மொழி.
மறைமொழி = ஆணையிட்டுச் சொல்கின்ற மந்திரமொழி.
காட்டுதல் = பிரசித்தமாக உணர்த்துதல்

3ம் அதிகாரம் நீத்தார் பெருமை. 67

மாந்தர் என்னும் சொல் என்றும் பன்மையாகவே நின்று மக்களைச் சுட்டும். பெரியாரது மொழிகள் தம்பயனையாண்டும் தப்பாமல் பயக்கும் என்பது "காட்டிவிடும்" என்னும் துணிவு மையால காணப்படும்.

சிறந்த பெரியார்களிடத்தில் நிறைந்தமொழிகள் உளவாம், என்பதும் அம்மொழிகளே அவர்களுடைய பெருமைகளை உலகறிய உணர்த்திவிடும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நக்கீரர் பாலும் கம்பர் பாலும் உணரப்படும்.

கதை. 1.

நக்கீரர் என்பவர் இறைவக்கு அபிமத கெண்ணுறு வரு

டைநாட்டு முனிவர் மதுரையில் இருந்தவர். சங்கப்புலவருள் தலைமையாய் நின்றவர் பொய்யில் புலவர் என்னும் புகழினர் ஆயவர். பரம பொருள் நூலுக்கு அரும்பொருள் கண்டவர் நெற்றிக் கண் காட்டினும் குற்றம் குற்றமே யென்று கண்ணுதற் பரமனை முன்னின்று கலங்காமல் வாதித்த கலைவீரர். இவர் சங்கத்தில் தலைமை பெற்று விளங்கியிருந்தார். அக்காலத்தில் கொண்டான் என்னும் குயவன் ஒருவன் அங்கு வந்தான். தமிழ்ச்சுவையை யறியாது செருக்குற்று நின்றான். வடமொழியே சிறந்ததென்று வாதித்தான். அவ்வளவில் அமையாமல் தமிழைப் பழித்துக் கூறினான். அதனால் நக்கீரர் அவனை வெகுண்டு ஒரு மறைமொழி யொன்றை விரைவில் மொழிந்தார். உடனே அவன் துள்ளி விழுந்தான். துடித்து உயிர் துறந்தான். அதன் பின் அவன்மேல் அருளி,

ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தால் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்கசுவா கா.



என்றொரு கவியை நன்று மொழிந்தார். விழுந்து மடிந்த கொண்டான் எழுந்து மகிழ்ந்து நின்றான். இம்மொழி இவர் பெருமையை அன்று நன்று காட்டிற்று.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. என்னும்

தொல்காப்பியச் சூத்திர உரையில் இது தெளியப்படும்

## கதை 2.

கம்பர் என்பார் இற்றைக்கு ஆயிரவருடங் கட்கு முன்னர்ச் சோழ நாட்டிலே திருவழுந்தூரிலே அவதரித்தார். இவரது குலத்தைப் பற்றிப் புலவர் பலர் பலவாறு கூறுகின்றனர் இவரை

அந்தணர் என்பார் பலர். வேறு சிலர் அரசர் என்பார் இன்னுஞ் சிலர் வேளாளர் என்பார்-பின்னுஞ் சிலர் உவச்சர் என்பார். கண்ணன் பிறப்பும் பின்னுளிற் றுலங்கிறது கம்பன் பிறப்பு இன்னம் அறிந்தார்கள் இல்லையில்லை முக்காலும் இது மெய்ம்மையே என்றார் மற்றொரு பெரியவர். இவர் குலம் எதுவாயினும் இவரது தோற்றம் தெய்வத் தன்மை வாய்ந்ததென்பது தேற்றம். இராமாயணம் என்னும் காவிய அமுதத்தை மன்பதைகள் என்றும் அநுபவித்து இன்புறும் வண்ணம் அருளுடன் தந்த திருவினையுடையவர். புலவரசர்களும் கவியரசர்களும் போற்றி வணங்கத் தக்கசீர்த்தி வாய்ந்தவர். கல்வியிற் பெரியவர். கவிச் சக்கிரவர்த்தியென்னும் அரும் பெயர் பெற்றவர். பிள்ளைப் பருவத்திலேயே கலைமகள் கருணையை இவர் நலமுறப் பெற்றார். அதனால் நிறைமொழியுடையாராய் நிலத்தில் விளங்கினார். அக்காலத்தில் காளிங்கராயன் என்னும் குறுநில மன்னனது குதிரை ஒன்று இவரது குருவின் தினை நிலத்தில் மேய்து கொண்டு நின்றது. அதையிவர் ஓட்டினார். அஃது ஓடவில்லை. வெகுண்டார்.

வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
காய்த்த தினைப்புனத்தில் கால் வைத்துச்—சாய்த்துக்
கதிரைமா ளத்தின்ற காளிங்க ராயன்
குதிரைமா ளக்கொண்டு போ. என்று



வசைகவி யொன்றை இசையுடன் மொழிந்தார். உடனே அக்குதிரை மாண்டு விழுந்தது. கண்டார் அதனை. கொண்டார், கருணை. முன சொன்ன வெண்பாவின் ஈற்றடியை மாற்றி ‘‘குதிரை மீளக்கொண்டுவா” என்றார் மாண்டகுதிரை மீண்டெழுந்தது. மேற் குறித்த பெரியார் இருவரும் நிறைமொழி மாந்தர் என்பதை அவர் மறை மொழிகளாலே உலகம் நன்குணர்ந்தது.

பெரியார் பெருமையை அவர் மொழியால் அறியலாம் என்

பது இதனுல் கூறப்பட்டது.

—(  )⊗(  )—

29. வென்றிக் கபிலர் வெகுளியால் ஏன்சகரர்
குன்றி மடிந்தார் குமரேசா—என்றும்
குணமென்னும் குன்றேறி நின்ருர் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது (கூ.)

இ—ள்

குமரேசா! கபிலமுனிவர் வெகுளியால் சகரர் எல்லா ரும் ஏன உடனே இறந்தாரெனின், குணமென்னும் குன்றின் மேல நின்ருரது கோபததைக் கணமேயும் காத்தல் எவருக்கும் அரிதென்க.

கணம் = மிகச் சிறியதோர் கால அளவை. அருமையும் திண்மையும் பெருமையும் கருதி குணததைக் குன்று என்று உருவகிததார். சகரர் எனறது சகரன எனனும அரசன் புதல் வர் அறுபதினுயிரவரை.

வாய்மை தூய்மை அருள் தவம மெய்யுணர்வு முதலிய உயரிய குணங்களையுடையாரே பெரியார் என்பதும், அவர்பால் வெகுளிதோன்ருது என்பதும், ஏதாவது ஓர் ஏதுவால் தோன்றி னும் தோன்றிய அப்பொழுதே அவ்வெகுளி அழியும் என்ப

ஹம், அத்துணைப்பொழுதினும் அதனைத்தடுத்தற்கு எவர்க்கும் முடியாதென்பதும், "கணமேயும் காத்தல் அரிது" என்பதனால் உணரப்படும். குணமிலார் வெகுளியினும் அதனையுடையாரது வெகுளிக்கே அஞ்ச வேண்டுமென்பது குறிப்பு. இல்லார் வெகுளி ஏதும் செய்யாது. உடையார் வெகுளி எல்லாம் செய்யும் என்பதாம்.

(இவ்வுண்மை கபிலர்பால் காணப்படும்.)

## கதை

கபிலர் என்பவர் ஓர் அருந்தவர். உயரிய குணங்களெல்லாம் ஒருங்கே உடையவர். பாதலத்தில் அமர்ந்து நெடுங்காலம் கடுந் தவம் புரிந்தார். அக்காலத்தில் அயோத்தியில் சகரன் என்னும் ஓர் அரசன் இருந்தான். இவ்வரசனுக்குத் தெய்வத் திருவருளால் அறுபதினாயிரம் புதல்வர் தோன்றினர். அதன்பின் பரி வேள்வியொன்று செய்யக் கருதி அதற்கு உரிய முறைப்படி ஒரு அசுவத்தை உலகைவலம் வரும்படி விட்டான். தம் புதல்வராகிய அறுபதினாயிரவரும் அதனைத் தொடர்ந்து பின்சென்றார். இவ்வேள்விக்கு இடையூறுசெய்ய எண்ணியிருந்த இந்திரன் அவர்அனைவரும் அறியாவண்ணம் அப்பரியைப் பிடித்துப் பாதலத்தில் தவம் செய்துகொண்டிருக்கிற கபிலமுனிவர் பக்கத்தில் உள்ள ஒரு மரத்தில் பிணித்து விட்டு மறைந்து போயினன்.

குதிரையைக் காணமல சகரர் பல இடங்களிலும தேடினர். வாடினர், வருந்தினர். முடிவில் கணமுடி யருந்தவம் புரியும கபிலர் பக்கல் வந்து அதனைக் கண்டார். அம்முனிவரே தம் குதிரையை மறைதது வைத்துளார் என்று மாறு படமதித்தார். அனைவரும் சீறினர். ஆராயாமல் அலைக்கழைதார். முனிவர் வெகுண்டு விழித்தார். அவரது வெகுளிக்தீயால சகரர் அனைவ ருமு கணத்துள் மடிந்து சாம்பராயினர். இதன் விரிவை இராமா யணத்தில் தெளிக.



பெரு வீரராகிய அறுபதினாயிர அரசகுமாரரையும் தமது பார்வையால ஒரு கணததுள் ஒருங்கே யழிததமையால் வெற்றி யென்னும பதம அவர்க்கு அடையாக நின்றது.

மேல, நீததார் தமொழியால அழிவும ஆக்கமும் உளவாம் என்றார். இதில அவர் எண்ணிலுைம பார்ததாலும அவை நிக ழும் என்றார்

சான்றோர் வெகுளியின தன்மையும் வன்மையும இதனல் சாற்றபபட்டன

——(◌)◌(◌)——

30. பண்டே ஊ சடபரதா பல்லுயிர்க்கும் செந்தண்மை
கொண்டு நடந்தார் குமரேசா—கொண்டாடும்
அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். (௰.)

குமரேசா! சடபரதர் எல்லாவுயிர்களிடத்தும் செவ்விய

அளியை வன செய்து ஒழுகினர் எனின் எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு ஒழுகுதலே அந்தணர் என்று சொல்லப்படும் அறவோர்க்கு இயல்பு என்க.

அந்தணர்—அழகிய தண்ணளியையுடையவர். அளி—இரக்கம். செந்தண்மை—செவ்விய தண்ணளி அஃதாவது கோடாத அருளுடைமை.

உயிர்களிடத்துச் செவ்விய அளியைச் செய்து ஒழுகுதலே அந்தணர்க்குக் கடமையென்பதும், அஃதில்லார்க்கு அந்தணத் தன்மையில்லை யென்பதும், அளியுடையார் எவராயினும் அவரே அந்தணர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இது சடபாதர் பால் உணரப்படும்.



## கதை

பாதன் என்பவர் இப்பாரத கண்டத்தில் பெரும்புகழ் நிறுவிய ஒரு பெரிய அரசன் பிறிதின் நோய் தன்நோய்போல கருதும் பெற்றியையுடையான். எவ்வுயிரும் தன்னுயிர்போல எண்ணியிரங்கும் புண்ணியன் உலகியலையும் உணர்வியலையும் இவர் உள்ளபடி யுணர்ந்தார் பிறவி வீடு என்னும் இருமை வகையினையும் ஒருமையில் தெளிந்தார். அரசு முதலிய அனைத்தையுந் துறந்தார். ஞானியாய் மோன முற்றிருந்தார் அதன்பின் அந்தணராய்த் தோன்றினர். எல்லாம் தெரிந்திருந்தும் யாதும் தெரியாத வரைப்போல நடித்தமையால் இவர் ஜடபாதர் எனப்பட்டார். தாம் நடந்துசெல்லும் வழியில் எறும்பு முதலிய சிறு பிராணிகள் வருந்துமே யென்று குந்தி நடந்தார். அளி நிறைந்த நெஞ்சும் ஒளி நிறைந்தமேனியும் உடையாராயிருந்தார். பெரியார் எவரும் இவரது செந்தண்மையை மதித்துத் துதித்தார். அந்தணர் இவரென அனைவரும் போற்றினர். இதன் விரிவை

விண்டு புராணத்தில் கண்டு தெளிக.

சௌதன்மையே அந்தணர் தன்மையென்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

ஒழுக்கத்தின்கண்ணே வழுவாமல் நிற்றல். பற்றுக்களை விடுதல். பிறப்பு வீடுகளின் வேற்றுமையைத் தெளிதல். ஐம்பொறி அடக்கல். அவாவினை அறுத்தல். செயற்கரியசெய்தல். உலகியல் ஓர்தல். நிறைமொழி கொள்ளல். குணங்களால் விளங்குதல். செந்தண்மைபூணல். என்பனவாம்.

இவை, பெரியாருக்கு உரிய குணங்களாக முறையே இதில் உணர்த்தப்பட்டன.

—[ ][ ]—

# 4-ம் அதிகாரம் அறன் வலியுறுத்தல்.

—( )[o]( )—

அஃதாவது அறத்தினது சிறப்பை யுணர்த்துதல்.

———

31. பண்டுபல அல்லலுற்றும் பாண்டவர்கள் வெனறத்தைக்
கொண்டார் துணையாக் குமரேசா—மண்டு
சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு (க)

குமரேசா! பாண்டவர்கள் அல்லல் பல அடைந்தும்

அறத்தை என் உறுதியாகப் பற்றி நின்றார் எனின், அறம், சிறப்பையும் தரும் செல்வத்தையும் கொடுக்கும் ஆதலால் அவ்வறமே உயிர்கட்குச் சிறந்த துணையாம் என்க.

சிறப்பு—முத்தி. உயிர்கள் பெறத்தக்க எல்லாப் பேற்றினும் பெருஞ் சிறப்புடையது முத்தியே ஆதலால் சிறப்பு என்றதற்கு ஈண்டு இப் பொருள் கொள்ளப்பட்டது ஊங்கு, மிகுதியென்னும் பொருளை விளக்குவதோர் சொல்

உயிர்க்கு அறத்தின்ஊங்கு ஆக்கம் எவன்—உயிர்கட்கு அறத்தினும் மிக்க ஆக்கம்யாது வேறு ஒன்றும் இல்லையென்பது குறிப்பு.

ஆக்கம், ஆக்கிவருவது. அஃதாவது இன்ப சாதனங்களை ஒருவனுக்கு மேன்மேலும் பெருகிவருதல். சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் என்றதனால் இருமையினும் அறம் இன்பம் தரும் என்பது பெற்றும். பொருளான் ஆக்கம் வருமெனல் போக்கி அறமே அதனைத் தருமென்றெண்ணுக என்பதாம்.



அறமே எல்லா நலங்களையும் அருளும் என்பதும், தமக்கு ஆக்கம் என்று கருதி உயிர்கள் அவ்வறத்தையே செய்யவேண்டும் என்பதும், இதற்குச் சான்றாக ஆக்கமுதலிய அனைத்தையும் விடுத்தும் அறத்தைமட்டும் விடாமல் பாண்டவர்கள் உறுதியாகப் பற்றி நின்றார் என்பதும், அதன் பயனாக அவர்கள் சிறப்பையும் செல்வத்தையும் அடைந்தார்கள் என்பதும் இதில் உணரப்படும்.

கதை

பாண்டவர் பாண்டு என்னும் அரசன்புதல்வர். அவராவார்

தருமன், வீமன், விசயன, நகுலன, சகாதேவன என ஐவர். இற்றைக்கு 5000-வருடங்கட்கு முன்னமே அத்தினபுரியில இருந்தார். இபபொழுது டில்லி யென்று வழங்கபபடுகிற இடமே பண்டு அப்புரியிருந்த இடமாம. சந்திரகுலத்தில தோன்றிய அத்தி என்னும அரசனே முதன் முதல இதனை வனபபு, ஆகினான். அதனல் இப்புரிக்கு அபபெயரிடப்பட்டது. இதிலிருந்து தருமன் முதலிய ஐவரும பெருமையோடு வாழ்ந்துவந்தனர். அக்காலத்தில் இவரது பெரிய தந்தையாரின புதல்வராகிய துரியோதனன் முதலியோர் பொறாமையால இவருக்குப் பெருந்துயர் விளைத்தனர். அவர் செய்த சூழ்ச்சியால் இவர் அரசபதவியையும் இழந்தார் ஆக்கமுந் துறந்தார். அடவியிற புகுந்தார் அருந்துயர் அடைந்தார். ஆயினும் அறமே ஆக்கம என்று அறிவுடனிருந்தார். ஆதலால் இவரென அனைவரும புகழ்ந்தார். இவ்வுரிமையும் உண்மையும தருமன எனனும பெயரானே நன்கு விளங்கும். சிறபபும் செல்வமும் இவர்கள் அறத்தால் பெற்றனர். இதனைப் பாரதத்தில் அறியலாம.

தருமமேயினை யிலபொருள் தரையிடைத் தகைசால்
ஒருமையின்பின யுதவிவின் னுலகிலும உடன்போய்
அருமையின்பமுய்த் தந்தசர்த செறுமெனில அறமே
இருமையுந்துணை யாகுவ தன்றிமற் றில்லை.

(திருக்கூவப் புராணம்)

4ம் அதிகாரம் அறன் வலியுறுத்தல். 75

தருமமே உலகம் போற்றச் சகலகா ரணமதாகும்
தருமமே யழியா தென்றும் தாபா மாகிநிற்கும
தருமமே தனைவேட் டோர்க்குச சுவர்க்கம் அனைத்தும் நலகும்
தருமமே முத்திசேரும் சாதனம் என்றுட்கொள்வான்.

(காசிகாண்டம்.)

சுட்டிய ஒண்பொருளும் இலலொழி ம் சுறத்தார்
காட்டுவாய் நேரே கனுழ்ந்தொழிவர் ஈட்டும்

எரியின் உடம்பழியும் ஈர்ங்குறு ...
தெரியின் அறமே துணை.

(அறநெறிச்சாரம்)

அறமே உயிர்கட்குச் சிறந்த உறுதிப் பொருள் என்பது இதனால் கூறப்பட்டது.



32 வீடணனுர் ஆக்கமுற வேலிலங்கை மன்னவனேன்
கூடினன் கேடு குமரேசா — நீடில்
அறத்தினூஉங் காக்கமும் இல்லை யதனை
மறத்தலி னூஉங்கில்லைக் கேடு. (உ)

குமரேசா! வீடணன் ஆக்கம் பெற இராவணன் ஏன் கேட்டை அடைந்தான்எனின், உயிர்கட்கு அறஞ்செய்தலி னும் மிகுந்த ஆக்கமும் இல்லை. அவ்வறத்தை மறந்து விடுதலி னும் மிக்க கேடும் இல்லை என்க.

அறம் செய்தவன் சிறப்பையும், செல்வத்தையும் அடை வான் என்று மேலேகூறினர். இதில் அதனைச் செய்யாமல் மறந்தவன் கெடுவான் என்றார்.





ஆக்கத்தை விழைதலும் கேட்டை வெறுத்தலும் உயிர் களது இயல்பு, ஆதலால் விரும்பியவற்றை விரும்பியவண்ணமே ஒருவன் பெறவேண்டுமாயின் அவன் அறஞ்செய்ய வேண்டும் என்பதாம்.

கேட்டை அடைதற்கு ஒருவன் யாதும் செய்யவேண்டாம்

அறம் செய்யாமையே அமையும் என்றபடி.
அறம் செய்தவன் ஆக்கம் பெறுவான், அதனை மறந்தவன் கேட்டை அடைவான் என்னும் உண்மை விடணன்பாலும் இராவணனிடமும் முறையே காணப்படும்.

## கதை. 1.

இராவணன் புலத்திய முனிவரது புதல்வராகிய விச்சிரவசுவுக்கும் கேகசிக்கும் பிறந்தவன். அரக்கர் குலதிலகன் சிறந்தவரபலங்களையுடையவன் இலங்கையிலிருந்து அரசு புரிந்தான். நல்லபோர்வீரன் தேவர் முதலிய அனைவரையும் செருவில் வென்று திக்கு விசயம் செய்தான். மூன்று உலகங்கட்கும் தானே முதல்வனாய் நின்றான். அதனால் திரிலோகாதிபதியெனச் சிறந்து விளங்கினான். இத்துணை நலங்களை யெய்தியிருந்தும் இவன் அறத்தை மறந்தான். மறத்தையே புரிந்தான் அதனால் பெருங்கேடுற்றான்.

கறங்குகால்புகாக் கதிரவன் ஒளிபுகா மறலி
மறம்புகா இனி வானவர் புகார் என்கை வம்பே
திறம்புகாலத்துள் யாவையும் சிதையினும் சிதையா
அறம்புகா இந்த அணிமதிற் கிடக்கை நின்றகத்தின்.

இஃது இராவணனது இராஜதானியாகிய இலங்கையைப் பார்த்தபொழுது அனுமான் கூறினது. இதனால் இராவணன் எல்லாவலிமைகளையும் எய்தியிருந்தான் என்பதும், அவன் இருந்த ஊரிலுங்கூட அறம் இல்லை என்பதும், தெளியப்படும். இதன் விரிவை இராமாயணத்திற் காண்க.

4ம் அதிகாரம் அறன் வலியுறுத்தல். 

## கதை 2

வீடணன், அரக்கர் குலதிலகனாகிய இராவணன் பிறந்த தம்பி அறமும் அறிவும் அருளும உடையவன். அறமே எல்லா நலங்களையும் அருளுமென்று கருதி அதனை மறவாமற் செய்தான். கம்பர் அடிக்கடி இவனை தருமவுருவினன் என்பர். தன் தமையன் செய்கின்ற மறக்கொடுமைகளை நினைந்து வருந்தினான் அறத்தை மறந்தால் கேடுவரும் என்று அண்ணனுக்கு அறிவுறுத்தினான். அவன் கேட்கவில்லை. அதன்பின் அவனை விட்டகன்றான் தரும மூர்த்தியாகிய இராம மூர்த்தியைச் சார்ந்தான். ஆக்கம் அனைத்தையும் அடைந்து மகிழ்ந்தான்.

மன்னுதவத்துப் புலத்தியன்றன் மரபுவிளங்க மறைவிளங்க
தன்னே ரில்லாத் தந்தைக்குத் தக்கமகவாய்ச் சண்டாளர்
அன்னோர் முன்னோரவருதித்த அந்தவயிறு சுத்தமுற
மின்னே ரிடையாள் தன்வயிற்றில் விளங்கும்புகழ்வீடணன்
பிறந்தான்.

பொய்யுங்களவும் பாதகமும்பொலலா வொழுக்கும் அவைகடிந்து
மெய்யுந்தபவும சருமமுடன்விளங்கும் பொறையும் இவைபூண்டு
செய்யும் செயல்களவையெல்லாம சிட்டர்செய்யும் செயலாகி
அய்யன்புகழ்வீடணன்மறைகள் அறைந்த அறத்தின்வழிநின்றான்.
(இராமாயணம்.)

உயிர்க்கு உறுதிபயக்கத தக்க அறததை ஒரு போதும் ஒருவன் மறக்கலாகாது என்பது கருதது

அறம் செய்யாதவன் கெடுவான் என்பது இதனால் கூறப்பட்டது.



33. தண்டாமல் செய்தார்என் தண்டி யடிகளன்று
கொண்டவினைபக் குமரேசா—கண்டென்றும

ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல். (கூ)



இ—ள்.

குமரேசா! தண்டியடிகள் தாம்கொண்ட அறவினையை யென இடைவிடாமற் செய்தார் எனின், அறவினையை ஒல்லும் வகையால் செல்லும் வாயெல்லாம் ஓவாதே செயல் என்க.

ஓவுதல்=ஒழிதல் ஓவாதே=இடைவிடாமலே.

ஒல்லும் வகையால்=தமக்கு இயன்றவகையில்

செல்லும்வாய் எல்லாம் செயல்=செய்ய முடியுமான இடங்களில் எல்லாம் செய்க.

அறமாகிய நல்வினை ஒருவன் தனது தகுதிக்கேற்பச் செய்யலாம் என்பதும், இடம் பொருள் ஏவலகள் இல்லாதவனும மனம் மொழி மெய்களால அதனைச் செய்யலாம். என்பதும், அங்ஙனம் செய்யுங்கால் அதனையிடையே விடலாகாது என்பதும், இதற்குச் சான்றாகத் தண்டியடிகள் அறவினையை ஒல்லும் வகையால் ஓவாதே செய்தார் என்பது, இதில் உரைப்படும்.

## கதை

தண்டியடிகள் என்பவர் அறுபான்மும்மை நாயன் மார்களில் ஒருவர். இவர் சோழநாட்டிலே திருவாரூரிலே யிருந்தார். பிறவியிலேயே குருடர் பொருள்வளங் குறைந்தவர். ஆயினும அருள்வளம் மிகுந்தவர். அறவினையை நாளும் மறவாமற் செய்தார். திருவாரூர்ச்சிவாலயத்தின் மேற்றிசையில் ஒரு சிறு குளம் இருந்தது. அது சேறும் மணலும் நிறைந்து தூர்ந்திருந்தது. அக்குளத்தைவெட்டி நன்கு பண் படுத்தினர். இந் நல்வினையையிவர் செய்துவருங் காலத்தில் குளத்துள் ஒரு தறியும் கரைமேல் ஒன்றும் கட்டினார். அவ்விரண்டற்கும் தொடர்பாக நீண்ட கயிறொன்று கட்டினார். அக்கயிற்றைத் தடவிக்கொண்டே

சென்று மண்ணைக் கூடையில் எடுத்து வெளியே கொண்டு தட்டி
னார். இல்லும் வகையால் ஓவாதே இதனைச் செய்து வருங்காலத்
தில் சமணர் பலர் இவருக்கு இடையூறுகள் செய்தனர். எவர்



எதைச் செய்தாலும் தடையின்றி இவர் தமது அறவினையை இடைவிடாமல் செய்துவந்தார். அதனால் இவர்குருடு நீங்கினார். பெரும் புகழுற்றார் பேரின்பம் பெற்றார். இதன் விரிவைப் பெரியபுராணத்தில் காண்க

அறம் செய்யும் திறம் இதனால் அறிவிக்கப்பட்டது.



34 வேடமின்றிப் பூசையின்றி மெய்யறத்தைச் சாக்கியனார்
கூடினார் என்னே குமரேசா—ஓடும்
மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. (௪)

இ—ள்

குமரேசா! சாக்கிய நாயனார் வேடமும் பூசையும் இல்லாமலே அறத்தின் பயனை மேவ அடைந்தார் எனின், ஒருவன் தனது மனத்தின் கண் மாசு இலன் ஆதலே அறம்; பிற ஆகுல நீர என்க. மாசு குற்றம்.

ஆகுல நீர—ஆரவார நீர்மையன. அவையாவன பிறர் அறியவேண்டிச் செய்கின்ற ஆடம்பரங்கள்.

மொழியும், மெய்யும், மனத்தின் வழிப்பட்டன. இதன நிலைமைக்குத் தக்கபடியே அவை நிலைத்து நிற்கும். ஆதலால் ஒருவன் மனம்மாசு இலதாயிருந்தால் அவன் மொழியினும் மெய்யினும் மாசிலனாம் என்க

தீயவினைகளைச் சிந்தித்தல் மனத்தின் குற்றம். பொய்முதலியவற்றைப் பேசுதல் மொழியின் குற்றம். இரத்தல் முதலியவற்றைச் செய்தல் மெய்யின் குற்றம். முக்கரணங்களினும் இக்குற்றங்கள் இல்லாமற்செய்தலே அறம் என்பதுகருத்து. மேல் செலலும் இடமெல்லாம் அறம் செய் என்றார். இதில் அதனைச் செய்தற்குச் சிறந்த இடம் இஃது என்று சுட்டினார்.

80 திருக்குறட் குமரேச வெண்பா.

மாசு இல்லாத மனமுடைமையே ஒருவனுக்கு அறமாம் என்பதும், மனக்குற்றமுள்ளவன் எந்த அறங்கள் செய்யினும் அதனால் பயனில்லையென்பதும், இதற்குச் சான்றாகச் சாக்கியனார் மனநலம் ஒன்றானே அற நலங்கள் எல்லாம் அடைந்தார் என்பதும் இதில் உணரப்படும்

கதை.

சாக்கிய நாயனார் என்பவர் தொண்டை மண்டலத்திலே சங்கமங்கை என்னும் ஊரிலே வேளாள குலத்திலே பிறந்தார். கருவி நூல்களையும் அறிவு நூல்களையும் கசடறக்கற்றார் அக்காலத்தில் எங்கும் பரவியிருந்த புத்தமதத்தில் புகுந்தார். அதன் உண்மைகளை ஓர்ந்துணர்ந்தார். அதன் பின் சிவத்தைப் பேணுதலே தவத்திற்கு அழகு என்று நன்கு தெளிந்தார். ஆயினும் தான் முன்னிருந்தபடியே யிருந்தார். வேறு எவ்வித வெளிவேடங்களும் கொள்ளவில்லை. மனத்தில் மட்டும் மாசு இலராயினார். அந்தரங்கத்தில் அரனை வழிபட்டு வந்தார். அறப்பயன் அனைத்தும் சிறப்புடன் பெற்றார். மாசறுமனத்தால் இவர் ஈசனருள் எய்தினார். இது பெரிய புராணத்தில் உள்ளது.

மனத்தின்கண் மாசு இல்லாதவன் செய்யும் அறமே சிறந்த பயனை விளைவிக்கும் என்பது கருத்து.

கற்றதங் கலவியும் கடவுட் பூசையும்
நற்றவம் இயற்றலும் நவையில் தானமும
மற்றுள அறங்களும மனத்தின் பாலழுக்
கற்றவர்க் கேபயன் அளிக்கும என்பரால்.

(காசிகாண்டம்)

அறத்தின் இயல்பு இதனால் அறிவிக்கப்பட்டது.

—:ooOoo:—

35 வெற்றி மிகுதக்கன் வேள்வியறம் செய்துமேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—உற்ற
அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம். (இ)

4ம் அதிகாரம் அறன் வலியுறுத்தல். 81

குமரேசா! தக்கன் வேள்வியாகிய அறத்தைச் செய்தும் ஏன் குற்றம உற்றான் எனின், அழுக்காறும் அவாவும் வெகுளியும் இன்னாச்சொல்லும் ஆகிய நான்கு இழிகுணங்களும் கலவாமற்செய்தலே அறமாம என்க.

இழுக்கா இயன்றது—நீக்கி நடந்தது செய்யா என்னும் வாய்பாட்டைச் செய்தென்னும் வாய்பாடாகத் திரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

அழுக்காறு—பிறருடைய நலங்களைக் கண்டு பொறாமல் மனம் புழுங்குதல் மற்றெவற்றினும் இது மிக்க இழி குணமாதலால் இதனை முன் வைத்தார்.

அழுக்காறு முதலிய மூன்றும மனக்குற்றமாகவும் இன்னாசசொல் மொழிக் குற்றமாகவும் கொள்ளப்படும்.

மனம மொழி மெய் என்னும மூன்று காரணங்களாலும் அறம் செய்யப்படும என்பதும், அவற்றான் அதனைச் செய்யுங்

கால் மேற்குறித்த நான்கும் விரவாமல் இருக்கவேண்டு மென்பதும், அவற்றுள் ஒன்று கலந்தாலும் அறம் நன்றாகாதென்பதும் இதற்குச் சான்றாகத் தக்கன் வேள்வியறம் செய்தும் பொறாமையும் வெகுளியும் பொருந்தியதனால் அது பொன்றிய தென்பதும், இதில் காணப்படும்.

### கதை

தக்கன் என்பவன் பிரமாவின் மானசபுத்திரருள் ஒருவன். சிறுவிதி யென்று ஒரு மறு பெயருடையவன். உமாதேவியார் தனக்குப் புத்திரியாக வந்து தோன்றும்படி யருந்தவஞ் செய்தான். அம்மையும் அவ்வாறே வந்து அவதரித்தார். உலகமாதாவைத் தனது மகளாகப் பெற்றமையை நினைந்து இவன் பெருமகிழ்வடைந்தான். தாக்ஷாயணி யென்று அம்மைக்குத் தன் சம்பர்



தமாக வேறு தனிப்பெயரிட்டான் போற்றி வளர்த்தான். பருவமுற்ற பின் பரமனுக்குத் திருமணஞ் செய்து உதவினான். அதன் பின் சிவபெருமானைத் தனது மருமகனாகக் கருதினான். இக்கருத்தால் பெருமான் பெருமையை யிவன் அறவே மறந்தான். செருக்குடன் ஒருநாள் கைலைக்குச் சென்றான். அங்குள்ள சிவகணங்கள் இவனை அவமதித்தன. அதனால் இவன் வெகுண்டான். விரைந்து மீண்டான் பொறாமை கொண்டான் பரமனை யிகழும் நோக்கத்தோடு வெகுளியால் இவன் ஒரு பெரு வேள்வி செய்தான். இந்த உண்மையை யிறைவன் அறிந்து வீரபத்திரரை யேவினர். அவர் இவன் வேள்வியைச் சிதைத்தார். வெகுளியும் பொறாமையும் விரவிச் செய்ததால் இவனது அறம் சிதைந்தது. இது கந்தபுராணத்தில் உள்ளது.

அழுக்காறு முதலிய இழிகுணங்கள் சிறிதும் விரவாமல் செய்தலே அறமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

36 அன்றிளையம் என்று தருமமென் விரைந்து செய்தான்
குன்றாத் துருவன குமரேசா — இன்றிருந்து
அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை (௬)

இ—ள்

குமரேசா! துருவன் தன்னை இளையவன் என்று எண்ணாமல் அன்றே அறத்தை விரைந்து செய்தான் எனின், அன்று அறிவாம் என்னாது அறஞ் செய்க அஃது ஒருவன் பொன்றுங் காலத்தில் அவனுக்குப் பொன்றாத் துணையாய் நின்று உதவும் என்க. பொன்றுதல்—அழிதல்.

பொன்றாத் துணை—அழியாத துணை நிலையான உண்மைத்துணை யென்றபடி. அறமானது தன்னைச் செய்த உடம்பு அழியினும் தான் அழியாமல் நின்று அவ்வுயிர் புக்குழிப் புகு



ந்து தன் பயனை அதற்கு இனிது உதவும் ஆதலால் அதனைப் பொன்றாத்துணை யென்றார்.

இத்தகைய துணையை ஒருவன் விரைந்து செய்து கொள்ள வேண்டும் என்பது கருத்து. நேற்றிருந்தார் இன்று வெந்து நீறானார் என்றபடி நிலையாமையே மிகுந்துள்ள இவ்வுலகத்தில் ஒருவன் நிலைத்துள்ள பொழுதே நிலையான துணையைத் தேடிக் கொள்வானாகில் அவன் அழிவில்ல இன்பத்தை யடைந்தவனாவான் என்பதாம். அன்று என்பது மாற்றாந்தாய் துருவனை யிகழ்ந்த அக்காலத்தை.

அறமே ஒருவனுக்கு அழிவில்லாத துணை யென்பதும், அதனை இளமைப் பருவத்திலேயே விரைந்து செய்யவேண்டும் என்பதும், இதற்குச் சான்றாகத் துருவன் இளம்பருவத்தே அறம்புரிந்தான் என்பதும், அதனால் அவன் பொன்றா இன்பம் பெற்றான் என்பதும் இதில் உணரப்படும்.

கதை.

உத்தானபாதன் என்னும் அரசன் ஒருவன் பண்டு இப்பரத கண்டத்தின் வடபாலிருந்து அரசுபுரிந்து வந்தான். இவனுக்குச் சுநீதி சுருசி என்று இரண்டு மனைவிகள் உண்டு. இவ்விருவருள் சுநீதி பால் ஒரு புதல்வன் தோன்றினன். அவனுக்குத் துருவன் என்று பெயரிட்டார் அருமையாக வளர்த்தார் ஒருநாள் இப்பாலன் தந்தையின் மடிமேல் தங்கச் சார்ந்தான். இவன் சிறியதாயாராகிய சுருசி சகியாதவளாய் இவனை வைதாள். இவனும் நாணிவருந்தித் தாயிடம் சென்றான். தாயும் தெரிந்து தனதுளந்தளர்ந்தாள். மகன் தாயைத் தேற்றினன். அறமே துணையென்று அருங்கானடைந்தான். நாரதர் அருளால் நற்றவஞ் செய்தான். அதனால் இவன் இளம் பருவத்திலேயே யிறைவன் அருளை யெய்தி யறங்கள் பல புரிந்து பெரும் புகழ்பெற்றான். அழிவில் வாழ்வை யுற்றான். இதன் விரிவு பாகவதம் சசிகாண்டம் முதலிய பல நூல்களிலும் காணப்படும்.



அறமே ஒருவனுக்கு அழியாத் துணையென்பது இதனால் அறிவிக்கப் பட்டது.



37. உற்ற மணிச்சிவிகை யூர்ந்தாரேன் மூர்த்தியார்
கொற்றவனேன் தாழ்ந்தான் குமரேசா— பற்றும்
அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை (எ)

இ—ள்

குமரேசா! மூர்த்திநாயனார் சிவிகையூர்ந்தார்; ஓர் அரசன் ஏன் தாழ்ந்தான் எனின், அறத்தின் பயன் இது என்று யாம உணர்த்த வேண்டா, சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை அது காணப்படும், என்க.

ஆறு—பயன். சிவிகை—பல்லக்கு. பொறுத்தல் தாங்குதல். ஊர்தல்—செலுத்தல்.

அறத்தின் பயனை ஆகம சுருதி கொண்டு அறியவேண்டா, காட்சியானே காணலாம் என்பதாம். மேல அறம் பொன்றுந் துணை யென்றார், இதில் அது துணையாந் தன்மையைத் தெளிவித்தார்.

பல்லக்கின் மேல் அமர்ந் திருப்பவன் அறஞ்செய்தவன என்றும், அதனைச் சுமந்து செல்பவன் அறம செய்யாதவன் என்றும், நீவிரே கண்கூடாகக அறிந்து கொள்ளலாம், யாம் வேறு கூறவேண்டா என்று தேவர் கூறியாடியீது

அறத்தால் சிறந்த இன்பத்தைப் பெறலாம் என்பதை மூர்த்தி நாயனார் பால் காண்க

## கதை

அறுபத்து மூன்று நாயன் மார்களில் ஒருவராகிய மூர்த்தி நாயனார் என்பவர் மதுரையில் இருந்தார். சிவபெருமானுக்குத் தினந்தோறும் சந்தனக்காப்பு இட்டு வந்தார். இந்த அறத்தின் பயனால் இவர் அரசரானார். யானை இரதம் சிவிகை முதலியவ



ற்றில் இருந்து செலுத்தினார். இன்பம் பெற்றார். இவர் செய்து வந்த அறத்துக்கு இடையூறு செய்த கருநாடதேசத்து அரசன தனது அரசபதவியை யிழந்திறந்தான். அவ்வூர்ப் பரிசனங்கள் மூர்த்தியாருக்குச சிவிகை தாங்கினர். சிலர் ஏவல் செய்தார். மூர்த்தியார் அறத்தாறுல் சிவிகையூர்ந்தார். மறத் தால் மற்றையோர் அதனைச சுமந்து சென்றார். இதன் விரிவு பெரிய புராணத்தில காணப்படும். இனி பண்டுசிவிகை பொறுத்த ஜடபரதருக்கும் அதனை யூர்ந்த சவ்வீரன் என்னும் அரசனுக்கும இடையே நிகழ்ந்த மொழிகளால் அறத்தாறு உணரப்படும்; யாம உணர்த்த வேண்டா என்று தேவர் அவ்விரு வரைச் சுட்டியது போலவும இதுதோன்று மென்பாருமுளர்.

அறத்தின் பயனைக் கண்கூடாகக் காணலாம் என்பது இதனால் கூறப்பட்டது.



38. நன்றே புரிந்துவந்த நந்தனார் வாழ்நாள்போய்க்
குன்றிநின்ற தென்னே குமரேசா—என்றேனும்
வீழ்நாள் படாமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். (அ)

இ—ள்

குமரேசா! நாள்தோறும் அறம் செய்து வந்த நந்தனாரது வாழ்நாள் ஏன் குன்றி நின்றது எனின், வீழ்நாள் உளவாகாமல் ஒருவன் நன்மையைச் செய்வானாயின் அச்செயல் அவன் உடம்போடு கூடுகின்ற நாள் வரும் வழியை வாராமல் அடைக்கும் கல்லாம் என்க.

வீழ்தல்—கழிதல். நன்று—அறம். அஃது—அச்செயல். வீழ் நாள் படாமை—கழியும் நாள் இல்லாமல். அஃதாவது அறம் செய்யாமல் கழிந்த நாள் ஒன்று இருந்தது என்று உண்டாகாதபடி ஒருவன் அறத்தைச் செய்வானாயின் அச்செயல் அவன் பிறவியைத் தீர்த்துவிடும் என்பதாம்.

நன்றை இடைவிடாமல் என்றும் செய்யவேண்டும் என்பது குறிப்பு.



வாழ் நாள்—(உயிர் உடலோடு கூடி) வாழும் நாள், பிறவி என்றபடி. இடையறாது தொடர்பாக வந்து கொண்டிருக்கிற பிறவியின் வழியை இனிவாராமல் அடைப்பதற் கோர் தகுதியான கதவு இது வெனத்தேவர் இதில் அருளியுள்ளமை காண்க. கல் என்றது அதன் திண்மை கருதி.

இயன்றவளவில் ஒருவன் நாள் தோறும் அறம் செய்யவேண்டும் என்பதும் அங்ஙனம் செய்வானாயின் அவன் பிறவி

தீர்வான் என்பதும் இதற்குச் சான்றாக நாளும் நன்று ஆற்றிய நந்தனார் பிறவி தீர்ந்தார் என்பதும் இதில் உணரப்படும்.

## கதை

நந்தனார் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழ மண்டலத்திலே, மேற்கா நாட்டிலுள்ள ஆதனூர் என்னும் ஊரிலே பறையர் குலத்திலே பிறந்தார். வெட்டிமைத் தொழில் புரிந்தார். தமது மரபுக்கேற்ற வகையால் இயன்றவரை நாளும் நல் வினையை நயந்து செய்துவந்தார். அதனால் இவர் மனந்தூயராயினார். சிவாலயங்கள் தோறும் சென்று தரிசனம் செய்ய விரும்பினார். திருப்புன் கூர் என்னும் திவ்விய தலத்துக்குச் சென்றார். அங்கே ஒரு பெரிய குளத்தை வெட்டினார். ஆலயங்களுக்குரிய பேரிகை முழவு யாழ் முதலியவற்றிற்குத் தோல் வார் நரம்பு முதலியன உதவினார். சிதம்பர தரிசனஞ் செய்யச் சிந்தித்தார் தமது குலம் இழிந்தது என்றும் தாம் எவ்வாறு அங்கே புக முடியும் என்றும் எண்ணி எண்ணி வருந்தினார். ஆயினும் சிதம்பரத்துக்குச் செல்ல வேண்டும் என்னும் ஆசையிவர்க்கு அதிகரித்தது. வேறு நாட்டமின்றிச் சிதம்பரத்தையே நாடினார். இப்பொழுதே செல்வேன் என்று துணிந்து எழுவார். நான் புலையனாயிற்றே! எவ்வாறு அங்குப் புகுவேன் என்று எண்ணி யமர்வார். நாளைப் போவேன், நாளைப் போவேன், என்று நாள்பல கழித்தார். அதனால் திருநாளைப் போவார் என்னும் ஒரு



திருப்பெயரை யிவர் பெற்றார். காதல் அதிகரித்ததால் நல்லநாள் ஒன்றில் தில்லையை நோக்கிச்சென்றார். சென்றவர் நகரினுட் செல்லாமல் நின்றார். தில்லையின் எல்லையை மெல்லச்சுற்றினார் ஐயனை நினைந்து மெய்மயிர் சிலிர்த்தார் புறத்தே நின்று தொழு

தார் அகத்தே நின்று அழுதார். எம்பெருமானும் இவரை ஆட்கொள்ள அருள்கூர்ந்தார் தில்லைவாழ் அந்தணர்கட்குணர்த்தினர் உணர்த்தினபடியே அவர்களைவரும் இவரைப்புலைமகன் என்று இகழாமல் நல்மகன் என்று புகழ்ந்தார். கொணர்ந்தார் மங்கலநெருப்பைப் பொங்க முற வளர்த்தார். விருப்புடன் நந்தனர் அந்நெருப்பில் குதித்தார். விண்ணவர் பேறுறும் புண்ணியவுருவைப்பெற்றார். அந்தணர் உடன்வர அடைந்தனர் ஆலயம். கண்டவர் அனைவரும் காணாமல் நின்றனர். கனகசபையிற் கலந்தனர் நந்தனர். நாளும் அறம் புரிந்தமையால் நந்தனர் வாழ்நாள் வழிநேர்ந்தது. இதன் விரிவு பெரிய புராணத்தில் காணப்படும்.

அறம் பிறவியை நீக்கி பேரின்பம் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

—:ooOoo:—

39. கூடிமனை யின்பமுற்ற கோவலனேன் மாதவியால்
கோடிதுன்பம் கொண்டான் குமரேசா—தேடும்
அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல. (கூ)

இ—ள்.

குமரேசா! மனைவியோடு கூடியின்பமுற்ற கோவலன்மாதவியால் ஏன் பெருந்துன்பம் அடைந்தான் எனின், அறத்தான் வருவதே இன்பம். மற்ற எல்லாம் புறத்த புகழும் இல என்க.

மற்று என்னும் இடைச்சொல் அறத்துக்கு மறுதலையான மறத்தைக்குறித்து நின்றது.

மற்று எல்லாம் = பாவத்தால் வருவனவெல்லாம்.



புறத்த என்றது இன்பத்துக்குப்புறமாகிய துன்பத்தை இறந்தது தழுவிய எச்சவும்மையானது இன்பமும் இல்லையென்பதை விளக்கி நின்றது.

அறநெறியால் வரும்பொருளே ஒருவனுக்கு இன்பமும் புகழும் தரும்பொருளாம் என்பதும் பிறநெறியில் வருவன துன்பமும் பழியுமே தருவனவாம் என்பதும். இதற்குச் சான்றாகக் கோவலன் அறநெறியாற் பெற்றகண்ணகியால் இன்பமும் புகழும் எய்தினன் என்பதும், மறநெறியாற்கொண்ட மாதவியால் துன்பமும் பழியும் அடைந்தான் என்பதும், இதில் உணரப்படும்.

## கதை

சோழ நாட்டிலே காவிரிப்பூம்பட்டினத்திலே வணிகர் குல திலகனாகிய மாசாத்துவான் என்பவன் ஒருவன் இருந்தான். இவன் இருநிதிக்கிழவன் எனப்பெருநிதியுடையவன். பெருமனைக் கிழத்தியென்னும் மனைவியோடு கூடி இவன் இல்வாழ்க்கையை இனிது நடத்தினான். இங்ஙனம் நடந்துவரும் நாளில் இவனுக்கொரு புதல்வன் தோன்றினன். அப்புதல்வனுக்குக் கோவலன் என்று பெயரிட்டார். மிக்க சிறப்போடு போற்றி வளர்த்தார். இவன் பேரழகு வாய்ந்தவன். பருவம் அடைந்தபின் அந்நகரில், மாநாய்கன் மகளாகிய கண்ணகியென்னும் புண்ணியவதியை இவனுக்குத் திருமணம் முடித்தார். இருவரும் ஒரு மனப்பட்டு இல் வாழ்ந்திருந்தார். அன்புடன் இன்பம் ஆரத்துய்த்தார். கோவலன் அறநெறியில் பெற்ற தனது மனைவியை நோக்கி,

மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா இசையே யென்கோ



தாழிருங் கூந்தல் தையால் நின்னை யென்று

உலவாக்கட்டுரை பலபாராட்டி.

காளும் மகிழ்ந்து நலமுற வாழ்ந்தான். இங்ஙனம் வாழ்ந்து வரும் நாளில் மாதவியென்னும் பெயரினையுடைய ஒரு பொது மாதைக்கண்டான் அவள்மேல் காதல் கொண்டான் அதனால் கற்புத்தெய்வமாகிய கனது காதலியை மறந்தான். மாதவியுடனே மருவிமகிழ்ந்தான அவளால் தனது பொருள் முழுதையும் ஒருங்கே இழந்தான். வறியனாயினான். அதன்பின் தன் மனைவிபால வந்தான். கண்ணகி தன் கணவனைக் கண்டாள். அவன் நிலைமையை நினைத்தாள். நெஞ்சுருகினாள் கலங்கினாள். தனது காலில் அணிந்திருந்த அழகிய பொற்சிலம்பைக் கழற்றிக் கோவலன் கையிற்கொடுத்தாள். இதனை விலைப்படுத்துங்கள். அப்பொருள்கொண்டு நாமிருவரும் இனிது வாழலாம் என்று கூறிக்கணவனைத் தேற்றினாள். அவனுந் தேறினான். அச்சிலம்பை விற்றற்பொருட்டு மனைவியோடு மதுரைக்குச்சென்றான். சென்ற இடத்தில் தீவினை வயத்தால கோவலன் கொலையுண்டிறந்தான். இத் துன்பமும் பழியும் மறநெறியால் வந்த மாதவிபால் இவனுக்கு வந்தன. இதன் விரிவைச் சிலப்பதிகாரத்தில் காண்க அறநெறியால் வருவனவே ஒருவனுக்கு இன்பமும் புகழும் தருவனவாம் என்பது இதனால் கூறப்பட்டது.



40. நல்வினையே செய்தான் களன்பாம்பின் செய்கைகண்டும்
கொல்வினையேன் விட்டான் குமரேசா—சொல்லிற்
செயற்பால தோரும் அறனே யொருவற்
குயற் பால தோரும் பழி (0)

இ—ள்

குமரேசா! களன் நல்வினையையே செய்தான். பாம்பின் செய்கையைக் கண்டும் ஏன் கொல்வினையைத் தவிர்த்தான் எனின். ஒருவன் செய்பத்தக்கது அறமே; ஒழிக்கத் தக்கது பழியே யாம் என்க.

ஓரும் என்னும இடைச்சொற்கள் இரண்டும் அசைநிலை யாயின.

உயர்பாலது ஒழிக்கப்படும் உரிமை பயுடையது.

விதியும் விலக்கும் இதில் விதந்து கூறினர். ஒருவன் புகழ் பயக்கும வினைகளைப் பேணிச் செய்து பழி விளைக்கும் செயலகளை நாணி ஒழிககவேண்டும் என்பதாம

நளன நிடக நாட்டிலுள்ள மாவிந்த புரியில விளங்கி யிருந தான சந்திரகுலதிலகன நிகரியுருட்டி நிலமுழுதும ஆண்ட செங்கோல வேநதன. விதர்பப தேசதது வீமராசன் மகளாகிய தமயந்தியை மணம் புரிந்தான அதில் உண்டான செற்றததால் கலி இவனைத தொடர்ந்தான அதனால இவன சூதாடி நாடிழந தான். மனைவியோடு வனம புகுநதான. பின பிரிநது அகன் றான். அக்காலத்தில அங்கே கார்க்கோடகன் என்னும் பாமபு ஒன்று காட்டுத தீயில அகப்படடுப் பதைகதுத் துடிததது. நளன் அதனைக் கண்டான் இரக்க முற்று நெருப்பினுட் புகுந் தான் அதனை வெளியேற்றிக் காப்பாற்றினன். பின அஃ தோர் ஏதுவால இவனைத் தீண்டியது. தீண்டி வருததினும அதற்கு யாதொரு தீங்கும் செய்யாமல் அரசன நின்றான. அதுபின் இவனுக்கு நன்மையாக முடிந்தது. இதன விரிவைச சரிதத்தில காண்க

ஒருவன் செய்யத தகுவதும், ஒழிககத தகுவதும, இத னால் கூறப்பட்டன.

இவ்வதிகாரததின தொகைப் பொருள்.

அறம் உயிர்கட்குச் செல்வ முதலிய எல்லா நலங்களையுந் தந்து சிறப்பையும் கொடுக்கும். அறமே ஒருவனுக்குச் சிறந்த ஆக்கம். அதனை மறந்தவர் கெடுவர். இயன்ற மட்டும் அறத்



தை என்றும் எங்கும் செய்தல் வேண்டும். மனத்தில் குற்றம் இல்லாதவனே உத்தம அறவோன். பொறாமை கோபம் ஆசை முதலிய இழி குணங்கள் இல்லாமல் ஒருவன் அறத்தைச் செய்தல் வேண்டும். அதனை இளம பருவத்தே செய்யவேண்டும். அதன் பயனை யாவரும் கண்கூடாகக் காணலாம். ஒருவன் விடாமல் அறஞ்செய்வானாகில் அவன் பிறவி தானே நீங்கிவிடும். அறநெறியால் வருவனவே புகழும் இன்பமும் பொருந்தப் பயக்கும். பிறநெறியால் வருவன பழியும் துன்பமும் இழிவுடன் கொடுக்கும். ஆகலால் ஒருவன் கொள்ளத்தக்கது, அறமே தள்ளத்தக்கது பழியே என்பனவாம்.

(பாயிர முற்றிற்று.)

## இல்லறவியல்.

# 5-வது அதிகாரம் இல்வாழ்க்கை.

அஃதாவது மனைவியோடு கூடி ஒருவன் இல்லின் கண் இருந்து வாழும் இயல்பு.



41. ஏனைமூ றெல்லார்க்கும் இன்றுணையா நன்றுசெய்தான்
கோனும் வல்லாளன் குமரேசா — ஞானமுடன்
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

குமரேசா! வல்லாளன் என்னும் அரசன் எல்லோருக்கும் ...ிய துணையாய் நின்று என் உதவி செய்தான் எனின், இல்லற த்தில் இருந்து வாழ்பவன் இயல்பினை யுடைய மூவர்க்கும நல்ல என்க. 12



நல் ஆற்றின் நின்ற துணை=நலல ஒழுக்க நெறியின் கண் நிறகின்ற நிலையான துணை. ஆறு நெறி வழி என்பன ஒரு பொ ருளன. பிரமச்சாரி, கிருகத்தன், வானப்பிரததன, சந்நியாசி என்னும நால் வகை நிலை யினரும் ஒருவரிசையில் வைத்து எண்ணப்படுவார். அவருள் கிருகத்தனாகிய இல் வாழ்வானை வேறு பிரித்தமையால் ஏனையோரை மூவர் என்றார். இது தொகைக் குறிப்பு.

இல் வாழ்பவன் சந்நியாசி முதலிய மூவர்க்கும் உணவும், உடையும், மருந்தும், இடமும், தந்து ஆதரிக்கவேண்டும் என் பதாம். அவ்வுணவு முதலியவற்றால் அவர்கள் பசி குளிர் நோய் முதலியன நீங்கி தங்கட்குரிய தவவொழுக்கங்களை நன்குசெய்து உய்வார்கள்.

ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் செல்லுகின்ற வழி நடையினர்க்கு இடையிலே யுண்டாகும தடைகளை நீக்கிக் குறித்த இடத்திலே யவரைக் கொண்டு போய்ச் சேர்க்கும் நல்ல வழித் துணையாளர் போல் பந்தமாகிய இந்த உலகத்திலிரு ந்து முத்தி உலகை நோக்கிச் செல்லும் அறநெறியாளர்க்குப் பசி முதலியவற்றால் உளவாகின்ற வருத்தங்களை நீக்கி அவரை அந்நெறியில் வழுவாமல செலலும்படி செய்து நிற்றலால் இல் வாழ்வானை அவர்க்கு நலஆறறில் நின்ற துணை என்றார் இனி ஆற்றில் நின்ற நல் துணை எனவும் கொள்ளப்படும். இறைவனே எல்லார்க்கும் துணை எனினும் இம் மூவர்க்கும் வெளிப்படையாக

இல் வாழுவான் துணையாம் என்றபடி.

துறந்தார் முதலிய சிறந்தார் எவர்க்கும் இல் வாழ்வானே நல்ல துணை. இவ்வுண்மை வல்லாளன் பால காணப்படும்.

கதை

வல்லாளன் என்பவன் திருவண்ணாமலையில் இருந்த ஒரு சிறந்த அரசன், விழுமிய குணங்கள் பலவும் நிறைந்தவன். நெறிவழுவாதவன், நற்குணம் நிறைந்த இரண்டு தேவியா



ரோடு கூடியிவன் இல் வாழ்ந்திருந்தான். எல்லாரிடமும் இரக்கமும் அன்பும் காட்டினான் துறவோர் முதலிய அறவோர் எவர்க்கும் அருந்துணையாய் நின்றான். அவர்கட்கு உணவும் உடையும் தினமும் உதவினான். இவன் செய்து வருகின்ற இல்லறத்தின் சிறப்பையும் இவன் துவள்ளற் குணத்தையும் இறைவன் எண்ணினார். மகிழ்ந்தார் அன்புடையிவன்பால அருளுடன் வந்தார் சங்கம வேடந்தரித்தார் ஒரு சந்நியாசிபோல் நின்றார். கண்டான் அரசன். காலில விழுந்தான். தனது திருமனைக்குள் அழைத்துக் கொண்டு போய் உபசரித்தான். இவர் விரும்பிய எதையும் வெறுப்பின்றி உதவினான். எல்லாருக்கும் நல்ல துணையாய் நின்று இவன இல வாழ்ந்தான். அதனால் தனி முதல் வணங்கிய பரமனே இவனுக்கு இனிய புதல்வனாய் வந்து இன்பம் செய்தார். இஃது அருணாசலப் புராணத்தில உள்ளது.

இல்வாழ்வான் இயல்பு இதனால் கூறப்பட்டது.

42. உற்ற துணை யாய்முன் உதவினனேன் பாண்டவர்க்குக்
கொற்ற விராடன் குமரேசா—மூற்றும்
துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இலவாழ்வான் என்பான் துணை.

குமரேசா! விராடன் பாண்டவர்க்கு உற்ற துணையாய் என் உதவினன் எனின், துறந்தவர்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தவர்க்கும் இல வாழ்வான் துணை யாவான் என்க.

துறந்தார்—ஆதரித்து வந்தவரால் கைவிடப்பட்டவர்.

துவ்வாதவர்—உணவு முதலியன துய்க்கப் பெறுதவர். வறியர் என்றபடி.

இறந்தார்—உயிர் நீங்கினவர். செத்தவர் என்றபடி.



களைவற்றவர், பொருளற்றவர், உயிரற்றவர். ஆகிய இம் மூவருக்கும் இல் வாழ்வான் துணையாய் நின்று உதவவேண்டும் என்பதாம. துறந்தாரை வினவியடுத்தும், துவ்வாதவரை உணவுமுதலியன கொடுததும்; இறந்தாரை உரிய நீர் விடுத்தும், ஆதரிக்க வேண்டுமென்பது கருத்து.

மேல் தன்னேடு இயைபுடைய மூவரைக் குறித்தார். இதில் அஃதில்லாத மற்றொரு மூவரையும இணைத்து இவ் அறுவருக்கும் இல் வாழ்வான் துணையென வுணர்த்தினர். மேலவருவதில் இவரை உணர்த்துவர்.

பெரியோர் வறியோர் முதலிய எவர்க்கும இல் வாழ்வான் யாவான் என்பதும் இதற்குச் சான்றாக விராடன் அனைவருக்கும் உபகரிததான் என்பதும் இதில உணர்ததப்பட்டன.

## கதை

விராடன் என்பவன் ஓர் அரசன. மசசதேசத்திலுள்ளவன். விராடபுரத்திலிருந்து இவன் அரசுபுரிந்தான. இக்காலத்தில் மேட்டுப்பாளையததை அடுததுள்ள தாராபுரமே அக்காலத்தில் இப்புரம் இருந்த இடம் என்பர் இந்த அரசன் எல்லார்க்கும் நல்ல துணைவனய்ச் செல்வாக்கோடு இல் வாழ்ந்திருந்தான். பாண்டவர் பன்னிருவருடம் வனவாசம் செய்து முடித்

தபின்னர் ஒருவருடம் இவன் வசம் வந்து உருவங்கரந்து ஒது
ங்கி இருந்தார். அவரை அன்புடன் இவன் ஆதரித்து வந்
தான். உத்தரன் என்று ஒருமகனும், உத்தரை யென்று ஒரும
களும் இவனுக்கு உண்டு. இவன் மனைவி பெயர் சுதேட்டிணை
வருடமுடிவில் பாண்டவரென உண்மை தெரிந்த பின் இவன்
பெருமகிழ்வடைந்தான். அதன் பின்னும் பாண்டவர்க்குப்
படைத்துணையாய் நின்று வேண்டுவனபுரிந்தான். தன் மகளா
கிய உத்தரையை அருச்சுனன் மகனாகிய அபிமன்னனுக்கு மண
முடித்துத் தந்தான்.

(இதன் விரிவு பாரதத்தில் காணப்படும்.)



துறந்தார், துவ்வாதவர் என மறைந்து வந்த பாண்டவ
ர்க்கு இவன் சிறந்த துணையாய் நின்று உயர்ந்த உதவிகள் செய்
தான்.

இல் வாழ்பவனே வறியார்க்கு உரிய துணை என்பது இத
னால் கூறப்பட்டது

43. தேடுபுகழ்க் காளத்தி சென்றடைந்தார் தமமையெல்லாம
கோடாதேன் காத்தார் குமரேசா—பீடுடைய
தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை. (ரு)

இ—ள்

குமரேசா! காளத்தியப்ப முதலியார் விருந்து ஒக்கல்
முதலிய எல்லாரையும் தன் ஆதரித்து வந்தார் எனின், தென்பு
லத்தாரையும் தேவரையும் விருந்தினரையும் சுற்றத்தாரையும்,
தன்னையும் பேணிவருவதே இல்வாழ்வானுக்குச் சிறப்பாம் என்க.

ஒக்கல் = சுற்றம். புலம் = இடம்

ஐம்புலத்து ஆறு ஓம்பல்—ஐந்து இடத்தும் செய்யத்தக்க
அறநெறியை வழுவாமல் செய்தல். ஐம்புலத்தார் என்று பாடம்

கொண்டால ஐந்து இடத்தாரையும் என்று கொள்க.

பிரமச்சாரி வானப்பிரத்தன் சந்நியாசி துறந்தார் துவ்வாதார் இறந்தார் தென்புலத்தார் தேவர் விருந்தினர் சுற்றத்தார் என்னும் பதின்மரையும் ஆதரிக்க வேண்டுவது இல்வாழ்வானுக்குக் கடமை. இவ்வியல்பு காளத்தியப்ப முதலியார் பால் காணப்படும்.

## கதை.

காளத்தி முதலியார் தொண்டை மண்டலத்திலே கின்றை யென்னும் ஊரிலே பிறந்தார். இல்லறத்திலிருந்து எல்லாரையும்



ஆதரித்து வந்தார். தயையும் வள்ளற் குணமும் வாய்ந்தவர்; வறுமைப் பிணிக்கோர் மருந்து போல்பவர். நாளும் பல இடங்களில் இருந்தும் இவரை நாடிவருவார் பலர். அவரனைவருக்கும் வேண்டுவன தந்து அன்போடு அனுப்புவார். தம்பால் வந்தவரது முகம் மலர இவரது அகம் மகிழும். பிறர்க்கு இதம் புரிதலையே யிவர் பேரின்பமாகக் கொண்டார். ஒக்கலையும் விருந்தையும் இவர் பக்கம் வைத்து உண்டார். தம்மையும் காத்துத் தமரையும் போற்றிய இவரது இல்லறமாண்பை யெல்லோரும் போற்றினர். தொண்டை மண்டல சதகமுதலிய பல நூல்களினும் இவர் சரிதம் காணப்படும்.

இல்லறத்தான், தென் புலத்தார் முதலிய ஐவரையும் பேண வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.



44. வள்ளற் சடையன் வழியென்றுங் குன்றுச்சீர்
கொள்ளநின்ற தென்னே குமரேசா—தள்ளும்
பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல். (௪)

குமரேசா! சடையவள்ளலது வழி யென்றுங் குன்றுமல

நின்றது என்னே எனின், பழியஞ்சிப் பொருள் ஈட்டி மேற் குறித்த பதின் மருக்கும் பகுத்து ஈந்து ஒருவன் உண்பானாயின அவன் வழி என்றும நின்று நிலவும என்க.

எஞ்சல்=தேய்ந்து அழிதல் வழி—மரபு. தொடர்பாக வருதலின் இஃது இப்பெயர் பெறறது.

பழிக்கு அஞ்சுதலும் பகுத்து உண்டலும் ஒருவனுக்கு அமையுமாயின் அவன சநததி என்றுங் குன்றாமல நிலைத்து நில வும் என்பதாம. ஒருவன் வழிவழியாமைக்கு வழியிதிலுணர்த் தினர்.

5ம அதிகாரம் இல்வாழ்க்கை. 97

ஒருவன் நல்வழியிற் பொருளீட்டி யதனைப் பிறர்க்குப் பகுத் துதவி வருவானாயின அவன வழியும் வாழ்க்கையும நெடிது வாழும். இவ்வுண்மை சடையப்பர் வழியில காணப்படும்.

கதை

சடையப்ப பிள்ளை யெனபவர் சோழநாட்டிலுள்ள திருவெ ண்ணெய் நல்லூரிலே வேளாளர் குலததிலே பிறந்தார். இவரது காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரததுநூறு வருடங்கட்கு முன்னராம. பெருந்தனமையும வள்ளற் குணமும் ஒருங்கே நிறைந்தவர் பழுதிலலாத உழவு தொழிலால பொருளீட்டி அதனைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து வந்தார். கவிச்சக்கிர வர்த்தியாகிய கம்பரை அன்புடன் ஆதரித்தார். "அடையா நெ டுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும உடையான் சடையப்பன்" என்ற இதனானே இவரது விருந்தோம்புந்திறம் காணப்படுகின் றது. இவர் இல் வாழ்க்கை நலம் நல்லோர் பல்லோராலும் நன்கு புகழப் பட்டுளளது.

அரியணை அனு ன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்

பரதன் வெண் குடைகவிக்க மற்றிருவரும் கவரி வீச
விரைசெரி குழலியோங்க "வெண்ணெயூர்ச் சடையன்றங்
கள்
மரபுளோர்" கொடுக்கவாங்கி வசிட்டனேபுனைந்தான்மௌலி.
(முடிசூட்டுப் படலம்)

இதனால் பல்லாயிர வருடங்கட்கு முன்னரே அவதரித்த இராமர் காலந் தொட்டே வெண்ணெயூர்ச் சடையன் வழியார் சிறந்து விளங்கி வந்துள்ளார் என்பது புலனாம்.
ஒருவன் இல்வாழ்க்கையை நடத்தும் வகை இதனால் கூறப்பட





45. மண்டுபுகழ் மாறனார் மாறாத அன்பறனே
கொண்டிருந்தார் இல்லற குமரேசா — தண்டாத
அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. (௫)

குமரேசா! இளையான் குடிமாற நாயனார் அன்பும் அறனும் உடையராய் நன்கு இல்வாழ்ந்தார் எனின், அன்பும் அறனும் உடைய இல்வாழ்க்கையே பண்பும் பயனும் பெறும் என்க.

அன்போடு அறம் புரியும் இல்வாழ்பவனே பண்போடு பயன் பெறுவான் என்பது கருத்து.

இல்வாழ்வான் தனது மனைவி மக்களிடத்தில் மிக்க அன்பு செய்தும் பிறரிடத்துப் பகுத்துண்டல் முதலிய அறஞ் செய்தும்

வாழ்வினையும் என்பதும் இதற்குச் சான்றாக மாறனார் அன்பும் அறமும் உடையராய் இல்வாழ்ந்தார் என்பதும் இதில் உணரப் படும்.

### கதை

மாறனார் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். பாண்டி நாட்டிலே இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே இவர் பிறந்தார். அதனால் இவர் இளையான்குடி மாறநாயனார் எனப் பெற்றார். உத்தம குணங்கள் நிறைந்த தம் பத்தினியோடு கூடி இல்வாழ்ந்திருந்தார். நிறைந்த செல்வமும் விரிந்த நிலங்களும் உடையவர். அடியார் முதலிய அனைவர்க்கும் நாளும் நல்லுணவு அளித்தார். மிகவும் அன்புடையவர். இல்லறத்தை யின்புற நடத்தினார் இங்ஙனம் வருகின்ற நாளில் இவரது செல்வம் குறைந்தது வறுமைநிறைந்தது. ஆயினும் அன்பும் அறனும் உடையராய் இவர் இல்லறத்தை இன்புறச் செய்தார்.



இறைவன் இவரைச் சோதிக்கும்பொருட்டு விடாமழை பெய்யும் நடுநிசியொன்றில் சந்நியாசிபோல் வேடந்தரித்து இவரது இல்லை நோக்கி மெல்லவந்தார். வந்த முதியவரை யிவர் வணங்கினர். வாழ்த்தினர். உள்ளே எழுந்தருளச் செய்தார். இதனை மனைவியிடம் கூறினர். வருந்தினர் என்செய்வார் பாவம்! இரண்டுநாட்பட்டினி. அந்நடுநிசியில மழையில் நனைந்து வெளியே போனார் வயலில் மிதந்த நெல்விதைகளை வாரிக் கொணர்ந்தார். மனைவிபால தந்தார் இருவருமுயன்றார். இன்னுணவாக்கினர். மாறு அன்போடு இவர் செய்யும் இலவாழ்க்கைநலத்தை ஐயன்கண்டார். அருள்செய்தகன்றார் மாறநாயனார் பயனும் பண்பும் பெற்றுப் பேரின்பமுற்றார். இதன் விரிவைப் பெரியபுராணத்தில் உணர்க.

அன்பும் அறமும் உடையவனே இலவாழ்வான் என்பது

இதனால் கூறப்பட்டது.

---

46. தேடித் துறவறத்திற் செல்லார் குசேலரிலமேலன்
கூடி யிருந்தார் குமரேசா—நாடி
அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். (சு)

இ—ள்.

குமரேசா! குசேலர் துறவொழுக்கத்தை மேற்கொண்டு செல்லாமல், ஏன் இல்வாழ்க்கையில் இருந்தார் எனின், ஒருவன இல்வாழ்க்கையை அறநெறியே செலுத்துவானாயின் புறநெறி யிற்போய் அவன் பெறும்பயன் யாது என்க.

அருமை கருதி ஆற்றின் என்றார்.

புறத்து ஆறு=இல்லறத்துக்குப் புறமாகிய நெறி. அஃதா வது துறவறம். ஒருவன் நெறிவழுவாமல் இல்லறத்தைச் செய் வானாயில் அவன் துறவறத்திற்சென்று பெறும்பயன் ஒன்றும் இல்லையென்பதாம்,

13



துறந்து தவஞ்செய்து பெறத்தக்க எல்லாப பேறுகளையும் முறைதவறாத இல்லறத்தான் உறுதியாகப் பெறுவான் என்பது கருத்து.

இல்லறத்தை ஒருவன் வழுவாமற் செய்யவேண்டும் என்ப தும், அங்ஙனம் செய்வானாயின அவன் துறவியினும் பெரியவன் என்பதும், அவனுக்கு எல்லா நலங்களும் ஒருங்கே உளவாம் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை குசேலர்பால் உணரப்படும்.

கதை

இற்றைக்கு ஐயாயிர வருடங்கட்கு முன்னர் அவந்தி நகரத்திலே அந்தணர் வருணத்திலே குசேலர் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் கண்ணனுடைய பள்ளித்தோழர். நல்ல எண்ணமுள்ளவர். பற்றற்றவர். துறவுக்குரிய குணங்கள் எல்லாம் இவருக்குப் பிறவியிலேயே யமைந்திருந்தன. ஆயினும் துறந்து போகவில்லை. இல்வாழ்க்கையே நல்லதென்றெண்ணினர். சுசீலையென்னும் மனைவியை மணந்தார். இல்லில் இருந்தார். நல்லறஞ் செய்தார். துறந்தவர் எவரினும் இவர் சிறந்து விளங்கினர். எல்லா நன்மையும் இவர் இல்லிலிருந்தெய்தினர். இதன் விரிவு குசேலோபாக்கியானத்தில் காணப்படும்.

துறவறநிலையினும் இல்லற நிலையே இனிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

47. முற்றத் துறந்தார்க்கேன் முன்னின்றான் இன்னின்ற
கொற்றச் சனகன் குமரேசா—உற்ற
இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. (எ)

இ—ள்.

குமரேசா! சனகன் இல்வாழ்க்கைக் கண் நின்றிருந்தும் முற்றத்துறந்த முனிவரினும் ஏன் மேன்மையுற்றான் எனின்,



இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் முயல்வாருள் எல்லாம் தலை என்க.

தலை=சிறப்பு. இயல்பு=இல்வாழ்க்கைக் குரிய இயல்பு. முயல்வாருள் எல்லாம் தலை=முத்தியை அடைய முயல்கின்றவர் எல்லாருள்ளும் சிறந்தவன்.

உடலிலுள்ள உறுப்புக்கள் எல்லாவற்றுள்ளும் தலை உயர்ந்து நின்று சிறந்து விளங்கும். அதுபோல் உலகிலுள்ள நிலையினர் எல்லாருள்ளும் இயல்புடைய இல்லறத்தானே உயர்வுடையான் என்பதாம்.

மேல், துறந்துபோய் ஒருவன் பெறத்தக்க பெரும்பயனை இல்லின்கண் இருந்தே பெறலாம் என்றார். இதில், அங்ஙனம் இருந்து பெறுபவனே சிறந்தவன் என்றார். ஒரு பொருளைச் சென்று பெறுபவனினும் நின்றுபெறுபவனே என்றும் உயர்ந்தவன் என்க. அவ்வீட்டை இவ்வீட்டிலிருந்தே அடையலாம் என்பது குறிப்பு.

இல்வாழ்க்கையில் இருந்து ஒருவன் எல்லார்க்கும் நல்ல உபகாரியாய் வாழவேண்டும் என்பதும், அங்ஙனம் வாழ்பவனே துறந்தவர் எவரினும் சிறந்தவன் என்பதும், இதற்குச் சான்றாக சனகன் இல்வாழ்ந்து சிறந்தான என்பதும், இதில் உணர்த்தப் பட்டன.

கதை.

மகத தேசத்துக்குத் தென் கிழக்கில் உள்ள மிதிலையென்னும் நகரில் இருந்து நெறிவழுவாமல சனகர் இல்வாழ்க்கையை இனிது நடத்தினர். சிறந்த துறவிகள் எல்லாம் இவரது பெருமையை வியந்து புகழ்ந்தார். இவரது அறிவாலும் ஒழுக்கத்தாலும் தெளிந்து திருந்தின துறவிகள் பலர். நல்ல உபகாரியாய் இல்லிலிருந்தே எல்லா நலங்களையும் இவர் எய்தினர்.

வாழ்க்கையிலிருந்து இன்பமெல்லாந் துய்த்து இயல்புடன் எய் தினர். அருந்தவராகிய சுகர் முதலிய பெரியார் எவரினும் சிறந் தவராய் இவர் விளங்கினர். இவரது இல்வாழ்க்கையின் இயல் பும் உயர்வும் பாகவத முதலிய பலவினும் புலனும்.

நெறிவழுவாமல் இல்வாழ்பவனே துறந்தவர் எவரினும் சிறந்தவன் என்பது இதனால் கூறப்பட்டது.

48. கொற்றத் தவஞ்செய்யும் கோசிகரேன் வேள்விமுற்றக்
கொற்றவனில் வந்தார் குமரேசா—மற்றவரை
ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! அரியதவத்தைச் செய்யும் விசுவாமித்திரர் வேள்வியை முடிப்பதற்காக தசரதன் இல்லை நோக்கி ஏன் வந் தார் எனின், பிறரையும் நெறியே ஒழுகச்செய்து தானும் வழு வாமல் ஒழுகும் இல்வாழ்க்கை நிலையானது நோற்பார் நிலையினும் நோன்மையுடைத்து என்க.

நோற்பார்=தவஞ்செய்வார். இங்கு இஃது அவரது நிலை மையுணர்த்திற்று. நோன்மை=பொறுமை. ஒழுக்குதலுடை மையும் இழுக்குதல் இன்மையும் ஒருவன் இல்வாழ்க்கையில் ஒருங்கே அமைந்திருத்தல் வேண்டும் என்பதாம்.

இல்வாழ்பவன் பிறரையும் வழுவாமல் ஒழுக்கித்தானும்

வழுவாமல் ஒழுகவேண்டும் என்பது கருத்து.

துறவிகள் தமக்குற்ற பசி, நோய் முதலியவற்றை மாத்திரம் நீக்கும் பொறுப்பினையுடையவர். இல்வாழ்பவரோ, தமக்குறுவனவும் பிறர்க்கு உறுவனவுமாகிய எல்லாத் துன்பங்களையும் நீக்



கும் பொறுப்பினையுடையவர். ஆதலால் துறவற நிலையினும் இல்லற நிலையிலே தான் பொறுப்பும் வருத்தமும் பொருந்தியுள்ளன என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசுவாமித்திரர்பாலும் தசரதர்பாலும் உணரப்படும்.

### கதை

துறந்தவரிற் சிறந்தவராகிய விசுவாமித்திரர் சித்தாச்சிரமம் என்னும் இடத்திலிருந்து ஒரு பெருவேள்வி செய்தார். இவ்வேள்விக்குத் தாடகை முதலியோர் பல இடையூறுகள் செய்தனர். அதனால் அது நன்கு முடியவில்லை. முடியாமையை நினைந்து முனிவர் வருந்தினர். பலமுறை முயன்றார். முயன்றும் அது நலமுறவில்லை. வனவாழ்க்கை செய்யும் இவர் தமது வேள்வியை முடிக்கும்பொருட்டு இல்வாழ்க்கை செய்யும் தசரதனை நோக்கி வந்தார். வந்த முனிவரை மன்னன் தொழுதான், புகழ்ந்தான், மகிழ்ந்தான். முனிவரும், உற்றதை முற்றும் உணர உரைத்தார். அதன்பின் அரசன் தமது அருமைத் திருமகனாகிய இராமனை முனிவருடன் அனுப்பி அவரது தவத்தை இனிது முடிப்பித்தான். முடிவை நினைந்து முனிவர் பெருமகிழ்வடைந்தார். துறவற நிலையிலிருந்த முனிவருக்கு உற்ற இடையூற்றை நீக்கி, அவரை ஆற்றின் ஒழுக்கி அரசன், இல் அறம் புரிந்தமையை உலகம்போற்றிப் புகழ்ந்தது.

இது இராமாயணத்திலுள்ளது.

துறவற நிலையினும் இல்லற நிலையே அருமையும் பெருமையும் உடைத்து என்பது இதனால் கூறப்பட்டது.

49. இச்சைபற்ற தன்மகனை யில்வாழ்வில் நில்லென்றேன்
குச்சகனார் சொன்னார் குமரேசா—மெச்சும்
அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. (க)



இ—ள்.

குமரேசா! இச்சையில்லாத தனது மகனை இல்வாழ்க்கையிலேயே நில என்று ஏன் குச்சகனார் சொன்னார் எனின், அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே; அஃதும் பிறன்பழிப்பது இல்லாயின் நன்று என்க

அஃது என்றது துறவறத்தை.

இல்லறம் துறவறம் என ஒரு வகையிலவைத்து எண்ணப்படும் இருவகை அறங்களுள் இலலறத்தைப் பிரித்து முற்கூறினமையால் ஏனைத்துறவறத்தை "அஃதும்" என்று சுட்டினார். இனி, அஃது என்னும் சுட்டுப்பெயரை இல்வாழ்க்கைக்கே ஏற்றி அறன் எனப்பட்டது இல்வாழ்க்கையே; ஆயினும் பிறரால் பழிக்கப்படாதபடி அது நடத்தப்படுமாயின் மிகவும நன்று; என்று பொருள் கூறவும்படும்.

பொறிகளையடக்கி நல்வழியில் வழுவாமல் நிற்கும் துறவி தான் பொறியின்பங்களைப் பொருந்தத்துய்க்கும் இல்வாழ்வானோடு சமமாக மதிக்கப்படுவான் என்பதும; இல்வாழ்பவன் பிறனில் விழைதல், புறங்கூறல், முதலிய இழி குணங்களை, யறவே யகற்றி ஒழுகவேண்டும் என்பதும், மேற்குறித்த இருவகைப் பொருட்கு முறையே உரிமையாம்.

துறவற நிலையினும் இல்லற நிலையே ஒருவனுக்கு நல்லது

என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குச்சகன் பால் உணரப்படும்.

### கதை.

இப்பாரதகண்டத்தின் வடகோடியில் கடகம் என்று பெயரிய நகரம் ஒன்று இருந்தது. அதில் குச்சகன் என்னும் பெயரினை யுடைய ஒரு வேதியர் இருந்தார். இயர் அருந்தவஞ்செய்து ஒரு புதல்வனைப்பெற்றார். அவனுக்குக்கௌச்சிகன் எனப்பெய ரிட்டார். போற்றி வளர்த்தார். பருவமுற்றபின் இவர் அவ னுக்குத் திருமணஞ்செய்யக் கருதினார். தந்தை கருத்தை மைந் தன் உணர்ந்தான். மனைதனை வெறுத்தான். வனத்திற்புகுந்தான்.



இல்லத்தை மறந்தான். மனத்தை யொடுக்கினான். பல வருடங் களாக அருந்தவம புரிந்தான். கொடுமிருகங்கள் தனது உடலில் வந்து கடியினும் உணராமல் ஒரு மனப்பட்டுப் பரமனைப்பற்றி னான். அதனால் மிருக கண்டேயன் என்னும் பெயரினைப்பெற்றான். இப்பெருந்தகையின் அருந்தவத்தை வியந்து இறைவன் அருள் புரிந்தார். அருள்பெற்ற புதல்வன் தெருளுற்ற தந்தையை வந்து கண்டான். தவக்திலுற்றதைத் தந்தைக்கு உரைத்தான். தந்தையு மகிழ்ந்தார். தனயனை நோக்கினார். இனியேனும் இல் லறத்திலிருந்து நல்லறம செய்யென்றார். மகன் மனம இசைய வில்லை. துறவறமே நல்லதென்றான். துணிந்துசெல்லநின்றான். தந்தை தடுத்தார். இல்வாழ்க்கையே சிறந்த அறம் என்று மக னுக்கு இனிது எடுத்துரைத்தார். மகனும இசைந்தான். அதன்பின் விருத்தையென்னும் ஓர் உத்தமியை மணந்தான். இல்வாழ்க்கை புரிந்தான். மிருகண்டு என்னும புதல்வனைப்பயந் தான். இல்லறப்பயனை இன்புடன் அடைந்தான். இம்மிருகண் டுவே நமது மார்க்கண்டர் தந்தை. இதன் விரிவு கந்தபுராணத் தில் மார்க்கண்டேயப் படலத்தில காணப்படும்.

இல்வாழ்க்கையே சிறந்த நல்வாழ்க்கை என்பது இதனால் கூறப்பட்டது.



[மென்று

50. மண்டலத்தில் வாழ்ந்திருந்தும் வள்ளுவரேன் தெய்வ
கொண்டாடப் பட்டார் குமரேசா—உண்டாகும்
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். (ய)

இ—ள்.

குமரேசா! வள்ளுவனர் இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தும் அவரை ஏன் எல்லாரும் தெய்வம் என்று கொண்டாடினர் எனின், வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என்க.



மண்டலம்—மண்தலம். நிலவுலகம் என்றபடி. இதன் எதிர்மொழி விண்டலம். வாழ்வு ஆங்கு வாழ்பவன்—வாழவே ண்டிய இயல்பின்படி வாழ்பவன். இல்லறத்திற்குரிய இயல்பால வழுவாமல் வாழ்பவன் மனிதனாயினும் அவன் தேவனாக மதிக் கப்படுவான் என்பதாம.

வாழ்வாங்கு வாழ்பவன் பின்தேவனாதல் திண்ணமாதலால் வையத்தானே யெனினும் அவனை வானத்தான் என்று மதித்துத் துதிக்கவேண்டும் என்பது கருத்து.

ஒழுக்கம் நிறைந்த இல்வாழ்பவன் விழுப்பம் நிறைந்ததெய் வமாக விரும்பி மதிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை நமது திருவள்ளுவர்பால் உணரப்படும்.

கதை.

இற்றைக்கு இரண்டாயிர வருடங்கட்கு முன்னர் பிரமாவின் அமிசமாக இவ்வுலகத்தில் ஓர் அவதாரம் நிகழ்ந்தது. இந்த

அவதார மூர்த்திக்குத் தான் திருவள்ளுவர் என்று பெயர். இவரே திருக்குறள் என்னும் தெள்ளமுதத்தை உலகுக்களித்த வள்ளல்.

இவரது தாயின் பெயர் ஆதி. தந்தையின் பெயர் பகவன். ஆதியையும் பகவனையும் தமக்குத் தாயும் தந்தையுமாக் கொண்டு தோன்றிய இவரது தோற்றத்தால் இவ்வுலகில் பல நலன்கள் தோன்றின.

அன்னையும் பிதாவும்முன்னறி தெய்வமென்று ஔவையார் அருளிய செவ்விய மொழியின்படி நமது நாயனர் தமது தாயையும் தந்தையையுமே தெய்வமாக மதித்துத் துதித்தனரோ என்று கருதும்படி கடவுள் வாழ்த்தின் முதற்பாவில் "ஆதி பகவன் முதற்றே உலகு" என்று அமைந்துள்ளது. இவரது மதிநலமும் மனநலமும் மக்கட்குப் பெருநலங்களை யுதவுகின்றன.

5ம் அதிகாரம் இல்வாழ்க்கை. 107

இவர் வாசுகி என்னும் மனைவியோடு கூடி இல்லற நிலையில் இன்புறறிருந்தார். இல்லற ஒழுக்கங்கள் எல்லாம் இப்பெருந் தகைபால் ஒருங்கே அமைந்திருந்தன. இவரது இல்வாழ்க்கை நலத்தை யெல்லாரும் புகழ்ந்தார் வானவரும் இவரது ஞான நிலைமையை நன்கு மதித்தார் துதித்தார். இவரது அறநலத்தையும் அறிவின் பலத்தையும் அறிந்து அனைவரும் இவரைத் தெய்வமென்று போற்றினர். முற்றத்துறந்த முனிவர் பலரும் இவரது இல்லை நோக்கிவந்து இவர் சொல்லுகின்ற நீதி நெறிகளைக் கேட்டு மகிழ்ந்து சென்றார்.

தேவர், திருவள்ளுவர், தெய்வப்புலவர், செந்நாப்போதார் நாயனர், நான்முகனர், மாதானுபங்கி, பொய்யில்புலவர், பெருநாவலர், முதற்பாவலர், என்பன இவருக்குத் திருநாமங்களாம். இப்பெயர்களானே இவரது பெருந்தன்மையும் திருந்திய பண்பும்

நன்குபுலனாா். இவர் தமது வாழ்க்கைத் துணைவியாகிய வாசுகி யென்னும அம்மையோடு கூடி வாழ்வாங்கு வாழ்ந்து வானுறை யுந்தெய்வதநுள் தெய்வமாச்சிறந்து விளங்கினர். அதன் பின் நமது அம்மை முன்னும ஐயன் பின்னுமா இவ்வையகத்தைத் துறந்தார். இவரது திருமேனியைத் தீண்டிய பறவை முதலிய சிறிய பிராணிகளும் மெய்யுணர்வு பெற்றுத் தெய்வ வுருவை அடைந்தன.

அடிசிற் கினியாளே அன்புடையாளே
படிசொற் கடவாத பாவாய்—அடிவருடிப்
பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்றூங்குமஎன்கண் இரா.

இஃது அம்மை பிரிந்த காலத்தில் நமது ஐயன் அழுதிரங்கி அருளியது. இதனால அமமையின் விழுமிய குணங்களெல்லாம் முழுதும் உணரப்படும்.

சென்னையை அடுத்துள்ள மயிலாப்பூரில் இப்பெருமானது திருவுருவத்தையுடைய ஆலயம் ஒன்று இன்றும் உள்ளது.

14



அஃது என்றும் எல்லாராலும் நன்று வழிபாடு செய்யப்பெற்று வருகின்றது. இதன் விரிவைப் புலவர் புராணத்தில்।

நெறிவழுவாமல் இல்வாழ்பவன் உறும்பயன் இதனால் ர்த்தப்பட்டது.

—:‡:—

நல்லற நூல்களிற் சொல்லறம் பலசில
இல்லறந் துறவறம் எனச்சிறந்தனவே
அங்கிவ இரண்டினுள் முன்னது விளப்பின்
கற்றநூற் றுறைபோய்க் கடிமணக்கிழவன்
நற்குணம் நிறைந்த கற்புடை மனைவியோடு

அன்பும் அருளுந் தாங்கி இன்சொலின்
விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி இவ்வகை
நல்லறம் நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவான் தன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்தவப்
பெருநலந் துய்க்கும் பெற்றித தன்றே.
(சிதம்பர மும்மணிக்கோவை)

மழையின்றி மாநிலத்தார்க்கில்லை மழையுந்
தவமிலார் இல்வழி இல்லை—தவமும்
அரசியல் இல்வழி இல்லை அரசனும்
இல்வாழ்வான் இல்வழி இல்.
(நான்மணிக்கடிகை.)

தார நல்லறந் தாங்கித் தலைநின்மின்
வரும் நாடும் உவத்தல் ஒருதலை
வீரவென்றி விறன்மிகு விண்ணவர்
சீரின் ஏத்திச் சிறப்பெதிர் கொள்பவே.
(வளையாபதி)



பிச்சையும் ஐயமும் இட்டுப் பிறன்தாரம்
நிச்சலும் நோக்காது பொய்யொரீஇ—நிச்சலும்
கொல்லாமை காத்துக் கொடுத்துண்டு வாழ்வதே
இல்வாழ்க்கை என்னும் இயல்பு (அறநெறிச்சாரம்)

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

எல்லார்க்கும் இல்வாழ்பவனே துணை. பெரியோர் வழி போர் முதலிய அனைவரையும் அவன் அன்புடன் ஆதரிக்கவேண்-

டும். பிதிரர்களைக்கருதல், தெய்வந்தொழுதல், விருந்தினரை உபசரித்தல், சுற்றம் பேணல், ஆகிய இவற்றைக் குற்றமறச் செய்தல் வேண்டும். பழிக்கு நாணிப் பகுத்து உண்டு அன்புடையனாய் அறம்புரிதல் வேண்டும். இல்லைத் துறந்து போதலினும் அதில் இருந்து வாழ்தலே நன்று. மேற்குறித்த நெறிகளில் வழுவாமல் வாழ்பவன் துறவிகளினும் பெரியவனாவன். துறவறநிலையினும் இல்லற நிலையே வலிமையுள்ளது. இல்லறமே நல்லது. அதிலிருந்து நெறியோடு வாழ்பவன் தெய்வ நிலையை எய்துவான், என்பனவாம்.

௫வது இல்வாழ்க்கை முற்றிற்று.



# ௬ம் அதிகாரம்-வாழ்க்கைத் துணை நலம்.

அஃதாவது ஒருவனது இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியினது நன்மை. மேல் இல்வாழ்க்கையின் தன்மையை உணர்த்தினர். இதில் அதற்குத் துணையாகிய நன்மையை உணர்த்துகின்றார்.

அதிகார அமைவும் இதனானே புலனாம்.

110

திருக்குறட் குமரேச வெண்பா.

51. கொண்டான் சிறுவரவும் கொண்டேன் சுசீலையன்பு
கொண்டா தரித்தாள் குமரேசா—கண்ட
மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. (க)

இ—ள்.

குமரேசா! சுசீலை தன்னைக்கொண்டவனது சிறியவருவாயைக்கொண்டே என் அன்புகுன்றாமல் ஆதரித்தாள் எனின், மனைக்குத்தக்க மாண்பும் தன்னைக்கொண்டவனது வளத்துக்குத்தக்க வாழ்க்கையும் உடையவளே வாழ்க்கைக்குத் துணையாவள் என்க. சு=நன்மை. சீலம்=ஒழுக்கம். சு சீலம் உடையவள் சு

தற்கொண்டான்=தன்னை மனைவியாகக்கொண்டவன், கணவன் என்றபடி. துணை என்றது ஆகுபெயராய் இங்கு மனைவியை உணர்த்திற்று. இல்லின் கண் இருந்து ஒருவன் செய்யும் அறத்திற்கு உடனிருந்து அவனுக்கு உதவி புரிபவளாதலால் மனைவியைத் துணைவியென்றார்.

பெரியாரைப்போற்றல், வறியாரைக்காத்தல், விருந்தினரை உபசரித்தல், சுற்றத்தாரை ஆதரித்தல், இனியவுணவுகளை உளவாக்கித் தனது கணவனைப்பேணல் முதலிய விழுமிய குணங்களும், வருவாயின் அளவறிந்து செலவு செய்துவாழுந்திறமும், உடையவளே இல்லாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை சுசீலையால் உணரப்படும்.

என்பவள் குசேலருடைய மனைவி. உத்தம குணங்கள் முற்றும் வாய்ந்தவள். இருபத்தேழு மக்களைப்பெற்றாள். தனது கொழுநனாகிய குசேலர், பொருள் தேடும் வழியிற் புகாமல் அருளையே நாடினர். அதனால் வறுமை அதிகரித்தது. குசேலர்,



வெளியே சென்று காட்டில் உதிர்ந்து கிடக்கின்ற புல்லியதானியங்களைப்பொறுக்கித் தொகுத்துக்கொணர்ந்தார். அதனைச்சுசீலை அன்புடன் பெற்றுப்பக்குவஞ்செய்து கஞ்சியாக்கிக் கணவனையும் மக்களையும் ஊட்டி அதிதிகளையும் உபசரித்தாள். கொண்டா

னது சிறியவாயிலும் சோணுமல் பெருமகிழ் வுடனே இல்வாழ்க் கையை நடத்தினுள். மனைத்தக்க மாண்பும் வளத்தக்க வாழ்க் கையும் இவள்பால் நன்கு அமைந்திருந்தன நல்ல சீலம் உள்ள வள் ஆதலால் இந்த அம்மையைச் சசீலை என்று அழைத்தார்.

மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந்து உவப்ப வூட்டும்
நேசமிக் குடையாள் கொண்கன் நினைப்பறிந் தொழுகும் நீராள்
தேசுறு வாய்மை யுள்ளாள சினந்திடல் என்றும இல்லாள்
பேசருங் கற்பு வாய்ந்தாள பெறறதே கொண்டுவப்பாள்.
மணமகன் உடம்புபோற்ற வல்லவள் மனைவியேயென்று
உணர்வினுர் மொழியுமாற்றம் உவள்செயல் நோக்கிப்போலும்
தணவறும அனபுஞ் சாந்தத் தன்மையும நன்மையான
குணமுமோர் உருவங் கொண்டோர் குடிப்பிறந் தனைய நீராள்.
(குசேலோ பாக்கியானம்)

இது பாகவதத்தில உள்ளது.

ஒருவன மனைவிக்கு அமைந்திருக்க வேண்டிய நலங்கள் இவையென இதில் உணாததப்பட்டன.



52. கொற்றமுற்ற பத்ரகிரி கோன்வாழ்க்கை இலலாளால்
குற்றமுற்ற தென்னே குமரேசா—உற்ற
மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல. (உ)

குமரேசா! பத்திரகிரியினது அரச வாழ்க்கையும் இல்லாளால் ஏன் குற்றமுற்றதெனின், ஒருவன் இல்லாள்கண் மனைக்கு



உரியமாட்சிமை இல்லையாயின் அவனது வாழ்க்கை எவ்வளவு மாட்சிமை உடையதாயினும் அதனால் பயன் இல்லை என்க.

மனைமாட்சி—இல்லறத்திற்கு உரியமாண்பு. அஃதாவது கற்பால் தன்னைக்காத்தலும், கணவனைப்பேணலும், விருந்தினர் முதலியோரை மெய்யன்போடு உபசரித்தலும் முதலாயின.

ஒருவன் இல்வாழ்க்கையானது செல்வத்தால் எவ்வளவு பெருமையை உடையதாயிருப்பினும் அவனது மனைவியினிடத்து நற்குணங்களும் நற்செயல்களும் இல்லையாயின் அவ்வாழ்க்கை பயன்படாதென்பதாம். இவ்வுண்மை பத்திரகிரிபால் காணப்படும்.

பத்திரகிரி என்பவர் விக்கிரமாதித்தன்பட்டி என்னும் மெய்ப்பதிவாளரோடு உடன் பிறந்தவன். உச்சனி என்னும் நகரில் இருந்து அரசுபுரிந்தான். வடமொழியிற் சிறந்த வித்துவான். நீதிசதக முதலிய உயர்ந்த நூல்களை அதில் இயற்றியுள்ளான். எல்லாவளங்களும் இவன் இல்லில் அமைந்திருந்தன. மனைவியோடுகூடி வாழ்க்கையை நடத்தி வருங்காலத்தில் முனிவரொருவர் இவன் இல்லை நோக்கி வந்தார். நல்லமாங்கனி ஒன்றை இவனிடம் தந்தார். அதனை அரசன் வாங்கினான். தான் உண்ணவில்லை. தனது மனைவிக்கே தந்தான். அவள் அதைத் தனது கள்ளநாயகனுக்குமெள்ள அனுப்பினாள். அவன் அதைப்பெற்றுத்தான் நேசம் வைத்துள்ள ஒரு தாசிக்குத்தந்தான். அவளும் அதனைத்தான் காதலித்துள்ள ஓர் இடைய

னுக்குக் கொடுத்தாள். அவனும் அதனை உண்ணவில்லை. தான் காதல்கொண்டுள்ள ஒரு புலைமகளுக்கு அவ்விலையில் கனியை விரும்பிக்கொடுத்தான். அப்புலைமகளும் அக்கனியின் பெருமையை அறியாமல தன் தலையில் வைத்துள்ள சாணம் நிறைந்த கூடைமேல் வைத்துத் தனது குடிசையை நோக்கிச் சென்றாள். அவ்வமையம் அரசன் மேன்மாடத்தின் நிலாமுற்றத்தின் மேல் உலாவிக்கொண்டு நின்றான். அப்புலைமகள் செல்லலை இந்நில-



மன்னன் கண்டான். கூடைமேல் உள்ளது தனது மனைவிக்குத் தந்த இனியமாங்கனியென்று தெளிந்தான். அவளைக்கொணரும்படி செய்தான். அவளும் வந்தாள். மன்னனை வணங்கி நின்றாள். அரசன் இக்கனி உனக்கேதென்றான். அவள் உள்ளதைச்சொன்னாள். அதன்பின் அடுத்தடுத்து அரசன் அதன் இயல்பை வினவி ஆய்ந்தான. முடிவில் உற்றதை முற்றும் உணர்ந்தான். இல்லாள் இழிவை நினைந்தான். மிகவும் வருந்தினான். இல்வாழ்க்கையை வெறுத்தான. அரசபோகங்கள் அனைத்தையும் விடுத்தான். வனம்புகுந்தான். தவம்புரிந்தான். இதன் விரிவை நீதிசதகத்தில் தெளிக.

ஒருவன் மனைவியினிடத்து மாண்பு இல்லையானால் அவன் வாழ்க்கை இழிவுறும் என்பது இதனால் கூறப்பட்டது.

53 ஒன்றுமில்லாச் சத்தியவான் உற்றானே இல்லாளால்
குன்றாமல் எல்லாம் குமரேசா—என்றேனும்
இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. (௩)

குமரேசா! ஒன்றும் இல்லாத சத்தியவான் இல்லாளால் எல்லா நலங்களையும் ஏன் பெற்றான் எனின், இல்லவள் மாண்புடையவளானால் அவனுக்கு எல்லா நலங்களும் உளவாம் என்க.

இல்லவள் மாணக்கடை = மனைவி மாண்பு இலளாயின். என், என்னும் வினா இரண்டாவது யாதும் இல்லையென்பதைக் குறித்து நின்றது.

ஒன்றும் இலனாயினும் நல்ல மனைவிமட்டும் ஒருவன் உடையனாயின் அவன் எல்லாம் உடையனாம். எல்லாம் உடையனாயினும் நன்மனைவிமட்டும் ஒருவனுக்கு இல்லையானால் அவன் யாதும் இலனாம் என்பது கருத்து.



பொருளுடைமையினும் ஒருவனுக்கு மாண்புடைய மனைவியுடைமையே சிறந்ததென்பது குறிப்பு.

மாண்புடைய இல்லாளையுடையவனுக்கு இல்லாதது ஒன்றும் இல்லையென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியவான் பால் உணரப்படும்.

கதை

சத்தியவான் என்பவன் சாளுவதேசத்து அரசன் புதல்வன். இவன் இளவரசனாக வருதற்கு முன்னரே தனது தந்தையை வென்று பகைவர்கள் அவன் அரசைக் கைப்பற்றிக்கொண்டார்கள். நாடிழந்து நலிந்திருந்த தந்தை தாயருடன் இவன் வனம்புகுந்து வருந்தியிருந்தான். இங்ஙனமிருப்ப, அசுவபதியென்னும் அரசன் மகளாகிய சாவித்திரி என்பவள் இளமையிலேயே இவனை மணமகனாகக் கருதியிருந்தாள். பின் இவன் எளிய நிலைமையைத்தெளிய அறிந்தாள். ஆயினும், அன்புமாறவில்லை. பெற்றோர் வேறு மணமுடிக்கக் கருதினர். இவள் இசைந்திலள். சத்திய

வானே தனக்கு உத்தமநாயகன் என்று உறுதிகூறினள். பெற்றோர்களும் இவள் பெருந்தன்மையை வியந்தார். இவளது அழகிய திருமேனியின அருமையை நினைந்து தளர்ந்தார். ஆயினும், இவள் மனம்போல் இசைந்து காட்டில் வசிக்கும் சத்தியவானுக்கே இவளைக்கொண்டுபோய்த்தாரை வார்த்துத்தந்தார். மீண்டார். சாவித்திரியும் சத்தியவானுடன் காட்டில் வசித்தாள் இவளது பெருங்குணங்களுக்கு இறைவன் இரங்கினர். சத்தியவான் இழந்திருந்த எல்லா நலங்களையும் அவன் எய்தும்படி யருளினர். அவனும் அடைந்தான். தனது பத்தினியோடும் பெற்றோரோடும் காட்டினையடைந்தான். இழந்த அரசைப்பெற்றான். இனிதாக இல்வாழ்ந்தான். இதன் விரிவு கருமசங்கிதையில் உணரப்படும்.

மாண்புடைய மனையாளை யுடையவன், எல்லா நலங்களையும் அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

6ம் அதிகாரம் வாழ்க்கைத் துணை நலம். 115

54. பண்டேன் ளாயினியைப் பற்றற்ற மாதவனும்
கொண்டு மகிழ்ந்தான் குமரேசா—கொண்டாடும்
பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். (ச)

இ—ள்

குமரேசா! பற்று அற்ற மாதவனும் ஏன் ளாயினியை மனைவியாகப்பெற்று மகிழ்ந்தான் எனின், ஒருவன பெறததக்க பொருள்களுள் மனைவிப்பால் சிறநத பொருள்கள் யாவையுள அவளிடத்தில கற்பு எனனும் திண்மையுண்டாகப் பெறினஎன்க.

பற்று அற்ற மாதவன்—மௌவக்கல்யர்.

பெருந்தக்க — பெரிய தகுதிவாய்ந்த அஃதாவது மிக மேம்பாடான பொருள். பதிவிரதைகளுடைய மனம் நிலைகுலையாமல் உறுதியாக நிற்கும் பெருமையையுடையது அது கருதி ''கற்பு என்னும் திண்மை'' என்றார்.

இம்மையில் ஒருவன் பெறுகின்ற பேறுகள் எல்லாவற்றுள்ளும் கற்புடையாளை மனைவியாகப் பெறுதலே சிறந்த பேறென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மௌவத்கல்யர் பால் உணரப்படும்.

கதை

மௌவத்கல்யர், இவரொரு சாந்தமுனிவர் நிறைந்த தவவொழுக்கமுடையவர் நளாயினி என்னும் குலமகளைத் தனக்கு மணமகளாகக் காதலித்தார். அவள் தந்தைபால் வந்தார். தன் கருத்தை உரைத்தார் அவனும் இசைந்தான். முனிவர் அவளை மனைவியாகக் கொண்டார். மோன இன்பத்தைமுழுதும்விடுத்தார். காதல் இன்பத்தைக் கலந்துதுய்த்தார். அதன்பின் இவர் அவளது கற்பின் திண்மையைச் சோதிக்கக் கருதி அவளுக்கு அல்லல் பல செய்தார். அவ்வெல்லாவற்றிலும் நிலைகுலையாமல் நின்றாள்.





நெறி திறம்பாமல் ஒழுகினாள். அன்பால் முனிவர்க்கு இன்பமே செய்தாள். அவர் வேண்டுவன வெல்லாம் விருப்புடன் தந்தாள். மாண்டவியர் என்னும் முனிவர் ஒருநாள் இவள் மங்கலம் இழக்கும்படி சபித்தார். அதற்கு மாறாக இவள் சூரியன் உதிக்காமல் இருக்கும்படி சபித்துத் தடுத்தாள். அருக்கனும் அவ்வாறே அடங்கியிருந்தான். உலகம் இருண்டது. பிரமன் வேண்டிக்கொள்ளவே இவள் கதிரவனை வருக என்றாள் அவன் களிப்புடன் உதித்தான். தேவரும் இவள் கற்பின் பெருமையைத் தெளிந்து புகழ்ந்தார். இவளது கலங்காத கற்பின் நலங்கண்ட கணவனும் களிபெருவகை கொண்டான்.

விரிவைச் சரிதத்தில் உணர்க.

இவ்வுலகில் ஒருவனுக்கு நல்லமனைவிபோல் சிறந்தபேறு வேறொன்றுமில்லை என்பது இதனால் கூறப்பட்டது

55. பண்டுமழை பெய்யப் பணித்தாள் அநசூயை
கொண்டுபெய்த தென்னே குமரேசா—உண்டான
தெய்வந் தொழாஅள்கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (ரு)

இ—ள்.

குமரேசா! அநசூயை முன்னம பெய்யென்று சொன்ன வுடனே என மழைபெய்தது எனின், வேறு தெய்வத்தைத் தொழாமல் தன் தெய்வமாகிய கணவனையே தொழுது துயில் எழுகின்றவள் பெய்யென்று சொல்ல மழைபெய்யும் என்க.

அறிவுடைமக்கள் உறங்கப்புகுமுன் தெய்வம்தொழுது அச் சிந்தனையோடு உறங்குவர். கற்புடைய மகளிர் உறங்கப்புகுமுன் கொழுநனைத்தொழுது அச்சிந்தனையோடே உறங்குவர். அவர் விழித்து எழும்பொழுது அவருளத்தில் அச்சிந்தனையே முந்தி



நிற்கும். ஆதலால் எழுந்து தொழுவாள் என்னாது "தொழுது எழுவாள்" என்றார்

கனவிலும் நனவிலும் கணவனைத் தெய்வமென்று கருதி யுள்ள கற்புடையவளுக்குத் தேவர்களும ஏவல செய்வர் என்பது குறிப்பு.

கணவனையே தெய்வமென்று மனைவி கருத வேண்டுமென்பதும், அங்ஙனம் கருதுகின்றவள் கருதியனவெல்லாம கைகூடும் என்பதும, இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அநசூயைபால் உணரப்படும்

அநசூயை என்பவர் அத்திரி முனிவரது பத்தினி. நல்ல உத்தமி. அசூயை என்றால் பொறாமை. அஃதிலலாதவள் அநசூயை. எனவே அழுக்காறு முதலிய இழிகுணங்கள் இல்லாத பெருந்தன்மை யுடையவள் என்பது தன் பெயரானே பெறப்பட்டது. கணவனே தெய்வம என்று கருதி உரிமையான பணிவிடைகளை முனிவருக்கு உவநது செய்துவந்தாள். திரிமூர்த்திகளும் இவளது கற்பின் பெருமையையறியும் பொருட்டு இவள்பால் வநதார். சோதிததார். அச்சோதனையில அந்த மூவரும் இந்த அம்மைக்கு மகவாய் விளங்கினர். காமகம் என்னும் வனததிலிருந்து தனது கணவன பலவருடங்களாகத் தவமியற்றியிருந்தார். அக்காலத்தில் மழை பெயவின்மையால் உலகம் நிலை குலைந்திருந்தது. அநசூயை கொழுநனைத் தொழுது மழைபெயப் பணித்தாள். உடனே மழை பெய்தது. கங்கைவநதாள். காட்சி தநதாள். அனைவரும் மகிழ்நதார்.

இதன் விரிவு சிவபுராணமுதலிய பலவினும் புலனும்.

காண்டகைய தங்கணவ னைக்கடவு ளார்போல்
வேண்டுவுறு கற்பினர்தம் மெய்யுரையில் நிற்கும்



திருக்குறட் குமரேச வெண்பா.

சண்டையுள தெய்வத மும் மாமுகி லும் என்றால்
ண்டகைமை யோர்களும அவர்க்கு நிகரனறே
(கந்தபுராணம்)

கற்பு மேய கனங்குழை மாதரைப
பெற்று ளோர்தம மாபும் பெருந்தவக்
கற்பி னுட்கொண்ட காதலன் ஆருயிர்ச்
சுறறம் யாவுந் துறக்கத்தின் எய்துமால். (காசிகாண்டம்)

ம, பதிவ்ரதைகளுக் குப பணிபுரியும எனபது கூறப்பட்டது.

56. கொண்டானைப் பேணிக் குலமங்கை யர்க்கரசி
கொண்டார் புகழேன் குமரேசா—தண்டாமல்
தற்காத்துத தறகொண்டாற் பேணித தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (சு)

குமரேசா! மங்கையர்க்கரசியார் தனனைக் கொண்டவனைப் பேணி என் புகழ்கொண்டார் எனின், தன்னைக்காத்து தன்னைக் கொண்டவனைப் பேணி தகைசானறசொல காதது சோர்வு இளாள் பெண் என்க.

தகைசான்ற சொல் = தகுதி நிறைந்த சொல். அஃதாவது புகழ்.

ஒழுக்கத்தால் தன்னைக்காத்து, அன்பால் கணவனைப் பேணி இருவருக்கும் இன்பம் பயக்கத் தக்க புகழை வளர்ப்பவளே வாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவை மங்கையர்க் கரசியார் பால் உணரப்படும்.

கதை

மங்கையர்க் கரசியார் என்பவர் மதுரையிலிருந்த நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னன் மனைவியார். சோழமன்னன் மகள். தமது கணவன் சமணமதத்தைச் சார்ந்தார். சைவநெறியை மறந்தார். அரசியார் இதனை அறிந்தார். வருந்தினார். பலவகையிலும் பதிக்கு மதியூட்டினாள். மன்னன் மனம் மாறவில்லை. அம்மையார் திருஞான சம்பந்தப் பெருமானைத் தமது திருநகருக்கு எழுந்தருளும்படி செய்தார். அப்பெருமானைக் கொண்டே அரசனுக்குச் சைவநெறியின் பெருமைகளை யினிதுணர்த்தினார். தடுமாறியிருந்ததை நெடுமாறன் உணர்ந்தான். சைவஞ்சார்ந்தான். அதன்பின் அரசி பெருமகிழ்வடைந்தாள். இந்த அம்மை தன்னையும் காத்துத் தன்னைக் கொண்டானைப் பேணியதிறத்தை யனைவரும் வியந்து புகழ்ந்தார். புகழைவளர்க்கும் குலமகளிர்க்கெல்லாம் இவர் தலைவியாய் நின்றார். அதனால் மங்கையர்க்கு அரசியென்னும் மாண்பெயர் பெற்றார்.

''மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக் கைமடமானி, பங்கயச்செல்வி பாண்டிமாதேவி' என்று சம்பந்தமூர்த்தியும் இவரைத் தமது மலர்வாய்திறந்து மகிழ்ந்து புகழ்ந்துள்ளார். இதன் விரிவு பெரிய புராணத்தில் உணரப்படும்.

தன்னையும் தலைவனையும் பேணிப் புகழ்வளர்ப்பவளே மனைவியாவள் என்பது இதனால் கூறப்பட்டது.



57. சீதை வனம்புகுந்தும் சீருற்றாள் எனழகன்
கோதை குலைந்தாள் குமரேசா—மாதர்
சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை. (எ)

இ—ள்.

குமரேசா! சீதைவனம் புகுந்தும் சீருற்றாள்; அழகன் கோதைமாடத்தில் இருந்தும் என் நிலைகுலைந்தாள் எனின், மக

ளிரைச் சிறைசெய்து காக்கும் காவலால் என்ன பயன்; நிறைகாக் கும் காப்பேதலை எக்க.

நெஞ்சை நெறியே நிறுத்தல் என்னும் ஏதுவால் நிறை யென்பது கற்பை யுணர்த்திறறு.

சிறை, புறக்காவலாகவும், நிறை, அகக்காவலாகவும் கொள் ளப்படும். சிறையாலும நிறையாலும் மகளிர்காக்கப் படுவர் என்பதும், அவற்றுள் நிறை யிலவழி சிறையால் பயனில்லை யென்பதும் கூறியபடி. நிறையுடையார்க்கே சிறை பயன்படு மென்பது கருத்து.

இராவணன் தன்னகர் புகுத்தித்துயர் பலசெய்தும் சீதைதனனை நிறையாறகாத்துப் பெரும்புகழ்கொண்டாள்.

தந்தைமுதலானவர் சிறைசெயது காததும் ஏலங்குழலாள் கற்பிழந்து கடும்பழி பூண்டாள்.

## கதை

பண்டு இப்பாத கண்டத்தின் மேல் கோடியில் அளகை என்றொருவளநகர் இருந்தது. அதில் உதயன் என்னும் ஓர் அரசன் இருந்தான. இவனுக்கு ஒரு புதல்வி யுண்டு. அவள் பெயர் ஏலங்குழலாள். இவள் மிக்க அழகுடையவள் பருவமுற் றுள. உடனே தகுதியானவரன் அமையவில்லை தநதை முதலா னவர் இவளைக் கன்னிமாடத்தில் வைத்துப் போற்றி வந்தார். வருங்கால் சந்தனன் என்பவன் ஒருநாள் அங்குவந்தான். இவன் பாடலிபுரத்து அரசன் மகன். கல்வியிலலாதவன். இவனை அவள் கண்டாள். காதல் கொணடாள். சிறுமுறியில ஒன்று எழுதியி வன் முன்னர் வீசினாள். அதை இவன் எடுததான். படிததவன் ஒருவனிடம் காட்டினான். அதில் "இன்று இரவு இன்ன இடத

தில் இரு, யான் அங்குவருவேன்" என்று எழுதியிருந்தது. படித்தவன் பார்த்தான். மாறுபடவுரைத்தான். அவனை அச்சுறுத்தி வேற்றூர்க்குப் போகும்படி வஞ்சித்தான். இவனொரு குட்ட



ரோகி. அரசன் மகள் இன்பத்தைத்தான் அனுபவிக்கலாம என்று கருதினன் முன்குறித்த இடத்தில தான்போய் விருப்புடன் இருந்தான் பாவம்! மன்னன் மகளும் மேன்மாடம் விட்டு மெல்லவந்தாள். உள்ளே புகுந்தாள். அவனை அடுத்தாள். மாறானவன என உணர்ந்தாள். உடனே மானத்தால் உயிரை மாய்த்தாள். (இதன் விரிவை நீதிமஞ்சரியிலுணர்க)

தன்னைத்தான் காத்தமில குலமகளுக்கு அழகென்பது இதனால கூறப்பட்டது.

---

58 வானுலகும் போற்றுகின்ற மாண்பையேன் கண்ணகிதன்
கோனுடனே பெற்றாள் குமரேசா—தானுவந்து
பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. (அ)

இ—ள்.

குமரேசா! தேவரும் போற்றும் பெருஞ்சிறப்பினை கண்ணகி தன் கணவனுடனே ஏன் வானுலகில் பெறறாள் எனின் பெண்டிர் பெற்றானைப பேணப்பெறின் புத்தேளிர் வாழும் உலகின் கண் பெருஞ் சிறப்புப் பெறுவர் எனக.

பெற்றான் = கணவன். புத்தேளிர் = தேவர்.

பெண்டிர் பெற்றான் பெறின் = பெண்டிர், தம்மை மனைவியாகப பெற்றவனை உபசரிக்கப் பெறின். பெறின் என்றது அருமையை விளக்கி நின்றது.

இவ்வுலகில கணவனைப்பேணும் கற்புடைப் பெண்டிர் அவ்வுலகிலதேவர்களால் பேணும பெருஞ்சிறப்பினைப் பெறுவர் என்ப

தாம். இவ்வுண்மை கண்ணகிபோல் காணப்படும்.

கதை

கண்ணகி என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த மாநாய்கன் என்னும் பெயரினையுடைய ஒரு வணிகர் தலைவனது



ளிரைச் சிறைசெய்து காக்கும் காவலால் என்ன பயன்; நிறைகாக்கும் காப்பேதலை என்க.

நெறியே நிறுத்தல் என்னும் ஏதுவால் நிறை யென்பது கற்பை யுணர்த்திற்று.

சிறை, புறக்காவலாகவும், நிறை, அகக்காவலாகவும் கொள்ளப்படும். சிறையாலும் நிறையாலும் மகளிர்காக்கப் படுவர் என்பதும், அவற்றுள் நிறை யிலவழி சிறையால் பயனில்லை யென்பதும் கூறியபடி. நிறையுடையார்க்கே சிறை பயன்படு மென்பது கருத்து.

இராவணன் தன்னகர் புகுத்தித்துயர் பலசெய்தும் சீதைதன்னை நிறையாற்காத்துப் பெரும்புகழ்கொண்டாள்.

தந்தைமுதலானவர் சிறைசெய்து காத்தும் ஏலங்குழலாள் கற்பிழந்து கடும்பழி பூண்டாள்.

கதை

பண்டு இப்பரத கண்டத்தின் மேல கோடியில் அளகை என்றொருவளநகர் இருந்தது. அதில் உதயன் என்னும் ஓர் அரசன் இருந்தான். இவனுக்கு ஒரு புதல்வி யுண்டு. அவள் பெயர் ஏலங்குழலாள். இவள் மிக்க அழகுடையவள் பருவமுற்றாள். உடனே தகுதியானவரன் அமையவில்லை. தந்தை முதலானவர் இவளைக் கன்னிமாடத்தில் வைத்துப் போற்றி வந்தார்.

வருங்கால் சந்தனன் என்பவன் ஒருநாள் அங்குவந்தான். இவன் பாடலிபுத்திர அரசன் மகன், கல்வியிலாதவன். இவனை அவள் கண்டாள், காதல் கொண்டாள். சிறுமுறியில ஒன்று எழுதியி வன் முன்னர் வீசினாள். அதை இவன் எடுத்தான். படித்தவன் ஒருவனிடம் காட்டினான். அதில் "இன்று இரவு இன்ன இடத் தில் இரு, யான் அங்குவருவேன" என்று எழுதியிருந்தது. படித் தவன் பார்த்தான். மாறுபடவுரைத்தான். அவனை அச்சுறுத்தி வேற்றூர்க்குப் போகும்படி வஞ்சித்தான். இவனொரு குட்ட



ரோகி. அரசன் மகள் இன்பத்தைத்தான் அனுபவிக்கலாம என்று கருதினான் முன் குறித்த இடத்தில தான்போய் விருப் புடன் இருந்தான் பாவம்! மன்னன் மகளும் மேன்மாடம் விட்டு மெல்லவந்தாள். உள்ளே புகுந்தாள். அவனை அடுத் தாள். மாறானவன் என உணர்ந்தாள். உடனே மானத்தால் உயிரை மாய்த்தாள். (இதன் விரிவை நீதிமஞ்சரியிலுணர்க)

தன்னைத்தான் காத்தலே குலமகளுக்கு அழகென்பது இத னால கூறப்பட்டது

58 வானுலகும் போற்றுகின்ற மாண்பையேன் கண்ணகிதன்
கோனுடனே பெற்றாள் குமரேசா—தானுவந்து
பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. (அ)

குமரேசா! தேவரும் போற்றும் பெருஞ்சிறப்பினை கண் ணகி தன் கணவனுடனே ஏன் வானுலகில் பெற்றாள் எனின் பெண்டிர் பெற்றானைப பேணப்பெறின் புத்தேளிர் வாழும் உலகின் கண் பெருஞ் சிறப்புப பெறுவர் என்க.

பெற்றான் = கணவன். புத்தேளிர் = தேவர்.

பெண்டிர் பெற்றான் பெறின்—பெண்டிர், தம்மை மனைவி யாகப் பெற்றவனை உபசரிக்கப் பெறின். பெறின் என்றது அருமையை விளக்கி நின்றது.

இவ்வுலகில கணவனைப்பேணும் கற்புடைப் பெண்டிர் அவ்வுலகிலதேவர்களால் பேணும் பெருஞ்சிறப்பினைப் பெறுவர் என்பதாம். இவ்வுண்மை கண்ணகிபால் காணப்படும்.

### கதை

கண்ணகி என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த மாநாய்கன் என்னும் பெயரினையுடைய ஒரு வணிகர் தலைவனது



திருமகள். கோவலன் மனைவி. தனது கணவன் மாதவி என்னும் ஒரு தாசி வசப்பட்டு தன்னை மறந்திருப்பினும் தான் அவனை மறவாது அன்புசெய்து வந்தாள். அவன் பொருள்முழுதும் இழந்தபின்வறியனாயில்லை நோக்கி வந்தான். கண்ணகிமாறு அன்போடு அவனுக்கு வழிபாடு செய்தாள் கணவனைப் பேணுதற்குத் தன்கையிற் பொருளின்மையால தனது காலில கிடந்த சிலம்பைக் கழற்றி அவன்கையில கொடுத்தாள். கோவலன் மனைவியின குணத்தை நினைந்து நினைந்து உருகினான் தான செய்து வந்தவறுக்கு இரங்கினான். கண்ணகி கணவனைத தேறறினாள் அதன்பின் அச்சிலம்பை விலைப்படுத்த மதுரைக்குச சென்றான். கண்ணகியும அவன் சாயைபோல அவனைத தொடர்ந்து உடன் சென்றாள். இடையில அல்லல பல அடைந்து இருவரும முடிவில மதுரையை அடைந்தார். கண்ணகியை அவ்வூரிலுள்ள மாதரி என்னும ஓர் இடையர் மகளிடம் அடைக்கலமாக வைத்து விட்டுக் கோவலன சிலம்பினை விற்கத தெருவினில வந்தான. அங்கு நின்ற ஒரு பொற்கொல்லனைக கண்டான.

அவன அருகர் மன்னன மனைவியின் சிலம்பை முன்னரேம களவாகக்கொண்டவன. இழி குணம நிறைந்தவன. கோவலன் அவனிடம் தன் சிலம்பைக் கொடுத்தான் அக்கொடியவன் வாங்கினான். அரசனிடங்காட்டி வருவதாகச் சொல்லிக் கோவலனை வெளியே நிறுத்தி விட்டு உள்ளே சென்றான் சென்றதீயோன தேவியின் சிலம்பைத திருடின கள்வனைப் பிடித்துக் கொணர்ந்தேன் என்று சொல்லித தன்கையிலிருந்ததை யெடுத்துக் கொடுத்தான. அரசனும் அவனை நம்பிக்கோவலனை ஆராயாமல் கொலைவித்தான். கணவன் கொலையுண்டதை அறிந்த கண்ணகி பெருந்துயரடைந்து தலைவிரிகோலமாய் ஓடிவந்து அரசன் முன் நின்றாள். அரசே! என் அருங் கணவனை ஏன் கொடுங் கொலை செய்தாய் எனது சிலம்பை உனது தேவியின் சிலம்பென்று மாறுபடமதித்தாய். கொணர்க நின் சிலம்பெனக் கூவினாள். மன்னனும் கொணர்ந்தான் தன் காற்சிலம்பையும் அரசியின் சிலம்பையும் நேரில் வைத்து உடைத்தாள். இரண்டிற்கும் உள்ள வேற்றுமையை



உணர்த்தினாள். அரசன் உணர்ந்தான். தான் செய்த தீவினையை நினைந்தான். உயிர் பதைத்தான் உடனே இறந்தான் இ பத்தினித் தெய்வத்தின் திருவடியில் அரசியும் விழுந்தாள். அடைக்கலம் புகுந்தாள். ஆயினும தனது அருங்காதலனைப் பிரிந்த பெருந்துயரால் உறுங்கோபந் தணிந்திலள். மதுரையும் எரிய மனத்தால் நினைத்தாள. நெருப்பும் பற்றி விருப்புடன் எரித்தது. கற்பின் மகிமையால் கணவனைக் கலந்தாள். புகழேனுலகம் புகுந்தாள். தேவரும் போற்றும் சிறப்பினைப பெற்றாள்.

இதன் விரிவு சிலப்பதிகாரத்தில் புலப்படும்.

பத்தினிகட்குமறுமையில் மிகவும் பெருமையுண்டாம் என்பது இதனால் கூறப்பட

59. தாரஞ் சார்குருவேன நாணினர் கண்ணார்முன்
கோடிசெல்வம் வைத்தும குமரேசா — தேடும
புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்முன
ஏறுபோற் பீடு நடை (௯)

இ—ள்.

குமரேசா! கோடிசெல்வம் வைத்திருந்தும தேவகுரு வேன் பகைவர் முன் நாணினர் எனின், புகழ்புரிந்த இல்லாளை யில்லாதவர்க்கு இகழ்வார் முன் ஏறுபோற் பீடு நடை இல்லை என்க. புரிந்த=செய்த.

புகழ்புரிந்த இல் இல்லோர்க்கு=புகழுடைய மனைவியை இல்லாதார்க்கு. ஏறு=சிங்கஏறு. எருதுமாம.

ஒருவனது கம்பீரத்துக்குக் காரணங்கள் பல உளவேனும் புகழுடைய மனையாளுடைமையே சிறந்தது என்பது குறிப்பு. எவ்வளவு நலங்களையும் பலங்களையும் உடையனாயினும அவன் மனைவியிடத்து மாண்பு இல்லையானால், அவமா கன், பகைவர்முன் நாணுவான் என்பது இதில் உணர்த்தப் பட்டது.

இவ்வுண்மை அமரர்குருவின் பால் அறியப்படும்.





கதை

தேவகுருவாகிய வியாழபகவான் தாரையென்னு மனைவி யோடுகூடி இல்வாழ்ந்திருந்தார். சந்திரன் இவரிடம கல்வி பயின்று வந்தான். இவனது இளமைப் பருவத்தையும், அழகிய உருவத்தையும் தாரைகண்டாள். காமுற்றாள். பலமுறையும் உரிய சமயம் பார்த்து வந்தாள். சந்திரன் ஒரு நாள் தனியே யிருந்தான். தாரையும் அவ்விடம் இனிதே சார்ந்தாள். அருகில் நெருங்கினாள்; பெருகிய காதலோடு பல மொழிகள் பேசினாள்.

தாரையின் கருத்தைச் சந்திரன் தெரிந்தான். தனது அருமைக் குருவின் திருமனைவி யென்பதையும் அறவேமறந்தான். அவள் கருத்துக்கு இணங்கினான். கலந்து இன்புற்றான். இருவரும் களவுடன் ஒழுகிப் பல நாள் கழித்தார் சந்திரன் இறுதியில் தாரையைத் தன்னுடன் கொண்டே ஏகினான். குரு அறிந்தார். மிகச் சினந்தார். இந்திரன் முதலிய இமையவர்களைக் கொண்டு சந்திரனைக் கொல்லத் தந்திரஞ்செய்தார். முடியவில்லை. பிரமன் வந்தான். மதிக்கு மதியூட்டினான். அதன் பின் அவன் தாரையைவிட்டான். தாரை சந்திரனிடம் இருக்கும்பொழுது பிறந்த புதல்வனுக்கே புதன் என்றுபெயர். அதனால் புதனுக்கு மதிமகன் என்றொரு பெயரும் வந்தது. சுரர்குருவுக்கு நிகழ்ந்த இச் சிறுமையை அசுரர் சிலர் சொல்லி அவமதித்தனர். சிறந்த அறிவும் உயர்ந்த நலங்களும் ஒருங்கே நிரம்பிய வியாழபகவானும் இதனை நினைந்து நினைந்து நெடுங்கவல் கொண்டார். இகழ்வார் முன் செல மிகவும் நாணினர்.

இதன் விரிவு பாரதத்தில் காணப்படும்.

புகழுடைய இல்லாளையுடையவனுக்கே எல்லாப் பெருமைகளும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.





60. பண்டேன் அருந்ததிபால் பாலால செல்லாம்
கொண்டார் வசிட்டர் குமரேசா—உண்டான
மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. (ம)

குமரேசா! அருந்ததி என்னும் மனைவியாலும், மக்களா லும், வசிட்டர் என் பெருஞ்சிறப்பை அடைந்தார் எனின், மனை மாட்சி ஒருவனுக்கு மங்கலமாம்; நன்மக்கட்பேறு மற்று அதன் நன்கலமாம என்க.

மங்கலம்=நலம்; அழகுமாம். நன்கலம்=நல்ல அணி.

கற்புறு மனைவியும், அறிவுடைமக்களும், ஒருவனுக்கு நல முடம் சிறப்பும் நல்குவர் என்பதாம்.

இனிஒருவன் இல்லாள் மனைமாட்சியை மங்கலமாகவும்; நன் மக்கட்பேற்றை நன்கலமாகவும், கருதல் வேண்டும் என்பர் என வும் இது பொருள்படும். இதில் மங்கலம் என்றது தாலியை.

மங்கலத்தாலும் நன்கலத்தாலும் ஒருபெண் அழகுறுவள். அதுபோல் மனைமாட்சியாலும், மக்கட்பேறாலும், ஒருவன் இல் லாள் சிறப்புறுவள் என்பதாம்.

கற்புடைய மனைவியையும் அறிவுடைய புதல்வரையும் ஒரு வன் உடையனுயின் அவன் எல்லாராலும் புகழ்ந்துபோற்றத்தக்க பெருமையை அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை வசிட்டர்பால் உணரப்படும்.

கதை

வசிட்டர் என்பவர் பிரமாவின் மானச புத்திரர்களில் ஒருவர். பெருந்தன்மை நிறைந்தவர். அருந்தவருட் சிறந்தவர். சூரிய குலத்து அரசர்களுக்குக் குருவாயிருந்து வழி வழியாக அரச



கஃளப் போதித்து வந்தார். அருந்ததி என்னும் பெருங்கற்புடையாளை மணந்தார். இல்வாழ்க்கை புரிந்தார். இவரது மனைவியாகிய பதிவிரத தெய்வததின் உத்தம குணங்கள் அளவிடலரியன. மணமாண்புடைய மகளிரனைவரும் தினமும் துதிக்கும் பெருமாண்புடையவள் இன்றும் இவ்வுலகில் மணம் புரிந்தவுடனே கணவனைக் கைப்பிடித்து மணவறையைச் சுற்றிவருஞ் சமயம் எந்த மணமகளும இந்த அம்மையை நினைந்து வாழ்த்தி வணங்கிவருவது வழக்கம் இஃது ஒரு நியமமாக நிலைத்துள்ளது. இச்சடங்கை அயமி மிதிதல், அருந்ததிபார்ததல் எனவழங்கி வருகின்றனர். கற்பு நிலைகுலைந்த அகலிகை கல்லாய் மண்ணில் இழிந்தாள். நிலைகுலையாத அருந்ததி நக்ஷத்திரமாய் விண்ணில உயர்ந்தாள் ஆகலான் இழிவுக்கும் உயர்வுக்கும் ஏதுவாக ஒவ்வொரு மணமகளுக்கும் இவ்வுண்மை உணர்ததப்பட்டு வருகிறது. 2700-வருடங்கட்கு ஒருமுறை தன்னைத்தானே சுற்றி நிற்கும இயல்பினையுடைய மண்டலம ஒன்று வானிலுள்ளது. இது சப்தரிஷி மண்டலம் எனப்படும். இது நக்ஷத்திரக் கூட்டங்களால நிறைபப்பெற்றது அமமண்டலத்தின் முற்பகுதியின் அடியில் இருப்பது வசிட்ட நக்ஷத்திரம். அதனை அடுத்து நுண்ணிதாய்க் காணப்படுவது அருந்ததி நக்ஷத்திரம். இதைத்தான் நலமடைதறபொருட்டு மணமகள் தலை நிமிர்ந்து பார்ப்பது. இத்தகைய சிறப்புவாய்ந்த அருந்ததியாரும மக்களைப்பெற்ற பின்பே மிக்க சிறப்பையடைந்தார். சுதபன், அககன், சுமதி முதலிய நன மக்களாலும. மனைவியாலும வசிட்டர் எலலா நலங்களையும் பெற்றார். இவரது மனை மாட்சியையுமக்கட் பேற்றையும் தேவ

ரும் புகழ்ந்து போற்றினர்.

இதன் விரிவைச் சிவபுராணத்தில் உணர்க.

மனைமாட்சியுடையான் எல்லாமாட்சியும் அடைவான் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

6ம் அதிகாரம் வாழ்க்கைத் துணை நலம். 127

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்)

கணவனது வருவாய் அறிந்து செலவு செய்யும் நலமும் இனிய குணமும், உடையவளே மனைவியாவள். ஒருவன் எல்லாமுடையனாயினும் அவன் இல்லாளிடத்தில் நலம் இல்லையானால் அவனுடைமை பயனடையா நல்ல இல்லாளையுடையவன் ஒன்றும் இல்லாதவனாயினும் அவன் எல்லாம் உடையனும். கற்புடைய மனைவிபோல் சிறந்தபொருள் இவ்வுலகில் ஒன்றும் இல்லை. கற்புடையவள் பெய்யென்றால் உடனே மழைபெய்யும். தன்னையும் காத்துத்தலைவனையும் பேணி ப்புகழ் வளர்ப்பவளே குலமகள். சிறைக்காவலினும் நிறைக்காவலே பெண்களுக்குச் சிறந்தது. பதிவிரதைகள் தேவர்களாலும் பெருஞ்சிறப்போடு போற்றப்படுவார் சிறந்தமனைவியை யில்லாதவனுக்கு நிறைந்த புகழ் இல்லை. குணமுடைய மனைவியும அறிவுடையமக்களும ஒருவனுக்கு அமையுமாயின் அவனே யிவ்வுலகில் நலங்கள் பலவும் அடைந்த நன்மையாளன் என்பனவாம்.

6-வது வாழ்க்கைத் துணை நலம் முற்றிற்று.

# 7-வது அதிகாரம் மக்கட்பேறு.

அஃதாவது மக்களைப் பெறுதலின் சிறப்பு.

ஒருவன் வாழ்க்கைகுத் துணையாகிய மனைவியின் நலத்தை

முன்னர்க் கூறினார். இதில் அதன் பயனாகிய மக்கட்பேற்றின் சிறப்பைக் கூறுகின்றார். அதிகார அடைவும் இதனானே தெளிவாம்.

61 நாடி மிருகண்டர் நற்சிலதர் மக்களுக்கேன்
கோடிதவஞ் செய்தார் குமரேசா—தேடிப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. (௧)



இ—ள்.

குமரேசா! மிருகண்டரும் சிலாதரும், மக்கட்பேறு கருதி ஏன் பல வருடங்களாக அருந்தவஞ் செய்தார் எனின், அறிவறிந்த மக்கட்பேறே ஒருவன் பெறும் அவற்றுள் சிறந்தது என்க.

பெறும் அவற்றுள்—பெறத்தக்க பொருள்களுள்.

அறிவு அறிந்த மக்கள்—அறியவேண்டுவனவற்றை அறிந்த பிள்ளைகள்

இவ்வுலகில், ஒருவன் பெறுவனவற்றுள் மக்கட்பேறே சிறந்தது. அதனினும் சிறந்த பேறு வேறு ஒன்றும் இல்லை. இவ்வுண்மையை நமது தேவர்தாமே அனுபவித்துத் தெளிந்துள்ளமையான் "அல்ல பிற யாம் அறிவது இல்லை" என்று நெஞ்சு தட்டிக் கூறினர்.

மக்கட்பேற்றிற் பெரும்பேறில்லை என்றார் பிறரும்.

அறிவுடைய மக்களைப் பெறுதலே ஒருவனுக்குப் பெருஞ் சிறப்பு என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை மிருகண்டர்பாலும் சிலாதர்பாலும் உணரப்படும்.

## கதை 1.

மிருகண்டர் இவர் கௌசிகர் என்னுமுனிவரது புதல்வர். முற்கலமுனிவரது புத்திரியாகிய மருத்துவதியை மணந்து வாழ்ந்தார். தமக்கொரு நன் மகன் இன்மையை எண்ணிபிரங்கினர். காசியை அடைந்தார். ஈசனை நினைந்தார். இருந்தவம் புரிந்தார். கண்ணுதற் கடவுளைக் கண்டார். அவரிடம் இவர் வேறொன்றும் வேண்டவில்லை. அறிவுடைய மகனையே தரும்படி கூறினர். விரும்பிப் பெற்றார். அம்மகனே மார்க்கண்டன். விரிவை முதலிற் காண்க.



## கதை 2.

சிலாதர் என்பவர் ஒரு முனிவர். பொறிகளை அடக்கிய அறிவினையுடையவர். எல்லா நல்லகுணங்களும் இவர்பால் இயல்பாகவே அமைந்திருந்தன. இவரது பத்தினியாருக்குச் சித்ரவதியார் என்று பெயர். அந்த அம்மையோடு கூடியிவர் இல்வாழ்க்கை புரிந்தார். தமது பிதிரர்களை மகிழ்விக்கும் பொருட்டு இவர் ஒரு புதல்வனைப்பெற மிகவுமுயன்றார். தானம் செய்தார். தவம் பலதாங்கினர். பிறபேறுகளையெல்லாம் வெறுத்தார். மகப்பேற்றையே விழைந்தார் சிவமேதுணைஎன்று தெளிந்தார் வனஞ்சென்றார். தவமே துணிந்தார். தனி நின்று புரிந்தார். கல்லென நிலைத்துப் பல் பகல் நின்றார். பசிய சிறுகற்களையே தமது பசிக்கு உணவாக்கினர். அதனாற் சிலாதர் எனப்பெற்றார் சிலை என்னும் சொல் கல்லை உணர்த்தும். ஆதலால் இப்பெயர் அப்பெரியார்க்கு வந்தது. தேவவருடங்கள் பலகழியும்படி

இவர் தவ நிலையில் நின்றார். பரமபதியும் தண்ணளிசெய்து இவர் தம்முன் தோன்றியது கண்டுதொழுதிவர் களிமீக்கூர்ந்தார். வேண்டுவதென்னென விமலன் கேட்டார். அறிவறிந்த மகவையே அருள் என வேண்டினார். அங்ஙனமே முதல்வன் அருள ஒரு புதல்வன் தோன்றினான். முனிவர் தமக்கு மகப்பேறுற்றதை நினைந்தார். மிகப்பேருவகை பூத்தார். அந்திவண்ணன் அருளால் வந்த மகனுக்கு இவர் நந்தி யென்று பெயரிட்டார். பேணிவளர்த்தார். இப்புதல்வனால் அவர்பிதிரர் அனைவரும் உய்ந்தார். உயர்கதி பெற்றார். இப்பாலனும் அருந்தவம் செய்தான் காலனைக் கடந்தான். கால காலனையடைந்தான். தவமகிமையால் இவர் சிவகணத்தலைவராய்ச் சிறந்துளார்.

இதன் விரிவை இலிங்கபுராணத்திலும் சிவரகசியத்திலும் தெளிக.

பெறுமவற்றுள் எல்லாம், மக்கட்பேறே பெரிதும் சிறந்தது என்பதை முழுதும் தெரிந்து, மிருகண்டரும் சிலாதரும் பெற்று மகிழ்ந்தார்; ஆதலால் இவரிருவரும் இங்கு உதாரணமாக வந்தனர்.



கண்ணில் யாக்கையும் திங்களில் கங்குலும் கண்போல்
அண்ணல் மந்திரி இல் அரசாட்சியும் அருளில்
திண்ணென் நெஞ்சமும புலவரில் அவையும் நுண்திம்பால்
வண்ணவா யின மக்களில்மனையும் ஒப்பாமால்

(சீகாளத்திப் புராணம்)

மெத்துகின்ற விழுமிய சீர்த்தியோ
டெய்த்த லின்றி இருமைஇன் புந்தரும்
புத்திரற் பெறும புண்ணியவாழ்க்கைதான்
அத்தவத்தினும் ஆற்றச்சிறந்ததே.

(திருக்கூவப் புராணம்)

பொறையிலா அறிவுபோகப் புணர்விலா இளமைமேவத்
துறையிலா வனசவாவி துகிலிலாக் கோலத்தூய்மை

கறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வமன்றே

(வளையாபதி)

எல்லாப் பேற்றினும் ஒருவனுக்கு மக்கட்பேறே சிறந்து என்பது இதனால் கூறப்பட்டது.

62. பண்டேன் சகரர் பகீரதனால் தீதகன்று
கொண்டார் புகழைக் குமரேசா—கண்ட
எழுபிறப்பும் தீயவை தீண்டாப் பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (உ)

இ—ள்.

குமரேசா! பகீரதனால் சகரர்பழி நீங்கி ஏன் புகழ்கொண்டார் எனின், பழி பிறங்காத பண்புடை மக்களைப் பெற்றவர்களைத் தீயவை எழுபிறப்பினும் தீண்டா என்க.



பெறின் என்றார் அருமை கருதி.

பழிபிறங்காப் பண்பு உடைமக்கள் = பழியில்லாத குணங்களையுடைய புதல்வர்.

தீயவை தீண்டா = துன்பங்கள் அணுகா.

பழியை நீக்கிப் புகழை ஆக்கும் பண்புறும் புதல்வனை ஒருவன் ஒரு பிறப்பில் பெறுவனாயின் அவன் தலைமுறை எழும் நலமுறும் என்பதாம். நற்குணமுடைய மக்களைப் பெறுவார்க்குப் புகழும் இன்பமும் முழுதும் உளவாம் என்பது கருத்து.

தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுவகைப் பிறப்புக்களையும் ஓர் உயிர் வினைப்பயதால் அடையும். அவ் எழு பிறப்பினகண்ணும் உறுதுயர்கள்

நன்மகப்பேறுறுமின் உறு எனவும் இது பொருளபடும். மேல் மக்கட்பேறே சிறந்தது என்றார், அப்பேறால் பயன் யாது எனபார்க்கு இது கூறினர்.

நல்ல புதல்வனால் ஒருவன் குலமுழுதும் நலமடையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பகீரதன் பால் உணரப்படும்.

### கதை.

பகீரதன் என்பவன் சூரியகுல திலகன் திலீபன் என்னும் அரசனது புதல்வன். சிறந்த கலையும், உயர்ந்த ஞானமும ஒருங்கே நிறைந்தவன். நெறிவழுவாமல் அரசு புரிந்தான். ஒரு நாள் தமது குல குருவாகிய வசிட்டரிடம் தமது முதாதைகளுடைய பழஞ் சரிதங்களை முழுதும கேட்டான். அதில் சகரர் இயல்பை விவரமாக உணர்ந்தான். அவர்கட்கு இவன் நான்காவது தலைமுறையில் வந்தவன். தமது முன்னோர் கபிலரால் மடிந்து கதியடையாமையை நினைந்தான். உளம் மிக நொந்தான். அரசை அமைச்சன் இடம் தந்தான். அருங்கான் அடைந்தான். பெருந்





தவஞ் செய்தான். விண்ணில் விளங்கிய கங்கையை இவன் தவமகிமையால், இம் மண்ணில் முழுக்கக் கொணர்ந்தான். பண்டு மடிந்து கிடந்த தம் முன்னோராகிய சகரரது பெரிய என்புக்குவியலைத் தான் கொண்டுவந்த இனிய கங்கையால் புனிதமாக்கினான். அதனால் அச்சகரர் அனைவரும துயரகன்றார். உயர்கதி பெற்றார் தமது முன்னோர்களுடைய பழியையகற்றிய பகீரதனது பெரும் புகழை உயர்ந்தோர் வியந்து துதித்தார். இப் புதல்வனைப் பெற்ற திலீபன் நிலைபெற்ற இன்பமெய்தினான். எழுபிறப்பும தீயவை தீண்டா என்பதை உலகம் இவன் பிறப்பால உணர்ந்தது. பழியைத் தேய்த்துப் புகழை வளர்த்த பகீரதன் அயோத்தியை மீண்டும் அன்பால் அடைந்தான். இன்போடு இருந்தான்.

(இது பாகவதத்தில் உள்ளது.)

ஒரு பிறப்பில் பெற்ற பண்புடை மக்களால் ஒருவனுக்கு எழுபிறப்பினும் இன்பம் உண்டாம் என்பது இதனால் தெளியப் பட்டது.

இறைவர் ஞானமும் ஏதம் இலாமையும்
பொறையும் பூண்ட புதல்வர்ப் பெறுவரேல்
மறவ ரேனும் அவரையவ் வல்வினை
பிறவி யேழினும் பின்தொட ராதரோ.
(திருக்கழுக்குன்றப்புராணம்.)

இல்லொழுக்கம் இயைந்து பிதிர்க்கடன்
ஒல்லும் வண்ணம் உஞற்றி மகபுளோர்
செல்லும்வான் நிரயத்துயர் சிந்துவான்
வல்ல மக்கட் பெறற்கிணை மற்றிலை.
(திருக்கூவப்புராணம்.)



மன்னரானவர் அல்லர்மேல் வானவர்க் கரசாம்
பொன்னனின் வார்கழற் புரந்தரன் போலியரல்லர்
பின்னும் மாதவர் தொடக்கினோன் பிழைத்தவர்பிறர்யார்
சொலமறுமகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார்.
(இராமாயணம்.)

நன் மக்கட்பேற்றால் ஒருவன் அடையும் பயன் இதனால் கூறப்பட்டது.

63 பெற்றபொருள் விட்டுமக்கட் பெற்றான் தசரதன்பின்
கொற்றமுற்றான் என்னே குமரேசா—பற்றுகின்ற

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும். (௩)

இ—ள்.

குமரேசா! தசரதன் கையிற் பெற்ற பொருளை வேள்வியிற் செலவிட்டு என் மக்களைப் பெற்றான் எனின், அம் மக்கள் செய்யும் பொருள் தம்மை நோக்கி வரும்; ஆதலால் தமமக்களே தம்பொருள என்க.

ஒருவனுக்கு ஒரு பொருட்டாக மதிக்கத்தக்க உண்மைப் பொருள் நன்மக்களேயாம்; நெல் மணி முதலியன அல்ல என்பதாம். செல்வம்போன்ற சிறப்பினையுடையவராதலால் மக்களுக்குப் பொருள் என்றும் ஒருபெயர் உண்டு.

எவ்வளவு பொருள்கள் இருப்பினும் மக்கள் இல்லையானல் அறிவுடையார் அவற்றை ஒரு பொருளாக மதியார் என்பதும், மக்களே ஒருவனுக்கு உயிர்க்கு உயிரான ஒண்பொருள் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை தசரதன்பால் உணரப்படும்.



கதை.

தசரதன் சூரியகுலத்து வேந்தன். அயன் என்னும் அரசன் புதல்வன். அயோத்தியிலிருந்தான். திகிரிமன்னன். உலக முழுவதையும் வழுவற ஆண்டான். மன்னுயிர் எல்லாம் தன்னுயிர் எனவே எண்ணியொழுகிய புண்ணிய வுருவினன். சத்தியசீலன். தரும பாலன். உயிர்கள் எல்லாம் இன்பம் அடையும்படி என்றும் அன்பு செய்துவந்தான்.

தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம்பயப்பிற்
சேயொக்கும் முன்னின்று ஒருசெல்கதி யுய்க்குநீரால்
நோயொக்கும் என்னில் மருந்தொக்கும் நுணங்குகேள்வி
ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்.

ஈய்ந்தே கடந்தான இரப்போர் கடல் எண்ணில்நுண் நூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்துமுற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற்றொடர் போகபௌவம்

எய்வன எழுபகை எங்கும் இன்மையால
மொய்பொரு தினவுறு முழவுத தோளினான்
வையகம் முழுவதும வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக்காதது இனிது அரசசெய்கின்றான்.

என அவ் அரசர் பெருமானைக் குறித்துக் கம்பர் கூறியுள்ளார். இவற்றால் அப்பெருந்தகையின் அருங்குணங்கள் எல்லாம் ஒருங்குணரலாம். இம்மன்னன் கோசலை, சுமித்திரை, கைகேசி என்னும் தலைமையான மனைவிமார் மூவரோடு கூடி வாழ்ந்து வந்தான். அறுபதினாயிர வருடங்களும் உறுபகையொடுக்கி இவ்வுலகை நலமுற ஆண்டான். எல்லாப் பொருள்களும் இவனிடம் நிறைந்திருந்தன. பிறிதொரு குறையும் இலன். ஆயினும், ஒரு குறைமட்டும் உடையனாயினான். அது மக்கட்பேறின்மையேயாம்.



அதனை நினைந்து நினைந்து நெடுங்கவல்பூண்டான். குருவினி கூறினான் அவர் உணர்த்தியபடியே கலைக்கோட்டு முனிவரைக் கொணர்ந்தான் அவர் அருளால் புத்திரகாமேட்டி என்னும் ஒரு பெரு வேள்வி செய்தான். பெற்றிருந்த பொருளையெல்லாம் அதில் பேணாது வீசினான். பொருள் அறையைத் திறந்து வறியவர் கொள்கென முரசறைவித்தான். தம பொருள் என்பது தம் மக்களே என்று நம்பினான். உற்றவேள்வியின் பயனாக மக்கள் நால்வரைப் பெற்றான். அப்புதல்வர்கட்கு இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கன் என முறையே பெயரிட்டான். இம்மக்களால் அம்மன்னன் இம்மையிற் புகழும், மறுமையில் இன்பமும் ஒருங்கே பெற்றான்.

மைந்தரைப்பெற்று வானுயர் தோற்றத்தின் மலர்ந்தார்
சுந்தரப் பெருந்தோளினும் என்றுணைத தனின்
பைந்துகட்களும ஒக்கில ராமெனப் படைத்தாய்

உய்ந்தவர்க்கருந் துறக்கமும் புகழும்பெற் றுயர்ந்தேன்.
பண்டுநான்தொழும் தேவரும் முனிவரும் பாராய்
கண்டுகண்டுடன்மகிழ கைத்தலங் குவிக்கின்ற காட்சி
புண்டரீகத்துப் புராதனனை தன்னொடும் பொருந்தி
அண்டமூலத்தோர் ஆசனத்திருத்தினை மழுக. என்று

தான் மக்களால் அடைந்த மறுமையின் பெருமையைப் புண்ணிய வுருவோடு வந்து இராமனை முன்னிலையில் தசரதன் இவ்வாறு கூறினன்.

(இதன் விரிவை இராமாவதாரத்தில் உணர்க.)

கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மைய வாய பொருளில்லை ஈன்றாளின்
என்ன கடவுளும் இல். (நான்மணிக்கடிகை)

அறிவுடைய மக்களே ஒருவனுக்குச் செறிவுடைய செல்வம் என்பது இதனால் கூறப்பட்டது.





64 உண்டுமக்கள் கையளைந்த ஒண்கூழை யேன்கசிந்து
கொண்டினிதா உண்டான் குமரேசா—கண்ட
அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ் (௪)

இ—ள்

குமரேசா! தனது மக்கள் கையளைந்து உண்டு எஞ்சிய

கூழையும் என் சசிலை இனிதாக உண்டாள் எனின், தமமுடைய மக்கள் சிறு கையால அளைந்த கூழ், அமிழ்தினும் ஆற்ற இனிதாம் என்க.

ஆற்ற இனிது=மிக இனிமையுடையது.
கூழ்=உணவு.

எளிய உணவாயினும் தம்மக்களது சிறிய கையால அளாவப்படுமாயின், அஃது உயர்ந்த தேவர் உணவினும் சிறந்த சுவையினையுடையதாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சசிலைபால் உணரப்படும்.

கதை.

குசேலர் மனைவியாகிய சசிலை தான் ஆக்கிய கூழைக் கணவனுக்கும் மக்களுக்கும் கனிந்து ஊட்டுவாள். அதன்பின்பே தான் உண்பாள். ஊட்டி எஞ்சிய கூழைத் தான் உண்ணும்பொழுது தனது இளங் குழவிகள் புழுதி தோய்ந்த மெய்யுடன் வந்து புகுந்து அக்கூழைத் தங்கையால நொய்ய அளையும். தம்மக்கள் சிறுகையளாவிய அக் கூழையும் பண்டிய சுவையுடன் சசிலை ண்டு மகிழ்ந்தாள். இதனை அவர் சரிதத்தில் உணர்க.

பொன்னுடைய ரேனும புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லாத வர். (நளவெண்பா.)



மகவளைந்த வுணவே மிகவுயர்ந்த சுவையாம் என்பது இதனால் கூறப்பட்டது.



65 தேடுபுகழ்ச் சம்பந்தர் செம்மொழிகேட் டேன்மகிழ்ந்தார்
கூடியின்பார் தந்தை குமரேசா—ஓடி வந்து
மக்களமெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு. (ரு)

இ—ள்

குமரேசா! சம்பந்தரைச் சுமந்து மகிழ்ந்த தந்தை ஏன் அவர் சொல்லையும் கேட்டு மகிழ்ந்தார் எனின், ஒருவனமெய்க்கு மக்கள் மெய்யைத் தீண்டுதலும், செவிக்கு அவர் சொல்லைக் கேட்டலும் இன்பமாம் என்க.

செம்மொழி—செம்பொருள் கண்டமொழி.

வாய்க்கு இன்பம் மேலே கூறினர். இதில் செவிக்கும் மெய்க்கும் சேர்த்துக் கூறினர்.

பரிசஇன்பத்தின் அருமை கருதி அதனை முன்வைத்தார்.

மக்களைத் தழுவியும் அவர்தம் மழலை மொழிகளைக் கேட்டும் பெற்றோர் மகிழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவபாத இருதயர்பால் உணரப்படும்.

சிவபாத இருதயர் என்பவர் சோழமண்டலத்திலே சீர்காழி என்னும் திருநகரிலே அந்தணர் வருணத்திலே, கௌணியர் கோத்திரத்திலே பிறந்தவர். நல்லசீலமுள்ளவர். பகவதியார் என்னும் மனைவியோடு கூடி இவர் இல்வறம் புரிந்துவந்தார். வருங்கால், பரமன் அருளால் இவரொரு புதல்வனைப் பெற்றார். பெருமகிழ்வுற்றார். இவர் அந்நகரிலுள்ள சிவாலயத்துட் சென்று பிரதினமும் தரிசனஞ்செய்வார். செல்லுங்கால், தளர்நடையிட்டுத்



தத்தி நடக்கும் தமது அருமைத் திருமகனையும் தழுவித் தோளின்மேலேற்றிச் சுமந்து செல்வர். மக்களைத்தீண்டி மகிழும் மெய்யின்பத்தையே யிவர் மெய்யின்பமாக மதித்தார். ஆலயத்தருகிலுள்ள

நீர் நிலையை ஒருநாள் அணுகினர். பிள்ளையை வெளியே வைத்து விட்டுத் தான் உள்ளே புகுந்தார். நீருள் மூழ்கினர். அவ்வமயம் பிள்ளையார் தமது தந்தையைக் காணாமையால அம்மா! அப்பா! என்று அழுதார். உடனே அனைத்துயிர்க்கும் அம்மையும் அப்பனுமாகிய உமையும் பரமனும் தோன்றினர். தேவி ஒரு பொற் கிண்ணத்தில் பாலைக் கறந்து பிள்ளைக்குக் கொடுத்தார். பிள்ளையாரும் கொண்டார். வள்ளத்தை வாயில்வைத்துக் குடித்தார். வள்ளம் மறைந்தது. பாலொழுகிய வாயோடு மகிழ்ந்தவர்க்கு மகனை நேரடி வந்த தந்தை கண்டார் யார் தந்த பாலைப்பருகினாய் என்று தமது அருமை மகனை அதட்டினர். பிள்ளையாரும கையை மேலே தூக்கி இதோ இவர் தந்தார் என்று சுட்டிக் காட்டினர்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர் கள்வன
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந்தேத்த அருளசெய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மான இவனன்றே

என்று மழலை மொழியோடு இதனை மிழற்றினர் தந்தையார் கேட்டார். கேட்டபடியே கண்டார். களிபெருவகைகொண்டார். மகனது அழகு நிரம்பிய மென்மையான அருமைத் திருமேனியைத் தீண்டியும், சுவை நிரம்பிய இனிமையான மழலைச் சொற்களைக் கேட்டும் இவர் பேரின்பமுற்றார். சிவஞானத்தோடு சம்பந்தம் உற்றமையால் பிள்ளையாரும திருஞான சம்பந்தர் என்னும் ஒரு பெருநாமம் பெற்றார். இதன் விரிவு பெரியபுராணத்தில உணரப்படும்.

சேறளைந்தமென் சிறடித் தளிரொடு திம்பாற்
சோறளைந்தகைத் தாமரை யோடுசெங் குனிர்வாய்ச்
சாறுநீர்கனை மார்பினொ டிளமகா ருக்தி
பேறுமின்பமுன் னதனையே உடம்பென இசைப்பார்.

7-ம் அதிகாரம் மக்கட்பேறு. 139

அரிகொள் பொன்புனை கிண்கிணி தண்டைபோடணிந்த

தருணமென் றளிர்ச் சிறடித் தளர்நடைச் சிறுவர்
மருவறுதசெவ் வாம்பல்வாய் மழலையாரமுதம்
பருகிலாச்செவி பாவையின் செவியெனப் படுமால்.
(சிகாளத்திப்புராணம்.)

ஒருவன் உடற்குஞ் செவிக்கும் உண்மையான இன்பம் இஃ தென இதனால் உணர்த்தப்பட்டது.

66 மன்முடி நின்மழலை வாசகமேன் கேட்டுவந்தார்
கொன்றைமுடி சாய்த்தும் குமரேசா—என்றும்
குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளாதவர். (சு)

இ—ள்

குமரேசா! கொன்றைமுடி சாய்த்தும் நின் மழலை வாசகத்தை மன்முடி ஏன் கேட்டு மகிழ்ந்தார் எனின், குழலிசையினும் யாழ் இசையினும் தம்மக்களுடைய மழலையிசையே யினிது ஆதலால் என்க.

மன்முடி=சிவன். கெஞ்சி என்றுமாம். குழல்=வேய்ங் குழல். இதனையிப்பொழுது புல்லாங்குழல் என வழங்கிவருகின் றனர். யாழ்=வீணை. இவற்றின் இசைகளை முறையே வேணு கானம், வீணாகானம் என்பர் வடநூலார்.

மக்கள் சொற்கேட்டலே செவிக்கு இன்பம் என்று மேலே கூறினர். குழல் இசையும் யாழ் இசையுமே செவிக்கு இன்பம் பயப்பன என்று கூறுவாருஞ்சிலர் உளரால் எனின், அவர் மக்கள் சொற் கேளாதவரேயாவர். கேட்டவராயின் அங்ஙனம் கூறார் என்று அவரை நோக்கி இது கூறினர்.

அறிவில்லாத குழலினும் யாழினும் நின்று எழும் ஓசையினும் அறிவுடைய மகவின் வாயிலிருந்து வரும் மழலையோசையே மிகவும் இன்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது.' இவ்வுண்மை உமாபதிபால உணரப்படும்.

கதை.

தமக்குத் திருமகனாய் அவதரித்த முருகப்பெருமானது மழலைச் சொல்லைக் கேட்டுப் பரமனும் உமையும் பெருமகிழ்வுற்றார் பாலனையிடையே பரிந்து வைத்தார். மழலைமொழியை மாந்தி மகிழ்ந்தார். ஈரோதாது யாழினும் தமது அருமைத் திருமகனது மழலைச் சொல்லிலே தான் பெரிதும் இன்புற்றார்.

ஏலவார்குழல் இறைவிக்கும் எம்பிரான் தனக்கும்
பாலனாகிய குமரவேள் நடுவுறும் பான்மை
ஞாலமேலுறும் இரவொடு பகலுக்கும் நடுவாய்
மாலைபான தோன் றழிவின்றி வைகுமாறொக்கும்.
(கந்தபுராணம்.)

இதனால் மேற்குறித்தவுண்மை புலனாம். இன்னும் பிரமனும் அறியாத ஒருமொழிக்கு முருகப்பெருமான் பொருள் கூறும் பொழுது பரமன் அம்மழலை மொழியைத் தமதுகொன்றை முடி சாய்த்துக் கேட்டமையும் காண்க.

சொன்ன கலையின் துறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தாம் இன்முகத்து—முன்னம்

குழகுதலைக் கிண்கிணிக்காற் சேய்மக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி. (புகழேந்தி.)

குழலினும் யாழினும் மகவின் மழலை மொழியே யினிதென்பது இதனால் கூறப்பட்டது.



7-ம் அதிகாரம் மக்கட்பேறு. 141

67 பாடலிபுரக் கோன்புதல்வர் பல்கலையுந் தேறவன்றோ
கோடிவகை செய்தான் குமரேசா—பீடுடைய
தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். (௮)

குமரேசா! பாடலிபுரத்து வேந்தன் தன்து புதல்வர் கலை பல கற்றுத் தெளியுமாறு ஏன் பலவகையுபாயங்களைச் செய்தான் எனின், அவையின்கண் முந்தியிருக்கும்படி செய்தலே தந்தை மகனுக்குச் செய்யும் நன்றி என்க.

ஆற்றும் நன்றி=செய்யும் உதவி.

அவை=கற்றுவல்ல நல்லோர் கூடிய இடம். அதில் முந்தியிருக்கும பெருமையைக் கல்விநலமுடைய ஒருவனே அடைவான் ஆதலால் அந்நலத்தைத் தன் மகன உடையனுமபடி செய்தலே ஒரு தந்தைக்குக் கடமையாம் என்பது கருத்து.

தமபொருளாகிய தம்மக்கட்கு ஒருவன கல்விப்பொருளையே தருதல்வேண்டுமென்பது குறிப்பு.

பொருள் தொகுத்துத் தருதல் முதலியனவெல்லாம் ஓர்உதவியல்ல என்பதும, கலையுணர்புலமையில் தன்மகனைத் தலைமை யோனுக்குதலே தந்தையின் கடமை என்பதும, இதில் உணர்த்தபபட்டன. இவ்வுண்மை சுதரிசனன்பால் உணரப்படும்,

கதை.

பண்டு இப்பரதகண்டத்தில் பாடலிபுரம் என்றொரு நகரம்
இருந்தது. சுதரிசனன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒரு
வன் அதிலிருந்து அரசுபுரிந்தான். இவன் நீதிநூல பலவும்
ஓதியுணர்ந்தவன். இவனுக்கு எழுபுதலவர்கள் பிறந்தனர். அப்
புதலவர் எழுவரும் செலவத்திற் சிறந்தார். செழிப்புடன் வளர்ந்

தார். கல்வியில் இவர்கட்கு மனஞ் செல்லவில்லை. கல்விபயிலும்
படி தன்மக்கட்குப் பலமுறையும் அரசன் அறிவுறுத்தினன்.
அவர்கள் பயில முயலவில்லை. மனம் போனபடியே திரிந்தார்.
மதியிழந்து மகிழ்ந்தார். அதனால் அரசன் பெருங் கவலைகொண்
டான். எப்படியாவது தன் மக்களைக் கல்வியில் வல்லுநராக்கக்
கருதினன். தனது நாட்டில் சோமசர்மா என்னும் வேதியர்
ஒருவர் இருந்தார். அவர் கல்வியறிவு மிக்கவர். நல்ல சொல் வன்
மையுடையவர். அவரை அரசன் அழைத்துவரும்படி செய்தான்.
அவரும் வந்தார். தன் பிள்ளைகளை எவ்வகையிலாவது கல்வியறி
வுள்ளவர்களாக ஆக்கவேண்டும் என்று அவரிடம் அரசன் வேண்
டினன். அவரும் இசைந்தார் அவர் வேண்டிய எதையும் விரும்
பித் தந்தார். புதல்வர் தகுதியறிந்து அவரும் இதமாகக் கற்பித்
தார். கதைகள் பல கூறினர். அவர்தாமே கல்வியை விரும்பும்
படி செய்தார். அதன்பின் கற்பித்தார். அவரும் பயின்று தெளிந்
தார் புலவர்கள் அவையில் அவர்கள் பலமுறையும் தலைமைபெற்
றிருந்தார். மன்னன் கண்டான். மக்கட்குச் செய்யவேண்டிய
கடமையைச் செய்து முடித்தமையை நினைந்து மன்னன் பெரும
கிழ்வு கொண்டான். இதன் விரிவைப் பஞ்சதந்திரத்தில் உணர்க.

தம் மக்களைக் கல்வியுடைய ராக்குதலே தந்தையர்க்குக்
கடன் என்பது இதனால் கூறப்பட்டது.



68 மண்டு புகழ்ப்பகவன் மக்களறி வாளுலகோர்

கொண்டனரேன் இன்பம் குமரேசா—கண்டமேழ்
தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. (அ)

இ—ள்

குமரேசா! பகவனது மக்களறிவால், உலகோர் ஏன் இன்பம் உற்றார் எனின், தம்மக்களது அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் தம்மினும் இனிதாம் என்க.

7ம் அதிகாரம் மக்கட்பேறு. 148

மகன் அறிவுடையவனாயிருந்தால் அவன் தந்தைக்கு எவ்வளவு மகிழ்வுண்டாகுமோ அதனினும் பெருமகிழ்வை உலகோர் அடைவர் என்பது கருத்து.
"தம்மின் இனிது" என்பதில் ஒப்புப்பொருளும் கருதப்படும்.

இனி, தம்முடைய அறிவினும் தமது மக்களுடைய அறிவு சிறந்தது என்று கேட்கப்படுமாயின் இவ்வுலகத்தில் எல்லார்க்கும் அஃதோர் இன்பமாம், எனவும் இது பொருள்படும்.

கல்வியில் தன்னினும் சிறந்தவன் என்று பிறனொருவனைக் கூறக்கேட்டால் வருந்துகின்ற ஒருவன் அங்ஙனமே தன்மகனை யெடுத்துக் கூறினால் மகிழ்கின்றான்; குறுகிய அறிவுடையவனும் தன்மகனைப் பெருகிய அறிவுடையவனாக ஆக்கிப்பார்க்க விரும்புகின்றான். இவை இரண்டும் மேற்குறித்த மூன்றாவது பொருளை வற்புறுத்துகின்றன.

தன்மக்களுடைய அறிவுடைமையால் உலகமெல்லாம் இன்புறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பகவன் மக்கள்பால் உணரப்படும்.

கதை.

பகவன் என்பவர் பெருஞ்சாகரன் என்னும் ஒரு வேதியன் புதல்வர். நல்ல நீதியொழுக்கங்கள் உள்ளவர். தனது முப்பத்து மூன்றாவது வயதில் காசியாத்திரைக்குச் சென்றார். இடையில் தொண்டைமண்டலத்திலுள்ள மேலூர் அகரம் என்னும் ஒரு நகரத்தில் தங்கினர். இரவில் தனித்திருந்தார். அங்கு ஆதி யென்னும் ஒரு மாது வந்தாள். புலை மகள் என்று கருதியொரு கோலால் அவளைத் தலையில் அடித்தார். அவளும் அகன்றாள். அதன்பின் இவர் காசியையடைந்தார். பல வருடங்கள் ஆண்டுத் தங்கி மீண்டும் அந்நகரமே வந்து தங்கினர். முன்போன ஆதியும் மீள வந்தாள். உண்மையில் இவளோர் அந்தணன் மகள். நம்பியென்பவருக்கும், அருணமங்கை யென்பவளுக்கும் புதல்



வியாய்த் தோன்றினள். இவள் தோன்றியபின் தன்னூர் மண்மாரி பாலழியத் தான்மட்டுந் தப்பினள். உறையூர் புகுந்தாள். அங்கோர் பறையன் வீட்டில் ஒதுங்கினள். பின் விதிவசத்தால் நீதியென் என்னும் ஒரு வேதியன் வளர்க்க வளர்ந்தாள். அங்கு நின்றகன்று காடெங்குந் திரிந்தாள். திரியுங்காலத்தில் தான் பகவனைக் கண்டாள். பகவனும் இவளை மிகவும் காதலித்தான். ஆதியும் இசைந்தாள். இருவரும் மணந்தார். ஆதியில் தான் அடித்த அடியின் வடுவை ஆதியின் தலையில் ஒருநாள் பகவன் கண்டான். முன் தன்னால் அடிக்கப்பட்ட புலைமகள் என்று நிலை குலைந்தோடினன். ஆதியுந் தொடர்ந்தாள். பகவனைப் பற்றினள். இருவருந் தம்முள் ஓர் உறுதியைச் செய்தார். கலந்தின்புற்றார். இவர்பால் வழுவில்மக்கள் எழுவர் பிறந்தார். அதிகமான், கபிலர், திருவள்ளுவர் எனப் புதல்வர் மூவரும், உப்பை, ஔவை, உரு

வை, வள்ளியெனப் புதல்வியர் நால்வரும் ஆவர். இவ்விழுமிய குழவிகள் எழுவரையும் பிறந்த இடத்திலேயே விட்டுவிட்டுத் தாம்முன் செய்துகொண்ட உறுதியின்படி ஆதியும் பகவனும் அகன்று சென்றார். செல்லுங்கால் தாய் மட்டும் பிள்ளைகளைப் பிரியவாற்றாது மறுகி நின்றாள். அவ்வமயம் திருவருளால் இக்குழவிகள் எழும் தம்மலர்வாய் திறந்து மழலை மொழியால் தமது தாயைத் தேற்றியனுப்பின.

இட்டமுடன் என்தலையில் இன்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும பாரமவ னுக்கன்றோ
ம பஞ்சா திரு. (ஔவை)

கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்—உருப்பெற்றால்
ஊட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்றுதேன்
வாட்டம் உனக்கேன் மொழி. (அதிகமான்)



அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்கும்
சித்த மகிழ்ந்தளிக்கும் தேசிகன்—முத்தமிழை
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
அற்பனோ அன்னா யவன். (உப்பை)

சண்டப்பைக் குள்ளுயிர்தன் தாயருந்தத் தானருந்தும்
அண்டத் துயிர்பிழைப்ப தாச்சரியம்—மண்டி
பலின்ற அன்றுப் அரனுடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில். (உறுவை)
அன்னை வயிற்றில அருத்தி வளர்த்தவன்றான்

இன்னும் வளர்க்கானோ என்றாயே—மின்னரவஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டில் நின்றவினை
பாடும் பெருமான் அவன். (வன்னி)
கண்ணுழையாக் காட்டில் கருங்கற் றவளைக்கும்
உண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணும்
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
நமக்குத் தொழிலென்ன தான் (கபிலர்)
எவ்வுயிருங் காக்கவொரு ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் யானொருவன் அல்லனோ—வவ்வி
அருகுவது கொண்டிங் கலைகுவதேன் அன்னப்
வருகுவது தானே வரும் (வள்ளுவர்)

இத்தெய்வ மக்களின் அறிவுடைமையால், இந்நிலவுலகம் உயர்நலமுற்றது. இவரைப் பெற்றவர் தம்மினும் மற்றவரே இவரால் பேரின்பம் உற்றனர். இவருள் நமது வள்ளுவத் தெய்வத்தின் மதிநலம் இம்மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் பெரிதும் இனிதாம் பெருமையுள்ளது. இவ்வுண்மை சங்கத்தார் பால் நன்கு காணப்படும்.



சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த இருவினைக்கும் மாமருந்து—முந்திய
நன்னெறி யாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா.

இதுபோன்ற பல பாக்களால் நமது தேவர் அறிவுடைமையை உவந்து வியந்து சங்கத்தார் சாற்றியுள்ளார். ஆண்டுக்காண்க.

ஒருவன் அறிவுடைய மக்களைப் பெறுவனாயின் அவரால் உலகமுழுதும் இன்பமடையும் என்பது இதனால் கூறப்பட்டது.

69 உற்றடைந்தார் சீவகன்சீர் ஓதவுவந் தாளென்னே
கொற்ற விசயை குமரேசா—முற்றியே
ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (க)

இ—ள்.

குமரேசா! தன்னை வந்து கண்டவர்கள் சீவகன் பெருமையைச் சொன்னவுடனே ஏன் விசயை பெரு மகிழ்வடைந்தாள் எனின், தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டதாய், ஈன்றபொழுதினும் பெரிது மகிழும் என்க.

பெற்றகாலத்தில் அடைந்த மகிழ்ச்சியைவிடத் தன்மகனை நல்லவன் என்று பிறர் சொல்லக் கேட்ட காலத்தில் தாய் பெரு மகிழ்வை அடைவாள் என்பதாம்.

மகன் என்று பொதுவகையாகக் கண்ட பொழுது உண்டான இன்பத்தினும் அவன் குணமுடையன் என்று கேட்டபொழுது உளதாம் இன்பம் அவனைப் பெற்றவட்குப் பெரிதாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசயைபால் உணரப்படும்.



கதை.

விசயை என்பவள் தத்தன் என்னும் பெயரினையுடைய விதைய தேசத்து வேந்தன் மகள். சிறந்த வுருவமும், நிறைந்த அழகும் ஒருங்குவாய்ந்தவள். ஏமாங்கத நாட்டு அதிபதியாகிய சச்சந்தன் என்னும் அரசனுக்கு இவள் மணமகளானாள். இவள

து அன்பமைந்த இன்பத்தை அரசன் நன்கமைந்து துய்த்தான். காதற்சுவையைக் கனிந்து மாந்தினான். அவ் இன்ப வெள்ளத்தில் இவன் ஆழ்ந்து தாழ்ந்திருந்தான். அதனால் இவனது அரசுரிமையை அமைச்சன் ஒருவன் தனக்கு உரிமையாக்கிக் கொள்ள எண்ணினான். படையைத் திரட்டினான் இரவில் வந்தான். அரண்மனையை வளைந்தான். சச்சந்தன் விழித்தான். உற்றதை யுணர்ந்தான். சினந்தான். எழுந்தான். அவ்வமையம் தனது மனைவி நிறைந்த கருப்பம் உடையவளாயிருந்தாள். அதனை நினைந்து நினைந்து அரசன் வருந்தினான். முடிவில் துணிந்தான். அற்புதமான மயிற்பொறியொன்றில் விசயையை யேற்றி வெளியே விட்டான். அவளும் மறுகினாள். பகைவரைப் பொருது கணவன் வென்றுவிடுவான் என்று தேறினாள். அதனால் பொறிமேல் இருந்தாள். நெறியே நோக்கினாள். மயிற்பொறியை வலக்காததாற் சுழற்றி வான்வழி போனான். பகைவரும் நெருக்கினர். போரும் நடந்தது. அதில் சச்சந்தன் பட்டான். மண்ணில் நிகழ்ந்த வெற்றித்தொனியை விண்ணில் போன விசயை கேட்டாள். ஏங்கி மயங்கினாள். அதனால் பொறியோடு ஒருபுறங் காட்டில்விழுந்தாள். திருவருளால் பிழைத்தாள். அன்றே கருவுயிர்த்தாள். ஒளி நிறைந்த மேனியுள்ள ஒரு புதல்வன் தோன்றினான். மகனது அருமையையும் தனக்குற்ற சிறுமையையும், எண்ணி யெண்ணி ஏங்கினாள். ஒரு வனதேவதை வந்துவிசயையைத் தேற்றி அக்குழவிக்குச் சீவகனென்று பெயரிட்டது. தன்மகனை அவ்வனதேவதையிடம் தந்து தாயும் வருந்தித் தவவனஞ் சார்ந்தாள். இவ்வுலகியலை வெறுத்தாள். உயர்தவஞ்செய்தாள். இவ்வகையில் இருபத்தொரு வருடங்கள் கழிந்தன. மகனும் வளர்ந்தான். துயர்கள்பல





வுங் கடந்து உயர்நலமுற்றான். கலைபல தெளிந்தான். அழகு வீரம், ஆண்மை முதலியவற்றால் மேன்மையுற்றான் தனது பெற்

ளோர்க்கும் தனக்கும் உற்றதை முற்றவும் உணர்ந்தான். இழந்த அரசைப் பெறுதற்கு எண்ணினன். பதுமுகன் முதலிய தோழ ரர் பலரையுஞ் சேர்த்தான் அரசிளஞ்சிங்கம்போல் விளங்கினன். பல தேயங்களுக்குஞ் சென்றான். இவனது சால்புடைமையைக் கண்டு மேலோர் புகழ்ந்தார். இங்ஙனம் இவன் சிறந்து விளக்குந் தன்மையை வனத்திலிருந்து தவஞ்செய்யும் விசயையிடஞ் சிலர் சென்று சொல்லினர். அதைக் கேட்டவுடனே பெரிதும உவந் தாள். அவ்வுவகைப் பெருக்கில் இவள் மிகவுந் தோய்ந்தாள். மக னையும் பின்பு தகவுடன் கண்டாள். மார்போடணைத்துப் பேருவ கை பூத்தாள். மகனும் பகைவரை வென்று அரசினைப்பெற்றான்.

(இதன் விரிவைச் சீவக சிந்தாமணியிற் காண்க.)

பொற்பதியில் லாதபல புத்திரரைப பெற்றதிலோர்
கற்புநல்ல னைப்பெறுதல் நன்றாமே—பொற்கொடியே
பன்றிபல குட்டி பயந்ததினால் ஏதுபயன்
ஒன்றமையா தோகரிக்கன் றேது. (நீதிவெண்பா)

தன் மகன் சால்புடையனால் தாய் பேருவகை கூர்வள் என்பது இதனால் கூறப்பட்டது.



70 நல்லஇரா மன்புரிந்தான் நற்றுதை பென்னேற்றான்
சொல்லெனுஞ்சொல் என்னே குமரேசா—செல்ல
மகன்தந்தைக் காற்றும் உதவி யிவன்தந்தை
யென்னோற்றான் கொல்லென்னுஞ் சொல். (எ)

இ—ள்

குமரேசா! இவனைப் பெறுதற்கு இவன் தந்தை யென்ன தவஞ் செய்தானோ, என்று சொல்லும்படி ஏன் இராமன் செய்



தான் எனின், இவன் தந்தை என் நோற்றான் கொல் என்னுஞ் சொல்லே உண்டாக்குதலே மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி என்க.

ஆற்றும் உதவி—செய்யும் கைமாறு.
என்நோற்றான் கொல்—என்ன தவஞ் செய்தானோ.

தவத்தின் அளவு தெரியாமல் தமக்குள்ளே வினவுகின்ற படியால், கொல் என்னும் இடைச்சொல் ஈண்டு ஐயத்தைக்குறித்தது. வியப்பையும் உணர்த்தும்.

நெறி வழுவாத அறிவுடைய புதல்வனைக்கண்டால் உலகோர் மகிழ்வர் அங்ஙனம் மகிழுங்கால இந் நன்மகனைப் பெறுதற்கு இவன் தந்தை முன்னம் என்ன தவஞ்செய்தானோ? என்று நினைந்து வியந்து புகழ்வர். இப் புகழ்மொழி பெற்றோனுக்குப் பெரு மகிழ்வையூட்டும். ஆதலால் அம் மகிழ்வையே மகன் தந்தைக்கு உண்டுபண்ண வேண்டுமென்பது கருத்து.

தளர்ந்தழி உணவுமுதலியன தந்து ஆதரித்தல் உபசரித்தல் முதலியனவெல்லாம ஓர் உதவியல்ல என்பது குறிப்பு.

பெற்றோர்க்கு என்னாது தந்தைக்கு என்றார் தன்மை கருதி.

நல்ல அறிவுடையனுக்கிய தந்தைககு ஒரு மகன் செய்ய வேண்டிய வுதவியாவது, தான் ஒழுக்கமுடையனாய் நின்று உயர்த லேயாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால உணரப்படும்.

கதை.

இற்றைக்குப் பல்லாயிர வருடங்கட்கு முன்னர் திருவயோத்தியில் இருந்த தசரதனுக்கும், கோசலைக்கும் புதல்வனாக இராமன் என ஒருவர் அவதரித்தார். இவர் சிறந்த பேர்வீரர், உயர்ந்த அருளுடையவர். தந்தை சொற் கடவாதவர், பேராண்மையு



டையவர், அறிவும், ஒழுக்கமும், அழகும் நிறைந்தவர், தன்னைச்சொல் மிக்க மாதிரியில்லை யென்ற சிந்தையுடையவர். இவரது குணம், செயல், அழகு முதலியவற்றைக் கண்டு உலகம் ரமித்தது. அதனால் இவரை இராமன் என்றார்; இராமன் என்ற சொல்லுக்கு ரமிக்கச்செய்பவன் என்பது பொருள். ரமிக்கச்செய்தல் = இன்புறச் செய்தல். இத்திருமகனது அறிவொழுக்கங்களைக் கண்டார் அனைவரும் இவரைப் பெற்றோரது தவத்தைப் புகழ்ந்து போற்றினர். "என்ன நோன்பு நோற்றாள் கொல் இவனைப் பெற்ற வயிறுடையாள், என்னும் வார்த்தை எய்துவித்த இருடிகேசா" என்று இராமனைக் குறித்துப் பெரியார் அருளியுள்ள திருமொழியாலும் இவ்வுண்மை தெளியப்படும்.

மக்கட்பேற்றால் பெருமையடைந்தவர்களுக்குள்ளே தசரதன் ஒருவரே உயர்ந்தவரானார். அவருக்கு உயர்வாகவும், ஒப்பாகவும் ஒருவரும் இல்லை.

மகன் தந்தைக்கு ஆற்றும் உதவியில் இராமர் ஒருவரே எவரினும் சிறந்தார். இதன் விரிவை அவர் சரிதத்தில் உணர்க.

உந்துநீர்க்கடல் உடுத்தபார் முழுவது மொருங்கே
வந்துதாள்தொழும் அரசியல் வளமெலாம் பெறினும்
இந்திராதியர் பெரும்பதத் திருக்கை எய்திடினும்
மைந்த ரின்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே.

தொக்கிளை மலர்துதை யிலாத சோலையும்
புக்கிளை தாமரை நகாத பொய்கையும்
மிக்கிளம பிறைவிசும் பிலாத அந்தியும்
மக்களை யிலாதவோர் மனையும் ஒக்குமே. (சூளாமணி)

மகன் தந்தைக்குச் செய்யும் உதவியின் இயல்பு இதனால் உணர்த்தப்பட்டது.

## 8-ம் அதிகாரம் அன்புடைமை. 131

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

இவ்வுலகில் ஒருவன் பெறத்தக்க பேறுகளுள் மக்கட்பேறே சிறந்தது; அதனால் அவன் குலமுழுதும் நலம் அடையும். தம் மக்களே ஒருவனுக்கு உண்மையான உயர்பொருள். அவர்கள் சிறுகைபளாவிய கூழ் அமிழ்தினும் இனிதாம். அவர்கள் தொட்டால் மெய்க்கு இன்பமாம். சொற்கேட்டால் செவிக்கு இன்பமாம். குழலினும் யாழினும் அவர்தம் மழலைமொழியே பெரிதும் இனிதாம். மக்களைக் கல்வியுடையவராக்குதலே தந்தைக்குக் கடன். அறிவுடைய மக்களால் அனைவரும் இன்புறுவர். தன் மகன் சால்புடையன் ஆனால் தாய் பெருவுவகை கூர்வள். ஒரு மைந்தன் தன் தந்தைக்குச் செய்யும் உதவியாவது, தான் அறிவும் ஒழுக்கமும் உடையனாய் ஒழுகுதலேயாம்.

7-வது மக்கட்பேறு முற்றிற்று.



## அ-ம் அதிகாரம் அன்புடைமை.

அஃதாவது தனது மனைவி புதல்வர் முதலிய தொடர்புடையாரிடத்தில் ஒருவனுக்கு இயல்பாகவே தோன்றும் விருப்ப முடைமை. இதனை மிகுதியாக வுடையவனே இல்வாழ்க்கைக்குத் தகுதியானவன், ஆதலால் இஃது ஈண்டு வைக்கப்பட்டது.

அதிகார அமைவும் இதனானே புலனாம்.



71 கண்டழுதார் கண்ணப்பர் காய்கதிரோன் சேயுமேன்
கொண்டழுதான் முன்னம் குமரேசா—உண்டான
அன்பிற்கும் உண்டோ 'அடைக்குந்தாழ் ஆர்வலர்
'புன்கணீர் 'பூசல்' தரும். (4)



இ—ள்.

குமரேசா! சிவலிங்கத்தின் தனிமையைக்கண்டு கண்ணப்பரும், வாலியின் உதிரத்தைக் கண்டு கதிரோன் சேயும் ஏன் அழுதார் எனின், அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ, ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும் என்க.

கதிரோன்சேய்=சுக்கிரீவன்.

தாழ்=கதவினை நிலையுடன் பிணிக்கும் ஒருவகைக் கருவி. இஃது ஆகுபெயராய்க் கதவையுங் குறிக்கும். ஓகாரம் எதிர் மறை. பூசல் என்பது பொருதல், ஒலித்தல், என்பனவற்றை விளக்கும் ஒரு சொல். அது வெளிப்படுத்தல் என்பதை ஈண்டு விளக்கி நின்றது

ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்=அன்புடையாரது கண்ணின் புல்லிய நீரே உள்ளிருக்கும் அன்பினை வெளிப்படுத்தும்.

இன் கண்ணீரை விலக்குதற்குப் புன் கண் நீர் என்றார். முன்னது இன்பத்தால் உண்டாம். பின்னது துன்பத்தால் தோன்றும். பிறர் துன்பமுறக் கண்டால் அன்பரது கண்ணில் நீர் வரும் என்பது குறிப்பு.

அன்பு கருத்துப் பொருள் ஆதலால் அஃது அனுமானம் ஒன்றானே அறியப்படும். கம்பரும், "அன்பென்பது ஒன்றின் தன்மை அமரரும் அறிதல் தேற்றார்" என்றார்.

காட்சியால் அன்பைக் காணமுடியாது என்பதும், அதனையுடையாரது செயலிலிருந்தே அதன் உண்மை கருதப்படும் என்பதும், அதனை மறைத்து வைக்க இயலாது என்பதும், ஒருவன் உள்ளத்தில் அடங்கியிருக்கும் அன்பை அவன் கண் பொழியும் வெள்ளமே காட்டிவிடும் என்பதும், இதில் காட்டப்பட்டன. இவ்வுண்மை கண்ணப்பர் கண்ணும், சுக்கிரீவன்பாலும் காணப்படும்.



## கதை 1.

காளத்தி மலைமேலிருந்த சிவலிங்கமாகிய தனியுருவைக் கண்டவுடனே அகமுருகி அதன் தனிமைக்கு இரங்கி அழுதமையாலும், கண்ணையெடுத்து அப்பிய தன்மையாலும், கண்ணப்பரது அன்புண்மை காணப்பட்டது.

“கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்” என்று மணிவாசகப் பெருந்தகையும் இவரை நினைந்து வியந்து இரங்கியுள்ளார். இதனாலே அன்பின்பேரெல்லையில் இவர் தனி நின்று நிலவுகின்றமை தெளியப்படும்.

## கதை 2

சுக்கிரீவன் என்பவன் வானரகுல திலகனாகிய வாலியின் தம்பி, நல்ல போர்வீரன். தனது முன்னவனுடன் கிட்கிந்தையென்னும் நகரில் இருந்தான். வாலி சிறந்த வரபலங்களையுடையவன். இவன் அரசுபுரிந்து வருங்காலத்தில் ஓர் ஏதுவால் தம்பியை நம்பவில்லை. மாறாக மதித்தான். இவனும் பயந்து வணங்கினான். நயந்து மொழிந்தான். வாலி கேட்காமல் இவனை வைது சினந்தான். கொல்ல நினைந்தான். தம்பி மெல்லத் தப்பினான். மதங்க மலையில் புகுந்தான். மறைந்திருந்தான். அநுமார் முதலிய அறிஞர் பலரும் இவனுடன் உறைந்திருந்தனர். இவர் இவ்வனம் இருப்ப, இராமரும், இலக்குவரும் அங்கு வந்தார். அநுமானால் இராமர் நட்பைச் சுக்கிரீவன் பெற்றான். அதன்பின் இராமரைக்கொண்டே தன் தமையனைக் கொல்லக் கருதினான். அவரும் இசைந்தார். கிட்கிந்தைக்குச் சென்றார். சுக்கிரீவன் போர்க்கு அறைகூவினான். வாலி வந்தான். இருவரும் சினந்தார் ஒருவரையொருவர் பிடித்தார். உடனறு பொருதார் தம்பி தளர்ந்தான். அவ்வமையம் இராமர் வாலிமேல் ஓர் அம்பை எய்தனர். அது மார்பில்பட்டது. படவும் வாலி பதைத்து வீழ்ந்தான். உருண்டான். உயிரம்பெருகியோடியது. அதனைச் சுக்கிரீவன் கண்டான். செற்றமும் பகையும் முற்றவும் மறந்தான். அழுது சோர்ந்து தரையிடை வீழ்ந்தான்.

§ 154 திருக்குறட் குமரேச வெண்பா.

வாசத்தாரவன் மார்பெனும் மகிழ்வுமங்கருதி
வேசைச் சோரியைக் கண்டனன் உடன்பிறப்பென்னும்
பாசத்தால்பிணிப் புண்டவத் தம்பியும் பகைக்கண
நேசத்தாரைகள் சொரிதர நெடுநிலஞ் சேர்ந்தான்.

(இராமாயணம் வாலிவதைப் படலம்.)

இதன் விரிவை அவர் சரிதத்திலுணர்க. அன்பின் நசையும் அதனை அறியும் வகையும் இதனால் கூறப்பட்டன



72 மோனத் ததீசி முதுகெலும்பை வானவர்தங்
கோனுக்கே தந்தான் குமரேசா—ஞானமுறும்
அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. (உ)

இ—ள்

குமரேசா! ததீசி முனிவர் தமது முதுகு எலும்பை என் இந்திரனுக்குத் தந்தார் எனின், அன்புடையார் என்பினையும் பிறர்க்கு உதவுவதற்கு உரியராவர் என்க.

புறப்பொருள்கள் எல்லாம் உடையராயினும் அகப்பொருளாகிய அன்புஇல்லாதவர் பிறர்க்கு ஒன்றும் உதவார் என்பது கருதி "அன்பு இலார் எல்லாம் தமக்கு உரியர்" என்றார்.

ஒன்றும் இலராயினும் அன்புடையவர் தமது உடம்பையே அறுத்துப் பிறர்க்கு உதவிபுரிவர் என்பதும், எல்லாம் உடையராயினும் அன்பு இல்லாதவர் யாதும் உதவார் என்பதும், கூறியபடி.

பிறர் துன்புற அன்புடையார் சகியார் என்று மேலே கூறினார், இதில் பிறர்பொருட்டு அவர் தமது உடம்பையும், உயிரையும் உதவுவர் என்றார்.

(இவ்வுண்மை ததீசி முனிவர்பால் [illegible].)



ததீசி என்பவர் அதர்வா என்னும் ஒரு முனிவர் புதல்வர். இவரது தாயின் பெயர் சாந்தினி. இவர் ஐயமகன்ற மெய்யுணர்வுடையவர். அன்பும், தவமும், அமைதியும் வாய்ந்தவர். தண்ணளி ததும்பிய புண்ணியவுருவினர். சுரரும் அசுரரும் பாற்கடல் கடைந்த காலத்தில் அவர்தம் படைக்கலங்களை இவரிடம் அடைக்கலமாகக் கொடுத்திருந்தார். அவற்றை இவர் நெடுநாள் வைத்தி

ருந்தார். அவர் வாவில்லை தமது தவமகிமையால் விழுங்கினர். அவை உள்ளே புகுந்தன. எல்லாம் ஒன்றாய் இணைந்து திரண்டது. முதுகெலும்புடன் சேர்ந்தது திண்ணிதாய் நின்றது. இவ்வுண்மையை உணர்ந்த இந்திரன் இவரிடம் வந்தான். முனிவர் உபசரித்தார் வந்ததை வினவினர். தனது கைக்குலிசம் தேய்ந்து வலியிழந்திருப்பதால் அசுரரை வெல்ல முடியவில்லை என்று இந்திரன் இசைத்தான். இருளுடல் அவுணரைத் தேய்த்து எமர் குடியெல்லாம் புரப்பதோர் கொள்கைத்தாய படைக்கலம் அடிகள் பால் அமைந்துள்ளது என்பதையும் உணர்த்தினன். முனிவர் உணர்ந்தார்.

"நாய்கம தெனநரி நமதெனப் பிதா
தாய்கம தெனநமன் தனதெனப் பிணி
பேய்கம தெனமனம் மதிக்குற பெற்றிபோல்
ஆய்கம தெனப்படும் யாக்கை யாரதே.
நடுத்தயா விலர்தமை நலியத் துன்பகோய்
அடுத்தயா வருக்கிரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா அறம்புகழ் கொள்பவே யெனில
எடுத்தயாக் கையின்பயன் இகலியா யாவதே."

என்றார். இன்புற்றார். அன்பால் எ டை அவனுக்கேயத் தன் இன்னுயிரை முன்னே விடுத்தார் அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு என்பதை இவர் நன்று காட்டினர் அன்பின் இயல்பை





அனைவரும் கண்டார். இன்புடன் என்பை இந்திரன் கொண்டான் குலிசம் ஆக்கி அசுரரை வென்றான்.

இதன் விரிவு தீர்த்தகிரி புராணத்தில் உணரப்படும்.

அன்புடையார் உடம்பாலும் பிறர்க்கு உதவிபுரிவர் என்பது

இதனால் உணர்த்தப்பட்டது.



73 ஆனிரைபால் அன்பால் அருந்தவனேன் மூலனெனுங்
கோனுடம்பைக் கொண்டான் குமரேசா—ஆனதினால்
அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

இ—ள்

குமரேசா! ஆன் நிரைபால் அன்பால் மூலன் என்னும் கோன் உடம்பை ஏன் அருந்தவன் கொண்டான் எனின், ஆர் உயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு, அன்போடு இயைந்த வழக்காம் என்க.

ஈண்டு என்பு என்றது உடம்பினை. ஆன் நிரை=பசுக்கூட்டம்.

ஆர் உயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு=அரிய உயிர்க்கு உடம்போடு உண்டான கட்பு.

அன்போடு இயைந்த வழக்கு=அன்போடு பொருந்துதற்கு வந்த வழியின் பயன்.

உயிர் உடம்போடு கூடிய து பிறர்க்கு அன்பு செய்யும் பொருட்டேயாம் என்பது கருத்து. அன்பை உடையவனே மக்கட் பிறப்பின் மாண்பை அடைந்தவன் என்பதும், அஃதில்லாதவன் உருவத்தால் மனிதனாயினும் அவன் பிறப்பால் பயன் இல்லை என்பதும் கூறியபடி.

தனித்து நிற்கும் தன்மையில்லாத நெருப்பு விறகு முதலிய வற்றைப் பற்றி நின்ற பின்னரே உணவு முதலியவற்றைச் செய்ய உதவியாம். அதுபோல் அருவமாய உயிரும் உருவமாய மனித உடம்பைக் கூடிய பின்னரே அன்பு செய்ய ஏதுவாம் என்பது குறிப்பு.

இனி, "ஆர் உயிர்க்கு இப்பிறப்பில மக்களுடம்போடு உண்டான தொடர்பு, முற்பிறப்பில் அஃது அன்போடு பொருந்தியதின் பயனேயாம்" எனவும் இது பொருள்படும்.

அறிவுடைய உயிர் அறிவில்லாத உடம்பினையடைந்ததற்குப் பயன், பிறர்க்கு அன்பு செய்தலேயாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருமூலர்பால் உணரப்படும்.

## கதை.

திருமூலர் என்பவர் ஒரு சிவயோகி. நந்திதேவரது மரபில் வந்தவர் அகத்திய முனிவரைக் கண்டு மகிழ வேண்டுமென்று இவர் காதல் கொண்டார் அதனால் தென்திசை நோக்கி நடந்தார். காவேரி நதியைக் கடந்தார். அதன் தென் கரையருகில் நன்கு அமைந்துள்ள ஒரு காட்டில் புகுந்தார். அங்கு மூலன் என்னும் ஓர் இடையன் பல பசுக்களை மேய்த்துவந்தான். விதிவசத்தால் அன்று இறந்தான அவன் உடம்பைச் சூழ்ந்துகொண்டு பசுக்கள்பல கலங்கிநின்றன கண்ணீர் ததும்பிநிற்கும் பசுக்களை முனிவர் கண்டார். அன்புகொண்டார். பொதிகைக்குச் செல்லும் மதியினை மறந்தார். எவ்வகையினாலாவது அப்பசுக்களை ஆதரிக்க வேண்டுமென்று கருதினார் தவமகிமையால மூலன் உடம்பில் புகுந்தார். எழுந்தார் பசுக்கள் கண்டன பெருமகிழ்வு கொண்

டன. முனிவர் தமது திரு உடம்பை ஒரு புதரில் மறைத்தார். பொழுதும் மறைந்தது. பசுக்கள் மனை சேர்க்கச் சென்றன. தாமும் பின் சென்றார். அவையெல்லாம தத்தம் இல்லம் அண்டின. மூலர் மட்டும் வெளியே தனித்து நின்றார். உரிய காலத்தில்



தனது கணவன் வாராமையால் மூலன் மனைவி தேடினாள். புதிய மூலரை வந்து கண்டாள். அவரும் மௌனமாக நின்றார். இவளும் நெருங்கினாள். தீண்டாதே என்று மூலர் தடுத்தார். மூலனுக்கு ஏதோ ஒருவகைச் சித்த பேதம் என்று ஊரினுள்ளார் கருதினர். இவ்வகையில் மூலன் அன்பால் பசுக்களை ஆதரித்து வந்தார். சின்னாட்கள் கழிந்த பின்பு தமது அருமைத் திருவுடம்பை மூலர் போய்ப் பார்த்தார். அது மறைந்துவிட்டது. முனிவர் கலங்கினர். அவ்வமையம, “இவ்வுலகம் உய்யும்படி ஓர் அரியநூல் நீ தருதல் வேண்டும்” என்று திருவருளால் ஒரு ஒலி ஒலித்தது. மூலர் கேட்டார். அருளை நினைந்தார். தனியேசென்றார். யோகத்தில் இருந்தார். வருடத்துக்கு ஒன்றாக மூவாயிர வருடங்கள் யோகத்திலிருந்து மூவாயிரம் பாடல்கள் பாடினார். அவை திருமூலர் திருமந்திரம என்று இப்பொழுது வழங்கப்பட்டு வருகின்றன. அன்பு செய்யும் பொருட்டே தமது ஆர் உயிர் மூலன் உடம்பில் புகுந்து விளங்கினமையால் முனிவர் திருமூலர் என்னும் செழும்பெயர் பெற்றார் அன்பின் பயனாகவே உயர்ந்த பிறப்பு எய்தும் எனபதும, அப்பிறப்புககுப் பயன் அன்பு செய்தலேயாம், என்பதும் இவர் சரிதத்தில் தெளியப்பட்டன. இதன் விரிவைப் பெரியபுராணத்தில் உணர்க.

ஒருவன் பிறப்புக்குப் பயன் அன்பு செய்தலேயாம் என்பது இதனால் கூறப்பட்டது.

74 இன்றேட் குகனன்பு செய்தான் இராமனன்பேன்
கொண்டான் அவன்பால் குமரேசா—உண்டாகும்
அன்பினும் ஆர்வ முடைமை யதனினும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. (4)

இ—ள்.

குமரேசா! குகன் அன்பு செய்தான். இராமன் என் அவன்பால் நண்புகொண்டான் எனின், அன்பு ஆர்வமுடைமையை ஈனும். அது நண்பு என்னும் நாடாச் சிறப்பை ஈனும் என்க.



நாடாச் சிறப்பு=மதிக்கமுடியாத சிறப்பு.

அன்பு=மனைவி மக்கள் முதலிய உறவினரிடத்து நிகழும்காதல்.

ஆர்வம்=உறவில்லாத பிறர் இடத்தும் ஒருவனுக்கு உண்டாம் விருப்பம். அன்பின் பெருக்கமே ஆர்வம் என்க.

பேரன்புடையவனுக்கு யாவரும் நண்பர் ஆவர் என்பது குறிப்பு.

பெறுதற்கரிய பெரியாரது நண்பையும் ஒருவன் அன்புடைமையால் பெறுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குகன்பால் உணரப்படும்.

கதை.

குகன் என்பவன் வேடுவர்குலத் தலைவன். இற்றைக்குப் பல்லாயிர வருடங்களுக்கு முன்னர்க் கங்கைநதியின் வடகரை

யில் சிருங்கிபேரம என்னும ஓர் ஊர் இருந்தது. அதில் இவன் விளங்கியிருந்தான. கங்கைத்துறையிற் சென்று மீளுதற்குரிய தோணிகள் எல்லாம இவனுக்குக் காணியாக இருந்தன. மற்போரிலும், விற்போரிலும் இவன் நற்பேர் பெற்றவன். கங்கையின் இரு கரைகளிலும் உள்ள பொருள்களெல்லாம் தனக்கே உரிமையாக உடையவன். சிறந்த வீரமும், நிறைந்த அன்பும் ஒருங்கே வாய்ந்தவன். இராமன் அரசைத்துறந்து மனைவியோடும், இளையவனோடும் வனவாசஞ் செய்துவருங் காலத்தில் ஒருநாள் கங்கைக் கரையின் அருகில் வந்து தங்கியிருந்தார். அவர் வரவை இவன் கேட்டான் உடனே அவரைக் கண்டு மகிழ வேண்டுமென்று காதல் கொண்டான். தன் தகுதிக்கேற்பக் கையுறையாகச் சில பொருள்களை யெடுத்துக்கொண்டு அவர் இருப்பிடம் நோக்கிச் சென்றான். கண்டான். அன்பால் உருகி அவர் அடிமேல் விழுந்தான். எழுந்தான். அவரது சடைமுடியையும், மரவுரியையும்



நெடிது நோக்கினான். உடல் துவண்டு நின்றான். அவர் மனைவி பேரெழில் புல் வத்தனை வினவியோர்ந்தான். அகம் குழைந்தான். அழுதான். தனது பொருள் முழுவதையும் உரிமையாகப் பெற்றுத் தன் நகரில் இருந்து அவர் இனிதாக வாழவேண்டும் என்று அடியிணை முடிபடத் தொழுது வேண்டினான் இவனது அன்பின் பெருக்கை இராமர் தன் தம்பிக்கும் மனைவிக்கும் காட்டினார் வியந்தார் பின் குகனைத் தேற்றி இராமர் வனம் புகத் துணிந்தார். அன்புடைக் குகனும் அவர்பின்செல்லவிழைந்தான். குகனது ஆர்வத்தை இராமர் தெளிந்தார் அவனைத்தழுவினர். பெருநண்புகொண்டார். ''நான் உன் உடன் பிறந்தவன். என் தம்பி உன் தம்பி. எனது மனைவி உனது கொழுந்தி. அயோத்தியிலுள்ள நமது சுற்றத்தைப் பரதன் ஆதரிக்கின்றான். இங்குள்ள நமது கிளையை நீ இருந்து காக்கவேண்டும, நான் வனவாசம் செய்து

மீண்டு வருங்காலத்தில் இங்குவருவேன். என்னுருயிர்த் துணையே! நில" என்று இதவுரை பலகூறி நிறுத்தினர். குகனும ஆணை கடக்க அஞ்சி நின்றான். தனது பெருகிய அன்பால் இராமனது உயரிய கண்பைப் பெற்றான். இதன் விரிவை இராமாயணத்தில் உணர்க.

அன்புடையவர்க்கு யாவரும் கண்பாவர் என்பது இதனால் அறியப்பட்டது.

75 தேடுகின்ற இன்புற்றம சேரமான் என்சிறப்புங்
கூடஎய்தி நின்றார் குமரேசா—ஈடுகின்ற
அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்தும் சிறப்பு. (5)

8-ம் அதிகாரம் அன்புடைமை. 161

இ—ள்

குமரேசா! இன்பமும சிறப்பும் ஏன் சேரமான்பெருமான் ஒருங்கே எய்தினர் எனின், வையகத்தில் இன்புற்றார் எய்தும் சிறப்பு, அன்புற்று அமர்ந்த வழக்கு ஆம் என்க.

அன்பு உற்று அமர்ந்த வழக்கு = அன்புடையராய் இருந்த நெறியின் பயன்.

சிறப்பு என்றது பேரின்பத்தினை.

இவ்வுலகத்தில இருந்து இன்பங்களை நன்கு துய்த்து, அவ்வுலகத்திலும சென்று சிறப்பினை எய்தும் உரிமை அன்புடைய ஒருவனுக்கே அமையும என்பதாம்

அன்புடையவர் இம்மையினும் மறுமையினும் இன்பம் எய்துவர் என்பது கருத்து.

விரதங்காத்து வருந்தி அடையத்தக்க சிறந்த இன்பத்தை அன்புடையவன் எளிதில் அடைவான் என்பதை இதில் உணர்த்தினர். இவ்வுண்மையைச் சேரமான் பெருமான்பால் உணரலாம்.

கதை.

சேரமான் பெருமான் என்பவர் சேரநாட்டிலே மகோதை என்னும் நகரிலே சேர அரசர் மரபிலே செங்கோற் பொறையன் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றினர். சிறந்த செல்வத்திற் பிறந்த இவர் நிறைந்த அறிவோடு வளர்ந்தார். பருவமுற்றார். திருவஞ்சைக்களம் என்னும் திருத்தலத்திற்குச் சென்றார். அங்குத் தங்கினர். அன்புற்றமர்ந்தார். அதன்பின் இவர் அரசரானார். எனினும் அனைவருக்கும் அன்புடையராய் அறநெறி நின்றார்.



உலக இன்பங்களை உவந்து நுகர்ந்தார். எல்லாவுயிர்க்கும் இதமே செய்தார். ஒருநாள் இவர் குடைநிழலிருந்து குஞ்சரம் ஊர்ந்து நகர்வலம் வந்தார். வருங்கால் வண்ணான் ஒருவன் உவர்மண் தோய்ந்த மெய்யுடன் இவரெதிரே வந்தான். பார்த்தார். நீறு தோய்ந்த மெய்யினையுடைய சிவனடியார் என்று அவனையிவர் கருதினர். தமது அரச மாண்பையும் மறந்து அவனடியினை விழுந்தார். அவன் நடுநடுங்கினான். இவர் பின் உண்மையையுணர்ந்தார். இந்த அவசரகாலத்திலும் திருநீற்றின் சிந்தனையையுண்டுபண்ணின பெரியவர் என்று அவனை மறுபடியும் போற்றிப் புகழ்ந்

தார். இவரது பொன்னை உலகம் காணும்படி இறைவன் பாண பத்திரருக்குப் பொருள் தருக என்று இவரிடம் ஒரு திருமுகம் உய்த்தார்.

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக்கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மணிபுனை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க,
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே.

இந்த இச்சேரர்பெருமானுக்குச்சிவபெருமான் எழுதியது இதனால் இவரது அன்புடைமையும் வள்ளற்குணமும் நன்கு காணப்படும். இவர் நெடுங்காலம் இவ்வையகத்தில் இருந்து இன்புற்றார். இறுதியில் உடலுடன் இவரொருபரிமேலேறிக் கைலைக்குச் சென்றார். சிறப்பினை எய்திச் செம்மாந்து இருந்தார்.

(இது பெரிய புராணத்தில் உள்ளது.)

8-ம் அதிகாரம் அன்புடைமை. 163

அன்புடையவர், இருமையினும் இன்புறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.



76 பண்டு வரதுங்க பாண்டியனேன் அன்புசெய்தான்
கொண்டமறை கண்டிய குமரேசா—கண்ட

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை (௪)

குமரேசா! தன் தம்பி தன்மேல் மறஞ்செய்யக் கண்டும் வாலிக்க ராமபாணமடியன் என் அவன் பால் அன்பு செய்தான் எனின், அறத்தை ஆக்கவும், மறத்தை நீக்கவும் அன்பு துணையாம் என்க. சார்பு = துணை அஃதே = அவ் அன்பே.

அன்பானது, மறத்தை நீக்குதற்கும் துணையாம் என்பதை அறியாதவரே, அதனை அறத்திற்கே சார்பு ஆம் என்று கூறுவர் அறிந்தார் அங்ஙனங்கூறார் என்பதாம்

அறத்தைச் செய்யவும், மறத்தை நீக்கவும், அன்பு துணையாம் என்பது குறிப்பு. மறத்திற்கும் என்பதிலுள்ள உம்மை, அறத்திற்கும் துணையாம் என்பதை உணர்த்தி நின்றது. இஃது இறந்தது தழுவிய எச்சவும்மையென இயம்பப்படும்

இனி, தனக்கு உரிமையுள்ளவரிடத்தில் ஒருதவறுகண்டுழி ஒருவன் அவரைத் தண்டித்தற்குக் காரணம், அவன் அவர்பால் வைத்த அன்புடைமையே ஆகலால் "மறத்திற்கும் அஃதே துணை" என்றார் எனவும் இது பொருள்படும். மேல், அன்பானது தன்னையுடையானுக்கு இருமையினும் இன்பம் பயக்கும் என்றார். இதில் அது பகைமையை நீக்கி உவகையை விளைக்கும் என்றார்.

பிறர் செய்த தீமையைக் குறித்து ஒருவன் மனத்தில் வெகுளிதோன்றும் பொழுது உடனே அவரை நண்பராகக் கருதி அவர்பால் அன்பு செய்யவேண்டும் என்பதும், அதனால் மறம் நீங்கும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன.

இவ்வுண்மை வரதுங்க ராமபாண்டியன் பால் உணரப்படும்.

## கதை.

வரதுங்க ராமபாண்டியன் என்பவர் வழுதிவேந்தரது மரபில் வந்தவர். உயர்ந்த திருவும் சிறந்த கல்வியும் ஒருங்கேவாய்ந்தவர். நல்ல சீலமுள்ளவர். யாவரிடமும் பேரன்புடையவர். அறிவுடைய தம்மனைவியோடு இவர் நெடுங்காலம் கருவையம்பதியில் தங்கியிருந்தார். அங்கு எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் தகுந்த ஆலயம் ஒன்றைச் செய்வித்தார். அரும்பணிகள் பலவும் அங்கு ஆக்கினர். புலமைமிக்க தமது அருமை மனைவிபால் இவர் நலம் பலபெற்றார். புவிபரசராகவும், கவிபரசராகவும் இவர் பொருந்தியிருந்தார். கோல் கொண்டிருந்தும் இவர் நூல் பலதந்தார் கருவைப் பெருமான் மீது ஓர் அந்தாதியும் செய்துள்ளார். அது கருவைபந்தாதியென வழங்கப்பட்டுவருகின்றது இவருடைய காலம் இற்றைக்கு ஏறக்குறைய எண்ணூறு வருடங்கட்கு முன்னர் என்ப. நைடதம், காசிகாண்டம், வெற்றிவேற்கை, முதலிய நூல்களின ஆசிரியராகிய அதிவீர ராமபாண்டியன் என்பவர், இவருடன்பிறந்த தம்பியாவர். அவர் நைடத நூலை முடித்துத் தன் தமையன்பால் வந்து அதனைச் சரிபார்க்கத் தந்தார், இவர் பெற்றார். பார்த்தார். இங்ஙனைப் பாடியதினும்

அப்பரனைப் பாடியிருந்தால நலமாயிருந்திருக்குமென்று நய முட் கூறினர். புலமை நிரம்பிய தமது அருமை மனைவியையும அதனைக் காணும்படி தூண்டினர். அவளும கண்டாள். கொழுந் தன் கவிதிறத்தைக் குறிப்பால இகழ்ந்தாள். தம்பி வெகுண்டு தன் அரண்மனை சார்ந்தார் எமது நூலை யெம் அண்ணனிடம் தந்தால் அவர் தமது மனைவியிடம் தந்து எம்மை இவ்வகையில்



அவமானப் படுத்தினரே! என்று எண்ணி யெண்ணி வெகுண் டார் அண்ணனைப் பொருதவென்றுவிடக்கருதி எழுந்தார். வந்து வளைந்தார். தம்பி வந்ததைத் தமையர் அறிந்தார். அன்பு செய் தார் கவி ஒன்றை எழுதி அவர்பால் உய்த்தார். அது

செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே—மிஞ்சு
விரதந் தனைக்கொண்டு மெய்யன்பு பூண்ட
பரதனையும் ராமனையும் பார். என்பதே.

இதனை உற்றுநோக்கினர். சுக்கிரீவன், விபீடணன், அருச்சுனன் என்பவர்களைப்போல் இராமல் பரதனைப்போல் இரு. என்று அண்ணன் நண்புடன் கூறிய அன்புடைமையைத் தம்பி யுணர்ந்தார். கொண்ட கோபம் தணிந்தார். தமையன் அடியில் விழுந்து தொழுதார். அவரும் தழுவினர் இருவரும மகிழ்ந்தார். தம்முள்ளத்தில் நிகழ்ந்த மறத்தை அன்பால் நீக்கித் தம்பியை யணைத்த வரதுங்கராம பாண்டியனை உலகம் புகழ்ந்தது.

இதன் விரிவு அவர் சரிதையில உணரப்படும்.

அறத்தைச் செய்யவும் மறத்தை நீக்கவும் அன்புதுணையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

77. அன்றரன்பால் அன்பில் அசுரனேன் மோகினிமுன்

குன்றி எரிந்தான் குமரேசா—குன்றாத
என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம். (எ)

இ—ள.

குமரேசா! அரன்பால் அன்பு இல்லாத அசுரன் ஏன் மோகினிமுன் தானே எரிந்து மாய்ந்தான் எனின், என்பு இல்



லாத உடம்பை வெயில் காயுமாறுபோல், அன்பு இல்லாத உயிரை அறம் காயும் என்க. அறம் என்றது தருமதேவதையை.

என்பு இல்லாத புழுக்களை வெயில் காய்ந்து கொல்லுதல் போல் அன்பு இல்லாத மக்களை அறம் காய்ந்து கொல்லும் என்பதாம். என்பு இல்லாதன, வெயில்முன் இயல்பாகவே கெடுதல் போல, அன்பு இல்லாதவர், அறக்கடவுள்முன் தாமே கெடுவர் என்பது கருத்து.

உடற்கு என்புபோல் உயிர்க்கு அன்பு உறுதியாம் என்பது குறிப்பு.

அன்பு இல்லாதவர், தம்மியல்பால் தாமே அழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பசுமாசுரன்பால் உணரப்படும்.

பசுமன் என்பவன் ஓர் அசுரன். துந்துபியின் புதல்வன். இரக்கமென்றொருபொருள் இலாத நெஞ்சினன். ஆனால் மிக்க வுறுதியுடையவன். எவரையும் இலகுவில் வென்று விடவேண்டுமென்று நெடுங்காலம் இவன் கருதியிருந்தான். அதனைக் கண்ணு தற்பரமனை யெண்ணிக் கடுந்தவம் புரிந்தான் அவன் தவத்துக்கும் இரங்கி தனி முதல் வந்தது. வந்த முதல்வனை அவன் வணங்கினான். தன்கையால் தொட்டால் எவராயினும், அவர் எரிந்து போம்படி வரந்தரவேண்டினான். பின்னைமதியரும் அதனை இல்லையென்னாது தந்தார். கொண்டான் அசுரன். அத

னால் அவரையே கொல்லக் கருதினான். அவன் அன்பில் செயலை வியந்தார். வெருண்டவர்போல ஓடினார். அவனும் அவரைத் தன்கையால் தீண்டக்கருதித் தொடர்ந்தான். அவரும் விரைவில் மறைந்தார். அவன் கொடுமையை நெடுமால் நினைந்தார். ஒரு மோகினி வடிவொடு அவன் முன்னே தோன்றினார். அவனும் கண்டான். உடனே பெருமோகங்கொண்டான். பெற்றவரத்தை மறந்தான். உற்றமயலில் உழன்றான். மோகினியை இசையும்படி



வேண்டினான். அவள், "என்னை என்றும் பிரிவதில்லையென்று கையால் உன் தலை தொட்டு ஆணையிட்டுத் தருவையானால் யான் இசைவேன்" என்றாள். அவனும் இசைந்தான். அவ்வண்ணமே செய்தான். உடனே எரிந்து மாய்ந்தான். மாயமோகினி முன் அவன் காயம் தானே காய்ந்ததை யாவரும் கண்டார். அன்பிலதனை அறங்காயும் என்பதை உணர்ந்தார்.

இதன் விரிவை அரிஅர சரிதையில் உணர்க.

அன்பு இல்லாதவர், தாமே அழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.



78. தண்டகனென் அன்பிலாத தன்மையினால் வாழ்விழந்து
கொண்டவுயிர் தீர்ந்தான் குமரேசா—மண்டுகின்ற
அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. (அ)

குமரேசா! அன்பில்லாத தன்மையினால் தண்டகன் என் வாழ்வு இழந்து தன்னுயிரும் தீர்ந்தான் எனின், அன்பு அகத்தில் இல்லாத உயிர் வாழ்க்கை, வன்பால் கண் வற்றல் மரம் தளிர்த்தாற்போலும் என்க. வன்பால்—பாலைநிலம்.

வன்பார் என்று பாடங்கொண்டால், அதற்கு வலியநிலம்

என்பது பொருள். வறறல மரம—உலர்ந்த மரம்.

பசையில்லாத மரங்கள் பாலை நிலத்தின் கண் நின்று தளிர்த்து வளர்ந்தால், அன்பு இல்லாத உயிர்கள் இவ்வுலகிலிருந்து செழித்துவாழும் என்பதாம். வாழமுடியாது என்பது உவமையால் உணரப்படும்.

உள்ளத்தில் அன்பு இல்லாதவன் இல்லத்தில் இருத்தல் பட்டமரம் பாலை நிலத்தில் நிற்றல் போல்வதாம் என்பது கருத்து'



அகததில அனபு இலலாதவன புறததில எவ்வளவு வாழ்வை உடையனுயினும, அவன வாழ்வுககுனறிக தாழப அழிவான எனபது இதில உணர்ததபபடடது

(இவ்வுணமை தண்டகனபால உணரபபடும்.)

கதை

தணடகன எனபவன சூரிய குலததில பிறநதவன இககுவாகுவின புதலவன் தணடனைககுரிய கொடிய குணஙகளேயே யிவன உடையனுயிருநதான அதனல தண்டகன எனப பெயர் பெறறுன. இவன சிநதையின கொடுமையைத தநதைபறிநதார் வெறுதது அகறறினர். இவனும அகனறு தெனதிசை வநதான விநதிய மலையை அடுததுளள ஒரு பெரிய நிலபபகுதியைத தனககு உரிமையாககிக கொணடான பொருள்கள மிகவுந தொகுததான, குடிகள பலவுங குழுமின வளஙகளுமிகுநதன. அஙகோர் உயர்நத இடததில அழகமைநத நகரம ஒனறைத தண்டகன அமைததான். அதறகு மதுமநதம எனப் பெயா தநதான. அதில் இருநதான. ஆடசிபுரிநதான சிறறினததாரையே முறறவுஞ சேர்ததான. கொடுமையும மூாககமும் குனறுது நினறுன. மனஞ் சென்றவழியே செனறு மகிழ்நதான. புறததில

இனபப பொருளபல கொண்டான் அகததில அனபை அறவே விட்டான் தீயன பலவுஞ செய்து திரிகதான. குருவும பிறரும இவனைக கோதிதது வைதனர். அதனல எழு காளுன் இவன வாழ்வும இழநதான். தானும மாய்நதான. காடும திரிகது காடாய் விரிகதது இதைததான "தணடகவனம்" என்று பின கண்டவா புகனுர் அனபகததிலலாதவன உயிரும வாழ்வும விரைவில அழியும எனபதை உலகம இவன பால கணடது.

(இதன விரிவை மறறுமுறையிலுணர்க)

அனபிலலாதவன வாழ்வு கெடிது நில்லாதெனபது இதனல உணர்ததப்பட்டது

---



79. பண்டு துரோணருக்கேன் பாஞ்சாலன் ஈபவில்லை
கொண்டவெல்லாம் வைத்தும் குமரேசா—கொண்ட
புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும யாக்கை
அகத்துறுப் பன்பில் அவர்க்கு. (க)

இ—ள்.

குமரேசா! பாஞ்சாலன் பொருள் பல வைததிருந்தும் துரோணருக்கு ஏன் ஒன்றும கொடுக்கவில்லை எனின், யாக்கை யின அகதது உறுப்பாகிய அனபு இல்லாதார்க்குப் புறத்து உறுப்பு எலலாம எவன் செய்யும என்க.

அகத்தில் அன்பு இல்லாதவர் புறததில எவ்வளவு பொருள் களையுடையராயிருப்பினும் அவறருல் அவர் ஓர் உதவியும் பிறர்க் குசசெய்யார் ஆகலான் "அன்பு இல அவர்க்குப் புறததுறுப்பு எல்லாம் எவன் செய்யும" என்ருர்.

அன்பில்லாதவனது உடமைகள பிறர்க்குப் பயன் படாமல் பழுதுபடும் என்பதாம்

அன்பு இலலாதவர் எவ்வளவு பொருள்களைவைத் திருப் பினும் அவற்றுள் யாதும் பிறர்க்கு எத்துணையும உதவார்

என்பது இதில் உணர்த்தப்பட்டது.

(இவ்வுண்மை பாஞ்சாலன்பால் உணரப்படும்.)

### கதை.

பாஞ்சாலன் என்பவன் பாஞ்சாலதேசத்து அரசன். துருபதன் என்னும் பெயரினையுடையவன். தனது இளமைப்பருவத்தே பல நூல்களையும் கற்றான். அதன்பின் அக்கிவேச முனிவரிடம் சென்று படைக்கலம் பயின்றான். அக்காலத்தில் துரோணர் இவனுக்குப் பள்ளித் தோழராயிருந்தார். இவர் மிக்க நுண்மதியுடையவர். வில் விச்சையில் அருமையான முறைகளை யெல்லாம் இவர் அவ்வரச குமாரனுக்குத் தெளிவாக உணர்த்தி



வந்தார். அதனால் அவன் இவரிடம் மிக்க நண்பு கொண்டான். ஒருநாள் மகிழ்வுடன் இவரை நோக்கினன். "துரோணரே! யான் அரசபதவியை யெய்திய பின்னர் எனது உரிமையிற் பாதி உமக்குத்தருவேன்" என்றான். கலைதேர்ந்த பின் இருவரும் கலைந்தார். துருபதன் அரசனானான். துரோணர் கிருபியென்னும் மனைவியை மணந்தார். அசுவத்தாமாவைப் பெற்றார். வறுமையால் வருந்தினர். பழைய நினைவு வரக்கண்டு துருபதன்பால் சென்றார். தனது எளிமையை யுணர்த்தினர். மாவின்பாலேயன்றி மரபுக்குரிய மைந்தன், ஆவின்பால் கண்டறியான், ஆதலால் எனக்கோர் பசுவேனும் அருளவேண்டுமென்று பரிந்து வேண்டினர். எல்லாம் உடையனாயிருந்தும் அவன் இவர்க்கு ஒன்றும் உதவாமல் நின்றான். உள்ளன்பு இல்லாதவன் வெளியில் ஒன்றும் உதவான் என்று இவர் நாணி மீண்டார். (இது பாரதத்தில் உணரப்படும்.)

இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற
றெல்லா மிருந்து மவற்கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (நன்னெறி)

அன்பில்லாதவன் யாதும் உதவான் என்பது இதனால் கூறப்பட்டது.



80. எய்தபுற வுக்காக வென்சிபிமுன் தன்மெய்யைக்
கொய்து கொடுத்தான் குமரேசா—மெய்யான
அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு (ம)

இ—ள்

குமரேசா! ஒரு புறவிற்காக வென் சிபி தன்மெய்யைக் கொய்து கொடுத்தான் எனின், அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலாற்



போர்த்தனவாம் என்க. உயிர் நிலை=உடம்பு. இஃது ஏதுப்பெயர்.

அன்பை முதலாகஉடைய உடம்பே உயிர்நின்றவுடம்பு
அன்பில்லாதன உயிர்நின்றனவாகா, பிணங்கள் என்றபடி.

பெறுதற்கரிய மனிதப்பிறப்பிற்கு அன்புடைமையே சிறப்பாம் என்பது கருத்து.

அன்பின் பொருட்டு தமது உடம்பையும் அறிவுடையார் கொடுப்பார் என்பது குறிப்பு. இவ்வுண்மை சிபியால் தெளியப் பெறும்.

கதை

சிபியென்பவன் சாக்குச மனுவின புகல்வன. சூரியகுலத்தில் புகழ்பெற்ற திகிரி மன்னர் வரிசையில் முதன்மை பெற்றவன் திருவயோத்தியிலிருந்து செங்கோல் செலுத்திய வெண்குடை வேந்தன். உயிர்கள் எல்லாம் இன்பம் அடையும்படி அன்புடன் ஆண்ட அருள்வள்ளல். நீதியும் தருமமும் நிறைந்த நெஞ்சினன். ஒருநாள் மாலைப்பொழுதில் அழகிய சோலை ஒன்றில் இவன் தனியே உலாவிக்கொண்டு நின்றான். இவனது அன்பின் நலத்தைச் சோதிக்க விரும்பி இந்திரனும் யமனும் சிந்தித்தார். புறவும் வேடுவனுமாக முறையே இருவரும் உருவெடுத்தார். வேடுவன் துரத்தினன். புறவு வெருண்டோடி வந்தது. சிபியினிடமே சிறையடைந்தது. பதைத்துடல் துடித்தது. அக்கள்ளப்புறவின் கண்கலக்கத்தை யிவ்வள்ளல் கண்டான். அன்புடன் எடுத்தான். உச்சியும் உடலும் உவந்து தடவினன். அடுத்து வேடன் கடுத்து வந்தான். என் இரை தந்திடு, மன்னவ என்றான். இதனை விடுக; வேறு தருகின்றேன் என்று வேந்தன் இசைத்தான். வேடன் இசையவில்லை ஊன் உணவே விரும்பினன். கொடுத்தால் இப்புறவையே கொடு. இலையேல், அதன் எடைக்கு உன் உடற்றசைகொடு என்றான். அரசன் உவந்து





இசைந்தான். தன் தொடைத் தசையைப் பறுத்தெடுத்தான் அதன் எடைக்கிசைபத் துலையிலிட்டுத் தூக்கினன். புறவின் தட்டே புவியில் தாழ்ந்தது. தசை முழுதும் உடலிலிருந்து குடைந்தெடுத்து இட்டான். இடுந்தோறும், இடுந்தோறும் தசைத்தட்டே உயர்ந்தது. வேறு தசையின்மையால் முடிவில் மன்னனே அத்துலையில் புகுந்தான். உடனே புறவும்வேடனும் உருவமாறினர். இந்திரனும் யமனுமாய் எதிரே நின்றனர். அரசைப் புகழ்ந்தார். அகமகிழ்ந்தார். கொய்த தசையெல்லாம் அரசன் உடலில் எய்த வாய்த்தார். அன்புடை அரசனும், முன்போல் நின்றான். வரம் பல தந்தார். வந்தவர் சென்றார். அன்பின் வழியது உயிர்நிலை என்

பதை உலகம் இவ்வேந்தன்பால் உணர்ந்தது.

ஒருவன் உயிர்க்கு உடம்பினும் அன்பே உரிமையுடையது என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

அன்பு அருவப்பொருள். அஃது அனுமானத்தானே அறியப்படும். அதனையுடையவர் உடம்பையும் பிறர்க்கு உவந்து உதவுவர். அன்புடைமையே உடம்பின் பயன். அன்புடையவர்க்கு யாவரும் நண்பராவர். இருமையின்பங்களையும் அன்புடையவர் எளிதில் எய்துவர். அறத்தைச் செய்யவும், மறத்தை நீக்கவும் அன்பே துணையாம். அன்பில்லாதவர் தம்மியல்பால் தாமே அழிவர். அன்பில்லாதவுயிர்கள் செடிதுகின்று இன்புறா. உள்ளன்பில்லாதவர் ஒன்றும் உதவார். அன்புடையவரே மனிதர். அஃது இல்லாதவர் நடைப்பிணங்களே என்பனவாம்.

8-வது அன்புடைமை முற்றிற்று.





# ௯-ம் அதிகாரம் விருந்தோம்பல்.

அஃதாவது விருந்தினரைப் பேணல். இஃது அன்புடைமை பின்பயனாக நிகழும். ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.



81 ஈட்டும் பொருளெல்லாம் என்விருந்தைப் பேணுதற்கே
கூட்டினரப் பூதி குமரேசா—நாட்டில்
இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. (க)

இ—ள்

குமரேசா! அப்பூதியடிகள் தாம் ஈட்டிய பொருளெல்லாம் விருந்தினருக்கே உதவி மீண்டும் ஏன் கூட்டினார் எனின், இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம், விருந்தினரைப் பேணி வேளாண்மை செய்தற் பொருட்டேயாம் என்க.

வேளாண்மை—உபகாரம்.

இல்லின்கண் இருந்து பொருளையீட்டி ஒருவன் போற்றி வாழ்வதெல்லாம், விருந்தினரைப் பேணி அவர்க்கு வேண்டிய உபகாரஞ் செய்தற்காகவேதான் என்பதாம். இல்வாழ்பவனுக்கு முதன்மையான கடமை விருந்தோம்புதலேயாம் என்பது குறிப்பு.

தென்புலத்தார் முதலிய ஐவரினும் இடைநின்ற விருந்தினர் சிறந்தவர் ஆதலின் அவரை விதந்தெடுத்து ஈண்டு விரித்தார்.

இல்வாழ்பவன் வருந்தித் தொகுத்த பொருளால் விருந்தைப் போற்றவேண்டுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அப்பூதியடிகள்பால் உணரப்படும்.



கதை

அப்பூதி என்பவர் அறுபான் மும்மை நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழமண்டலத்திலே திங்களூரிலே அந்தணர் வருணத்திலே பிறந்தார். அரிய கலைகள பலவும் பயின்றார். அறிவிற சிறந்தார். அதன்பின் எல்லா நல்ல குணங்களும் இயல்பாகவே

பமைந்திருந்த ஒரு குணவதியை மணந்தார். இலவாழ்க்கையி லிருந்தார். மனைவியுந் தானும் ஒருமனப்பட்டு மகிழ்ந்து வாழ்ந் தார். அன்புடன் எவரையும் ஆதரிதது வந்தார். தாம் வருந்திப் போற்றிய பொருளால விருந்தைப் போற்றிவந்தார். வருங்கால அப்பாது அருங் குணங்களை யிவர் செப்பக் கேட்டார் அவ்வடி கள்பால இவர் பேரன்பு கொண்டார். தாமியற்றியுள்ள அறச் சாலைகள் எலலாவற்றிலும் அபபர் பெயரையே சூட்டினார். இங் ஙனம் ஆரா அன்போடு இவர் வாழ்நதுவருங்கால அபபரும் அங் கு வந்தார். தம பெயர் காட்டி அவர் அறம்புரியுந்தன்மையை அப்பர் அறிந்து வியந்தார். அப்பூதியடிகளைக் கண்டார். வநத வர் அப்பர் என்பதை அறிநதவுடனே அப்பூதியடிகளுக்கு உண் டான உவகைக்கு அளவேயிலலை வணஙகினார். வாழ்த்தினார். இல்லில எழுந்தருளசசெய்தார். மனைவியும, புதல்வரும் வணங்கி மகிழ்ந்தார். அதன்பின் குழமிய சுவையுடைய விழுமிய உணவை விரைவினில ஆககினார். தமது புதல்வருள் முதலவனாகிய மூதத திருநாவுக்கரசு எனபவனை இலைகொணருமபடி பணிததார். அவன் வாழைததோட்டத்துட் சென்றான. பரிகலம் அரியும் சமையம் ஒரு பாம்பு இவன் கையில் கடிததது. உடனே புதல்வன் துடித து உயிர் துறநதான். தாயும தநதையும அறிந்தார். விருந்தின ரைப் பேணுதற்கு இஃதோர் தடையாயிற்றே! என்று வருந்தி னார். மகனின் உடலை பொருபடலில மறைததார். இலைததாங்கி விரைவினில வந்தார். அப்பரை உபசரிததார். உணவூட்ட விரும் பினார். மெய்யுணர்வுடைய அபபர் நிகழ்நததையோர்ந்தார். அப் பூதியடிகளது ஒப்புயர்வற்ற விருநதோமபுந்திறத்தை வியந்தார். இறைவனைத் துதிததார். முதலவன் அருளால் புதல்வன் பிழைத்



தான். அப்பர் பின் உண்டார். அவரனைவரும் மகிழ்ந்தார். இல் லில் இருந்து இவர் விருநதோமபிய பெருந்தன்மையை உலகம போற்றியது. (இதன் விரிவு பெரியபுராணத்தில் உணரப்படும் )

விருநதினரைப் பேணுதலே ஒருவன் இல் வாழ்க்கைக்குப்

பயன என்பது இதனால கூறபபட்டது



82 தானுண்ணன் ஒளவையுண்ணத் தந்தான்
கோனதிகன் எனனே குமரேசா—பான
விருந்து புறத்ததாத் தானுண்டல சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. (உ)

குமரேசா! அதிகமான் என்பவன் அமுதம் போன்ற அருங்கனியைத தான் உண்ணுமல் ஒளவைககு ஏன் தந்தான் எனின, சாவா மருந்து எனினும், விருந்துபுறத்ததாகத் தான் உண்டல வேண்டற்பாற்று அனறு எனக.

சாவா மருந்து=சாவாமைக்கு ஏதுவாகிய மருந்து, அமிர்தம் என்றபடி. வேண்டல் பாற்று அன்று=விரும்புதல் முறைமை யன்று.

ஒருவனால உண்ணப்படும் பொருள் பெறுதற்கு அரியதும், மிக இனிய சுவையுடையதுமாகிய அமிர்தமேயெனினும், தன் இல்லின் புறத்தே விருந்தினரை வைத்துவிட்டுத் தான்மாத்திரம் உண்ணுதல் தகுதியன்று என்பதாம்.

விருந்தையோம்பியே அருந்தவேண்டும் என்பது கருத்து. "மருந்தேயாயினும் விருந்தொடு உண்" என்றதுங் காண்க.



இனி, விருந்தை வெளியே வைத்துவிட்டு, ஒருவன் தனியே உண்டால் அஃது அவன் சாவாமல் நிலைத்திருத்தற்கு உரியதோர் அருமருந்தாம் என்று எவராயினும் கூறிக் குவித்தாலும, உண்

னவாகாது, எனவும் இது பொருள்படும்.

தமக்குக் கிடைத்தது அமிர்தமேயானாலும் அதனையும் விருந்தினர்க்குக் கொடுத்தே இல்வாழ்பவன் அருந்தவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை அதிகமான்பால் உணரப்படும்.

கதை.

அதிகமான் என்பவன் கடைஎழு வள்ளல்களுள் ஒருவன். நல்ல போர்வீரன். இவன் காலம் இற்றைக்கு இரண்டாயிரம் வருடங்கட்கு முன்னராம். இவன் இருந்த ஊரின் பக்கத்தில் ஒரு செழித்த மலைச்சாரலும், தழைத்த பூஞ்சோலையும் நிலைத்திருந்தன. அச்சாரலில் தெய்விகமான நெல்லிக்கனி ஒன்று அற்புதமாக உற்பவித்தது. அஃது அமிழ்தின் தன்மையைத் தன்னிடத்தே அமையப்பெற்றது. தன்னை உண்டவர்களை நெடிது வாழச் செய்யும் தகுதியுடையது. அதனை ஓர் அருந்தவர் கண்டார். அதன் இயல்பையெல்லாம் தமது தவ மகிமையால் ஓர்ந்தார். எடுத்தார். அந்நாட்டுத் தலைவனாகிய அதிகமான்பால் அதனைக் கொணர்ந்துகொடுத்தார். அதன் அருமையையும் பெருமையையும் கூறியகன்றார். அவன் கொண்டு மகிழ்ந்தான். உண்ணுதற்கு உரியதோர் காலத்தைக்குறித்து அதனை நிறுத்தி வைத்திருந்தான். குறித்த காலம் வந்தது. அதனையுண்ண எண்ணினான். அவ்வமையம் அவன் இல்லை நோக்கி ஔவை வந்தாள். அதிகமான் கண்டான், மகிழ்ந்தான், உபசரித்தான். தான் உண்ணு

மல் அவ் அருக்கனியை அன்புடன் ஔவைக்கே தந்தான். அமிழ்தனைய தீங்கனியைத் தான் உண்ணாமல் தனக்கே தந்த அவன் வள்ளற்குணத்தை ஔவை வியந்து பாடினாள். சாவா மருந்தெனினும் விருந்திருக்க உண்ணலாகாது என்பதை அதிகமான் காட்டினான். (இதன் விரிவு புறநானூற்றில் காணப்படும்.)



இல் வாழ்பவன் தன்னினும் விருந்தினையே இனிதாகப் பேணவேண்டும் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

83 ஈட்டியவெல் லாந்தேய்ந்தும் ஏனல்லான் பின்னுலவாக்
கோட்டைபெற்று வாழ்ந்தான் குமரேசா—வீட்டில்
வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. (௩)

இ—ள்

குமரேசா! நல்லான் என்பவன் ஈட்டிய பொருளையெல்லாம் இழந்தும் பின் ஏன் உலவாக்கோட்டை பெற்று வாழ்ந்தான் எனின், வருவிருந்து வைகலும் ஓம்புவானது வாழ்க்கை, பருவந்து பாழ்படுதல் இன்று என்க.

பருவந்து பாழ்படுதல் இன்று—வருந்திக் கெடுதல் இல்லை.

வருந்திப் பெற்ற பொருளால் ஒருவன் விருந்தைப் போற்ற வேண்டுமென்று மேலே கூறினர். அங்ஙனம் போற்றின் அது தேய்ந்து கெடுமே என்பாரை நோக்கி ஓம்புவான் வாழ்க்கை பருவந்து பாழ்படுதல் இன்று" என்று இதில் உறுதி கூறினர்.

தன்னை நோக்கி வந்த விருந்தை நாள்தோறும் பேணி வருகின்றவனது வாழ்க்கை வருந்தி அழியாதென்பதாம். வளர்க்

தோங்கும் என்பது குறிப்பு. இவ்வுண்மை நல்லான்பால் உண ரப்படும்.

### கதை.

நல்லான், மதுரையிலிருந்த ஓர் வேளாண் மரபினர். இவரது மனைவி பெயர் தருமசீலை. இவ்விருவரும் ஒருமனப்பட்டு விருந்து புரந்து அருந்தவர்ப்பேணி நாளும் நன்றாற்றி வந்தார். இறைவன் சோதனையால் இவர் செல்வம் தேய்ந்தது. விருந்தோம்புதலை



விரும்பினர். வருந்தினர். இறைவனை நோக்கி யருந்தவங்கிடந்தார். அப்பரமன் உலவாக்கோட்டை யருளினர். அதுகொண்டு களும் விருந்தோம்பி மெய்யின்பமெய்தினர்.

வானுறுகுடி தருகோட்டையை வைகறேறும்
பூநாறுசாந்தம் புகைபொன்சுடர் கொண்டருச்சித்
தானுகசெவ்வி யடிசிற்கு மதற்குவேண்டும்
நானுகருவி விலக்கும் அது நல்கவாங்கா.
மின்னுர்சடையான்றமர் ஆய்ந்தவர் வேதச்செல்வர்
தென்னுடர்தெய்வம் விருந்தோக்கல் செறிந்துநட்டோர்
முன்னுமெவர்க்கும் முகில்போல வரையாமனைகி
எந்நாளுநோயின் றளகாதிப னென்னவாழ்ந்தான்.

(கூடற்காண்டம்.)

நல்லான் இயல்பு இனிது தெளிவாம்.

விருந்தோம்புவான் வாழ்வு, வளர்ந்தோங்கும் என்பது இதனுல்கூறப்பட்டது.



84 என்றும் அசதியில்வில் ஏறே திருமகளார்

குன்று குறைந்தார் குமரேசா—என்று
அகனமர்ந்து செய்யா ளுறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல் (௪)
-ள

குமரேசா! திருமகள் மனமகிழ்ந்து அசதியில்லில் என் நிலைத்து இருந்தாள் எனின், முகன் அமர்ந்து நல்விருந்து ஓம்பு வான் இல்லில், செய்யாள் அகன் அமர்ந்து உறையும் என்க,

அமர்ந்து=மகிழ்ந்து. பொருந்தி எனவுமாம்,

முகமலர்ந்து விருந்தினரைப் பேணுகின்றவன் வீட்டில் திரு மகள் மனமகிழ்ந்து தங்கி நிற்பள் என்பதாம்.



விருந்தோம்புவானது வாழ்வு பாழ்படாதென்று மேற்காட் டியதற்கு ஏதுவை யிதில் காட்டினர்.

விருந்தினரை உபசரிப்பவனது இல்லில் செல்வம் மல்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை அசதியால் உணரப்படும்.

கதை.

அசதி என்பவன் ஓர் ஆயர் குலத்தவன். கொண்டைநாட்டி லே ஐவேல் என்னும் ஊரிலே பிறந்தான் இவன் காலம் இற் றைக்கு ஆயிரத்து நூறு வருடங்கட்கு முன்னதாம். குறுகிய நிலமும் பெருகிய ஆநிரைகளும் இவனுக்கு உடைமைகளாயிருந்தன. அவற்றால் வருவிருந்தை வைகலும் பேணி இல்வாழ்ந்து வந்தான். ஒசியு யாத்திரை ஔவை ஒருநாட் பாதிராவில் இவன் இல்லில் வந்து சேர்ந்தாள் பசியால் உடல் நலிந்து சோர்ந்தாள் இவன் கண்டான் முகமலர்ந்து எழுந்தான். மனமகிழ்ந்து பணிந்தான். புகழ்ந்தான் உள்ளே எழுந்தருளச் செய்தான். அவ்வமையம் அந்த ஆபத்தமாயிருந்த காட்டிக்கிழங்கைப் பக்குவஞ்செய்து ஆட்டுப்பாலுடன் தந்தான். ஔவை கொண்டாள். உண்டாள். சோர்வு நீங்கினள் அவன் அன்பின் திறத்தையும், விருந்தோம் பும் நலத்தையும் நினைந்து மகிழ்ந்தாள். "ஐவேல் அசதி" என்

பதை முன்னிலைபாக்கொண்டு அவன்மீது பல பாடல்கள் பாடினார். அதன்பின் அவன் புகழ் உலகெங்கும் பரவிற்று. திருமகளும் மகிழ்வோடு இவன் மனையிலுறைந்தாள.

(இக்கதை அசதிக்கோவையில் அறியப்படும்.)

நல் விருந்தோம்புவானுக்கே செல்வம் நிலைக்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

— - ——•— ——

23



## திருக்குறட் குமரேச வெண்பா.

85 வித்தின்றி முத்தேன் விளைந்ததுவெண் ணெய்ச்சடையன்
கொத்தும் வயலிற் குமரேசா—நத்திசெய்து
வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். (௫)

இ—ள்

குமரேசா! வெண்ணெய்ச் சடையன் வயலில் வித்துகள் இடாமலே ஏன் முத்துகள் விளைந்தன எனின், விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலத்தில் வித்தும் இடல்வேண்டும் கொல்லோ என்க. மிச்சில்=மிஞ்சியிருந்தது. மிசைதல்=உண்டல். புலம்=விளை நிலம்.

மிசைவான் புலம் தானே விளையும் என்பது கருதி வித்தும் இடல்வேண்டுமோ என்றார். இது குறிப்பு மொழி.

உம்மை அதன் உரிமையை விளக்கி நின்றது.

விருந்தை முதலில் ஊட்டி அதன் பின்பு தான் உண்டு வாழும் பெருந்தகையோனது விளை நிலத்தில் பெருகிய வளங்கள் தோன்றும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை

வெண்ணெய்ச்சடையன் விளைபுலத்தில் உணரப்படும்.

கதை

சோழநாட்டிலே திருவெண்ணெய் நல்லூரிலே ஏர்வளம் படைத்துச் சீர்பெற வாழ்ந்த சடையப்பபிள்ளையென்பவர் ஒரு பெருங்கொடைவள்ளல். இவர் தமது நிலங்களில் பயிர்களைப் போற்றி உயிர்களைக் காத்தார். பசி நோய்க்கு இவரொரு மருந்து போன்றிருந்தார். தம்மில்லில் வந்து உண்டு மகிழ்ந்த விருந்தினர் முகங்களை யிவர் கண்டு மகிழ்வர். பல இடங்களிலும் இருந்து தினந்தோறும் இவரது இல்லை நோக்கி வருவார் பலர். அவரனை வரும்உண்டு உவந்த பின்னரே யிவர் உண்ணப்புகுவார். உயிர்களைப்



பேணும்பொருட்டே யிவர் பயிர்களைப்பேணினர். நிலங்களைப்பண் படுத்துவதிலும், அவற்றின் தன்மைகளையறிவதிலும் இவர் மிகச் சிறந்தவர். இவரது உபகார நலத்தால் இவர் விளைபுலத்தில் பெரு வளங்கள் தோன்றின. ஒரு சமயம் இவர் வயலில் விளைந்த சில கரும்புகளில் கணுக்கள்தோறும் முத்துக்கள் இருந்தன. இதைக் குறித்துக் கம்பர் குணசேகரபாண்டியன் என்னும் அரசனிடம் கூறி மகிழ்ந்துள்ளார். உபகாரியின் விளை நிலம் தானே விளையும் என்பதை உலகம் இவர்பால உணர்ந்தது.

பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும். (ஔவை)

உண்டுவிருந் துவந்தபின்பே உண்ணுமென்ற பெருந்தகைபோன்
உழுநிலத்தில்
கொண்டுவித்தும்இடல்வேண்டுங்கொல்லோவென் றுரைத்தமொழி
குறித்தோ என்றும்
மண்புகழ்த் திருவெண்ணெய் நல்லூர்வாழ் சடையப்பன்
வயலில் வாய்த்த

மீண்டுசெழுங் கரும்புகளில் வெண்முத்தம் கணுக்கள்தோறும்
விளைந்ததம்மா. (தனிப்பா)

விருந்தோம்புவான் விளைநிலம் பெருவளம் தருமென்பது இதனால் கூறப்பட்டது.



86 தேடிவிருந் தோம்பும் சிறுத்தொண்டர் வானுலகேன்
கூடிவிருந் தானார் குமரேசா—நாடிச்
செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. (௬)



குமரேசா! இவ்வுலகில் விருந்தினரைப் பேணிய சிறுத்தொண்டர் ஏன் வானுலகுக்கு விருந்தானார் எனின், செல்விருந்தை ஓம்பி வருவிருந்தைப் பார்த்திருப்பான், வானத்தவர்க்கு நல்விருந்து ஆவான் என்க. செல்விருந்து=வந்தவிருந்து.

வாலையுணர்த்தும் வரு என்னுஞ்சொல், தன்மை முன்னிலையெனும் இரண்டிடங்கட்கேயுரியது. அது வழுவமைதியாய்க் கொண்டுபடர்க்கையில் வந்துள்ளது.

தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை யாயீ ரிடத்த. (தொல்காப்பியம்.)

வந்த விருந்தினரைப் பேணி பின் வரத்தக்க விருந்தினரை எதிர்பார்த்திருக்கும் வண்மையாளனை வானவர் விரும்பிப் பேணுவர் என்பது கருத்து.

இம்மையில் உயிர்களுக்கு உணவூட்டி இன்பஞ்செய்தவன் மறுமையில் பேரின்பத்தை மருவுவான் என்பது இதில் உணர்த்

தப்பட்டது. இவ்வுண்மை சிறுத்தொண்டர்பால் உணரப்படும்.

கதை.

சிறுத்தொண்டர், அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழநாட்டிலே, திருச்செங்காட்டங்குடி என்னும் ஊரிலே, ஆமாத்தியர் குலத்திலே பிறந்தார். சிறந்த போர்வீரர். படைக்கலப் பயிற்சியில் மிகத்தேர்ச்சி பெற்றவர். கவண், அம்பு முதலிய கைவிடு படைகளிலும், வேல், வாள் முதலிய கைவிடாப் படைகளிலும் இவர் வல்லுநர். அதனால் அந்நாட்டு அரசன் இவரைத் தன் தானைக்குத் தலைவராக்கினான். இவருந் தலைவரானார். பல போர்முனைகளிலும் சென்று பகைவரை வென்றார். இவரது அரு



மையையும், வெற்றியையும் அறிந்த அரசன் இவருக்குப் பெரும் பொருள் தந்தான். அது கொண்டார். அதன்பின் மணம்புரிந்தார். திருவெண்காட்டு நங்கை என்னும் பெயரினையுடைய தமது அருமைத் திருமனைவியோடு அமர்ந்து வாழ்ந்தார். வாழும் நாள் தமக்கு ஒரு புதல்வன் தோன்றினான். அவனுக்குச் சீராளன் என்று பெயரிட்டார். மகிழ்ந்தார். போனபோழு விருந்தினரைப் பேணினார். விருந்தோம்புதலேயே யிவர் பிறவிப் பயனாக விரும்பினார். வைகலும் நூற்றுக்கணக்கான விருந்தினர் வந்து இவர் இல்லில் உண்டாலன்றி இவர் உண்ணார். இவரது விருந்தோம்புந் திறத்தை உலகம் தெரிந்தோம்புமாறு பரமன் விரும்பினார். ஒரு வைரவ வேடந்தரித்தார். இவர் இல்லை நோக்கி வந்தார். ஒரு விருந்தும் அவ்வாறு இல்லையாம்படி செய்தார். மணக்கமழ் உணவை வழக்கம்போல ஆக்கி விருந்தினரை நாயனார் எதிர்பார்த்திருந்தார். ஒருவரும் வரவில்லை. வருந்தினார். விருந்தினரைத் தேடி வெளியே போனார். துறவிபோல வேடங்கொண்டு வந்த பரமனைக் கண்டார். உவந்து கொண்டுவந்தார். உணவூட்டத் துணிந்தார். அவர் தடுத்தார். "நாம் இப்புல்லிய உணவையுண்ணோம். நாமுண்பது பிணங்கமழ் உணவேயாம். அஃது அழகும் இளமை

யுமபொருநதிய ஒரு குழவியின் கறிமீபாடு கலந்திருததல வேண்டும. இலதேல காமசெலவோம" என று எழுநதார். நாயனா நடுங்கினார். அவர் அடிபிசைவிழுநதார். அவவகையுணவ தருகின்றேன் என று தொழுது மிறுததினர். உளளேயோடினர். மனைவியிடம இவ்வுண்மையை உளங்கலஙகியுரைததார். மனைவியும் பதைத்தார். முடிவில இருவரும தேறிததமது அருமைததிருமகனையே அறுத்துச் சமைக்கத துணிநதார. பளளியில இருககும பிளளையை மெள்ள அழைததார். உள்ளே கொண்டுபோனார். பாவம்! தாய் மடியில் தாங்கிப் பாலன் காலைப்பிடித்தாள. தநதையஞ்சாது தலையையறுததார். விரைவில் கறி சமைத்தார். அடியவர்க்குப் படை



த்தார். பாலன் ஒருவன் என் பக்கத்தில் இருந்தால் தான் யாம் இதை உண்போம் என்று அவர் பகர்ந்தார். பாலன் இல்லையே என்று இவர் அயர்ந்தார். வெளியேபோய் அழை என்றார். ஆணையை மறுக்க அஞ்சி யிவரும் அழைத்தார். புத்தகமேர்திய கை யோடு சீராளன் தெருவிலிருந்து இருவருளால் ஓடி வந்தான். பிள்ளையுள்ளே வருமுன் உணவும விருந்தும் ஒருங்கே மறைந்தன. உடனே பரமன் விடைமேல் தோன்றினர். அருள்செய்தார். மனைவியும், புதல்வனும், தாதியும், உடன்வர நாயனர் அருளுருவடைந்தார். வானவர் எதிர்கொள வான்வழிபோனார். அழிவில் இன்பத்தைத் தமருடன் துய்த்தார். இவரது இயற்பெயர் பரஞ்சோதியார் என்பதே. எவரிடமும் பணிவோடு தொண்டுபுரிந்ததனல் இவர் சிறுத்தொண்டர் எனப பெற்றார்.

(இதன் விரிவைப் பெரியபுராணத்தில் உணர்க.)

விருந்தோம்புவாருக்கு உளதாம் பயன் இதனல் கூறப்பட்டது

87 ஓரன்னம் கண்ணற் குதவியதால் பாஞ்சாலி

கூர்பபனேன் கொண்டாள் குமரேசா—பாரில்
இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். (எ)

இ—ள்

குமரேசா! பாஞ்சாலி கண்ணனுக்கு ஓர் அன்னம் உதவியதனால் என் பெரும் பயனையடைந்தாள் எனின், வேள்விப்பயன் இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை, விருந்தின் துணைத் என்க.



வேள்விப் பயன் இனைத்துணைத்து = விருந்தோம்புதலின் பயன் இவ்வளவினையுடையது.

விருந்தின் துணைத்துணை = விருந்தின் தகுதி அளவே அளவு.

இல் வாழ்பவன் செய்யவேண்டிய ஐவகை வேள்விகளுள் விருந்தோம்பல் மானுட வேள்வி எனப்படும். ஆதலால் அதனையே வேள்வியென்றார். மற்றவை பிரம வேள்வி, தேவ வேள்வி, பிதிர்வேள்வி, பூத வேள்வி எனப்படும். அவை முறையே வேத மோதல், ஓமம் வளர்த்தல், நீர்க்கடன் செய்தல் பலியிதல்களாம்.

விருந்தோம்பலின் பயன் பொருளின் அளவைப் பொறுத்த தன்று. அதனைப் பெறுவோரது தகுதியைப் பொறுத்ததாம் என்பது கருத்து.

கொடுத்தது சிறிதானாலும் அதனைக் கொண்டவரது தகுதிக் கேற்ப அதன் பயன் பெரிதாம் என்பது இதில் காட்டப்பட்டது. இவ்வுண்மை கண்ணன்பால் காணப்படும்.

கதை.

பாண்டவர் வனவாசம் செய்யுங்காலத்தில் துருவாச முனி

வர் அத்தினபுரிக்கு வந்தார். துரியோதனன் அவரைத் தொழுது உபசரித்தான். தனது அரண்மனையில் அவருக்கொரு பெருவிருந்து செய்தான். அதில் உண்டு மகிழ்ந்த முனிவர் அவனுக்கோர் வரந்தர விரும்பினர். அவன் வேறொன்றுங்கேளாமல், எமது இல்லில் உண்ட உணவுபோல் பாண்டவரிடமும் போய் நீவிர் உண்டு வரவேண்டும் என வஞ்சகமாக வேண்டினன். முனிவரும் இசைந்தார். வனம்புகுந்தார். பாண்டவரைக் கண்டார். அவரனைவரும் இவரடியிசை விழுந்து தொழுதார். பூசித்தார். உடனே முனிவர் "யாம் பசித்துள்ளோம். யாம் உண்ண நல்லவுணவுதா" என்றார்.



பாவம்! என் செய்வார் பாண்டவர். சூரியன் உதவிய பாத்திரத்தின் மகிமையால் தினம் ஒருமுறை சிறிது உணவு பெற்று உண்டு வருகின்றார். அம்முறையும் அன்று பெற்று முடிந்தது. நாழிகை இருபதாயிற்று. இவரும் வருந்தினர். தருமன் முடிவில் தேறி முனிவரை நீராடி வரும்படி வணங்கினர். அவரும விரைந்து போனார். என் செய்வோம் என்று இவர் நினைந்துக் கண்ணனைக் கருதினர் கருதியதையுணர்ந்த கருணைக் கண்ணன் உடனே யிவர்முன் தோன்றினன் இவரும் மகிழ்ந்தார் உள்ளதை உணர்த்தினர். கண்ணன் திரௌபதியை நோக்கிப் பாண்டத்தில் ஏதாவது ஒட்டியுள்ளதா பார்! என்றார். பார்த்தாள் பாஞ்சாலி. ஒரு பருக்கையே யிருந்தது. கொணர்ந்து கொடுத்தாள் கண்ணன் கையில கொண்டான் உலகை முண்ட வாயில அதனையும் வைத்துண்டான். நீராடி விரைந்து வருகின்ற துருவாச முனிவருக்கும் அவரடியவர்க்கும் பசிநோய் நீங்கியது. சிறிதும் இடம் பெறுகட்டி வயிறு நிறைந்தது. முனிவர் மகிழ்வோடு நினைத்தார். கண்ணனை வந்து கண்டார் கதிபெறுவகை கொண்டார் யாம் இன்று உண்ட உணவு போல் என்றும் உண்ணப் பெற்றிலேம் என்று இவருக்கும் பாஞ்சாலிக்கும் ஆசிகூறியகன்றார். விருந்தோம்புதலைத் துணை வேள்விப்பயன் என்பதை உலகம் கண்ணனால் கண்டது.

(இதன் விரிவு பாரதத்தில் காணப்படும்.)

தகுதியான விருந்தை ஓம்புவார்க்கு மிகுதியான பயன்கள் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது



88 பற்றற்றான் உள்ளம் பரிந்திரந்தான் என்பின்பு
குற்றமுற்றான் சேடன் குமரேசா—முற்றும்
பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பார்விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். (அ)

9-ம் அதிகாரம் விருந்தோம்பல். 197

இ—ள்

குமரேசா! சேடன் என்பவன் பற்றுக்கள் அற்று என் பரிந்து இரந்து குற்றமுற்றான் எனின், விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார் பரிந்து ஓம்பிப் பற்று அற்றோம் என்பார் என்க.

பற்று=பற்றுக்கோடு. பொருள் என்றுமாம்

பரிந்து=வருந்தி. வேள்வி=வி ... ந்தோம்பல்

வேள்வி தலைப்படாதார்=விருந்தோம்பி அதனால் எய்தும் பயனைப் பொருந்தாதவர்.

விருந்தினைப் பேணாதவரே, பொருளை வருந்திக் காத்து இழந்தேமென்று சொல்லி இரங்குவர் என்பதாம்

விருந்தைப் போற்றி வருதலே ஒருவன் வருந்திப் பெற்ற பொருளுக்குப் பயன் என்பது குறிப்பு

நிலையில்லாத செல்வம் தனக்கு உரிமையாக அமைந்திருக்கும்பொழுதே ஒருவன் அதனைப் பிறர்க்கு உபகரிக்கவேண்டும் என்பதும், இலதேல் அது தன் இயல்பாய் நீங்கும் என்பதும்,

அதன்பின் அவன் அதனை வருந்திக்காக்க வயமாகக் குறித்தும், அதனால் எடுத்தும் பயனை யிழந்தமையை நினைந்தும், இரக்குவான் என்பதும் பின் இரந்து திரிவான் என்பதும், இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை சேடன்பால் உணரப்படும்.

கதை

சேடன்என்பவன் சோழநாட்டிலே கோசைஎன்னும் ஊரிலே யிருந்த ஒரு பெருஞ்செல்வன். ஔவை காலத்தவன். வஞ்சமும் சூதும் நெஞ்சினில் உடையவன். இரக்கமில்லாதவன் பேராசை பிடித்தவன். தானும் இன்புறான். பிறர்க்கும் உதவான். கொடு என்றால், சுடு என்பான். வன்கண்மை மிக்கவன். நல்ல விருந்தைக்





கண்டால் தன்னைக் கொல்லுமருங்கூற்றென்று சொல்வான். பதுங்கி யொதுங்குவான். ஒருநாள் ஔவை தளர்ந்து இவன் இல்லை வந்தடைந்தாள். அமுதனைய கவிபாடும் அம்முதுமகளுக்கு இவன் சிறிது பழங்கூழும் உதவினான் இல்லை. தவமகள் எழுந்தாள். கவி ஒன்று பாடிக் கடுகி நடந்தாள்.

பாடல் பெறானே பலர்மெச்ச வாழானே
நாடறிய நன்மணங்கள் நாடானே—சேடன்
இவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரில்
கவிழ்ந்தென் மலர்ந்தென்ன காண். (ஔவை)

சேடன் தன் விதிவசத்தால் பொருள் முழுதும் இழந்தான். துயரங்கள் பல தொடர்ந்தன. இழந்ததை நினைந்து ஏங்கினான். பண்டு விருந்தோம்பாமையை யெண்ணி யிரங்கினான். பலவிடங்களிலும் அலைந்தான். இரந்து திரிந்தான். பின் இறந்து தீர்ந்தான். விருந்தினையோம்பாதவன் பொருளினையிழந்து வருந்துவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது.

(இஃது ஔவை காதையில் உள்ளது)

மண்ணுற்சட்டி கரத்தேந்தி மறநாய் கவ்வும வாயினராய்

அண்ணுந்தேங்கி யிருப்பவரை யறிந்தோம அறிந்தோம் அம்மம்ம
பண்ணுமொழியார் பாலடிசில் பைம்பொற் கலத்தில் பரிந்தூட்ட
உண்ணுநின்ற போழ்தத்தே உதவாமாந்த ரிவர்தாமே.

(சிந்தாமணி.)

விருந்தோம்பாதவன் பொருள் இழந்து வருந்துவான் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

89 வாடிவந்த நல்லதங்கை வன்பசியைத் தீர்த்திலளேன்
கோடியுடை யாளும் குமரேசா—நாடும்
உடைமையுள் இன்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்கண் உண்டு. (௯)

9-ம அதிகாரம விருந்தோம்பல். 189

இ—ள்

குமரேசா! அலங்காரி பெரும் பொருளை யுடையவளா யிருந்தும ஏன் வாடிவநத நலலதங்கையின வன்பசியை மாற்றவிலலை எனின, விருந்து ஓமபலை ஓம்பா மடமை மடவார்கண் உண்டு எனக.

உடைமையுள் இன்மை =செல்வததுள்ளே வறுமை.

விருநது ஓமபல ஓமபாமடமை = விருந்தினரைப் பேணுமல இகழும பேதைமை.

ம . வார்கண் உண்டு=பேதையார்கண்ணே உளதாம்,

விருந்தினரைப பேணுமல் இகழும பேதைமைதான உடைமையுளளே தோனறுகினற வறுமை எனபதும, அதனை அறிவில்லாதவரே உடையாராவர். எனபதும கூறியபடி.

பொருள் இல்லாமையையே வறுமை என்பர், ஆனால் அதன் உண்மையிலேயும் அஃதுண்டு என்பதும், அதன் இயல்பும், தேவர் இதில் வேறு உணர்த்தினார்.

குருடன் ஒளியுள்ள காலத்திலும் இருளையேயுடையவன். அதுபோல் மடையன், பொருளுள்ள காலத்திலும் வறுமையினையேயுடையவன் ஆவன் என்பது குறிப்பு.

ஒளியால் எய்தும் பயனைக் குருடன் தன் குருட்டுத்தன்மையால் எய்தாதவாறு போல், பொருளால் எய்தும் பயனை மடவார் தம் மடத்தன்மையால அடையார் என்பது கருத்து. மேல், விருந்தோம்பாதவன் பொருள் இழந்து கெடுவான் என்றார். இதில், அக்கேட்டை மடையனே அடைவான் என்றார்.

பொருள் பெற்றால் அதுகொண்டு விருந்தினரை ஓம்பவேண்டுமென்பதும் இல்லையானால் அதன் பயனை யிழந்து தாமும் இழி



வர் என்பதும், இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அலங்காரியால உணரப்படும்.

கதை.

இற்றைக்கு எழுநூறு வருடங்கட்கு முன்னர் வடமதுரையின் அருகில் இருந்த மருலூர் என்னும் நகரில் சாலுவன் என்னும் பெயரினையுடைய குறுநில மன்னன் ஒருவன் இருந்தான். அவன் இளந்தங்கையென்னும் மனைவியை மணந்தான். இருவரும் மகிழ்ந்து வாழ்ந்தார். இவர்பால் ஒரு புதல்வனும் புதல்வியும் தோன்றினார். நல்லண்ணன், நல்லதங்கை, என்று முறையே அம்மக்கட்குப் பெயரிட்டார். இவ்விருவரும் தமது இளமைப் பருவத்தே தம் பெற்றோரையிழந்தார். தளர்ந்து தேறினார். வளர்ந்து பருவமுற்றபின் நல்லண்ணன் தன் தங்கையைக் காசி மன்னனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். நல்லதங்கை தன் தமையனிடம் வரிசைகள் பல பெற்று மணமகனுடன் சென்று கலந்து வாழ்ந்தாள். மக்கள் எழுவரைப் பெற்றாள். மிக்க இன்பம் உற்றாள். வருங்கால் அங்குக் கொடிய பஞ்சம் ஒன்று தோன்றிற்று. அதில் மன்னன் தன் பொருள் முழுவதையும் குடிகளுக்கு உதவினன். முடியாமையால் குடிகளும் நாடும் குலைந்து அழிந்தன. மன்னன் வருந்தினன். நல்லதங்கை தனது நாயகனுடன் தன் அண்ணனிடம் வந்து தங்க விரும்பினாள். மன்னன் மறுத்தான். மனைவியை மாதிரம் தேற்றி மக்களுடன் அனுப்பினான். அவனும் பிரிவாற்றாது வருந்தினான். அதன்பின் மக்களையணைத்துச் சென்றாள். காடுகள் பல கடந்தாள் வாடிய மக்களுடன் மருலூர் வந்து சேர்ந்தாள். அவ்வமயம் அண்ணன் வேறூர் போயிருந்தான். அவன் மனைவி மட்டும் மனையில் இருந்தாள். அவள் பெயர் அலங்காரி. மிகக் கொடியவள். வன்மையும், புன்மையும், மடமையும் நிறைந்தவள். பசியால் வாடி, நடையால் மெலிந்து தளர்ந்து தள்ளாடிய மக்களுடன் உள்ளே நுழைந்த நல்லதங்கையைப் பாவி அலங்காரி முகங்கடுத்துப் பார்த்தாள். வா! என்று கூட அவள் வல்வாய் திறந்திலள். அங்கு முன் செல்வமாக வளர்ந்திருந்த



நல்லதங்கை யிதனை யெண்ணி யெண்ணி யுள்ளங்கொதித்தாள். பசியால் கலங்கி அழுது துடிக்கும் மக்களின்பொருட்டு நல்லதங்

கை அவள்பால் மெல்லச் சென்றாள். அண்ணீ! இக் குழந்தைகளுக்குக் கொஞ்சம் பழங் கூழேனும் கொடுங்கள் என்று கூசிக் கேட்டாள். படுபாவி அலங்காரி ஒன்றும் கலங்காமல் நின்றாள். மடித்த கேழ்வரகைச் சிறிது எடுத்துக் கடுத்த முகத்துடன் அடித்து வீசினாள். நல்லதங்கை பாவம்! என் செய்வாள். பிள்ளைகள் புழுவென்று துடிக்கின்றனர். அதனால் வீசியதையும் கூசாது எடுத்தாள். கூழாக்கினாள். அதில் பெரிதும் நொந்தாள். ஆக்கியதை ஆறுதற்குடிக்குமுன், அலங்காரி ஆக்கிய கொடுமைகள் பல. அவற்றை நினைந்து மக்களைத் தழுவி விழிநீர் சொரிந்து வெளியேறினாள். ஒரு காட்டில் புகுந்தாள். அங்கோர் பாழுங் கிணற்றில் மக்களோடு வீழ்ந்து மாய்ந்தாள். அண்ணனும் கணவனும் இவ்வுண்மையையறிந்தார். அங்குவந்தார். தாமும் உயிர்விடத் துணிந்தார். இறைவன் அருளால் இறந்தவர் எல்லோரும் எழுந்தார். அனைவரும் மகிழ்ந்தார். உடைமை பல வைத்திருந்தும் விருந்தோம்பாமையால் அலங்காரி பெருங்கேடடைந்தாள்.

செல்வமிருப்பினும் விருந்தோம்பாதவன் வறியனே என்பது இதனால் உணர்த்தப்பட்டது.



90 பண்டுதக்கன் மாறுபட்டுப் பார்த்தவுடனேயுமையாள்
கொண்டாள் குழைவென குமரேசா—கண்டெடுத்து
மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து (௰)

ப—ள

குமரேசா! தக்கன் மாறுபட்டுப் பார்த்தவுடனே என்

உமையார் வாடி நீங்கினர் எனின், அனிச்சப்பூ மோப்பக்குழையும், முகம் திரிந்து நோக்க, விருந்தினர் குழைவர் என்க.



அனிச்சம்—ஒருமரம். அது தன்னிடத்தில் தோன்று மலரையீண்டு உணர்த்தி நின்றது.

எடுத்து மோந்தால் அனிச்சம் வாடும், கடுத்துப் பார்த்தால் விருந்தினர் வாடுவர் என்றது, அருமையோடு அவரைப் பேண வேண்டும், என்பது கருதி. மலர்வகையில் மென்மையான அனிச்சப்பூவினும் விருந்தினர் மிகமென்மையராதலால் அவரை உள்ளன்போடும் இன்முகத்தோடும் போற்ற வேண்டுமென்பது குறிப்பு.

திரிந்து நோக்கினால் விருந்தினர் வருந்தி மீள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உமையால் உணரப்படும்.

தக்கன் செய்த அருந்தவத்தின் பெரும்பயனாக உமாதேவியார் அவனுக்குப் புதல்வியாக அவதரித்தார். பருவம் வந்தபின் பரமனைக் கலந்தார். இன்புடன் அமர்ந்திருந்தார். தக்கன் இங்கு உமாபதியை இகழ்ந்து வெகுளியால் ஒரு வேள்வி செய்தான். உமை அதைக் காணக்கருதினார். பதி தடுத்தார். தேவி பணிந்து நயந்தார். விடைபெற்று வந்தார். பண்டு தமக்குத் தந்தையாயிருந்தவன் அன்று செய்த வலவேள்வியை அம்மை வந்து கண்டார். காணவும் தக்கன் கடுத்தான். முகந்திரிந்து நோக்கினான். அம்மை அகந்திரிந்தார். வருந்தினார். வாடிநீங்கினார். வந்து பதியை வணங்கிக் கலந்தார். சென்றதும் நடந்ததும் செய்வதும் தெரித்தார்.

(இதன் விரிவைக் கந்தபுராணத்தில் உமைவரு படலத்தில் உணர்க.)

விருந்தினரை அன்போடும் இன்சொல்லோடும் பேணவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

விருந்தினரைப்பேணுவதே இவ்வுலகில் ஒருவன் இருந்துவாழ்வதற்குப்பயன். அமிழ்தமேயெனினும் விருந்திருக்க, ஒருவன் உண்ணலாகாது. விருந்தோம்புவான் வாழ்வு பாழ்படாது. அவன் மனையில் திருமகள் மனமகிழ்ந்து வாழ்வள். அவன் நிலம் தானே விளையும். இங்கு விருந்தினரைப் போற்றினவன் அங்கு தேவர்களால போற்றப்பெறுவான. தக்க விருநதைப் பேணினவன் மிக்க பயனையெய்துவான். விருந்தினரை ஓம்பாதவன் பொருளிழந்து பின் வருந்துவான். செல்வனாயிருந்தாலும் விருந்தோமபாதவன் வறியனேயாவன். அன்பு கலந்த இன் சொலோடு விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்பனவாம.

கூ-வது விருநதோம்பல் முற்றிற்று.

# ய-ம் அதிகாரம் இனியவை கூறல்.

அஃதாவது இனிய சொற்களைச் சொல்லுதல். விருந்தோம்புவார்க்குப் பொருந்தியிருக்கவேண்டிய திருந்திய குணங்களுள் இனியவைகூறல் கனி சிறந்ததாதலான் இஃது ஈண்டு வைக்கப் பெற்றது. அதிகாரத்தின் தொடர்பும் இதனானே தெளிவாம்.



91 மாறில் உயர்சவரி வாய்ச்சொல்லை யின்சொலென்று
கூறினர் என்னே குமரேசா—கூறுகின்ற
இனசொலால் ஈரம் அளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

இ—ன்

குமரேசா! சவரியினது வாய்ச்சொல்லே இன்சொல் என்று ஏன் சொன்னார் எனின், ஈரம் அளைந்து படிறு இலவாகின்ற



செம்பொருள் கண்டாரது வாய்ச்சொல்லே, இன்சொல் என்க. ஆல, அசை.

ஈரம் அளைந்து—அன்பு கலந்து அளைந்து என்னும் வினை யெச்சம் அளைஇ என அளபெடுத்து நின்றது. இது சொல்லிசை அளபெடை. படிறு—வஞ்சனை அஃதாவது உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று சொல்லல் செம்பொருள் என்றது அறத்தினை.

அன்போடுகலந்து, வஞ்சனையில்லாத அறமுடையார் வாய்ச் சொல்லே இன்சொல என்பது கருத்து.

ஏதாவது ஒரு காரணம்பற்றி அன்பு இல்லாத வஞ்ச நெஞ்சினர் வாயிலும் இன்சொல காணப்படும். ஆயினும், அவற்றை மெய்யென்று கொள்ளலாகாது என்பது குறிப்பு.

அன்பும, மெய்மையும், பொருந்திய அறம்உணர்ந்தார் வாய்ச் சொல்லே யின்சொல் என்பது இதில உணர்த்தப்பெற்றது. இவ் வுண்மை சவரிபால் உணரப்பெறும்.

கதை

சவரி என்பவள் ஒரு தவ முதுமகள். மதங்க முனிவரது சாரலில் இருந்தாள் முனிவர் பலரும் புகழுதற்க்க துறவொழுக்கத்தையுடையவள் உலர்ந்த இலைகளையும, உதிர்ந்த கனி காய்களையுமே தனக்கு உணவாகக்கொண்டு நெடுங்காலம இந்நிலத்தில் நிலைத்திருந்தாள். ஆருயிர்கள்மாட்டு அன்பும் இனசொல்லும் அமையப்பெற்றவள். இராமன் கவந்த வனத்தைக் கடந்து சீதை

யைத் தேடித் தன் தம்பியோடு தளர்ந்து அவ்வழி வரும் காலத்தில் அவரை யெதிர்கொண்டு கண்டாள் அளவில் உவகை கொண்டாள். தனது தவச்சாலைக்கு அவ்விருவரையும் அழைத்துச்சென்றாள். தனது மெய்யுணர்வால் அவர் வருகையை முன்னரே யுணர்ந்து அவர் பொருட்டுத் தொகுத்து வைத்திருந்த இனிய கனிகளையெடுத்துக் கொணர்ந்தாள். முன் வைத்தாள்.



உண்ணும்படி இராமனைத்தொழுதாள். அன்புகலந்த இன்சொற்களை மனமுவந்து கூறினாள். சவரி சொன்ன இனிய மொழிகளைச் செவிக்கு உணவாகவும் அவள் தந்த அரிய கனிகளை வாய்க்கு உணவாகவும் இராமர் கொண்டு மகிழ்ந்தார். அதன்பின் கிட்கிந்தைக்கு அவள் கூறியவழியே தம்பியோடு சென்றார். அவளும் அழிவில் இன்பத்தை யெளிதில் எய்தினாள்.

ஆண்டவள் அன்பினேத்தி யழுதிழி யருவிக்கண்ணள்
மாண்டதென் மாயப்பாசம் வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம் போயது பிறவி யென்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க விருந்துசெய் திருந்தகாலை.

அனகனும் இளையகோவும் அன்றவ ணுறைந்த பின்றை
வினையறு நோன்பி னாளும் மெய்ம்மையி னோக்கி வெய்ய
துனைபரித் தேரோன் மைந்தன் இருந்தஅத் துளக்கில் குன்றம்
நினைவரி தாயற் கொத்த நெறியெலாம் நினைந்து சொன்னாள்.

விடையுறும் கலையுங்கான மெய்ந்நெறி வெளியிற் றூக்கக்
காட்டிடும் அறிஞரென்ன அன்னவள் கழறிற் றெல்லாம்
கேட்டனன் என்ப மன்னோ கேள்வியால் செவிகள் முற்றும்
தோட்டவர் உணர்வி னுண்ணும் அமுதத்தின் சுவையாய்நின்றான்.

(இராமாயணம்)

இன்சொல் இயல்பு இதனால் உணர்த்தப் பெற்றது.

92. கண்டு முகமலர்ந்து கண்ணன் குசேலரையேன்
கொண்டினிமை செய்தான் குமரேசா—அண்டி
அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின். (உ)

-ள.

குமரேசா! கண்ணன் முகமலர்ந்து எதிர்கொண்டு குசேல
ரை யேன் இன்சொல்லால் உபசரித்தான் எனின், அகன் அமர்ந்து



ஈதலினும் ஒருவன் முகன் அமர்ந்து இன்சொலன் ஆகப்பெறின்
நன்று என்க.

அகன் அமர்ந்து=மனம் உவந்து.
முகன் அமர்ந்து= முகமலர்ந்து.

அமர்தல் என்பது பொருந்தல், விரும்பல், பொலிவு முதலிய பல பொருள்களை உணர்த்தும் ஒரு சொல். இனியமுகமும் இன்சொல்லும் ஒருவனுக்கு ஒருங்கே அமைதல் அருமை என்பது கருதி, பெறின் என்றார்.

மனம் உவந்து பொருள் கொடுத்தலினும், முகமலர்ந்து இன்சொற் சொல்லுதல் இல்வாழ்வானுக்கு நல்லது என்பதாம்.

ஈதலை மனமகிழ்ந்து செய்தல் வேண்டும் என்பதும், இன்சொல்லை முகமலர்ந்து கூறல் வேண்டும் என்பதும், கூறியபடி.

அகம் உவகையாலும், பொருள் ஈகையாலும், முகம் நகையினாலும், மொழி இனிமையாலும், பெருமை எய்தும் என்க.

ன் நன்று' என்பதில் ஒப்புப்பொருளுந்தோன்றும்.
பொருளுடையவர் தானஞ்செய்து அதனால் எய்தும் பயனை அஃதில்லாதவர் இன்சொல்லால் இனிது எய்தலாம் என்பது குறிப்பு.

ஈதலினும் இன்சொல்லே நன்று என்பது இதில் காட்டப்

பெற்றது. இவ்வுண்மை கண்ணன்பால் காணப்பெறும்.

கதை.

திருமாலின் ஓர் அவதார மூர்த்திக்குக் கண்ணன் என்று பெயர். இற்றைக்கு ஐயாயிரத்து ஐம்பது வருடங்கட்கு முன்னர் வடமதுரையில் வசுதேவருக்கும் தேவகிக்கும் புதல்வராய்த் தோன்றினர். கோகுலத்தில் நந்தகோபன் என்னும் இடையர் தலைவன் வீட்டில் வளர்ந்தார். விநோதமான பல்வகை யற்புதங்களைச் செய்து இளமைப் பருவத்தில் இவர் எல்லாருக்கு மகிழ் வூட்டி வந்தார். இவரது தோற்றம் நடை உடை செயல் மொழி



எல்லாம் இன்பகரமானவை. பருவமுற்றபின் வடமதுரையைத் தனக்கே உரிமையாகப் பெற்றார். அதன்பின் மேல்கடலிடையே அருமையான பெரிய நகரம் ஒன்றை அமைத்தார். அதற்குத் துவாரகை யென்று பெயர் அதன் பொருவளத்தால் குடிகள் பல குழுமின. உயர்வுற்றன. எண்ணரிய சிறப்புடன் கண்ணன் அதிலிருந்து அரசு புரிந்தார். புரியுங்கால் இவரது பள்ளித்தோழராகிய குசேலர் வறுமையால் வாடி இவரை நாடிவந்தார். அவ்வமயம் சிறந்த அரண்மனையில் உயர்ந்த ஆசனத்தில் சத்தியபாமை உருக்குமணி முதலிய பத்தினிமார்கள் புடைசூழ மிக்க மகிழ்வுடன கண்ணன வீற்றிருந்தார். குசேலர் வருகையைக் கண்டவுடனே தமது இனிய மனைவிமார் அனைவரையும் விடுத்துத் தனியே யெழுந்தார். விரைந்தெதிர்சென்றார். மெய்யன்போடு முகமலர்ந்து தொழுதார். தழுவினர். இனியமொழிகள் பல இன்புற இயம்பினர். அரண்மனைக்குள் அழைத்துக் கொணர்ந்தார். மணியிழைத்த ஓர் அரியாசனத்தில் இருத்தித தம்துணைவிகளோடுபெரிதும் உபசரித்தார். கண்ணன் இனியமுகத்தையும், இன்சொல்லையும், அன்புறு செயலையும் கண்டும், கேட்டும், பெற்றும்,

குசேலர் வழிபோவதை யுணர்ந்தார்.

(இதன் விரிவைப் பாகவத முதலிய நூல்களில் உணர்க.)

எண்ணானைக் கலந்த மார்பம் சுந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலயிடமுறக்கொண்டானை
மண்ணனைத் துமபுரக்கும் வாசுதேவனை யனைத்தும்
கண்ணனைத் துளபத் தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான்.
கண்டலும் உவகை பூத்தும் கால்விசை யோடு நடந்தான்
ஆண்டகை யவனும் கண்ணுற்றனையுடைத் தெழுநீத் தம்போல்
நீண்டபூம் பள்ளிநீத்து நிலவும் பேரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்றுபொன்னடி வணங்கினான்.
மன்னுடைய மறையனைத்தும் வகுத்துணர்ந்த மாதவனே
யுன்னுடைய தரிசனத்தால் உடம்புபூரித் தனன்யான்
மின்னுடைய விளங்கொளிவேல் வேந்தருளுந் தேவருளும்
என்னுடைய பெறலரும்பே றியார்பெற்றார் யார்பெறுவார்.

198 திருக்குறட் குமரேச வெண்பா.

இவை குசேலரைக் கண்டபொழுது கண்ணன் சொல்லிய இன்சொற்கள். (குசேலோபாக்கியானம்.)

இனிய முகத்தோடு இன்சொற் சொல்லுதல் இல்வாழ்வானுக்கு மிகவும் நல்லது என்பது இதனால் கூறப்பெற்றது.

93. கண்டான் இனிதாகக் கண்ணனையேன் இன்சொலுடன்
கொண்டான் விதுரன் குமரேசா—கொண்டு
முகத்தான் அமர்ந்தினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே யறம். (௩

குமரேசா! விதுரன் என் கண்ணனை இனிதாக நோக்கி இன்சொல்லால் போற்றினன் எனின், முகத்தான் விரும்பி இனி

தாக நோக்கி அகந்தான ஆம் இன்சொலினதே அறம் என்க.

அகத்தான் ஆம் இன்சொலினதே அறம்—மனமகிழ்வோடு பொருந்திய இனிய மொழிகளைச் சொல்லுதலின் கண்ணதே அறம்.

மேல், ஈதலினும் இன்சொல்லே நன்று என்றார்; ஈதல் அறம் அன்றோ? அதனினும் இன்சொல் எங்ஙனம் நன்றும், எனபாரை நோக்கி இதுகூறினார்.

ஈதலானும், இனியது கூறலானும், அறம் உண்டாம் எனினும், முன்னது, இழிந்தாரிடத்துந் தங்கி மறுப்புரிதற் றம் துணைபுரிந்து நிற்கும் பொருள் வயத்ததாம். பின்னது, உயர்ந்தாரிடத்தேயோன்றி அறம் ஒன்றையே வளர்க்கும் அருள்வயத்ததாம். ஆதலால் "இன்சொலினதே அறம்" என்று எடுத்துக் கூறினார். ஏகாரம்

ஆயின், இன்சொல்லே அமையும், ஈதல் வேண்டாவோ எனின், அன்பு கலந்த இன்சொல்லுடையார் என்பையும் பிறர்க்கு இன்புற ஈவர் ஆதலால், அவர்பால் அஃது இயல்பாகவே அமைந்திருக்குமென்க.

10-ம் அதிகாரம் இனியவை கூறல். 199

இன் சொல்லோடுகூடிய ஈதலே அறமாம் என்பது கருத்து. அகமகிழ்ந்து, முகமலர்ந்து, இனிது நோக்கி, இன்சொல் மொழிந்து விருந்தினரைப் பேணவேண்டுமென்பது இதின் உணர்ந்தப்பெறுறது. இவ்வுண்மை விதுரன்பால் உணரப்பெறும்.

## கதை.

விதுரன் என்பவன் இற்றைக்கு ஐயாயிரவருடங்கட்கு முன்னர் அத்தினபுரியில் திருதராட்டிரன் தாயாகிய அம்பிகையின் தோழியியற்றில் வியாசர் அருளால்பிறந்தவன். திருதராட்டிரன்

ரன் என்னும் அவர்களுக்குத் தம்பியாவன். இவன யமனுடைய அம்சம். சிறந்த வில்வீரன. சிறியதந்தையாயும், மந்திரியாயும் இருந்து துரியோதனனுக்கு உதவிபுரிந்து வந்தான. நல்ல குணங்களெல்லாம் இயல்பாகவே அமையப் பெற்றவன். கண்ணன் பாண்டவர்களுடைய தூதனாய் அத்தினபுரிக்கு வந்த காலத்தில் அரசனான துரியோதனன் அவனைச் சிறிதும் மதியாமல் மனச்செருக்குற்று இருந்தான். இவன் மாத்திரம் அரச சபையை விட்டெழுந்து அன்போடு கண்ணனை யெதிர்கொண்டு சென்றான். இனிதாகக் கண்டான். அகமகிழ்ந்து தொழுதான். மெய்யன்புடன் இனிய பலமொழிகள் அவர் இன்புறக் கூறினன். தன்னை நாடிவந்த கண்ணனைத் தமது இல்லில் எழுந்தருளச் செய்தான் அதன்பின் அமுதனைய வுணவை விரைவில் ஆக்கி விருந்து செய்தான். கண்ணன் உண்டுகளித்தான். விதுரனது உள்ளன்பை உணர்ந்தும், விருந்தின் சிறப்பை வியந்தும், முகனமர்ந்து கூறிய அவனதுஇனியமொழிகளைக் கேட்டும் கண்ணன் பெருமகிழ்வு கொண்டான். விதுரன் அறமுடையனாய் அருள்நிலையுற்றான்.

இதன் விரிவைப் பாரதத்தில் உணர்க.

உள்ளினன் உணர்ந்துளமுமு உருகினன் எழுந்து
துள்ளினன் விழுந்திணையடி சூடினன் துயரைத்
தள்ளினன் மலர்த்தடக்கையால் தத்துவ அமுதை
அள்ளினனெனக் கண்களால் அருந்தினன் அனியோன்.

200 திருக்குறட் குமரேச வெண்பா.

முன்னமேதாயின் றருளிய முதுமறையோ தகியோ
பன்னகாதிபப் பாயலோ பச்சையா லிலையோ
சொன்ன நால்வகைச் சுருதியோ கருதிநீ யெய்தற்
கென்னமாதவஞ் செய்ததிச் சிறுகுடில் என்றான். (பாரதம்.)

கண்ணனைக் கண்டகாலத்தில் விதுரன் இன் சொல்லோடு

அகனமர்ந்து காட்டிய அன்பின் திறம் இவற்றால் நன்கு தெளிவாம். இன்சொல்லே, சிறந்த அறம் என்பது இதனால் கூறப்பெற்றது.



94. ஏதச் சிறையிருந்தும் இன்சொற் புகழேந்தி
கோதற்றேன் துய்த்தார் குமரேசா—தீதற்ற
துன்புறூஉம் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. (௪)

இ—ள்.

குமரேசா! இனிய சொல்லையுடைய புகழேந்தி யென்னும் புலவர் தலைவன் சிறைப்பட்டிருந்தும் ஏன் சுவைநிரம்பிய உணவு களைத் துய்த்தார் எனின், யார்மாட்டும் இன்பத்தை உறுவிக்கும் இன்சொல்லையுடையவர்க்குத் துன்பத்தை மிகுவிக்கும் துவ்வா மைஇல்லாகும் என்க. துவ்வாமை=வறுமை.

துவ்வல்=அனுபவித்தல். அஃது இங்கு எதிர் மறையாய் நின்று வறுமையை யுணர்த்திற்று.

மேல், இன்சொல்லே அறம் என்றார், ஆயின், அதன் பய னாகிய இன்பத்தை அவ் இன்சொல்லையுடையவர் அடைவரோ! என்பாரை நோக்கி யிதுகூறினர்.

இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லையுடையார்க்குத் துன் பத்தை மிகுவிக்கும் துவ்வாமை உண்டாகாது என்பது கருத்து.

இனியவை கூறுவார், வறுமை கூரார் என்பது குறிப்பு.



இன்சொல்லையுடையவர் என்றும் எவ்விடத்தும் இன்புறுவர் என்பது இதில் உணர்த்தப் பெற்றது. இவ்வுண்மை புகழேந்தி பால் உணரப்பெறும்.

## கதை.

புகழேந்தி என்பவர் தொண்டை மண்டலத்திலே பொன்விளைந்த களத்தூர் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தார். பல நூல்களையும் பயின்று இளமையிலேயே இவர் புலமை நிரம்பினார். புகழுக்குரிய குணங்கள் பலவும் பொருந்தப் பெற்றார். இங்ஙனம் அவர் பெயரானே தெளியலாம். இவர் தோன்றிய காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரவருடங்கட்கு முன்னராகும். அக்காலத்தில் மதுரையிலிருந்த பாண்டிய மன்னன் இவரை விரும்பிப் போற்றிவந்தான். வருங்கால் தனது அருமைப் புதல்விக்கும் குலோத்துங்க சோழனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. மருகரோடு மகளை அவன் நகரத்துக்கு அனுப்புங்கால் மன்னன் தன் புதல்விக்கு ஆதரவாகப் புகழேந்தியையும் உடன் அனுப்பினான். அரசிளங்குமரியும் மனமகிழ்ந்து சென்றாள். சென்று சேர்ந்தபின் அங்கு அரசகுருவாயிருந்த ஒட்டக்கூத்தர் என்னும் புலவர் தலைவனுக்கும் புகழேந்திக்கும் பகைமை வளர்ந்தது. கூத்தர் மதிநலமும் வன்குணமும் வாய்ந்தவர். புகழேந்தி மனநலமும் இன்குணமுமுடையவர். இவ்விருவருக்கும் இடையே தோன்றிய பகைமை நாளுக்கு நாள் அதிகரித்து வளர்ந்தது. அதனால் அரசன் அன்பைத் தனக்கு முழுதும் உரிமையாக்கொண்டிருந்த கூத்தர் நமது புகழேந்தியைச் சிறைப்படுத்தினார். இனிய உணவொன்றும் அங்கு இடாதபடி செய்தார். ஆயினும் நமது புலவர்பெருமான் தமது இனியமொழிகளால் அமுதனைய உணவை நாளும்பெற்று நன்குதுய்த்தார். அனைவரும் இவர்பால் அன்புற நடந்தார். சிறைக்கூடத்தின் அருகே தண்ணீர்க்குச்செல்கின்ற பெண்கள் உணரும்படி பழைய கதைகளை எளிய நடையில் இனிமையாகப் பாடினார். அவைதாம் இதுபொழுது வழங்கிவருகின்ற, அல்லியரசாணிமாலை, பவழக்கொடிமாலை, என்பன. இவரது விழுமிய நளவெண்பாவுக்கும் இவற்றிற்கும் பெரிதும் வேறுபாடு உண்டு. இவர் இன்புறுகின்ற

இன்சொல்லே எவரிடமும் உடையவர். கூத்தரும் இவரது பெருந்தன்மையை யுணர்ந்து தான் கொண்டிருந்த பகைமையை நீக்கினார். உவகையோடு உறவு பூண்டார். இன்புறும் இன்சொல்லுடையார்க்குத் துன்புறும் துவ்வாமை இல்லை என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவை இவர் சரிதத்தில் உணர்க)

இன்சொல்லுடையார்க்கு வறுமை யில்லை என்பது இதனால் கூறப்பெற்றது.

95. பண்பிடன் இன்சொல்லும் பணிவும் அணியாக்
கொண்டான் அனுமான் குமரேசா—கொண்ட
பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்
கணியல்ல மற்றுப்பிற. (௫)

இ—ள்.

குமரேசா! அனுமான் பணிவையும் இன்சொல்லையும் தன் அணியாகக் கொண்டான் எனின், பணிவு உடையன் இன்சொலன் ஆதலே ஒருவனுக்கு அணி என்க.

பிற அல்ல—மற்றவை அணி ஆகா.

பிற வந்ததினால் மற்று அசையாய் நின்றது.

பிற என்றது பொன் மணி முதலியவற்றால் உளவாம் அணிகளை. உடல் அழகுறாப் படி அணியும் பொய்யணியினும் ஒருவனுக்குச் சிறந்த மெய்யணி இனிய மொழியும், பணிவுடைமையுமே யாம் என்பது கருத்து. அணி உடற்கு அழகு செய்வதுபோல் இவை உயிர்க்கு அழகு செய்யும் என்க. ஒருவன் மெய்யினும் வாயினும் அமைந்திருக்கவேண்டிய நலங்களை யிதில் உணர்த்தினார். இனியவை கூறலே இங்கு உரிமையாயினும் அதற்கு இனமாதலால் பணிவையும் உடன் கூறினார்.

இனிய மொழியையும், பணிவையுமே ஒருவன் தனக்கு அழகாகக் கொள்ளல்வேண்டும் என்பதும், இவ்வணிகளையுடையவரையே யுலகம் நனி விரும்பும் என்பதும் இதில் உணர்த்தப்பெற்றது. இஃது அநுமான்பால் உணரப்பெறும்.

## 10-ம் அதிகாரம் இனியவை கூறல். 203

### கதை.

அநுமான் என்பவன் வாயுவின் கலையாய் இவ்வுலகில் அவதரித்த ஒரு வானரவீரன். தாய்பெயர் அஞ்சனை. தந்தை கேசரி. கிட்கிந்தா சாரலில் சுக்கிரீவனோடு அநுமான் தங்கியிருந்தான். அவ்வமையம் இராமர் அங்கு வந்தார். அவரைக் கண்டவுடனே அநுமான் பேரன்பு கொண்டான். உள்ளம் உருகினான். பணிந்து தொழுதான். அன்புறு மொழிகளை யின்புறக் கூறினான். அவனது பணிவுடைமையையும் இன்சொல்லையும் கண்டு இராமர் பெருமகிழ்வுற்றார். தனக்கு உயிர்த்துணையாக உடன் கொண்டு சென்றார். அதன் பின் அநுமான் புகழ் உலகெங்கும் உயர்ந்தோங்கியது. அறிவு, ஒழுக்கம், ஆண்மை, வீரம், பொறுமை, அடக்கம் அன்பு, பணிவு முதலிய உயர் குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றான். சொல்வன்மையில் எவரும் தனக்கு நிகரில்லாதவன். எத்தகைய அரிய காரியங்களையும் எளிதில் முடிக்கும் இயல்பினையுடையவன். இவனது குணங்கள் முழுவதையும் இராம சரிதமாகிய காவியவுலகில் இன்புறக் காணலாம். அங்கு அவை உயிர் பெற்று ஒளிவீசி உலாவுகின்றன. அவற்றுள் இவன் பணிவுடைமையைப் பல இடங்களிலும் பலமுறைக் காணலாம்.

தன்னாவினா லன்பினொ டுதயாவுடைமை யால்வரு தருக்கறுத லால்

எல்லாரு முருகியவ யாவுறினை—யுறு இயற்று மியல்பால்
நல்லவரை யின்சொலா லாளாயினுங் கடுங் குறைமிகுந்துடையையால்
மண்ணுலகில் விண்ணுலகில் மாறுதியை யொக்குமவர் யாருமிலையால்.
(அநுமப்படலம்.)

இனிய மொழியும் பணிவுமே ஒருவனுக்கு உயிரணி என் பது இதனால் உணர்ந்தப் பெற்றது.

96. நன்றன நீதிகளை நாடியே சுகமுனி
குன்றுமற் சொன்னார் குமரேசா—குன்றுத
அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி யினிய சொலின். (௬)





குமரேசா! சுகமுனிவர் தவஞ்செய்யாமல் நீதிக்கதைகளை யே ஏன் ஓதிக்கொண்டிருந்தார் எனின், நல்லவை நாடி இனிய சொலின், அல்லவை தேய அறம் பெருகும் என்க.

அல்லவை= அறம் அல்லாதவை: பாவங்கள் என்றபடி.

மேல், இன்சொல்லை உயிர்க்கு உயர்ந்த அணி என்றார். இதில், அதனை யுடையார்க்கு உளவாம் பயனை உணர்த்தினார்.

பிறர் நலமுற இனிய மொழிகளைச் சொல்லுகின்றவனுக்கு அறம் பெருகும் என்பதாம்.

"விளக்குப் புக இருள்மாய்ந் தாங்கு ஒருவன் தவத்தின்முன் நில்லாதாம் பாவம்" என்றதனால் தவம் நன்மை அல்லதைத் தேய்க்க வும் அறத்தை வளர்க்கவும் வல்லது. அதன் பயனை இனியசொல் லையுடையார் எளிதில் எய்துவார் என்பது கருத்து.

விரதங்காத்து வருந்திச் செய்யத்தக்க தவத்தின் பயனை இனிய சொல்லால் ஒருவன் எளிதில் அடைவான் என்பது இதில் உணர்த்தப் பெற்றது. இது சூதமுனிவர்பால் உணரப்பெறும்.

## கதை.

சூதமுனிவர் என்பவர் உரோமகருஷணர் என்று பெயர் பெற்றிருந்த ஒரு மாதவன் புதல்வர். வியாச முனிவரது மாணவர் பலருள் முதன்மை வாய்ந்தவர். இதிகாசங்கள் புராணங்கள் முதலிய பல நூல்களையும் வழுவறக் கற்றவர். சிறந்த சொல்வன்மை யுடையவர். சவுனகர் முதலிய முனிவர் பலர்க்கும் வேத மந்திரங்களையும் நீதிமுறைகளையும் ஓதிவந்தார். அரிய பொருள்களையெல்லாம் புராணக் கதைகளிற் பொருத்தி எளிய முறையில் எவர்க்குந் தெளிவாகப் போதித்தார். உதங்கர் முதலிய சீடர் பலரையும் இவர் உடையராயிருந்தார். இவருடன் இருந்த முனிவர் பலர் அருந்தவம் புரிந்தார். சிலர் விரதங்கொண்டு மோனமுற்றிருந்தார் இவர் மட்டும் நீதிகளை ஆராய்ந்து பிறர் இன்புற இனிதாகச்சொல்



ார். இவ்வாறு இனிய சொல்லால் தெளிந்து நன்மையடைந்த அரசரும் முனிவரும் பலராவர். சென்றவிடமெல்லாம் புராண படனமே இவர் செய்தார். பாண்டவர்களும் இவருடைய ஆச்சிரமத்தில் சிலகாலந் தங்கியிருந்தார். இவரது இனிய சொல்லால் அவர்தங் கவலை நீங்கினர். பிறர் வருந்திச் செய்த தவத்தின் பயனை இவர் இன்சொல்லால் முழுதும் பெற்றார். நல்லவை நாடி இனிய சொலின் அல்லவை தேய அறம் பெருகும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (இதன் விரிவை சூதசங்கிதையில் உணர்க.) இன்சொல்லால் அறம் வளரும் என்பது இதனால் கூறப்பட்டது.

97. தேடியசீர்ச் சேக்கிழார் செப்பியவோர் சொல்லாலென்
பேரு நலம் கொண்டார் குமரேசா—நாளும்
நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். (எ)

இ—ள்.

குமரேசா! சேக்கிழார் ஒரு சொல்லால் என் பல நலங்களைப் பயந்தார் எனின், பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல் நயன் ஈன்று நன்றி பயக்கும் என்க.

பண்பின் தலைப்பிரியாச்சொல்—இனிமையாகிய குணத்தில் நின்றும் நீங்காத சொல். இன்சொல் என்றபடி.

தலைப்பிரிதல்—நீங்குதல். நயன்ஈன்று நன்றிபயக்கும்—நன்மையை யுண்டாக்கி அறத்தையும் கொடுக்கும்.

பயன் பொருந்திய இனிய சொல்லால் ஒருவனுக்கு நயனும் நன்றியும் உளவாம் என்பது கருத்து. ஒருவன் சொல்லுகின்ற மொழியில் இனிமையும், அதன் பொருளில் பிறர்க்கு ஏதாவது ஒரு பயனும், அமைந்திருத்தல் வேண்டுமென்பது குறிப்பு.

பயனுடைய இன்சொல்லால் ஒருவன் அறமும் இன்பமும் அடைவான் என்பது இதில் உணர்த்தப்பெற்றது. இவ்வுண்மை சேக்கிழார்பால் உணரப்பெறும்.



## கதை

சேக்கிழார் என்பவர் தொண்டை மண்டலத்திலே குன்றத்தூர் என்னும் ஊரிலே வேளாள குலத்திலே தோன்றினார். பல கலைகளையும் பயின்று இளமையிலேயே இவர் புலமை நிரம்பினார். மதிநலத்தோடு பணிநலமும் அமைவுறப் பெற்றார். அக்காலத்தில் அரசாண்டிருந்த அநபாய சோழன் இவர் தகைமையா

இம்மையினும் மறுமையினும் இன்பந்தரும் எனக.

சிறுமை=புன்மை. உள்—ஐந்தாம் வேற்றுமை உருபு. அது நீக்கப்பொருளை உணர்த்தி நின்றது.

சிறுமையுள் நீங்கிய இன்சொல்=புன்மையில் நின்று நீங்கிய இன்சொல். அஃதாவது பிறர் இன்புறத்தக்க இனியசொல்.

நன்மொழிகளை இனியவையாகச் சொல்லுகின்றவர்க்கு இருமையினும் இன்பம் உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பெற்றது. இவ்வுண்மை திரிசடையால் உணரப்பெறும்.

கதை.

திரிசடை என்பவள் விடணன் திருமகள். மெய்யுணர்வுடையவள். இராவணன் அசோகவனத்தில் சீதையைச் சிறையிலவைத்திருந்த காலத்தில் தன் தந்தையாகிய இவளை அந்த அம்மைக்குத் துணையாக உடன் இருக்கினன். உடனிருந்த அரக்கியர் பலரும் இரக்கம் இல்லாமல் வன்சொல் வழங்கிச் சீதைக்குத் துன்பஞ் செய்தனர். இவள் மாத்திரம் சிறுமை நீங்கிய இனிய சொல்லால் சீதையை நாளும் நன்கு தேற்றினள். இவளது அன்புடைமையையும் இன்சொல்நலத்தையும் அனுமான் அடுக்கடுக்கப் புகழ்ந்து போற்றினர். அரக்கியரனைவரும் துயின்றபின்னர் இராமபத்தினி இவளிடம் சிலமொழிகள் கூறித் தேறினர். இவளது குணநலங்கண்டு தன் தாயென்றே கொண்டார். வன்சொற்கூறிய அரக்கியர் பலர் குமையிழந்தார். தன் தந்தை அரசுரிமைபெற இவள் பின் இருமைஇன்பமும் பெற்றனள். (விரிவு சரிதையில் விளங்கும்)

இருமையினும் இன்சொல் இன்பந்தரும் என்பது இதனால் கூறப்பெற்றது.



99. மாறில் விதுரனின்சொல் மாண்புகண்டு மன்னவனேன்
கூறினன் வன்சொல் குமரேசா—கூறுகின்ற
இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. (௯)

குமரேசா! விதுரன்கூறிய இன்சொல்லைக்கேட்டிருந்தும் என் வன்சொல்லைத் துரியோதனன் வழங்கினன் எனின், இன்சொல் இனிது ஈன்றல் காண்பான் வன்சொல் வழங்குவது யாது பயன் கருதியோ என்க.

வன்சொல் வழங்குவது—வன்சொல்லைச் சொல்வது.

பிறர் கூறுகின்ற இன்சொல் தனக்கு இன்பந்தருதலைத்தான் அனுபவித்தறிந்தும் அதனை விடுத்து ஒருவன் வன்சொல்லைச் சொல்வது என்ன பயன் கருதியோ யான் அறிகிலேன் என்று தேவர் ஐயமுறக் கூறியது அவனது அறியாமைக்கு இரங்கி என்க.

வன்சொல் வழங்குவது தீதென்று வேதம் விதித்துள்ளது அதனை நூலறிவால் தெளிந்து விலகவேண்டும். அஃதியலாவிடினும் அனுபவத்தால் உணர்ந்த பின்னேனும் அதனை ஒழிக்கவேண்டும். அங்ஙனம் உணர்ந்திருந்தும் ஒருவன் அதனை வழங்குவனேயின் அவனறிவு பயனற்றது என்பதாம். வன்சொல்லைச் சொல்லுதல் அறிவுடைமைக்கு அழகன்றென்பது குறிப்பு.

இன்பம்பயக்கும் இன்சொல்லை விடுத்துத் துன்பம் பயக்கும் வன்சொல்லை ஒருவன் சொல்வது அவன் துன்புறுதற்கு ஏதுவாம் என்பது இதில் உணர்த்தப்பெற்றது. இவ்வுண்மை துரியோதனன்பால் உணரப்பெறும்.

## கதை.

கண்ணன் அத்தினபுரிக்குத் தூதாகவந்த காலத்தில் விதுரன் எதிர்சென்று உபசரித்து அவரைத் தமது இல்லில் எழுந்தருளச் செய்து அவருக்கு உரியதோர் விருந்தை உவந்து செய்ததைத் துரி

யோதனன் தெரிந்து சினந்தான். அதுகாரணமாக அரச சபையில் வைத்துத் தனது சிறியதந்தை யென்பதையும் பாராமல் வைதான். விதுரன் கூறிய இன்சொற்களால் இன்புற்றிருந்தும் துரியோதனன் வன் சொற்களையே வழங்கினன். பொது மகள் மகன் என்றும் புல்லியன் என்றும் செவிகைக்கும்படியான பல வசை மொழிகளைவாரி யிறைத்தான். அதனால் வெறுப்புற்ற விதுரன் தனது வெற்றிவில்லை இற்றுக முறித்தான். அவனை இனிவாகநினைத்து வெளியேபோனன். வில்வலியிற் சிறந்த விதுரனது உதவியையிழந்ததனல் அவன் பெருந்துயருழந்தான். பின்பேதுற்றிறந்தான்.

ன்சொல்லை ஒருவன் கூறலாகா தென்பது இதனல் கூறப்பெற்றது.

---

100. என்னே சிசுபாலன் இன்னத கூறியுடன்
சொன்னே மடிந்தான் குமரேசா—அன்னே
இனிய வுளவாக இன்னத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (ய)
இ—ள்.

குமரேசா! சிசுபாலன் இன்னுதனகூறி என் உடனே மடிந்தான் எனின், இனியமொழிகள் உளவாக இன்னுதனகூறல் கனிகள் இருப்பக் காய்களைக் கவர்ந்ததமைறே ஒக்கும் என்க.

இன்னுதசொல்=வன்சொல்.

இனிய இன்னுத என்பன பெயர் எச்சங்கள். இனி, வினையாலணையும் பெயராகவும் இவை கருதப்படும்.

தன்னிடத்தில் இனிய சொற்கள் உளவாயிருப்ப, அவற்றைக் கூறாமல் இன்னாத சொற்களை ஒருவன் கூறுதல், எதுபோல்வது எனின், இன்பம் பயக்கும் இனிய கனிகளை நுகராமல், துன்பம் பயக்கும் கடிய காய்களைத் தின்றல் போல்வதாம் என்க.



இன்பமே விரும்பும் இயல்பினையுடைய மக்கள் அதனைப் பயக்கத்தக்க இனசொல்லை விடுத்து, துன்பம் பயக்கத்தக்க வன்சொல்லைச் சொல்லுவது பெரும்பேதைமையாம் என்பது கருத்து.

நச்சுக்காய்களை யுண்டவன் நாசமுறுதல்போல் வன் சொற்களைச் சொல்பவன் மாசடைந்து மாய்வன் என்பது குறிப்பு. இவ்வுண்மை சிசுபாலனபால் தெளியப்படும்.

## கதை.

சிசுபாலன் என்பவன் சாத்துவதிக்கும், தமகோடன் என்பவனுக்கும் புதல்வனாய்த் தோன்றினான். கண்ணனுக்கு இவ்மைத்துனனவன். மிக்க வலிமை யுடையவன். இவன் பிறவி மிக்க அற்புத முடையது. மூன்று கண்களும் நான்கு கைகளும் இவன் மேனியில் பொருந்தி யிருந்தன. தாயும், தந்தையும், இவனது விகாரவுருவத்தைக் கண்டார். பெருங்கவலைகொண்டார். அவ்வமையம் எவர் மெய்யைத் தீண்டும்பொழுது ஒரு கண்ணும், இரண்டுகைகளும் மறையுமோ அவரே இவனைக்கொல்லும் பகைவர், என்று அசரீரியாக ஆகாயத்தில் ஓர் ஒலி ஒலித்தது. அதனைக்கேட்ட பெற்றோர் பலரிடமும் இவனைவைத்துச் சோதித்துப் பார்த்தார். ஒருவர்பாலும் அவ்வுண்மை நிகழவில்லை. முடிவில் கண்ணன்மடியில் இவனைக் காணும்படி வைத்தார் உடனே அதிகமாயிருந்த கண்ணும் கைகளும் மறைந்தன. வடிவழகோடு மடியில் விளங்கினான். பெற்றோர் பேருவகையுற்றார். இவன், பிழை நூறு செய்யினும் பொறுத்தருளல்வேண்டுமென்று கண்ணனை வேண்டினர். கண்ணனும் இசைந்தான். பருவங்கள் பல கடந்தன. பின்னர்த் தரு

மரது இராஜசூய யாகத்தில் இவன் கண்ணிழந்தான். இன்னு தன பல கூறினன். பிழைகள் வரம்புக்கு மீறின. கண்ணனும் கண்டுணராமல் இவனைக் கொன்றார். வன்சொல் உடையான் கெடுவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது.

(இது பாரதத்திலும் பாகவதத்திலும் உள்ளது.)

நாவின் நுனியில் நயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
யாங்கடின மாகில் அத்திருவுஞ் சேராளே
யாங்கே வருமரணம் ஆம் (நீதி வெண்பா.)



புன்சொல்லும் நன்சொல்லும் பொய்யென் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்பதில். (பழமொழி)

இன்னாத சொல்லால் ஏதம் வருமென்பது இதனால் கூறப் பெற்றது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

அன்பு கலந்து வஞ்சனையின்றி அறமுடையார் கூறும் சொல்லே இன்சொல். அஃது ஈதலினும் சிறந்தது. ஈதலறத்தை இன்சொல்லால் ஏய்தலாம். இன்சொலுடையார்க்கு இடும்பைகள் இல்லை பணிவும் இன்சொல்லும் உயிர்கட்கு அணிகலமாகும். அதனால் பாவம் நீங்கும். அறம் ஓங்கும். பொருளும் இன்பமும் அதனால் உளவாம். இம்மை இன்பங்களையும் அஃது ஒருமையில் ஈனும். ஆதலான் ஒருவன் இன்சொல்லை விடுத்து வன்சொல்லைச் சொல்லலாகாது. வன்சொலுடையார் வருந்திக் கெடுவார் என்பனவாம்.

# ௰௧-ம் அதிகாரம் செய்ந்நன்றியறிதல்.

அஃதாவது தனக்குப் பிறர் செய்த உதவியை மறவாமல் ஒழுகுதல். இனியவைகூறி இன்பமேவி இல்வாழ்கின்றவன் உணர்ந்தொழுகவேண்டிய உயர்ந்த விதிகளுள், செய்ந்நன்றியறிதல் தலைநின்றது, ஆகலான் அதன்பின் இது வைக்கப்பெற்றது.

27



101. மற்றொன்று மாற்றாமல் மன்னனுக்கே கன்னனுயிர்
கொற்றமுறத் தந்தான் குமரேசா—உற்றொன்று
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. (௧)

குமரேசா! துரியோதனனுக்கு வேறு ஒன்றையும் உதவாமல் கன்னன் தன்னுயிரையே ஏன் உதவினான் எனின், செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது என்க. ஆற்றல் அரிது = ஒத்தல் அரிது.

தான் ஓர் உதவியும் முன் செய்யாதிருப்ப, தனக்கு ஒருவன் செய்த முதலுதவிக்குப் பதிலாக வையத்தையும் வானத்தையும் கொடுத்தாலும் ஈடாகாது என்பதாம்.

செய்தபின் செய்யும் உதவியினும், செய்யாமற்செய்த உதவி சிறந்ததென்பது குறிப்பு. முன்னது காரணங் கருதியதென்பதும் பின்னது காரணமின்றிச் செய்தது என்பதும் காண்க.

காரணமின்றி ஒருவன் செய்த உதவி, மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும், சிறந்தது ஆதலால் அதனை மறவாமல் அவன்பால் நன்றியுடையனாய் அன்புசெய்தல் வேண்டுமென்பது கருத்து. இவ்வுண்மை கன்னன்பால் காணப்பெறும்.

## கதை.

கன்னன் குந்திதேவியின் முந்திய புதல்வன். இவன் கன்னிப்பருவமாயிருக்கும் பொழுதே இவனைக்காணப்பெற்றாள். துருவாசர் இளமையில் தனக்கு உணர்த்தியிருந்த மந்திரத்தின் பலனை யறிய வேண்டிச் சூரியனை நினைந்தாள். உடனே தோன்றினன். அவள் இவனைப் பயந்தாள்.

"பன்னிவாழ்க்கைப் படாமுன் படர்க்தொரு களவினாலே
கன்னியே பெற்ற பிள்ளை கானீனன் என்றேயோதும்."



என்றதனால் கானீனன் என்னும் பெயரையும் இவன் எய்தினன். குந்தி பரிவுடன் இவனை ஒரு பேழையுள் வைத்து ஆற்றில் தள்ளினள். அதன்வழியாய் இவன் அத்தினபுரியை அடைந்தான். வேட்டைமேல் வந்திருந்த திருதராட்டிரன் தேர்ப்பாகனால் இவனைக்கண்டெடுத்தான். தேர்ப்பாகன் கொண்டுபோய் வளர்த்தான். அரசன் புதல்வருள் முதலானாகிய துரியோதனன் இவன்பால் பெருநட்பு கொண்டான், உயர்ந்த உதவிகளை உவந்துசெய்தான். தனது பிறப்புரிமையை உணர்ந்தபின்னரும் கன்னன் பாண்டவர்களோடு கூடாமல் அம்மன்னன் செய்த உதவியையே நினைந்தான், அவனுக்காகத் தன் இன்னுயிரையும் தந்தான். அதனால் செய்ந்நன்றி மறவாத மெய்யன்பின்றவீரன் என்று உயர்ந்தோர் இவனைப் புகழ்ந்தார். (இதன் விரிவைப் பாரதத்தில் உணர்க)

குமரேசா! ஆபாதி செய்த சிறிய உதவியையும் தெய்வ ஏன் பெரிதாக மதித்தாள் எனின், இடர்ப்படும் காலத்தில் செய்த உதவி சிறிது எனினும் ஞாலத்திலும் மிகப் பெரிதாம் என்க.

"காலத்தினால்" என்னும் தொடரிலுள்ள மூன்றனுருபாகிய ஆல், ஏழாவதற்குரிய இடப்பொருளில் வந்தது. இஃது உருபு மயக்கம் எனப்படும்.

யாதன் உருபிற் கூறிற் றாயினும் • [யம்.
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும். [தொல்காப்பி

துன்பக்காலத்தில் தனக்கு ஒருவன் செய்த உதவி சிறிதாயிருந்ததாயினும் அதனை இவ்வுலகத்திலும் மிகப் பெரிதாக மதித்துப் போற்ற வேண்டும் என்பதாம்.

பெரிது பெரிது புவனம் பெரிது என்ற முதுமொழியை நோக்கி அதனினும் பெரிது உரியகாலத்தில் ஒருவன் செய்த உதவி என்று தேவர் இதில் காட்டினார் போலும் என்பது கருதப்படும்.

உரியகாலத்தில் ஒருவன் செய்த உதவியைப் பெரிதாக மதித்துப் பேண வேண்டுமென்பது குறிப்பு. இவ்வுண்மை தெய்வயானை பால் தெளியப்பெறும்.

## கதை

தெய்வயானை என்பவள் அசுர குருவாகிய சுக்கிரன் மகள். சன்மிட்டை என்னும் அரசன் புதல்வியுடன் கூடியிவள் ஒருநாள் மலர் கொய்யச் சென்றாள். தோழிகள் பலரும் உடன் சென்

திருந்தார். அனைவரும் ஒரு பூஞ்சோலையுட் புகுந்தார். புதுமலர் கொய்தார். உச்சியம்பொழுதில் ஒருங்கே கூடினர். உயரிய கனிகளை உவந்துடன் உண்டார். இனிய மொழிகளை யியம்பி யெழுந்தார். அங்கோர் நாண்மலர்ப் பொய்கையை நாடியடைந்தார். நீராடல் விருப்பித்தம் ஆடைகள் உரிந்தார். அதிதகரைமேல் தொகுத்து வைத்தார். நீர்மேல் பாய்ந்தார். நீந்திமகிழ்ந்தார். அவ்வமையம் அங்கோர் ஆண்மகன் வந்தான். இவரனைவரும் நாணித் தரைமேல் வந்தார். கரையுறும் உடைகளை விரைவில் உடுத்தார். அதில், தெய்வயானையின் ஆடையைச் சன்மிட்டை அறியாது தரித்தாள். அதனால் சினந்த தெய்வயானை அவளை யிகழ்ந்து கூறினள். தன்னை மன்னன் புதல்வியென்று மதியாமல் அவள் கூறிய வன்மொழிகளைச் சன்மிட்டை தன் மனத்திற்கொண்டிருந்தாள். அச்சினத்தால் அவளை ஒருபாழ்ங் கிணற்றில் தள்ளினள். மறைந்து சென்றனள். தள்ளுண்டவள் பதைத்துத் தனியே நின்றாள். தளர்ந்து நொந்தாள். அங்கு வேட்டைக்கு வந்திருந்த அயாதி மன்னன் இவளை அன்று கண்டான். இரங்கினன். தனது மேல் ஆடையைக் கீழேவிடுத்துப் பற்றும்படிசெய்து இவளை மேலே தூக்கிவிட்டான். அந்நன்றிக்கு இவள் தன்னையே அவனுக்குத் தந்தாள். காலத்தினாற் செய்த நன்றியை நினைந்து தெய்வயானை அரசனுக்கு மனைவியாய் மகிழ்வூட்டியதை மாநிலம் புகழ்ந்தது.

(இதன் விரிவைப் பாகவதத்தில் உணர்க.)

காலத்திற் செய்த உதவி ஞாலத்திற் பெரிதென்பது இதனால் காட்டப்பெற்றது.

103. திண்டோள் அனுமான்செய் சிறுதவி யேன்பெரிதாக்

கொண்டாள்முன் சீதை குமரேசா—உண்டாம்
பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது. (௩)



இ—ள்.

குமரேசா! அனுமான் செய்த உதவியைப் பெரிதாக என் சீதை கருதினாள் எனின், பயனைக் கருதாதவர் செய்த உதவியின் நயனை ஆராயின் அதன் நன்மை கடலினும் பெரிதாம் என்க.

தூக்கார்=வினைமுற்றெச்சம். பயன்றூக்கார்=பயனை எதிர் நோக்காதவராய். உதவிநயன்=உதவியாகிய நயன் என இருபெயரொட்டாய் நின்றது. பயன் தூக்காமல் உதவி செய்தற்கு அன்புடைமையே காரணம் ஆதலான் ஈண்டு நயன் என்றது அதனையே குறித்து நின்றது.

ஒரு பயனையும் கருதாமல் ஒருவன் செய்த உதவி நயத்தை ஆராயின் அது கடலினும் பெரிதாம் என்பது கருத்து.

மேல், ஒன்றை ஞாலத்தினும் பெரிது என்றார். இதில் அதனினும் பெரிதாய கடலினும், பயன் கருதாமற் செய்த வுதவி பெரிதென்றார். எனவே அவ்வுதவியினும் இது சிறந்தது என்பது தெளியப்படும்.

பயன்றூக்காமற் செய்த உதவிக்குப் பதிலுதவ இவ்வுலகில் ஒன்றும் இல்லையென்பது இதில் உணர்த்தப்பெற்றது. இவ்வுண்மை அனுமான்பால் உணரப்பெறும்.

கதை.

அனுமன் இராம தூதனாய் இலங்கையுட் புகுந்து அங்கு வருந்தி இறக்கத்துணிந்த சீதையைத் தேற்றினான். இவன்செய்த

உதவியின் திறத்தால் தானும் தனது நாயகன் முதலிய நல்லோர் பல்லோரும் எய்திய நலங்கள் பல. இந்திரசித்தன் பிரமாத்திரத்தால் உயிர் துறந்த அனைவரும் உயிர்பெற்று எழவும், தம்பியின் சோகத்தால் சோர்ந்துகிடந்த இராமன் சோர்வு நீங்கி இன்புறவும் மருந்து மலையைக் கொண்டுவந்து இவன் உதவினன். உரிய காலத்தில் இராமன் வரவில்லையே என்று ஏங்கி நெருப்பில் விழத் துணிந்த பரதனை நிறுத்தி உறுவதுகூறி அவனுக்கு உயிருதவி செய்தான். இன்னும் பலவே இவன் செய்த உதவிகள். இவற்



றையெல்லாம் பயன் தூக்காமலே நயனெறி செய்தான். இவன் செய்த உதவி நலங்களைச் சீதையும் இராமனும் அடிக்கடி சிந்தித்து மகிழ்ந்தார். இவனுக்குக் கைம்மாறு செய்யக் கருதுதல் அரிது என்று கண்டு தெளிந்தார்.

(விரிவை அவர் சரிதத்தில் உணர்க.)

மும்மையாம் உலகந்தந்த முதல்வற்கு முதல்வன்றாதாய்ச்
செம்மையா லுயிர்தந் தாய்க்குச் செயலென்னால் எளிதுண்டோ
அம்மைய அத்தனைய அப்பனை அருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானும நல்கினை இசையோடென்றான். (1)

முன்னை நீக்குவென் மொய்சிறை யென்றநீ
பின்னை நீக்கி யுவகையும் பேசினை
என்னை பேர்றினை யிருவ தென்பதை
யுன்னி நோக்கி யுரைமறந் தோவினேன். (2)
உலக மூன்றும் உதவற் கொருதனி
விலையி லாமையும் முன்னினென் மேலவை

நிலைபி லாமை நினைந்தனென் நின்னையென்
தலையி னுற்மெழ வுநகுந் தன்மையோய். (3)

(சீதை.)

மாருத விமலசேயை மகிழ்ந்தினி தருளின் னோக்கி
அருந விடுநற்கொத்தார் நீயலால் அன்றுசெய்த
பேருத விக்கியான்செய் செயல் பிறிதில்லை மெய்ப்பூண்
போருத வியதிண்டோளாய் பொருந்துறப் புல்லுகென்றான். (1)

(இராமன்.)

கருதாமற் செய்தவுதவி கடலினும்பெரிது என்பது இதனால் கூறப்பெற்றது.

---



104. எய்தசிறு நன்றிக்கும் ஏகலைவன் என்விரலைத்
தொய்து கொடுத்தான் குமரேசா — செய்ய
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். (௪)

-ள்.

குமரேசா! சிறிய நன்றியையும் பெரிதாகக் கருதி ஏகலைவன் என் தனது விரலைக் கொய்து கொடுத்தான் எனின், தினைத்துணை நன்றி செயினும், பயன் தெரிவார் யாக் கொள்வர் என்க.

ா—உணவுப் பொருள்களுள் ஒருவகைச் சிறு தானியம். அஃது உவமான அளவையாய் உதவியின் சிறுமையை உணர்த்தி நின்றது.

தமக்கு ஒருவன்செய்த உதவி தினையளவு சிறியது ஆயினும் அதனைப் பனையளவு பெரியதாகக் கருதுவார் பெரியோர் என்பதும் அங்ஙனங் கருதார் சிறியோர் என்பது குறிப்பு. ஒருவன் செய்த உதவியை மறவாமல் ஒழுகுவார்க்கு, அறம் புகழ் இன்பங்கள் ஒருங்கே உளவாம், இவ்வுண்மைப் பயனை உணர்ந்தவரே தினைத்துணை நன்றியையும் பனைத்துணையாக உள்ளுவர், ஆதலால், "பயன் தெரிவார் கொள்வர்" என்றார்.

செய்யாமல் செய்த உதவி, காலத்திற் செய்த உதவி, பயன் கருதாமற்செய்த உதவி, என்னும் மூவகை உதவிகளும் முறையே வானினும், உலகினும், கடலினும் பெரியனவென மேலேகூறி, இதில் சிறிய உதவியும் பெரியார் கைப்பட்டால் பெரிதாம் என்று கூறினர்.

பிறர் செய்த சிறிய உதவியையும் பெரியதாக நினைந்து அன்பு செய்வார் உயர்ந்தோர் என்பது இதில் உணர்த்தப் பெற்றது. இவ்வுண்மை ஏகலைவனால் உணரப்பெறும்.

## கதை.

இற்றைக்கு ஐயாயிர வருடங்கட்கு முன்னர் அத்தினபுரியை அடுத்திருந்த ஒருசிற்றூரில் ஏகலைவன் என்னும் பெயரினையுடைய



ஒரு வேடன் இருந்தான். அக்காலத்தில் அத்தினபுரியில் அரசிளங் குமாரர்களுக்கு துரோணர் வில்வித்தை கற்பித்துவந்தார். அவர்பால் இவன் அன்புடன் வந்தான். தனக்கும் கற்பிக்கும்படி அவரைத் தாள்பணிந்து வேண்டினன். தமது பெருமைக்குச் சரியில்லையென்று அவர் மறுத்தார். ஆயினும், அவரை இவன் வெறுக்காமல் அகன்று சென்றான். அவரது வடிவம்போல் மண்ணால் ஓர் உருவஞ்செய்தான். தனியான இடத்தில் வைத்தான்.

அதனையே குருவாக நம்பிச் சிலைத் தொழில் பயின்றான். அது பயிற்றத் தான் பயில்வதாக மதித்தான் அம்மதியால் சிலைவேத முழுதும் இவன் மலைவறத் தெளிந்தான். துரோணரது காட்சியானே அது கைவந்ததென்று இவன் கருத்துட் கொண்டான். அதனையே ஒரு பெரிய நன்றியாகக் கருதினான். அவர்பால் உள்ளன்பு வைத்திருந்தான். இங்ஙனம் இருப்பத் துரோணர் மாறுபாடாய் வந்து இவன் கைவிரலைக் கொய்து தரும்படி கேட்டார். இவனும் அதனைக் கொய்தே கொடுத்தான். தினைத்துணை நன்றியையும் பனைத்துணையாக் கருதிய இனது பெருமையை உலகம் புகழ்ந்தது. இவனும் புகழும் அறமும் பொருந்தியின்புற்றான். (இதன் விரிவைப் பாரதத்தில் உணர்க)

தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்—பனையனைத்
தென்றுஞ் செயினும் இலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு. (நாலடியார்.)

சிறிய உதவியையும் பெரிதாகக் கருதுவார் பெரியோர் என்பது இதனால் கூறப்பட்டது.

105. வாழுந் திருவெய்த வாழ்த்தினளோ னௌவைபழங்
கூழுதவி னார்க்குங் குமரேசா—வீழும்
உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து
27



(இ—ள்.)

குமரேசா! தனக்குப் பழங்கூழை உதவினர் பெருஞ்செல்

வத்தை பெய்தும்படி ஔவை என் வாழ்த்தி உதவினாள் எனின், உதவி, உதவியின் வரைத்து அன்று உதவிசெயப்பட்டார் சால்பின் வரைத்து என்க.

உதவி உதவி வரைத்து அன்று—பதிலுதவி முதலுதவியின் அளவினது அன்று

உதவி செய்யப்பட்டார் சால்பின் வரைத்து—உதவியை ஏற்றுக்கொண்டவரது தகுதியின் அளவு.

ஒருவன் செய்த உதவி, அதனைச் செய்யும்படி நின்றவரது தகுதிக்கேற்பப் பெரிதாம் என்பதாம்.

செய்த உதவிக்குப் பதிலாக ஒருவன் செய்யும் உதவி அதன் அளவைக் குறிக்காமல், தன் தகுதியின் அளவைக் குறித்திருக்க வேண்டுமென்பது குறிப்பு.

மேல், தினைத்துணை நன்றியையும் சான்றோர்பனைத்துணையாக் கொள்வர் என்றார். இதில் தமது சால்புக்கேற்ப அவர் கைமாறு செய்வர் என்றார். தாளால் உண்ட இழிநீரை இளநீராக்கித் தலையால் உதவுந் தென்னைபோல் சிற்றுதவிக்கும் மேலோர் பேருதவி செய்வர் என்பது குறிப்பு. சால்புடையவர்க்குச் சிறிய உதவியைச் செய்யினும் அதனால் பெரிய பயனைச் செய்தவர் எய்துவர் என்பது கருத்து இவ்வுண்மை ஔவைக்கு உதவிய சிலம்பி, அங்கவை, சங்கவை, அசதி என்னும் இவர்பால் அறியப்படும்.

கதை.

சிலம்பி என்பவள் சோழநாட்டிலே காவிரியின் வடகரையில் உள்ள பேரூரில் இருந்த ஒரு பொதுமகள். புலவர் பெருமானு

இவ கம்பரிடமிருந்து இவளொரு உதவிபெற விரும்பினள். அதன் பொருட்டுப் பெரும் பொருளை அவர்பால் தந்தாள். அவர்,



தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே—என்பது வரையும்

பாடிப் பின்னும் பாதிக்கு இன்னும் இத்துணைப் பொருள் தருவையேல் பாடுவல் என்று பகர்ந்து சென்றார். இவள் அயர்ந்து நின்றாள். பின், பொருள் பெற முயன்று வந்தாள். வருங்கால் ஔவையும் ஒருநாள் அங்கு வந்தாள். அவளிடம் இருந்த பழங்கூழை உவகையோடு தந்தாள். உற்றதையும் உரைத்தாள். உண்டு மகிழ்ந்த ஔவை கம்பன் பொருட்காதலைக் கண்டாள்.

பெண்ணாவாள்—அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு. என்று.

அதன் பாதியையும் ஓதினள். அதனால் சிலம்பி பொருளும் புகழும் பொருந்தி இன்புற்றாள். கம்பர் தாமுதல் ஔவையைக் கூழுக்குப் பாடி என்றார். சிறிய உதவிக்கும் தக்கார் பெரிய உதவியைச் செய்வர் என்பதை உலகம் ஔவையால் உணர்ந்தது. அங்கவை முதலியோர் செய்த உதவிக்கு ஔவை செய்ததை அவர் சரிதத்தில் உணர்க.

உயர்ந்தோர்க்கு உதவியது சிறிதாயினும் அதனால்வரும் பயன் பெரிதாம் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

---

106. நன்றும் இராமனுயர் நற்கேண்மை வானரர்கோன்
குன்றுதேன் கொண்டான் குமரேசா—என்றும்
மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க

இ—ள்.

குமரேசா! இராமனது நட்பை ஏன் சுக்கிரீவன் என்றும் மறவாமற் கொண்டான் எனின், மாசு அற்றாரது கேண்மையை மறத்தலும், தன்பத்தன் துப்பாயாரது நட்பைத் துறத்தலும் செய்யலாகாவென்க.

222 திருக்குறட் குமரேச வெண்பா.

மாசு அற்றார்—குற்றமில்லாதவர். நற்குணங்களையுடைய வர் என்றபடி.

துன்பத்துள் துப்பு ஆயார்—துன்பக்காலத்தில் துணையாயி னார். துறத்தல்—மறந்துவிடுதல்.

மேல், உயர்ந்தவர்க்குச்செய்யும் உதவியின் சிறப்பை உணர்த் தினார். இதில், அவரது கேண்மையை மறவாதே என்றார்.

துன்பக்காலத்தில் ஒருவன் செய்த உதவியைத் துறவாதொ ழிக என்பதுதான் இங்கு உரிமையாயினும், மாசற்றார் கேண்மை யை மறவற்க என்பதும் உடன் கூறினார் அது மறுமைக்கும் உறுதி தரும் என்பது கருதி.

தூயோரது நட்பையும், துன்பக்காலத்தில் உதவியாயோ ரது நட்பையும், ஒருவன் மறந்துவிடலாகாது என்பது கருத்து. இவ்வுண்மை சுக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

சுக்கிரீவன் வாலியால் நலியப்பட்டுத் துன்பமுற்றிருக்குங் காலத்தில் இராமர் அவனுக்குத் துணையாய் நின்று உதவி புரிந் தார். அந்நட்பை மறவாமல் தன் படைகளோடு தானும் உடன்

சென்று அவருக்கு வேண்டும் உதவிகளை விரும்பிச் செய்தான் அதனால் அவன் இருமையினும் பெருமை யெய்தினன்.

(இதன் விரிவு இராமாயணத்தில் இனிது தெளிவாம்.)

நல்லோர் நட்பையும் நன்றியையும் ஒருவன் என்றும் மறத்தலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

107. மாறில் சடையப்பர் வண்புகழைக் காவியத்தும்
கூறினனேன் கம்பன் குமரேசா—தேறி
எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. (எ)

11-ம் அதிகாரம் செய்ந்நன்றியறிதல் 228

(இ—ள்.)

குமரேசா! சடையப்பரது புகழைக் காவியத்திலும் ஏன் கம்பன் கூறினன் எனின், தம் கண் விழுமம் துடைத்தவரது நட்பை, எழுமையினையுடைய எழுவகைப்பிறப்பினும் நினைப்பர் என்க.

விழுமம்= துன்பம்.

தங்கண் விழுமம் துடைத்தவர்= தம்மிடத்துத் தோன்றிய துன்பத்தை நீக்கினவர் எழுமை எழுபிறப்பும்—ஏழு முறைபிறக்கின்ற எழுவகைப் பிறப்பினும். ஒருயிர் ஒரு பிறப்பிற்செய்த இருவினைப் பயனையும் எழுபிறப்பு வரையினும் எய்திநுகரும் என்பது ஒருவகை நியமம் ஆகலான், "எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் என்றார். "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற் கெழுமையும் ஏமாப்புடைத்து" என்றதுங் காண்க.

தமக்கு எய்திய துன்பத்தை நீக்கினவரது நட்பினை பிறவியேழினும் பெரியோர் மறவார் என்பதாம். இவ்வுண்மை கம்பர் பால் காணப்படும்.

கதை.

கம்பர் தமது விழுமம் துடைத்த சடையப் பிள்ளை யுடைய பெருநட்பினை என்றும் மறவாமல் பேரன்பு கொண்டார். அவரது புகழையே மீண்டும் மீண்டும் யாண்டும் துதித்தார். தமது நன்றி யறிதலை என்றும் நின்று நிலவும்படி செய்ய நினைந்தார். அதனால் தாம்பாடிய இராமாயணம் என்னும் காவிய வுலகில் சடையப்பரது பெருமையை இடை யிடையே வைத்துப் போற்றினார்.

விண்ணவர் போயபின்றை விரிந்தபூ மழைபினாலே,
தண்ணெனுங் கானநீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமைநோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கலம் அருளினானே.

இது, விசுவாமித்திரர் இராமனுக்குப் படைக்கலங்கள் கொடுக்கும்பொழுது சொல்லப்பட்டது.

224 திருக்குறட் குமரேச வெண்பா.

மேல் முனிவரருளிய அம்புக்குச் சடையப்பரது சொல்லை உவமை கூறினார். இதனால் இராமபாணம் குறி பிழையாமல் சென்று பயன் தருதல்போல் சடைய வள்ளல் சொல்லும் பிழையாமல் பயன்தரும் என்பது காண்க. இவ்வகையில் இவரது நட்பினை நினைந்து நினைந்து நெஞ்சுருகி இடங்கள் தோறும் இசைத்துள்ளார். இவர் இறக்குந் தறுவாய்க்கும் இங்ஙனமே ஓர்ந்து ஓடேயிருந்தார்.

ஆன்பாலும் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
தேன்பாய உண்டு தெவிட்டுமனம்—தீம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா நமபன்
இறக்கும்போ தேனும் இனி.

என்று சொல்லிக்கொண்டே இறந்தார். இதனால் இவர், தமது விரூபம் துடைத்தவராது நட்பை எழுமை எழுபிறப்பினும் உள்ளிய திறமும், நன்றியறிதலின் நலமும், நன்கு தெளியப்படும

ஒருவன்செய்த நன்றியைப் பிறவியேழினும் பெரியோர் மறவார் என்பது இதனால் கூறப்பட்டது.

108. வாதவூர் அண்ணல் வழுதிசெய்த நன்றையுன்னிக்
கோதேன் மறந்தார் குமரேசா—ஓதுங்கால்
நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. (அ)

இ—ள்.

குமரேசா! வாதவூரண்ணல் வழுதிசெய்தநன்றியை மாத்திரம் நினைந்து அவன்செய்த தீமையை ஏன் மறந்தார் எனின், நன்றியை மறப்பது நன்று அன்று, நன்று அல்லதை அன்றே மறப்பது நன்று என்க.

நன்று அல்லது=தீமை. அன்றே=தீமைசெய்த அப்பொழுதே. இதில் உள்ள ஏகாரம் விரைவுதோன்ற நின்றது.

வாதவூர் அண்ணல்=மாணிக்கவாசகர். வழுதி=அரிமர்த்தன பாண்டியன். மேல், ஒருவன் செய்த நன்றியை எழுபிறப்பினும் மறக்கலாகாது என்றார் நன்றிசெய்த ஒருவனே தீமையும் செய்தானாயின் என்செய்வது என்பதை நோக்கி இது கூறினார்.

உபகாரமும், அபகாரமும் ஒருவனால் செய்யப்பட்டமாயின் அவற்றுள் முன்னதை மாத்திரம் மறவாதுட்கொண்டு பின்னதை மறந்து விடவேண்டும் என்பதாம்.

உயர்ந்தோர், ஒருவன் செய்த நன்மையை மாத்திரம் நி தீமையை மறப்பர் என்பது கருத்து. இது மாணிக்கவாசகர் பால் காணப்படும்.

## கதை.

மாணிக்கவாசகர் மதுரையிலிருந்த அரிமர்த்தன பாண்டியன் என்னும் மன்னனுக்கு மந்திரியாயிருந்து அரசியல் புரிந்தார் அக்காலத்தில் சிறந்த குதிரைகள் வாங்கிவரும்படி அரசன் இவரை யேவினான். இவரும் பெரும்பொருள் கொண்டு பெருந்துறைக்குச் சென்றார். சென்று சேர்ந்தபின் திருவருளால் இவர் உலகியல் மறந்தார். அருளுருவாகிய பரமனே இவர் முன் குருவடிவாகி நின்றார். இவர் அவரைத் தொழுதார். அன்பால் அகமுருகி அழுதார். பின் அவருக்கு அங்கோர் ஆலயம் வகுத்தார். அதன் பொருட்டுத் தன்கைப்பொருள் முழுதையும் செலவிட்டார். பரிகள் வாங்காமல் தமது அமைச்சர் செய் கதைப் பாண்டியன் அறிந்தான். இவரைக்கொணரும்படி செய்தான் கொடுந்தண்டம் இட்டான். சிறையிலிட்டுத் துயர்பல செய்தான். மன்னன் செய் இன்னலைப்

பொறுக்கமுடியாமல் மாணிக்கவாசகர் மனமுருகிப்பரமனைத்துதித்தார். பரமன் நரிகளையெல்லாம் பரிகளாக்கிப் பாண்டியன் முன் கொண்டுவந்தார். வந்தபின் உண்மையை மன்னன் தெளிந்தான். அமைச்சர் அருமையை அறிந்தான் அஞ்சினன். அரசு அரியணையினின்றும் எழுந்தான். தான்செய்த தீமையைப் பொறுத்தருளும்படி வேண்டினன். மாணிக்கவாசகர் மன்னனை இன்முகத்தோடு நோக்கினர். நன்றியையே நினைந்தார். அவன் செய்த நன்றல்லதை மறந்தார்.



நன்மொழிகள் பலகூறினர். அன்புடன் தேற்றி அரசனை அனுப்பினர்.

உம்மைநான் அடுத்த நீரால் உலகியல் வேதநீதி
செம்மையால் இரண்டும் நன்றாத் தெளிந்தது தெளிந்த நீரால்
மெய்ம்மையாஞ் சித்த சுத்தி விளைந்தது விளைந்த நீரால்
பொய்ம்மைவா லவரி னீங்கிப் போந்தது சிவன்பாற் பத்தி

இது பாண்டியன் பிழைபொறுக்க வேண்டியபொழுது மாணிக்கவாசகர் சொன்னது. இதனால் அவர், நன்றியை நினைந்ததும் நன்றல்லதை மறந்ததும் நன்கு தெளியப்படும்.

ஒருவன் செய்த நன்றியை என்றும் மறக்கலாகாது என்றும் தீமையை உடனே மறந்துவிடவேண்டும் என்றும் இதனால் கூறப்ப

109. எள்ளி விராடன் எறிந்தும் தருமனேன்
கொள்ளவில்லை கோபம் குமரேசா—தள்ளிவந்து

கொன்றன்ன இன்னா செயினு மவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். (௧௦)

இ—ள்.

குமரேசா! விராடன் இகழ்ந்து எறிந்தும் என் தருமன் கோபங்கொள்ளவில்லை எனின், கொன்று அன்ன இன்னாசெயினும் அவர் செய்த நன்று ஒன்று உள்ளக் கெடும் என்க.

கொன்று அன்ன இன்னா செயினும்=கொன்றால் ஒத்ததுன் பத்தைச் செய்யினும்.

முன், ஒரு சிறு நன்மையைச் செய்தவர் பின், பல பெருந்தி மைகளைச் செய்வராயினும் அவர்செய்த நன்று ஒன்றனையும் கருத அவை யெல்லாம் இல்லையாம் என்பதாம்.

பெரியோர் தினைத்துணை நன்றியையும் பனைத்துணையாகக் கருதும் பண்புடைய ராதலின் தமக்கு ஒரு சிறிய நன்றியைச் செய்தவர் பின்பு பெரிய துன்பத்தைச் செய்யினும் பொறுப்பர் என்பது கருத்து இவ்வுண்மை தருமன் பால் உணரப்படும்.



கதை

தருமன் முதலிய ஐவரும் திரௌபதையும் பன்னிருவருடம் வனவாசம் செய்தபின் தமது இசைவின்படி மற்றொரு வருடம் உருவங் கரந்து விராடநகரத்தில் அரசனது ஆதரவில் தங்கியிருந்தார். இதனைத் துரியோதனன் அறிந்தான். அவரது இசைவினைச் சிதைவுசெய்ய நினைந்தான். தமது படைகளோடு அந்நகரைவந்து வளைந்தான். அங்கு உருவுகரந்துறையும் துணைவர் நால்வரையும் போர்மேலேவித் தரு(ம)ன்மாத்திரம் கங்கபட்டர் என்னும் புரோகிதர் போன்று அரசனோடு பொருந்தியிருந்தான். போனவர் பொருது மீளும்வரையும் இவ்விருவரும் பொழுது போக்கக்கருதிச் சூதினையாடினர். அதில் நிகழ்ந்த வாதினால் அரசன் தாயக்கருவி யால் தருமனையெறிந்தான். எற்றிய கவறு தருமன் நெற்றியில்

பட்டது. அரசன் முன்புரிந்த நன்றியையே நினைந்தான். எறிந்த தீதை மறந்தான். ஆயினும், முன்னவன் நெறியில் முற்றிய வடிவினைப் பின்னவர் கண்டார். உற்றதையோர்ந்தார். மனங்கவன்றார். சினந்தெழுந்தார். உடனே தருமன் அவரை நோக்கினன்.

ஒன்றுதவி செய்யினும் அவ்வுதவி மறவாமல்
பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்
நன்றி பலவாக ஒருநவை புரிவரேனும்
அன்றியவ தன்றிமுது கயவர் நினையாரே. (1)
அனைவருமுதா சனம் அகனறுநெடு நாணக்
வினைவழுவு வாமலிவன் நீழலி லிருந்தோம்
சினமிகுதலிற் றவறு செய்தனை யெனப்போய்
முனிதல்பழு தாகுமென முன்னவன் மொழிந்தான். (2)
(பாரதம்.)

இவற்றால் தருமரது நன்றியறிவும் பொறையும் நன்கு தெளியப்படும்.

ஒருநன்றி செய்தாரை உள்ளத்தே வைத்துப்
பிழை நூறும் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்று தீதாயின்
எழுநூறுந் தீதாய் விடும். (ஔவை.)





நன்றல்லதை மறந்து நன்றியையே பெரியோர் என்றுங் கருதுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

110. நன்றியொன்றுங் காணத்தன் நல்லுயிரைச் சல்லியனே
குன்றாமல் தந்தான் குமரேசா—குன்றாத
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (ம)

குமரேசா! ஒரு சிறு நன்றிக்காகச் சல்லியன் ஏன் தன்னுயிரைக் கொடுத்தான் எனின், எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம், செய்ந்நன்றி கொன்ற மகனுக்கு உய்வு இல்லை என்க.

எந்நன்றி கொன்றார்க்கும்—எத்துணைச் சிறந்த அறங்களைச் சிதைத்தார்க்கும்.

சிறந்த நன்மைகள் பலவற்றையும் அழித்துப் பெரும் பாதகங்களைச் செய்தவரும் ஏதாவது ஒரு பிராயச்சித்தத்தால் அவற்றின் நின்றும் உய்வர்; செய்ந்நன்றியை மறந்தவர் எவ்வகையினும் உய்யார் என்பதாம்.

பாவங்கள் பலவற்றுள்ளும் செய்ந்நன்றி மறத்தலே பெரும் பாவம் என்பது குறிப்பு.

ஒருவன் எதை மறந்தாலும், செய்ந்நன்றியை மாத்திரம் மறக்கலாகாது என்பது கருத்து. இவ்வுண்மை சல்லியன் பால் காணப்படும்.

கதை.

சல்லியன் என்பவன் மத்திர தேயத்து மன்னன். நகுல சகாதேவர்கட்கு மாமன் சிறந்த ஆண்மையும், நிறைந்த கேண்மையும், திருந்திய பான்மையும் பொருந்திய மேன்மையன். இவன் பாண்டவர்கட்குத் துணைபுரியும்படி தன் படைகளோடு வந்தான். இவ



னது போராற்றலையும் போராற்றலையும் நன்கு தெரிந்த துரியோதனன் இவனை எவ்வகையிலாவது தனக்கு உரிமையாக்கிக்கொள்ளக் கருதினான். அவன் வருகின்ற வழியில் வஞ்சகமாக ஒரு தண்ணீர்ப்பந்தலை வைக்கும்படி செய்தான். அது தருமனுக்கு உரியதென்று அதன் முகப்பில் எழுதிவைத்திருந்தான் அவ்வழியே வந்த சல்லியன் அதனைத் தனது மருமகனுடையது என்று கருதி

னன். படைகளோடு தானும் நீர் பருகிச் சிறிது பொழுது அங்குத் தங்கினன் பின் அது மாற்றானுக்கே யுரியது என்பதைத் தெளிந்தான். வஞ்சகமாகச் செய்யினும் நீருதவிய அவன் நன்றியை மறத்தற்கு இவன் அஞ்சினன். தனது மருகராகிய ஐவருக்கும் துணை புரியாமல் அவனுக்குத் துணையாய் நின்று படைகளோடு தனது ஆருயிரையும் உதவினன். செய்நன்றி மறவாமல் இவன் செய்த செய்கையை வையமும் வானமும் போற்றின.

(இதன்விரிவைப் பாரதத்தில் உணர்க.)

ஒன்றொரு பயன்தனை யுதவினோர் மனம்
கன்றிட ஒருவினை கருதிச் செய்வரேல்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.

(கந்தபுராணம்.)

ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ.

(புறநானூறு.)

செய்நன்றி மறத்தல் உய்தியில் குற்றம் என்பது இதனால் கூறப்பட்டது.

280 திருக்குறட் குமரேச வெண்பா.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

செய்யாமற் செய்த உதவி, வையத்தினும் வானத்தினும் சிறந்தது. உரியகாலத்தில் செய்த உதவி உலகினும் பெரிது. கருதாமற் செய்த உதவி கடலினும் பெரிது. சிறிய உதவியையும் பெரியோர் பெரிதாகக் கருதுவர். உற்றவர் தகுதிக்கேற்ப உதவியும்

பெரிதாம். துன்பக்காலத்தில் செய்த உதவியை ஒருவன் ஒரு போதும் மறக்கலாகாது. ஒருவன் செய்த உதவியை நல்லோர் எழுபிறப்பினும் மறவார். நன்றல்லதை அன்றே மறப்பது நன்று. ஒரு நன்றி செய்தாரை உள்ளத்தே வைத்துப் பிழை நூறுஞ் சான்றோர் பொறுப்பர். செய்ந்நன்றி மறந்தார்க்கு எவ்வகையினும் உய்வழியில்லை என்பனவாம்.

(௰௧-வது செய்ந்நன்றியறிதல் முற்றிற்று.)



## ௰௨-ம் அதிகாரம் நடுவு நிலைமை.

அஃதாவது ஒருபாற் கோடாமல் ஒப்பநிற்கும் நிலைமை. நன்றி செய்தவிடத்தும் இந்நிலை கோடாமல் ஒழுகவேண்டும் என்பதை உணர்த்துதற்கு இஃது ஈண்டு வைக்கப்பட்டது. அதிகாரத்தின் தொடர்பும் இதனானே தெளிவாம்.

111. பண்டோர் பசுவுக்குந் தன்பாலனுக்கும் ஒருதகுதி
கொண்டுரைத்தான் சோழன் குமரேசா—கொண்ட
தகுதியென ஒன்றே நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின் (௧)

இ—ள்

குமரேசா! சோழன் ஒரு பசுவினுக்கும் தனது பாலனுக்கும் ஒவ்வ தகுதியாக நின்று நீதி செய்தான் எனின், பகுதி தோறும் பாற்பட்டு ஒழுகப்பெறின், தகுதியென்னும் ஒன்றே நன்று என்க

## தகுதி—நடுவு நிலைமை.

ஒருவன் அறிவுடைமைக்குத் தகுதியான தன்மையையுடையது நடுவுநிலைமையே ஆதலால் அதனையே ஈண்டுத் தகுதியென்றார்.

பகுதி—பகை, உறவு, பொது, என்னும் மூவகைப் பிரிவு. பகுதியாற்பாற் பட்டொழுகப்பெறின்—பகுதிதோறும் முறைமை குன்றாமல் ஒழுகப்பெறின். இதில் ஆன் உருபு தோறுப் பொருளில் வந்தது.

பகைவர், உறவினர், பொதுவினர், என்னும் மூவகையாரிடத்தும் ஒருவன் நடுநின்ற முறைமையை விடாமல் நீதிசெய்து ஒழுகுவானாயின் அவ்வொழுக்கம் ஒன்றே அவனுக்கு என்றும் நன்றாம் என்பது கருத்து. அவ்வொழுக்கத்தை ஒருவன் உறுதியாகப் பெறுவது அருமையென்பது கருதிப் பெறின் என்றார்.

சத்துரு மித்துரு சமர் என்னும் முத்திறத்தார் பாட்டும் ஒருவன் மனத்தினாலும் கோடாமல் நடுவு நிலைமையாக நின்று முறைமை செய்வானாயின் அவனே தகுதியுடையவன் என்பதும், பேரறங்களின் பயன்களெல்லாம் இவ் ஓர் அறத்தானே அவன் எய்துவன் என்பதும் இதில் உணர்த்தப் பெற்றன. இவ்வுண்மை சோழமன்னன்பால் உணரப்படும்.

### கதை.

சோழநாட்டிலே திருவாரூர் என்னும் திருநகரிலே இற்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் அநபாயன் என்ப பெயரிய சோழமன்னன் ஒருவன் இருந்தான். சூரியகுலத் தோன்றலாகிய இவன் எல்லா வுயிர்களும் இன்புறும்படி நல்ல அரசுபுரிந்தான். புரிந்துவருங்கால் இவனுக்கு ஒரு திருமகன் பிறந்து வளர்ந்தான். இம்மகன் வீதிவிடங்கன் என்ப பெயரிடப் பெற்றான். இளமையி

லேயே பலகலைகளையும் ஓதியுணர்ந்தான். ஒருநாள் இவ்வரசிளங் குமரன் தோழர் பலர் புடைசூழத் தேரேறித் தெருவிடைச்சென்றான். அங்ஙனம் செல்லும்பொழுது பசுவின்கன்று ஒன்று துள்ளி ஓடிவந்து இவன் தேர்க்காலில் சிக்கிச் சிதைந்து இறந்தது. தன்



கன்றின் பிரிவால் நெஞ்சு கலங்கிய தாய்ப் பசுவானது துடித்து ஓடிவந்தது. அரண்மனை வாசலில் கட்டித் தொங்கும் அசையா மணியைத் தன் கொம்பால் அசைத்தது. மணியோசையைக் கேட்டவுடனே அரசன் மனங்கவன்றான். அரியாசனத்தை விட்டு விரைந்தெழுந்தான். வெளியே வந்தான். பசுவினைக்கண்டான். உற்றதையுணர்ந்து தன் உள்ளம் பதைத்தான். ஆன் அடைந்த துன்பத்தைத் தானும் அடைதலே தகுதியென்று கருதினான். அக்கன்றின் கதியைத் தன்மைந்தன் அடையும்படி பணித்தான். அமைச்சன் அதனைச் செய்யக்கூசித் தன்னுயிர் நீத்தான். அதன்பின் அரசனே தனது அருமைத் திருமகனைத் தெருவிற் கிடத்தித் தேர்மேல் ஏறினான். துணிந்துமுன் ஊர்ந்தான். அரசன் ஊர்ந்த தேர் மகன்மேல் ஏறுமுன் பரமனும் விடைமேல் பரிவுடன் ஏறினார். அரசன் காண அருகுடன் வந்தார். இறந்த கன்றும் மடிந்த மந்திரியும் எழுந்து நின்றார். கிடந்த மகனும் தொடர்ந்து எழுந்தான். இறைவன் இன்னருளை அரசன் எண்ணி யெண்ணிப் பெருமகிழ்வுற்றான். ஒரு பசுவினிமித்தம் அரசன் நடுவுநிலைமை குன்றாமல் முறைமை செய்ததை உலகம் தெளிந்தது. பகுதிதோறும் முறைமையோடு ஒழுகிய தகுதியுடைமையால் இவ் அரசனை மநுநீதிகண்ட சோழன் என்று மாநிலம் புகழ்ந்தது. (இதன் விரிவைப் பெரிய புராணத்தில் உணர்க.)

இவ்வரசனது தகுதியைச் சோதிக்கக் கருதி ஈசனே பசுவாகவும், எமனே கன்றாகவும் வந்தனர் என்ப.

ஈசன் பசுவாகி எமனொரு கன்றாகி

வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் அம்மானை
வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தா ராமாயின்
காசளவு பாலும் கறவாதோ அம்மானை
கன்றையுதை காலி கறந்ததுவோ அம்மானை.

(சொக்கநாதப் புலவர்.)

தகுதியின் அருமையும் அதனையுடையவர் பெருமையும் இத கூறப்பட்டன.

---



112. வானுயர் செல்வம் வழிவழியா வந்ததென்றும்
போகாமல் என்னே குமரேசா—பூவைச்
செப்பமுடையவன் ஆக்கம் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து. (உ)

குமரேசா! வானளவு உயர்ந்த செல்வம் என்றும் யாமல் ஏன் அவன் வழி வழியாக நின்று வந்தது எனின், செப்பம் உடையவனது ஆக்கம் சிதைவு இன்றி அவனது எச்சத்திற்கும் ஏமாப்பு உடைத்து என்க.

செப்பம் = நடுவு நிலைமை.

எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து = சந்ததியார்க்கும் பாதுகாவல் உடையது. இறந்தது தழுவிய எச்சவும்மை இதில் தொக்கு நின்றது.

ஏமாப்பு என்பது, காவல் செறிந்த களிப்பு வலிமை என்

லும் பல பொருள்களையுணர்த்தும் ஒரு சொல்.

செப்பமுடையவனது செல்வம் தனக்கும் இன்பந்தந்து பின் வருகின்ற தன் சந்ததியார்க்கும் சிதையாமல் நின்று உறுதிதரும் என்பதாம்.

நடுவு நிலைமையுடையவன் செல்வம் என்றும் கெடாமல்நின்று தனது வழியில் வருவார்க்கெல்லாம் உரிமையாம் என்பது இதில் காட்டப்பட்டது. இவ்வுண்மை வாணன்பால் காணப்படும்.

கதை.

வாணன் என்பவர் இற்றைக்கு ஆயிரத்து நூறுவருடங்கட்கு முன்னர்த் தொண்டை மண்டலத்திலே ஆறை என்னும் ஊரிலே தோன்றியிருந்த ஒரு வேளாள மரபினர். நல்ல உபகாரி. அரும்பொருள் படைத்துப் பெரும்புகழ் பெற்றவர். விரிந்த நிலப்பரப்பினைத் தனக்கு உரிமையாக வுடையவர். ஏர் பலவைத்துச் சீர்பெற



வாழ்ந்தவர். யாவரிடமும் ஒப்ப நின்றொழுகிய செப்பமுடையவர். அவருக்கொரு புதல்வன் தோன்றினன். அவனுக்கு ஏகம்பவாணன் என்று பெயர். இவன் இளமைப் பருவமாயிருக்கும்பொழுதே அவர் இவவுலகத்தைத் துறந்தார். அரசரும் மதிக்கத்தக்க தமது பெருஞ்செல்வத்தை வேலைக்காரருள் ஒருவனாகிய ஏகன் என்னும் பறையன் போற்றிவந்தான். ஒரு பூதமும் அவனுடனின்று அதனைக் காத்தது. புதல்வன் பருவமுற்றபின் அதனைப் பூதம் அவன்பால் அருளுடன் தந்தது. சிறிதும் சிதைவின்றிவந்த தனது தந்தையின் ஆக்கத்தை யிவனும் பெற்றுத் தகுதியோடு போற்றினன். அழிவின்றிப் பெருகி அதுபின் இவன் வழி வழி வந்தது. நடுவு நிலைமையுடையவன் செல்வம் கெடுதலின்றிவளருமென்பதை உலகம் வாணன்பால் உணர்ந்தது.

நடுவு நிலைமையுடையவன் செல்வம்என்றும் அழியாதென்பது இதனால் கூறப்பட்டது.

113. பெற்றதாய் ஆக்கமுறப் பேதித்தும் கன்னனோன்
குற்றமென்று நீத்தான் குமரேசா — முற்றுக
நன்றே தரினு நடுவிகந் தாம் ஆக்கத்தை
அன்றே யொழிய விடல். (௩)

இ—ள்.

குமரேசா! பெற்ற தாய் வந்து அரசைப் பெறும்படி தன்னைப் பேதித்தும் கன்னன் ஏன் அதனைக் குற்றமென்று ஒழிய விட்டான் எனின், நன்றே தரினும் நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை அன்றே ஒழியவிடல் என்க.

நடுவு இகந்து ஆம் ஆக்கம் = நடுவு நிலைமையை விடுதலால் உளவாகின்ற செல்வம். ஆகும் என்னும் பெயரெச்சம் இதில் ஆம் என நின்றது. உம்மை உயர்வு சிறப்போடு எதிர்மறைப்பொருளையும் குறிக்கும்.



விடல் என்னும் உடன்பாட்டு வியங்கோள் விடுக என்னும் பொருளில் வந்தது. நடுவு இகந்து ஆம் ஆக்கம், தீங்கே தரும் என்பது தெளிந்தபடியால் நன்றே தரினும் என்று மறையாகக் கூறினர்.

நடுவு நிலைமையை நீங்கி அதனால் எய்தும் ஆக்கம் அப்போது நன்மை தருவதுபோல் தோன்றினும் பின் தீமையே தருதல் ஒருதலையாதலான் அதனை ஒருவன் விரும்பாமல் உடனே ஒழிய விடுதல் வேண்டும் என்பதாம்.

பெரிய செல்வம் வருவது எனினும் அது கருதி அறிவுடையார் சாரது நடுவு நிலைமையை விடுதல் செய்யார் என்பது கருத்து.

இது கன்னன்பால் காணப்பெறும்.

கதை.

தூது சென்ற காலத்தில் கன்னன் பிறப்பைக் கண்ணன் உணர்த்தினான். கன்னனும் உணர்ந்து கருதி நெஞ்சுருகினான். அதன்பின் கண்ணன் அவனை நோக்கினான். ஐவரும் வழிபட அரசினைப் பெறுவாய். மணிமுடி கவித்து இவ்வணி நிலம் புரப்பாய். வருக ஆங்கு என் மருக என்றான். கன்னன் மறுத்தான். கண்ணன் பிரிந்தான். அப்பினை கருதிப் பின் தாயினை யேகினான். குந்தியும் வந்து தன் மைந்தனைக் கண்டாள். தாயெனத் தேற்றினாள். அச்சேயும் தேறினான். அதன்பின் தம்பியர் ஐவர்பால் வருக எனவும் அரசினைப் பெறுக எனவும் அவள் பலவாறு வேண்டினாள். நடுவு நிலைமையை நீங்கி ஆங்கு வருதல் செய்யேன் என்று கன்னன் கூறிக் கண்ணீர் சொரிந்தான்.

இதனால் கன்னனது நடுவு நிலைமை நன்கு புலனாம்.
(விரிவைப் பாரதத்தில் உணர்க.)

எதன்பொருட்டும் நடுவு நிலைமையை விடுதலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

30

---



114. மைந்தர் தமைக்கொண்டே மாநிலத்தோர் காந்தாரி
முந்தியன்சீர் கண்டார் குமரேசா—சிந்தைதனில்
தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும் (ச)

தராட்டிரன் மனைவி. துரியோதனன் முதலிய மக்கள் நூற்றுவரையும் பெற்றவள். தம் மக்களுடைய கொடுமையால் இவள் கொடியவள் என்று எண்ணப்பட்டாள். தன் கணவனும் தகவிலான் என்று கருதப்பட்டான். பாஞ்சாலியைத் துச்சாதனன் பற்றியீர்க்கும்பொழுது அவள், இவள் பக்கம் வந்து சார்ந்தாள். பயந்து நடுங்கினாள். இவள் சிறிதும் இரங்காமல் கொடுமொழி புகன்றாள். இவள் தகவிலள் என்பதை அத்தமயவள் உணர்ந்தாள். பின் மிக்க துன்பமுற்றாள்.

பூவார்குழலி தளர்வொடு தன்புறஞ்சேர்பொழுதுஞ் சிறிதிரங்காள்
நீ வாவென்றே யருகிருத்தி நெடுங்கண் பொழியும் நீர் துடையாள்
மேவாரல்லர் தமரனைத்தால் வேறொன் கருத்து விளம்பிவரப்
பாவாய் அஞ்சா தேயென்றாள் பலபாதகரைப் பயந்தாளே.

(பாரதம்)

இவள் தகவிலள் என்பது இதனால் நன்கு தெளிவாம்.

தம் மக்களுடைய நற்குணங்களால் குந்தியும், பாண்டுவும் தக்கார் என்று போற்றப் பெற்றார். தம் மக்களுடைய கொடுமையால் திருதராட்டிரனும், காந்தாரியும் தகவிலார் என்று தூற்றப் பட்டார். இதன் விரிவு அவர் சரிதத்தில் தெளிவாம்.

செந்நெல்லா லாய செழுமுளை மற்றுஞ்
செந்நெல்லே யாகி விளைதலால் — அந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு. (நாலடியார்)

பழியின்மை மக்களாற் காண்க ஒருவன்
கெழுவின்மை கேட்டால் அறிக பொருளின்
நிகழ்ச்சியால் ஆக்கம் அறிக புகழ்ச்சியால்

போற்றுதார் போற்றப் படும். (நான் மணிக்கடிகை.)

பெற்றோர் தகுதியை மக்களால் காணலாம் என்பது இதனுல் காட்டப்பெற்றது.

---



115. கொற்ற முறப்பகைக்கும் குந்திமைந்தன் நாட்பார்த்தேன்
குற்றமறச் சொன்னன் குமரேசா—உற்றவரும்
கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. (ரு)

குமரேசா! பகைவனுக்கும் வெற்றியுறும்படி நாட்பார்த்து என் குந்தி மைந்தன் குற்றம் அறச் சொன்னன் எனின், கேடும், பெருக்கமும் இல் அல்ல நெஞ்சத்துக் கோடாமை சான்றோர்க்கு அணி என்க.

பகை=துரியோதனன்.

குந்தி மைந்தன்=சகாதேவன். நெஞ்சங்கோடாமை=நடுவு நிலைமை தவருமை.

அல்ல என்பது இல் அல்ல என நின்றது. இவ் இரண்டு எதிர் மறையும் ஒரு உடன்பாட்டை யுணர்த்தும். உண்டாகியுள்ளன என்பது இதன் பொருள்.

கேடும் பெருக்கமும் இல் அல்ல—கேடு வருதலும், ஆக்கம் வருதலும் இல்லையல் அல்ல. யாவர்க்கும் முன்னமே அமைந்துள்ளன என்பதாம். கேடடைந் தன் மாகல் குறிக்கினும், ஆக்கத்தைக் கொள்ளுதல் குறிக்கினும், நெஞ்சம் கோடுதல் கூடாமை எனின், கேடும் பெருக்கமும் யாவர்க்கும் இன்று வருவன அல்ல அவரவர் வினையின்படி அன்றே அமைந்து நின்றுள்ளன, ஆதலால் அவ்வுண்மையை உய்த்துணர்க்கு நடுவு நிலைமை நீங்காமல் நிற்ற

லே சான்றோர்க்கு அழகு என்க என்பதாம்.

இதனைச் சகாதேவன்பால் காண்க.

### கதை.

சகாதேவன் என்பவன் பாண்டுவின் இளைய மனைவியாகிய மத்திரை வயிற்றில் பிறந்த உத்தமன். ஐவரில் இளையவன். அறி



வினில் மூத்தவன். செம்மையும், பொறையும், மெய்ம்மையும் உடையவன். கணிதநூற் புலமையில் எவருந் தனக்கு நிகரில்லாதவன். வஞ்சமில்லாத நெஞ்சமும் வாய்மையும் உடையவன். பதின்மூன்று வருடம் வனவாசம் செய்து முடித்து உபப்பிலாவியம் என்னும் நகரத்தில் வந்து தன் தமையன்மாரோடு இவன் தங்கியிருந்தான். அவ்வமயம் பாண்டவர்களோடு போர் தொடங்குதற்கு உரியதொரு நாளைத் துரியோதனன் தெரிய விரும்பினான். நல்ல முகூர்த்தத்தை நன்கு தெரிந்து சொல்ல சகாதேவன் ஒருவனே வல்லவன் என்பதை உணர்ந்தான். உள்ளந்துணிந்தான். மெள்ள வந்தான். இருந்தவன் எழுந்துபோய் மகிழ்ந்துபசரித்தான். வந்தது என்னென வணங்கிக் கேட்டான். அவன் வாய் கூசாமல் வந்ததை யுரைத்தான். தன் பகைவர் தாழ்ந்தழியவும் தான் உயர்ந்தோங்கவும் உரிமையான நன்னாளை உணர்த்தும்படி வேண்டினான். உடனே சகாதேவன் கோள்நிலை குறித்து நாள் கணித்து ஆய்ந்தான். அதன் பின் அவனை நோக்கி 'மார்கழி மாதம் அமாவாசையன்று இரவு பதினெட்டு நாழிகை ஒன்பது விநாடியில் போர்க்கு நாட்செய்து களப்பலி இடுவையேல் குற்றமற்ற வெற்றியை முற்றவும் பெறுவாய்' என்று உற்றதை உரைத்தான். இவன் தகவுரை கேட்டு அவன் உவகை பூத்தான். அதனையே நினைந்து தன் நகரை நோக்கிச் சென்றான். அந்நாளைக் கண்ணன் வஞ்சித்துப் பின் தன் நாளாக்கினான். தமக்குக் கேடுவருமென்பதைக் குறித்தேனும், பகைவன் என்று அவனை வெறுத்தேனும்,

மனங்கோடாமல் சுக்கிரீவன் சொல்லிய உறுதி மொழியையும் அவனது நடுநிலைமையையும் அனைவரும் புகழ்ந்து போற்றினர்.

(இதன் விரிவை பாரதத்தில் உணர்க.)

உள்ளங் கோடாமையே உயர்ந்தோர்க்கு அணியென்பது இதனால் கூறப்பட்டது.

---



116. கோடினான் நெஞ்சம் குறுகிச் சுவவுருவன்
கூடினான் கேடேன் குமரேசா—வாடிக்
கெடுவல்யான் என்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின். (சு)

குமரேசா! விச்சுவவுருவன் என்பவன் தன்னெஞ்சம் கோடினவுடனே என் கேடு கூடினான் எனின், தன்னெஞ்சம் நடுவு ஒரீஇ அல்ல செயின், யான் கெடுவல் என்பது அறிக என்க.

ஒருவி என்னும் வினையெச்சம் ஒரீஇ என அளபெடுத்து நின்றது. கெடுவல்—அல் விகுதிபெற்று வந்த தன்மை யொருமை எதிர்கால வினைமுற்று. தன்னெஞ்சம் நடுவு ஒரீஇ அல்ல செயின்—தன்மனம் நடுவுநிலைமை நீங்கித் தீங்கு செய்ய நினைக்குமாமாயின்.

யான் கெடுவல் என்பது அறிக—யான் கேடுறுவேன் என்

பதனை உணர்க.

ஒருவன் மனம் நடுவு நீங்கிப் பிறருக்குத் தீங்கு நினைக்குமாயின் அவன் கெடுதற்கு ஓர் அறிகுறி என்று அந்நினைவை அவன் உணரவேண்டும் என்பதாம்.

ஒருவன் மனம் கோடுமாயின் அஃது அவனுக்கு ஏதோ ஒரு பெருங்கேடு பின் வருகின்றதென்பதை முன் உணர்த்தும் குறியாம் என்க.

மேல், கோடுதலால் கேடு நீங்காதென்றார். இதில், அதனை முன்னே அது அறிவிக்குமென்றார்.

ஒருவன் உள்ளம் கோடுமாயின் உடனே அவன் கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விச்சுவருவன்பால் உணரப்படும்.

## கதை.

விச்சுவருவன் என்பவன் துவட்டா என்னும் அசுர வீரன் புதல்வன். பல நூல்களையும் நன்முறைக் கற்றவன். ஆன்ற அறிவு



வாய்ந்தவன். மூன்று தலைகள் ஏய்ந்தவன். மிக்க சூழ்ச்சியும் உடையவன். தேவ குருவாகிய வியாழ பகவானை இந்திரன் ஒருகாலத்தில் பிரிந்திருந்தான். அவ்வமயம் இவனை அவன் குருவாகக் கொண்டான். இவனும் இசைந்தான். இனிதேயிருந்தான். இருந்துவருங்கால் தேவர்கட்கு நலமும் பலமும் உண்டாகும்படி இந்திரன் ஒரு வேள்வியை இயற்றினான். அதில் இவன் குருவாக இருந்து தம்மினத்தார்க்கே அவையுண்டாகும்படி கருதினான். வெளியில் அமரர்க்குச் செய்வதுபோல் கூறி உள்ளே அசுரர்க்கே உறுதி நாடினான். நடுவொரீஇ அல்ல செய்தான். இவ்வுண்மையை இந்திரன் உய்த்துணர்ந்தான். உடனே இவன் தலைகள் சிதறும்படி தன் கைக் குலிசத்தால் தாக்கினான்.

யான்கட் பரிமாவின் பெருமையாக மதிக்கப்படும் என்பது கருத்து.

இவ்வுண்மை அரிச்சந்திரனால் அறியப்படும்.

## கதை.

அரிசந்திரன் என்பவன் சூரியகுலத்தில் அவதரித்த திவ்விய மன்னன். திரிசங்குவின் புதல்வன். நெறிதவறாத அறிவினையுடையவன். திருவயோத்தியிலிருந்து அரசு புரிந்தான். புரியுங்கால் மாறிய மனத்தராய் விசுவாமித்திரர் அங்கு வந்தார். மன்னனிடம் உரிய சூழ்ச்சியொன்று செய்தார் அரசும் பிறவும் முழுதும் கவர்ந்தார். அதன்பின் மனைவியோடும் மகனோடும் நகரை விட்டகன்றான். சூழ்கள் பெருகுமன முனிவரை வைதனை அரசன் குறைகளை அநேகம் கடந்தான். நம்வாக நின்று பல நல்மொழி புகன்றான் முனிவரைப் போற்றினன். பணிவுடன் தேற்றினன். அகன்றன ஆயினும், முனிவர் தொடர்ந்தார் அம்மன்னனுக்கு இன்னல் பலசெய்தார். அவற்றால் தலைவியைப் புதல்வனை அரசன் விலைசெய்து கொடுத்தான். தானும் வருந்தினன். ஆயினும், நன்றாநிர்ப்பமலால், தன்னெறி நின்றான். அவனது தாழ்வை உலகம் வாழ்வென மதித்தது.

(விரிவு சரிதையில் தெரியலாம்)

கோடாதவன் கேடு கேடாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

12-ம் அதிகாரம் நடுவு நிலைமை. 243

118. கூடாமல் வியனெறிக் கோன்தருமன் நீதியன்றேன்
கோடாமல் சொன்னான் குமரேசா—நாடிச் [பால்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொரு

குமரேசா! வீமனொடு கூடாமல், நீதி கோடாமல் என் தருமன் கூறினன் எனின், சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் அமைந்து ஒரு பால் கோடாமை சான்றோர்க்கு அணி என்க.

கோல் = துலாக் கோல்

சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் = தான் சமனாக நின்று தன் கண் வைத்ததை வரையறுத்துக் காட்டும் தராசு கோல்போல்.

'ஐயநிறப் பொருளை புணர்த்தலும் மெய்க்கடு நிலையும் மிகு நிறைகோற்கே' என்ற படி நடுவு நின்று தன் கண் உற்றதின் அளவை உள்ளபடி புணர்த்துந் தன்மை துலாக் கோலிடம் அமைந்திருத்தலால் அது, நடுவு நிலைமையுடைய சான்றோர்க்கு இங்கு உவமையாக நின்றது.

பகைவர் என்று கோடுதலும், உறவினர் என்று கூடுதலும் இன்றி அவ்விருவர்பாலும் எய்ததை நடுவாக நின்று ஆய்ந்து தெளிந்த உண்மையைத் துணிந்து மொழிவதே அறிவோர்க்கு அழகு என்பதாம்.

இது தருமன்பால் அமைந்திருந்தது.

கதை

தருமர் அரசு புரிந்த காலத்தில், வீமன் ஓர் அடவியிற் புகுந்தான். அங்கே ஒரு புருட மிருகத்துக்கு உரிமையானது. அது மனிதமுகமும் மிருக உடம்பும் அமைந்தது. மந்திர பலமுடை

இ—ர்.

குமரேசா! விகர்ணனுடைய சொல் நடுவு நிலைமையுடையது என்று அரசன் அவையில் அனைவரும் ஏன் சொன்னார்



எனின், உட்கோட்டம் இன்மை ஒருதலையாகப்பெறின், சொல் கோட்டம் இல்லது செப்பம் என்க.

சொல் கோட்டம் இல்லது செப்பம்=சொல்லின் கண் கோடுதல் இல்லாதது நடுவு நிலைமையாம்.

உட்கோட்டம் இன்மை ஒருதலையாப் பெறின்=மனத்தின் கண் கோட்டம் இன்மை உறுதியாக அமையப் பெறின்

கோட்டமில்லாத மனமுடையான் கூறுகின்ற நீதிமொழியே நடுவு நிலைமையுடையதாகக் கருதப்படும் என்பதாம்.

உளக்கோட்டமும், மொழிக் கோட்டமும் ஒருங்கே யில்லாத ஒருவனிடத்தே உள்ள செப்பமுடைமைதான் யாவராலும் போற்றும் உயர்வுடையது என்பது கருத்து.

அது விகர்ணன் பால் அமைந்திருந்தது.

கதை.

விகர்ணன் என்பவன் துரியோதனனுடைய இளைய தம்பி. நேர்மையான நெஞ்சமும், கூர்மையான மதியும் வாய்ந்தவன். உண்மையை உறுதியாக நின்று உரைக்க வல்லவன். தனது முன்னவன் பொல்லாத செயலைப் பாஞ்சாலிபால் புரியுங்காலத்தில் இவன் நடுநின்று நல்ல நீதிகளைச் சொல்லினான். பிறரெல்லாரும் அரசனுக்கு அஞ்சிக் கதியின்றி அவையில் தங்கியிருந்தார். இவன்மட்டும் அஞ்சாமல் எழுந்தான். நெஞ்சு கோடாமல் நேர் நின்றான். நன்மொழிகள் பல நன்கு சொன்னான். வீடுமர், துரோணர் முதலிய உயர்ந்தோர் அனைவரும் இவனது தகுதியை மதித்தார். மிகுதியாகத் துதித்தார். தக்கவன் என்று இவனைப்

போற்றினர்.

இதன் விரிவு பாரதத்தில் உணரப்படும்.

நடுவு நிலைமையுடையவன் மொழியும் மனமும் கோடா என்பது இதனல் கூறப்பட்டது

---



120 வாணிகஞ்செய் ஏலேலர் மற்றவையும் பேணியறங்
கோணுதேன் செய்தார் குமரேசா—காணியா
வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

குமரேசா! ஏலேலர் பிறர் பொருளையும் தம் பொருள் போல் பேணி ஏன் வாணிகம் செய்தார் எனின், பிறவும் தமபோல் பேணிச் செயின், வாணிகம் செய்வார்க்கு நல்ல வாணிகம் ஆம் என்க.

தம என்றது தம் பொருளை

பிறவும் தம போல் பேணிச் செயின்—பிறர் பொருளையும் தம் பொருள்போல் போற்றி வர்த்தகம் செயின்.

கொள்வதிலும் கொடுப்பதிலும் கொடுமையின்றிச் செய்தலே நடுவு நிலைமை என்றபடி.

வாணிகம இரண்டனுள் முன்னது வர்த்தகத்தையும், பின்னது ஊதியத்தையும் உணர்த்தி நின்றது.

பிறர் பொருளையும், தம் பொருள் போலவே கருதி வாணிகம் செய்யும் அறிவோர்க்கு அறமும் பொருளும் மிகவும் பெருகும் என்பது கருத்து.

கோடாமல் வாணிகம் செய்பவரே குல வணிகர் என்பதும், அரிய பொருள்களெல்லாம் அவருக்கே வெளியில் உளவாம் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை ஏலேல சிங்கர் பால் உணரப்படும்.

### கதை.

ஏலேல சிங்கர் என்பவர் நமது வள்ளுவ தெய்வத்தின் காலத்திலிருந்த ஒரு வணிக குல திலகர். உயரிய குணங்களெல்லாம்



ஒருங்கேயுடையவர், வணிக முறையில் எவருந்தனக்கு இணையில்லாதவர். பெருங்கடல் கடந்தும் அரும்பொருள் தொகுத்தார். கலம் பல வைத்து நலம்பெற வாழ்ந்தார். தமது வர்த்தகத் துறையில் எத்திறத்தும் இவர் கோடாமல் நின்றார். பிறவுந் தமபோல் பேணியே செய்தார். அதனால் பெரும்புகழோடு இவர் அரும்பொருள் எய்தினார். இவருக்கொரு அருமைத் திருமகன் தோன்றியிருந்தான். அவனுக்கு அழகானந்தன் என்று பெயர். அரசரும் விரும்பும் பெருந்திருவோடு இவர் சென்னையில் விளங்கியிருந்தார். கொள்வதிலும் கொடுப்பதிலும் கோட்டமின்றி நடுவு நின்று இவர் செய்துவந்த வணிகமாண்பை மக்கள் வாழ்த்தி மகிழ்ந்தார்.

(இதன் விரிவு அபிதான போதத்தில் அறியப்படும்.)

நடுவு நிலைமை குன்றாமல் வாணிகம் செய்வாரே நலம்பெறுவார் என்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

நடுவு நிலைமையே ஒருவனுக்குச் சிறந்த நன்மை. நடுவு நிலைமையுடையவன் செல்வம் கெடாது நின்று பயன்தரும். நன்றே தரினும் ஒருவன் நடுவு நீங்கலாகாது. தக்கார் தகவு இலார் என்பதை அவரவர் மக்களால் அறியலாம். கேடுவருவதெனினும் நெஞ்சம் கோடுதல் கூடாது. கோடுதல்தானே கேடுதருங்குறி. கோடாதான் கேடு கேடாகாது. தாம் கோடாமையே சான்றோர்க்கு உயரணி. நடுவு நிலைமையுடையார் மொழி மனம் கோடார். நடுவு நீங்காதவர் நலம் பல பெறுவர்.

௰௨-வது நடுவு நிலைமை முற்றிற்று.

---



# ௰௩-ம் அதிகாரம் அடக்கமுடைமை.

அஃதாவது தீநெறியிற் செல்லாமல் நன்னெறியின் கண்ணே அடங்கிநிற்றலை ஒருவன் உடையனாதல். நடுவுநிலைமையுடையார்க்கே இவ் அடக்கம் எளிது அமையும் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

121. அன்றொருவன் வாயடங்கி யவ்வுலகத் தானிருவர்
குன்றினர் ஏன்இனே குமரேசா — என்றும்
அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (க)

குமரேசா! அடக்கத்தால் ஒருவன் துறக்கம் புக்கான்; அடங்காமையால் ஏன் இருவர் இரிந்து குன்றினர் எனின், அடக்கம் அமரருள் உய்க்கும், அடங்காமை ஆர் இருள் உய்த்து விடும் என்க.

ஒருவன் = சுபன். இருவர் = சங்கன், சாகன் என்பவர். அடக்கம் அமரர் உள் உய்க்கும் = அடக்கம் தன்னையுடையானை தேவருள் செலுத்தும். அமரர் அருள் எனப் பிரித்து பொருந்திய அருள் என்று கொண்டு இறைவன் திருவருளையும் குறிக்கலாம்.

ஆர் இருள் உய்த்து விடும் = அரிய இருளில் செலுத்திவிடும். விடும் என்றது துணிவு உணர்த்தி நின்றது. அரிய இருள் என்றது ஒரு வகை கொடிய நரகத்தை. அதனைத் தமசு என்பர். அடக்கமானது தன்னையுடையானை இன்பவுலகத்தில் செலுத்த, அடங்காமையானது துன்பவுலகத்தில் தள்ளும் என்பதாம்.

இவ்வுண்மை சுபன் முதலிய மூவர்பாலும் முறையே காணப்படும்.



கதை.

இற்றைக்குப்பல நூற்றாண்டுகட்கு முன்னர் யமுனா நதியின் வடகரையில் ஒரு பேரூர் இருந்தது. அதில் சுபன், சங்கன், சாகன் என்பவர் இருந்தார். இவர் அந்தணர் மரபினர். அம்மூவரும் பதத்தையவேண்டி வனம் புகுந்தார். கனி காய்களையுண்டு மோன விரதங்கொண்டார். விடாமல் முயன்றார். அவர் விரத பலத்தின் பயனாக விமானங்கள் மூன்று வந்தன. மூவரும் தனித்தனி அவற்றில் ஏறினர். அவை மேல்நோக்கி எழுந்தன. அவ்வமையம் ஆங்கோர் கருடன் ஒரு பாம்பைப் பற்றிற்று. அதனைக் கண்டார். கண்ட மூவருள் சங்கன் என்பவன் கருடா, அரவை விடு என்றான். விட்டது. அதன் பயனாக விமானத்தை

விட்டு அவனும் கீழே விழுந்தான். அதனைக்கண்ட சாதன், விடச் சொன்னமையால் அது நிகழ்ந்ததென்று கருதி "பற்றுக" என்றான். கருடன் மீண்டும் அதனைப் பற்றியது. அக்குற்றத்தால் தானும் பற்றற்றுக் கீழே விழுந்தான். சுபன் மாத்திரம், உயிர்கள் வினைப்பயன்களைத் தத்தம் உரிமைக்கேற்ப நுகர்கின்றன என்று தெரிந்து ஒன்றுங் கூறாமல் இருந்தான். அவன் விமானம் மேலெழுந்து விரைந்து சென்றது. அவனும் அமரருள் ஒருவனாய் அமர்ந்திருந்தான். இதில் வந்த கருடனும் பாம்பும் இந்திரனும் யமனும் என்பர். அம்மூவரும் அடக்கத்தின் தகுதியைச் சோதிக்கக் கருதி இவ்விதம் வந்தனராம். இது போசன் காலத்தில் நிகழ்ந்தது.

உற்றவொரு கருடன்பால் ஒருமொழியை யடக்கமின்றி
யுரைத்தலாலே
குற்றமுற்றார் இருவர்துயர் கொண்டொழிந்தார் ஒருவன்மட்டுங்
குறிக்கொண்டுள்ளமை
பற்றிநின்றான் அடக்கம் அதன் பயனாக வானவனாய்ப்
பயன் துய்த்தானால்
இற்றறிந்தும் அடக்கத்தை யிகந்து துன்பமெய்துகின்ற
தென்னே என்னே.

அடக்கம் தன்னை யுடையானுக்குத் துறக்க இன்பத்தைக் கொடுக்கும் என்பது இதனால்கூறப்பட்டது.



122. அன்றேன் அனுமான் அடக்கத்தை ஆருயிர்போற்
குன்றுமறக் காத்தான் குமரேசா—என்றும்
காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

இ—ள்.

குமரேசா! அனுமான் தன் அடக்கத்தை உயிர்போற் காத்தான் எனின், உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை ஆகலின் அடக்கத்தை ஒருவன் உறுதிப் பொருளாகக் கருதிக் காக்க வேண்டுமென்க.

உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை = உயிர்கட்கு அடக்கத்திலும் மிக்க செல்வம் இல்லை பொருள் இம்மைக்கு மாத்திரம் ஏது. அடக்கம் இம்மை மறுமை என்னும் இருமை யின்பங்கட்கும் ஏதுவாம், ஆதலால் அதனை உயிர்க்கு ஆக்கம் என்றார்.

பொருள் உடற்கு உறுதி பயப்பது போல் அடக்கம் உயிர்க்கு உறுதி பயக்கும் என்பதும் ஆதலால் அதனையே ஒருவன் உறுதியாகக்கொண்டு ஒழுகவேண்டும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அனுமான்பால் உணரப்படும்.

கதை.

அடக்கத்தையே உறுதிப் பொருளாக அனுமார் கருதிக் காத்தார் என்பது அவர் சரிதத்தில் ஆங்காங்கு தெளியப்படும்.

அறிவு மீதே உரு மீதே ஆற்றல் மீதே அரும்புலத்தின்
செறிவு மீதே செயல் மீதே தேற்றமீதே தேற்றதனின்
நெறியு மீதே கலை மீதே நீதி மீதே நினக்கென்றால்
வெறியரன்றோ குணங்களான் விரிஞ்சன்முதலாம் மேலோர்கள்.

அரும்புலத்தின் செறிவும் = அரிய புலன்களின் அடக்கமும். இது சீதை அனுமானை நோக்கிக் கூறியது.

ைல் எல்லா நல்ல குணங்களும் அனுமான்பால் அமைந் திருந்தன என்பதும் அவன் கொண்டிருந்த அடக்கம்போல் பிர மன் முதலிய மேலோரும் கொள்ளவில்லை யென்பதும் காண்க.

அடக்கமே உயிர்கட்கு உறுதிப் பொருள் என்பது இதனல்

123. பண்டு சடபாதர் பாரில் அடங்கிநின்றும்
கொண்டார் உயர்வேன் குமரேசா—கொண்ட
செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றின் அடங்கப் பெறின்.

குமரேசா! பிறர் அறியாவண்ணம் அடங்கியிருந்தும் சடபாதரை என் உலகம் அறிந்து அவருக்குப் பெருமை செய்தது எனின், அறிவு அறிந்து ஆற்றின் அடங்கப் பெறின், செறிவு அறிந்து சீர்மை பயக்கும் என்க.

செறிவு=அடக்கம்.

அறிவு அறிந்து=அறிவின் பயனையறிந்து. இனி, அறிய வேண்டுவனவற்றை அறிந்து எனவும் இது பொருள்படும்.

அடக்கமே அறிவின் பயன் என்பதை அறிந்து நெறியால் ஒருவன் அடங்கப்பெறின், அவ்வடக்கம் உயர்ந்தோரால் அறியப் பட்டு அவனுக்கு மேன்மையைக் கொடுக்கும் என்பதாம்.

அறிவுடைய ஒருவன் அடங்கித் தன்னை வெளிப்படுத்தாமல் இருப்பினும் எவ்விதத்தானும் உலகம் அவனை யறிந்து புகழ்ந்து போற்றும் என்பதாம் இவ் வுண்மை சடபாதர் பால் தெளி யப்படும்.

கதை

பண்டைக் காலத்தில் சிந்து தேசத்தை ஆண்ட சவ்வீரன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். இவனுக்கு இரகுகுணன் எனவும் ஒரு பெயர் உண்டு. இவன் நல்ல அறிவுடையவன். ஒரு நாள் சிவிகையூர்ந்து ஒரு காட்டின் வழியே சென்றான். அறிவறிந்தடங்கிய சடபரதர் இவன் செல்லும் வழியில் ஒரு பித்தரைப்போல் நின்றார். பல்லக்காளர் அவரையும் தம்முடன் சேர்ந்து சுமக்கும்படி பற்றி யீர்த்தார். என் செய்வார் பாவம்! அவரும் தாங்கினர். தொடர்ந்து நடந்தார். தரையிற் கிடக்கும் சிறிய பிராணிகள் தமது அடிபடின் மடியுமென்பது கருதித் தாண்டித் தாண்டிச் சென்றார். அச்செலவால் அரசன் அசைந்து வருந்தினன். சிவிகையை நிறுத்தித் தரையில் இறங்கினன். புதியவரைக் கண்டான். அவரது அறிவின் பெருமையையும் அடக்கத்தின் அருமையையும் உய்த்துணர்ந்தான். அடிமிசை விழுந்தான். நெடிது போற்றினன். தனது பிழையைப் பொறுத்தருளும்படி தொழுது வேண்டினன். அவரைச் சிவிகையில் ஏற்றித் தனது திண்டோளால் தாங்கினன். தன்னகர் கொணர்ந்தான். அவரருளால் ஐயம் அகன்றான். மெய்யுணர்வுற்றான். உலகமும் அவரது செறிவை அறிந்தது. சீர் பல செய்தது.

அடக்கமுடையவன் பெருமையை உலகம் அறிந்து போற்றும் என்பது இதனல் கூறப்பட்டது.

124. இல்வாழ்க்கை யுற்றிருந்தும் ஏனுயர்வு பெற்றுநின்றார்
கொல்வேறு சனகர் குமரேசா—நல்ல

நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. (ச)

இ—ள்.

குமரேசா! சனகன் இல்வாழ்க்கையில் இருந்தும் என் உயர்வு பெற்றார் எனின், நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம் மலையினும் மாணப் பெரிது என்க.



தோற்றம்—உயர்ச்சி.

நிலை—இல்வாழ்பவனுக்குரிய நிலை. அஃதாவது அவன் நிலைத்து ஒழுகும் நெறி. நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்—நிலையில் நின்று வேறுபடாமல் அடங்கினவனது உயர்வு. மலையினும் மாணப் பெரிது—மலையின் உயர்ச்சியினும் மிகப்பெரிது.

மலையின் உயர்ச்சியே உலகில் உயர்ந்தது எனினும், அதனினும் அடக்கமுடையவன் புகழே உயர்ந்த தென்பதாம். மலை எவ்வளவு தோற்றத்தை யுடையதாயினும் அதனை அடுத்து நின்று காண்பார்க்கே அது காணப்படும். அடக்கமுடையவனை அனைவரும் அறிவர் என்றபடி.

அடங்கின ஒருவன் பெருமையே இவ்வுலகில் அடங்காமல் நிற்கும் என்பது குறிப்பு.

நெறி தவறாமல் அடங்கி நின்றவனே இவ்வுலகில் உயர்ந்தவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது சனகன்பால் உணரப்

கதை.

சனக மன்னன் நெறி நின்று அரசுபுரிந்த காலத்தில் அவன் பால் முனிவர் பலர் வந்து குழுமினர். உண்டியும், உடையும்,

உறையுளும் உதவி அவரனைவரையும் அவன் ஆதரித்தான். தலைமையான புலமைவாய்ந்த அருந்தவர் ஒருவர்பால் அவர் அமைந்து நூல் பயின்றார். சனகனும் உடனிருந்து பயின்று வந்தான். குறித்த நேரத்தில் எவர் வரவில்லையானாலும் குரு பாடத்தை ஆரம்பித்து விடுவார். அரசன் வரவில்லை என்றால் அவர் நிறுத்தி வைத்திருப்பார். வந்தபின் தொடங்குவர் இதனை முனிவர்கள் எண்ணினார். மனமிக மெலிந்தார். அரசனுனைபடியால் நமது குரு துறவிகளாகிய நம்மினும் சனகன்பால் நன் மதிப்புக்கொண்டுள்ளார் என்று தம்முட்கூறினர். இதனை உய்த்துணர்ந்த குரு சனகன் உயர்வை அவர்கட்குக் காட்டக் கருதினர். ஒரு மந்திர



பலத்தால் ஒரு பெரு நெருப்பை அரண்மனையில் தோன்றும்படி செய்தார். மாளிகை முற்றும் பற்றி யெரிவதாகக் காணப்பட்டது. பாடங்கேட்கும் பொருட்டுக் குழுமியிருந்தவரனைவரும் குலைந்தெழுந்தார். தங்கள் கோவணங்களையும் கமண்டலங்களையும் குறித்து ஓடினர். சனகன் மட்டும் தனியே யிருந்தான். குருவும் இருந்தார். "நீ என் போகவில்லை" என்று அரசனை வினவினர். எல்லாம இறைவன் செயல், அடிமை என் செய்வேன் என்று அடங்கியிருந்தான். ஓடின முனிவர் வந்து ஒன்றும் இன்மையையுணர்ந்தார் கண்டார். மன்னனையும் குருவையும் கண்டு கண்டார், நாணினர், அரசன் அடக்கத்தை அறிந்து போற்றினர். தோன்றிய எவரினும் அவன் தோற்றமே உயர்ந்தது.

அடக்கமுடையவன் உயர்ச்சி மலையினும் பெரிது என்பது இதனால் கூறப்பட்டது.

125. கண்டு குசேலனை முன் கண்ணன் பணிந்ததையேன்
கொண்டு புகழ்ந்தார் குமரேசா—உண்டான
எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்

குமரேசா! கண்ணன் குசேலனைப் பணிந்ததை என் எல்லாரும் கொண்டாடுகின்றார் எனின், பணிதல் எல்லார்க்கும் நன்றாம். அவருள்ளும் செல்வர்க்கே செல்வந் தகைத்து என்க.

பணிதல்=அடங்குதல், தகைத்து=தகுதியையுடையது. பணிதல் தகைத்து என அமைத்து நோக்குக.

அடங்கி ஒழுகும் குணம் செல்வர்க்கு அமையுமாயின் அஃது அவர்க்கு மேலும் ஒரு செல்வம் அமைந்த சிறப்பினையுடையதாம் என்க.

13-ம அதிகாரம் அடக்கமுடைமை. 235

கல்வி அதிகாரம் குடிப்பிறப்பு முதலிய நலங்களையுடையார் அடங்குதலினும் செல்வர் அடங்குதலே சிறந்ததென்றும் என்பார் "செல்வர்க்கே செல்வம் தகைத்து" என்றார். ஏகாரம்பிரிநிலை.

செல்வமுடையவர் அடக்கமுடையவராயின் அவரது மேன்மை மிகவும் பெரிதாம் என்பது கருத்து. செல்வர் அடக்கமே சிறந்து காட்டும் என்பது இதில் காட்டப்பட்டது. இதனைக் கண்ணன்பால் காண்க.

கதை

மணி முடி யரசர் பலர் வந்து பணியும்படியான பெருஞ் செல்வத்தைக் கண்ணன் பெற்றிருந்தும் குசேலனைக் கண்டவுடனே அவனை அரும் காணப் பணிந்தான். அப்பணிதல் அவனுக்குப் பெருஞ் சிறப்பைத் தந்தது செல்வர் அடங்கின் அஃது அவர்க்குப் பெருப் புகழை விளைக்கும் என்பதை உலகம் கண்ணன் பால் கண்டது

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமும் செல்வம் எனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். (நீதி நெறி விளக்கம்.)

செல்வர்க்கு அடக்கமே தேடருஞ் சிறப்பு என்பது இதனால் கூறப்பட்டது.

---

126. புற்றோங்க வன்றே பொறியடக்கி வான்மீகர்
குற்றமற நின்றார் குமரேசா—உற்ற
ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

குமரேசா! புற்றுவளர வான்மீகி ஏன் அதில் அடங்கி நின்று தன் பொறிகளை அடக்கினார் எனின், ஆமைபோல் ஒரு



மையுள் ஐந்தும் அடக்கல் ஆற்றின், எழுமையும் ஏமாப்பு உடைத்து என்க.

ஒருமையுள் ஐந்து அடக்கல் ஆற்றின்—ஒரு பிறப்பில் ஐம் பொறிகளையும் ஒருவன் அடக்க வல்லவனாயின். ஆற்றின் என்றார் அதன் அருமை கருதி.

ஐந்து என்னும் எண்ணுப்பெயர் அதனையுடைய பொறிகளை உணர்த்தி நின்றது. இஃது எண்ணலளவை ஆகுபெயர்.

கால்கள் நான்கு தலை ஒன்று ஆக ஐந்து உறுப்புக்களையும் ஆமை இடர் புகுதாமல் தன்னுள்ளே அடக்குந் தன்மைபோல் ஒரு பிறப்பிலே ஒருவன் ஐம்பொறிகளையும் பாவம் புகுதாமல்

அடக்கவல்லவனாயின், அஃது அவனுக்கு எழுபிறப்பினும் துணையாய் நின்று இன்பம் பயக்கும் என்பதாம்.

ஒருமையில் ஐந்தை அடக்கினவன் எழுமையினும் இன்புறுவன் என்பது கருத்து. வினைப்பயன் எழுமையும் தொடரும் என்பது இதனானும் தெளிவாம்.

ஒன்று ஐந்து எழு என்னும் எண்கள் இதில் ஒன்றிவந்த நயத்தை ஊன்றி உணர்க.

நிலத்தில் வாழும் மக்கள் நிலைத்த இன்பத்தைக் காணவேண்டுமாயின் நீரில் வாழும் ஆமையின் நீர்மையைப் பேணவேண்டுமென்பது குறிப்பு.

ஒரு பிறப்பின் அடக்கக்கால் ஒருவன் எழுபிறப்பினும் இன்புறுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வான்மீகிபால் உணரப்படும்.

## கதை.

வான்மிகி என்பவர் பல்லாயிர வருடங்கட்கு முன்னர் இவ்வுலகில் இருந்த ஒரு பெரியவர். பிறப்பால் அந்தணர். வினைவயத்தால் இவர் தமது குலவொழுக்கத்தை மறந்தார். இழிமகள்



ஒருத்தியை மணந்தார். பழிபடு வினைகள் பலவும் புரிந்தார். அவளுடன் கூடி மக்கள் பலரைப் பெற்றார். வழிப்பறி முதலிய கொடுவினைகளைச் செய்தார். அவற்றால் வருவனகொண்டு அவர்களை ஆதரித்து வந்தார். வருங்கால் ஒரு முனிவர் அவ்வழி வந்தார். அவரையும் இவர் ஆறலைக்கத் தொடர்ந்தார். முனிவர் இவரை நோக்கி, என்னிடம் யாதும் இல்லை. ஆயினும், இத்தீவினையால் வரும் பாவம் நின்னையுமா, இலாபம் உன் மனைவி மக்களையும் பற்றும். இதன் முடிவான பலனை முதலில் தெளிக என்றார். அவரது அறவுரையை இவர் ஆய்ந்தார் தமது குடிசையை நோக்கிச் சென்றார். மனைவி மக்களிடம் தாம் செய்யும்

பாவத்தில் பாதி பெறுவீரோ என்றார். பாவம் கொள்ளோம் அதனால் வரும் பொருளையே கொள்வோம் என்றார். ஒருவரும் உறவல்ல என்னும் உண்மையை யுணர்ந்தார். மீண்டார். முனிவரை ஓடிவந்து கண்டார். அடியிசை விழுந்தார். அருள்புரிய வேண்டினார். அவரும் புரிந்தார். புரிந்தவர் நாரதர் என்பர். புரிந்த மந்திரத்தை இவர் இருந்து சிந்தித்தார். பருவங்கள் பல கடந்தன. இருந்தவிருந்து இவர் எழுந்திடவில்லை. புற்றும் பற்றிப் புறத்தே வளர்ந்தது. முற்றும் மறைத்தது. புற்றில் அடங்கி இவர் பொறிகளையடக்கினார். தத்துவவுணர்வை முற்றிலும் பெற்றார். வெளியுற்றார். இராம சரிதமாகிய இராமாயணத்தை வடமொழியில் அழகுற அருளிச்செய்தார். அதன்பின் அனைவரும் இவரை ஆதிகவி என்றார். வன்மீகம்—புற்று. அதனால் மூடப்பட்டதனால் இவர் வான்மீகி எனப் பெற்றார். அருந்தவர் போற்றும் பெருந்தவராய் இவர் ஒருமையில் ஐந்தினையடக்கி எழுமையினும் இன்பமெய்தினார்.

விரிவை இவரது நூன்முகத்தில் உணர்க.

எழுமையினும் அடக்கம் இன்பந் தருமென்பது இதனால் கூறப்பட்டது.





127. நாவினைக்கா வாமலன்றோ நற்கவுந்தி யாவிருவர்
கூவினரி யானார் குமரேசா—பூவுலகில்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (எ)

இ—ள்.

குமரேசா! நாவைக் காவாமையால் கவுந்தியடிகளால் ஏன் இருவர் நரியாயினர் எனின், யாகாவாராயினும் நாகாக்க கா வாக்கால் சொல்லிழுக்குப்பட்டு சோகாப்பர் எனக.

எது என்னும் அஃறிணை ஒருமை வினாவின் பன்மையாகிய 'யா' என்பது எல்லாவற்றையும் என ஈண்டு நிறைவை உணர்த்தி

சொல்லிழுக்குப்பட்டு சோகாப்பர்—சொற்குற்றத்தில் அகப் பட்டுத் துக்கிப்பார்.

எவற்றையடக்காவிடினும் நாவை அடக்கவேண்டுமெனபார் "யாகாவாராயினும் நாகாக்க" என்றார் நாவைக் காத்தலாவது தீய சொற்களைச் சொல்லாதிருக்கும்படி செய்தல்.

மனத்தையும மெய்யையுங் காவாவிடப்படுங் குற்றத்தினும் ஒருவன் நாவைக் காவா விடப்படுங் குற்றம் பெரிதாம எனபது கருத்து.

தன்னால் காக்கப்படுவன எல்லாவற்றுள்ளும் ஒருவன் நா ஒன்றையுமே நாடிக் காத்தல் வேண்டும் என்பதும், காவாக்கால் வெளிப்படையாகப பெருங் கேட்டை விரைவில் அடைவான் என்பதும் இதில் உணர்ததப்பட்டன. இது கவுந்தியால் வந்த இருவர்பால் காணப்பட்டது.

கதை.

கோவலன் தனது மனைவியோடு மதுரையை நோக்கிவருங் காலத்தில் கவுந்தியென்னும் ஒரு தவமுது மகளைக் கண்டான். தொழுதான். அவள் இவன் நிலைமையையறிந்தாள். இரங்கி



அருளினார். அறவுரைகள் பல புகன்றாள். தேற்றினாள். அதன் பின் அங்கோர் மலர்ச்சோலையில் அம்மூவரும் தங்கியிருந்தார்.

அவ்வமையம் ஒரு விடன் தன் காதற்கிழத்தியுடன் அவ்வழி வந்தான். இருவரும் அம்மூவரை யணுகினர். கோவலன் கண்ணகி என்னும் அவ்விருவரது உருவ நலங்களை யிவர் உருவ நோக்கினர். நெடிது நின்றார். வியந்தார். 'இவர் யாவர்,'' எனக் கவுந்தியிடம் கேட்டார். எம்மக்கள் என்றாள். என்றதைக் கேட்டு நின்றவர் நகைத்தார். ஒரு வயிற்றுப்பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாய்க் கூடியிருத்தல் கூடுமோ என்று பரிகசித்தார். மீண்டும் மீண்டும் வேண்டிய மொழிந்தார். விகடம் செய்தார். உடனே கவுந்தி வெகுண்டாள். அவ்விருவரையும் நரிகளாகச் சபித்தாள். அவ்வாறே அவர் குறிய நரிகளாய் நெடிய குரலிட்டார். உயர்ந்த மக்கட்பிறப்பை ஒரு சொல்லால் இழந்தார். இழி பிறப்புற்றார். நா காவாமையால் சொல்லிழுக்குப்பட்டு சோகாப்பராயினர்.

இதன் விரிவு சிலப்பதிகாரத்தில் தெளிவாம்.

ஆக்கப் படுக்கும் அருங்கலாவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும்
காக்கப் படுவனவும் இந்திரியம் ஐந்தினும்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே (வளையாபதி.)

மொழியடக்கம் இல்லார் இழிவடைவார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

128. நன்றுடைய மாடலனும் நன்மையெல்லாம் ஏனிழந்து
குன்றினனோர் சொல்லால் குமரேசா—என்றேனும்
ஒன்றானுந் தீச்சொற் பொருட் பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.

இ—ள்.

குமரேசா! மாடலன் ஒரு சொல்லால் தனது நன்மை யெல்லாம் ஏன் இழந்து குன்றினன் எனின், தீச்சொற் பொரு-

பயன் ஒன்றுயினும் ஒருவன் பால் உண்டாயின், அவன் நன்று தீதாய் விடும் என்க.

தீச்சொல் என்றது குறளை கடுஞ்சொல் முதலிய தீய சொற்

தீச்சொல் பொருட் பயன்—தீய சொல்லின் பொருளால் வரும் பயன்.

ஒன்றானும் உண்டாயின்—ஒரு சிறிது தோன்றினும்.

பிறர் துன்புறத்தக்க ஒரு தீய சொல்லை நாவடக்கமில்லாமல் ஒருவன் சொல்லுவானாயின் அதனால் அவன் நலங்கள் பலவும் நாசமுறும் என்பதாம்.

பல நல்ல சொற்களையுடையவனிடத்தே தீய சொல் ஒன்று தோன்றுமாயின் அஃது அவன் நன்மையெல்லாங் கெடுத்துத் தீமையைக் கொடுத்துவிடும் எனவும் இது பொருள்படும்.

தீய சொல்லை நாவடக்கமின்றிச் சொல்பவன் தீங்குறுவான் என்பது கருத்து. இது மாடலன்பால் காணப்படும்.

## கதை.

மாடலன் என்பவன் ஓர் அந்தணன். சோழ நாட்டிலே காவிரிப் பூம் பட்டினத்தை யடுத்திருந்த தலைச்செங்கானம் என்னும் ஊரிலே பிறந்தவன். அரிய விரத ஒழுக்கங்களை யுடையவன். கோவலனொடு பெரு நண்பு கொண்டிருந்தான். அவன் நிலை குலைந்து சென்று மதுரையில் கொலையுண்டிறந்ததை யிவன் அறிந்தான். அங்கிருந்து மீண்டான். காவிரிப் பூம் பட்டினத்துட் புகுந்தான். கேட்டவர் நடுங்கும்படி அக்கொலை வினையின் கொடுமையைக் கூறினான். நாவடக்கம் இல்லாமல் இவன் சொல்லிய கடுமொழியின் பயனைக் கோவலனது பெற்றோர் உற்றோர் முதலிய பலரும் அறிந்

தார்.பரிந்துமாண்டார். அதனால் இவன் புண்ணியத்தை இழந்தான். நீங்காத் துன்பத்தை மேவினன். அதன்பின் அப்பாவத்தைத் தீர்க்கும்பொருட்டு இவன் காசியையடைந்தான். கங்கைபடி



னன். ஈசனை வணங்கி மாசினை நீங்கினன். தீச்சொற் பொருட் பயன் ஒருவன்பால் ஒன்று இருப்பினும் அஃது அவன் நன்மை யெல்லாம் குன்ற அழிக்கும் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்தது.

கற்றறிவு குலமேன்மை கருணைபெரும் புகழ்செல்வம்
 கைம்மா றெண்ணு
நற்றவு கொடைசீர்மை ஒழுக்கம்அருந் தவநியமம்
 உறவின் கேண்மை
மற்றெதிரில் வலித்திண்மை வாய்மைமிகுந் தூய்மையொடு
 வனப்பியாவும்
பெற்றிடினும் அடக்கமில்லாப் பெருமிதத்தால் அத்தனைக்கும்
 பிழையுண்டாமால்.
(பிரபோத சந்திரோதயம்)

நாவடக்கம் இல்லாரைப் பாவம் தானே வந்து பற்றுமென் பது இதனால் கூறப்பட்டது.

---

129. ஆற்றாத சிற்றத்தோ டன்றதன்றான் வனாசன்
கூற்றால் விதுரன் குமரேசா—மாற்றாத
தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

இ—ள்.

குமரேசா! துரியோதனனது ஒரு சொல்லால் விதுரன்

என் பெருந் துயர் எய்தி அகன்றான் எனின், தீயினால் சுட்டபுண் உள் ஆறும், நாவினால் சுட்ட வடு ஆறாது என்க.

நாவினாற் சுடுதலாவது கடுஞ் சொற் சொல்லல். வாயினாற் வடு எனவும் பாடம்.

தீயினால் சுட்ட புண் உடம்பில் மட்டும் பட்டுச் சின்னாளில் ஆறித் தீரும்;



கொடிய நாவினால் சுட்ட வடு உள்ளத்தில் பட்டு ஒரு காலத்து மாறாதென்பதாம்.

உயிர்களைத் துன்புறுத்துவதில் தீயும் கொடிய நாவும் ஒக்குமாயினும் முன்னது உடம்பைப்பற்றி நின்று ஒரு வகையான் நீங்கும், பின்னது உயிரைப்பற்றி நின்று எவ்வகையானும் என்றும் நீங்காது ஆதலால் தீயினும் கொடிய நாவே தீயது என்பது குறிப்பு.

நாவடக்கமின்றிக் கடுஞ்சொற் சொல்பவனைத் தீயினும் கொடியன் என்று கருதி நல்லோர் அகல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது விதுரன்பால் உணரப்படும்.

## கதை.

கண்ணனை உபசரித்தான் என்ற எண்ணத்தால் துரியோதனன் விதுரனை அவையில் வைத்துவைதான். பொறுமையுடைய விதுரனும் அதனைப் பொறுக்காமல் பதைத்தான். அவனது வெவ்வாயின் வெவ்வுரையை எண்ணி எண்ணி நொந்தான். அது முதல் அவன் முகத்தை நோக்காமல் அகத்தை மாற்றினான். வெறுத்து நீங்கினான். ஆயினும் அவன் வாயினால் சுட்டவடு இவன் மனத்தில் கிடந்தது. மாறாதிருந்தது.

முதல் விழைந்தொருவன் உடனியைந்தபொருள் பற்றியின்புற

முயங்கினும்
அதிகமென்ற பொருள் ஒருவன் வேறுதரின் அவனையே
யொழிய அறிவரோ
பொதுமடந்தையர் தமக்குமண்ணிலிது புதுமையல்ல அவர்
புதல்வனும்
விதுரன் இன்றவனோ உறவு கொண்டதோர் வியப்பை யென்
சொலி வெறுப்பதே.

இது விதுரனைக்குறித்துத் துரியோதனன் கூறிய வசைமொழி.
தயினுங்கடுஞ்சொல் தீயது என்பது இதனால் கூறப்பட்டது.

---

13-ம் அதிகாரம் அடக்கமுடைமை. 263

130. உண்டாம் அறங்களெல்லாம் உற்றடைய மெய்ப்புகழேன்
கொண்டான் தருமன் குமரேசா—மண்டு
கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றி னுழைந்து.

இ—ள்.

குமரேசா! எல்லா அறங்களும் தன்னை வந்தடைய ஏன் தருமன் புகழடைந்தான் எனின், கதம் காத்துக்கற்று அடங்கலை ஆற்றுவானது செவ்வியை அறம் ஆற்றின் நுழைந்து பார்க்கும் என்க.

கதம்—கோபம். செவ்வி—தக்கசமயம்.
ஆற்றின் நுழைந்து—நெறியிற்புகுந்து.

கதம் காத்தல்—கோபத்தைக் காத்தல். அஃதாவது அதனை மனத்தில் புகவொட்டாதபடி தடுத்தல்.

பொருளைக் கொள்ளைசெய்யும் கள்ளன்போல், வெகுளி மக்களது அறிவைக்கொள்ளை செய்யும் ஆதலால், அதனை ஒருவன் அஞ்சிக்காக்கவேண்டும் என்பது கருத்து.

கதத்தைக் காத்தலும் கற்று அடங்குதலும் அருமை என்பது ஆற்றுவான் என்பதனால் அறியப்படும்.

வெகுளியின்றிக் கல்வியுடையனாய் அடங்கவல்லவனை அறம் தானே வந்து அடையும் என்பதாம்.

அறிவோடு அடங்கிய ஒருவனை அடைதற்கு தருமதேவதை வழிநோக்கி நிற்கும் என்பார் "ஆற்றுவான் செவ்வியை அறம் ஆற்றின் நுழைந்து பார்க்கும்" என்றார்.

கதம் காத்துக் கற்று அடங்கிய ஒருவனை அறம்தானே வந்து அடையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இது தருமன்பால் உணரப்படும்.

264 திருக்குறட் குமரேச வெண்பா.

கதை.

கதம் காத்தலினும் கற்று அடங்குதலினும் தருமர் ஒருவரே எவரினும் முதன்மையானவர். அவற்றால் அறப்பயன் அனைத்தையும் அடைந்தார். அஃது அவர் பெயரானும் அறியப்படும். தனது நாடு முழுவதையும் கவர்ந்துகொண்டு துணைவரோடு பதின்மூன்று வருடம் தன்னை வனவாசஞ்செய்யும்படி செய்த துரியோதனன் மீதும் இவர் கதம் கொண்டிலர். சினந்துபொருது அரசு பெறுவதினும், வனம்புகுந்து திரிவதே நலமென நினைந்தார்.

குரவரையும் கிளைஞரையும் குலத்துரிய துணைவரையும்
கொன்று போர் வென்
றரவமெழுங் கடலாடை அவனியெல்லாம் தனியாளும்
அரசுதன்னில்
கரவுறையும் மனத்தாதை முனிக்குரைத்த மொழிப்படியே
கானந்தோறும்
இரவுபகல் பலமூலசாகநுகர்ந் துயிர் வாழ்தல்

இனிது நன்றே. (1)

வயிரமெனுங் கடுநெருப்பை மிகமூட்டி வளர்க்கின்றுயர் வரைக்காடென்னச்
செயிரமரில் வெகுளிபொராச் சேரவிரு திறத்தோமுஞ் சென்றுமாள்வோம்
கயிரவமுந் தாமரையுங் கமழ்பழனத் திருநாட்டில் கலந்துவாழ
உயிரனையாய் சந்துபட உரைத்தருளென்றான் அறத்தின் உருவம் போல்வான். (பாரதம்.) (2)

---

தருமன் சுதம் காத்த வன்மையும் கற்றடங்கிய தன்மையும் இதனால் இனிது தெளிவாம்.

அடக்கம் உடையானை அறம் விரும்பி யடையும் என்பது இதனால் கூறப்பட்டது.



(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்)

அடக்கம் தன்னையுடையானை இன்பத்திற் செலுத்தும். அடங்காமை துன்பத்தில் தள்ளும். அடக்கமே உயிர்கட்கு ஆக்கம். அடக்கமுடையான் அருஞ்சிறப்படைவான். உலையாது அடங்கினவனே உலகில் உயர்ந்தோன். செல்வர் அடக்கமே சிறப்பினும் சிறப்பு. ஒருமையின் அடங்கினர் எழுமையினும் இன்புறுவர். சொல்லடக்கம் இல்லார் அல்லற்படுவார். தீச்சொல் ஒன்றால் தீங்கு பல உளவாம். தீயினும் தீய நாவே தீயது. அறிந்துளம் அடக்கினர் அறம்பெற அமைவார்.

13-வது அடக்கமுடைமை முற்றிற்று.

# ௰௪-ம் அதிகாரம் ஒழுக்கமுடைமை.

அஃதாவது மக்கள் தத்தமக்குரிய நிலையில் வழுவாமல் ஒழுகுதலையுடையராதல். மனம் மொழி மெய்களை முறையே அடக்கி நெறியே செலுத்தும் அறிவுடையார்க்கே ஒழுக்கம் உரிமையாக அமையுமாகலின் இஃது ஈண்டு வைக்கப்பட்டது.

அதிகாரத்தின் அடைவும் இதனானே தெளிவாம்.

---

131. ஏனோ தசரதனார் இன்னுயிரை நீத்துந்தன்
கோனொழுக்கம் காத்தார் குமரேசா—மானே
ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். (1)

இ—ள்.

குமரேசா! தசரதன் உயிரைவிடுத்தும் ஏன் ஒழுக்கத்தைக் காத்தான் எனின், ஒழுக்கம் விழுப்பம் தரலான் அவ் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்க.

விழுப்பம் தரலான்—சிறப்பினைத் தருதலான்,



பிறப்பால் இழிந்தவனாக எண்ணப்பட்டவனும் ஒழுக்கமுடையனாயின், உயர்ந்தவனாக மதித்துப் போற்றப்படுகின்றான் ஆதலான் 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்றார்.

விழுப்பத்தைத் தருதலான் ஒருவன் ஒழுக்கத்தை உயிரி

ஞஞ்சிறந்ததாகக் கருதிக் காக்கவேண்டும் என்பதாம்.

உயிரினுஞ்சிறந்த பொருள் ஒன்றும் இல்லை ஆயினும், அது, நிலைக்கும் இணங்கித்தன்னையுடையார் அனைவர்க்கும் மேன்மையை ஒருபடியாக உதவாமல் நிற்கும் நீரமுடையது. ஒழுக்கம், நல்வினைபோன்றதற்கே உரியதாய்த் தன்னையுடையார் எவர்க்கும சமமான சிறப்பை அமைவுடன் நல்கும் தகவுடையது. ஆகலால் அதனினும் இதனை ஒருவன் ஆர்வமோடு போற்றவேண்டுமென்பது கருத்து.

உயிரைவிட்டாலும் விடலாம் ஒருவன் ஒழுக்கத்தை விடலாகாதென்பது குறிப்பு. இது தசரதன்பால் உணரப்படும்.

## கதை.

அறுபதினாயிர வருடங்கள் திருவயோத்தியிலிருந்து செங்கோல் செலுத்திய வெண்குடை வேந்தனாகிய தசரதன் தனது மனைவியருள் கைகேசி என்பவட்கு இருவரங்கள் தருவதாக முன் உறுதி கூறியிருந்தான். பருவங்கள் பல கழிந்தன. பின் மந்தரையால் கைகேசி தூண்டப்பட்டாள். இரவு தன்பால் அன்பால்வந்த அரசன் முன் இவள் துன்பாய்த் தோன்றினாள். அவ்வரங்கள் இரண்டையும் தரும்படி வஞ்சமாய்க் கேட்டாள். அரசன் தந்தேன் என்

ருன். அதன்பின், அவற்றுள் ஒன்றால் இராமன் வனம்புகுந்து திரியவும், மற்றொன்றால் தன் மகனாகிய பரதன் அரசுபுரிந்து மகிழவும் வேண்டும் என்று அவள் வேண்டி விரித்தாள். அரசன் அதனைக்கேட்டான். பதைத்தான். தனது அருமைத் திருமகனாகிய இராமனை வனஞ்செல்லும்படிசொல்ல அவன் மனம் பொருந்தவில்லை. சொன்னதை மறுக்கவும் அஞ்சினான். பல இனிய மொழிகளால் அவளை நயந்து வேண்டினான். காலிலும் வீழ்ந்தான். தனது ஒழுக்கத்தை ஓம்பும்பொருட்டு உலகையும் உயிரையும்



கொடுப்பதாகச் சொன்னான். தனது செல்லமகன் மட்டும் வனஞ் செல்லாதிருக்கும்படி அவளைச்சொல்ல வேண்டினான். அவள் சிறிதும் இசைந்திலள். அதனால் அரசன் உயிர் துறந்தான். ஒழுக்கத்தை உயிரினும் ஓம்பிய அரசனது விழுப்பத்தை உலகம் போற்றியது.

கண்ணே வேண்டும் என்னினும் ஈயக் கடவேனென்
உண்ணேர் ஆவி வேண்டினும் இன்றே உனதன்றோ
பெண்ணே வண்மைக் கைகயன் மானே பெறுவாயேல்
மண்ணே கொள்நீ மற்றையதொன்றும் மறவென்றான்.
(கைகேசி சூழ்வினைப்படலம்.)

ஒழுக்கம் உயிரினும் சிறந்தது என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

132. பண்டிகசன் ஏனோ பரிந்தும் ஒழுக்கத்தைக்
கொண்டினிது காத்தான் குமரேசா — கொண்ட
பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. (உ)

குமரேசா! பரிந்தும் ஒழுக்கத்தை ஏன் காசன் காத்தான் எனின், தெரிந்து ஓம்பித்தேரினும் துணை அஃதே; ஆதலால் ஒழுக்

கத்தைப் பரிந்தும் காக்கவேண்டும் என்க.

பரிந்தும்—வருந்தியும். இதில் உம்மை தொக்குநின்றது.

தெரிந்து ஓம்பித்தேரினும்—நுணுகி ஆராய்ந்து தெளியினும்.

துணை அஃதே—துணையாவது அவ்வொழுக்கமே.

மேல், உயிரினும் ஒழுக்கத்தை ஓம்பவேண்டும் என்றார். அங்ஙனம் அதனை ஓம்பியதனால் வரும் பயன் யாது, என்பாரை நோக்கி யிது கூறினார்.

ஒருவன், இருமை யின்பங்களையும், மருவுதற்கு ஒழுக்கமே என்பது குறிப்பு. ஏகாரம் பிரிநிலை.

84



ஒழுக்கத்தைக் காத்தற் கண் உளதாம் வருத்தத்தைக்கருதி 'பரிந்தும்' என்றார்.

எவ்வகையாக ஆராய்ந்து தெளியினும உயிர்க்கு உறுதுணையாய் நிற்பது ஒழுக்கமே ஆதலான், எத்துணை இடுக்கண் வந்த காலத்துந் தளராமல் அதனைக் காக்கவேண்டும் என்பதாம்.

ஒழுக்கத்தை எவ்விதத்தும் ஒருவன் போற்றவேண்டும் என்பது இதில் காட்டப்பட்டது. இது கசன்பால் காணப்படும்.

கதை.

கசன் என்பவன் அமரர் குருவாகிய வியாழன் புதல்வன். அமரரால் போரில்மடிந்த அசுரரை மிருதசஞ்சீவினி என்னும் மந்திரத்தால் அடிக்கடி சுக்கிரன் எழுப்பிவந்தான். அதனால், வானவர் வருந்தினர். அசுரகுருவின்பால் அம்மந்திரத்தைத் தந்திரமாகக்கற்றுவரும்படி அமரர்குரு தன் மகனை ச் செலுத்தினார். கசன் சென்றான். சேர்ந்தான். அவர்மனம மகிழும்படி பணிகள்

பலவும் இவன் பணிவோடு புரிந்தான். இவன் வந்திருக்கும் குறிப்பை அசுரர் மூன்றுமுறை அறிந்தார். கொல்லத் துணிந்தார். குறித்திருந்தார். தனியே ஒருநாள் கசன் வெளியே வந்தான். ஒரு பொழிலுட் புகுந்தான். உடனே சில அசுரரும் புகுந்தார். அவனைக்கொன்று மறைத்தார். குருவின் மகளாகிய தெய்வயானை இயல்பாகவே அவன்மேல் காதல்கொண்டிருந்தாள். அவள் வேண்டுகோளால் சுக்கிரன் அவனை எழுப்பினான். மீண்டும் ஒருநாள் அவனைக் கொன்று சிதைத்து மதுவிற்கலக்கிக் குருவிடம் தந்தார். சுக்கிரன் குடித்தான். உற்றதை உணர்ந்த மகள் தந்தைக்கு உணர்த்தினாள். தந்தையும், தன் வயிற்றில் மதுவுடன் கலந்திருக்கும் கசனை வெளிப்படுத்தக் கருதினான். தனது உயிர் மந்திரத்தை அவன் உணரும்படி சிந்தித்தார். உடனே சுக்கிரன் வயிறு வெடித்தது.

கசன் வெளியே வந்தான். தான் உணர்ந்த மந்திரத்தால் இறந்து கிடந்த குருவை எழுப்பினான். வந்த பயன் எய்தினான். தன் தந்தையைச் சிந்தித்தான். அவன் சென்றுவிடுவான் என்று தெய்வயானை தெளிந்தாள். தடுத்தாள். தன்னைக்கலந்து மகிழும்படி



கனிந்து வேண்டினாள். அவன் மறுத்தான். அவள் பலமுறையும் வற்புறுத்தினாள். கசன் கலங்காமல் நின்றான். அதனால், தெய்வயானை சினந்தாள். அம்மந்திரம் பலியாதிருக்கும்படி சபித்தாள். அது பலியாவிடினும் விடுக என்று அவன் சலியாது சென்றான். வருந்தியும் ஒழுக்கத்தை வழுவாமல் காத்தான்.

ஒழுக்கத்தை ஒருவன் உறுதியாகப் போற்றவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

133. அன்றோர் இழுக்காமல் அகலிகையும் கல்லாகிக்
குன்றினள் என்னே குரவோர்—என்றும்

அவரனைவரையும் நோக்கினர். நீருள் மூழ்கி நெடுநாள் நின்று வெளிவருவோரே அகலிகைக்கு உரியரென்று முனிவர் புகன்றார். ஏரியில் அனைவரும் வந்து புகுந்தார். ஆழ்ந்து மூச்சை அடக்கி நின்றார். வளிமேல் அடக்கும் வலியினை இழந்தார் ஒருவர் பின் ஒருவராய் வெளியே வந்தார். வருத்தமடங்காமல் ஏக்கமோடகன்றார். இந்திரன் பலமுறை முயன்றான் பயன்பெற்றிலன். கோதமர் மட்டும் நெடுநாள் நின்றார். அகலிகையை நினைந்தார். வெளியே வந்தார். வந்தவர் பெருமையைத் தந்தையறிந்தார். தனது குலமகளை அவர் நலமுறத் தந்தார். கோதமர் கொண்டு மகிழ்ந்தார். கூடி வாழ்ந்தார். வாழுங்கால், இந்திரன் ஒருநாள் அங்கு வஞ்சமாய் வந்தான். முனிவர் இல்லை. வஞ்சிக்கும் அவனால் வஞ்சிக்கப்பட்டாள். உடனே, முனிவர் வந்தார். பாவம்! அகலிகை என் செய்வாள். அஞ்சி நின்றாள். இழுக்கம் தெளிந்தார். அப்பொல்லாதவளை நோக்கினர் கல்லாம்படி சபித்தார். அவளும் கருங்கல்லாகி பருத்தே வீழ்ந்தாள். வழுவில்லவளும் ஓர் இழுக்கால் இழிவினையடைந்தனள். இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்தது.

ஒழுக்கம் உயர்வுக்கும், இழுக்கம் இழிவுக்கும் ஏதுவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

143. பண்டு சுகுமாரன் பார்ப்பானாய் வந்துமேன்
கொண்டான் இழிவைக் குமரேசா — கண்ட
மறப்பினும் ஒத்துக்கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். (௪)

இ—ள்.

குமரேசா! சுகுமாரன் பார்ப்பானுய்ப் பிறந்தும் ஏன் இழிந்தான் எனின், ஓத்து மறப்பினுங் கொளலாகும், ஒழுக்கம் குன்றுமாயின் பார்ப்பான் பிறப்புக் கெடும் என்க.

ஒத்து—வேதம், ஓதப்படுவது என்னும் ஏதுவான் வந்தது.

பார்ப்பான்—அந்தணன். வேதப் பொருளையே விரும்பிப் பார்ப்பான் என்பதாம்.

பிறப்புக்கெடுதல்—இழி பிறப்பினனுய மதிக்கப்படுதல்.

கற்ற வேதத்தை மறந்தாலும் மீண்டுங் கற்றுக்கொள்ளலாம். ஒழுக்கங் குன்றுமாயின், பார்ப்பான் பிறப்புயர்வு குன்றிவிடும் என்பதாம்.

வேதத்தை மறந்தாலும், வேதியர் ஒழுக்கத்தை விடலாகாது என்பது கருத்து. உம்மை, மறக்கலாகாது என்பதை உணர்த்தி நின்றது.

வேத உணர்வும், ஒழுக்கமுடைமையும், அந்தணர்க்கு மேன்மையைத் தருவனவாம் என்க. பிறர்க்காயின் ஒழுக்கம் ஒன்றேயமையும், வேதியர்க்காயின் அதனோடு வேதவுணர்வும் வேண்டும் என்பது குறிப்பு.

ஓதலிற் சிறந்தன்று ஒழுக்கமுடைமை. (முதுமொழிக் காஞ்சி).

வேதியர்க்கழகு வேதமும், ஒழுக்கமும். (வெற்றிவேற்கை).

ஒழுக்கம் குன்றினல் பார்ப்பான் உயர்வு குன்றும் என்பது
ல உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுகுமாரன்பால் உண

பண்டைக் காலத்தில் விந்திய மலைக்கு வடபால் சிந்துநதி பருகில் குஞ்சரபுரியென்று ஒரு நகரம் இருந்தது. அதில் சங்

திரசேகரன் என்னும் அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் அந்நகரத்து அரசனாகிய பரிபுரஞ்சயன் என்பவனுக்குப் புரோகிதன். அவனுக்குச் சுகுமாரன் என்றொரு புதல்வன் தோன்றினான் இவன் சிறந்த அழகன். பருவமுற்றான். தந்தைசொற் கடந்து தனியே திரிந்தான். ஓதுவதொழிந்தான். உணர்வும் ஒழிந்தான். மங்கையர் குழாத்தே தங்கி மகிழ்ந்தான். ஒழுக்கம் இலனாய் இழுக்கமே புரிந்தான். தையலார் மையலில் தனி நின்றுழன்றான். வேதமே பார்ப்பார் இவன் ஏதமும் பார்த்தார். வெறுத்து நீக்கினர். தந்தையும் கவன்றார். தனியே அகன்றார். அதன்பின் இவன் மனமிக மெலிந்தான். உலகெங்கும் அலைந்தான். ஈன புன்மைகளைப் பொருந்தினான். அவன்பால் அன்பால் அமர்ந்தினபுற்றான். எல்லாரும் இவனை இழிவாக எண்ணினர். தனது பிறப்பின் சிறப்பை இவன் இறப்பவும் இழந்தான். உயர்ந்தகுலத்தில் பிறந்தவனாயினும் ஒழுக்கம் குன்றினால் அவன் இழிந்தவனாவான் என்பதை இவன் எழுந்துணர்ந்தினான். (இதனவிரிவு சிவராத்திரிப் புராணத்தில் உரைப்பமே.)

ஒருவனது குலத்தின் உயர்வும் ஒழுக்கம் இல்லாழிக் குன்றும் என்பது இதனால் கூறப்பட்டது.

135. உற்ற திருவோ பெர்ந்தும் சுயோதனனேன்
குற்றமுறத் தாழ்ந்தான் குமரேசா—பற்றும்
அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. (5)

குமரேசா! துரியோதனன், உயர்வும் திருவும் ஒருங்கே பெற்றிருந்தும் ஏன் தாழ்ந்தான் எனின், அழுக்காறு உடையான்

கண ஆக்கம்போன்று, ஒழுக்கம் இலான்கண் உயர்வு இல்லை யென்க. அழுக்காறு—பொறாமை.

கண்—இடம். இஃது ஏழனுருபு.



பொறாமையுடையவனிடத்தில் செல்வம் நில்லாதவாறுபோல் ஒழுக்கம் இல்லாதவனிடத்தில் உயர்வு நில்லாது என்பதாம்.

அழுக்காறின்மை ஆக்கத்திற்கும், ஒழுக்கமுடைமை உயர்வுக்கும் ஏதுவாம் என்க.

பொறாமையும், தீய ஒழுக்கமும் பொருந்தியவன் உயர்வையும், திருவையும் ஒருங்கே இழப்பான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனன்பால் உணரப்படும்.

## கதை.

துரியோதனன் சந்திரகுலவேந்தன். அத்தினபுரியிலிருந்து அரசுபுரிந்தவன். திருதராட்டிரனுக்குக் காந்தாரியிடம் பிறந்தவன். பைங்காமுடி மன்னன். அருந்திறலும், பெருந் திருவும் இவன்பால் இயல்பாகவே அமைந்திருந்தன. இறந்தாரையெழுப்புதற்குரிய மந்திரத்தையும் பெற்றிருந்தான். எனினும் கொடிய குணங்களெல்லாம் இவனிடம் குடிகொண்டிருந்தன. தனது தாயத்தாராகிய தருமன் முதலியோரிடம் பொறாமைகொண்டான். அவர்பால் பொல்லாதன புரிந்தான். வீடுமர் முதலிய நல்லோர் சொல்லையும் மறுத்தான். தருக்கினன். ஒழுக்கமின்றி இழுக்கமே செய்தான். சிறந்த ஆக்கமும், உயர்ந்த வாக்கமும் சேரப் பெற்றிருந்தும், அழுக்காறும், தீய ஒழுக்கமும் உடைமையால் இவனை உலகம் இகழ்ந்தது. தன் சுற்றமும் தாழக் குற்றமே செய்தான். அதனால், அவன் கோலும் இழந்தான். தன் கோலமும் அழிந்தான். (இதன் விரிவு பாரதத்தில் உணரப்படும்).

ஒழுக்கம் இல்லானுக்கு உயர்வு இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

136. வீடுமனர் கொண்ட விரத ஒழுக்கத்தைக்
கோடாதேன் காத்தார் குமரேசா—தேடும்
ஒழுக்கத்தின் ஒல்கா ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து (௬)



குமரேசா! தாம் கொண்ட விரத ஒழுக்கத்தை வீடுமர் ஏன் என்றும் கோடாமல் காத்தார் எனின், இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து, உரவோர், ஒழுக்கத்தின் ஒல்கார் என்க.

உரவு—அறிவு, வலியும் ஆம். ஒல்கார்—ஒடுங்கார். படுதல் என்னும் தொழிற்பெயர், தல்விகுதியின்றிப் பாக்கு என்பதைப் பெற்று வந்தது. பாக்கு இங்கே தொழிற்பெயர் விகுதியாய் நின்றது.

ஏதம் படு பாக்கு அறிந்து—குற்றம் உண்டாதலை உணர்ந்து. ஒழுக்கம் தவறினால் குற்றம் வரும் என்பதை யுணர்ந்து அறிவோர் நெறிவழுவாமல் ஒழுகுவர் என்பதாம்.

அடுக்கும் இடுக்கண்கட்கு அஞ்சி அறிவோர் ஒழுக்கில் சுருங்கார் என்பார் "உரவோர் ஒழுக்கத்தின் ஒல்கார்" என்றார்.

தாம் பொருந்திய ஒழுக்கத்தை அறிவோர் வருந்தியும் காப்பர் என்பது கருத்து.

எத்தனை இடையூறுகள் வரினும் உரவோர் ஒழுக்கம் தவறார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது வீடுமரால் உணரப்

கதை.

காசிமன்னன் புதல்வியாகிய அம்பை என்பவள் வீடுமரை மருவியின்புற விழைந்தாள். அவரது அறிவின் பலத்தையும் ஒழுக்கத்தின் நலத்தையும் தெரிந்தாள். அவரை இசையும்படி செய்ய எவராலும் இசையாது என்பதையும் அறிந்தாள். அவரது குருவாகிய பரசுராமரால் அது முடியுமென்று முடிவில் தெளிந்தாள். அவர்பால் வந்தாள். வணங்கினாள். தனது கருத்தை யுணர்த்தினாள். தன்னால் அது முடியும் என்று அவர் கூறினார். அவளோடு அத்தினபுரிக்கு வந்தார். குருவின் வருகையை வீடு மர் அறிந்தார். எதிர்கொண்டு சென்றார். அவரடியினை முறையுட



அன்புடன் தொழுதார். அழைத்துவந்தார். சிறந்ததவிசொன்றில் இருத்தி மகிழ்ந்தார். போற்றி நின்றார். பின்றவரை இருந்தவர் நோக்கினார். அம்பையை அன்புடன் அணைந்துவாழ் என்றார். வீடுமர் [illegible]. [illegible]. குருமொழி யேனும் [illegible] உயிர் நீங்கினும் ஒழுக்கத்தின் ஒல்கேன் என்றார். அவரது அறிவின் திறத்தை அகிலமும் புகழ்ந்தது.

இன்சொலா லவனிகொண்ட எந்தைமுதல் இன்பமன்று
விளிசெய்த நாள்
வன்சொலா விரதமணமுறேனென மனத்தினால் விரத
மன்னினேன்
சொல்லியாரு மறுபரனக்கருத்து [illegible] உரைக்கணு
நிகழ்ந்தவிடு
புன்சொலானதினி மாதவத்தின் [illegible] வன்செவி
பொறுக்குமோ. (க)

களம்புகுந்தவரை மீளவே குதல் கொ[illegible]த கார்முக

உளம்புகுந்தினி திருக்கு நற்கடவுள் ஊன்றியன்றியில

யுண்மையால்
வளம் புனைந்தவறு ராகபோக மிகு மாசா மங்கையர்
பொருட்டினால
விளம்புமிக்கமொழி மொழிக என்றனுப்பர் வேண்டும்
எண்ணினும் வழங்குமேவன். (உ)

உயர்ந்தோர் என்றும் ஒழுக்கம் குன்றார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

137. வீடாத மேன்மையுற்ற வெண்மதியும் வெம்பழியைக்
கூடினான் பின்பேன் குமரேசா—கூடும்
ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. (எ)

டு



குமரேசா! மேன்மை பெற்றிருந்த வெண்மதி பின்பு என் வெம்பழியை மேவினான் எனின், ஒழுக்கத்தால மேன்மையை எய்துவர், இழுக்கத்தால் எய்தாப்பழியை எய்துவர் என்க.

வெண்மதி—சந்திரன். இழுக்கம்—ஒழுக்கத்தவறு.
எய்தாப்பழி—எய்துதற்கு உரித்தல்லாத பழி, அடாப்பழி என்றபடி.

ஒழுக்கம் தவறினவன் செய்யாத குற்றமொன்றைச் செய்ததாகப் பிறர் அவன்போல் பொய்யாகக்கூறினும் உலகம் அதனையும் அவன் இழுக்கப்பற்றி மெய்யாகக்கொள்ளும் ஆகலின் எய்தாப் பழியை அவன் எய்துவன் என்க.

ஒழுக்கமுடையவன் மேன்மையைப் பெறுவான், அதில்லாதவன் பழியை அடைவான் என்பதாம்.

ஒழுக்கத்தால் பெருமையும், இழுக்கத்தால் சிறுமையும் முறையே ஒருவனுக்கு உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சந்திரன்பால் உணரப்படும்.

கதை.

சந்திரன் விண்ணொளியாகி விளங்கிய மேன்மையன். தண்ணளியுடையவன். உயிர்களெல்லாம் உவந்து தொழுதகுந்தன்மையை இயல்பாகப்பெற்றவன். கலைகள் நிறைந்து பேரொழுக்க முடையனாய் இளமையில் விளங்கினான். அதனால் பெருமேன்மை எய்தினான். ஒருநாள் தமது குருவாகிய வியாழபகவானது மனைவியை விரும்பினான். ஒழுக்கந்தவறினான். இழுக்கமே புரிந்தான். அதனால் இந்திரன் முதலிய இமையவரெல்லாம் இவனைப் பழித்தார். பகைத்தார். ஒழுக்கத்தால் தான் முன் எய்தியிருந்த மேன்மையை ஓர் இழுக்கத்தால் இழந்தமையை நினைந்து மதியும் வருந்தி



னான். அதன் பின் தக்கன் மக்களை மணந்தான். அவனால் அடாப் பழியையும் அடைந்தான். அல்லலும் உற்றான். பரமனையடைந்து தன் பழியை நீக்கினான்.

விரிவு சரிதையில் தெளிவாம்.

ஒழுக்கத்தால் புகழும், இழுக்கத்தால் பழியும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

138. என்றும் சகுனி யிடும்பையுற்றான் நல்லொழுக்கம்
இன்றியதால் என்னே குமரேசா — நன்றிக்கு
வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். (அ)

குமரேசா! நல்லொழுக்கம் இல்லாத சகுனி ஏன் என்றும் இடும்பையுற்றான் எனின், நல்லொழுக்கம் நன்றிக்கு வித்து ஆகும்; தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும் என்க.

நன்றி—அறம். வித்து என்றது காரணத்தை.

நல்லொழுக்கம் நன்றிக்கு வித்து ஆகும்—நல்ல ஒழுக்கம் அறத்துக்குக் காரணம் ஆகும்.

மரம், வித்திலிருந்து உண்டாதல்போல், அறம், நல்ல ஒழுக்கத்திலிருந்து உண்டாம் என்பதாம்.

நல்ல ஒழுக்கம் இன்பத்திற்கும், தீய ஒழுக்கம் துன்பத்திற்கும் ஏதுவாம் என்பது கருத்து.

'என்றும்' என்றது, இம்மை மறுமை என்னும் இருமையிலும் தீயொழுக்கம் துன்பந்தரும் என்பது கருதி.



மேல், ஒழுக்கத்தால் புகழும், இழுக்கத்தால் இகழும் வரும் என்றார். இதில், முறையே அவை இன்பமும் துன்பமும் தரும் என்றார். எனவே ஒழுக்கமுடையவர் புகழையும் இன்பத்தையும் பொருந்துவர் என்பதும், அஃதில்லாதவர் பழியையும் துன்பத்தையும் அடைவர் என்பதும் தெளிவபடும். தீயொழுக்கமுள்ளவர் என்றும் துன்புறுவர் என்பது இதில் காட்டப்பட்டது. இது சகுனிபால் காணப்படும்.

## கதை

பண்டைக்காலத்தில் சிந்துநதி யருகில் விரிந்த நிலப்பரப்பு ஒன்று அமைந்திருந்தது. வளமிகவுடையது அதற்குக் காந்தாரம் என்று பெயர். அத்தேசத்தைச் சுபலன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு ஒரு புதல்வன் ஒருவனும் ஒருபுதல்வியும் தோன்றினர். அவ்விருவருக்கும் முறையே சகுனி என்றும் காந்தாரி என்றும் பெயர். இச்சகுனி சூதாடுவதில் மிகவல்லவன் பொய்யும், புனைவும் பொறாமையும் வாய்ந்தவன். வஞ்சகன். தீயநெஞ்சன். தனது மருகனாகிய துரியோதனனைத் தீயவழியிற் செலுத்தினவன். அரச குலத்திற் பிறந்தும் தனது தீய ஒழுக்கத்தால் சிறுமையே அடைந்தான். பாரதப் போரின் இறுதி நாளில் இவன் சகதேவனால் கொல்லப் பட்டான் கொடியவர்களைக் கண்டால் உலகம் இன்றும் சகுனியைக் குறிக்கும். கொடுமைக்கு ஓர் உவமையாகி நின்று இம்லையை என்றும் எய்தினன். (விரிவு அவன் சரிதத்தில் புலனாம்)

தீயொழுக்கம் துன்பந்தரும் என்பது இதனால் கூறப்பட்டது

—0—

139. சொல்லவில்லை யென்னை யோர் தீச்சொல்லும் ஏசு
கொல்லவந்தார் பாலுங் குமரேசா ...
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். (௯)

குமரேசா! ஏசுநாதர் தன்னைக்கொல்ல வந்தவரிடத்தும் ஏன் ஒரு தீயசொல்லையும் சொல்லவில்லை எனின், தீயசொற்களை



வழுக்கியும் வாயால் சொலல், ஒழுக்கமுடையவர்க்கு ஒல்லா ஆகையால்

மையும் பொருந்திய புனிதர். அருள் மிகவு டையவர்.
அருளியுள்ள மொழிகளெல்லாம் நீதிமயமானவை.
களங்களாக மதிக்கப்படுகின்றன. இவர் சொல்லிய மொழிக



ளைக் கேட்டும் நல்லொழுக்கத்தைக் கண்டும் பல்லாயிரக்கணக்கான மனிதர்கள் இவரைப்பின்பற்றினர். அனைவரும் இவரைத் தெய்வமாக மதித்துப் போற்றினர். அதன்பின் இவரது பெருமை எங்கும் பரவியது. அதனால், சிலர் இவர்மீது பொறாமை கொண்டனர். பொல்லாதன செய்தனர். அவ்வெல்லாவற்றினும் இவர் நிலைகுலையாமல் நின்றார். தமக்குத் தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்தார் வெறுத்து வைதாரையும் பொறுத்து வாழ்த்தினார். ஆயினும் அப்பகைவர் இவர்க்கு அல்லல் பல செய்தார். முடிவில் கொல்லவே துணிந்தார். தனித்த ஓர் இடத்தில் பணிகைப்பிடித்தார். பாவம்! இவரது மெல்லிய கைகளிலும் கால்களிலும் வல்லிரும்பை அடித்தார். கொடுவதை செய்தார். அத்தீயவர் தீமைக்கு இவர் திருவுளமிரங்கினார். அவர் நலமுறத்தவனை நாடிநயந்தார். இதமே கூறித்தன் இன்னுயிர் நீர்த்தார். வழுக்கியும் தீச்சொல்லை இவர் வாய்திறந்துரைத்திலர். இவரது ஒழுக்க நலத்தை உலகம் புகழ்ந்தது.

(இதன் விரிவு அவர்சரிதையில் உணரப்படும்.)

தீச்சொல்லை மறந்தும் ஒழுக்கமுடையவர் சொல்லார் என்பது இதனால் கூறப்பட்டது.

—0—

140. கற்றறிந்தும் நற்சமணர் கல்லார்போல் ஏன்மடமைக்

குற்ற முற்றார் முன்னம் குமரேசா—உற்ற
உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் (ம)

இ—ள்.

குமரேசா! சமணர் பலநூல்களைக் கற்றிருந்தும் என்கல்லார் போல் மடமையுற்றார் எனின், உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலைக் கல்லாதார், பலகற்றும், அறிவில்லாதார் என்க.

உலகம் என்றது உயர்ந்தோரை, பல என்றது பலநூல்களை.



உலகத்தோடு ஒட்ட—உலகத்தோடு பொருந்த.

உயர்ந்தோர் ஒழுகிய வழியே ஒழுகுதலை அறியாதார், பல நூல்களையும் கற்றவராயினும், அறிவில்லாதவரே யாவரென்பதாம்.
உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்றது, பழையன கழித்தும் புதியன புகுத்தியும் இடங்காலங்கட்கேற்ப இசைந்து ஒழுகுதலை என்க.

ஞானுணர்வு சால உடையராயினும் உலக உணர்வு இல்வழி அதனால் பயன் இல்லையென்பது கருத்து.
இது சமணர் சிலர்பால் காணப்படும்.

## கதை.

சமணர் மன்பார், இற்றைக்கு ஆயிரத்தைந்நூறு வருடங்கட்கு முன்னர் இவ்வுலகில் உயர்நிலையிலிருந்த ஒரு கூட்டத்தார். பல நூல்களையும் பழுதறக் கற்றவர். விக்கிரமபாண்டியன

மதுரையிலிருந்து அரசபுரியுங் காலத்தில் அங்கு வந்தார். ஓரு
யிரையும் கொல்லலாகாதென்று தமது குரு போதித்திருந்தார்.
அதனால் அவர்கள் தங்கள் தலையிலிருந்த மயிர்களைத் தனித்தனி
பறித்தார். ஏனெனில் அவைகள் இருந்தால் பேனும், ஈரும் பெ
ருகிப் பிறவுயிராம். தரையில் நடந்தால் சிறு பிராணிகள் மடியுமென்
று கருதி மரங்களில் உறிகளைக் கட்டி அவற்றில் தங்கித் தொங்கி
னார். செல்லவேண்டின் மயிற் பீலியால் நீவிச செல்வர். மெய்
வருத்தத்தால் உண்டாயதென்று கருதி நூல் ஆடையை உடுக்
கார். இவ்வகையில் உலகத்தோடு ஒட்டாமல் பலவழியிலும் மாறு
பட்டிருந்தனர். இப்படியிருந்தும் விக்கிரமவேந்தனைக் கொல்லத்
துணிந்தார். அதனையறிந்த மன்னன் அவரனைவரையும் தண்டித்
து அடக்கினன். பல நூல்களையும் கற்றிருந்தும் உலகொழுக்கங்
கல்லாமையால் அறிவிலிகளாக அவர்கள் இழிக்கப்பட்டனர்.

உலகத்தோடு பொருந்த ஒழுகாதவர் அறிவிலாதாரே என்
பது இதனால் கூறப்பட்டது.

௨௨௨. திருக்குறட் குமரேச வெண்பா.

[illegible] தானம் பொய்மொழி பழுக்காதின்மை
[illegible] க்த பயில்புறக் கரணமோம்பல்
[illegible] ல்ல மைனாளும் முனிவின்மை யுயிர்கொல்லாமை
பிறர்மனை நயத்தலின்மை நன்மொழி பிறழா வாய்மை.
புண்ணிய நன்னீராடல் கடவுளர் பூசையாற்றல்
உவவி [illegible] ச்சியீவது பாரகர்க் கூட்டல் தீய
பண்ணைய [illegible] தொழுகுதல் கடுஞ்சொலின்மை
எண்ணிய பூசைகள் தானகு குலத்திறகும இயைந்தவாமால்.

(கூர்ம புராணம்.)

இழிந்த சாதிய ராயினும் புண்ணியம் இயற்றின்
கழிந்த மேன்மைகூர் சாதிய ராகுவர் கடையா
யொழிந்த பாதக மியற்றுந ருயர்ந்தவ ரெனினும்
பொழிந்த தீமைசால் புலைதொழிற் புன்மைய ராவர்.

(ரகசியம்.)

தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்

செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட்பு இகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருள்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலாது அணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்

பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளுங் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது



செல்லுந் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென. (சிலப்பதிகாரம்)

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

ஒழுக்கம் உயிரினும் சிறந்தது. அதனை வருந்தியும் காக்க வேண்டும். ஒழுக்கமே உயர்குலம். அது குன்றினால் அந்தணர் குலங் குன்றும். அஃதில்லாதவனுக்கு உயர்வு இல்லை. அறிவோர் எவ்வகையினும் ஒழுக்கம் குன்றார். அதனால் மேன்மையுண்டாம். அது நீங்கினால் பழியுண்டாம். தீயொழுக்கமுடையர் என்றுந் துன்புறுவர். ஒழுக்கமுடையவர் ஒருபோதும் தீச்சொல்லைச் சொல்லார். நூல்களை அறிந்திருப்பினும் உலகறிந்து ஒழுகவில்லையானால் அவ்வறிவால் பயன் இல்லை.

14-வது ஒழுக்கமுடைமை முற்றிற்று.

—❀—

# ௰௫-ம் அதிகாரம் பிறனில் விழையாமை.

அஃதாவது பிறனுடைய இல்லாளைக் காமமயக்கத்தால் காதலியாமை. ஒழுக்கமுடையார் கண் இயல்பாகவே அமைந்திருக்க வேண்டிய உயர் குணங்களுள் இது முதலது ஆதலின் அதன்பின் வைக்கப்பட்டது.

—0—

141 எள்ளிமுனி தாய்மொழிந்தும் என்மெய்யன் விடுமன்முன்
கொள்ளவில்லை பெண்ணைக் குமரேசா—கொள்ளும்
பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்கண் இல். (௧)

இ—ள்.

குமரேசா! முனிவரும், தாயும் இனிது மொழிந்தும் மெய்மன்னும் விடுமனும் பெண்ணை விழைந்து ஏன் கொள்ளவி

38



ல்லை எனின், பிறன்பொருளாளைப் பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து அறமும் பொருளும் கண்டார்கண் இல்லையென்க.

முனி—விசுவாமித்திரர். மெய்மன்—அரிச்சந்திரன்.
தாய்—பரிமள சக்தி

பிறன்பொருளாள்பெட்டு—பிறனுடைய பொருளாயிருப்பவளை விரும்பி.

ஒருவனுக்கு உரிமையான பொருளாகலின் தலைமையானது மனைவியே, ஆதலின், அவளைப் பொருள் என்றார்.

அறம்பொருள் என்றது அவற்றின் இயல்புகளை விளங்கி

ரைக்கும் நூல்களை எனக.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்களை நான்கனுள், முன்னைய இரண்டின் இயல்புகளை நன்குணர்ந்தவர், பின்னைய இன்பங்களுட் சிற்றின்பத்தை நெறிகெட விழையார் என்பார் "அறம்பொருள் கண்டார்கண் இல்" என்றார்.

அற நூலையும் பொருள் நூலையும் வழுவற அறிந்தார் மாட்டு பிறன் மனைவியை விழைந்தொழுகும் பேதைமை இல்லை எனபதாம்.

பிறர் மாதரைத் தழுவ விழைவது பேதைமை என்பதும், அஃது அறிவுடையார்கண் உண்டாகாது என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அரிச்சந்திரன் வீடுமன் என்னும் அறவோர் பால் அறியப்படும்.

## கதை 1.

சத்திய சீலனாகிய அரிச்சந்திரனை வஞ்சிக்கக் கருதி விசுவாமித்திரர் இரண்டு பெண்களை ஏவினார். அவர்கள் ஆடல் பாடல் அழகு இளமை முதலியவற்றில் மிகச் சிறந்தவர். கண்டவரெவரும் காதல் கொள்ளும்படியான நடையுடை பாவனைகளோடு அரசனை நாடிவந்தார். அரசன் அவ்வமையம் ஒரு பூஞ்சோலையில் அமர்ந்திருந்தான். வந்தவர் மன்னனை மகிழ்ந்து கண்டார், தம



து இனிய குரலால் மனமுருகப் பாடினர். அரசன் உவந்தான் வேண்டுவது என் என்றான் தம்மைக் கலந்து ஒழுகும்படி அரசனை அவர் வணங்கி வேண்டினர். அரசன் வெறுத்தான். வெகுண்டு நீக்கினன். அதன்பின் கோசிகர் வந்தார். வந்த மங்கையரை ஒருமுறையேனும் மருவுக என்றார். அரசன் மறுத்து வணங்கினன். இணங்காமையை முனிவர் உணர்ந்தார், முனிந்தார். மீண்டும் வேண்டினர், அவரடியிசை முடிபட அரசன் விழுந்தான்.

இம்மடமாதை அடியேன் அடையேன் என்றான்.

அடினும் நின்விழி யாரழ லாலெனைச்
சுடினும் என்னுடல் தன்னைத் துறைதுமி
விடினு மொனிமை வெட்டி யரிந்துகூ
றிடினும் இச்சொற் கிசைகிலன் யான் என்றான். (1)
விண்ணை வேண்டினும் ஈகுவன் காமின்று
மண்ணை வேண்டினும் வாழ்வுடன் நல்குவன்
பண்ணை வேண்டிய செஞ்சொற் பகைத்துலை
பெண்ணை வேண்டிலன் யான் என்று பேசினான். (2)

(அரிச்சந்திரபுராணம்).

## கதை 2.

வீடுமர் சந்திரகுலத் தலைவனாகிய சந்தனுவின் புதல்வர் தாய் பெயர் கங்கை. இவர் பிரபாசன் என்னும் வசுவின் அமிசம் கங்காதேவி இவரைப் பதினாறு வயது வரையும் வளர்த்தாள். அதன்பின் சந்தனுவினிடம் சேர்த்தாள். இவரும் சேர்ந்திருந்தார். பல கலைகளிலும் தேர்ந்துயர்ந்தார். சிறந்த மதியும் நிறைந்த ஒழுக்கமும் பொருந்தி விளங்கினார். தமது தந்தையின் பொருட்டு முடிவுவரையும் மணமுடிப்பதில்லையென்று முடிவு செய்தார். தந்தை பரிமளகந்தியை மணந்தார். அவள் பால் சித்திராங்கதன் விசித்திர வீரியன் எனப் புதல்வர் இருவர் தோன்றினர். அவருள் ஒருவன் இறந்தான். இருந்த ஒருவனுக்கு வீடுமன் மணிமுடி சூடினான். சூடிய அரசனும் சின்னாளில் வாடி மடிந்தான். மடிந்த மன்னரது மனைவியரிருவரும் மக்



கட்பேறின்றி யிருந்தார். மதிமரபு விளங்க ஒரு புதல்வன் மையை நினைந்து பரிமளகந்தி வருந்தினாள். தலைமைப் புதல்வனாகிய வீடுமனைத் தனியே யழைத்தாள். குருகுலம் குறுகாமல் பெருகும்படியான குமரர்கள் இல்லையே யென்று மறுகினாள்.

தனது மருகிகளோடு மருவும்படி அவனை வேண்டினன். அக் கொடுமொழி கேட்டு வீமர் நடுங்கினார் செவிகளிரண்டையும் சேரப் புதைத்தார். பிறன் இல் விழைதல் பெருந் தீதென்றார். அறவுரை புகன்றார் அன்னையைத் தேற்றினார். பிறன் பொருளாள் பெட்டொழுகும் பேதைமையை இப்பெரியவர் அடையாமல் பெரும் புகழ் பெற்றார்.

(இதன் விரிவு பாரதம் சம்பவச் சருக்கத்தில் காணப்படும்)

! அறிவுடையார் பிறர் மாதரை விரும்பார் என்பது கூறப்பட்டது.

[(

142. தீதுசெய்தோர் தம்முள்ளே தென்னிலங்கை மன்னவனே
மிகாதுயர்மிக வுற்றான் குமரேசா—ஓதும்
அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையார் இல் (உ)

குமரேசா! தீயவர்களுக்குள் இராவணன் ஏன் மிகவுந் தீயவன் ஆனான் எனின், அறன்கடை நின்றாருள் எல்லாம், பிறன்கடை நின்றாரில் பேதையார் இல் என்க.

அறன்கடை பாவம். அறத்தின் நின்று கடந்தது எனப்படும். ஒளி நீங்கிய இடத்தில் இருள் நிறைந்திருப்பதுபோல் அறம் கடந்த இடத்தில் பாவம் அடைந்திருக்குமென்க.

பிறன் கடை—பிறனுடைய வாயில்.

அறன்கடை நின்றாருள் எல்லாம்—பாவத்தின்கண்ணே நின்றாரெல்லாருள்ளும்.

காமம் கருதிய பாவத்தின் கண்ணே நின்றார் எவரினும், பிறன் மனையாளைக் காதலித்து அவன் வாயிலில் சென்றார்போல பேதையார் இல்லை என்பதாம்.

நெறிகடந்து நின்ற வரைவின் மகளிர் முதலியோரை விரும்பும் அறிவிலிகள் பொருளும அறமும் புகழும் இழப்பினும் புல்லிய இன்பத்தையேனும் பெறுகுவர், பிறன் மனையாளை விரும்புவோர் தமது அச்சத்தாலும் இடையே நிகழும் தடைகளாலும் தாம கருதிய இன்பத்தையும இழப்பார், ஆதலால் அவரினும் மிகப் பேதையா ரென்றார.

பிறனில் விழைவோர், புகழ் அறங்களை இழந்து, பழி பாவங்களை எய்துவர் ஆகலான அவரை ஏதம்செய்யும் ஒதியம் போல விடும பேதையர் என்றார்.

பாவங்கள் எல்லாவற்றினும் பிறனுடைய இல்லாளை விரும்புதல் பெரும் பாவம் என்பதும் அதனால் பலவித கலக்கமும் அழிவும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராவணனால் உணரப்படும்.

கதை.

இராவணன் அரக்கர் முதல்வனாய் இலங்கையில் சிறந்திருந்து அரசுபுரியுங் காலத்தில் பஞ்சவடியில் வந்து தங்கியிருந்த சீதையின் பேரழகைக் கேட்டான. பெருங் காதல் பூண்டான். சந்நியாசிபோல் வேடந்தரித்து அங்கு வந்தான். இராமனும், இலக்குவனும் அவ்விடத்தைவிட்டுப் பிரியும்படி ஒரு சூழ்ச்சி செய்தான். தனியே இலைக்குடிசையிலிருந்த சீதையை வலிதில் எடுத்துச் சென்றான். தனது பூஞ்சோலையாகிய அசோக வனத்தில

யைததான். நாளும் வாது தன் கருத்துக்கு இசையும்படியாக நயந்து வேண்டினன். கற்புத தெய்வமாகிய அந்த அம்மை இவனது மடமைக்கு இரங்கி அறவுரைகள் பல கூறி பகர்ந்தனர். எனினும் இவன் விடாமல் சென்று விரும்பினான். ஒருநாள் தனது முடிபடியில் படிம்படி விழுந்து பணிந்தான். சீதை வெறுத்துரைத்தாள். அவன் மறுத்தும் மறுத்தும் வந்து மதிமயங்



கிச் சென்றான். முடியாத ஒன்றை முடியுமென்று கருதி இவன் நெடுநாள் உழன்றான். அனுமான் முதலிய பெரியோர்கள் வந்து பிறன்கடை நிற்றல் பெரும் பிழை என்று தேற்றினும் தேறாமல நின்றான். அதன்பின், இராமன் இலங்கை புகுந்து தனது வில் வலியால் அரக்கர் குலத்தையும் தொலைத்து அவனையும் அழித்தார். சீதையைச் சிறைமீட்டித் தன் சிந்தை மகிழ்ந்தார்.

பிறன் மனைவை விழைந்ததால் தனது அரசவாழ்வையும் ஆருயிரையும், பெரும் புகழையும் ஒருங்கிழந்து இராவணன் பேதையரிற் பேதையனாய்ப் பெரும் பழி பூண்டான். விரிவை இராம சரிதையில் தெளிக.

வெற்பெடுத் துயர்ந்த திண்டோன் இராவணன் விரகத்தெய்திப்
பொறபுடைச் சீதைநெஞ்சம் மெலிவுறப் புன்மைசெய்து
கற்பெனுங் கனலிபற்றக் கிளையொடுங் கரிந்தானென்னில
அற்புடை யவர்க்குத் தீமைபுரிவரேல் யாருய்வார்.

(கூர்மபுராணம்).

காதலாள் கரிந்துதையக் கடியவே கனைந்துகன்றி
ஏதிலான் தாரநம்பி எவிதென இறந்தபாவத்
தூதலை யுருகவெந்த தொள்ளழற் செப்புப்பாவை
ஆதகாதென்னப்புல்லி அலறமால் யாணவேந்தே.

(சீவக சிந்தாமணி)

பிறனில் விழைதல் பெரும் பேதைமை என்பது இதனுல் கூறப்பட்டது.

143\. தேறுங் குருமனைபால் தீமை செய்தான் சித்தனென்
கூறுபட மாய்ந்தான் குமரேசா—மாறி
விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார். (க)



-ள.

குமரேசா! தனது குருவின் மனைவிபால் தீமை செய்த, சித்தன் என்பவன் உடனே ஏன் கூறுபட்டு மாய்ந்தான் எனின், மன்ற தெளிந்தாரது இல்லின்கண்ணே தீமையைச் செய்து ஒழுகுவார், விளிந்தாரின் வேறு அல்லர் என்க. விளிதல்—இறத்தல்.

மன்ற தெளிந்தார் இல்—நன்ருகத் தெளிந்தவரது இல்லில். அஃதாவது, தம்மீது ஐயங் கொள்ளாதார் இல்லாள் கண்ணே என்க. இனி, மிகத் தெளிந்த நல்லோரது இல் எனவும் ஆம்.

தீமை புரிந்து ஒழுகுவார்—தீமை செய்ய விரும்பி நடப்போர். தீமை என்றது இங்கே கற்பழித்தலை.

தம்மை ஐயுறாத நல்லோரது இல்லாளிடத்தே தீமை செய்தலை விரும்பிச் செல்லும் தீயோர், உயிரோடிருந்தவரேனும் இறந்தவரே யாவர் என்பதாம்.

பிறனில் விழைவார், அறம்பொருள் இன்பங்களை ஒருங்கே இழந்த பெரும் பேதையர் என்று மேலே கூறினர். இதில் அவர், செத்தவரோடு ஒப்பர் என்ருர். என்றது பிறவிப் பயனை அவருயிர் எய்தாமை கருதி என்க.

பிறனுடைய மனைவியைக் கற்பழிக்கச் செல்வோன் பழியும், இழிவும் பொருந்தி அழிவான் என்பது இதில் காட்டப்பட்டது. இது சித்தன்பால் காணப்படும்.

## கதை.

குலோத்துங்கபாண்டியன் அரசுபுரிந்த காலத்தில் வடநாட்டிலிருந்து ஒரு வாள் வீரர் மதுரைக்கு வந்தார். அவர் முதிர்ந்த வயதுடையவர். வாளின் கலை முழுதும் வழுவற உணர்ந்தவர். திண்மையும் அன்பும் மெய்மையும் வாய்ந்தவர். வாள்வினை பயிற்றித் தன் நாளினைக் கழித்தார். இளைஞர் பலரும் அக்கிழவன் பால் பயின்றார். அவருள் சித்தன் என்பவன் அவ்வினையைக் கற்



றுத் தேர்ந்தான். அதனால் செருக்கினான். நன்றியை மறந்தான் குருவுக்கு எதிரியாய்த் தானும் ஓர் கூடம் சமைத்தான். அங்கு பயில்வாரைப் பகைத்துத் தன் பக்கம் சேர்த்தான். அல்லல் பல செய்தான். எனினும் கிழவர் பொறுமையோடு தளர்வின்றியிருந்தார். சித்தன் அவர் இல்லாளையும் தழுவ விழைந்தான். அவர் இல்லாத சமயம் இல்லிற் சென்றான். சொல்லாதன சொல்லினான். அடித் தடுத்துப் போய்த் தொடுத்துப் பிதற்றினான். அப்பொல்லாதவன் செயலுக்கு அந்நல்லாள் நொந்தாள். பரமனை நினைந்தாள். அப் பத்தினியின் பொருட்டுப் பரமன் கிழவனாய் வந்தார். பழிபடு சித்தனைத் துணிபட வெட்டினார். தெளிந்தார் இல்லில் தீமை புரிந்த சித்தன் விளிந்திறந்தான்.

(இது திருவிளையாடற் புராணத்தில் உள்ளது)

பிறன் இல்லாளை விழைவோன் உயிரோடு செத்த பிணம் என்பது இதனால் கூறப்பட்டது.

144. என்னே அகலிகையால் இந்திரனும் தன் பெருமை
சொன்னே இழந்தான் குமரேசா—அன்றே
எனைத்துணைய ராயினும் என்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். (௮)

இ—ள்.

குமரேசா! அகலிகையால் தனது பெருமையை இந்திரனும் ஏன் இழந்தான் எனின், தினைத்துணையும் தேராமல் பிறனுடைய இல்லின்கட் புகுவராயின், அவர் எனைத்துணையராயினும் என் ஆம் என்க. தேர்தல்—உணர்தல்.

தினைத்துணையும்—சிறிதும் என்றபடி.

புகல் என் ஆம் என்று கூட்டி புகுதல் யாதாய் முடியும் என்று கொள்க. தீதாய் முடியும் என்பது கருத்து. புகில் எனவும் பாடம்.



பிறன் மனைவியை விழைதல் பிழையென ஒருவன் தினையளவேனும் உணராது பிறன் இல்லின்கட் புகுவானாயின், எவ்வளவு உயர்வுடையவனாயினும் அவன் பெருமை முழுதும் இழந்து சிறுமையெய்துவான் என்பதாம்.

தன் இல்லாளை விரும்பித் தன் வீட்டினுள் ஒருவன் புகுவானாயின் தன் உள்ளம் எவ்வாறு கொதிக்குமோ, அவ்வாறே பிறன் இல்லின்கண் தான் புகுந்தால் அவன் உள்ளமும் கொதிக்குமே என்னும் உணர்வு சிறிதும் இன்றி என்பார் "தினைத்துணையும் தேரான்" என்றார்.

அறிவு, செல்வம், ஆண்மை, அதிகார முதலிய எல்லா நலங்களும் உடையனாயினும் பிறனில் புகுவானேல் அவன் பழியும், சிறு

145. கண்டான் துரோபதையைக் காதலித்தான் கீசகன்பின்
கொண்டான் பழியேன் குமரேசா—அண்டல்
எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. (ரு)

இ—ள்.

குமரேசா! துரோபதையைக் கண்டு காதலித்த கீசகன் என்றும் அழியாத பழியை ஏன் அடைந்தான் எனின், எளிது என இல்லிறப்பான், எஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழியினை எய்தும் என்க.

இல் இறப்பான்—பிறன் இல்லின்கண் நெறிகடந்து செல்வோன்.

எஞ்ஞான்றும் விளியாது நிற்கும் பழி—எக்காலத்தும் அழியாது நிற்கும் பழி.

எளிதில் எய்துமென்று கருதிப் பிறனுடைய மனையாளை ஒருவன் தழுவவிழைவின் அழியாது எக்காலத்தும் நிலைநிற்கும் பழியை அவன் அடைவன் என்பதாம்.

அதிகார ஆற்றல்களுடைமையால் எளிதில் எய்துமென்று கருதிப் பிறன் இல்லாளை ஒருவன் விரும்பலாகாது என்பதும் விரும்பின் அவனுக்குப் பழியும் கேடும் உளவாம் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கீசகன் பால் உணரப்படும்.



கதை.

கீசகன் என்பவன் மச்சநாட்டதிபனாகிய விராடன் மைத்துனன். அவ்வரசனது மனைவியாகிய சுதேட்டிணையின் உடன் பிறந்தவன். நூற்றுநால்வருள் மூத்தவன். அழகும், திண்மை

யும் அமைந்த மேனியன். இவனைப் பாணன் என்னும் காந்தருவ னது அமிசம் என்பர். விராடனது தானைக்குத் தலைவனாய் நின்று தனியாண்மை செய்தான். செய்துவருங்கால், ஒருநாள் அந்தப்புறத்திற்குச் சென்றான், பாண்டவர்களோடுவந்து வண்ண மகளாய் அங்கே தங்கியிருக்கும் துரோபதையைக் கண்டான். காமுற்றான். அவளை எய்துதல் எளிதென நினைந்தான். தன் உடன் பிறந்தாளிடஞ் சொல்லி அவளை உடன்படுத்த வேண்டினான், முடியவில்லை. பலமுறை முயன்றான். முடிவில் வலிந்து பற்ற மனந் துணிந்தான். பாஞ்சாலி அதனை அறிந்தாள். மிடுக்குந் துடுக்குமிக்க அவன் கெடுத்து விடுவானென்று கவன்றாள். அஞ்சினாள். பரமனே தஞ்ச மென்று நினைந்து நிகழ்வதை வீமனிடம் புகன்றாள். இருவரும் ஒரு சூழ்ச்சியைத் துணிந்தார். பிரிந்தார். மறு தினமே நகையுறு கீசகன் நாணாது வந்தான். அந்நல்லாளை நோக்கினான். பொல்லாததை நினைந்தான். சொல்லாதன சொல்லினான். நயந்தான். வகையில்லாத அவளும் இசைவதுபோல் நடித்தாள். இரவில் ஒரு பனிமலர்ச் சோலைக்குள் அவனைத் தனி வரும்படி பணித்தாள். பரிவான் போனான். இரவும் வந்தது. வீமன் ஒரு மடமகள் போல் உடையணி புனைந்து குறித்த இடத்தில் முன் புகுந்திருந்தான். நறுமணந் தோய்ந்து பெருமகிழ்வோடு அவனும் அங்கு வந்தான். பொழிலுட் புகுந்தான். உடல்முழுதும் ஆடையால் மறைத்து ஒருவகை அழகோடு குழைந்து படுத்திருக்கும் பெண் உருவைக் கண்டான். அவன் கொண்ட உவகைக்கு அளவேயில்லை. பாவம்! பெருகிய காதலோடு அருகில் அணைந்தான் இருந்தான். தழுவ விழைந்தான். காதல் மொழி பல கனிந்து மொழிந்தான். அம்மங்கையின் செங்கையை அமையப்பற்றினான்



மான்போல் கிடந்தவன் மடங்கல்போல் எழுந்தான். கீசகன்

பதைத்துக் கூசி மெய் துடித்தான். அடிகளும், குத்தும் அவன் மேல் இடியென விழுந்தன. அன்றவன் உற்றதை அவன் அன்றி யார் அறிவார். முடிவில் வீமனால் முடிந்து மடிந்தான். எளி தென இல்லிறந்தகால் அழியாப் பழியை இவன் இழிவோடு எய் தினன். (இதன் விரிவு பாரதத்தில் உணரப்படும்.)

பிறன் மனை நயந்தோர் பெரும் பழி எய்துவர் என்பது இத னால் கூறப்பட்டது.

146. அன்றொருவன் இல்லிறப்பால் அப்பனையும் என்பகைத்துக்
கொன்றுபழி கொண்டான் குமரேசா—என்றும்
பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண். (சு)

குமரேசா! முன் ஒருவன் இல் இறப்பால் தன் தந்தையை யும் பகைத்துக் கொன்று என் பழி கொண்டான் எனின், இல் இறப்பான் கண் பகையும், பாவமும் அச்சமும் பழியும் என்னும் இந்நான்கும் என்றும் நீங்கா எனக.

இகத்தல்—விட்டு நீங்குதல். இது தொழிற் பெயர் விகுதி குன்றி எதிர்மறையாய் நின்றது. இகவாவாம்—நீங்காவாம்.

இல் இறத்தல்—பிறனுடைய இல்லாள் கண் பிழைபுரிதல்.

பிறனுடைய மனையாள் பால் நெறி கடந்து செல்வான்கண் பகையும், பாவமும், பயமும், பழியும் என்னும் இந்நான்கும் ஒருக் காலும் நீங்கா என்பதாம்.

மேல், பழி ஒன்றே கூறினர் இதில் அதனோடு இம்மூன்றும் உளவாம் என்றார்.

## 15-ம் அதிகாரம் பிறனில் விழையாமை. 295

பிறனில்லாளை விழைபவன் பழி பாவங்களை எய்தி இழிவான் என்பது கருத்து. இஃது உசகன்பால் உணரப்படும்.

### கதை.

குலோத்துங்க பாண்டியன் மதுரையிலிருந்து அரசுபுரிந்த காலத்தில் அதனை அடுத்து அவந்தி என்று ஒரு நகரம் இருந்தது. அதில் ஒரு வேதியன் இருந்தான். பொறுமை முதலிய உயர் குணங்களை யுடையவன். முதிர்ந்த வயதினன். அவனுடைய மனைவி இளமைப் பருவம் வாய்ந்தவள். எழில் மிகப் பெற்றவள் அவனுடன் கலந்து வாழ்ந்து வருங்கால் ஒரு மைந்தன் பிறந்தான். அவன் வளர்ந்து பருவ முற்றான். பெற்ற தாயையே பெண்கொள நினைந்தான். சேயென இகழாமல் அத்தீயவள் இசைந்தாள். தீமையும் நிகழ்ந்தது. தாயும் சேயும் செய்துவருகின்ற தனிப் பாதகத்தை ஒருநாள் தந்தை குறிப்பால் அறிந்தான். பதைத்து வெறுத்தான. பொறுத்தான். மனம் பதைத்தான். பின்னும் ஒருநாள் அவ்விருவரும் தனித்தார். அந்தணன் அறியாமல் சென்றான். மகன் எனும் பாவி இவன் தலையினைத் துணித்தான். அவளுடன் கூடி வெளிநாடு சென்றான். செல்லும் வழியில் கள்ளர் சிலரால் அவள் கைக்கொள்ளப்பட்டாள். அவர்பாலிருந்து அவள் அடைந்த சிறுமைகள் பல. அவளையிழந்து அவ் இழி மகன் அல்லலுற்றலைந்தான். கண்டார் அனைவரும், அவனைக் காணவு நாணினர். பாவி என்று பழித்தார். அவன் உருவமாறினன். உணர்வு மாறினன். பாவப்பயனைப் பற்றி யுழன்றான். என்றும் நீங்கா இழி பழி எய்தினன்.

(இதன் விரிவு திருவிளையாடலில் மா பாதகந் தீர்த்த படலத்தில் உணரப்படும்.)

அறம்புகழ் கேண்மை பெருமை யிந்நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள். (நாலடியார்)

296 திருக்குறட் குமரேச வெண்பா.

பிறனில் விழைவான் பழி பாவங்களை அடைவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

147. பற்றும் அயோமுகியைப் பற்றான் இலக்குவனேன்
குற்றமென்று நீத்தான் குமரேசா—உற்ற
அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். (எ)

குமரேசா! தன்னை நயந்த அயோமுகியைத்தான் நயவாமல் ஏன் இலக்குவன் தள்ளினன் எனின், பிறன் இயலாளது பெண்மையை நயவாதவனே அறன் இயலான் இல் வாழ்வான் என்க. நயத்தல்—விரும்பல்.

அறன் இயலான்—அறத்தின் இயல்போடு. ஆன் மூன்றனுருபு. பெண்மை என்றது அதன் சுவையை

பிறன் இயலாள் பெண்மை நயவாதவன்—பிறனுடைய இயல்பின்கண்ணே நிற்பவளது மெய் நலத்தை நுகர விரும்பாதவன்.

பிறன் மனையாளை விரும்பாதவனே நெறி வழுவாமல் இல் வாழ்பவன் என்பதாம்.

துறவோர் முதலிய அறவோர்க்கெல்லாம் துணையாய் நின்று விருந்தினரை ஓம்பித் திருந்திய நலத்தோடு பொருந்தி வாழ்பவ

ளுயினும் பிறன் இல்லாளை விரும்புவனுயின் அவன்பால் அறன் இல்லாது என்பது கருத்து.

பிறன் இல் விழையாமையே பேரொழுக்கம் என்பதும் அதனையுடையானே அறவோன் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இலக்குவன்பால் உணரப்படும்.

கதை.

இலக்குவன் தசரதனுடைய மூன்றாம் புதல்வன். தாய் சுமித்திரை. அழகும், வீரமும், அன்பும் நிறைந்தவன். இராம



னுடன் வனம் புகுந்தான். சீதை பிரிந்தபின் இவ்விருவரும் வருந்திக் கவந்த வனத்தையடுத்திருந்த ஒரு மலைச் சாரலில் தங்கினர். சூரியன் மறைந்தான். இருள் நிறைந்தது. அண்ணனுக்குத் தாகம் அதிகரித்தது. இளையவன் நீரைத் தேடி வெளியே போனன். அங்கு இவனை ஒரு மங்கை கண்டாள். காமுற்றாள். அவள் பெயர் அயோமுகி. தன்னைத் தழுவி மகிழும்படி இவனைத் தொழுது வேண்டினள். இளையவன் வெறுத்தான். அவள் நயந்து பற்றினள். இவன் சினந்து எற்றினன். அதன்பின் அவள் வருந்தி நொந்து வைது போனள். கருகு இருளில் தனி இடத்தில் இளமையும் நலமும் அன்பும் பொருந்திய அழகி ஒருத்தி தன்னைத் தழுவ நயந்தும் தான் அவளை நயவாமல் தள்ளிய இளையவன்பெருமையை உலகம் புகழ்ந்தது. (விரிவு சரிதையில் தெளிவாம்.)

பெண்ணி ளாகிய போளுர் பூமியுள்
எண்ண மிக்கவர் எண்ணினும் எண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினும் ஏதில்பெண் நீக்குமின். (வளையாபதி)

148. பண்டாக்கி வந்துரைத்தும் பாராமல் என்உறுதி

கொண்டான் இராமன் குமரேசா—கண்ட
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. (அ)

குமரேசா! அரக்கி வந்து பரிந்துரைத்தும் என் இராமன் விரும்பி நோக்கவில்லை எனின், பிறன் மனைவியை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு அறனும் ஆன்ற ஒழுக்கமும் ஆம் என்க. ஆன்ற ஒழுக்கு—நிறைந்த ஒழுக்கம்.

ஒன்றோ என்பது உம்மை போல் எண்ணு என்னும் பொருளில் வந்தது. நோக்குதல் என்றது நயந்து பார்த்தலை. உள்ளத்தில் காதல் கொள்ளுதலை என்க. சான்றோர்—சால்புடையவர். குணங்களான் நிறைந்தவர் என்றபடி.



பிறன் மனையாளை விரும்பி நோக்காமையே சான்றோர்க்கு அறனும் ஆன்ற ஒழுக்கமும் ஆம் என்பதாம்.

அறம் என்பதும் ஒழுக்கம் என்பதும் பிறன் மனை நயவாமையே என்க. புறத்தில் உள்ள பகைவர்களை அடக்கியாளும் ஆண்மையுடையாரும் அகத்தில் உள்ள காமத்தால் அடங்கித் தாழ்வர் ஆதலின் அதனை அடக்குதலைப் பேராண்மை என்றார்.

பிறனில் விழையாமையே பேராண்மை என்பதூஉம் அதனையுடையாரே சான்றோர் என்பதும், அவரே அறவொழுக்கங்கள் அமையப் பெற்றவர் என்பதும் இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

கதை.

இராமர் பஞ்சவடியில் தங்கியிருந்தபொழுது இராவணன் தங்கையாகிய சூர்ப்பணகை அங்கு வந்து அவரைக் கண்டாள்.

காமுற்றாள். தன்னைக் கூடி மகிழும்படி கோடி வகை செய்தாள். அவர் மறுத்துரைத்தார். மறுத்தும் மறுத்தும் அவள் வேண்டினாள். அதன்பின் அவர் வெறுத்துரைத்தார். வெகுண்டு நீங்கினார். மறு மங்கையர்க்கும் மறு மன்னவர்க்கும் மார்பும் முதுகும் கொடாதவர் என்றும், ஏக பத்தினி விரதர் என்றும், அவரை உலகம் இன்றும் போற்றுகின்றது.

(இதன் விரிவு சூர்ப்பணகைப் படலத்தில் இனிது தெளிவாம்.)

பிறன் மனையாளை விரும்பாதவனே அறமும் ஆண்மையும் உடையான் என்பது இதனால் கூறப்பட்டது.

149. நாடினள்தோள் தோயாமல் நற்றாயு மானவரேன்
ஓடி யகன்றார் குமரேசா—நீடும்
நலக்குரியார் யாரெனில் நாமநீர் வைப்பிற்
பிறற்குரியாள் தோடோயா தார். (௯)

15-ம் அதிகாரம் பிறனில் விழையாமை. 299

குமரேசா! தன்னை நாடினவளுடைய தோளைத் தோயாமல் என் தாயுமானவர் ஓடினார் எனின், நாமநீர்வைப்பின் நலக்கு உரியார் யார் எனின், பிறர்க்கு உரியாள் தோள் தோயாதார் என்க.

நாம் என்னும் உரிச்சொல் அச்சப் பொருளை உணர்த்தும். அஃது ஈறு திரிந்து நாம என நின்றது. தோள் தோய்தல்—இடக்கரடக்கல். நாமநீர் என்றது கடலை. வைப்பு—உலகம்.

ஆழம் விரிவு பெருங் கொடும் பிராணிகள் முதலியவற்றால் எவர்க்கும் அச்சத்தைத் தரும் இயல்பு கடலிடை அமைந்துள்ளது ஆதலின் அதனை "நாமநீர்" என்றார்.

நாமநீர் வைப்பின்—அச்சம் தரும் கடலால் சூழப்பட்ட உலகத்தில்.

பிறனொருவனுக்கு உரியாளது தோளைச் சேராதாரே விரிந்த கடல் சூழ்ந்த இவ்வுலகின்கண் எல்லா நலங்களையும் எய்துதற்கு உரியார் என்பதாம்.

பிறன் இல்லாளை விரும்பாத ஒருவனே இருமையினும் நலம் பெறுவான் என்பது கருத்து. இது தாயுமானவர்பால் உணரப்படும்.

## கதை.

தாயுமானவர் என்பவர் ஒரு தத்துவ வுணர்வினர். இற்றைக்கு 250 வருடங்களுக்கு முன்னர் சோழ நாட்டிலே வேதாரணியம் என்னும் திரு நகரிலே வேளாள வருணத்திலே பிறந்தார். இளமையிலேயே பலகலைகளையும் இவர் வழுவற ஓதி யுணர்ந்தார். அக்காலத்தில் திரிசிர புரத்தில் அரசு புரிந்துவந்த விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கரிடம் இவர் ஓர் உயர்ந்த உத்தியோகத்தில் அமர்ந்திருந்தார். சின்னாளில் அரசன் இறந்தான். அதன்பின் அரசியே அரசை நடத்திவந்தாள். வருங்கால், இவரது அறிவும்





அழகும் அவளைப் பெரிதும் மயக்கின. அவள் இவரைத் தழுவ விழைந்து சமயம் பார்த்திருந்தாள். அதனை இவர் குறிப்பான் உணர்ந்தார். அந்நகர் விட்டகன்றார். அதன்பின், மௌன தேசிகர் என்னும் ஒரு சிவயோகி இடத்து இவர் உபதேசம் பெற்றார். உளப் பற்றற்றார். பரமன் அருளையேபற்றி இன்புற்றார். இப் பெருந் தகை பல கவிகள் பாடியுள்ளார். அவையெல்லாம் அன்பும் இனிமையும் அமைந்து விளங்குகின்றன. தாயுமானவர் பாடல் என அவை இதுபொழுது வழங்கப்படுகின்றன. பிறர்க்கு உரியாள் தோள்தோயாத இவர் பெருநலமுடையராய்ப் பேரின்பந் துய்த்தார். விரிவு சரிதையில் உணரப்படும்.

பிறன் இல்லாளது தோள் நலந் தோயாதவரே பெரு நலந் தோய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

150. நன்றுசெய்தான் தீமை நயவானோர் பெண்ணயந்தேன்
குன்றினன் வாலி குமரேசா—என்றும்
அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. (ம)

குமரேசா! தீமை விரும்பாமல் நன்மையே செய்த வாலியும் ஏன் ஒரு பெண்ணை விழைந்ததால் தீங்குற்றான் எனின், அறன்வரையானும் அல்ல செயினும் பிறன்வரையாளது பெண்மையை ஒருவன் நயவாமை நன்று என்க. அல்ல என்றது பாவத்தை, வரைதல் என்பது எழுதல் கொள்ளல் நீக்கல் உரித்தாக்கல் முதலிய பல பொருள்களையும் குறித்துவரும் ஒரு சொல்.

அறன் வரையான் அல்ல செயினும்—அறத்தை உரித்தாகக் கொள்ளாமல் பாவத்தையே செய்யினும். அறன் என்னுஞ் சொல்லைக் கையால் எழுதுதலுஞ் செய்யாதவனும் மறமே செய்யினும் எனவும் இது பொருள்படும்.



பிறன் வரையாள்—பிறனுடைய உரிமையில் நிற்பவள்.

ஒருவன் அறத்தை வரைந்து செய்யாமல் பாவத்தையே விரைந்து செய்யினும், பிறன் மனையாளைமட்டும் விரும்பாதிருப் பானாயின், அவன் நலம் பெறுவான் என்பதாம்.

எவ்வகைப் பாவங்களைச் செய்யினும் பிறன் இல் விழைதல் என்னும் இப் பெரும் பாவத்தை ஒருவன் செய்யலாகாது என்

பதவுரை குறிப்பு.

எவ்வளவு நல்ல குணங்களையுடையவராயினும் பிறன் இல்லாளது மெய் நலத்தை விழைவராயின் அவர் நன்மையெல்லாம் இழந்து தீமையுறுவர் என்பது கருத்து. இது வாலியால் காணப்படும்.

## கதை.

வாலி என்பவன் இந்திரன் கலையாய் இவ்வுலகில் வந்து தோன்றிய வானர குலத் தலைவன் போராற்றலினும் போராற்றலினும் எவருந் தனக்கு நிகரில்லாதவன். தன்னோடு எதிர்த்தவர் எவராயினும் அவரது வலியிற் பாதி தன்பால் வரும்படி வரம் பெற்றவன். இறைவன்பால் நிறைவான அன்புடையவன். கிட்கிந்தையிலிருந்து அரசு புரிந்தான் அறிவு பெருந்தன்மை முதலிய உயர் குணங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்திருந்தும் தன் தம்பியின் மனைவியாகிய உருமை என்பவளை நயந்தான். நாணாது கவர்ந்தான். சுக்கிரீவன் இவனது ஆற்றலுக்கு அஞ்சி அகன்றான். மறந்தும் மறம் புரியாத அறிவுடையனாயிருந்தும் பிறன் வரையாளைத் தன் வரையாளாக்கிய தீமையால் அதன் பயனை யிழந்தான். இராமமூர்த்தியால் தண்டிக்கப்பட்டான்.

ஈரமாவதும் இற்பிறப் பாவதும்
வீரமாவதும் கல்வியின் மெய்ந்நெறி
வாரமாவதும் மற்றொருவன் புணர்
தாரமாவதைத் தாங்குந் தருக்கதே. (1)

302 திருக்குறட் குமரேச வெண்பா.

தருமமின்ன தெனுந்தகைத் தன்மையும்
இருமை யுந்தெரிந் தெண்ணலை யெண்ணினல்

அருமையும்பிகன் ஆருயிர்த் தேவியைப்
பெருமை நீங்கினை யெய்தப் பெறுதிபோ. (2)

இவை, தான் குற்றம் ஒன்றும் செய்யவில்லை என்று வாதித்த வாலியை நோக்கி இராமன் கூறியன. விரிவை இராமாயணத்தில் உணர்க.

அறனும் அறனறிந்த செய்கையும் சான்றோர்
திறனுடையன் என்றுரைக்குந் தேசும்—பிறனில்
பிழைத்தான் எனப்பிறரால் பேசப் படுமேல்
இழுக்காம் ஒருங்கே இவை. (அறநெறிச்சாரம்.)

பிறன் மனைவியை விரும்பாதவனே அறவோன் என்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்)

பிறன் மனைவியை விரும்புதல் என்னும் பேதைமையை அறவோர் கொள்ளார். அதனைக்கொண்டவர் பெரும் பேதையராவர். அவர் செத்த பிணத்தோடு ஒப்பர். எவ்வளவு பெருமையுடையவராயினும பிறனில் விழைவரேல் அவர் சிறுமையடைவர். அதனால் அழியாப் பழி யுண்டாம். பகையும் அச்சமும் பாவமும் விளையும். பிறனில் விழையாதவனே அறவோனாவான். அவனே பேராண்மையுடையவன. அவனே எல்லா நலங்களும் எய்துதற் குரியவன். அறஞ்செய்யானாயினும் அது செய்யலாகாது.

௰௫-வது பிறனில் விழையாமை முற்றிற்று.

# ௰௬-ம் அதிகாரம் பொறையுடைமை.

அஃதாவது பிறர் செய்த பிழைகளைப் பொறுத்தலை யுடையராதல். பிறனில் விழையாமல் நெறி நின்றொழுகும் நிறையுடையார்க்குப் பொறையுடைமை இன்றியமையாச் சிறப்பினது ஆதலான் அதன்பின் இது வைக்கப்பட்டது.

---

151. கண்டிகழ்ந்து துன்புசெய்த கள்ளரையும் ஏன்பொறுத்தார்
கொண்டசய தேவர் குமரேசா—கிண்டி
அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (க)

ப—ரை.

குமரேசா! சயதேவர் தம்மை இகழ்ந்து துன்பஞ் செய்த கள்ளரையும் ஏன் பொறுத்தார் எனின், அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலையாய அறம் என்க.

அகழ்தல்—தோண்டுதல். இகழ்தல்—அவமதித்தல்.

நிலம், தன்னை அகழ்கின்றவரை வீழாமல் தாங்கும் இடம் பிலையுடையது, அதுபோல், தம்மை இகழ்கின்றவரை வெறுக்காமல் பொறுத்தல் அறிவோர்க்குச் சிறப்பாம என்பதாம்.

நின்பால் இயல்பாகக் காணப்படும் நலத்தை எடுத்துக் காட்டிப் பொறையினது உயர்ந்த நிலையை இது உணர்த்தியதென்க.

பூமியைப் போல் பொறையுடையராய் இருத்தல் வேண்டு மென்பது குறிப்பு.

தம்மை அவமதித்துத் தீமை செய்தவரையும் ஆதரித்துப் பெரியோர் நன்மை செய்வர் என்பது கருத்து. இது சயதேவர் பால் காணப்படும்.

கதை.

சயதேவர் என்பவர் சகந்நாதத்தை யடுத்துள்ள பில்வம் என்னும் ஊரில் பிறந்திருந்த ஒரு பெரியவர். இவரை வியாசரது அவதாரம் என்பர். இவர் வேதமுதலிய கலைகள் பலவும் வழுவறவுணர்ந்து இளமையிலேயே மெய்யுணர்வுடையராய் விளங்கியிருந்தார். பருவம் எய்தியபின் பத்மாவதி என்னும் ஓர் உத்தமியை மணந்தார். திருமால் அடிக்கே பெருமால் கொண்டார். இவரது மன நலத்



தையும் மன யரத்தையும் கண்டு மகிழ்ந்த பெருந் தனவணிகரொருவர் இவரைத் தமது இல்லிற்கு அழைத்துச் சென்றார். சில நாட்கள் கழிந்த பின்னர் அங்கிருந்தபடியே தமது மனைவியுடன் சகந்நாதத்திற்குச் செல்ல விரும்பினார். வணிக அன்பர் ஒரு பெருந் தொகைப் பொருளை அவரது சகடத்தில் வைத்தனுப்பினார். செல்லும் வழியில் கள்ளர் சிலர் வந்தார். கொள்ளை செய்யத் துணிந்தார். தேவர் அப்பொருளை அவர்க்கு மகிழ்வோடு காட்டி முழுதும் கொள்ளும்படி செய்தார். மனைவியுடன் வழிநடந்தார். அத்தீயோர், இவர், பிறரிடஞ் சொல்லித் தமக்குத் துயர் விளைப்பர் என்று கருதி ஓடி வந்தார். சயதேவரைப் பற்றினார். கால்களையும் கைகளையும் வெட்டி ஒரு புதரில் இட்டுப் போயினார். இரவும் வந்தது. அந்த வேட்டைக்கு வந்திருந்த கிரவுஞ்சன் என்னும் வேந்தன் கார் இருளில் இவரை வந்து கண்டான். நிகழ்ந்ததை யுணர்ந்தான். வருந்தி இரங்கினான், விடிந்தபின் தனது இரதத்தில் ஏற்றிக்கொண்டு தன்னகர் கொணர்ந்தான். அரண்மனையில்வைத்து இருவரையும் அன்புடன் ஆதரித்தான். இவரது கட்டளைப்படி அவ்வரசன் நாள்தோறும் பாகவதர்கட்கு வேண்டுவன கொடுத்துவந்தான். அக்கள்வரும் பொருள்பெற விரும்பி பாகவதர்களைப் போல் வேடந்தரித்து அரசன் முன்பு வந்தார். அங்குச் சயதேவரைக் கண்டார். உள்ளம் நடுங்கினார். தேவர் அவர்களை மிகவும் ஆதரித்து பெரும் பொரு

ளைக் கொடுப்பித்து வழியனுப்பினர். தானைத்தலைவர் நால்வரைத் துணையாகச் செலுத்தினர். சென்ற தலைவர்பால் அந்தியோர் சயதேவர் மீது அடாப் பழி கூறினர். அஃதாவது "இவர் மிகக் கொடிய வஞ்சகர். எங்கள் நாட்டு அரசன் இவரைச் சிரச்சேதம் செய்யும்படி எங்களுக்குக் கட்டளையிட்டனர். இவரைப் பற்றி ஒரு காட்டுக்குக் கொண்டுபோய் கால் கைகளைமட்டும் தறித்துவிட்டு உயிர்ச் சேதம் செய்யாமல் சென்றோம். அவ்வுதவிக்காக எங்கட்கு இவ்வளவு பொருளை உபகரித்து உபசரித்தார்." என்று சொல்லி, மேல் காலெழுமுன் பூமி படீர் என்று வெடித்தது. அதில் அப்படு பாவிகள் அனைவரும் ஆழ்ந்திறந்து மறைந்தார். தானைத் தலைவர் தப்பி ஓடிவந்து சயதேவரிடம் நடந்



தைச் சாற்றினர். உடனே தேவர் திருமாலை நினைந்து மனமுருகி இறந்து மறைந்தவர்கள் எழுந்து வரும்படி வேண்டினர். பகவான் தேவரது பொறுமையை வியந்து அவர் விரும்பியபடியே செய்தார். குறைந்த உறுப்புக்களும் நிறைந்து விளங்கின. அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை இகழ்வாரையும் பொறுத்து ஆதரித்த சய தேவரது பொறையுடைமையை அனைவரும் புகழ்ந்து போற்றினர். விரிவை அவர் சரிதையில் உணர்க.

சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
யாந்தனையுங் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்கும் அளவுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம் (மூதுரை.)

பொறுமையே ஒருவனுக்குத் தலைமையான அறம் என்பது கூறப்பட்டது.

152. வள்ளுவர்தம் ஆடை வலித்தான் பிழைபொறுத்துக்
கொள்விலையென் சொன்னார் குமரேசா—உள்ளம்
பொறுத்தல் இறப்பினை யென்று மதனை
மறத்தல் அதனினும் நன்று. (உ.)

இ—ள்.

குமரேசா! தமது ஆடையை வலித்துக் கிழித்தானது பிழையையும் பொறுத்து என் அவனுக்கு வள்ளுவனார் விலையையும் சொன்னார் எனின், இறப்பினை என்றும் பொறுத்தல், அதனை மறத்தல் அதனினும் நன்று என்க.

இறப்பு—நெறி கடந்த செயல்.

இறப்பினை என்றும் பொறுத்தல்—பிழையினை என்றும் பொறுக்க. ஒறுத்தற்கு இயலுங் காலத்திலும் ஒருவன் செய்த பிழையைப் பொறுக்கவேண்டுமென்பார் 'என்றும்' என்றார்.

அதனை மறத்தல் அதனினும் நன்று—அப் பிழையை மறத்தல் அப் பொறையினும் நல்லது.



பொறுத்தல்—பிறர் செய்த பிழையை மனத்துட்கொண்டு சகித்தல்.

மறத்தல்—அதனை உட்கொள்ளாது உடனே மறந்துவிடுதல். மறவாவழி அது மனத்துட் கிளைத்து ஒரோவழிச் சினத்தை யெழுப்பும் ஆதலான் அதனை மறத்தல் மிகவும் நன்றாமென்க.

பிறர் செய்த பிழையைப் பொறுத்தலினும், அதனை உளத்தட்கொள்ளாமல் உடனே மறத்தல் மிக்க நன்மையாம் என்பதாம்.

இப்பெருந் தன்மை வள்ளுவப் பெருமான்பால் உணரப்படும்.

கதை.

வாசுகி என்னும் அம்மையுடன் திருமயிலையிலிருந்து வள்ளுவப் பெருந்தகை இல்லறம் புரிந்து வருங்கால், தாம் நெய்து நெய்த ஆடையை விலைப்படுத்த முறைப்படி ஒருநாள் வெளியே சென்றார். இவரது உயர் குணங்களைக் கண்டு பொறாமை கொண்ட ஒருவன் எவ்வகையாலும் வெகுளியை மூட்டி இவரது மன நிலையைக் கலக்கவேண்டுமென்று நெடு நாளாகக் கருதியிருந்தான். அன்று இவர் எதிரே வந்தான். ஆடை வாங்குபவன் போல் சாடை செய்தான். கையில் வாங்கினான். விலை என்? என்றான். ஒரு பணம் என்றார். கொண்ட துணியை இரு துண்டம் செய்தான். ஒன்றின் விலையை உரையின் என்றான். தேவர் அரைப்பணம் என்றார். அதனையும் இரு துணி செய்து இவ் ஒன்று மட்டும் என் என்றான். பணம் கால் என்றார். அவன் அதனைத் தந்து அத்துணியோடு அகன்றான். ஈதம் பயனற்றதாதலால் வீதியில் எறிந்துவிட்டு நாயனார் வீடு சேர்ந்தார். உற்றதைக்கொண்டு அன்று உறுபசி தீர்த்தார். அந்நெறியிலான் செய்தபிழையினை மறந்து விலை பகர்ந்து தந்த நாயனாரது மெய்ப் பொறையை உலகம் புகழ்ந்தது.

பிறர் செய்த பிழையை மனத்துட்கொள்ளாமல் மறந்துவிடுதல் மிகவும் நல்லது என்பது இதனால் கூறப்பட்டது.

---



153. தூதுசென்ற கண்ணன் துரியோதனன்செய்த
கோதேன் பொறுத்தான் குமரேசா—யாதொன்றும்
இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. (௩)

குமரேசா! தூது சென்ற காலத்தில், துரியோதனன் செய்த பிழையை என் கண்ணன் பொறுத்தான் எனின், மடவார்ப் பொறை வன்மையுள் வன்மையாம் என்க.

ஒரூவுதல் என்பது ஒரால் என வந்தது.

இன்மையுள் இன்மை விருந்து ஒரால்—எளிமையில் எளிமையாவது விருந்தினரைப் பேணாது நீக்குதல்.

மடவார்—மடமையை யுடையவர்; அறிவிலார் என்க.

அறிவிலாரது பிழையைப் பொறுத்தலே அறிஞர்க்குப் பெரு வன்மை என்பதாம்.

பெரும் பொருளுடையனாயினும் விருந்தோம்பானேல் அவனே மிகவும் வறியனாம் என்பதும் வேறு வலிமைகள் இலனாயினும் பொறுமை யுடையனேல் அவனே உலகில் உயர்வலியுடையான் என்பதும் கூறியபடி.

வரு விருந்தைப் பேணலும், பிறர் பிழையைப் பொறுத்தலும் ஒருவனுக்கு நன்மையும் வன்மையும் ஆம் என்பது குறிப்பு.

பிறர் பிழை பொறுத்தலே பெருவன்மை என்பது கருத்து. இது கண்ணன்பால் அமைந்திருந்தது.

## கதை.

தன்பால் தூதுவந்த கண்ணனைத் துரியோதனன் கொல்லக் கருதினான். ஒரு படுகுழி தோண்டி மேற் பரப்பில் ஓர் அழகிய ஆசனமிட்டு அதன்மேல் அவரை எழுந்தருளச் செய்தான்.

குழியுள் ஆயிரக் கணக்கான மல்லர்களை ஆபத்தஞ் செய்துவைத் திருந்தான். கண்ணன் வஞ்சம் அறியாமல் அதன்மேல் வந்திருந் தான். உடனே ஆதனம் சரிந்தது. கண்ணன் உணர்ந்தான். தன் காலால் மல்லரை உழக்கினன். வெளியே வந்தான். மன்னன் செய்த வன்பிழையைப் பொறுத்தான். அவனை ஒன்றுஞ் செய்யா மல் அமைதியோடகன்றான். பெருவன்மையுற்றிருந்தும் அப்பிழை பொறுத்தமையால் கண்ணனது பொறுமையின் பெருமையை வீடு மன் முதலானோர் போற்றிப் புகழ்ந்தார். விரிவு சரிதையில் தெளிவாம்.

பொறுமையே ஒருவனுக்குப் பெருவன்மை என்பது இத னால் கூறப்பட்டது.

154. கொண்ட பொறையுடைமை கோடாமல் ஏனென்றுங்
கொண்டான் தருமன் குமரேசா—கொண்ட
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும். (ச)

குமரேசா! தருமன் ஏன் பொறையுடைமையை என் றும்போற்றி ஒழுகினன் எனின், நிறையுடைமை நீங்காமை வேண் டின் பொறையுடைமையைப் போற்றி ஒழுகவேண்டும் என்க.

நிறை—உயரிய குணங்களெல்லாம் ஒருங்கே நிறைந்திருத் தல். இது சால்பு எனப்படும்.

குணகணங்கள் ஒருவன்பால் நீங்காமல் இருக்கவேண்டுமா
னல் அவன் பொறையுடைமையைப் போற்றி ஒழுகவேண்டும்
என்பதாம்.

எத்துணைப் பெருந் துயரை எய்தினும் பொறுமையை ஒரு
வன் கைவிடலாகாது என்பது கருத்து. இது தருமன் பால்
காணப்படும்.



கதை.

துரியோதனன் செய்த அல்லல் பலவற்றிலும் தருமர் பொறு
மையுற்றிருந்தார். பேரவையில் வைத்துத் தமது மனைவியாகிய
துரோபதையை அவன் மானபங்கஞ் செய்தான். எவரும் பொ
றுத்தற்கரிய அவ்வமையத்தும் இவர் தமது பொறையுடைமையைப்
போற்றி நின்றார். அயல் நின்ற வீமன் விசயன் முதலிய தம்பியர்
வெகுண்டார். இவர், அவர்களைத் தடுத்து அடக்கினார். இவரது
பொறுமையின் பெருமையைப் பூமிதேவியும் புகழ்ந்து போற்
றள்.

வீமன் கதைமேற் கைவைக்க விசயன் சிலைமேல் விழிவைக்க
தாமம் புனைதோள் இளையோரும் தத்தங்கருத்திற் சினமூட்ட
தூமம் படுசெக் கழலவியச் சோலைமேகஞ் சொரிவதுபோல்
நாமத் தருமன் எனத்தக்கோன் இளையோரை நனிஆற்றுன். (1)
தேம்போ தனைத்தும் மெய்சாயுஞ் சிலபோதலருஞ் சிலபோது
வேம்போ தங்கு வாழ்வவெலாம் வெங்கா னுடனே வேவாவோ
ஆம்போ தாகும் அதுவன்றி ஆபொருள்கள் தம்முறையே
போம்போ தனைத்தும் போமுன்னம் பொறுத்தீர் இன்னம்
பொறுமென்றான். (2)

(பாரதம் சூதுபோர்ச் சருக்கம்.)

பொறையில்லார்க்கு நிறை இல்லை என்பது இதனுல் கூறப்
பட்டது.

155. கொன்ற மழுவோனைக் கொல்லாமல் என்பொறுத்தான்
குன்றா இராமன் குமரேசா—கன்றி
ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து . (ஏ)

310 திருக்குறட் குமரேச வெண்பா.

ர—ள.

குமரேசா! தமது முன்னோரைக் கொன்ற மழுவோனை ஏன் இராமன் கொல்லாமல் பொறுத்தான் எனின், ஒறுத்தாரை ஒன்றாக வையார், பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து வைப்பர் என்க.

மழுவோன்—பரசுராமன். மழு—ஒரு வகை ஆயுதம். அது பரசு எனவும் படும். அதனை என்றும் கையில் உடையவனாதலால் அப் பெயர் பெற்றான். ஒறுத்தார்—தண்டித்தவர்.
ஒன்றாக வையார்—ஒரு பொருளாக மதியார்.

தமக்கு ஒருவன் பிழை செய்தால் அதனைத் தாமும் அவன்கட் செய்யாமல் பொறுத்தாரை உலகோர் என்றும் நினைந்து புகழ்வர் என்பதாம்.

பொன்னைப் பேழையுள் வைத்துக் காப்பது போல் பொறையுடையாரை அறிவுடையார் உளத்தில் வைத்துப் போற்றுவர் என்பார் 'பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து வைப்பர்'' என்றார்.

பொறையுடையார் எல்லாராலும் மதித்துப் போற்றப்படுவர் என்பது கருத்து. இஃது இராமர்பால் உணரப்படும்.

கதை.

தசரதராமன் சீதையை மணம்புரிந்து மிதிலையிலிருந்து திருவயோத்தியை நோக்கிவந்தார். வருகின்ற வழியின் இடையே பரசுராமர் வந்து மறித்தார். அவர், சூரிய குலத்து அரசர் பலரையும் தமது மழுவாயுதத்தால் கொன்று குவித்தவர். இவரையும் கொல்லத் துணிந்தார். சினந்தெதிர் நின்றார். சில வன்மொழி பகர்ந்தார். ஏ, இராமா? "நான் உன் குலப் பகைவன், உன்னையுங் கொல்ல வந்தேன். நீ சிறுவனாதலால் முதலில் உனது வலியினை அறிய விரும்புகின்றேன். இதோ என் கையி



லுள்ள வலிய வில்லை நீ வாங்கி வளை பார்ப்போம்" என்றார். உடனே இராமர் முறுவல் சிறிது எய்தினார். தருக வில் என்றார். அவர் தந்தார். இராமர் தமது தடக்கையை நீட்டி அவ்வலிய வில்லை வாங்கினார். வளைத்தார். தமது கூரிய பாணத்தை அதில் கோத்துப் பிடித்தார். தமது முன்னோர் பலரையும் அவர் கொன்றிருந்தும் இவர், அவரைக் கொல்லத் துணிந்திலர். எடுத்துத் தொடுத்த அம்பை வேறொரு திசையில் கடத்து விடுத்தார். நன்மதி புகட்டிச் சென்மின் என்றார். ஒறுத்தற்குரிய உறுவலி படைத்திருந்தும் தன்னைக் கொல்லாமல் பொறுத்த இவரது பொறுமையைக் கண்டு பரசுராமரும் புகழ்ந்து வணங்கினார். போற்றியகன்றார். விரிவு சரிதையில் தெளிவாம்.

பூதலத் தரசையெல்லாம் பொன்றுவித் தனையென்றாலும்
வேதவித் தாய மேலோன் மைந்தனீ விரதம்பூண்டாய்
ஆதலிற் கோறலாகா தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ தியம்புதி விரைவினென்றான்.

(பரசுராமப் படலம்.)

இது, தசரத இராமன் பரசுராமனை நோக்கிக் கூறியது.

ஒறுத்தலினும் பொறுத்தலே நன்றென்பது இதனால் கூறப்பட்டது.

---

156. வெற்றி அருணகிரி வில்லிசெவி கொய்யாதேன்
குற்றம் பொறுத்தார் குமரேசா—பற்றி
ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். (௬)

-ள.

குமரேசா! அருணகிரி நாதர் வெற்றியுற்றும் என் வில்லியாழ்வார் காதை அறுக்காமல் பொறுத்தார் எனின், ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம், பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ் ஆம் என்க.



பொன்றுந் துணையும்—உலகம் அழியும் வரையும் ஒருவனது புகழ் தனக்கு ஆதாரமான உலகம் அழியும் அளவும் வழி வழி வழங்கி நிலை பெறும் என்க.

பிறர் செய்த பிழையைப் பொறுக்காமல் ஒறுத்தவர்க்கு ஒரு நாளில் தோன்றியழியும் சிறிய இன்பமும், பொறுத்தவர்க்கு ஊழியளவும் அழியாத பெரிய புகழும் உளவாம் என்பதாம்.

பொறையுடையான் புகழ் உகாந்தம் வரையும் பொன்றாது நிற்கும் என்பது கருத்து. இஃது அருணகிரி நாதர் பால் அறியப்படும்.

## கதை.

அருணகிரி நாதர் திருவண்ணாமலையில் அவதரித்த ஒரு பெரியவர். சிறந்த புலமை வாய்ந்தவர். குமார தெய்வத்தின் திரு

வருளை நன்கு பெற்றவர். அத்தெய்வத்தின் மீது அற்புதமான பல சந்தப் பாடல்கள் பாடியுள்ளார். அவை திருப்புகழ் எனவழங் கப்படும். இவரது காலம் இற்றைக்கு ஐந்நூறுஐம்பது வரு டங்கட்கு முன்னராம். அக்காலத்தில் விளங்கியிருந்த வில்லி யாழ்வார் என்பவர் புலவர்களைச் சோதிக்கும் தலைமை பெற்றிருந் தார். சோதனையில் தவறிய புலவர்களது செவிகளை அவர் அறுத்துவிடுவார். அக் கொடுஞ் செயலைக் கேட்டு வருந்திய அரு ணகிரி நாதர் அவரை ஒரு நாள் சந்தித்தார். இருவருக்கும் புல மைத் திறத்தைக் குறித்து வாதம் நிகழ்ந்தது. சொற் போர் தொடங்கினர். தோல்வியும் வெற்றியும் தெரிதர விழைந்தார். தோற்றவர் செவியை வென்றவர் அறுத்துவிடவேண்டும் என்று கொடுஞ் சூள் புகன்றார். இருவரும் தமது புலமைத் திறத்தைக் கொட்டி அளந்தார். அதில் வில்லியாழ்வார் தோற்றார். உட னே செவியைக் கொய்துவிடுக என்று தனது தலையைச் சாய்த் தார். அருணகிரியார் அவரை உவந்து அதனை அறுக்கவில்லை. பொறுத்தார். நன்மதி கூறியனுப்பினார். அவரும் இவரது பொ றுமையைப் போற்றிச் சென்றார். பொன்றாப் புகழை இவர் பொ ருந்தி இன்புற்றார். (விரிவு சரிதையில் தெளிவாம்.)



பொறையுடையார்க்கே நிறை புகழ் உண்டாம் என்பது ஈண் கூறப்பட்டது.

157\. திண்டோட் பரிசித்து தீங்குசெய்தும் என்இரக்கம்
கொண்டான் சமீகன் குமரேசா—மண்டித்

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று. (எ)

குமரேசா! பரீச்சித்து வேந்தன் செய்த பிழையினை சமீகன் பொறுத்து இரங்கினன் எனின், திறன் அல்ல தன் பிறர் செய்யினும் நோநொந்து அறன் அல்ல செய்யாமை நன்று என்க. நோ—துன்பம்.

திறன் அல்ல தன் பிறர் செய்யினும்—செய்யத் தகாத ஒன்றைத் தன்னிடத்துப் பிறர் செய்தார் எனினும்,

தனக்குப் பிறர் தீமை செய்யினும் தான் எதிர் செய்யாமல் அவர்க்கு அதனால் உண்டாம் துன்பத்தை நினைந்து வருந்துவது ஒருவனுக்கு நன்று என்பதாம். பிறர் திறன் அல்ல செய்யினும் மிகவும் நொந்து ஒருவன் அறன் அல்ல செய்யாமை நன்று எனவும் இது பொருள்படும்.

பிறர் செய் பிழையைப் பொறுத்தலோடு அதனால் அவர் துன்புறுவரே என்று நல்லோர் நொந்து இரங்குவர் என்பது கருத்து. இது சமீகன்பால் காணப்படும்.

கதை.

சமீகன் என்பவர் ஒரு முனிவர். இவருக்குச் சிருங்கி யென்று ஒரு புதல்வன் பிறந்தான். அதன்பின் மனைவியோடு வனம் புகுந்திருந்து இவர் மா தவஞ் செய்தார். செய்துவருங்கால் பரீச்சித்து மன்னன் ஒரு நாள் அங்கு வேட்டைக்கு வந்



தான். இவரைக் கண்டான். அசைவற்று இவர் மோனமுற்றி

ருந்ததை அவன் நெடிது நேரம் நின்று நோக்கினன். இறந்து கிடந்த பாம்பு ஒன்றைத் தன் வில்லால் கோதி விளையாட்டாக இவர் கழுத்திலே போட்டுவிட்டு அவன் மெல்லப் போனன். அதனைக் கண்டவர் போய் இவர் புதல்வராகிய சிருங்கியிடம் சொன்னர். உடனே அவர் வெகுண்டார். தனது தந்தையின் கழுத்தில் பாம்பைப் போட்டவன் ஏழுநாளுள் பாம்பால் கடியுண்டு இறக்கக் கடவது என்று சபித்தார். சபித்ததைச் சமீகர் அறிந்தார். தமது புதல்வன் சொன்னதை நினைந்து மிகவும் வருந்தினர். அதனை அரசனிடம் அறிவித்து அதற்கு உபாயமுங் கூறி அவன் உய்யும்படி செய்தார். திறன் அல்ல செய்ததால் அரசனுக்கு எய்திய கோலை நினைந்து இவர் நொந்து இரங்கினர்.
ிவைப் பாகவதத்தில் உணர்க.)

நிந்தனை புரியினும் நின் றுதைப்பினும்
சிந்தனை வெகுள்கிலார் சீதரற் றொழா
வந்தனை புரிபவ ரென்று மாமனம்
நொந்தனன் பலப்பல நுவன்றிட் டானரோ. (பாகவதம்.)

இது, மன்னனுக்குச் சாபங்கொடுத்த தன் மகனை நோக்கிச் சமீகன் நொந்து சொன்னது.

தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன். (நாலடியார்)

பிறர் செய் பிழையைப் பொறுப்பதுமன்றி அவர்பால் இரக்கமும் கொள்வர் அறிவோர் என்பது இதனல் கூறப்பட்டது.

---

158. காலால் மிதித்தாற்கும் கச்சியப்ப ரேன்கொடுத்தார்

கோலச் சிவிகை குமரேசா—எனும்
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல். (அ)



இ—ள்.

குமரேசா! தன்னைக் காலால் உதைத்தவனுக்கும் கச்சியப்ப முதலியார் சிவிகை கொடுத்தார்எனின், மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம் தமது தகுதியால் வென்றுவிடவேண்டும் என்க. மிகுதி—மனச்செருக்கு. மிக்கவை—தீயவை தகுதியான் வென்றுவிடல்—பொறையால் வெல்க.

அறிவுடையவன் அமைந்திருக்கவேண்டிய ஒழுங்கில் மிகுந்திருத்தலால் மனச் செருக்கை மிகுதி என்றார்.

தனக்கு ஒருவன் துன்பம்செய்யின் அதனைத் தானும் அவன்கட் செய்யாமல் பொறுத்தலே ஒருவனுக்கு மேன்மையான வெற்றியென்பதாம். தமக்குப் பிறனொருவன் பிழைசெய்த வழி அவன் அதைச் செய்தற்கு ஏதேனும் காரணம் தம்பால் இருப்பின், அதனை நீக்கியும், இலதேல் அவனது அறியாமைக்கு இரங்கியும் அறிவோர் அமைதியுறுவர் என்க.

செருக்கால் தீமை செய்பவரை ஒறுத்து வெல்வதற்கோர் உரித்தான உபாயம் இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கச்சியப்ப முதலியார்பால் உணரப்படும்.

கதை.

கச்சியப்ப முதலியார் என்பவர் தொண்டைமண்டலத்திலே வல்லம் என்னும் ஊரிலே பிறந்தவர். சிறந்த செல்வமும் நிறைந்த கல்வியுமுடையவர். ஒரு நாள் சிவிகையூர்ந்து ஓர் ஊருக்குச் சென்றார். இடை நெறியில் வீரன் என்னும் புலவர் ஒருவர் வந்தார். அவர் குறுநில மன்னர் பலரையும் தம் கவித் திறத்தால் களிப்பித்துப்

பெரும் பரிசு பெற்றவர். எவருக் தனக்கு நிகர் இலர் என்னும் இறுமாப்புடையவர். அதனால், பல்லக்கில் செல்பவர் தம்மைக் கண்டு இறங்கி வணங்கவில்லையேயென்று நினைந்து சினந்தார். நில் என நிறுத்தினர். முதலியார் மார்பில் தன் காலால் ஒல்லென உதைத்தார். செருக்கால் உதைத்தவரை முதலியார் வெறுக்கா





மல் பொறுத்தார். அறியாமல் சென்றேன் என்று வணங்கி உபசரித்து அப்புலவருக்குத்தான் ஊர்ந்துவந்த பல்லக்கையுந் தந்தார். அவர், இவரது பொறுமையின் உயர்வையும் வள்ளற்குணத்தையும் புகழ்ந்து துதித்தனர்.

மண்படுமோ வெய்யிலிலே வாடுமோ புல்லிரு
கண்படுமோ அன்பாகக் கற்றவர்கள்—பண்புகழ
மெச்சியப்பா லும்புகழே வீறுவல்லை யானவந்த
கச்சியப்ப னையுதைத்த கால்.

இது தனக்குச் சிவிகை தந்தவுடனே கச்சியப்பரை நோக்கி அப் புலவர் மகிழ்ந்து சொல்லியது.

(இதன் விரிவு தொண்டைமண்டல சதகத்தில் உணரப்படும்.)

பொறுமையே ஒருவனுக்கு மெய்மையான வெற்றி என்பது இதனால் கூறப்பட்டது.

— —

159. மாறான மாமியின்வாய் வன்சொலெதிர் எவ்விகளி
கூறாமல் நோற்றாள் குமரேசா—தீதறிந்
துறந்தாரிற் றூய்மை யுடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். (௯).

இ—ள்.

குமரேசா! மாறுபட்ட தனது மாமியின் வன்சொல்லுக்

எதிர் ஒன்றுங் கூறாமல் ஏன் கௌரி பொறுத்தாள் எனின், இறந்தார் வாய் இன்னாச் சொல் நோற்கிற்பவர், துறந்தாரின் தூய்மையுடையவராவர் என்க.

இறந்தார்—நெறி கடந்தவர்: தீயார் என்றபடி.
நோற்கிற்பவர்—பொறுப்பவர்.

ஆற்றலையுணர்த்தும் 'கில்' என்னும் இடைநிலையால் பொறுமையின் அருமை உணரப்படும்.

**16-ம் அதிகாரம் பொறையுடைமை. 317**

நிலைமையில் மிகுந்தவரது வாயால் சொல்லப்படுகின்ற தீய சொற்களைப் பொறுப்பவர் துறந்தவரினுந் தூய்மை யுடையவர் என்பதாம். இதிலுள்ள ஐந்தனுருபாகிய இன் எல்லைப் பொருளோடு ஒப்புப் பொருளையும் குறிக்கும்.

பிறர் கூறுகின்ற வன்சொற்களைப் பொறுப்பவர் இல்லறத்திருப்பினும், துறவு நிலை யெய்திய அறவோர்போலத் தூய்மை எய்தி மேன்மை யுறுவர் என்பது கருத்து. இவ்வுண்மை கௌரிபால் காணப்படும்.

கதை.

கௌரி என்பவள் இற்றைக்கு ஆயிரத்துத் தொளாயிர வருடங்கட்கு முன்னர் மதுரையிலிருந்த ஒரு மறையவன் புதல்வி. தாய் பெயர் சுபவிரதை. கௌரி பருவமுறுமுன் பெற்றோர் அவளை ஒருவனுக்கு மணமகளாக்கினர். வரிசைகள் செய்து அவனது நகரினுக்கனுப்பினர். அம் மண மகனது பெற்றோர் செருக்கினை யுடையவர், வஞ்ச நெஞ்சினர். பொறையும் இரக்கமும் இறையும் இல்லாதவர். தமது வீட்டுக்கு வந்த மருகி என்னும் உரிமையும் இன்றி அவட்கு பெருந் துயர் புரிந்தார். கொடுமொழி புகன்றார். நாளும் வன்சொலால் தேளென நலிந்தார். கௌரி தனது விதி நலமென்று பொறையுடன் இருந்தாள். அவளது பொறையின் பயனால் இறைவன் தோன்றினன்.

கிழவனைக் குமரனைக் குழவியாய் நின்றான். தண்ணருள் செய்தபின் அவள் உண்மையை யுணர்ந்தாள். துறந்தவர் போலத் தூய்மையை எய்தினாள். இது திருவிளையாடலில் உள்ளது.

தீயவாது நீச் சொல்லைப் பொறுத்தலால் ஒருவனுக்குத் தவப் பயன் உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

160. மண்டிபுகழ் மாந்தாதா மாதவரின் மேன்மைமிகக்
கொண்டுநின்றார் முன்னேன் குமரேசா—உண்டிதனை
உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரிற் பின் (ப)



இ—ள்.

குமரேசா! மாந்தாதா என்பவர் மாதவரினும் மேன்மை பெற்று முன்பு நின்றார் எனின், பிறர் சொல்லும் இன்னாச் சொல்லை நோற்பாரிற் பின்தான், உண்ணாது நோற்பார் பெரியராவர் என்க.

உண்ணாது நோற்பார்—பட்டினியிருந்து தவம் புரிவோர்.
இன்னாச்சொல் நோற்பார்—இன்னாத சொல்லைப் பொறுப்பவர்.

உணவைத் துறந்து தவம் புரிவோரினும் பிறர் கூறுகின்றவன் சொல்லைப் பொறுப்பவரே பெரியோர் என்பதாம்.

பசி நோயைப் பொறுத்துத் தவம் புரிவதினும், பிறர் சொல்லும் வசை மொழியைப் பொறுத்து அமைதியுறுதல் அருமையென்பது கருத்து.

துறவு நிலை எய்திய பெரியார் எவரினும், பொறையுடைய இல் வாழ்பவனே பெரியோன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாந்தாதா பால் உணரப்படும்.

## கதை.

மாந்தாதா என்பவன் சூரிய குலத்து வேந்தனாகிய யுவனாச்சுவன் புதல்வன் இவன் தோற்றம் மிக்க அற்புதமுடையது. தந்தை புத்திரப் பேறு கருதிச் சிறந்த முனிவர்களைக் கொண்டு அரிய வேள்வியொன்று செய்தான். செய்துவருங்கால் ஒருநாள் இரவில் அரசனுக்குத் தாகம் அதிகரித்தது. அதனால் அங்கு வைத்திருந்த கும்ப நீரைப் பருகினான். உடனே கருவுற்றான். சின்னாட் கழிந்தவுடன் யுவனாச்சுவனது வலது பாகத்தைப் பீறிக் கொண்டு அக்கரு ஓர் அழகிய புதல்வனாய் வெளியே வந்தது. தெய்வ அருளால் அரசன் பிழைத்தான். குழவி பாலின்றி யழுதது. இந்திரன் வந்து தனது வலது கைப் பெரு விரலை அதன் வாயில் வைத்தான். அது மாந்தி மகிழ்ந்தது. அதனால் மாந்தாதா



என்னும் பெயரினை யெய்தி வளர்ந்து பருவமுற்றான். அரசுரிமை பெற்று அகிலமும் புரந்தான். நிறை வலி பெற்றும் பொறையுற்றிருந்தான். செய்தற்கரிய வேள்விகள்பல செய்துமுடித்தான். இவனது பொறையின் இயல்பைச் சிலர் தெளிய விரும்பினர். மன நிலை குலையும்படியான இன்னாத சொற்களை அவரடுத்து மொழிந்தார். இவன் அவற்றை இன்புறப் பொறுத்தான். முற்றத் துறந்தாரும் இவனது பொறைக் குணத்தை வியந்து போற்றினர். பொறையால் உயர்ந்து இவன் புகழ்மீக்கூர்ந்தான், மாதவர் துதிக்கும் மாண்பினை யடைந்தான்.

பெரும் பொறை யுடையவன் அருந்தவரினும் சிறந்தவன் என்பது இதனால் கூறப்பட்டது.

நெறியி னீங்கினோர் நீரல க
அறியாமை யென் றறிதல் வேண்டும். (சிலப்பதிகாரம்.)

இளையான் அடக்கம் அடக்கங் கிளைபொருள்
இல்லான் கொடையே கொடைப்பயன்—எல்லாம்
ஒறுக்கு மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. (நாலடியார்.)

எள்ளிப் பிறருரைக்கும் இன்னாச்சொல் தன்னெஞ்சிற்
கொள்ளிவைத் தாற்போற் கொடிதெனினும்—மெள்ள
அறிவென்னும் நீரால் அவித்தொழுக லாற்றிற்
பிறிதெனினும் வேண்டாந் தவம். (அறநெறிச்சாரம்.)

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

பொறையே தலையாய அறம். பொறுத்தலினும் பிழையை னே மறத்தல் நன்று. பொறுமையே ஒருவனுக்குப் பெரு வன்மையாம். பொறை இல்லார்க்கு நிறை இல்லை. அஃதுடையாரை உலகம் பொன்போல் போற்றும். அதனால், நிலையான புகழுண்டாம். பிறர்செய் பிழைக்கு எதிர்செய்யாமை நன்று. பொறு



மையே ஒருவனுக்குப் பெறலரும் வெற்றி. துறவோரினும் பிறர் வன்மொழி பொறுப்பவரே தூயராவர். பொறை யுடையவரே எவரினும் பெரியவர்.

௧௬-வது பொறையுடைமை முற்றிற்று.

# ௰௭-ம் அதிகாரம் அழுக்காறாமை.

அஃதாவது பொறாமையைச் செய்யாமை. பொறாமை என்னும் இழி குணத்தை புணர்த்தும் அழுக்காறு என்னுஞ் சொல் எதிர்மறை ஆகாரம் புணர்ந்து அதனை விலக்கவேண்டும் என்னும் பொருளில் ஈண்டு வந்தது. இது பொறைக்கு மறுதலையாகலின் அதன்பின் வைக்கப்பட்டது. மேலது கொள்ளத்தக்கது, இது தள்ளத்தக்கது என்க. அதிகார முறைமையும் இதனானே தெளிவாம்.

161. *திண்டோ ளுயர்வீமன் றீயஅழுக் காறுநெஞ்சங்*
*கொண்டிலனென் என்றும் குமரேசா—கண்ட*
*ஒழுக்காறாக் கொள்க ஒருவன்றன் னெஞ்சத்*
*தழுக்கா றிலாத இயல்பு.* (க)

குமரேசா! அழுக்காறு என்னும் இழி குணத்தை வீமன் என் தன் நெஞ்சில் ஒரு போதும் கொள்ளாமல் ஒழுகினன் எனின், தன்னெஞ்சத்து அழுக்காறு இல்லாத இயல்பையே ஒருவன் ஒழுக்காறாகக் கொள்ளவேண்டும் என்க.

ஒழுக்கு ஆறு ஆ கொள்க—ஒழுக்க நெறியாகக் கொள்க.

தனது உள்ளத்தில் அழுக்காறு இல்லாதபடி ஒருவன் அமைந்து ஒழுகவேண்டும் என்பதாம்.



பிறரது நலங்களைக் கண்டு பொறாமைகொள்ளுதல் என்னும் தீக்குணம் தனது நெஞ்சம் புகாமல் ஒருவன் பாதுகாக்கவேண்டுமென்பது கருத்து.

வெளியாசாரங்கள் ஒன்றும் இலனாயினும் அழுக்காறு இல்லாத ஒருவனே விழுமிய ஒழுக்கமுள்ளவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது வீமனால் உணரப்படும்.

## கதை.

வீமன் பாண்டுவேந்தன் புதல்வன் தருமனுக்குப் பின் குந்திதேவியின் பால் வாயுவின் கலையாய் வந்து பிறந்தான். குழவிப் பருவத்தே தாய் இவனை ஒரு மலைமேல் எடுத்துச் சென்றாள். ஏறிச் செல்லுங்கால் குழவி கை நழுவிக் கீழே விழுந்தது. விழுந்த இடம் தூள்பட்டது. உடனே "பீமன்" என்று ஆகாயத்திலிருந்து ஒரு ஒலி தோன்றிற்று. அந்த அசரீரி வாக்கையே இவனுக்குப் பெயராகச் சூட்டினர். பீமன் என்றால் பிறர் பயமுறத்தக்க வலியினையுடையவன் என்பதாம். அது வீமன் என மருவியது. இவன் சிறந்த தேகபலமுடையவன். தண்டயுத்தத்தில் எவருந் தனக்கு நிகர் இல்லாதவன். பிறர் மனைவியரையும் பிறர் பொருளையும் கனவிலும் விரும்பாதவன். பிறரது வசையைச் சிறிதும் இசையான். பிறரது துயரைத் தனதெனநினைவான். பிறர் நலமுறவே பெரிதும் விரும்புவான். ஆடம்பரமான வெளியொழுக்கங்கள் ஒன்றும் மேற்கொள்ளான். உள்ளத்தில் அழுக்காறு இல்லாத இயல்பையே தனது ஒழுக்கமாகக் கொண்டான். பூசனை முதலிய வெளி ஆசாரங்களையுடைய விசயன் முதலிய எவரினும் மனநலமுடையனாய் இவன் மாண்புற்றான்.

விரிவு சரிதையில் தெளிவாம்.

பிறர்மனை யவரைப் பெற்றதாய் எனவும் பிறர்பொருள் எட்டியே எனவும்
பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும் பிறர்துயர் என்துயர் எனவும்

இறுதியவரினும் என்மனம் இடக்கை யெம்பிரான் இவைபெனவுரைத்தான்

மறலியும் மடியுமாறுமலியற்கை வலிமைசேர் வாயுவின் மைந்தன்.

இது, தன் மனநிலையை யறிய விரும்பிய கண்ணன் பால் வீமன் கூறியது.

அழுக்காறு இல்லாதவனே உண்மையான ஒழுக்கம் உள்ளவன் என்பது இதனால் கூறப்பட்டது.

162. பெற்றாள் அகருமை பேறு அழுக்காறுங்
குற்ற மின்மை என்னே குமரேசா—முற்றும்
விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லை யார்மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின் (உ)

குமரேசா! அழுக்காறு என்னும் குற்றம் இல்லாமையே தான் பெறும் பேறாக என் அகருமை பெற்றாள் எனின், யார் மாட்டும் அழுக்காற்றின் அன்மைபெறின், விழுப்பேற்றின் அஃது ஒப்பது இல்லை என்க.

விழுப்பேறு—சிறந்த பேறு. பேறு—பெறப்படுவது.

அழுக்காற்றின் அன்மை பெறின்—அழுக்காற்றில் நின்று நீங்குதலை ஒருவன் பெறுவானாயின். பெறின் என்றது அதன் அருமையை விளக்கி நின்றது.

பகைவரிடத்தும் அழுக்காறு கொள்ளலாகாது என்பதை உணர்த்துதற்கு "யார்மாட்டும்" என்றார்.

பெறுகின்ற பேறுகள் எல்லாவற்றினும் அழுக்காறு இன்மையே ஒருவனுக்குச் சிறந்த பேறு என்பதாம்.

அழுக்காற்றின் நீக்கமே உயிர்கட்கு விழுமிய ஆக்கம என்பது குறிப்பு, இஃது அநசூயை பால் அறியப்படும்.



## கதை.

அத்திரி முனிவரது பத்தினியாகிய அநசூயை அழுக்காறு இல்லாத இயல்பையே தனக்கு உரிமையான உடைமையாகக் கொண்டிருந்தாள். யார்மாட்டும் அசூயை கொள்ளாத தன்மையால் அந்த அம்மையை அநசூயை என்று உலகம் புகழ்ந்தது. அவளது மனநலத்தை அனைவரும் அறியும்படிசெய்ய நாரதர் விரும்பினர். அயனுலகம் புகுந்து கலைமகள் முன் நின்று கொஞ்சம் இருப்புக்கடலையைத் தந்து வறுத்துக்கொடுக்க வேண்டினர். அம்மை முடியாதென அருளினர். இலக்குமியிடம் சென்று கேட்டார். அவரும் மறுத்தார். அதன்பின் உமாதேவியிடம் வேண்டினர். அம்மையும் அவ்வாறே மறுத்தார். உடனே உலகில் வந்து அதனை அநசூயையிடங் கொடுத்தார். பத்தினி கொண்டாள், வறுத்துக் கொடுத்தாள். அதனைப் பெற்றுக் கொறித்துக்கொண்டு முனிவர் மேற்குறித்த மூவரிடமும் முறையே சென்றார். உங்களால் முடியாத ஒன்றை உலகில் ஒருத்தி முடித்துத் தந்தாள். அவள் அழுக்காறு இல்லாதவள். உங்களினும் குணங்களால் உயர்ந்தவள் என்று புகழ்ந்து சென்றார். அம்மூவரும் மனம் பொறாமல் தங்கள் தலைவர்களிடம் அதனைச்சாற்றி அநசூயையினது மனநிலையைக் குலைக்கும்படி வேண்டினர். அவரும் இசைந்தார். அவள்பால் வந்தார். அதிதிகள்போல் வேடங்கொண்டு நின்றார். அவள், உபசரித்து யாதுவேண்டும் என அவரை வேண்டினள். அவர், "உன் இன்பால் உண்ண நின்பால் அன்பால் வந்தோம்" என்றார். உடனே சிறிது நீரை எடுத்துத் தெளித்து அம்மூவரையும் இளங்குழவிகளாக்கி, மார்பொடணைத்துப் பால்

தன் கூட்டினாள். அவள் கற்பின் மகிமையால் வந்தவர் மீளாமல் தங்கியிருந்தார். மலைமகளும், கலைமகளும், மலர்மகளும் அவள் பால் வந்து தங்கள் தலைவரைத் தரும்படி மங்கலப்பிச்சை கேட்டார். அவள் வணங்கித் தந்தாள். அங்குத் தங்கியிருந்த அம் மூவரின் கலைகளால் தத்தாத்திரேயர் தோன்றினர். இராமர் வனம்புகுந்த காலத்தில் உடன் வந்திருந்த சீதைக்கு பல்கல அணிகள் பல தந்து நன்மதி புகட்டினாள். இங்ஙனம் நேர்ந்தும் தெய்வ

41



பத்தினிகளும் போற்றத்தக்க பெருஞ்சிறப்பைப் பெற்று அரும் புகழோடு விளங்கியிருந்தாள். அவள் பெற்ற பெரும்பேறுகளுக் கெல்லாம் அழுக்காறின்மையே காரணம் என்பர்

விரிவை நூல்களிற் காண்க.

அழுக்காறின்மையே உயிர்கட்கு விழுப்பேறென்பது இதனால் கூறப்பட்டது.

163. பொற்றன் னளாக்கம் என்றாகம் பேணாதேன்
குறாமுற்றான் வினை குமரேசா—முற்றும்
அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். (௩)

)—ள.

இவன் நாணியகன்றான். அரசன் மனநலத்தால் புகழும் மேன்மையும் பொருந்தி யின்புற்றான். தனது மனக்கோட்டத்தால் இவன், அறமும் ஆக்கமும் அகன்றிட நொந்தான். கவலை வந்து வளைக்கிறான். அவனை நினைந்தவரையும் தான் நலுதலதில்லை என்று உலகறிய இவனொரு உறுதியை மொழிந்தான். அதனை யிவ னவிற்றான். பிறனாக்கம் பொறாது அழுக்காறு செய்வானை அறக்கடவுள் வெறுக்குமென்பதை இவன் அறிந்து தெளிந்தான்.

விரிவை நளன்கதையில் உணர்க.

அழுக்காறுடையானை அறம்பொருள் அடையா என்பது இதனால் கூறப்பட்டது.

---

164. சேரன் அமைச்சரல்ல செய்யாமல் ஏனன்பு
கூரநின்றார் பின்பு குமரேசா—யாரும்
அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து (ச)

இ—ள்.

குமரேசா! அழுக்காற்றால் முன்பு அல்லவை செய்த



சேரனது அமைச்சர் பின்பு ஏன் அவற்றைச் செய்யாமல் அன்பு செய்தார் எனின், இழுக்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து, அழுக்காற்றின் அல்லவை செய்யார் என்க.

இழுக்காறு—கொடுநெறி.

அல்லவை—அறன் அல்லாதன; தீவினைகள் என்க.

(இழு)க்காற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து—தீ நெறியால் கேடு வருதலைத் தெளிந்து.

தீ நெறியால் கேடுவரும் என்பதைத் தெளிந்து அழுக்காறு

ஏதுவாக அறிவோர் அல்லன செய்யார் எனபதாம்.

இழுக்கை ஆற்றின் ஏதம்வரும் என அறிந்து அழுக்காற்றால் அல்லன செய்யார் எனவும் இது பொருள்படும்.

இழுக்கு ஆற்றலாவது, ஆக்கமுடையானை நோக்கிப்பொறாது அவர்க்குக் கேடு நினைத்தலும், பழிமொழிபகர்தலும், இழிவினை செய்தலு முதலியன.

பொறாமையுடையவனை அறமும் ஆக்கமும் அடையாவென்று மேலே கூறினர், இதில், அவ்வுண்மையை அறிந்து அல்லவை செய்யார் அறவோர் என்றார்.

இது சேரன் அமைச்சர்பால் தேறப்படும்.

கதை.

சேரநாட்டிலே திருவஞ்சிக்களம் என்னும் திருநகரிலே இற்றைக்கு நாலாயிரத்துத் தொளாயிரத்துத் தொண்ணூறு வருடங்கட்கு முன்னர் குலசேகரன் என்னும் பெயரினையுடைய அரசர் பெருமான் ஒருவர் இருந்தார். அரச பதவியைப் பெற்றிருந்தும் பகவானது குணகணங்களாகிய அமுதவெள்ளத்திலேயே இவர், ஆழ்ந்திருந்தார். மாலடிக்கே மனங்குழைந்த இவரது குண நலத்தைக்கண்டு பாகவதர்கள் பலர்வந்து குழுமினர். அவரனைவரையும் இவர், ஆரா அன்போடு ஆதரித்து வந்தார். அதனால் அடிய



வர்களுடைய அதிகாரமும் செல்வாக்கும் அங்கு அதிகரித்தன. அரசனது மனமும் அடியவரது இனமும் ஒருமையுற்றிருப்பதை அமைச்சர் அறிந்தார். அழுக்காறு கொண்டார். அரசனுக்கு அவர்மேல் வெறுப்பையுண்டுபண்ணி அவரனைவரையும் துரத்திவிட எண்ணினர். ஒரு நவமணி மாலையை எடுத்துமறைத்து அதனைக் களவுசெய்து கொண்டார் என்று பாகவதர்கள் மேல் அடாப்பழி கூறினர். அரசன் அதனை நம்பவில்லை. ஆராய்ந்து உண்மை தெளிக்

தான். அழுக்காறு காரணமாக அமைச்சரே அது செய்தார் என்றுணர்ந்து அவரை வெறுத்தான். இழுக்காற்றியதால் ஏதம் வந்ததென்பதை அமைச்சர் அறிந்து வருந்தினர். அழுக்காற்றால் அல்லவற்றை இனிமேல் செய்யோம் என்று அரசனைவணங்கி அன்றுமுதல் அமைச்சரனைவரும் அடியவர்பால் அன்புற்றிருந்தார். இதன் விரிவு ஆழ்வார் நூலில் அறியப்படும்.

அழுக்காற்றால் இழுக்கம் வரும் என்பது இதனால் கூறப்பட்டது.

165. கேடுபிறர் செய்யாதேன் கேடுற்றாள் காந்தாரி
கோடியதன் னெஞ்சால் குமரேசா—கோடும்
அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

இ—ள்.

குமரேசா! பிறரொருவரும் கேடு செய்யாமலிருந்தும் என் காந்தாரி தானே கெட்டு நொந்தாள் எனின், ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது ஆகலான், அழுக்காறு உடையார்க்கு அது சாலும் என்க. ஒன்னார்—பகைவர்.

பொருந்ாதவர் என்னும் பொருளை விளக்கும் ஒன்றார் என்னும் சொல் ஒன்னார் என மருவி வந்தது. இதன் எதிர்மொழி ஒன்றுநர்.

ஒன்னார் வழுக்கியும் கேடு ஈன்பது—பகைவர் நீங்கியும் கேடு தரவல்லது.



உலகில் ஒருவருக்கொருவர் கேடு புரிபவர் பகைவரே யாதலான் அவர் செய்யாதொழியினும் அழுக்காறு அதனைச் செய்து விடும் என்பது கருத்து.

அழுக்காறு உடையவர்க்கு வேறு பகைவர் வேண்டாம் தமக்குக் கேடுதருதற்கு அஃதொன்றே அமையும் என்பதாம்.

கொடிய பகையினும், அழுக்காறு கொடியது ஆகலான் அதனை ஒருவன் வெறுத்து நீக்கவேண்டும் என்பது குறிப்பு.

தன்னையுடையவர்க்கு அழுக்காறு தப்பாமல் கேடுதரும் என்பது இதில் காட்டப்பட்டது. இவ்வுண்மை காந்தாரிபால் காணப்படும்.

## கதை.

திருதராட்டிரன் மனைவியாகிய காந்தாரி கருப்பந்தரித்து மகப்பேறு நோக்கும் பருவகாலத்தை எதிர்நோக்கி விருப்பமுற்றிருந்தாள். பொருந்திய நாளும் இருந்து நிறைந்தது. அக்காலத்தில் பாண்டுவின் மனைவியாகிய குந்திதேவி தருமன் என்னும் ஓர் அருமைக் குழந்தையை முதலிற் பெற்றாள். அக்குழந்தையைக் கண்டு பெற்றோரும் சுற்றமும் பெருமகிழ்வுற்றார். இதனைக் காந்தாரி தெரிந்தாள். தனக்கு முந்திய பிள்ளையைப்பெற்றுக் குந்தி பெருமையும் புகழும் பெற்றனளே என்று அவள் பொறாமையுற்றாள். அதனால் ஒரு கருங்கல்லை எடுத்துத் தன் வயிற்றில் நெருங்க இடித்தாள். கருப்பஞ்சிதைந்தது. உதிரமாகித் தரையில் வீழ்ந்தது. வியாசரது அருளால் அவ்வுதிரத்துளிகள் பின் பிள்ளைகளாயின. சிறந்த கருப்பமும் அவள் பொறாமையால் சிதைந்திழிந்தது. பகைவரையின்றியுங் காந்தாரி தன் அழுக்காற்றால் தானே கெட்டாள். இதன் விரிவு பாரதத்தில் உணரப்படும்.

அற்றனள் துயரமெல்லாம் அருந்தவப் பயனால் மைந்தற்
பெற்றனள் குந்தியென்னும் பேருரை கேட்டவன்றே
உற்றனள் பொறாமை கல்லால் உதரமுட் குழம்புமாறு
செற்றனள் தனது மேடும் ஆக்கமுஞ் சிந்தியாதாள்.

(சம்பவச் சருக்கம்)



அழுக்காறுடையவர் தாமே கெடுவர் என்பது இதனால் கூறப்பட

166. ஏறிக் கறுத்த சிசுபாலன் சுற்றமேன்
கூறுபட்டுத் தாழ்ந்த குமரேசா—தேறிக்
கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். (௬)

குமரேசா! இராசசூய வேள்வியில் கண்ணனுக்குத் தருமர் கொடுப்பதனைத் தடுக்க சிசுபாலனது சுற்றம் ஏன் சிதறுண்டு கெட்டது எனின், கொடுப்பது அழுக்கறுப்பானது சுற்றம் உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக்கெடும் என்க.

கொடுப்பது உடுப்பது உண்பது என்பன வினையாலணையும் பெயர்கள். ஒருவன் பிறனொருவனுக்கு ஏதாவது ஒன்றைக் கொடுக்கும்பொழுது அதனை அழுக்காற்றினால் தடுப்பவனது சுற்றம், உடுக்கப்படுவதும் உண்ணப்படுவதுமாகிய உடையும் உணவும் இல்லாமல் கெடும் என்பதாம்.

உடை—உடம்பின் பாதுகாப்பிற்கு உதவுவது.

உணவு—உயிரின் பாதுகாப்பிற்கு உதவுவது.

இடம் பொருள் ஏவல் முதலிய எவற்றினும் உயிர்கள் இன்புற்று வாழ்தற்கு இவ்விரண்டுமே இன்றியமையாச் சிறப்பின வாகலின் அவை ஈண்டு விதந்து குறிக்கப்பட்டன.

பிறர் பெறுவதனை இழப்பிப் போனது சுற்றமும் உணவு இழந்து கெடுமென்றால் அவன் பேரிழவு சொல்லவேண்டாவாயிற்று.

அழுக்காறு, தன்னை எடுத்தவரையும், அடுத்தவரையும் கெடுத்து விடும் என்பது கருத்து. இது சிசுபாலன்பாலும் அவனது

சுற்றத்தின் பாலும் தெளியப்படும்.

## கதை.

சேதிநாட்டுத் தலைவனாகிய சிசுபாலன் என்பவன் கண்ணன் மீது நெடுங்காலம் அழுக்காறுகொண்டிருந்தான். அக்காலத்தில் தருமர் இந்திரப் பிரத்தத்தில் இராசசூயம் என்னும் ஓர் அரியவேள்வியைச் செய்தார். அதன் பொருட்டு முனிவர் அரசர் முதலிய பெரியோர் பலரும் அங்குக் குழுமியிருந்தார். வேள்வி முடிந்தவுடன் யாருக்கு முதலில் அவிநலந் தருவது என்று ஆராய்ந்தார். அங்கு வந்திருந்தவர்களுள் வியாசர் எழுந்தார். முதன்மையாகப் பூசனையைப் பெறுவதற்கு உரியார் கண்ணன் ஒருவனே என்று மொழிந்தார். அனைவரும் அது சரியென்றிசைந்தார் தருமர் கொடுக்கத் துணிந்தார். சிசுபாலன் பொறாமையால் தடுத்தான. அதன் பயனாக அவன் ஆழியால் அழிந்தான். அதன் பின் அவன் அரசியல் குலைந்தது. நாடு முழுதும் கேடே பலித்தது. வறுமையும் சிறுமையும் பெருகி வளர்ந்தன. அவன் சுற்றத்தாருட் பலர் உடையின்றி மெலிந்தார். உணவின்றி யிழிந்தார்.

விரிவு பாகவதத்தில் தெளிவாம்.

தாமுங் கொடார்கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமஞ்செய் வாருஞ் சிலருண்டே—ஏமஎழில்
இடமலர் காய்கனிகள் ஈந்தருளு மாமரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண். (நீதிவெண்பா.)

ஈவது விலக்கேல். (ஔவை.)

பொறாமையுடையவன் கிளையோடு வறுமையுற்றழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

167. உற்றதிரு வெல்லாம் ஒருங்கிழந்து முஞ்சனேன்
குற்றமிக வுற்றான் குமரேசா—மற்றவர்மேல்
அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். (எ)



குமரேசா! முஞ்சன் தனது செல்வமெல்லாம் இழந்து ஈன் நிலைபுற்றான் எனின், அழுக்காறு உடையானைச் செய்யவள் அவ்வித்துத் தவ்வையைக்காட்டிவிடும் என்க.

செய்யவள்—சீதேவி. தவ்வை—மூதேவி.

இலக்குமிக்கு முன்னே பிறந்தவளாதலால் மூதேவியைத் தவ்வை என்றார். தவ்வை என்பதற்கு மூத்தவள் என்று பொருள். இவ்விருவரும் முறையே இளையவள் எனவும் மூத்தவள் எனவும் வழங்கப்படுவர்.

அவ்வித்து—பொறாது. இஃது அவ்வியம் என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். அவ்வியம்—பொறாமை.

செய்யவள் அவ்வித்துத் தவ்வையைக் காட்டிவிடும்—சீதேவி பொறாது மூதேவிக்குக் காட்டி நீங்கும். இதிலுள்ள ஐ என்னும் இரண்டனுருபு, தனக்குரிய செயப்படு பொருளை புணர்க்காமல் நான்காம் வேற்றுமைக்குரிய கோடற் பொருளைக் குறித்து நின்றது. இஃது உருபு மயக்கம்.

அழுக்காறுடையவனை வெறுத்துத் திருமகள்
நீங்குவள் என்பதாம்

ஒளி மறைந்த இடத்தில் இருள் நிறைந்திருத்தல்போல் இளையவள் நீங்கிய இடத்தில் மூத்தவள் தங்கி நிற்பள் என்க.

மேல், பொறாமையுடையவனை வறுமையும் கேடும் மருவுமென்றார், இதில் அதற்குக் காரணத்தை புணர்த்தினார்.

பொறாமையுடையவன், திருவும் சீரும் இழந்து வறுமையும் பழியும் அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை முஞ்சன்பால் உணரப்படும்.

கதை.

முஞ்சன் என்பவன் போஜனுடைய சிறியதந்தை. தன் தமையனாகிய சிந்துலனுடன் தாரா நகரத்தில் இவன் தங்கியிருந்

42



தான். சிந்துலவேந்தன் செய்த அருந்தவத்தின் பெரும்பயனாக அவனுக்கொரு புதல்வன் பிறந்தான். போசன் என்று பெயரிட்டுப் போற்றி வளர்த்தான். மகனது இளமைப் பருவத்தே சிந்துலன் இறந்தான். அதன்பின் கொடிய முஞ்சனே முடி புனைந்தான். அரசு புரிந்தான். புன்மையும் தருக்கும் பெருகநின்று விளங்கினான். போசன் பருவமுற்றபின் அரசைக் கொள்வன் என்று அஞ்சி மெலிந்தான், அதனால் அவன்பால் அழுக்காறு கொண்டான். அறிவும் அருளும் அழகும் நீதியும் மருவுறு குணங்களும் மாண்பும் வாய்ந்த அவ்வருமை மகனுக்கு இவன் அல்லல் பல செய்தான். கொடியவர் சிலரைக் கூவிக் கொல்லவும் ஏவினான். அவ்வெல்லாவற்றினுந் தப்பி, இளஞ்சிங்கம்போல் இறைவன் அருளால் அவ் ஏந்தல் விளங்கினான். நஞ்சனைய முஞ்சன் தனது திருவுஞ் சீரும் இழந்தான். வறுமையும் பழியும் எய்தினான். அருந்துயர் பல அடைந்து முடிவில் இழிந்தழிந்தான்.

இதன் விரிவு போச சரிதையில் புலனாம்.

அழுக்காறுடையவனை மூதேவி அடைவள் என்பது இதனால் கூறப்பட்டது.

---

168. அன்று கஞ்சன் கொண்ட அழுக்காற்றால் தன் திரு
குன்றி யழிந்தான் குமரேசா—கன்றும் (வேன்
அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்

தீயுழி யுய்த்து விடும். (அ)

-ள்.

குமரேசா! அழுக்காறற்ற கஞ்சன் என் திருவிழந்து தீமையுற்றான் எனின், அழுக்காறெனை ஒருபாவி திருச்செற்று தீயுழியுய்த்து விடும் என்க.

தீயுழி—தீய இடம். இது தீமையின் பயனை அனுபவிக்கும் இடம் என்னும் ஏதுப் பெயராய் ஈண்டு நரகத்தைக் குறித்து நின்றது. ஒரு பாவி—ஒப்பில்லாத பாவி.



பாவம்—குணம். பாவி—குணி. குணத்தை இங்கே குணியாகச் சொன்னது அதன் செயல் நோக்கி என்க.

தன்னையுடைத்தானை இம்மையிற் செல்வத்தைக் கெடுத்து மறுமையில் நரகத்தில் செலுத்தும் கொடுமைபற்றி அழுக்காற்றைப் பாவி என்றார்.

எத்துணைக் கொடியராயினும் தன்னை அடுந்தாரைக்கெடுக்க அஞ்சுவர். அன்றிக் கெடுப்பின் இம்மையில் மாத்திரம் துன்பஞ்செய்வர், அழுக்காறு இருமையினும் அதுசெய்யும் ஆதலான் அஃது ஒப்பில்லாத பாவியாயிற்று.

பொறாமை யென்னும் பெரும்பாவி தன்னையுடையானை ஆக்கத்தைக் கெடுத்து நரகத்தில் ஆழ்த்திவிடும் என்பதாம்.

அழுக்காறுடையவன் இம்மையில் திருவையிழந்து மறுமையில் நரகில் அழுந்துவன் என்பது கருத்து.

இவ்வுண்மை கஞ்சன்பால் காணப்படும்.

## கதை.

கஞ்சன் என்பவன் யதுகுலத்தலைவனாகிய உக்கிரசேனன் புதல்வன். கண்ணனுக்கு மாமன் திண்ணிய நெஞ்சினன். தீயவஞ்சகன். பிறர்நலம் பேணாது பெருந்துயர் செய்வோன். தனக்குக் கேடு

விளைப்பான் என்று எண்ணிக் கண்ணன்மேல் அழுக்காறு கொண்டான். அதனால் வஞ்சனை பலவுஞ்செய்தான். கொல்லக்கருதிக் கொடுமை யிழைத்தான். முடிவில், மடிந்தான். திருவுமிழந்து தீயுழி அடைந்தான்.

(இதன் விரிவு பாகவதத்தில் உணரப்படும்.)

மாங்கனி வாயிற்கவ்வி மரத்திடை யிருந்தமந்தி
பாங்கர்நீர் நிழலை வேறோர் பழமுணுங் குரங்கென்றெண்ணித்
தாங்கரும் அவாவிற் றாவிச் சலத்திடை யிறந்ததொப்ப
நீங்கரும் பொறாமை யுள்ளோர் நிலத்திடைக் கெடுவரம்மா (1)



தாரணியில் எவரேனுந் துயருறில் தன் தலையின்முடி
தரித்ததொப்பாம்
சீரணியும் செல்வமவர் படைக்கிற்றன் றாய் மனைசேய்
செத்ததொப்பாம்
காரணமே யொன்றுமின்றிச் சுகதுக்கந்தன் வலியால்
கணத்துக்குள்ளே
பூரணமா ஆக்கிடுவோன் பொறாமையுள்ளோன் அன்றியவர்
புவியில்வல்லார். (நீதிநூல்) (2)

அழுக்காறு இருமையினும் சிறுமைதரும் என்பது இதனால் கூறப்பட்டது.

169. அன்றுசித்திராங்கதனை அவ்வியஞ்செய்தும் [வாழ்ந்தான்

குன்றினனேன் மன்னன் குமரேசா—என்றேனும்

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான
கேடும் நினைக்கப் படும். (௯)

ப—ரை.

குமரேசா! சித்திராங்கதன் அவ்வியஞ்செய்தும் ஆக்க முறச் செவ்வியமன்னனேன் கீழ்குற்றான் எனின், அவ்வியநெஞ்சத் தான் ஆக்கமும் செவ்வியான் கேடும உளவாயின் அவை நினைக்கப் படும் என்க.

அவ்வியம்—கோட்டம். அது செவ்விக்கு எதிர்மறையாய் சுண்டு அழுக்காறுமை யுணர்த்தி நின்றது

செவ்வி—செம்மை. அஃதாவது நெறிவழுவாத நேர்மை.

அவ்வியான்—தீயவன். செவ்வியான்—நல்லவன்.

கோடிய மனத்தையுடையவனது ஆக்கமும் கோடாதவனது கேடும் காணப்படுமாயின் அவை ஆராயப்படும் என்பதாம்.



நல்லோர்க்குக் கேடும் தீயோர்க்கு ஆக்கமும் நெறியே உள வாகா என்பது கருத்து.

அழுக்காறுடையவன் திருவிழந்து கெடுவான் என்றதற்கு மாறாய் அதனையுடைய தீய நெஞ்சினர் சிலர் ஆக்கமுற்று மகிழ வும், அஃதில்லாத நல்லோர் வறுமையுற்று வருந்தவும் இவ்வுலகில் காண்கின்றோமே யெனின், அவற்றிற்குக் காரணம் பழவினையே யென்று கருதவேண்டுமென்று இது காட்டியபடி தென்க.

அவ்வியநெஞ்சத்தானுக்கு ஆக்கமும் செவ்வியானுக்குக் கேடும் ஒருதலையாக நிலைத்து உளவாகா என்பதும் உளவாயின் அவற்றிற்குக் காரணம் அவரது பழவினையேயாம் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சித்திராங்கதன் என்னும் கந்தருவனிடமும் விசித்திரவீரியனது தமையன்பாலும் காணப்படும்.

## கதை.

சந்தனுவுக்குப் பரிமளகந்திபிடம் சித்திராங்கதன் விசித்திரவீரியன் என இரண்டு புதல்வர்கள் தோன்றினர். குருகுலத்தை விளக்கவந்த அக்குமாரர்கள் இருவரும் கலைமதிபோன்று கலைமையோடு நிலவி வளர்ந்தனர். பருவமெய்தியபின் இருவருள் முதல்வனுக்கு வீடுமர் மணிமுடி சூட்டினர். அவனும் அரியணை அமர்ந்து அரசு புரிந்தான். புரிந்து வருங்கால் ஒருநாள் அவனொரு சோலையில் உலாவினான். சித்திராங்கதன் என்னும் கந்தருவன் ஒருவன் அவ்வரசன் மேல் அழுக்காறு கொண்டிருந்தான், தன் பெயரையே ஒரு மனிதனும் பெற்றிருக்கிறான் என்று செற்றமீக்கூர்ந்தான். அவ்வியநெஞ்சினனாய் அங்கு வந்தான். அவ்வரசன் தலையை அறுத்துச் சென்றான். சென்றவன் ஆக்கஞ்சிதையாமல் வாழ்ந்தான். செவ்வியனாயிருந்தும் அரசன் கேடுற்றிறந்தான். கொடுமையுந் தீமையுமுடைய கந்தருவன் இன்புற்றதற்கும், செம்மையும் நன்மையும் வாய்ந்த மன்னன் துன்புற்றதற்கும் அவ்விருவரும் முன் செய்திருந்த பழவினைகளே காரணங்களாமென்.

விரிவு மகாபாரதத்தி லுணரப்படும்.

336 திருக்குறட் குமரேச வெண்பா.

அழுக்காறுடையவன் ஆக்கமுறான் என்பது இதனால் கூறப்பட்டது.

170. அன்றவிக்தார் நூற்றுவரும் ஐவரோன் ஆக்கமுற்றுக்

குன்றுமல் வாழ்ந்தார் குமரேசா—என்றும்
அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதிலார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில் (ம)

இ—ள்.

குமரேசா! துரியோதனன் முதலிய நூற்றுவரும் கேடுற்றழிய, தருமன் முதலிய ஐவரும் என் ஆக்கமுற்றுயர்ந்தார் எனின், அழுக்கற்று அகன்றாருமில்லை, அஃது இலார் பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல் என்க.

அழுக்கற்று—அழுக்காற்றைச் செய்து.
அகன்றாரும் இல்லை—உயர்ந்தாரும்

அழுக்காறுடையவர் ஆக்கமுற்றுயர்தலும் அஃதில்லாதவர் அதனை நீங்கி யிழிதலும் என்றும் இலவாம் என்பதாம்.

அழுக்காறுண்மை கேட்டிற்கும், அஃதின்மையே ஆக்கத்திற்கும் ஏதுவாம் என்பது கருத்து.

பொறாமை யுடையவர் இழிந்து மாள்வர் என்பதும், அஃதில்லாதவர் உயர்ந்து வாழ்வர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை துரியோதனனாதியர் பாலும் தருமர் முதலானோர் பாலும் காணப்படும்.

## கதை. 1

துரியோதனன் தனது சுற்றத்தவராகிய பாண்டவர் மீது பொறாமைகொண்டான். அதனால் வீமனைக் கழுவில் வீழ்த்தினான். நஞ்சை யூட்டினான். ஐவரும் அழியும்படி அரக்குமாளிகை



யில் நெருப்பை வைத்தான். திருவருளால் தப்பிப் பிழைத்த இவரைமீண்டும் அழைத்துச் சூதால் அரசைக் கவர்ந்தான். காட்டில் ஓட்டினான். பல கேடுகள் புரிந்தான். இவன் உயர்ந்த வாழ்வை

ப்பெற்றுச் சிறந்த அரசனாய் இருந்தும் அழுக்காற்றைச் செய்த தனால் இழிந்து மாண்டான்.

## கதை. 2

அழுக்காறு என்னும் இழிகுணம் சிறிதும் இல்லாத ஐவரும்பெருகிய செல்வம் படைத்து நிறைபுகழோடு உயர்ந்து வாழ்ந்தார். அழுக்காற்றால் கேடும் அஃதின்மையால் ஆக்கமும் உளவாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது.

இதன் விரிவை அவர் சரிதையில் உணர்க.

அழுக்காறில்லாதவர் ஆக்கம் பெறுவார் என்பது
கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

அழுக்காறு இல்லாதவனே உண்மையான ஒழுக்கமுள்ளவன். அழுக்காறின்மையே விழுப்பேறாகும். அதனையுடையானை அறம் பொருள் அடையா. அதனால் இழுக்கமே உண்டாம். அதனை யுடையவர் தாமே கெடுவர். அவரது சுற்றமும் வறுமையுற்றழியும். அழுக்காறு கொண்டவனை மூதேவி கொள்வள். அஃது இம்மையில் செல்வத்தைக் கெடுத்து மறுமையில் நரகத்தைக் கொடுக்கும். அது கேடுதருதற்கே ஏதுவாயது. அஃதில்லாதவரே ஆக்கம் பெறுவார்.

ஸ்ரீவது அழுக்காறாமை முற்றிற்று.

338. திருக்குறட் குமரேச வெண்பா.

# ௰அ-ம் அதிகாரம் வெஃகாமை.

அஃதாவது பிறர் பொருளை நச்சுவர்ந்து கொள்ளக்கருதாமை.

இது, பிறருடைய ஆக்கத்தைக்கண்டு அழுக்காறுகொள்ளாத அறிவோர் உள்ளத்தே நிகழ்வதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது.

"எவனுடைய பொருளையும் இச்சியாதே" என்ற ஈசாவாசிய உபநிடதத்தின் முதன் மந்திரக்கருத்து ஈண்டுக்கருதத்தக்கது.

---

171\. கொற்றமுறாக் கட்டியனென் கோன்பொருளை வெஃகியதால்
குற்றமுற்று மாய்ந்தான் குமரேசா—முற்றும்
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். (க)

இ—ள்.

குமரேசா! கட்டியங்காரன் என்பவன் அரசன் பொருளை வெஃகியதால் ஏன் குற்றமுற்று மாய்ந்தான் எனின், நடுவு இன்றி நன்பொருளை வெஃகின் அது குடியையும் கெடுத்துக் குற்றத்தையும் கொடுக்கும் என்க.

பொன்றி என்னும் வினையெச்சம் இங்கே பொன்ற என்னும் பொருளில் வந்தது. "சொல்திரியினும் பொருள் திரியா வினைக்குறை" என்பது இயல்.

நடுவு இன்றி நன்பொருள் வெஃகின்—நடுவுநிலைமை யில்லாமல் பிறர் நன்பொருளை ஒருவன் தன்பொருளாக்க விரும்பின்.

நன் பொருள் என்றது எல்லா நலங்களும் அதனால் உளவாம் என்பது கருதி யென்க.

பிறர் பொருளை நடுவு நிலைமையின்றி ஒருவன் கவர்ந்துகொள்ளக்கருதின் அஃது அவன் குடியைக்கெடுத்துப் பல குற்றங்களையும் கொடுத்துவிடும் என்பதாம்.



நெறியான் ஈட்டும்பொருளே ஒருவன் குடியை வளர்த்துக்

குணத்தைப் பயக்கும் என்பது குறிப்பு.

பொருளுடைமையால் தன்குடி வளருமென்று கருதி அதனை ஒருவன் முயற்சியால் ஈட்டாது நெறிகெட விழையின் அதனால் தன் குடிக்கு அழிவும் தனக்குப் பழியும் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கட்டியங்காரன்பால் காணப்படும்.

## கதை.

கட்டியங்காரன் என்பவன் ஏமாங்கத நாட்டு வேந்தனாகிய சச்சந்தனுடைய அமைச்சன். இவன் மிகத் தீயவன். கொடுமையும் வஞ்சமும் கொண்ட நெஞ்சினன். அரசன் இவனை நம்பித் தனது அரசியலை நன்கு நடத்தும்படி தந்தான். இவனும் நடத்திவந்தான். நாள் பல கழிந்தன. அதன்பின் அரசபதவியைத் தனக்கு உரிமையாக்கிக்கொள்ளக் கருதினான். குடிகளைத் தன்வசப்படுத்திப் படைகளைத் திரட்டினான். நன்றியை மறந்தான். நன்றுசெய்த அரசனைக் கொன்றிடத் துணிந்தான். குறித்ததை முடித்தான். கோல் கைக்கொண்டான். கொடுங்கோல் செய்தான். செய்துவருங்கால், இறந்த மன்னனது திருமகனாகிய சீவகன் பருவமெய்தினான். அக்கொடியனைவென்று முடிபுனைந்தாண்டான். அத்தீயவன் குடியும் வேரற அழிந்தது. நடுவுநிலைமைகுன்றி ஒருவன் நன்பொருளை வெஃகின் அதனால் அவன் குடியோடு கெடுவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இதன் விரிவைச் சீவகசிந்தாமணியில் உணர்க.

பிறர்பொருள் கவர்வோன் குடியோடு கெடுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

172. பண்டுபெருஞ் சாத்தன் பழிசெய்ய நாணியொன்றுங்
கொண்டிலனேன் மீண்டான் குமரேசா—மண்டிப்

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். (உ)

43



குமரேசா! பெருஞ் சாத்தனார் பழிசெய்ய நாணி என் றொன்றுங்கொள்ளாமல் நின்றார் எனின், நடுவு அன்மையை நாணு பவர், படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார் என்க.

பழிப்படுவ — பழி படிந்த செயல்கள்.
படுபயன் — பொருளால் உளதாம் இன்பம்.

நடுவு நிலைமை யின்மையை நாணுகின்றவர், பிறர் பொருளைக் கைக்கொண்டால் அதனால் உண்டாம் பயனை விரும்பிப் பழிக்கத் தக்க இழிதொழில்களைச் செய்யார் என்பதாம்.

நடுவு நிலைமை யுடையவர், எவ்வளவு வறுமையாளராயினும் தமக்குப் பொருளெய்தும் பொருட்டுப் பழிச்செயல்களைச் செய் யார் என்பது கருத்து.

இவ்வுண்மை பெருந்தலைச் சாத்தனார்பால் காணப்படும்.

## கதை.

பெருந்தலைச் சாத்தனார் என்பவர் பாண்டி நாட்டிலே மது ரையம்பதியிலிருந்த ஒரு சிறந்த புலவர். இவரது காலம் இற் றைக்கு ஆயிரத்தைந்நூறு வருடங்கட்கு முன்னதாம். நல்ல சில முள்ளவர்.

பஞ்சலக் கணத்தொடு பஞ்ச காவியம்
பஞ்சமின் றின்றியே பயின்ற நாவினன்
விஞ்சுபல் காவியம் விளம்பு மேதகன்
செஞ்சொலிற் பிரசங்கஞ் செய்யுஞ் சீரியன் (௧)

நாலெண்கைக் கல்வியும் நாளும் வல்லவன்
நால்வகைக் கவிஞரும் நன்கு மெச்சவோன்
நால்வகை யருத்தமும் நயந்து தேர்ந்தவன்
நால்வகைத் தாயையர் நன்பு பெற்றுளோன். (௨)

## 19-ம் அதிகாரம் [illegible]. 341

முருந்தனைத் திருநகை முகிழ்ந்துப் பாரதி
பொருந்தலைப் புகுந்திய புலமைப் புண்ணியன்
வருந்தலைக் கண்டிடா மதுரை யூரினன்
பெருந்தலைச் சாத்தனார் என்னும் பேரினன். (௩)
சுட்டுபொன் முயற்சியுண் ணிறந்த வோறும்
கூட்டுறின் அல்லது கூடிறு வெளை
நாட்டுப யுடைகலை நலந்தி ரேங்கியும்
வாடநிற வறுமையே மலிந்த தன்மையான். (௪)

(குமணன் கதை.)

இத்துணை அரிய நலங்கள் எல்லாம் அமையப்பெற்றும் வறுமையால் நாளும் வாடி வருந்தினர். அதனல் குமணனை நாடிச் சென்றனர். காட்டிலிருந்த குமணனைக் கண்டு மகிழ்ந்தார். கவியொன்று பாடினர். அவ்வள்ளல் இவரது வறுமைப் பிணியை நீக்க இயலாமைக்கு வருந்தினர். தன் தலையைக் கொண்டுவருவோர்க்கு ஆயிரம்பொன் தருவதாகத் தன்மேல் பகைத்துத் தம்பி உறுதிகூறியிருப்பதை நினைந்தான். மகிழ்ந்தான். என் தலையைக் கொண்டுபோய் என் தம்பியைக்கொடுத்து அதன் விலையைக்

கொண்டு உன் வறுமை நோய் களையென்று புலவர் கையில் வாளைக்கொடுத்துத் தன் தலையை நீட்டினான். புலவர் நாணினார். பொருள் வருமென்று கருதி அப்பழிச்செயலைச் செய்ய அவர் துணியவில்லை. வறுமையுறினும் பழிப்பன செய்யேன் என்று நடுவுநிலைமையோடு அகன்றார். இது புறநானூற்றில் காணப்படும்.

நடுவுநிலைமையுடையார் பொருள் விரும்பிப் பழிபுரியார் என்பது இதனால் கூறப்பட்டது.

[ஏன்

173. கொள்ளென்று பரதனன் கொடுத்துமேன் சத்துருக்
கொள்ளவில்லை நாட்டைக் குமரேசா—எள்ளுகின்ற
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். (௩)

312 திருக்குறட் குமரேச வெண்பா.

குமரேசா! பரதன் கொள் என்று கொடுத்தும் ஏன் சத்துருக்கன் நாட்டைக் கொள்ளவில்லை எனின், மற்றின்பம் வேண்டுபவர், சிற்றின்பம் வெஃகி அறனல்லசெய்யார் என்க.

மற்றின்பம் என்றது துறக்க இன்பத்தை. பேரின்பத்தையுங் குறிக்கும். மற்றை என்பது மற்று என நின்றது. இவ்விரண்டும் இடைச்சொற்களே எனினும், முன்னது தனக்கு இனமான பொருளையும், பின்னது பிறிதொன்றையும் குறிக்கும் என்க

மற்றைய தென்னுங் கிளவி தானே

கட்டிலே யொழிய இளையந் தீக்கன்றே. (தொல்காப்பியம்)

சிறந்த இன்பத்தை விரும்புகின்றவர், சிறிய இன்பத்தை விரும்பி அதன் பொருட்டு அவ்வற்றைச் செய்யார் என்பதாம்.

இம்மைப் பிறப்பும் கவலதெனினும் பிறர்பொருளை அறிவுடையார் முறைகெட விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்துருக்கனைப்பால் உணரப்படும்.

## கதை.

சத்துருக்கன் என்பவன் அரசர் பெருமானுகிய தசரதருடைய இளைய புதல்வன். இராம இலக்குவர்கள் வனம்புகுந்தபின் அவர்கள் வருகையைப் பரதனுடன் பதினுன்கு வருடங்கள் எதிர்பார்த்திருந்தான். குறித்த காலத்தில் இராமன் அயோத்திக்கு வரவில்லையென்று தெரிந்த பரதன் உயிர்விடத் துணிந்தான். நெருப்பை வளர்த்தான். தன் தம்பியாகிய சத்துருக்கனைப்பார்த்து "இவ்வுலகை நீயே ஆளவேண்டும். அண்ணா வரவில்லை ஆகலால் நான் இறந்துபடுவேன்" என்றான். தம்பி அதுசெய்ய இசையவில்லை. அரசஇன்பத்தை வெறுத்தான். அவனும் உடன் இறக்கத் துணிந்தான். அவ்வமையம அநுமார் வந்து காப்பாற்றினபடியே அறன் அல்ல செய்யாத சத்துருக்கனை உலகும் போற்றினர். விரிவு இராமாயணத்திலுணர்க.



காளை நிலமகளைக் கைவிட்டுப் போனவனைக் காத்துப் பின்பு
போனானும் ஒருதம்பி போனவர்கள் வருமவதி போயிற்றென்று
ஆருயிரை விடவென் றமைவானும் ஒருதம்பி அயலேநானு
மியானுமிவ் வரசாள்வேன் என்னேயிவ் வரசாட்சியினிதேயம்மா.

(மீட்சிப்படலம்.)

இது, தன்னை இம்புற அரசுபுரிக என்று பரதனை நோக்கிச் சத்துருக்கன் சொன்னது.

இன்பம் விரும்பி யதனையும் அறிவோர் வெஃகார் என்பது இதனால் கூறப்பட்டது.

174\. வள்ளுவனார் தன்னா வறுமையுற்றும் வெஃகியொன்றும்
கொள்ளவில்லை என்னே குமரேசா—மெள்ள
இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். (ச)

இ—ள்.

குமரேசா! வள்ளுவனார் வறுமையுற்றிருந்தும் என் வெஃகி ஒன்றும் கொள்ளவில்லையெனின், புலம்வென்ற புன்மை மென்று வெஃகுதல் செய்யார் என்க.

புலம்வென்ற—ஐம்புலன்களையும் அடக்கிய. வெல்லுதல் என்னும் சொல்லாற்றலால் அவற்றின் மிகுதியுடைய தகைமையும், பகைமையும் உணரப்படும். "ஐம்புல வேடர்" "ஐவர் என்ற புலவேடர்" என வருவனவும் காண்க.

புன்மையில் காட்சி—சிறுமையில்லாத அறிவு; என்றது பெய்யுணர்வை.

உலகப் பொருள்களைக் காண்டற்குக் கண்கள் கருவியாயிருத்தல்போல், உண்மைப் பொருளைக் காண்டற்கு அறிவு கருவியாயிருத்தலின் அதனைக் காட்சி என்றார்.



இலம் என்று வெஃகுதல் செய்யார்—வறியம் என்று கருதி விருப்புதல் செய்யார். இலம் தன்மைப் பன்மை முற்று.

புலன்களை வென்ற புன்மையில்லாத அறிவினையுடையவர், வறியம் என்று கருதிப் பிறர் பொருளை விரும்புதல் செய்யார் என்பதாம். காட்சியார் வெஃகார் என்று காண்க.

வறுமையுறினும் மெய்யுணர்வுடையோர் பிறர்பொருளை

விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வள்ளுவப் பெருந்தகையால் காணப்படும்.

## கதை.

வள்ளுவர் பெருந்தகை திருமயிலையிலிருந்து நாம் கை முயன்று நெய்த ஆடையை விற்று அதனால் எய்தும் பணமொன்றானே குணமுடன் வாழ்ந்தார். அவரது அருங்குணங்களையும் பெரும் புலமையையும் கண்டு மகிழ்ந்தோரெல்லாரும் அவருக்குத் தம்மாலியன்றதைக் கொண்டுவந்து கொடுத்தார். அவற்றுள் ஒரு சிறிதையும் அவர் கொள்ளாது விடுத்தார். தமது அடியவருட் சிறந்தவராகிய ஏலேலசிங்கரென்பவர் அரசரும் விழையும் பெருந்திருவுடையவர். வள்ளுவநாயனார் எதையும் கொள்ளார் என்று தெரிந்தவராதலால் அவரில்லாத அமையம் ஒரு பெருந் தொகைப்பொருளை அவர் இல்லத்தில் ஒருநாள் பெய்துவைத்துப் போயினர். வெளியே சென்றிருந்த நாயனார் இல்லம்புகுந்தார். அங்கிருப்பதைக்கண்டார். வாசுகியம்மையாரிடம் வந்ததை வினவினார். வந்தவிதத்தை அம்மை வணங்கியுரைத்தார். நமது ஐயன் புன்னகை கொண்டார். சிங்கரையழைத்தார். இச்சிறு செயல் எனபாவினிச் செய்தலைவிடுக. இவ்வுறுபொருள் கொண்டு நின்னுயர்மனைபடைக. கொள்க நின்பொருள் கொள்க என்றுரைத்தார். சிங்கர் நாணினார். சென்றார் எடுத்தே. வறுமையே தமக்குப் பெருமையாகக் கருதி வள்ளுவப்பெருமான் வாழ்ந்த வண்மையும், அறிவோர் பிறர் பொருள் அணுவுங்கொள்ளார் என்னும் உண்மையும் ஏலேலசிங்கர் சாலவுந்தெளிந்தார், தன்மனை புகுந்து தனியறம் புரிந்தார்,

18-ம் அதிகாரம் வெஃகாமை. 345

வறுமையுறினும் அறிவோர் பிறர்பொருள் வெஃகார் என்பது இதனால் கூறப்பட்டது.

175. வேலாம் அறிவுற்றும் வெஃகிக் கணனிழிந்து
கோவிழந்தான் என்னே குமரேசா—சாலவே
அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின் (ரு)

இ—ள்.

குமரேசா! கணன் என்பவன் சிறந்த அறிவுடையனு யிருந்தும் வெஃகியதால் ஏன் இழிந்து தாழ்ந்தான் எனின், யார் மாட்டும் வெஃகி வெறிய செயின், அஃகி அகன்ற அறிவு என்னும் என்க.

அஃகி அகன்ற அறிவு—நுணுகிப் பரந்த அறிவு
வெறிய செயின்—வெறுக்கத்தக்க செயல்களைச் செய்வாராயின்.

நுண்ணிதாய்ப் பலநூல்களிலும் சென்று விரிந்த பேரறி வுடையராயினும் பிறர்பொருளை விரும்பி அருவில் செயல்களைச் செய்வராயின் அவரது அறிவால் யாதும் பயனில்லையென்பதாம்.

பிறர் பொருளை வெஃகி இழிசெயல்களைச் செய்யாமையே ஒருவன் அறிவுடைமைக்குப் பயன் என்பதும், செய்வனுயின், எத்துணைப் பேரறிவாளனேயாயினும் அவன் அறிவிலியே யாவன் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.

இவ்வுண்மை கணன்பால் உணரப்படும்.

கதை.

கணன் என்பவன் அபிசித் என்னும் ஓர் அரசன் புதல்வன். தாய் பெயர் குணவதி. இவன், அழகும் ஆண்மையும் அமையப் பெற்றவன். வேல் வலம்பெற்ற வீரருள் வீரன். நாலுலகற்றுச்

சால்புயர்வுற்றான். செங்கோல் தாங்கிச் சிறப்புற ஆண்டான். ஒருநாள் வேட்டைக்குச் சென்றான். அங்குக் கபில முனிவரைக் கண்டான். மன்னன் களைப்புற்றிருப்பதை அம்முனிவர் தெரிந்தார். தாம் பெற்றிருந்த சிந்தாமணியின் தெய்விக நலத்தால் அரசனுக்கும் சேனைகளுக்கும் உணவளித்து அன்புடன் உபசரித்தார். அரசன் களை தீர்ந்தபின் அம்மணியை வெஃகினான். முனிவர் மறுத்தார். அரசன் வலிந்து அதனை வௌவிச்சென்றான். கபிலர் விநாயகரைத் துதித்து விழிநீர் சொரிந்தார். அம்மூர்த்தி, யானைபோல் தோன்றி அவ்அரசனை யெதிர்த்தார். அரசன் அஞ்சினான். முனிவர்செய்த வஞ்சமென்று தெளிந்தான். பல் டான். அவரைக்கொல்லத் துணிந்தான். கணபதி காய்ந்தது. கணைன் மாய்ந்தான். அஃகி அகன்ற அறிவுற்றிருந்தும் முனிவரது மணியை வெஃகியதால் அரசன் அறிவின் பயனையிழந்தான். அழிந்தான். இஃது அபிதான சிந்தாமணியிலுள்ளது.

பிறர் பொருள் வெஃகாமையே ஒருவன் அறிவுக்குப் பயன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

176. வென்றிமிகு கார்த்தவீரியனோர் ஆவைவெஃகிக்
குன்றினான் என்னே குமரேசா—நன்றும்
அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். (௬)

குமரேசா! கார்த்தவீரியன் ஒரு பசுவை வெஃகியதால் ஏன் கேடுற்றான் எனின், அருளைவிரும்பி ஆற்றின்கண் நின்றவன், பிறர் பொருளை விரும்பிப் பொல்லாத சூழக்கெடும் என்க.

பொல்லாத சூழக்கெடும்—தீச்செயல்களைச் செய்ய எண்ணக்கெடுவர். எண்ணினுங்கெடுவரெனவே, செய்தால் வருங்கேடு சொல்ல வேண்டாவாயிற்று. அருளைவிரும்பி அதனை அடைதற்குரிய நெறியின்கண் நின்றவர், பிறர்பொருளை விரும்பிப் பொல்லாதன சூழ்ந்துகெடுவர் என்பதாம்.

18-ம் அதிகாரம் வெஃகாமை. 347

இறைவனது அருளை யெய்துதற்குரிய நெறியில் நின்றவர் பிறரது பொருளை விரும்பினால் கெடுவர் எனவும் இது பொருள் படும்.

நெறியின்வொழுகிய அறிவினரேனும் பிறர்பொருள் விரும்பினுற் கெடுவர் எனபது கருத்து. இது கார்த்தவீரியன்பால் காணப்படும்.

### கதை.

கார்த்தவீரியன் என்பான் சூரியகுலத்து வேந்தன். கிருதவீரியன் புதல்வன். தாய் பெயர் சுகந்தை. இவன் மிகச்சிறந்த வீரன். ஆயிரங்கைகளையுடையவன். மகா வீரனான இராவணனையும் வென்று சிறையிலிட்டவன். மாகிஷ்மதியென்னும் பட்டணத்திலிருந்து அரசுபுரிந்தான் அருளை விரும்பி அறம்பல செய்தான. நெறிதவறாத அறிவினையுடையவன். இவன் ஒருநாள் சமதக்கினி முனிவரது தவச்சாலைக்குச் சென்றான். அவர்பால் அமைந்திருந்த காமதேனுவைக் கண்டான். அத்தெய்வப் பசுவை அவாவினான். அதனால், அத்தூயவனிடமும் தீயனசெய்தான். ஆவைக் கவர்ந்து தன் அணிநகர் அடைந்தான். அதன்பின் அம்முனி மகனாகிய பரசுராமன் வந்தான். அந்நிகழ்ச்சியைத் தெளிந்தான். நொந்து சினந்தான். அரசனை நாடி விரைவினில் ஓடினான். தன்கை வெய்ய மழுவால் அவன் தலையைக் கொய்து துணித்தான். அருள்வெஃகி நின்ற அரசர் தலைவனும் ஒருபொருள் வெஃகியதால் பொன்றி மறைந்தான்.

இதன் விரிவை மச்சபுராணத்தில் உணர்க.

பிறர்பொருளை விரும்பினோர் அருளிழந்து கெடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

177. கள்ளாத் தனபதிபோல் தாயத்தார் வெளவியுமேன்
கொள்ளவில்லை இன்பம் குமரேசா—எள்ளளவும்
வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

44



இ—ள்.

குமரேசா! தனபதி களவாடாத பொருளை அவரது தாயத்தார் வெளவியும் என்பயன்கொள்ளவில்லையெனின், வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க விளைவயின் பயன் மாண்டற்கரிதாம் என்க.

வெஃகி ஆம் ஆக்கம்—பிறர்பொருளை அவாவிக் கவர்ந்து அதனால் ஆகும் ஆக்கத்தை.

வேண்டற்க—விரும்புதலொழிக.

விளைவயின்—பலன் விளையும் இடத்து; அநுபவிக்கும்போது என்றபடி. பயன் மாண்டற்கு அரிது ஆம்—அவ்வாக்கத்தின் பயன் மாண்புறுதற்கு அரியதாம். ஈண்டு அருமை இன்மை குறித்து நின்றது.

பிறர் பொருளை வெளவிக்கொண்டு அதனால் ஆகும் இன்பத்தை ஒருவன் விரும்புதலாகாது, எவ்வெனில அவ்வாக்கத்தின் பயன், விளைவில் நன்மையாகாதென்பதாம்.

பிறன் பொருளை ஒருவன் பேராசையால் கவர்ந்துகொள்வானாகில் அப்பொருள் அவனுக்கு நன்மையான பலனை நல்காதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இது தனபதிவணிகரது தாயத்தார்பால் காணப்படும்.

குமரேசா! ஆய்வள்ளலது செல்வமடைந்தும் என்றும்பொ லிவுடன் இன்பமுற நின்றது எனின், செல்வம அஃகாமைக்கு ஏது யாதெனின், பிறன் வேண்டும் கைப்பொருளை ஒருவன் வெஃகாமையேயாம் என்க.

அஃகாமை — குறையாமை. இவ் எதிர்மறைத் தொழிற் பெயர் ஆகுபெயராய் அதன் காரணத்தைக் குறித்து நின்றது.

பிறன் விரும்பும் கைப்பொருளைத் தான் விரும்பாமையே ஒருவன் செல்வம் சுருங்காமைக்குக் காரணமாம் என்பதாம்.

இனி, ஒருவன் செல்வம் சுருங்காமலிருக்கவேண்டுமானால் பிறன் கைப்பொருளை அவன் விரும்பாமல் இருக்கவேண்டும், எனவும் இது பொருள்படும்.

பிறர் பொருளை இச்சியாதவன் செல்வமே பெருகிவளரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இஃது ஆய்பால் ஆயப்படும்.



## கதை.

ஆய் என்பவன் பாண்டி நாட்டிலே பொதியமலைக்கு அருகிலிருந்த ஆய்க்குடி என்னும் ஊரிலே இருந்தவன். இவனது காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு வருடங்கட்குமுன்னதாம். இவன் தாளாண்மை மிக்க வேளாண் மரபினன். நூல் பல தேர்ந்த மேலாம் அறிவினன். மனநலமும் இனநலமும் மாண்புறப் பெற்றவன். கடை வள்ளல்கள் எழுவருள் ஒருவன். சிற்றரசனாயிருந்தாலும் பேரரசரும் போற்றத்தக்க பெருமதிப்புடையவன். சிறுபாணாற்றுப்படை புறநானூறு நற்றிணை முதலிய பழைய நூல்கள் பலவற்றிலும் இவன் புகழ்மணம் கமழ்கின்றது. இரவலர் யாவர்க்கும் இவன் உயிரென இருந்தான். ஈதலின்பமே இலாபமெனக் கொண்டான். வேற்றரசர் சிலர் இவனை

வெல்லக்கருதினர். முடியவில்லை. பொருள் பல போக்கி உறுகுணம் ஆய்ந்தார். அவற்றில் இவன் அவாவின்றி நின்றான். இவனது மனப்பண்பும் பிறர் பொருள் வெஃகாப்பெற்றியுந் தெளிந்து அவரும் இவன்பால் பெருநண்பு கொண்டார். குறையா வாழ்வு பெற்று இவன் கொழித்து வாழ்ந்தான். இவனதுபேரும் ஊரும் இமயமலைபோல் நிலைநின்று இவ்வுலகிற்கு நலம் பல புரிகின்றன என்று மோசியார் எனனும் புலவர் பெருமான் இவன்மேன்மையை வியந்து பாடியுள்ளார்.

"வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆய்குடி யின்றாயிற்
பிறழ்வது மன்னோ இம்மலர் தலையுலகே." (மோசியார்.)

சுவை மிகிய புறநானூறு முதலிய பலநூல்களிலும் புலனும் வெஃகாதான் செல்வம் அஃகாதென்பது இதனால் கூறப்பட்டது.

179. கொள்ள விரும்பாக் குசேலரிடம் செல்வமன்பு
கொள்ளவந்த தென்னே குமரேசா—உள்ள
அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. (௯)

18-ம் அதிகாரம் வெஃகாமை. 351

இ—ள்.

குமரேசா! பிறர் பொருளை விரும்பாத குசேலரை என் செல்வம் விரும்பி வந்தடைந்தது ஏனெனின், அறன் அறிந்து வெஃகாத அறிவுடையாரைத் திருமகள் திறன் அறிந்து சேரும் என்க.

திறன் அறிந்து—சமயமறிந்து. அஃதாவது வெஃகாதவன் மனமகிழ்ந்திருக்கும் காலமும் இடமும் தெரிந்து.

பிறர் பொருளை விரும்பாமையே தனக்கு அறமென்று அறிந்து அதில் வழுவாதொழுகும் அறிவுடையாரைத் திருமகள் தானே வந்து அடைவள் என்பதாம்.

அங்கே என்றது அறிந்த படலை எனவும் அதன்படியே எனவும் இருவகையினும் பொருள்படும்.

பிறர் பொருளை விரும்பாதவர்க்குச் செல்வம் தானே வந்து சேரும் என்பது கருத்து.

மேல், வெஃகாதான் செல்வம் அஃகாதென்றார், இதில் அது தானே அவனை வெஃகி வந்து சேரும் என்றார்.

இவ்வுண்மை குசேலரால் காணப்படும்.

### கதை.

குசேலர் வறுமையுற்றிருந்தும் பிறர் பொருள் வெஃகாப் பேரறிவுடையராயிருந்தார். இவர் வட மதுரை சென்றும் ஒன்றும் வேண்டாது மீண்டார். திரும்பி வருமுன் இவர் இல்லில் திருமகள் வந்து விரும்பியிருந்தாள். அப்பெருஞ் செல்வத்தைக் கண்டு இவர் இறும்பூதெய்தினர். இவரது வறிய குடிசையும் பெரிய மாளிகையாயது. உணவின்றி வருந்திய மனைவியு மக்களும் உயர்ந்த அரசபோகங்களில் உலாவி விளங்கினர். திருவருளை நினைந்து குசேலர் திருவுற்று வாழ்ந்தார்.

352 திருந்தரட் குறளீர வெண்பா.

வாயிலடைந்த மறைக்குலத் தலைவன்
மாமணி யான நின்றுநீந்து
மேதகுமுன்னர்க் கண்டபோற்றவார
மிக்கசிற் றிலைக் குடில் திரிந்து
தூயசெம்பொன்னால் அமைத்திடப்பட்ட
சுடர்ப்பெரு மாளிகையாகிப்
பாயபல் வளனும் நிறைதரப் பொலியும்
பண்பினை நோக்கினனின்றான்.

(குசேலோபாக்கியானம்.)

பிறர் பொருள் விரும்பாதவனைத் திருமகள் விரும்பி அடைவள் என்பது இதனால் கூறப்பட்டது.

180. கண்டாள் பழிவெஃகிக் கைகேசி காகுத்தன்
கொண்டான் விறலென் குமரேசா—மண்டி
இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. (ம)

இ—ள்.

குமரேசா! கைகேசி அரசை வெஃகிப் பழியுற்றாள், இராமன் என் அதனை வேண்டாமல் விறலுற்றான் ஆனின், எண்ணாது வெஃகின் இறல் ஈனும், வேண்டாமை என்னுஞ் செருக்கு ஈனும் என்க. இறல்—இறுதி. விறல்—வெற்றி.

எண்ணாது வெஃகின் இறல் ஈனும்—பின் விளைவதை எண்ணாமல் பிறன் பொருளை ஒருவன் விரும்பின் அஃது அவனுக்கு இறுதியைக் கொடுக்கும்.

செருக்கு—மனக்களிப்பு. அஃது, ஆகுபெயராய்த் தனக்கு ஏதுவாகிய செல்வத்தை இங்கே குறித்து நின்றது.



பொருள் விருப்புள்ளவன் மருளோடு இழிந்தழிவான், அஃதில்லாதவன் தெருளோடு சிறந்து திகழ்வான் என்பார் "வேண்டாமை என்னுஞ் செருக்கு விறல் ஈனும்" என்றார்.

பின் விளைவை அறியாமல் பிறன் பொருளை ஒருவன் விரும்பின் அஃது அவனுக்கு நாசத்தையும், வேண்டாவிடின் மேன்மை

யையும் கொடுக்கும் என்பதாம்

பிறர் பொருளை அறிவின்றி வௌவக் கருதினானைப் பழியும் இழிவும் பற்றும் என்பதும், வேண்டாதவனைப் புகழும் வெற்றியும் பொருந்தும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கைகேசியாலும் காகுத்தன்பாலும் காணப்படும்.

## கதை.

கைகேசி என்பவள் கேகய தேசத்து மன்னன் மகள். தசரதன் மனைவி. உருவ நலனும் அறிவின் திறனும் ஒருங்கு வாய்ந்தவள். தசரதன் தனது தலைமகனாகிய இராமனுக்கு முடி புனைய முடிவு செய்திருந்தான். அதனைக் கைகேசி அறிந்தாள். மனந் திரிந்தாள். அவ் அரசபதவியைத் தன் மகனாகிய பரதனுக்கே உரிமையாக்க விரும்பினாள். கணவனை வஞ்சித்தாள். நினைந்ததை முடித்தாள். முடிவை எண்ணி இராமன் நெடுவனம் புகுந்தான். அரசன் அதனால் ஆவி துறந்தான். அனைவருந் துயரில் ஆழ்ந்து வருந்தினர். கேகய தேசத்துக்குப் போயிருந்த பரதன் வந்தான். தாய் செயல் தெளிந்தான். தன்னுளம் கொதித்தான். வைது வெறுத்தான். முடியிழந்து வனம்புகுந்த அண்ணனைத் தேடிச் சென்றான். கணவனையும் மகனையும் பிரிந்து கைகேசி கடுந்துயருழந்தாள். பின் விளைவதை அறியாமல் அரசுரிமையை வெஃகியதால் இவள் அரும்பழியடைந்தாள்.

என்னுறு வெஃகின் இறல் ஈனும் என்பதை யுலகம் இவள் பால் உணர்ந்தது.

354 திருக்குறட் குமரேச வெண்பா

சுடுமெபா னத்திடை தன் துணையேசத் தோன்றல் துயர்க்
கடலினைக்

கடுமையார் கானகத்தில் கருணையார் கவிமேகக்
கழற்கால் மாயன்
நெடுமையால் அன்றளந்த உலகமெல்லாந் தன்மனத்தே
நினைந்து செய்யும்
கொடுமையால் அளந்தாளை யறிந்திலேயேல் இந்நின்றுள
என்னையின்றுள.

இது, கைகேசியைக் குறித்துக் குகனிடம் பரதன் கூறியது.

அரசு வேண்டாம் என்று இராமன் அடங்கி யகன்றான். அதனால் முற்றத் துறந்த முனிவரும் அவனது மனத்துறவையும் வெற்றித் திறனையும் வியந்து போற்றினர்.

வெஃகுதலால் இறலும், வெஃகாமையால் விறலும் உளவாம் என்பதை உலகம் இவர்பால் ஓர்ந்தது.

வெஃகாமையே ஒருவனுக்கு மெய்யான மேன்மை என்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

பிறன் பொருளை ஒருவன் கவர்ந்துகொள்ளக் கருதின் அக் கருத்து அவன் குடியையும் கெடுத்து அவனுக்குப் பழியையும் கொடுக்கும். நடுவு நிலைமையுடையவர் பிறர் பொருள் வெஃகார். மறுமை யின்பத்தை விரும்பினோர் அதனை விரும்பார். வறியரா யினும் அறிவோர் வெஃகார். பிறர் பொருள் வெஃகாமையே ஒருவன் பேரறிவுக்குப் பயன். அருள் விரும்பி நெறிநின்றவரா யினும் பொருள் விரும்பின் பொன்றி யிழிவர். வெஃகிய பொருளால் ஒருவன் மெய்யின்பம் எய்தான். விரும்பாதவன் செல்வம் சுருங்காது. அவனுக்குச் செல்வம் தானே வந்துசேரும். வெஃகுதல் இழிவையும் அழிவையும் ஈனும். வெஃகாமை ஒருவனுக்கு வெற்றியையும் மேன்மையையும் கொடுக்கும்.

18-வது வெஃகாமை முற்றிற்று.

## 19-ம் அதிகாரம் புறங்கூறாமை.

# ௰௯-ம் அதிகாரம் புறங்கூறாமை.

அஃதாவது காணாத இடத்திற் பிறரை யிகழ்ந்து சொல்லாமை. பிறர் ஆக்கங்கண்டு பொறாமை கொண்டு அதனை வெளிவக் கூறுதலும் இழிகுணமில்லாத இடத்தே நிகழ்வதாதலின் அழுக்காறாமை வெஃகாமைகளின் பின் இது வைக்கப்பட்டது. அழுக்காறும் வெஃகுதலும் மனக்குற்றமாகவும் புறங்கூறல் மொழிக்குற்றமாகவும் கருதப்படும். மொழிநலம், மனநலம் அடியாக வருமாதலால் அதிகார அமைவும் அம்முறையில் நின்றது.

---

181. மாறுசெய்தங் கும்பகன்னன் மாண்புற்றான் யார்புறமும்
கூறினன் றென்னே குமரேசா—தேறி
அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. (௧)

இ—ள்.

குமரேசா! கும்பகன்னன் கொடிய செயலுடையனாயிருந்தும் புறங்கூறாத புனிதன் என்று ஏன் புகழ்பெற்றான் எனின், அறங்கூறானாகி அல்லனவே செய்யினும் புறங்கூறான் என்று ஒருவன் போற்றப்படுவானாயின் அஃது அவனுக்கு நன்மையாம் என்க.

அறம் கூறான்—அறமென்று வாயினாலுஞ் சொல்லாதவனாய். இதில், வினைமுற்று எச்சமாகி நின்றது. அல்ல என்றது பாவங்களை. புறங்கூறான்—காணாத இடத்தில் பிறரை யிகழ்ந்துசொல்லான்.

அறமென்று சொல்லுவதுஞ் செய்யாது பாவங்களையே செய்பவனாயினும், பிறரை யிகழ்ந்து சொல்லான் என்று உலகத்தாரால் அவன் வியந்து சொல்லப்படுவானாயின் அஃது அவனுக்கு நன்மை என்பதாம்.

பெரும் பாவங்களைச் செய்யினும் ஒருவன் புறஞ்சொல்லலாகாதென்பது கருத்து. பாவங்கள் பலவற்றுள்ளும் புறங்கூறலே 45



பெரும் பாவம் என்பதும் அதனையுடையவன் அறம் பல செய்யினும் நலம்பெறான் என்பதும் இதில் அமைந்தமை காண்க.

எவ்வளவு கொடியவனாயினும் புறங்கூறாதிருப்பின் அவன் நலம் பெறுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது கும்பகன்னன்பால் உணரப்படும்.

கதை.

கும்பகருணன் என்பவன் விச்சிரவசுவுக்குக் கேகசியென்னும் அரக்கியிடம் பிறந்தவன். இராவணன் தம்பி. வியக்கத்தக்க மெய்வலியுடையவன். அஞ்சா நெஞ்சினன். அருந்திறல் பெற்றோன். பேருண்டி கொண்டு பெருநாளுறங்குவோன். மறம் பல செய்யினும் புறங்கூறாதவன். இராவணன் சீதையைக் கவர்ந்து சிறையில் வைத்தபின் இராமனைப் பலமுறை புகழ்ந்தான். பழித்தல் தீதென்று இவன், அவனை யிடித்துக்கூறினான். புறங்கூறுவோர் என்றும் புல்லியரென்றான். பேடிகளன்றோ பிறன் புறங்கூறுவார் நம்போன்ற பெருவீரர்க்கு அது பெரும்பிழையென்று பெரிதும் புகன்றான். பகைத்த வீரர் முன் எதிர்த்துச் செல்வான். மறங்கொண்டு கொல்லினும் புறஞ்சொற் சொல்லான். அல்லன செய்யினும் புறங்கூறாமையால் இவன் நல்லவனாயினான். இஃது இராமாயணத்தில் தெளியப்படும்.

அறங்கூறானாயினும் ஒருவன் புறங்கூறலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

182. கண்டு நகைத்த கனகவன்மன் ஏன்கேடு
கொண்டான் பழித்துக் குமரேசா—கொண்ட

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. (உ).



ப—ள.

குமரேசா! கண்டு நகைத்த சனகவல்லமன் ஏன் புறன் கூறிப் பெரும்பழி கொண்டான் எனின், அறத்தையழித்து அல்லவற்றைச் செய்தலினும் ஒருவன் புறத்தே பழித்துப் பொய்த்து நகுதல் பெருந்தீமை என்க. தீதே என்பதில் ஏகாரம் தேற்றங் குறித்து நின்றது.

அழி என்பது அழீஇ என நீண்டு அளபெடுத்து ஈரிடத்தும் வினையெச்சப் பொருளை விளக்கி நின்றது.

அறன் அழீஇ—அறத்தை யழித்து. அறம் என்பது ஒன்று இல்லையென்று மறுத்துச் சொல்லி எனவுமாம்.

அல்லவை செய்தலின்—பாவங்களைச் செய்தலினும்

புறன் அழீஇ—புறத்தே பழித்து: அஃதாவது ஒருவன் பெருமையழியும்படி அவன் புறத்தே இகழ்ந்து சொல்லி.

காணாத இடத்தே ஒருவனை இகழ்ந்துசொல்லிக் கண்ட இடத்தே அவனோடு பொய்யாக ஒருவன் மகிழ்ந்து நகுதல், அறத்தைக் கொன்று அல்லவற்றைச் செய்தலினும் தீமையாம் என்பதாம்.

புறஞ்சொல்வோர் அறங்கொல்வோரை நேர்வர், அதனோடு பொய்த்து நகுவோர் அக்கொலையோடு அல்லவை செய்வோரை நிகர்வர் என்க.

புறங்கூறுவோன் வெறும் பாவி அதனோடு பொய்யாக முகநகை செய்வோன், பெரும் பாவி என்பதாம்.

புறத்தே பழித்து முகத்தே பொய்நகை செய்வோன் பெருந்தீமையடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கனகவன்மன்பால் காணப்படும்.

358 : திருக்குறட் குமரேச வெண்பா.

கனகவன்மன் என்பவன் மதுரையிலிருந்த ஒரு தட்டார் தலைவன். நெடுஞ் செழியன் அரசுபுரியுங் காலத்தில் உடனிருந்தவன். பொற்பணி செய்வதில் நற்பேர் பெற்றவன். மரகத முதலிய மணிகளின் குணங்களைத் தெரிவதிலும், விலைகளைத் துணிவதிலும் மிக வல்லவன். மணியணி பலவும் புனைந்து தந்து அரசன்பால் அணியணியாகப் பரிசு கொண்டவன். புறத்தில் இத்துணை நலங்கள் அமையப் பெற்றும் இவன் உளத்தில் இழி குணங்களே மிகைந்திருந்தன. எவருடைய பொருளையும் கவருங் கருத்தினன். பொய்ப் புகலும் வெய்ய நாவினன். சிலம்பை விற்பதற்கு மதுரைக்கு வந்த கோவலனை இவன் கண்டான். நகைமுகங் காட்டினான். கோவலன் நம்பினான். தன் கைச் சிலம்பை அவன் கைக்கொடுத்தான். அதனை நல்லவிலைக்கு விற்றுத் தருவதாக அப்பொல்லாதவன் புகன்றான். பொன் நகை செய்வோன் பொய்நகை செய்தான். வஞ்சமான இனியமொழி

களால் கோவலனது நெஞ்சைத் தேற்றினன். ஓரிடத்தில் இருக்கும்படி செய்தான். சிலம்பைக்கொண்டு அரசமாளிகையிற் புகுந்தான். அரசனைக் கண்டான். முன்னரே அரசியின் சிலம்பொன்றை அக்கொடியவன் களவாகக் கொண்டிருந்தான். அதனையின்று கண்டுகொண்டுவந்தேன் என்று கூசாமல் கூறினன். பெருமையழியும்படி கோவலனுக்குச் சிறுமையேற்றினன். அடாப்பழி கூறினன். கள்ளனெனக் காட்டிக் கோவலனைக் கொல்லச்செய்தான். யாவும் சொல்லித்துக் கொடும்பழி கொண்டான். புறம் பழித்துப் பொய்த்து நகைத்த அக்கொடியோனும் குலத்தோடழிந்தான். கொடுந்துயருற்றான்.

(இதன் விரிவு சிலப்பதிகாரத்தில் தெளியப்படும்).

புறங்கூறல் அறங்கோறலினும் கொடியதென்பது இதனல் கூறப்பட்டது.

19-ம் அதிகாரம் புறங்கூறாமை. 359

183. சீறி யெதிர்வைது செத்தான் பவுண்டரகன்
கூறான் புறமேன் குமரேசா—வேறாப்
புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும். (௩)

இ—ள்.

குமரேசா! பவுண்டரகன் புறங்கூறி வாழாமல் என் எதிர்கூறி யிறந்தான் எனின், புறங்கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலினும் சாதல் அறங்கூறும் ஆக்கம் தரும் என்க.

அறம் என்பது ஈண்டு அதனை யுணர்த்தும் நூல்களைக் குறித்து நின்றது.

காணாத இடத்தில் பிறரை யிகழ்ந்து சொல்லிக் கண்டஇடத்

தல் அவர்க்கு நல்லவன்போல நடித்தும் புகழ்ந்து ஒருவன் வஞ்சகமாக உயிர் வாழ்வதைவிட அவன் இறந்து படுதல் நல்லதென்பதாம்.

இறவாதிருப்பின், புறங்கூறலாகிய பெரும்பாவத்தை மேலும் மேலும் புரிந்து மீளா நரகினுக்காளாவான், இறப்பின், அது கூறுறாய் அறங்கூறும் ஆக்கத்தையடைதற்கு உரியனாவன். ஆதலால், சாதல் அவனுக்கு நலந்தருவதாயிற்று.

இனி, ஒருவனைக் குறித்துப் பிறனொருவனிடம் புறங்கூறி அவன் மனமகிழும்படி இச்சகஞ்செய்து ஒருவன் உயிர் வாழ்தலினும் சாதல் அவனுக்கு இனிதாம் எனவும் இது பொருள்படும்.

புறங்கூறி வாழ்தலினும் ஒருவன் இறந்து படுதல் நலமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பவுண்டரகன் பால் காணப்படும்.

## கதை.

பவுண்டரகன் என்பவன் கண்ணன் காலத்திலிருந்த ஒரு திண்ணிய வேந்தன். குருநாடென்னும் பெருநாட்டை யாண்ட



வன். நாரத முனிவரது தூண்டுதலால் கண்ணன்மீது இவன் கடும்பகை கொண்டான். அவரது சின்னங்களைத் தானும் கொள்ள எண்ணினான். அதன்பொருட்டுக் கண்ணுதற் பரமனைக் கருதிப் போற்றினான். அப்பரமனருளால் அவை வரப்பெற்றான் சங்கு சக்கரம் தண்டு முதலிய ஐவகைப் படைகளையுங்கொண்டான். கண்ணனினும் பெரியவனாகத் தன்னை யெண்ணினான். பொறாமையுஞ் செருக்கும் பொருந்தப் பொங்கினான். ஆயினும் புறங்கூறல் என்னும் புன்மையை யொழித்தான். மறம்புரிதற்கே மனந்துணிந்தெழுந்தான். கண்ணனை நேரே காணச் சென்றான்.

கண்டான். கடுத்தான். கண்ணா! "ஐவகைப் படைகளும் ஏமக் கேயுரியன. அவை, நீ தாங்க அருகனல்லன். விடுக அவற்றை விரைவில்" என்றான். கண்ணன் புன்னகை செய்தான். அவன் கூறியபடி முதலில் ஆழியைவிட்டான். விடுத்த ஆழி கடுத்து வந்தவன் மணிமுடி துணித்துத் துனியுடன் சென்றது. மாய்ந்து வீழ்ந்தவன் மாலுரு வெய்தினன். மாறு இன்பமருவி மகிழ்ந் தான். பொறாமையுற்றும், புறங் கூறிப் பொய்த்துயிர் வாழாமல் மறைப்புரிந் திறந்தமையால் இவன் அறங்கூறும் ஆக்கத்தையடைந் தான். இதன் விரிவைப் பாகவதம் பத்தாங்கந்தத்தில் காண்க.

பண்ணமை கலிங்கயானைப் பவுண்டரன் வதனநோக்கி
வெண்ணிலா முறுவல்கோட்டி விடுதிவெந் தழல்வாய்சான்ற
ஒண்ணிற நேமியென்றுங் குரைத்தனை விடுதியென்னு
மண்ணமை முழவுத்திண்டோள் மாலவன் விடுத்திட்டானால் (1)
வெற்றிருந் திமிரமாரி வெருவுசெந் தழல்காய்நேமி
சிற்றமோ டெதிர்ந்துசெய்ய செருத்தொழில் விளையாநின்ற
பாற்றினஞ் சுழலும்வைவேற் பவுண்டர வாசுதேவன்
மாற்றருஞ் சிறப்புவாய்ந்த மணிமுடி துணித்ததன்றே. (2)
விட்டிரு விசும்பிற்செல் வேரியந் துளவமாயன்
கட்டெழி லுருவநாடிக் கைபுனைந் திருந்தவாற்றால்
பட்டவெங் களிநல்யானைப் பவுண்டர வாசுதேவன்
வட்டவாய்த் திகிரிதாங்கும் மாலுருமெய்தி னானே. (3)

(பாகவதம்)

## 19-ம் அதிகாரம் புறங்கூறாமை. 361

புறங்கூறி ஒருவன் வாழ்தலினும் சாதல் நன்றென்பது இதனுள் கூறப்பட்டது.

---

184. மாறு வழுதன்னும் வஞ்சமெதிர் வெய்யசொன்னார்
கூறார் புறமேன் குமரேசா—சீறிவந்து
கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். (௪)

இ—ள்.

குமரேசா! மாறுபி உமுதன்னும் வஞ்சமெதிரேநின்று வெய்ய சொற்களைச் சொன்னாரேயன்றி சூரிய சந்திரர் என்புறஞ் சொல்லவில்லை யெனின், கண் நின்று கண் அறச்சொல்லினும் முன்னின்று பின்னோக்காச் சொல் சொல்லலாகா தென்க.

கண் நின்று—எதிரே நின்று. ஒருவன் கண் காணும்படி நிற்றலால் எதிர் நிற்றலைக் கண் நின்று என்றார்

கண் அறச் சொல்லினும்—அருள்கெட மொழியினும். இங்கே கண் என்றது கண்ணோட்டத்தை: அஃதாவது கண் சென்ற விடத்தே தோன்றும் பரிவு. உம்மையால் அதுவும் சொல்லலாகாதென்பது உணரப்படும்.

முன் இன்று—நேரேயின்றி.

பின் நோக்காச்சொல்—பின்வருங் குற்றத்தை யெண்ணாத சொல்,

ஒருவன் எதிரே நின்று கடுஞ்சொற் சொன்னாலும், அவன் புறத்தே நின்று ஒருவன் பழிச்சொற் சொல்லலாகாதென்பதாம்.

கண்முன் நின்று தன்னையொருவன் கண் அறச்சொல்லினும் அவன் முன்னேயன்றிப் பின் நோக்காச் சொல்லைத் தான் சொல்லலாகாது எனவும் இது பொருள்படும்.

நேர் நின்று கடுஞ்சொற் சொல்லினும் ஒருவன் புறநின்று பழிச்சொற் சொல்லலாகாதென்பது கருத்து. இது சூரிய சந்திரர்பால் காணப்படும்.

## கதை.

சுரரும் அசுரரும் பாற்கடல் கடைந்த காலத்தில் அதி லிருந்து அமுதம் எழுந்தது. அதனை யிருதிறத்தாரும் பகுந் துண்ண விரும்பினார். திருமால் அசுரரை வஞ்சித்துத் தேவர் களை அதனைத் தனித்துண்ணும்படி செய்தார். அத்தெய்வ வரி சையில் இராகு, கேது, என்னும் பெயரினையுடைய அசுரரிருவர் கரந்து புகுந்தார். கையில் வாங்கிக் களிப்புடன் உண்டார். கதி ரும் மதியும் அக்கரவைக் கண்டார். கண்முன் நின்று கடிந்து மொழிந்தார். கரியமாலுக்குத் தெரியக் காட்டினார். அவருந் தெளிந்தார். அவ்விருவரையும் தமது ஆழியால் துணித்தார். துணிபட்ட இருவரும் அமுதகலத்தால் அழியாமல் நின்றார். பரமனருளால் கிரகபதம் பெற்றார். தம்மைக் காட்டிய அவ்விரு வர்பாலும் செற்றங்கொண்டார். தீங்கே நினைந்தார். கண் நின்று கண்ணறச் சொல்லினும் கதிரும் மதியும் புறங்கூறாத புனிதரென று போற்றப்பட்டார்.

(இதன் விரிவு கந்தபுராணத்தில் காணப்படும்.)

கடுஞ்சொற் சொல்லினும் புறஞ்சொல்லலாகா தென்ற னால் கூறப்பட்டது.

185. கண்டார் அறம்புகலா றங்கண்ணில்லான் தீயனென்றேன்
கொண்டார்முன் ஐவர் குமரேசா—கொண்ட
அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும். (௫)

குமரேசா! கண்ணில்லான் அறம்புகன்றும் அவனையேன் அனைவரும் தீயன் என்று கண்டார் எனின், புறஞ்சொல்லும் புன்மையால் அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை காணப் படும் என்க.



கண் இல்லான்—திருதராட்டிரன். புன்மை—புல்லியதன்மை. நெஞ்சத்தான் அன்மை—மனத்தான் அல்லன் என்னுந்தன்மை.

புறஞ்சொல்லும் ஒருவன் அறத்தை நன்றென்று பிறர் மெய்க்கச் சொல்லினும் அதனை அவன் மனம் பொருந்தச் சொல்லவில்லையென்பது அவன் புறஞ்சொல்லால் காணப்படும் என்பதாம்.

புன்மையால், அன்மை காணப்படும் என்று காண்க.

புறஞ்சொல்லுவோர் ஒருகால் அறஞ்சொல்லினும் அதனை மெய்யென்று நம்பலாகாது என்பது கருத்து.

இது திருதராட்டிரனால் காணப்படும்.

## கதை.

திருதராட்டிரன் என்பவன் துரியோதனன் தந்தை. வியாசரது திருவருளால் விசித்திர வீரியன் மனைவியாகிய அம்பிகை வயிற்றில் தோன்றினான். பதினாயிரம் யானைகளின் வலிமையைத் தனக்கு உரிமையாகப் பெற்றவன். விழியிரண்டும் ஒளியிழந்தவன். வஞ்சமே புரியும் நெஞ்சினையுடையவன். தன் புதல்வன், தருமரை வரவழைத்துச் சூதினால் நிதிசெய்யச் சூழ்ச்சிசெய்தபொழுது இவனும் உடனிருந்து இசைந்தான். ஐவரையும் அழைத்துவரும்படி விதுரனை விடுத்தான். பழியில்லாத அவரும் இவ்விழியில்லான் முன்நின்றார். நின்றவரைப் புகழ்ந்து நீதிகள்புகன்றான்

இவன் அறஞ்சொல்லினும் அதனை எவரும் மெய்யென்று கொள்ளார். பொய்யென்றே கண்டார். இது பாரதத்தில் காணப்படும்.

புறஞ்சொல்லும் புன்மையோனுக்கு அறஞ்சொல்லும் நன்மையில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

186. மீறிப் பழியுரைத்த வேந்தன் கடோற்கசனால்
கூறப்பட் டானன்றோ குமரேசா — மாறிப்
பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளுந்
திறன்தெரிந்து கூறப் படும். (௬)

குமரேசா! பழிமொழி கூறிய துரியோதனன் உடனே வல் கடோற்கசனால் பழிக்கப்பட்டான் எனின், பிறன் பழியைக் கூறுவான் தன்பழி யுள்ளும் திறன்தெரிந்து கூறப்படுவான் என்க.

தனை எனக்கு பழிகூறுவானை.



திறன்தெரிந்து—வருத்துந் திறத்தை ஆராய்ந்தறிந்து.
பிறரைப் பழிப்பவன், தன்பழி பலவற்றுள்ளும் தன்னை வருத்துதற்கு ஏற்ற திறங்களையுடைய பழிகளைத் தெரிந்தெடுத்து அவரால் பழிக்கப்படுவான் என்பதாம்.

நோவெல்லாம் நோய்செய்தார் மேலவாம் ஆதலால் பழியெல்லாம் பழிசொல்வார் பாலவாம் என்க.

பழிப்பவன், உடனே பழிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரியோதனனைக் கடோற்கசன் சொன்னதால் காணலாகும்.

சிந்தைதனில் வீரமென்றார் செருமுகத்தில் வஞ்சகமுஞ்
செய்யாரையா
வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார் நிரைக்கழுவில்
விழச்செய்யார்
உந்துபுனலிடைப் புதையார் ஒருநீ பிறப்பாகற்றார்
ஊரைந்தப்பார் (1)

[ர
செழுந்தழல்வாய் மனைக்கொளுவார் செய்ந்நன்றி கொன்றறியா
ரீங்குள்ளார்
அழுந்துமனத் தழுக்குறார் அரசுபெறும் பாரினிற்ப்
பொய்ச் சூதாடார்
கொழுந்தியரைத் துகிலுரியார் கொடுங்கானமடைவித்துக்
கொல்ல என்றார்
எழுந்தபரில் முதுகிடார் இவையெல்லாம் அடிகளுக்கே
யேற்ப என்றான். (பாரதம்.)

இவை, தன்னை அரக்கன் என்று இகழ்ந்துகூறிய துரியோதனனை நோக்கிக் கடோற்கசன் கூறியன.

பிறன்பழி சொல்வோன் பெரும்பழி கொள்வான் என்பது இதனால் கூறப்பட்டது.

187. கானிலிரா மன்பிரியக் கைகைதனை யேன்பிரித்தாள்
கூனிபுறங் கூறிக் குமரேசா—தானே
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். (எ)

குமரேசா! இராமன் வனம் போகும்படி என் கூனி புறங்கூறிக் கைகேசியைப் பிரித்தாள்ஆனின், நகச்சொல்லி நட்பாடல் தேற்றாதவர், பகச்சொல்லிக் கேளிரைப் பிரிப்பார் என்க.

பகச் சொல்லி—நீங்கும்படி புறங்கூறி.

கேளிர்ப் பிரிப்பர்—சுற்றத்தாரையும் பிரிப்பர்.

தேற்றாதவர்—தெளியாதவர்.

மகிழும்படி இனிய சொற்களைச் சொல்லி நட்பை வளர்த்தலை யறியாதார் புறங்கூறிச் சுற்றத்தாரையும் பிரிப்பர் என்பதாம்.

நகச் சொல்லி அன்பு செய்வோர், பகச் சொல்லித் துன்பு செய்யார் என்க.

புறங்கூறுவோர் ஒரு குடியின் ஒற்றுமையைக் கெடுத்துக் குற்றத்தை யுண்டாக்குவர் என்பது கருத்து. இது கூனியால் காணப்படும்.

## கதை.

கூனி யென்பவள் கைகேசியிடம் இருந்த ஒரு முதியவள். உறுவன உணர்த்தும்படி கேகய தேசத்திலிருந்து அவளுடன் வந்தவள். மந்தரை யென்றொரு மறு பெயருடையவள். வளைந்த முதுகினள். அதனால் இவள் கூனி யென்று அழைக்கப்பட்டாள். மிகக் கொடியவள். இராமன் முடிசூட அமைந்ததை அறிந்தாள். கவன்றாள். உடம்புபோல உள்ளமுங் கோடினள். பொறாமையால் ஓடினள். கைகேசி முன்னின்று சுடுமொழி

புகன்றாள். இராமன்பால் பேரன்பையுடைய கைகேசியின் மன நலத்தை மாற்றினாள். தன் சொல்வழி நடக்கும்படி ஆக்கினாள். முடிபுனைபாதபடி இராமனை வனம் போக்கினாள். பகைச் சொல்லித் கேளிரைப் பிரித்தமையால் இவளை அனைவரும் பகைத்தார்.

303 இருக்குறட் குமரேச வெண்பா.

பாவி யென்று வெறுத்தார். பலரும் பகைக்க இவள் பரிந்து வருந்தினாள். இதன் விரிவு இராமாயணத்தில் காணப்படும்.

புறஞ்சொல்வோர் பல துயரைக் கெடுப்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

188. வெற்றி மிகுகண்ணனுக்கும் வெய்யதுரி யோதனனேன்
குற்றமிகச் சொன்னான் குமரேசா—கற்றமெனத்
துன்னியார் குற்றமுந் தூற்று மரபினார்
என்னைகொ லேதிலார் மாட்டு. (அ)

இ—ள்.

குமரேசா! துரியோதனன் ஏன் திருமாலுக்குங் குற்றங் கூறினான் எனின், துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினர் ஏதிலார் மாட்டு என்னை கொல் சொல்லார் என்க.

துன்னியார் குற்றமும்—நெருங்கிய உறவினரது குற்றத்தையும்.

தூற்றும் மரபினர்—பலரறியப் பரப்பும் இயல்பினர்.

ஏதிலார் மாட்டு—அயலாரிடத்தில்.

மிக நெருங்கிய சுற்றத்தாரது குற்றத்தையும் உலகறியப் பரப்பும் இயல்பினர், அயலாரிடத்தில் யாதுதான் செய்யார் என்பதாம்.

உறவினரையும் புறங் கூறிப் பழிக்கு மரபினோர் பிறர்பால் என் சொல்லார் யாது செய்யார் என்பார் "ஏதிலார் மாட்டு என்னை கொல்" என்றார். என்னர் கொல் எனவும் பாடம்.

புறங்கூறலாகிய பெரும் பாவத்தை உறவினரிடமும் செய்யும் மறவோர் பிறர்பால் எதையுஞ் சொல்வர் என்பது கருத்து. இது துரிபோதனன்பால் காணப்படும்.



## கதை.

தருமர் முதலிய உறவினரையும் புறங் கூறித் தூற்றிய துரிபோதனன் கண்ணோட்டம் சிறிதுமின்றிக் கண்ணனையும் வைதான். கடுவினை புரிந்தான்.

அன்னையானவரும் இருவராமுத லளித்த கன்னையர் களைவராம்
பின்னையாரை கொடு குருகுலத்தரசை பெறுமாறெங் ஙனம் பிறப
[ந்திலார்
மின்னையாமிவர்களைவரும் பரிவி னொடு தனித்தனி விருப்புறா
வென்னையா மவரொடொருகுலத்தரச னென்பதற்கமையுமோவென்
[கொலாம். (1)

ஆலிவருங்குழல் பிழைத்தமன்னையில் ஐவருக்குமுரி யானை நான்
எளிவருக்குக் கூறிந்தபோதநிருக்கது கண்டவர்களல்லவோ
துளிவரும்புனல் பரிந்தருந்திப் பசோறு தின்றுயிர் சுமந்ததோ
ளிலிவரும்வதுவிருந்த பாவியரு மின்றுமானமிக்யணர்யமோ. (2)

என்று ஐவரைப் பழித்தான்.

புன்பிறப்புடைய பொதுவர் தங்களொடு புரவிலானிரை புரந்திடும்
உன்பிறப்புமுர லோகிகோவியா உனைப்பணிந்தது மறந்தநீ
மன்பிறப்பினுயர் குருகுலத்தவர்தம் வாய்மை தானுமொரு மாசிலா
என்பிறப்புமுனை ராமலோசபையில் இந்தவாசகமியம்பினாய்.

என்று கண்ணனை ஏசினான். காயிற் கொல்லவுந் துணிந்தான்.

இதைக்கேட்ட சாத்தகிக்குக் கட்டஞ் சிவந்தது. அவ்வாளுருவி யவன்மேல் ஒல்லெனப் பாய்ந்தான். உடனே, கண்ணன் தம்பியைக் கையிற் பிடித்தான். அன்னியார் குற்றமுந் தூற்று மாபி ளொருவிய துரியோதனன் நம்பால் எவையுஞ் சொல்வான் எல்லாஞ் செய்வான். பொறு என்று தடுத்தார். அவனும் பொறுத்து நின்றான். இது பாரதத்தில் காணப்படும்.

புறங்கூறுவோர் எவரிடமும் எப்படியுஞ் செய்வார் என்பது இதனால் கூறப்பட்டது.



189. கூறுஞ் சமிதன் கொடுஞ்சகுனி யேனுலகம்
கூறியழ நின்றார் குமரேசா — கூறும்
அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. (9)

இ—ள்.

குமரேசா! சமிதன், சகுனியென்பவரை யேன் உலகந் தாங்கலாற்றாது தளர்ந்து மொழிந்ததெனின், புறம் நோக்கிப் புன்சொல் உரைப்பானது பொறையை அறம் நோக்கி வையம் ஆற்றும் என்க. ஆற்றுங்கொல்—பொறுக்கும்போலும். கொல் என்னும் இடைச்சொல் ஐயத்தைக் குறித்து நின்றது.

புறம் நோக்கி—பிறர் நீங்கிய சமயம் பார்த்து.

புன்சொல் உரைப்பான் பொறை—புறங்கூறுவானது உடற் பாரத்தை.

பிறரில்லாத அளவு பார்த்து அவர்மீது பழிகூறும் இழி மகனது உடற்பாரத்தைப் பொறுக்கலாற்றாது வருந்தினும், நிலமகள் அறம் நோக்கிப் பொறுக்கும் போலும் என்பதாம்.

அறம் நோக்காவழிப் போக்கும் என்பது குறிப்பு.

நிலம் எல்லாவற்றையும் தாங்கி நிற்கும் இயல்பினையுடையதே யாயினும் பாவ யாக்கையைத் தாங்கலாற்றாது பதைக்குமென்க.

இனி, புறம்நோக்கிப் புன்சொல் உரைப்பானது பொறையை அறம் நோக்கியேனும் வையம் ஆற்றுமோ, ஆற்றாது எனவும் இது பொருள்படும்.

புறங்கூறுவோன் பெரும் பாவியாதலால் அவனைப் பொறுத்து நிற்க ஆற்றாது பூமி, வருந்துமென்பதாம். இவ்வுண்மை, சுமிதன், சகுனி யென்னுமிவர்பால் காணப்படும்.

## 19-ம் அதிகாரம் புறங்கூறாமை. 371

### கதை 1.

சமிதன் என்பவன் மகத தேசத்தில் வசவபுரம் என்னும் ஓர் நகரிலிருந்தவன். இசை நூல் வல்லவன். இவன், அந்நாட்டு வேந்தன் மகளாகிய குணவதி யென்பவளுக்கு இளமையிலேயே வீணைபயிற்றி வந்தான். வருங்கால் குணவதி பருவமெய்தினாள். இவன் முதியவயதினன். அறுபதுக்கு மேற்பட்ட பருவமுடையவன். அவளை மருவி யின்புறக்கருதி வருந்தினான். அவள், அழகும் நிறையும் அறிவும் வாய்ந்தவள். ஐயமின்றி யிவன்பால் அணுகப் பயந்தாள். இசையுடை வசையோன அவள்மேல் ஆசைமீக்கூர்ந்தான. தன் காதற் குறிப்பைக் கவிந்துகாட்டினான். அவள் கண்டாள். அதுமுதல் இவனை யணுகாமல் விலகினாள். தன் தந்தையிடம் இதனைச் சொல்லிவிடுவேனென்று இவ்வந்தணன் அஞ்சினான். அதனால் முன்னுற அரசனை யடுத்தான. அடாப்பழி கூறினான். அரசன் சினந்தான். இவனை

அதனையாற்றினான். அவளை ஒரு பேழையுள் வைத்து அக்கரை யடுத்துச் செல்லும் ஒரு காட்டு நதியில் விடுத்துவிடுதல் நல மென்று இவன், அரசன் மனங்கொள மொழிந்தான். பேழை மன்னன் இசைந்தான். அவர் ஆங்கப்போதடுத்து அத்தீய வினை செய்தார். பேழை நதி வழி யொழுகி யொரு கரையினை யடுத்தது. அந்த வேட்டைக்கு வந்திருந்த சசிதரன் என்னும் அரசன் மறுநாட் காலையில் அதனைக் கண்டான். வியந்து திறந் தான். குணவதி யெழுந்தாள். அக்குல மகளைப தனக்குக் கொழுநனாகக் கருதினள். அவ் இளவரசனு மிசைந்தான். பே ழையின் பிழையியல் ஆய்ந்து தன் வலையில் சிக்கிய கரடியை அத னுள் விடுத்தடைத்தான். அழகியைக்கொண்டு அவ் இளவல சென்றான். புறம்நோக்கிப் புன் சொல்லுரைத்த அப் புல்லியன் பேழையை நாடி மறுநாள் மாலையில் வந்தான். புவி மகளுடம் அவன் பொறையினை யாற்றாது புலம்பினள். கண்டான் பேழை யை. கருதியதை முடித்துவிடலாமென்று காதல்மீக்கொண்டான். திறந்துட்புகுந்து தேறுதலடைந்தனன். பசியால்மெலிந்து ஓர்மூலையில் பதுங்கிக்கிடந்த கரடியை அப்பாவையென்று இப்பதகன் நினைந்





தான். தன் பாழ்வாய் திறந்தான். "குணவதி! இப்பொழுது என் செய்வாய். அன்றே என் கருத்துக்கிசைந்திருந்தால் இவ்வல்ல லுனக்கெய்துமா? இனியேனும் மருவி வாழலாம் வா" என்று மொ ழிந்தணைந்தான். பசிநோய் மிகுந்த அக்கரடி அவன்மேற் பாய்ந் துயிர் குடித்துச் சாய்த்துச் சென்றது. நிலமும் பொறை நீங்கிற்று.

இஃது இதபோதத்திலுள்ளது.

## கதை 2

வஞ்சமும் அழுக்காறும் நிறைந்த நெஞ்சினையுடைய சகுனி நஞ்சனைய வெருச்சொல்லையே நாளுஞ் சொல்வான். புறம்நோக்கிப் புன்சொல்லுரைக்கும் புன்மையைய இவன் நன்மையென்று

கொண்டான். துரியோதனனுக்குக் கெடுமதி பலகூறிக் கேடே செய்தான். இவன் உடற்பாரத்தைப் பொறுக்கலாற்றாது வருந்திப் பூமிதேவி கண்ணனிடம்போய் முறையிட்டாள். அறம் நோக்கியே யிவன் பொறையை அவளாற்றினருள். பின் கண்ணனை மாறறி ஞன். (இவ்வுண்மை பாரதத்தில் காணப்படும்.)

பிறக்கூறுவோனைப் பொறுக்கலாற்றாது புவிதேவியும் வெறுப்பள் என்பது இதனால் கூறப்பட்டது.

190. கண்டவுடன் தன்குற்றம் காதலுக்குத் தீமையிச்சி
கொண்டிலரேன் விட்டார் குமரேசா—உண்டாமோ
எதிலார் குற்றம்போல் தன்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு (ய)

இ—ள்.

குமரேசா! வில்லிபுத்தூரார் தன் குற்றம் கண்டவுடனே என் தான்செய்துவந்த தீமையை யெய்தவில்லை எனின், ஏதிலார் குற்றம்போல் தன் குற்றம் காணகிற் பின மன்னும் உயிர்க்குத் தீது உண்டோ என்க.

19-ம் அதிகாரம் புறங்கூறாமை 373

மன்னும் உயிர்—நிலைபெற்ற உயிர். ஆன்மா நித்தியமாதலான் மன்னும் என்னும் அடைபெற்றுவந்தது.

காண்கிற்பின்—காணவல்லராயின். இதில் கில் என்னும் ஆற்றலை புணர்த்தும் இடைநிலை, காண்டலின் அருமையைக் காட்டிநின்றது.

இனி, காண்கின், தீது பின் உண்டோ எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். ஓகாரம் எதிர்மறை.

பிறர் குற்றம்போலத் தன் குற்றத்தையும் காணவல்லாராயின் அவர் உயிருக்கு யாதொரு துன்பமும் உண்டாகா தென்பதாம். காணமாட்டாதார் அயலார் குற்றமே நாடிப் புறங்கூறலென்னும் பெரும்பாவத்தைச் செய்வர். ஆதலால் அதன் பயனாகிய துன்பம் அவர்க்குண்டாம். காணவல்லார் அது செய்யார் ஆதலின் அவர்க்குத் தீது இன்றாம் என்பது கருத்து.

பிறர் குற்றம்போல் தன் குற்றத்தையும் கண்டு தெளிந்தோர் பின், பிறர்பால தீது செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வில்லிபுத்தூரரால் உணரலாகும்.

## கதை.

வில்லிபுத்தூரர் என்பவர் இற்றைக்கு அறுநூறு வருடங்கட்கு முன்னர் விளங்கியிருந்த ஒரு சிறந்த புலவர். நடுநாட்டிலுள்ள சனியூரென்னும் ஊரிலே வேதியர் குலத்திலே வீரராகவன் என்னும் ஓர் உத்தமருக்குப் புத்திரராய்த் தோன்றினார். இளமையிலேயே கலைகள் பலவும் கற்றுத் தெளிந்தார். முத்தமிழ்ச்சுவையும் முற்றுணர்ந்தார். பாரதத்தைச் சீர்பெறப் பாடியுள்ளார். அது வில்லிபாரதமென இவர் பெயரால் வழங்கப்படுகின்றது. ஆசு முதலிய நால்வகைக் கவிகளும் மாசறப்பாடினார். இவரது மதிநலத்தையும், கவி நலத்தையுங்கண்டு மகிழ்ந்த அரசர் பலரும் இவருக்குப் பெரும்பரிசு கொடுத்தனர். அவருள், வக்கபாகை யென்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த கொங்கர்குல திலகனா



கிய வரபதியாட்கொண்டான் என்பவர், இவர்பால் பேரன்பு டார். அவர் ஆதரவில் இவர் புலமையைச் சோதிக்கும் கலைமையைப் பெற்றார். வாளொன்று கொண்டார். புலவர்கள் பாடிவருங் கவிகளில் ஏதேனுங் குறைகள் காணப்படின் அவர் செவிகளை அறுத்தெறிவார். அதனால் புன்கவிகளெல்லாம் பொங்காதடங்கின. பிறர் குறைகண்டால் பொறுக்காமல் ஒறுத்தடக்கும் இவர் ஒருநாள் அருணகிரிநாதரைக் கண்டார் வாதங்கொண்டார்.

இருவரும் தமது கல்விப் பெருக்கையும் கவித்திறத்தையும் காணத் தொடங்கினார். அதில் வில்லி மெலிந்தார். முருகப் பெருமான் அருள்பெற்ற அருணகிரியார் வென்றார். எனினும், செவியைக் கொய்யாமல் அவரைச் செல்லவிடுத்தார். அருணகிரியாருடைய பெருந்தன்மையை வியந்து வில்லியார் சென்றார். பிறர் குற்றங்கண்டு தண்டித்துவந்தவர், அன்று தன் குற்றமுங் கண்டார். அன்று முதல் தாம் செய்துவந்த தீமையை விடுத்தார். திருந்தினார். ஏதிலார் குற்றம்போல் தன் குற்றம் காணவல்லாமையில் அவருக்குத் தீங்கின்மையின்மை புலனாம் இவர்பால் உணர்க. (இதன் விரிவு இவர் சரிதையில் தெளிவாம்)

புறங்கூறாதவர்க்கு ஒரு தீதும் உண்டாகாதென்பது இதனுள் கூறப்பட்டது

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

அறங்கூறானாயினும் ஒருவன் புறங்கூறலாகாது. புறங்கூறல் பாவங்களெல்லாவற்றினும் பெரும்பாவமாகும். புறங்கூறி உயிர்வாழ்வதினும் ஒருவன சாதல் நல்லது. கடுஞ்சொற் சொல்லினும் புறஞ் சொல்லலாகாது. புறஞ்சொல்லும் புன்மையோனுக்கு அறஞ் சொல்லுந் தன்மையில்லை. பழிமொழி கூறுவோன் பிறரால் பழிக்கப்படுவான். புறங்கூறுவோர் பிறர் குடியைக் கெடுப்பர். அவர் பகைமையுஞ் செய்வர். அவரைச் சுமக்க இவ்வுலகமும் வருந்தும். புறங்கூறாதார்க்கொரு தீங்குமில்லை.

௰௯-வது புறங்கூறாமை முற்றிற்று.



# ௨௰-ம் அதிகாரம் பயனில சொல்லாமை.

அஃதாவது பயனில்லாத சொற்களைச் சொல்லாமை. இதுவும், புறங்கூறல்போல் மொழிக்குற்றமாதலால் இதனையும் ஒழிக்க வேண்டுமென்பது கருதி அதன்பின் வைக்கப்பட்டது. அது மனப் புன்மையானும் இஃது அறிவின்மையானுந் தோன்றுமென்க. பொய்ச்சொல், புறஞ்சொல், கடுஞ்சொல், பயனில்சொல் என்னும் இந்நான்கும் வாக்கின்கண் நிகழும பாவங்களாம், வைப்பு முறையால் முறையே அவற்றின் தீமை மிகுதி காணப்படும்.

191. எல்லாரு மெள்ளி யிகழ்ந்தா ரிளங்குமரன்
கொல்லென்ற போதேன் குமரேசா—வல்லான்போற்
பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். (க)

இ—ள்.

குமரேசா! கொல்லென்று சொல்லிய இளங்குமரனை ஏன் எல்லாரும் இகழ்ந்தார் எனின், பல்லார் முனியப் பயனில சொல்லுவான் எல்லாராலும் எள்ளப்படும் என்க.

பல்லார் முனிய—பலரும் வெறுப்ப.

எல்லாரும் எள்ளப்படும்—எல்லாராலும் இகழப்படும். இதில் ஆன் உருபு தொக்கு நின்றது.

பலருங்கேட்டு வெறுக்கும்படியாகப் பயனில்லாதிய சொற்களை ஒருவன் சொல்லுவானாயின் அவன் எல்லாராலும் இகழப் படுவான என்பதாம்.

பல்லாரும் எல்லாரும் என்பன இரண்டும் மக்கட்பன்மையைச் சுட்டிநின்றனவே யெனினும், முன்னது, பயனில சொல்லுங் கால் கேட்டுநின்றவரையும் பின்னது அல்லாத பிறரையுங்குறித்து நின்றதென்க.

பயனில சொல்வோனை அனைவரும் இகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளங்குமணன்பால் உணரப்படும்.

## கதை.

இளங்குமணன் என்பவன் குமணவள்ளலது தம்பி. பேராசைமிக்கவன். பொறாமையும் கொடுமையும் பொருந்தியுள்ளவன். கல்வியறிவில்லாதவன். தனது அண்ணன் எல்லாருக்கும் உபகரித்துவருவதைக் குறித்துப் பெருவருத்தங்கொண்டான். தீயார் பலருடன் சேர்ந்து திரிந்தான். மனந்துணிந்தான். தனது முன்னவன்பால் ஒருநாள் சினந்துவந்தான். அரசினைத் தருக, இலையேல் என்னுடன் அமர்செய வருக என்றான். குமணவள்ளல் உடனே அரசைக் கொடுத்துவிட்டு அடவியிற் புகுந்தான். அருந்தவஞ்செய்தான். இவன் அரசைக் கொண்டான். ஆண்டு வந்தான். வருங்கால் குமணன் ஒருகால் மீண்டும் வந்து தன் அரசைக் கேட்பனோ என்று தன் அகத்தில் எண்ணினான். அதனால் அவனைக் கொல்லக் கருதினான். குமணன் தலையைக் கொணர்வோருக்கு ஆயிரம் பொன் தருவேனென்று இவன் தன் அவையில் கூறினான். அதனைக் கேட்டார் பலரும் முனிந்து வருந்தினார். அதன்பின் அவனை அனைவரும் இகழ்ந்தார். பல்லார் முனியப் பயனில சொல்லுவான் எல்லாராலும் எள்ளப்படுவான் என்பதை யுலகம் இவன்பாலுணர்ந்தது.

(இதன் விரிவு குமண சரிதையில் காணப்படும்.)

பயனில சொல்லுவானை உலகம் பழிக்குமென்பது இதனால் கூறப்பட்டது.

---

192. பற்றித் துகிலுரியு மென்றான் பலர்முன்னே
குற்றமுற்றான் பின்பேன் குமரேசா—உற்ற
பயனில பல்லார்முற் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. (உ)



இ—ள்.

குமரேசா! துரோபதையைத் துகிலுரியுமென்று பலர் முன்னே சொல்லிய துரியோதனன் என் நிலையுற்றான் எனின், நயன் இல நட்டார்கண் செய்தலினும் பல்லார்முன் பயனில்சொல்லல் தீதாம் என்க.

நயன் இல—நன்மையில்லாதன. என்றது வெறுக்கத்தக்க செயல்களை.

தீயசெயல்களை தனது நண்பரிடத்தே செய்தலினும் பயனிலவாகிய சொற்களைப் பலர்முன்னே ஒருவன் சொல்லுதல் பெருந்தீது என்பதாம்.

உறவினரிடத்து இழிசெயல் செய்யினும் பயனில்சொற்களை ஒருவன், பலர் முன்சொல்லலாகா என்பது கருத்து.

பயனில்சொல் ஒருவனுக்குப் பழியும் கேடும் இழிவுடன் கொடுக்குமென்பது குறிப்பு. இது துரியோதனனபால் காணப் படும்.

கதை.

திருபாது பொருள் முழுதையுங் கவரும்படி துரியோதனன் சகுனியை யேவினன். அவனுங் கவர்ந்து கொடுத்தான். நட்டார்களை நயனிலசெய்த அக்கெட்டவன் அவ்வளவிலமையாது துரோபதையைத் தொட்டிழுத்து வரும்படி கட்டளையிட்டான். துகி

துரியும்படி துணிந்து சொன்னான். தனது மாமனாகிய சகுனி நல்லவன். தருமனே பாவி. ஆதலால் பொருளிழந்தான். இனி, அவன் மனைவி உடை பறிக்கவேண்டுமென்று கொடுமொழி புகன்றான். அவன், பயனில செய்ததைக் கண்டு சகித்திருந்த விதுரன் துரோணன் முதலிய அறிஞரனைவரும் அப்பயனில் சொல்லைக்கேட்டவுடனே பதைத்து வெறுத்தார். பழிபாவமெய்தி யழிவான் என்று அனைவரும் அவனைப் பழித்து நொந்தார். முன் செய்த செயலினும் பின்சொன்ன சொல்லால் இவன் பெருந்தீதுற்றான்.



இன்னண தரணிவேந்தர் இருந்துழி யிருந்துகூற
மன்னனுந் தம்பிதானு மாமனு மாறுவன்மைக்
கன்னனுந் தம்பியெண்ணிக் கங்கைமா மகனைநோக்கி [ன்.
பன்னக துவசன கேட்டோர் பலருமெய் பனிக்கச்சொல்லா
தன்னிய தருமன்செய்த பாவமோ சகுனிசெய்த
புண்ணிய நெறியோவந்தப் பொதுமகள் யாகசாலை
நண்ணிய தவத்துமற்றை நால்வருந் தலைமைகூர
பண்ணிய மதியோவென்பதினிக்கணம் விளக்குகென்றான்
(சூதுபோர்ச் சருக்கம்)

நயனில் செயலினும், பயனில் சொல் பெருந்தீது பயக்குமென்பது இதனால் கூறப்பட்டது.

193. சார்ந்துநின்ற மாயா சனகனையே னீயனென்று
கூர்ந்தறிந்தார் சொல்லால் குமரேசா—ஓர்ந்த
நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை. (௩)

இ—ள்.

குமரேசா! மறைந்திருந்த மாயாச்சனகனை என் றிய

வனென்று அவனுரையால தேர்கதார் எனின், பயனில பாரித்து உரைக்கும் உரையே ஒருவனை நயன் இலன் என்று சொல்லும் என்க.

நயன் இலன் என்பது—நன்மையில்லாதவன் என்பதனை.
பாரித்து உரைக்கும் உரை—விரித்துச் சொல்லுஞ் சொல்.

பயனில்லாதவற்றைப்பற்றிப் பரக்க உரைக்கும் ஒருவனது உரையே அவனை நயனில்லாதவன்எவறு காட்டிவிடும் என்பதாம். உரையே கருவியாக ஒருவனை யுணரலாம் என்பார் அதன் மேலேற்றி அஃதுரைக்கு மென்றார்.

20-ம் அதிகாரம் பயனில சொல்லாமை. 379

பயனில் சொல்லால் ஒருவனது நயன் இன்மையை நன்குணரலாம் என்பது இதில் காட்டப்பட்டது. இது மாயாசனகன் பால் காணப்படும்

## கதை.

மாயாசனகன் என்பவன் இலங்கையிலிருந்த ஒரு சிறந்த அரக்கன். சீதையின் தாதைபோல் உருவெடுத்து அந்த அம்மையைப் பேதிக்க வந்தவன், மாயைகள் பலவுஞ் செய்ய வல்லவன். மகோதரனுக்குச் சிறந்த நண்பினன். மருத்துவன் என்னும் பெயரினையுடையவன். இவனை யெவிவிட்டு வேறொரு வழியாய் இராவணன் சீதையின்பால் வந்தான், ஆசையால் வருந்தி யவளெதிரே யிருந்தான். மொழிபல பிதற்றினன். அடியினும விழுந்தான். சீதை கேட்டுச் சினந்து வைதாள். அவ்வமையம் அவள் தந்தையென்றே நம்பும்படியாக அவ்வரக்கனைக் கட்டிப் பிடித்து மகோதரன் கடிதில் வந்தான். கண்டாள் சீதை. வஞ்சமென்று தெளியாமல் நெஞ்சங் கலங்கினாள், கைகளை நெறித்தாள், கண்ணை மோதினாள். நெருப்பில் மிதித்தாற்போல் நிலத்திடைப் பதைத்தாள்.

மொழிகள்.

பயனில் சொல்லால் ஒருவனது நயனின்மை காணப்படுமென்பது இதனால் கூறப்பட்டது.

[சொன்றேன்.

194. மாசில்லான் வாயிற்பொய் வார்த்தைவரு விப்ப
கோசிகன்சீர் நீத்தான் குமரேசா—ஆசில்
நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து. (ச)

இ—ள்.

குமரேசா! கோசிகன், அரிசந்திரன வாயில் ஒரு பொய்யை வருவிப்பன் என்று பலர்முன் சொன்னதால் தனது நன்மையை ஏன் இழந்தான் எனின், பயன்சாராப் பண்பு இல் சொல்லை ஒருவன் பல்லாரகத்துச் சொல்லுவானாயின் அஃது அவனை நயன் சாரா நன்மையி னீக்குமென்க.



நயன் என்பது பலன் உறுதி இன்பம் நீதி என்பவற்றைக் குறித்துவரு மொரு சொல்.

பயன்சாராப் பண்பு இல் சொல்—பயன் பொருந்ாத பண்பில்லாத சொல்லை. பண்பு என்றது இனிமை மெய்ம்மை முதலிய சொற் குணங்களை யிங்கே சுட்டி நின்றது.

பல்லார் அகத்து—பலரிடையே சொல்லின். இதில் சொல்லின் என்பது வருவிக்கப்பட்டது.

பயன் பொருந்தாத பண்பில்லாத சொல்லைப் பலர் நடுவே ஒருவன் சொல்லுவானாயின் அஃது அவனை நயன் பொருந்தாதவனாக்கி நன்மையின் நீக்கும் என்பதாம்.

பயனும் பண்பும் இல்லாத சொல்லைச் சொல்வோன் நயனையும் நன்மையையும் இழப்பான் என்பது கருத்து.

பயனில் சொல்லைப் பலர்முன் சொல்வோன் நயனிலனாய் நன்மையை நீப்பான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது விசுவாமித்திரரால் உணரப்படும்.

கதை.

முன்பொரு காலத்தில் பொன்னுலகத்தில் முனிவர் குழாங்களும் தேவ கணங்களும் ஒருங்கே கூடினர். அச்சபையில் வானவர் தலைவனாகிய இந்திரன் உயர்ந்த ஆசனத்தில் சிறந்து வீற்றிருந்தான். பல்வகைக் காட்சிகளும் லலிதமாக நிகழ்ந்தன. அங்குக் குழுமியிருந்த அனைவரும் விழுமிய இன்பத்தை வியந்து துய்த்தனர். அவ்வமையம் நிலவுலகில உயர் நலமுடையவன் யாவன் என முனிவரை நோக்கி இந்திரன் வினவினான். தூய்மையிலும் வாய்மையிலும் மேன்மை பெற்றவன் அரிச்சந்திரன் ஒருவனே என்று வசிட்டர் உடன் விடை கூறினார். அதைக் கேட்ட கோசிகர் கொதித்தார். இவரால் புகழ்ந்து கூறப்பட்ட அவன், கொடியரிற் கொடியன். பதகரிற் பதகன் எனப் பண்பில் சொல்லைப் பலர்முன் துன்புறச் சொன்னார். அதனால் அம்



முனிவரிருவரும் முனிவுற்றெழுந்தார். வாதம் புரிந்தார். வைது வெகுண்டார். சூளுரை புகன்றார். அரிச்சந்திரனைப் பொய்யனாக்கேனேல் யான் செய் தவத்தில் பாதி யெய்தவிழ்வேன் என்று வைது மொழிந்து கோசிகர் வையம்புகுந்தார். சொன்னதை முடிக்க முனிவர் முன்னுற முயன்றார். முடியவில்லை. தேவரும் முனிவரும் அவரைச் சேர இகழ்ந்தார். அவரும் நயனும் நன்மையும் நீங்கித் தமது தவமும் இழந்தார். பண்பில் சொல்லைப் பலர்முன் சொல்வோர் நயன் இலராய் நன்மையை இழப்பார் என்பதை இவர் நன்கு காட்டினார். இதன் விரிவு அரிச்சந்திர புராணத்தில் காணப்படும்.

பயனில் சொல்லால் நயனும் நன்மையும் நீங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

கொற்ற நகுடன் குமரேசா—பெற்றபெருஞ்
சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். (ரு)

இ—ள்.

குமரேசா! நகுடன் ஒரு சொல்லால் தனது சிறப்பையெல்லாம் இழந்தான் எனின், பயன் இல நீர்மை யுடையார் சொலின் அவரது சீர்மை சிறப்பொடு நீங்குமென்க. நீர்மையுடையார்—நீரின தன்மையுடையார். அஃதாவது தண்மை நன்மை இனிமை தூய்மை முதலிய நற்குணங்களையுடையவர்.

சீர்மை—மேன்மை. சிறப்பு—நன்மதிப்பு.

செய் தவத்தால் எய்திய சீரெல்லாம் ஒரு வெய்ய சொல்லால் விலகி யொழியும் என்பது கருத்து.

பயன் இல்லாத சொற்களைப் பண்புடையார் சொல்லுவாராயின் அவரது சீர்மையும் சிறப்பும் ஒரு சேர நீங்கும் என்பதாம்.

20-ம் அதிகாரம் பயனில சொல்லாமை. 383

எவ்வளவு நலங்களை யெய்தினவராயினும், பயனில் சொல்லைச் சொல்லுவாராயின் உடனே அவர் சிறப்பும் சீரும் இழப்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நகுடன்பால் உணரப்படும்.

கதை.

நகுடன் என்பவன் சந்திரகுல வேந்தனாகிய ஆயுவின் புதல்வன். இவன், வீரமும் கொடையும் ஈரமும் உடையவன். பல கலை தேர்ந்த நலமிகுவுணர்வினன். பருவமெய்தினன். மடியற முயன்று முடிபுனைந் துயர்ந்தான். விதிமுறை வழாது முதுநிலம் புரந்தான். பரிமகம் நூறு பரிவுடன் புரிந்தான். அதன் பயனாக இந்திரனானான். வானவர் போற்ற மேனிலையடைந்தான். சிவிகையிலேறிச் சிறந்து வீற்றிருந்தான். குறுமுனி முதலிய பெரியவர் எழுவரும் குழுமியடைந்தார். சதமகம் புரிந்து சதமகனான இவனை அம்முனிவரெழுவரும் முறைப்படி சுமந்தார். இந்திர மாளிகையை நோக்கி முந்துறச் சென்றார். செல்லுங்கால் இந்திராணி மீது இவன், சிந்தையைச் செலுத்தினான். அவளைக் கலந்து மகிழ விழைந்து விரைந்தான். காம மிகுதியால் கருத்தும் அழிந்தான். தாங்கிச் செல்லும் முனிவர் தகுதியை மறந்தான். விரைந்து சென்மின் என வெகுண்டு மொழிந்தான். "சர்ப்ப சர்ப்ப" என அதனையோர் அற்ப வார்த்தையால் குறித்தான். உடனே முற்கொம்பு தாங்கி நடக்கும் அகத்திய முனிவர் முனிந்தார். சர்ப்பமாகும்படி அவனைச் சபித்தார். அவனும் அரவமாகி அவனியில் உருண்டான். ஒரு சொல்லால் தனது சீர்மையும் இழந்தான். அதனால் எய்தும் சிறப்பும் நீங்கினான். நீர்மையுடையார் பயனில சொல்லின் அவரது சீருஞ்சிறப்பும் சேர நீங்கும் என்பதையுலகம் இவன்பால் தேறி நின்றது.

சர்ப்ப என்பது விரைந்து செல்க என்பதை யுணர்த்தும்

முருகுடமும்பெருஞ் சேனையும் தரணியு முற்றும்
சகுட நீரெனச் சதமகம் புரிபருந் தவத்தோன்
நகுடநாமவேல் நராதிப னாகருக் கரசாய்
மகுடமேந்திய குலிசலா யுதன் றிருமைந்தன். (1)
புரந்தரன பதம் பெற்றபின் புலோமசை முயக்கிற்
கிரந்தமற்றவ னெவ்வின் யானமுற் றேறி
வரந்தருந்தறு முனிமுனி வாய்மையான் மருண்டு
நிரந்தரம் பெரும் புயங்கமானவனுயர்ந்திருபன. (பாரதம்) (2)
மனிதரின் மகவானாகி வருபவன் சிவிகைதாங்கும்
புனிதமா தவரை யென்னான் புன்கணோய் விளைவும்பாரான்
கனிதரு காமந்துய்க்கும் காதலால் விரையச் செல்வான்
பாற்கொண்டேகுமின் சர்ப்பவென்றான். (1)
சர்ப்பமா கெனமுற்கொம்பு தாங்கிமுன் னடக்குந் தென்றல்
வெற்பனும் முனிவன்சாபம் விளைத்தனன் விளைத்தலோடும்
பொற்பமா சுணமேயாகிப் போயினன் அறிவிலாத
அற்பரா னவர்க்குச் செல்வமல்லது பகைவேறுண்டோ. (2)
திருவிளையாடற் புராணம்.

பயனில்லாத ஒரு சொல்லால் தனது நலமெல்லாம் ஒருவன் ஒருங்கேயிழப்பான் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

196. சீதை இராவணனைச் சிறிப் பதரென்றேன்
ஏதுபடச் சொன்னாள் குமரேசா—ஏதும்
பயனில் சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். (௬)

இ—ள்.

குமரேசா! சீதை என் இராவணனைப் பதர் என்று சொல்லிப் பழித்தாள் எனின், பயனில் சொல்லைப் பாராட்டு வானை மகன் எனல் மக்கட் பதடியெனல் என்க.



பாராட்டுதல்—பலகாலும் பன்னிப் பன்னிச் சொல்லல்.
மகன் எனல்—மனிதன் என்று சொல்லாதே.
மக்கட் பதடி எனல்—மக்களுள்ளே பதர் என்று சொல்லுக.

எனல எனனும் அல்விகுதியங்கோள் முன்னது எதிர்மறை யிலும் பின்னது உடம்பாட்டினும் உற்றநின்றது.

பயனில் சொல்லைப் பலகாலுஞ் சொல்வானை மக்களுள்ளே பதர் என்று கொள்ளவேண்டுமெனபதாம்.

வாக்கு நயத்தாலன்றிக் கற்றவரை மற்றவரை யாக்கை நயத் தாலறியலாகாதே யென்றபடி சொல் நலம் ஒன்றுனே மனிதனது எல்லா நலங்களும் தெளியபபடும்; பயன இல்லாத சொல்லைப் பலகாலுஞ் சொல்வோன் அறிவில்லாதவனையாதலால் அவனை மனிதனென்று மதிக்கலாகாதெனபது கருத்து.

பயிரின் குணமாகிய மணியில்லாத நெல் பதர் எனப்படும் அதுபோல், உயிரின் குணமாகிய அறிவில்லாதவனையும் கருதவேண்டுமென்பதாம.

உள்ளீடு இல்லாத தானியம் வெளித்தோற்றத்தில் ஓர் உலவுப் பொருள்போல் காணப்படினும் அஃதோர் பொருளாகக் கொள்ளப்படாது அதுபோல் அறிவில்லாத ஒருவன் உருவத்தால் மனிதனுகக் காணப்படினும் அவனை மக்களுள் ஒருவனுக வைத்து மதிக்கப்படாதெனபார் 'மகன் எனல் மக்கட் பதடி எனல்' என்றார்.

பயனில் சொல்லைப் பலகாலுஞ் சொல்வோன் பதர் என்று

பழிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இஃது இராவணன்பால் உணரப்படும்.

## கதை.

இராவணன், சிறையிடை வைத்த சீதைபாற் சென்று நாளும் நெடுங்கொடை விழைந்தான். அவளது மனநிலையை நன்கு தெ



ரிந்தும் இவன், அறிவிழந்து அவள்மேல் ஆசைமீக் கூர்ந்தான், சென்று சென்று பல நீமொழி புகன்றான். அவள் வெறுத்துரைத்தும் பயனில் சொல்லையே மறுத்தும் மறுத்தும் அவள்பால் இவன் பரக்க உரைத்தான். இவனது மடமையை நினைந்து அம்மங்கை வெகுண்டாள். இரும்பு நெஞ்சுடைத் துரும்பே யென்றாள். புல்லொன்றை யெறிந்து செல்லென்று சினந்தாள். அவன் செல்லாமல் நின்றான். எறிந்த புல்லையே யெதிர்ந்து நோக்கினாள். பதரெனப் பரிந்துப் பலமொழி புகன்றாள்.

பழியிது பாவமென்று பார்க்கிலை பகரத்தக்க
மொழியிவை யல்லவென்பு முணர்கிலை முறைமை நோக்காய்
கிழிகில நெஞ்சம்வஞ்சக் கிளையொடு மின்றுகாறும்
அழிகிலை யென்றபோதென் கற்பென்னும் அறந்தானென்னும். (1)
வானுள அறநிலைத்தென்றும் சொல்வழி வாழுமன்னின்
ஊனுள உடம்புக்கெல்லாம் உயிருள உணர்வுமுண்டால்
தானுள பத்தும் பேழ்வாய்த் தகாதன வுரைக்கத்தக்க
யானுமல கேட்கவென்றால் என்சொல்லா யாதுசெய்யாய். (2)

(இராமாயணம்.)

பயனில் சொற் சொல்வோன் மனிதன் அல்லன் என்பது இதனால் கூறப்பட்டது.

[வியன்றேன்

197. மண்புகழ் மூவேந்தர் வன்சொலொன்றைச் சொல்
கொண்டசீர் நீர்த்தார் குமரேசா—கொண்ட
நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. (௭)

இ-ள்.

குமரேசா! மூவேந்தரும் வன்சொல் லொன்றைச் சொல்லி என் தம் சீர் குன்றினர் எனின், சான்றோர் நயன் இல சொல்லினும் சொல்லுக; பயன் இல சொல்லாமை நன்று என்க.



நயன் இல சொல்லினும்—நீதியில்லாத சொற்களைச் சொன்னாராயினும். உம்மையால், அதுவும் சொல்லலாகாதென்பது உணரப்படும்.

நயன் இல்லாத சொற்களைச் சொல்லினும் பயன் இல்லாத சொற்களை அறிவோர் சொல்லாமை பெறின் அஃது அவர்க்கு நன்மையாம் என்பதாம்.

நயன் இல் சொல்லினும் பயனில் சொல் பெருந் தீது பயக்கும் என்பது குறிப்பு. இவ்வுண்மை மூவேந்தர் பாலும் உணரப்படும்.

கதை.

சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை வேந்தர் மூவரும் சேர்ந்து இயல்பாகவே ஒருநாள் ஏகப்பவாணரது திருநகரை யணுகினர். அங்கே வாணரைக் காண அம்மூவரும் விழைந்தார். அவர், வீட்டிலிருக்கின்றாரா? என்று கேட்டுவரும்படி ஒருவனை விடுத்தார். அவன் சென்று வினவினான். முதலியார்,

வயலுக்குப் போயுள்ளார் என்று அக்குள்ளார் மொழிந்தார் மொழிந்ததையவர்பால் அவன் மீண்டு மொழிந்தான். வேந்தர் தெரிந்தார். முதலியார் முடி நடப் போயினரோ என்று வினோதமாக அவர் வெண்மொழி பகர்ந்தார். அதனால் வாணர் மனைவி வன்சினங் கொண்டாள். அம்மூவரும் நாணப் பாவொன்று பாடினள்.

சேனை தழைபாக்கிச் செந்நெருநீர் தேக்கி
யானை மிதித்த அருஞ்சேற்றில்—மானபரன்
பாவேந்தர் வேந்தன் பதித்துநட்டான் ஏகம்பன்
மூவேந்தர் தங்கள் முடி.

இதனைக் கேட்டு அம்மூவரும் வாட்டமுற்றகன்றார். வாணரும் நிகழ்ந்ததை வந்தபின் னுணர்ந்தார். பூதம் ஒன்றேவி அவர் கேட்டேதம் புரிந்தார். ஒரு பயனில் சொல்லால் அவர் புலதிப்

49



பயன் அடைந்தார். நயன் இல சொல்லினும் பயன் இல சொல்லலாகாதென்று தெளிந்தார். விரிவு அவர் சரிதையில் தெரிவாம்.

198. மாறுமொரு சொல்லே மதுரகவி முன்சொன்னார்
கூறார்வே றென்னே குமரேசா—தேறி
அரும்பய னாயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன இல்லாத சொல் (௮)

இ—ள்.

குமரேசா! நம்மாழ்வார், மதுரகவியை நோக்கிச் சொல் ஒன்றே சொல்லி வேறொன்றையுஞ் சொல்லவில்லையெனின், அரும்பயனை ஆயும் அறிவினர், பெரும பயன் இல்லாத சொல்

லைச் சொல்லார் என்க.

மாறர், சடகோபர் என்பன நம்மாழ்வாரது திருநாமங்கள்.

அரும்பயன் ஆயும் அறிவினார்—அரிய பயனை ஆராயும் அறி டையார்.

அரிய பயன் என்றது மெய்யுணர்வால் அன்றி வேறொன்றாலும் அறிதற்கரிய முத்திப்பேறு முதலிய மறுமைப் பயன்களை என்க.

பெரும் பயன் இல்லாத சொல்லைப் பேரறிவாளர் சொல்லார் என்பதாம்.

அறிவில்லாதவரே பயனில்லாதசொல்லைச் சொல்வர், உடையவர் பயனுள்ள சொல்லையே, சொல்லுவர் என்பது குறிப்பு.

அறிவின் பெருமைக்குத் தக்கபடியே சொல்லின் பெருமை காணப்படுமாதலால் பேரறிவோர் பெரும் பயனுள்ள சொல்லையே சொல்லுவர் என்பதும், அல்ல பிற சொல்லார் என்பதும்



இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை சடகோபர் பாக் உரைப்பதும்.

## கதை.

குருகைநாதனாகிய நம்மாழ்வார் அரும்பயனையே யாய்ந்தார். பயப்பொருளையே தோய்ந்தார். அதனால் ஒருவரோடும் ஒன்றும் பேசாமல் ஒடுங்கியிருந்தார். எவர் வந்து எதுதான் கூறினும் அவரை இவர் எதிர்நோக்கவுஞ் செய்யார். தமது மெய்யுணர்வின்

பயனைப் பொய்யுணர்வோருக்குப் புகலுவதில் பயனொன்றுமில்லை யென்று கருதி மௌனமாயிருந்தார். இவர் இப்படியிருப்பத் திருக் கோளூரில் அவதரித்துத் திருவயோத்திக்குப் போயிருந்த மதுர கவியாழ்வார் தென் திசை நோக்கி மீண்டார். இவரைக் கண்டு கண்டார். வியந்தார். சிறிதும் அசையாதிருக்கின்ற இவர்பால் எத்தனும் உணர்ச்சியுளதா என்று உணர விரும்பினர். அசேத னமான உடம்பில் சேதனமாய் அருவாய் உள்ள உயிர் ஒன்றிருந் தால் அஃது எதனைத் துய்த்து எங்கே இருக்குமென்னும் பொரு ளமைத்து "செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தை த்தின்று எங்கே கிடக்கும்" என்றார். உடனே மாறனர் தமது மலர் விழி திறந்தார். உயிர் உடலோடு கூடித் தனது வினைப் போகங்களை நுகர்ந்து அதன் கண்ணேயே தங்கி நிற்கும் என்று ஆதற்குவிடையாக "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என் ருர். தமது மதி நலத்தின் மாண்பைத் தெரிவார் இல்லையென்று கருதியே இதுவரையும் இவர் யாதும் சொல்லாமல் இருந்தார் என்னும் உண்மையை மதுரகவியார் ஓர்ந்தார். உவந்தார். பயன் சேர்ந்த அச்சொல்லின் அருமையையும் அவரது அறிவின் பெரு மையையும் பெரிதும் போற்றினர். குருவாகக் கருதினர். அரி ய கவிகள் பல அவர் மேற் பாடினர் வேறொன்றும் விரித்துச் சொல்லாமல் அடங்கியிருக்கும் அவரது அருமையைப் புகழ்ந் தார். அரும்பயன் ஆயும் அறிவினர் பெரும்பயன் இல்லாதன சொல்லார் என்னும் உண்மையை அவர்பால் தெளிந்தார்,

சரிதையில் தெளிவாம்.

390 திருக்குறட் குமரேச வெண்பா.

பயன் இல்லாத சொல்லை அறிவாளர் சொல்லார் என்னும் இவ்வுண்மையை அழகிய உவமையால் விழுமிதாகக் கம்பர் விளக் கியுள்ளார். அவரது அவ் இன் கவி இங்கு நன்கு கருதத்தக்கது.

கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலைப்
பல்விதச் சிறார்எனப் பயில்வ பல்லரி
செல்விடத் தல்லதொன் றியம் பல் செய்கலா
நல்லறிவாளரின் அவிந்த நாவெல்லாம்.

(கார் காலப் படலம்)

மழைக்காலங் கழிந்தபின் வருக என்று கட்டளையிட்டுச் சுக்ரீவனைக் கிட்கிந்தைக்கு அனுப்பியபின் தம்பியோடு இராமர் அங்கு ஒரு மலைச் சாரலில் தங்கியிருந்தார். அவ்வமையம் கார் காலம் கழிந்தது. குளிர்காலம் எழுந்தது. அவ் இரண்டு பருவங்களின் இயல்பையும் வருணித்துக் கூறுங்கால் இது கூறப்பட்டது.

ஓர் ஆசிரியனுக்கு அடங்கிப் பள்ளிக்கூடத்திலிருந்து ஒருவர் முறை சொல்ல அதன்பின் ஒருங்கே சொல்லி மூல பாடங்களை மனப்பாடஞ்செய்யும் இளம்பிள்ளைகளைப்போல், ஒன்றின்பின்னொன்றாகப் பேரிரைச்சலிட்டு மழைக்காலத்தில் கத்திக்கொண்டிருந்த தவளைகள், குளிர்காலம் வந்தவுடனே அங்ஙனமின்றித் தமது சொல்சென்று பயன்படும் இடத்தேயன்றி வேறிடத்து ஒன்றுஞ் சொல்லாமல் நாவடங்கியிருக்கும் நல்லறிவாளரைப்போல் ஒவ்வொர் சமயம் மாத்திரங் கத்தி ஒடுங்கியிருந்தன என்பது இதன் திரண்ட பொருளாம்.

மழைக்காலத்தில் வரம்பின்றிக் கத்தும் தவளைகள்போல் பயனில்லாத சொற்களைப் பேதையர் பாரித்துரைப்பர் என்றும், அறிவோர் பயனுறுஞ் சொல்லை நயனுறச் சொல்லி நாவடங்கியிருப்பர் என்றும், இதில் விளக்கியுள்ள உவமையின் நுண்மையும் நயமும் நுனித்துணரத்தக்கன.

அறிவோர் பயனுறுஞ்சொல்லையே கலனுறச் சொல்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

199. அன்றேன் இரணியன்சேய் அல்லலுற்றுஞ் சொல்ல
குன்றியசொல் ஒன்றும் குமரேசா—என்றும் [illegible]வில்லை
பொருள்நீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்நீர்ந்த
மாசறு காட்சி யவர். (௯)

இ—ள்.

குமரேசா! இரணியன் சேய் அல்லலுற்றும் பயன் குன்றிய சொல்லை ஏன் சொல்லவில்லை எனின், மருள் தீர்ந்த மாசறு காட்சியவர் பொருள்தீர்ந்த சொல்லைப் பொச்சாந்துஞ் சொல்லார் என்க.

இரணியன்சேய்—பிரகலாதன். பொச்சாந்தும்—மறந்தும். பொருள்நீர்ந்த—பொருள் நீங்கிய: என்றது பயன் இல்லாத சொற்களை. மருள்நீர்ந்த—மயக்கம் நீங்கிய. மாசறு காட்சியவர்—குற்றமற்ற அறிவினையுடையவர்.

மயக்கம் இல்லாத மெய்யுணர்வுடையவர் பயன் இல்லாத சொற்களை மறந்தும் சொல்லார் என்பதாம்.

மேல், அறிவுடையார் பயன் இல சொல்லார் என்றார் மடி மறதி, அச்சங்களுள் ஏதாவது ஒன்றால் மருண்டேனும் சொல்லாரோ எனின், எவ்வகையானும் அவர், அதை யாண்டுஞ் சொல்லார் என்று மீண்டும் தெளிவுறுத்தினார்.

மருள் நீங்கிய அறிவினோர் பொருள் நீங்கிய சொல்லை மறந்தும் சொல்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பிரகலாதன் பால் உணரப்படும்.



## கதை.

பிரகலாதன் என்பவன் இரணியன் புதல்வன். அருள் சேர்ந்த நெஞ்சினன். மருள் தீர்ந்த மாண்பினன். மாசற்ற உணர்வினன். கருவிலே எய்திய திருவினையுடையவன். இளமைப் பருவத்தே இவனுக்கு வேதத்தைப் போதிக்கும்படி தந்தை ஒரு வேதியனுக்கு ஓதினான். அவன் இவனை அழைத்துச்சென்று தனதருகே இருத்தினான். அவன் அசுர குருவாகிய சுக்கிரன் மகன், பெயர் சண்டமார்க்கன் என்பது. ஓதுவிக்கத் தொடங்கினான். முன்னதாக முறைப்படி இரணியாய நம: எனச்சொல் என்றான். புதல்வன் அதனைச் சொல்ல இசைந்திலன். நாராயணாய நம: என்று சொல்லினான். உலகமெல்லாம் தன் பெயரே செல்லும்படி செங்கோல் செலுத்துகின்ற உன் தந்தைபெயரைச் சொல்லாமல் ஏன் இந்தப் பெயரைச் சொல்கிறாய் என்று குரு முனிந்தான். குமரன் குறுநகை செய்தான். அது பொருள் தீர்ந்த சொல். அதனை யான் சொல்லேன். வேதத்தின் உச்சியின் மெய்ப்பொருளாய் விளங்கும் இப்பெயரையே செப்புவேன் என்றான். தனக்கு ஏதம் வருமென்றெண்ணி வேதியன் ஓடினான். நடந்ததை வேந்தனிடம் நடுங்கி ஓதினான். இரணியன் எழுந்தான். புதல்வனைக் கண்டான். புகன்றதைத் தெரிந்தான். சேயெனக் கருதாது தீயெனக் கனன்றான். அப்பெயரைச்சொல்லாதே யென்று அவனுக்கு அல்லல் பல செய்தான். யாது செய்யினும் அவன் அதனையே ஓதினான். தாதையை நோக்கினான்.

காமம் யாவையுந் தருவதும் அப்பதங் கடந்தால்
சேமவீடுறச் செய்வதுஞ் செந்தழல் முகந்த
ஓமவேள்வியின் உறுபத முய்ப்பது மொருவன்
நாமம் அன்னதுகேள் நமோ நாராயணாய.

என்று மொழிந்தான். எதிர்நின்று திகழ்ந்தான். மருள் தீர்ந்த மாட்சியுடையார் பொருள் தீர்ந்ததைப் பொச்சாந்துஞ் சொல்லார் என்பதை யிவன் உணர்த்தி நின்றான்.



(இதன் விரிவு இராமாயணத்தில் உணரப்படும்.)

பொருள் தீர்ந்த சொல்லை அறிவோர் பொச்சாந்துஞ் சொல்லார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

200 சீதைதன்மை சொல்லித்தான் செய்ததையேன் சொல்
கோதில் அனுமான் குமரேசா—யாதேனும் [லில்லை
சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல் (ய)

இ—ள்.

குமரேசா! சீதையின் இயல்பை மட்டுஞ் சொல்லி யவ் அனுமான தான் செய்ததை ஒன்றுஞ் சொல்லவில்லை எனின், சொல்லின் பயனுடைய சொல்லுக; சொல்லின் பயனிலாச் சொல் சொல்லற்க என்க.

சொல்லின் பயனுடைய சொல்லுக—சொற்களிற் பயனுடைய சொற்களையே சொல்லுக.

சொல்லின் என்பதைச் சொல்லவேண்டியாரின் எனவுங் கொள்ளலாம்.

பின்வரும் நிலை என்னும் அணிநோக்கிச் சொல் என்பது பொருளுடன் கலந்து இதில் ஐந்து நிலைகளில் நின்றது. அது சொற்பின் வருநிலை, பொருட்பின் வருநிலை, சொற்பொருட் பின்வருநிலை என மூவகைப்படும். அவற்றுள் இது சொற்பொருட் பின் வரு நிலையாம்.

முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்
பின்வரு மென்னிற் பின்வரு நிலையே. (தண்டியலங்காரம்.)

சொற்களில் பயனுள்ளனவே சொல்லுக; பயன் இல்லாதன சொல்லற்க ஒழிக என்பதாம்.

394 திருக்குறட் குமரேச வெண்பா.

அறிவுள்ள ஒருவன் பயனுள்ள சொற்களைச் சொல்லி பயனில்லாதவற்றை ஒழிக்கவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அநுமான்பால் உணரப்படும்.

## கதை.

அநுமான் தன்னுடன் வந்த இரண்டுவெள்ள வானரங்களை மகேந்திரமலையில் நிறுத்திவிட்டுக் கடல்கடந்து இலங்கையில் புகுந்தான். சீதையைத் தேடினான். கண்டான். உண்மையை உணர்ந்தான். அவர்பால் உறவுஉணர்த்தினான். அதன்பின் அரக்கர் பலரை மாய்த்தான். அக்கனைத் தேய்த்தான். இந்திரசித்தனை எதிர்த்தான். எற்றமர்புரிந்தான். மன்னன் முன் எய்தி மனுமுறை புகன்றான். அவன் செய்த தீமையெல்லாம் இவன் சேர்ந்து பொறுத்தான். தன் வாலில் வைத்த தீயை அவ் இலங்கையில் வைத்தான். எரித்தான். வான் வழியெழுந்தான். மீண்

டான். தமரிடை சார்ந்தான். அவரனைவரும் இவனை அன்புறத் தழுவினர். அகமிக மகிழ்ந்தார். போனதும் புகுந்ததும் புகலெ னப்போற்றினர். சிறையிடையிருக்கும் சீதையின் செம்மையும் அவர்தந்த அடையாளம் தான்கொண்டுவந்த தன்மையும் ஆகிய இரண்டே அமைவுறச் சொல்லினன். தான் அங்குச் செய்த அருஞ்செயல்களுள் ஒன்றுஞ்சொல்லவில்லை. ஆயினும் அவை யெல்லாம் அவர் குறிப்பாலுணர்ந்தார். அறிவோர் பயனுள்ளன வே சொல்வர் இல்லன சொல்லார் என்னும் உண்மையை அநு மான்பால் தெளிந்தார். விரிவு சரிதையில் தெளிவாம்.

ஆண்டகை தேவியுள்ளத் தருந்தவம் அமையச் சொல்லிப்
பூண்டபே ரடையாளத்தைக் கொண்டதும் புகன்றபோதில்
நீண்டவா ளரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் தான்தன் வென்றியை யுரைப்பவெள்கி.

(இராமாயணம்.)

பயனில் சொல்லைச் சொல்லலாகாதென்பது இதனால் கூறப் பட்டது.

21-ம் அதிகாரம் தீவினை யச்சம். 205

(இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.)

பயன் இலவாகிய சொற்களைச் சொல்வோர் பலராலும் இக ழப்படுவார். தீய செயலினும் அது தீயதாகும். பயனில சொல் வோன் நயன் இலனாவான். அஃது ஒருவனை நயனிலனாக்கி நன்மை யின் நீக்கும். அதனால் ஒருவனது சீர்மையும் சிறப்பும சேர நீங் கும். பயனில சொல்வோன் பதடியெனப்படுவான். நயன் இல சொல்லினும் பயனில சொல்லாமை நன்று. அறிவோர் அதனைச் சிறிதும் சொல்லார். பெரியோர் மறந்தும் அதனை ஒருபோதும் சொல்லார். இல்லன என்றுஞ் சொல்லாதொழிக. பயனுள்ள

சொல்லையே பண்புடனசொல்லுக

20-வது பயனில சொல்லாமை முற்றிற்று.

## உ-க-ம் அதிகாரம் தீவினை யச்சம்.

அஃதாவது தீயவினைகளைச் செய்தற்கு அஞ்சுதல். மனத்தின் கண்ணும் மொழியின் கண்ணும் நிகழுந் தீமைகளை ஒழிக்கும்படி மேலவரை யுணர்த்தினர். இனி, மெய்யின்கண் நிகழும் வெவ்வினைகளையெல்லாம் விலக்கும்படி விளக்குகின்றாராகலின், இஃது ஈண்டுவைக்கப்பட்டது. மேல், பயனில சொல்லாதே என்றார், இதில் பயனில செய்யாதே என்கின்றார். அதிகார அமைவும் இதனானே தெளிவாம்.

201. அன்றசுரர் தின்றார் அமரரேன் அஞ்சினார்
கொன்றமீன் தீண்டக் குமரேசா—நன்றகன்ற
தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. (க)





இ—ள்.

குமரேசா! அசுரர், கொன்ற மீன்களை அஞ்சாமல் தின்றார் ஏன் அமரர் அவற்றைத் தீண்டவும் அஞ்சினர் எனின், தீவி

வினை என்னுஞ் செருக்கைத் தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர் என்க. விழுமியார்—மேலோர்.

செருக்கு—மனக்களிப்பு. ஈண்டு அதனால் எய்தும் மயக்கத்தை அது குறித்து நின்றது.

பின் துன்பம் பயக்கத்தக்க தீச்செயல்களை இன்பமென மயங்கி யெண்ணாது செய்தற்கு அச்செருக்கே காரணமாகலின் அதனையே தீவினையாக அமைத்துரைத்தார்.

செருக்கு என்னும் காரணத்தால் தோன்றும் காரியமாகிய தீவினையை அதுவாகக் கூறியது அதன் மிகுதி கருதியென்க.

தீய செயல்களையே செய்து வந்தவர் என்பார் தீவினையார் என்றார். பழகிய ஒன்றில் பயந்தோன்றாதலான் அவற்றிற்கு அவர் அஞ்சாராயினர்.

கீழோர் தீய செயல்களைச் செய்தற்கு அஞ்சார்; மேலோர் அஞ்சுவர் என்பதாம்.

மேன்மையை வேண்டுவோர் தீவினைகட்கு அஞ்சவேண்டுமென்பது குறிப்பு.

தீயார் அஞ்சாமல் தீவினைகளைச் செய்வர் என்பதும் நல்லார் அவற்றிற்கு அஞ்சுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அசுரர்பாலும் அமரர் கண்ணும் முறையே உணரப்படும்.

### கதை.

வீரமகேந்திரத்திலிருந்து சூரபன்மன் அரசுபுரியுங்காலத்தில் தேவர்கள் பெரும் பயங்கொண்டு அவனுக்கு ஏவல் புரிந்து



வந்தார். வரினும், இரக்கஞ்சிறிதுமின்றி அவர்பால் அவன் அல்

லீலே செய்தான். தனது நகரத்திலுள்ள அசுரரனைவருக்கும் மீன்களைக்கொண்டுவந்து கொடுக்கும்படி அவரை ஏவினன். அவ ரனைவரும் அவன் கொடுமைக்குப் பயந்து கடலிடைச்சென்றார். மீன்களைப் பிடித்தற்கு மிகவும் அஞ்சினர். பழியென நாணினர் பதைத்துநடுங்கினர். அசுரரனைவருங் அவற்றை அஞ்சாமல்கொன் றார், அடுக்கத் துடிக்க அவற்றை யெடுத்துச் சென்றார். தின்று களித்தார். தீமையை அஞ்சாமல் தினமுஞ்செய்தார் தேவர் நொந்து அயர்ந்தார். (விரிவு கந்தபுராணத்தில் காணப்படும்.)

உரைக்குமொழி யதுகேளா அனையரெலாம் உண்ணடுங்கி
புயங்கிவெள்கித்
திரைக்கடலின் மீன்றனக்குத் தருகென்று விதித்திவிநாஞ்
செய்வதேதோ
விரைக்கமலத் தனிக்கடவுளிப்பாயு நந்தலையில்
விதித்தானென்னா
இரக்கமொடு மறுத்தலஞ்சி யத்திறம்மே புரிதுமென
இசைத்துபோனார். (1)

தேனுலவுந் தாருத் திருநிழற்கீழ் இன்பமுறும்
வானவர்க ளென்றே மதிக்குந் தகைமையினேம்
ஈனமொடு மீன்சுமந்தே யெல்லோர் களுநகைக்கத்
தானவர்முன் செல்வதினுஞ் சாதன்மிக நன்றுநன்றே. (2)

(தேவரை ஏவல்கொள் படலம்.)

தீவினைக்கு அஞ்சவதே மேன்மை என்பது இதனால் கூறப் பட்டது.

---

202. அஞ்சாத பாண்டியனும் அஞ்சினனேன் தீயதென்று
கொஞ்சந் தெரிந்து குமரேசா—நஞ்சனவே
தீயவை தீய பயத்தலாற் றீயவை

இ—ள்.

குமரேசா! அஞ்சாத பாண்டியனும் என் தீயவற்றிற்கு அஞ்சினன் எனின், தீயவை தீயபயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும் என்க.

தீயவை தீய பயத்தலான்—தீவினைகள் துன்பந்தருதலால். தீவினைகள் துன்பமே பயக்கும் இயல்பினவாகலான் அவற்றைத் தீயினுங் கொடியதாகக் கருதி அஞ்சவேண்டும் என்பதாம்.

தொட்டகாலத்தில் தொட்ட உடம்பைமட்டும் தீ சுட்டு வருத்தும் தீவினை, தன்னைச் செய்த உடம்பு அழியினும் அவ்வுயிர் புக்கவிடமெல்லாந் தானும் உடன் புகுந்து அதற்குக் கொடுந்துன்பத்தையே கொடுத்துநிற்கும் ஆதலால் தீயினும் தீவினைக்கு அஞ்ச வேண்டுமென்க.

தீயைத் தீண்டினும் தீண்டலாம் தீவினையைச் செய்யலாகா தென்பது குறிப்பு.

தீவினைக்கு அஞ்சவேண்டுமென்று மேற்கூறிய உண்மைக்கு உறுதியை யிதில் உணர்த்தினர்.

தீவினை தீயினுங் கொடியதாகக் கருதி அறிவோரால் அஞ்சப்படுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பாண்டியன் பால் உணரப்படும்.

கதை.

இற்றைக்கு இரண்டாயிர வருடங்கட்கு முன்னர் மதுரை

யம்பதியில் நெடுஞ் செழியன் என்னும் பாண்டிய மன்னன் அர சாண்டிருந்தான். அக்காலத்தில் தனது மனைவியின் சிலம்பை விலைப்படுத்தும்பொருட்டு அங்குவந்த கோவலனைக் கனகவன்மன் என்னும் பொற் கொல்லன் கண்டான். மன்னனுக்கு இவன் மணியணி செய்வோன். வந்தவனை வஞ்சித்தான். அரசியின் சிலம்பைத் திருடின கள்வனைப் பிடித்தேன் என்று கோவலனைக்



குறித்தான். இதறிய ஏவலன் சொன்னதை அத்தூய காவலன் நம்பினன். கொல்லும்படி செய்தான். கண்ணகியால் அதன் பின் உண்மை தெளிந்தான். அத்தீவினையை நினைந்தான். அஞ்சா நெஞ்சமும் அஞ்சி நடுங்கினன். தீயினும் அதனைத் தீயதென் றோர்ந்தான். தன் அறிவைப்பழித்தான். ஆட்சியை வெறுத்தான்.

"தாழ்ந்த குடையன் தளர்ந்தசெங் கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் ஆயுளென"

மயங்கி விழ்ந்தான். மன்னுயிர் நீர்ந்தான்.

(இதன் விரிவு சிலப்பதிகாரத்தில் காணப்படும்.)

தீயினும் தீயவைக்கு அஞ்சவேண்டுமென்பது இதனால் கூறப் பட

203. செற்ற பகைவனுக்கும் தீதுசெய்யா தேன்விடுத்தார்
கொற்றமிகு மெய்யார் குமரேசா—பெற்ற
அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். (௧)

இ—ள்.

குமரேசா! மெய்ப்பொருள் நாயனர் தன்னைக் கொன்ற வனுக்குந் தீங்கு ஒன்றுஞ் செய்யாமல் ஏன் செல்ல விடுத்தார் எனின், செறுவார்க்கும் தீயவற்றைச் செய்யாதுவிடல் அறிவினுள் எல்லாம் தலையாம் என்க.

செய்யாது என்பது ஈறுகுறைந்து செய்யா என நின்றது.

செறுவார்—துன்பஞ்செய்வார்.

400 திருக்குறட் குமரேச வெண்பா.

செறுவார்க்கும் தீய செய்யாது விடல்—செறுவாரிடத்தும் தீயவினைகளைச் செய்யாது விடுதலை.

தலை என்ப—தலைமையான அறிவு என்பர் பெரியோர். என்ப என்னும் பயனிலைக்கு ஏற்ற எழுவாய் இதில் வருவிக்கப்பட்டது.

ஒருவன் பெற்றுள்ள அறிவுகளெல்லாவற்றுள்ளும் சிறந்த அறிவாவது யாதெனின், தீது செய்தற்கு ஏது உள்ள இடத்தும் அதனைச் செய்யாது விடுதலேயாம் என்பதாம்.

பிறர்மாட்டுத் தீயவைகள் செய்யாதிருத்தல் அறிவாம்; செறு வார்மாட்டும் அதனைச் செய்யாது விடுதல் பேரறிவாம் என்க.

தம்மைக் கொலைபுரியும் கொடியவரிடத்தும் பேரறிவாளர் தீயதைச் செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மெய்ப்பொருளார்பால் உணரப்படும்

## கதை.

மெய்ப்பொருள் நாயனர் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவரொரு சிற்றரசராயிருந்தும் உலகப் பொருள்களில் உளப்பற்றற்றார். பரம்பொருளையே மிகப்பற்றி நின்றார். அதனால் மெய்ப்பொருளார் என்னும் நற்பெயர்பெற்றார். இவரது தந்தை பெயர் தெய்வீகன். தாய் பெயர் பொன்மாலை.

மலையமானாருக்குத் தலைவராய்த் திருக்கோவலூரென்னும் திரு
நகரிலிருந்து இவர் செங்கோல் செலுத்தினர். பயிர்களுக்கு
மேகம்போல் உயிர்களுக்கு இவர் உதவிபுரிந்தார். புரிந்துவருங்
கால், முத்தநாதன் என்னும் மறுபுலத்துக் குறுநிலமன்னனொரு
வன் இவர்மேற் பகைகொண்டிருந்தான். பலமுறையும் இவரை
வெல்ல முயன்றான். முடியவில்லை. அக்கொடியவன் ஒருநாள்
அடியவர்போல் வேடந்தரித்து இவர்பால் வந்தான். மாளிகை
யுட்புகுந்தான். இவர் கண்டார். வஞ்சன் என்று அறியாமல்
வணங்கினர். உபசரித்தார். அரியநூற் பொருளொன்றைத்



தெரியவுணர்த்த வந்தேன் என்று இவர்பால் அவன் கூசாது கூறி
னான். பொய்யே புகலும் அவ்வெய்யவன் குறிப்பை மெய்யே
காணார் இவ் ஐயர் கண்டிலர். மனைவி மக்கள் முதலிய அனை
வரையும் அகற்றினர். தனியிடம் ஒன்றில் அவனுடன் புகுந்தார்.
இருவருந்தனித்தார். முறைபெறப்படிப்பதுபோல் அவன் உறையினை
யவிழ்த்தான். வாளால் இவரை வலிந்து வீசினான். உடல்துணி
பட்டது உதிரஞ்சொரிந்தது. உடனே தத்தன் என்னும் தானைத்
தலைவன் கண்டான். அவனைக் கொல்லத் துணிந்தான். தாழ்ந்
துகிடக்கும் இவர் கடுத்துத் தடுத்தார் நம் இல்லில் வந்தானைக்
கொல்லலாகாது. அவனே நமக்கு ஆருயிர்த் துணைவன். ஊ
றொன்றுஞ்செய்யாது நீ உடன் சென்று அவன் ஊரிடைவிடுத்து
வா என்றார். அவனும் சென்று விடுத்துத் திரும்பி வந்தான்.
அதன்பின் இவரும் ஆருயிர் துறந்தார். மெய்நிலையெய்தி மேவி
யின்புற்றார். செறுவார்மாட்டும் தீதுசெய்யாது விடுத்த இப்பெரி
யாரது பேரறிவை உலகம் போற்றியது.

(விரிவு பெரிய புராணத்தில் காணப்படும்)

யார்மாட்டுந் தீதுசெய்யாமையே ஒருவன் பேரறிவுக்குப் பயன் என்பது இதனால் கூறப்பட்டது.

204. வெற்றி விசயனுக்கேன் வெம்மூகன் கேடெண்ணிக்
குற்றமுற்று மாய்ந்தான் குமரேசா—சுற்றம்
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

இ—ள். (ச)

குமரேசா! மூகன் என்பவன் விசயனுக்குக் கேடு எண்ணியதால் ஏன் உடனே மாய்ந்தான் எனின், பிறன் கேடு மறந்தும் சூழற்க; சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும் என்க.



சூழ்தல்—எண்ணல்.

பிறன் கேடு—பிறனுக்குக் கேடுதரும் செயலை.

மறந்தும் சூழற்க—மறந்தும் எண்ணற்க.

அறம் சூழும்—அறக்கடவுள் எண்ணும்.

பிறனுக்குக் கேடு பயக்கும் தீவினையை ஒருவன் மறந்தும் எண்ணலாகாது; எண்ணுவனாயின் உடனே அவன் கெடும்படி அறக்கடவுள் எண்ணும் என்பதாம்.

ஒருவன் பிறர்க்குக் கேடு எண்ணுவனாயின் அது அவனுக்கே கேடாய் முடியுமென்பதாம்.

கெடுவான் கேடு நினைப்பான் என்றதுங் காண்க.

கேடு சூழ்வோரைத் தருமதேவதை கெடுத்துவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. (இது மூகன்பால் உணரப்படும்.)

கதை.

மூகன் என்பவன் ஓர் அசுரன். பாசுபதம் முதலிய பாசைகள் பலவும் வேயமொடு பயின்றவன். துரியோதனனுக்கு உரிமையான நண்பினன். அவன், விசயனைக் கொன்றருளும்படி இவனை யேவினான். இவனும் இசைந்தான். ஒரு பன்றியுருவங் கொண்டான். பரயனை நாடித் தவப்புரிந்து நிற்கும் விசயனை நாடி வந்தான். ஏன அசுரன் ஏனமாய் வருவதை ஞானநாயகன் உணர்ந்தார். வேடவுருவங்கொண்டார். மலைமகளோடு வில்லெடுத்துச் சென்றார். செல்லும் பன்றியை மெல்லத் தொடர்ந்தார். தவம்புரி சாரலைச்சார்ந்தார். அம்பொன்றை யேவி அதனுயிர் மாய்த்தார். கேடுசூழமுன் மூகன் கெட்டு விழுந்தான். பிறன்கேடு சூழ்வோனுக்கு அறம் கேடு சூழும் என்பது உலகம் இவன்பால் உணர்ந்தது.

(இதன் விரிவு பாரதத்தில் உணரப்படும்.)



கேட்டு நீ செல்வாய்க் கிளிநிகர் மொழியாய் கிரீடியைத்
துணைவர்களுடனே
காட்டிலே யொதுக்கி யினைஞருந் தானுங் கடியவஞ்
சனையினால் கவர்ந்த
நாட்டிலே வாழ்வோனை ஏவலால் மூக நாமதா
னவனிவன் றன்னைக்
கோட்டிலே கொலைசெய் ஏனமாய் வந்திக் குன்றிடை
யின்று புக்கனனால் (1)
மற்றவன் விரைவி னுடனமர் மலைந்து வாசவன்
மதலையை வதைத்து
கற்றவம் அகற்றுமுன்னமே விரைந்து காமுயிர்
கவர்தல் வேண்டும்

சொற்றவன் பதில் கேட்டன வரங்கள் கொடுத்தாலும்
வேண்டுமென் றெழுந்தான்
கற்றவர் வணக்கத் திரிபுரமெரித்தோன் கற்றவர்
கருத்தினுற் காண்போன். (2)

(அருச்சுனன் தவநிலைச் சருக்கம்.)

கேடு சூழ்வோன் கெடுவான் என்பது இதனல் கூறப்பட்டது.

205 உற்ற வறுமை யொழிக்கவொரு தீதுசெய்தேன்
குற்றமுற்றான் கூலன் குமரேசா—எற்றும்
இலனென்று தீபவை செய்யற்க செய்யின்
இலனுகும் மற்றும் பெயர்த்து. (ரு)

இ—ள்.

குமரேசா! கூலன் என்பவன் தான் உற்ற வறுமையை ஒழிக்கக்கருதி ஒரு தீது செய்து என் பெருங்கேடு உற்றான்





எனின், இலன் என்று தீயவை செய்யற்க, செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும் என்க. இலன் என்று—வறியன் என்று கருதி.

மற்று—அசை நிலை. அதிலுள்ள உம்மை பிரித்துப் பெயர்த்து என்பதன்பின் கூட்டப்பட்டது.

பெயர்த்தும் இலனுகும்—மறுபடியும் வறியனுவன்.

வறியன் என்று கருதி அதனைத் தீர்க்குப்பொருட்டு ஒருவன் தீவினைகளைச்செய்யின் மறுபடியும் அவன் கொடிய வறுமையையே அடைவன் என்பதாம்.

முறையான முயற்சியாலன்றிக் களவுமுதலிய தீவினைகளால் பொருள்செய்து தனது வறுமையை ஒருவன் நீக்க முயலலாகாது என்னவின், தீவினைக்குப் பயன் துன்பமே யாதலால் அது வறுமையை மிகுவிக்குமேயன்றிச்செல்வத்தை வருவிக்காதென்பதாம்

வறியன் என்று கருதிப் பிறனுக்குத் தீவினையைச் செய்யாதே; செய்யின் அதனால் நீயும் வறியவனாவாய் எனவும் இது பொருள்படும்.

முன்னைத் தீவினைப்பயனால் இப்பொழுது வறியனாயிருக்கின்றேன் என்று உணராமல் ஒருவன் அதனை ஒழிக்கக்கருதி மேலுந் தீவினையைச் செய்யின் அவன் என்றும் வறியனாயிழிந்து கெடுவான் என்பது கருத்து. இது கூலன்பால் காணப்படும்.

## கதை.

கூலன் என்பவன் அவந்தியையடுத்திருந்த நிவகம் என்னும் ஊரிலிருந்த ஓர் வேதியன். இளமையிலேயே வறுமை மிக்கவன். பருவமெய்தினன். பொருளாசைகொண்டான். ஆலயம் ஒன்றில் புகுந்தான். அங்கே காணிக்கையாகச் சேர்ந்த பொருளைக் காணாமல் கவர்ந்தான். பின் காணப்பட்டான். அரச தண்டனை



யை அடைந்தான். அதன் பின் ஆருயிர் நீத்தான். பன்னிரு பிறவிகளிலும் இன்மையே அடைந்தான். இறுதியில் இழிமகனானான். பிரமசீலன் என்னும் முனிவர் ஒருவர் கங்கையாடி இவன் கண்முன் வந்தார். அவர் சடையிலிருந்து ஒரு துளி நீர் இவன் உடலில்பட்டது. அதனால் தூயவனாகினன். தீயவை நீங்கினன்.

இலன் என்று தீயவை செய்யின் அவன் மேலும் இலனும் என்பதை உலகம் இவன்பால் ஓர்ந்தது (இதன் விரிவைக் காசிகாண்டியத்தில் காண்க.)

தீமையால் வறுமையே வருமென்பது இதனால் கூறப்பட்டது

206 கூடியமான் கொன்ற கொடுங்கோல் பாண்டிமன்னன்
கூடியேன் மாய்ந்தான் குமரேசா—நாடியென்றும்
தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். (௫)

1—ள.

குமரேசா! பாண்டிமன்னன் கூடிய மானைக்கொன்ற தீமையால் ஏன் கூடி மாய்ந்தான் எனின், நோய்ப்பால தன்னை அடல்வேண்டாதான் தீப்பால தான் பிறர் கண் செய்யற்க என்க.

நோய்ப்பால—துன்பப்பகுதிகளாகிய பாவங்கள்.

தீப்பால—

துன்பங்கள் தன்னைவந்து வருத்துதலை வேண்டாதவன் பிறர்பால் தீவினைகளைச் செய்யலாகாதென்பதாம்.

தனக்குத் துன்பம் வேண்டாதவன் பிறர்க்குத் துன்பஞ்செய்யாமலிருக்க வேண்டுமென்பது கருத்து.

பிறர்க்குத் துயர்செய்வோன் பெருந் துயர் அடைவான் என்பது குறிப்பு.



ஒருவன் எவ்வகையில் பிறர்க்குத் தீமை செய்கின்றானோ அவ்வகையே அதனை அவன் அடைவான் என்பது இதில உணர்த்

தப்பட்டது. இது பாண்டு மன்னன்பால் உணரப்படும்.

## கதை.

பாண்டு என்பவன் அம்பாலிகை வயிற்றில் வியாசர் அருளா ல் பிறந்தவன். குந்தி மத்திரை என்னும் இருவரை மணந்து திரு வுடன் வாழ்ந்தான். உத்தம குணங்கள் வாய்ந்து அத்தினபுரியை ஆண்டான். ஆண்டு வருங்கால் மனைவியிருவருடன் ஒருநாள் இவன் இமயச்சாரலை யெய்தினன். அவருடன் அமைந்து அரம கிழ்ந்துலாவினன். வினோதமாக வேட்டையாடினன். விலங்கினங் கள் கலங்கியோடின. கிந்தமன் என்னும் கந்தருவன் ஒருவன் தனது மனைவியுடனே அங்கோர் தனியிடத்தில் முனியுருக்கொ ண்டு தங்கியிருந்தான். அவ்விருவரும் கலையும் பிணையுமாய்ச் சல ந்து துய்த்தார். பாண்டு கண்டான். பகழிதூவினன். மானு ருவானவன் மயங்கி வீழ்ந்தான். தேறி எழுந்தான். மாறி மன் னனைச் சீறி நோக்கினன். என்போல் நீயும் இறப்பாய் என்றான். கேட்டான் மன்னன். வாட்டமிக்கூர்ந்தான். நிகழ்ந்ததற்கிரங் கினன். நினைந்து நீங்கினன். கலவியின்பத்தைக் கருதாதிருந் தான். வசந்த காலமொன்றில் ஒரு பணிமலர்ச் சோலையில் குந் தியுடனே கூடியுலாவினன். முயங்கியின்புற மயங்கி விரும்பினன். பெற்ற சாபத்தை முற்றவும் மறந்தான். முயங்கித் துய்த்தான். உடனே மயங்கிச் சோர்ந்தான். மன்னுயிர் தீர்த்தான். ஒருவன் தீப்பால பிறருக்குச் செய்யின் அஃது அவன்பாலே வருமென்ப தை உலகம் இவன்பால் ஓர்ந்தது. (இது பாரதத்தில் உணரப் படும்.)

பொன்னங் கழலா னெதிரவ்விடைப் போகம்வேட்டு
மன்னுங் கலையும் பிணைமானும் மகிழ்ச்சிகூர
மின்னுங்கணையா லிவனெய்திட வீழ்ந்தபோதின்
முன்னின்ற தந்த வுயிர்வந்தோர் முனியனுகி. (1)

நாரிக் கொருகூ றளித்தமுத னல்கவெய்த
வேரிக் கணையான் மிகநொந்தழி வேடமாறிப்
பூரித்த காம கலையெய்து பொழுது நின்னைச்
சோரிக் கணையா லறையுண்டுயிர் சோர்ந்துவீழ்ந்தேன். (2)
என்போல இன்பத் திடைநீயும் இறக்கவென்று
அன்போ டிறந்தான் முதற்கிஞ்சம னைம்பெயோன்
தன்போன் மகிழ்நனுடனே செந்தழலி னெய்திப்
பின் போயினள் மெய்ம்மனையான வப்பேதைதானும் (3)

(சம்பவ சருக்கம்)

செய்த தீமையே ஒருவனைச் சென்று வருத்தும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

207 கொன்றான்முன் சங்கமனைக் கோவலனாய் வந்தபின்பும்
குன்றியவன் மாய்ந்தான் குமரேசா—என்றும
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். (எ)

இ—ள்.

குமரேசா! சங்கமனைக் கொன்ற பரதன் கோவலனாய்ப் பிறந்த பின்பும் ஏன் அவ்வினை சென்று அவனைக்கொன்றது எனின், எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை வீயாது பின் சென்று அடும் என்க. உய்வர்—தப்புவர்.

வீயாது பின்சென்று அடும்—நீங்காமல் பின் தொடர்ந்து கொல்லும். வீயாது என்பது வீ என்னும் வினையடியாய்ப் பிறந்த எதிர்மறை வினையெச்சம்.

வீ என்பது மலர் பறவை நீக்கம் என்பனவற்றை யுணர்த்தும்.

எவ்வளவு பெரிய பகைமை யுற்றவரும் ஒருவகையில் தப்பிப் பிழைப்பர், வினைப்பகை விடாமல் பின்தொடர்ந்து கொல்லும் என்பதாம்.

403 திருக்குறட் குமரேச வெண்பா.

புறப்பகைக்குத் தப்பினாலும் தப்பலாம் வினைப்பகைக்குத் தப்பமுடியாதென்பது கருத்து.

புறப்பகைவர் எனைத் துணையராயினும் ஒருவன் அவர்க்கு அஞ்சாமல் இருக்கலாம்; வினைப்பகைக்கு அஞ்சவேண்டுமென்பது குறிப்பு.

பிறர்பால் ஒருவன் தீவினைசெய்யின் அஃது அவன்பாலே மீண்டுவந்து அவனை வருத்துமென்று மேற்கூறியதை நோக்கி அவன் இறந்துபடின் அஃது என்செய்யும் எனின், சென்றவிடமெல்லாம் பின்தொடர்ந்து சென்று அஃது அவனைக்கொன்றுவிடும் என்று இதில் நன்குணர்த்தினார் என்க.

இறப்பினும், ஒருவனை வினைப்பகை விடாமல் பின்சென்று கொல்லும் என்பது இதில் கூறப்பட்டது. இவ்வுண்மை பாதன்பால் தெரியப்படும்.

கதை.

பாதன் என்பவன் கலிங்கநாட்டிலிருந்த சிங்கபுரம் என்னும் நகரத்தில் பிறந்தவன். அதிலிருந்து அரசுபுரிந்த வசு என்பவனுக்கு நண்பன். அக்காலத்தில் கபிலபுரத்தில் குமரன் எனப்பெயரிய அரசன் ஒருவன் இருந்தான். அவ்வசுவேந்தனுக்கும் இக் குமரமன்னனுக்கும் கொடும் பகை மூண்டது. ஒருவரையொருவர் வெல்லக்கருதி யிவ்விருவரும் இருந்தார். இருந்துவருங்கால் கபி

லபுரத்திலிருந்து வணிகனொருவன் சிங்கபுரத்துக்கு வந்தான். அவன் பெயர் சங்கமன். பண்டம்பலகொண்டு அங்குப் பணிவுடன் விற்றான். அவனைப் பரதன் கண்டான். கேடு சூழ்ந்தான். அரசன்பால் சென்றான். குமரன் என்னும் நமது பகைவனிடமிருந்து சங்கமன் என்றொரு ஒற்றன் இங்கு வந்துள்ளான். விலைசெய்யும் வணிகன்போல் வேவு பார்க்கின்றான். அவனைக் கொலைசெய்ய வேண்டுமென்று பரதன் கொடுமொழி கூறினான். வசுவும் இசைந்தான். ஒன்றும் அறியாச் சங்கமனைக் கொன்று தொலைத்தார்.



அவன் மனைவியாகிய நீலி யென்பவள் தலைவிரி கோலமாய் அங்கு வந்தாள். தன் தலைவனுக்குக் கொலைவினை சூழ்ந்தோன் அவ்வகையே கொலையுண்டு தொலைக, அவன்மனைவியும் தன்போல் துயருழந்து கெடுக என்று சபித்தாள். தலைவன் உடலைத் தழுவித் தன்னுயிர் நீத்தாள். அவ்வகையே பரதன் கோவலனாய்ப்பிறந்து மதுரையில் கொலையுண்டிறந்தான். வினைப்பகை பின்சென்று கொல்லுமென்பது இவன்பால் விளங்கி நின்றது.

(இதன் விரிவு மணிமேகலையில் காணப்படும்)

ஒருவன் புக்குழியெல்லாம் தீவினை புகுந்து கொல்லும் என்பது இதனால் கூறப்பட்டது.

208 பண்டெயர்த்த காளமுனி பாண்டவர்பால் செய்தீதால்
கொண்டானேன் கேடு குமரேசா — மண்டுகின்ற
தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று. (அ)

இ—ள்.

குமரேசா! பாண்டவரிடம் காளமுனி செய்த தீமையானது அவனை ஏன்வந்து கெடுத்ததுவனின், தீயவைசெய்தார் கெடுதல் நிழல் தன்னை வீயாது அடியுறைந்தற்று என்க.

நிழல் தன்னை வீயாது—ஒருவன் நிழல் அவனை விடாது தொடர்ந்து வந்து. உறைந்து அற்று—தங்கியதுபோலும்.

தீவினைகளைச்செய்தவர் கெடுவது எதுபோல்வது எனின், ஒருவன் நிழல் அவனை விடாது தொடர்ந்துவந்து அவன் அடியின்கண் அடங்குவது போலும் என்பதாம்.

நிழல் உடலைத் தொடர்தல்போல் வினை உயிரைத்தொடரும் என்பது குறிப்பு.

410 21-ம் அதிகாரம் தீவினையச்சம்.

ஒருவன் நிழல் வெயிலொளியால் நெடுந்தூரம் நீண்டிருப்பினும் அவன சென்றவிடமெல்லாம் தொடர்ந்து சென்று முடிவில் அவனடியின்கண் மீண தங்கிநிற்கும்; அதுபோல் ஒருவன் வினை, காலபேதத்தால் மிக அகன்றிருப்பினும் அவன் புக்குழியெல்லாம் புகுந்து இறுதியில் தப்பாமல் அவனைப்பற்றிக் கொல்லும் என்பதாம். அருவமான வினை உயிரைபபற்றி வருத்தும் உண்மையை உணர்த்துதற்கு உருவமான நிழலை ஒப்புக்காட்டிய நுண்மை எண்ணரத்தக்கது.

வினைப்பகை வீயாது பின் சென்று அடுமென்று மேற்கூறியதை விளக்குதற்கு இவ்வுவமை கூறியதென்க.

ஒருவன் செய்வினையானது அவன் மெய் நிழல்போல் விடாமல் தொடர்ந்து வந்து அவனையே பற்றிக்கொல்லும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது காளமுனிபால் காணப்படும்.

## கதை.

காலமுனி யென்பவர் துக்கினபுரியை யடுத்திருந்த ஓர் வனத்திலிருந்தவர். திருதராட்டிரனுக்குச் சிறந்த நண்பினர். தவம் புரிந்திருந்தும் அவம்பல புரிந்தவர். இவரை ஒரு நாள் துரியோதனன் அழைத்தான். வனம் புகுந்திருந்த பாண்டவர் ஈண்டு மீண்டு வந்துவிடாமல் அங்கு வைத்தே கொல்லவேண்டுமென்று இவரை மெல்ல வேண்டினன். முதலில் மறுத்தார். பின் இசைந்தார். எழுந்து சென்றார். தனியிடம் ஒன்றில் தங்கினார். மாரண வேள்வி ஒன்று செய்தார். ஆரணமுறைப்படி அதிலிருந்து ஒரு பூதம் எழுந்தது. ஐவரைக் கொல்லுவா என்று இவர் அதன்பால் உரைத்தார். வெகுண்டு பூதம் விரைந்து சென்றது. மாலின் அருளால் நால்வர் மாண்டார். தருமர் ஒருவரே அங்குத் தனித்திருந்தார். பூதம் கண்டது. செத்தவர்மீதோ நம்மைச்செய் தவன் எவனோ. நன்று நன்றென நகைத்து வெறுத்தது. சினந்து மீண்டது. விரைந்து புகுந்தது. அவன் மெய்யையே சிதைத்து



ஒய்வென மறைந்தது. சித்திசெய்த முனிவன் செத்துத்தீர்ந் தான். ஒருவன் செய்த தீவினை அவன் மெய்நிழல்போல் மீண்டு வந்து அவனையேபற்றுமென்பதை உலகம் இவன்பாலுணர்ந்தது.

(இதன் விரிவைப் பாரதத்தில் காண்க.)

செய்தவனையே தீவினை சேர்ந்து கொல்லுமென்பது இதனால் கூறப்பட்டது.

209 மானாகித் தீவினைசெய் மாரீசன் என்மாய்ந்தான்
கோனால் வருந்திக் குமரேசா — ஆனபல்
தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்

டன்—அரிதாகிய கேட்டையுடையவன். அதனால், இங்கே இன்மையைத் துய்ந்து நின்றது. தீயவழிப் போகாதவன் என்க.

பொறிசெறிக்கட்டு ஏய்ந்த தீவினைகளைச் செய்யாதவனைக் கேடில்லாதவன் என்று அறிகவென்பதாம்.

தீவினை செய்யாத ஒருவனை அடைதற்குரிய கேடியாதொன்றுமில்லையென்பது கருத்து.

நெறி விலகித் தீவினைகளைச் செய்யும் அறிவிலிகளையே எல்லாக் கேடுகளும் எளிதிலடையுமென்பது குறிப்பு.

நெறியே சென்று நல்வினையையும் அறிவுடையாரைக் கேடுகளடையா என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பிரகலாதன்பால் உணரப்படும்.

கதை.

இரணியன் புதல்வனாகிய பிரகலாதன் நெறி நின்றொழுகிய அறிவினையுடையவன். அவன் இரணியாய நமவென்று சொல்லவில்லையென்று வெகுண்டு அரசனேவியபடியே அசுரர் பலர் அவனுக்கு அல்லல் செய்தார். கொல்லத்துணிந்து எல்லாம்புரிந்தார்; பாம்புகளைவிடுத்து தீண்டும்படி செய்தார். மலைமேலேற்றித் தலைகீழுருட்டினார். நஞ்சையுள்ளே நிறைய ஊட்டினார். தண்டங்கள் கொண்டு தலைமேலடித்தார். வேலால் எறிந்தார். வாளால் வீசினார். தீயைவளர்த்துச் சேரத்தள்ளினார். கல்லுடன் கட்டிக் கடலில் இட்டார். அவ்வெல்லாவற்றிலும் பிரகலாதன் யாதொரு கேடும் இல்லாதிருந்தான். பெருமானருளால் பெருமகிழ்வுற்



றான். மருங்கோடித் தீவினை செய்யாதவனுக்கு உறுங்கேடு ஒன்றுமில்லை என்பதை உலகம் இவன்பாலுணர்ந்தது.

(இதன் விரிவை இரணியன் கதையிலுணர்க)

தீவினை செய்யாதவனுக்குக் கேடொன்றுமில்லை யென்பது

இதனைக் கூறியபடிக.

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.)

தீவினையை, செய்தற்குத் தீயார் அஞ்சார். தூயர் அஞ்சுவர். தீவினை தீயினுங்கொடியது. அதனைச் செய்யாதிருத்தலே தலையாய அறிவு. பிறனைக்கெடச் சூழ்வோன் பெருங்கேடடைவான். வறுமையுறினும் தீமை செய்யலாகாது. தீவினை செய்வான் நோவினை யெய்தான். வினைப்பகை பின் சென்றுவிடாமல் கொல்லும். அது நிழலைத் தொடர்ந்து அழலென வருத்தும். தனக்கு இன்பம் விரும்பினவன் பிறர்க்குத் துன்பம்புரியலாகாது. தீவினை செய்யாதவனுக்குக் கேடொன்றுமில்லை.

உக-வது தீவினையச்சம் முற்றிற்று.

## உஉ-ம் அதிகாரம் ஒப்புரவறிதல்.

அஃதாவது உலக இயல்புக்கும் தன் இயல்புக்கும் ஒப்புறும் நலங்களை உய்த்துணர்ந்து உதவிசெய்தல். உரவு—நன்மை. மேல் தீவினையைச் செய்யற்க என்றார். இதில் நல்வினையைச் செய்க என்கின்றார். ஆகலின் அதன்பின் இது வைக்கப்பட்டது.

211. வேறொன்றும் வேண்டாமல் மெய்யுதவி செய்தானென்
கூறுதேன் சென்றான் குமரேசா—வேறாகக்
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. 

குமரேசா! நள்ளி என்பவன் வேறொன்றையும் வேண்டாமல் பேருதவி செய்து தன் பெயரையுங் கூறாமல் ஏன் சென்றான் எனின், உலகு மாரிமாட்டு என் ஆற்றும் அதுபோல் கடப்பாடும் கைம்மாறு வேண்டா என்க.

உலகம் என்றது உயிர்களை. கடப்பாடு—ஒப்புரவு. அறிவுடையவரால் கடனாகக் கருதிச் செய்யப்படுவது என்க.

கைம்மாறு—பதிலுதவி. பிறர்க்குதவியது தன் கைக்குமாறாவது என்னும் ஏதுவான் வந்தது.

உலகம் மழையினிடத்து என்ன கைம்மாறு செய்யாநின்றது அதுபோல ஒப்புரவுகளும் கைம்மாறு நோக்கா என்பதாம்.

தமக்கு நீர் உதவுகின்ற மேகங்கட்கு உயிர்கள் யாதோர் உதவியும் செய்யாவிடினும் அவை இடையறாது உதவிவருதல் போல் உபகாரிகளும் பயன் கருதாமல் யாவர்க்கும் யாண்டும் உதவிசெய்வர் என்பதாம்.

மேகம்போல் நல்லோர் அருள் கூர்ந்து எல்லார்க்கும் உதவி செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது நள்ளியால் உணரப்படும்.

## கதை.

நள்ளி என்பவன் கடைஎழு வள்ளல்களுள் ஒருவன். யாவர்மாட்டும் பேரருளுடையவன். இல்லையென்னாமல் ஈந்துமகிழ்ந்தவன். மலைவளம் வாய்ந்த ஒரு சிறு நிலப்பகுதியை ஆண்ட குறுநிலமன்னன். தமனியம் என்னும் நகரிலிருந்து இவன் அரசுபுரிந்தான். பெற்றோர் பிள்ளைகளைப் போற்றுவதுபோல் இவன் எல்

லாரையும் பேணினன். இவனது உயர் குணங்களைக்கண்ட அனைவரும் இவன்பாற் பெருநண்பு கொண்டார். நள்ளியென்னும் பெயர்க்கு நற்பொருள் காட்டினன். பரணர் என்னும் புலவரொ



ருவர் பல இடங்களுக்குஞ்சென்று வருந்தி இவனது நகரையடுத்திருந்த ஒரு காட்டில்வந்து களைத்திருந்தார். அங்கு இவன் இயல்பாகச் சென்றான். அவரைக்கண்டான். வறுமையால் வாடிய அவரது மேனியை நோக்கினன். பெரிதும் இரங்கினன். சிறந்த உணவைக் கொணர்ந்து உடனே ஊட்டினன். தன் கழுத்தில் அணிந்த சிறந்த முத்தாரத்தையும் கையில் விளங்கிய உயர்ந்த கடகத்தையும் அவருக்கு முறையே பூட்டினன். ஒரு பெருந் தொகைப் பொருளை அவர் இருந்த வூருக்கனுப்பினன். அவரை பெருஞ்செல்வனாக்கித் தன் பெயர் ஊர் ஒன்றுஞ் சொல்லாமல் நீங்கினன். புலவர் பின் தெரிந்தார். கைமாறு கருதாமல் கனிந்துதவிய அவனது வள்ளற்குணத்தை மனங்குழைந்து வாழ்த்தினர். பயிருக்கு மழைபோல் தன்னுயிருக்கு அவன் புரிந்தவுதவியை உன்னியுன்னி மகிழ்ந்தார். கைமாறு கருதாமல் மேலோர் உதவுவர் என்பதை நள்ளியால் உணர்ந்து அவர் நன்றி புரிந்தார்.

(இஃது அகநானூற்றில் அறியப்படும்)

பிறர்க்குதவி செய்தலே பெரியோர் கடமை என்பது இதனால் கூறப்பட்டது.

212. ஈட்டுவைத்த செல்வமெல்லாம் எப்பார்க்குந் தக்கார்க்
கூட்டினனே னன் பாரி குமரேசா—நாட்டமுடன் [கும்
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (௨)

குமரேசா! ஈட்டிவைத்த செல்வமெல்லாம் ஏற்பார்க்கும் தக்கார்க்கும் என் பாரி உதவினன் எனின், தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டேயாம் என்க. தாள்—முயற்சி. வேளாண்மை—உபகாரம்,

தாளாற்றி—முயற்சியைச் செய்து.

21-ம் அதிகாரம் ஒப்புரவறிதல். 417

தந்த பொருள் எல்லாம்—தொகுத்த பொருள்முழுதும்.

முயற்சியைச் செய்து தொகுத்த பொருள்முழுதும் தகுதியுடையவர்க்காயின் பிறர்க்கு உதவும் பொருட்டேயாம் என்பதாம். ஆயின் என்பது வருவிக்கப்பட்டது.

தகவிலர் தாமே உண்டு செருக்கி களிப்பர். தக்கார் பிறர்க்குதவி செய்து இன்புறுவர் என்க.

ஒருவன் முயன்று தொகுத்த பொருள் முழுதும் தகுதியுடையார்க்கு உதவி செய்யும்பொருட்டேயாம் எனவும் இது பொருள்படும்.

தக்கோர் தம்பொருள் முழுதையும் பிறர்க்குதவுவர் என்பது இதிலுணர்த்தப்பட்டது. இது பாரியால் உணரப் படும்.

## கதை.

பாரி என்பவன் வேளிர் குலத் தலைவன். மாரிபோல் வாரி வாரி வரையாது கொடுத்த வள்ளல். முந்நூறு ஊர்களையுடைய ஒரு சிறு நிலப் பகுதியை உரிமையாகவுடையவன். இம்மன்னன் பறம்பு என்னும் மலைச்சாரலில் விளங்கியிருக்க அருளகமென்னும் திருநகரிலிருந்து அரசு புரிந்தான். பிறவுயிர்கள் மாட்டும் பே

ரருளுடையவன். மலர்தலை யுலகினுக்கு இவன் உயிரென இருந்தான். தான் பெற்ற பொருள் முழுதும் பிறருக்கே உதவினான். இல்லையென்னுமல் ஈந்துவந்த வள்ளற் குணத்தால் இவன் புகழ் உலகெங்கும் பரந்தது. அதனால் சேரசோழ பாண்டியர் என்னும் முடியுடை வேந்தராகிய மூவரும் இவன்மேல் பொறாமைகொண்டார். வெல்லக் கருதினர். படையுடன் திரண்டு இவன் நகர்மேல் வந்தார். அரண்வலியால் பெருஞ் சிறப்புடைய அதனை முற்றுகை செய்தார். பாரியும் அஞ்சா நெஞ்சுடன் அவரோடெதிர்த்தான். வெற்றியை ஒருவரும் முற்றவுங் கண்டிலர். பருவங்கள் பல கழிந்தன. அக்காலத்தில் பாரியின் உயிர்த்துணைவராயிருந்த கபிலர் என்னும் புலவர் பெருமான் வெளியே வந்து அம்மூவரையும் நோக்கினர். அரசீர், "எமது மன்னன் தோண்



டு பொருளையும் ஆண்ட ஊர்களையும் இரவலர்க்குக் கொடுத்து விட்டு இதுபொழுது தனியே யிருக்கிறான். பறம்பும் இருக்கிறது. நானும் இருக்கின்றேன். ஆயினும் நீவிர் அவனைப் பொருது வெல்ல முடியாது. எம்மைக் கைக்கொள்ள விரும்பின் நீவிரும் இரவலராய் வரின் விரைவிற் பெறலாம். எம் இறைவன் மாறாத தருளுவன். என்று புகன்றார்.

கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே. (கபிலர்)

இதனால் பாரியினது பெரு வீரமும் வள்ளற் குணமும் தா

ளாற்பிக்கதைதை வேளாண்மை செய்தவிகப்ப இனிதாமெனும்.
மேலோர் பெற்றவையெல்லாம் பிறர்க்கே உதவுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

213. தெள்ளுபுகழ் ஆபுத் திரனொப் புரவொன்றே
கொள்ளுமகிழ் நானேன குமரேசா—உள்ளாத
புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற. (h)

இ—ள்.

குமரேசா! ஆபுத்திரன் ஒப்புரவு ஒன்றே நன்று என்று ஏன் கொண்டான் எனின், புத்தேள் உலகத்தும் ஈண்டும் ஒப்புரவின் நல்லபிற பெறல் அரிது என்க.

புத்தேள் உலகம்—தேவருலகம்.

ஒப்புரவின் நல்லபிற—ஒப்புரவுபோல நல்ல செயல்கள்பிற.

22-ம் அதிகாரம் ஒப்புரவறிதல். 410

வானுலகத்தும் இவ்வுலகத்தும் ஒப்புரவுபோல நல்ல செயல்கள்பிற பெறுதல் அரிதென்பதாம்.

ஒப்புரவுக்கு ஒப்பான நன்மை யாண்டும் இல்லை என்றபடி; ஒப்பில்லையெனவே உயர்வும் இல்லையாயிற்று.

இருவேறுலகினும் பெறுதற்கரிய ஒப்புரவைத் தமக்கு உரிமையாகப் பேணுவரே பெரியோர் என்பது கருத்து.

பிறர்க்கு உதவி செய்தல் என்னும் பெருநலமுடையவர் அதனை விடுதலை வேறு எதனையும் பெறுவதற்கு விரும்பார் என்பது குறிப்பு. இவ்வுண்மை ஆபுத்திரன்பால் அறியப்படும்.

கதை.

214. என்னேரம் வேங்கடத்தான் இன்பமுற மூலனவனென்
றொன்னலர் இறந்தான் குமரேசா—உன்னிடுமேல்
ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (௪)

இ—ள்

குமரேசா! வேங்கடன் என்பவன் சிறும் இன்பமும் சேரப்பெற்றான், அவனுடைய பிறந்தவனை எனப் பழிக்கப்பட்டான் எனின், ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும் என்க.

ஒத்தது என்றது ஒப்புரவை. உலகம் நல்லது என்று ஒப்பியதை என்பார் ஒத்தது என்றார்.

மற்றையான்—உலக இயற்கையைப் பற்றி உதவி செய்யாதவன்.

உலகத்தோடு ஒட்ட ஒழுகி உயிர்கள் இன்புறத்தக்க விரதங்களை யுணர்ந்து தம்மால் இயன்றவரை பிறருக்கு உதவி செய்து வாழ்பவனே உயிர் வாழ்பவனாவான், அல்லாதவன் செத்தவனோடு ஒப்பாவான் என்பதாம்.

உயிர்கள் இன்புற உதவி செய்யாதவனைச் செத்த பிணத்தோடு ஒப்பிடவேண்டுமென்பது கருத்து.

பிறர்க்குதவி செய்தலே ஒருவன் பிறவிக்குப் பயனாதலால் உபகாரியை உயிர் வாழ்வான் என்றும் உபகாரமில்லாதவன் உருவுடன் இருப்பினும் உயிரின் குணமில்லையாதலால் அவனை இறந்தவன் எனப்பட ஏற்கவேண்டும் என்றபடி.

ஒத்ததையறிபவனே உயிர் வாழ்பவனுவன் அல்லாதவன் செத்தவனே என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருவேங்கடனிடமும் அவன் முன்னேனிடமும் முறையே உணரப்படும்.

## கதை.

திருவேங்கடன் என்பவன் வட நாட்டிலே சேரி என்னும் ஊரிலே விளங்கியிருந்த ஒரு பெருஞ் செல்வன். யாவரிடமும் பேரன்புடையவன். இனிய சொல்லினன். சொல்லாலும் செயலாலும் எல்லார்க்கும் இதமே செய்பவன். ஒத்ததறிந்தொழுகும் பேருபகாரியாகிய இவனுக்கு மூத்தவனுய்க் கண்ணூக்கினியான் எனும் பெயரினையுடைய அண்ணன் ஒருவன் இருந்தான். அவன் வன்கண்ணன் ஒருவர்க்கும் ஒன்றும் உதவாதவன். இரட்டையர் என்னும் புலவர் இருவர் அவன் சமீபமால் வந்தார். தம்பி மகிழ்ந்து புலவர்க்கு வேண்டியவற்றை விரும்பித் தந்தான். அவன் தமைத்தான். உடனே தம்பியைப் புகழ்ந்தும் தமையனை யிகழ்ந்தும் புலவரிருவரும் வினவிடையாகப் பாவொன்று பாடினூர். இளையவனுயிருந்தும் ஒப்புரவொழுகியதால் திருவேங்கடனை உயர்த்தினபுற்றுன். முன்னவனுயிருந்தும் உதவியின்மையால் கண்ணூக்கினியான் கருதத்தக்க இனியாதவனுய்ப் பழிபுற்றிறந்தான். ஒத்ததறிந்தான் உயர்ந்தான். அறியாதான் செத்தான் என்பதை உலகம் முறையே இவர்பால் ஓர்ந்தது.

தேன்பொழிந்த வாயான் திருவேங் கடத்துடனே
ஏன் பிறந்தான் கண்ணூக் கினியானே—வான்சிறந்த
சீதேவி யாருடனே செய்யதிருப் பாற்கடலில்
மூதேவி யேன்பிறந்தாள் முன். (இரட்டையர்)

ஒப்புரவறியாதவன் பிணத்தோடொப்பன் என்பது இதனுல் உணர்த்தப்பட்டது.

215. வள்ளலிரா மன்றிராவால் வையமெல்லாம் பேருவகை

கொள்ளினற தென்னை குமரேசா—அவனிந
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் திரு. (உ)



-ள்

குமரேசா! இராமன் திருவெய்த உலகமெல்லாம் ஏன் பெருவகை யெய்தியது எனின், உலகு அவாவும் பேரறிவாளன் திரு ஊருணி நீர் நிறைந்ததையொக்கும் என்க.

ஊருணி—நாம் இஃது எதுர் பெயர். ஊரில் வாழ்வார் நீர் உண்ணும் இடம் என்பதாம். நிறைதல் என்னும் நீரின் தொழில் அது நிலைத்து நிற்கும் குளத்தின்மேல் நின்றது.

உலகு அவாம்—உலக நடையை விரும்பிச் செய்யும். இதில் அவாவும் என்னும் எச்சம் அவாம் என ஈற்றுயிர்மெய் கெட்டு நின்றது.

உயிர்கள் இன்புறத்தக்க விதங்களை யினிதுணர்ந்து உதவி செய்யும் பேரறிவுடையவனது செல்வம் ஊருணியில நீர் நிறைந்ததையொக்கும் என்பதாம்.

ஓர் ஊருணியில் நிறைந்த நீர் அவ்வூரிலுள்ள எல்லாரானும் உண்ணப்பட்டு அவரனைவர்க்கும் ஒப்பின்றி தப்பாமல் இன்பம் விளைக்கல் போல் ஒபகாரியும் உபகாரியினது செல்வம் உலகமெல்லாம் உவந்து துய்க்குபடி அமைந்து நிற்கும் என்பதாம்.

உலகமுழுவதுக்கும் பயன்படுகின்ற உபகாரியினது செல்வத்தை ஓர் ஊர்க்கு மாத்திரம் பயன்படும் குளத்து நீரோடு ஒப்புமை கூறியது அதனது ஒண்மையும் தண்மையும் எண்மையும் கருதி யென்க.

ஊருணி நீரும் பேரறிவாளனது திருவும் தடையொன்றின்றி கெடிது நின்று எல்லார்க்கும் இன்பந்தரும் என்பது கருத்து.

உபகாரியொருவன் செல்வமெய்தினால் உலகமெல்லாம் உவ

தை செய்துமென்பது குறிப்பு. இவ்வுண்மை இராமன்பால் காணப்படும்.

## கதை.

தசரத மன்னன் தனது தலைமைப் புதல்வனான இராமனுக்குத் திருமுடி சூட்டக் கருதித் தன் கருத்தை அமைச்சர்க



ளுக்கு அறிவித்து நாடெங்கும் அறியும்படி செய்தான். இராமன் அரசு திருவை யெய்த வருகின்றான் என்பதைக் கேட்டவுடனே யெல்லாரும் அளவி லுவகை யெய்தி ஆர்வமீக் கூர்ந்தனர். ஒவ்வொருவரும் தத்தம் உயிர்மேல் அம் மணிமகுடத்தை வைத்ததாகக் கருதிச் சிந்தை களித்தார். ஓர் ஊருணி நீர் நிறைவதைக் கண்டு அவ்வூரிலுள்ளோர் உள மகிழ்வதுபோல இராமன் திருவெய்துகின்றான் என்பதையறிந்தவுடனே எல்லா உயிர்களும் ஒருங்கே இன்புற்றன. ஊருணி நீர்போல் பேரறிவாளன் திரு எல்லார்க்கும் பொது நின்று இனிது பயவுமென்பதை உலகம் இராமன்பால் உணர்ந்தது, இதன் விரிவை இராமாயணத்திற் காண்க.

இறைவன் சொல்லெனும் இன்னறவு அருந்தினர் யாரும்
முறையி னின்றிலர் முகிழ்த்தெழு களியிடை மூழ்கி
நிறையு நெஞ்சுடை யுவகைபோய் மயிர்வழி நிமிர
உறையும் விண்ணகம் உடலொடு மெய்தினர் ஒத்தார். (1)
ஒத்த சிந்தையர் உவகையர் ஒருவர்க்கொருவர்
தத்தமக் குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தர்
முத்த வெண்குடை மன்னனை முறைமுறை தொழுதார்
அத்த நன்றென அன்பினோ டறிவிப்ப தானார், (2)

ஊருணி நிறையவும் உதவு மாடியர்
பார்கெழு பழுமரம் பழுத்தற் றாகவும்
கார்மழை பொழியவும் கழனி பாய்நதி

வார்புனல் பெருகவும் மறுக்ரின் மூர்சள்பார்.

(மந்திரப்பட லம்.) (3)

பேரறிவாளன் செல்வம் ஊருணி நீர்போல் எல்லார்க்கும் இனிது பயன் தரும் என்பது இதனால் கூறப்பட்டது

---

216. கோட்டி முதலியார் கொண்டசெல்வம் எல்லார்க்கும்
கூட்டியதேன் இன்பம் குமரேசா—நாட்டில்
பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின். (ரு)

ஞ்ஞ திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா! கோட்டி முதலியார் கொண்ட செல்வம் எல்லாருக்கும் ஏன் இன்பங் கொடுத்தது எனின், செல்வம் நயனுடையான் கண்ணே படின் அது, பயன்மரம் ஊருள்ளே பழுத்ததை யொக்கும் என்க.

ஊர் உள் என்பது உள்ளூர் என மாறி நின்றது.

பயன் மரம்—பயனுள்ள மரம்: அஃதாவது இனிய கனிகளை யுதவும் மா பலா முதலிய விழுமிய மரங்கள் என்க.

செல்வம் நயன் உடையான்கண் படின்—செல்வம் உபகாரியினிடத்துப் பொருந்துமாயின்.

உலக நடையையறிந்து உதவி செய்யும் உபகாரியிடத்துச் செல்வந் தங்கி நிற்குமாயின் அது பயனுள்ள மரம் ஊர் நடுவே பழுத்து நிற்பது போலும் என்பதாம்.

ஊருள் நிற்கும கனிமரம் அங்குள்ளார் அனைவர்க்கும் எளிதில் இனிமை தருதல் போல் நயனுடையான் செல்வமும் எல்லார்க்கும் நன்கு பயன் கொடுக்குமென்பது கருத்து.

நல்லோர் செல்வம் எல்லார்க்கும் இன்பந் தரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோட்டி முதலியார்பால்

காணப்படும்.

## கதை.

கோட்டி முதலியார் என்பவர் தொண்டை நாட்டிலுள்ள மாகறல் என்னும் ஊரிலே பிறந்தவர். நிறைந்த செல்வமும் சிறந்த ஈகையும் ஒருங்கு வாய்ந்தவர். வறியர் வந்து வாய் திறவாமுன் அவர் குறிப்பறிந்து விரைந்து கொடுத்த பெருந் தகையாளர். இல்லையென்றிரத்தல் இளிவென்று கருதிச் சொல்ல நாணுகின்ற எல்லார்க்கும் இனிதுதவ விரும்பித் தமது வீட்டின் முன்னே வெண் மணல் பரப்பி வேண்டுவார்க்கு வேண்டியதை யதில் விளங்க எழுதச்செய்து அதனைக் கண்டு தெளிந்து களிப்புடன் உதவினர். உலக நடையையறிந்து உதவி செய்தல் என்



னும் புண்ணியத்தைத் தினந்தோறும் மனமுவந்து செய்து வந்தமையால் புண்ணிய கோட்டி முதலியார் என்று அனைவரும் இவரைப் புகழ்ந்து போற்றினர்.

நீணிலத்திலுறும் ஏழைமாந்தர்! நீவிர்வேண்டுவன இன்புறீஇ
நேரில்கேண்மினவை தருவன்யானலதும் நினைவிலுன்னுமவை நவில்கிலா
நாவிலென்னுடைய மனைமுன்வாயில்தனில் நன்மணல்மிகுதி கொட்டிய
நாம்பரப்பியும் இருக்கிறேனதனில் நாடிவந்ததனை யெழுதுமின்
காணிலக்குடனே யருள்வனென்ன அவன் கட்டளைப்படியே திட்டமாய்க்
கையினாலெழுத உவகையோடுபொருள் கண்டளித்த பிரபு யாரெனில்
பூணிலக்குநதி வாகுலத்தில்வரு புண்ணியன்மதிகொள் கண்ணியன்
புலவர்போற்றுமா கறலின்மேவுமெழில் புண்யகோடியெனும்

குமரேசா! இராமயன்னைச் பஞ்சமுற்ற காலத்தும் தன் பால் வந்து இரந்தவனுக்குப் பரிந்து கொடுப்பம் என்று என் துணிந்து பாழுந்தான் எனின், கடன் அறி காட்சியவர் இடவில் பருவத்திலும் ஒப்புரவு செய்தற்கு ஒல்கார் என்க.

இடன்—விரிவு. அஃது இங்கே செல்வப் பெருக்கத்தைக் குறித்து நின்றது.

இடன் இல் பருவத்தும்—செல்வம் இல்லாத காலத்தும்.

அறிவுடையார் செல்வஞ் சுருங்கிய காலத்தும் ஒப்புரவு செய்தற்கு உளந்தளரார் என்பதாம்.

எது ஒழிந்தாலும் அறிவோர் ஒப்புரவு செய்தலை ஒழியார் என்பது கருத்து.

அறிவுடையான் திரு எய்தினால் அஃது ஊருணி நீர்போல வும் ஊர்நடுவே நிற்கும் கனிமரம் போலவும், எல்லா உறுப்புகளும் பயன்படுகின்ற மருந்துமரம்போலவும் எல்லார்க்கும் என்றில் பயன் படுமென்று மேல் மூன்றிலும் முறையே கூறினர். இதில் அத் திருச் சுருங்கினும் அவர் ஒப்புரவு செய்வதில் சுருங்கார் என்றார்.

பிறர்க்கு உதவுதலையே தமக்குக் கடமையாகக் கருதிப் பே றும் பேரறிவுடையார் வறுமையுற்ற காலத்தும் தாம் செய்யத் தக்க கனியைச் செய்தே விடுவர் என்பது கருத்து இஃது இராகு மன்னால் உணரப்படும்,



## கதை.

இராகு என்பவன் சூரியகுலத்தில் தோன்றி விளங்கிய வீரிய வேந்தன். சிறிய குணங்களெல்லாம் சேரப்பெற்றவன். திர்க்க

பாகு என்னும் அரசர்பெருமானது அருமைத்திருமகன். அறிவு, அருள் ஆண்மை அழகு அமைதி வீரம் செம்மை சீலம் முதலிய எல்லா நலன்களும் இயல்பாகவே இவன்பால் வாய்த்திருந்தன. குலதிலகனாய் விளங்கியிருந்தமையால் இவன் வழித்தோன்றலாகிய இராமமூர்த்தியும் இராகவன் எனப் பெற்றார். இராகவன்—இரகுமாபில் உதித்தவன். இவனது கீர்த்தி புத்தேளுலகத்தும் புகுந்துலவியது. மகாகவியாகிய காளிதாசர் இவனது கீர்த்தியையும், மரபையும் வடமொழியில் இனிமையாக விளக்கியுள்ளார். அதனால் இரகு வம்சம் என்னும் பெயரால் வழங்கிவருகின்றது. இப்பேரறிவாளன் தான்பெற்ற செல்வமெல்லாம் பிறர்க்கே உதவி இறுதியில் வறுமையை யெய்தினன். பொற்கலத்தில் பாலடிசில் உண்ட இப்புண்ணிய வேந்தன் மட்கலங்களையே மனையில்வைத்து வழங்கிவாழ்ந்தான். அவ்வளவு வறியகாலத்தில் கவசர் என்னும் வேதியன் ஒருவன் இவனை நாடிவந்தான். வந்தவனை உபசரித்துக் கால்கழுவும்படி மட்கலத்தில் நீரைமொண்டு கொடுத்தான். அரசன் வறிய நிலையை அந்தணன் உணர்ந்தான். கவன்றான். யாதுங்கூறாமல் அகன்றான். இவன் அடுத்து வினவினன். என் குருவுக்குக் காணிக்கை தரும்பொருட்டு நின்பால் பதினாலுகோடி பொன்பெற வந்தேன் நின் நிலைமையைத் தெரிந்து பேசாது நீங்குகின்றேன் என்றான். அவனைத்தடுத்து நிறுத்திக் குபேரனோடு அமர்புரிந்தேனும் அவன் விரும்பிய பொன்னைக் கொண்டுவந்து கொடுப்பேன் என்று வில்லுடன் விண்ணோங்கி எழுந்தான். இவ்வதிபதி துணிவை அந்நிதிபதி யுணர்ந்தான். நெஞ்சுருகினான். மணியும் பொன்னும் இவன் அரண்மனையில் அணிஅணியாகக் குவியும்படி செய்தான் அதன்பின் ஈந்து மகிழ்ந்து இன்புற வாழ்ந்தான். இடன்இல் பருவத்தும் அறிவோர் ஒப்புரவிற்கு ஒல்கார் என்பதை யுலகம் இவன்பால் உணர்ந்தது.

(இதன் விரிவை இரகுவம்சத்தில் காண்க.)



வறுமையுறினும் அறிவோர் உபகரிப்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

219. குன்று இளையான் குடமாறர் செய்நீர்மை
குன்ற நொந்தார் என்னே குமரேசா—என்றும்
நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயுநீர்மை
செய்யா தமைகலா வாறு (கூ)

இ—ள்.

குமரேசா! குன்றாத இளையான்குடி மாறர் என் செய்நீர்மை குன்றியதால் நொந்தார் எனின், நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயுநீர்மை செய்யாது அமைகலா வாறு என்க.

நயனுடையான் என்றது உபகாரியை.

நல்கூர்ந்தான் ஆதல்—வறியவனாதல்.

செயும் நீர—செய்யத்தக்க கடமைகள்.

அமைகலா ஆறு—அமைதியுறாத்தன்மை; அஃதாவது மனக்கவலை.

ஒப்புரவு செய்தொழுகும் அறிவுடையானுக்கு வறுமையானது வராதெனின் தான்செய்யவேண்டியன செய்யமுடியாதபடி துக்கமுறுவதே என்பதாம்.

தான் துய்க்கப் பெறாமைக்காக உபகாரி வருந்தான். பிறர்க்கு உதவிசெய்ய இயலாமைக்கே வருந்துவன் என்பது கருத்து.

தனக்கு நுகர்தற்கு உரியன இல்லையே யென்று சிறியோர் கவலுவர், பெரியோர் பிறர்க்கு உதவ இல்லையே யென்று வருந்துவர் என்பதாம்.

வறுமையால் தாம் வருந்துவதினும் பிறர்க்கு உதவப் பெறா மைக்கே அறிவோர் பெரிதும் வருந்துவர் என்பது இதில் உணர்த்



தப்பட்டது. இவ்வுண்மை இளையான்குடி மாறநாயனாரால் உணரப்படும்.

## கதை.

இளையான்குடி மாறநாயனார் என்பவர் எல்லாவகையானும் பிறர்க்கே உதவி வறுமையுற்று உணவின்றியிருந்தார். ஒருநாள் தம்பால் வந்த பெரியவர்க்கு உதவுதற்கு ஒன்றுமில்லையே யென்று உளமிக நொந்தார். தாமும் தம் மனைவியும் உணவின்றி இருப்பதற்காக வருந்தவில்லை. வந்தவரது பசியை நீக்க இயலாமையை நினைந்தே பெரிதும் வருந்தினார். பசிநோயால் களைத்துப் படுத்திருந்த இவர் அப்பெரியவருக்கு உதவிசெய்யக் கருதினார். இருளில் எழுந்து வெளியே சென்றார். விதை முளைகளை வாரிக்கொணர்ந்தார். பக்குவஞ்செய்து பரிவுடன் நல்கினார்.

நமக்கு முன்பின் குணமில்லை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாயின் அடியின் தகவுற
அமைக்கு மாறெங்ஙனேயெனவ் வேங்கியே. (1)

உள்ளம் அன்புகொண் டூக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் தூக்குறி யின்வழிப்
புள்ளுறங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லாரிளை யான்குடி மாறனார். (பெரிய புராணம்) (2)

செய்யவேண்டிய ஒப்புரவைச் செய்யமுடியாமைக்கே நாய னார் வருந்தினார் என்பது இவற்றால் நன்கு தெளிவாம்.

பிறர்க்குதவி செய்ய முடியாதபடி யெய்துகின்ற இயல்பை யே அறிவோர் வறுமையாகக் கருதுவர் என்பது இதனால் கூறப் பட்டது.



220. வெள்ளி கெடுவா யெனவுரைத்தும் மாவலிபேன்
கொள்ளென்று தந்தான் குமரேசா—தள்ளாத
ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. (௰)

**குமரேசா!** வெள்ளி கெடுவாய் எனச் சொல்லித் தடுத் தும் மாவலியேன் கொள் என்று கொடுத்தான் எனின், ஒப்புரவு செய்தலினால் கேடு வரும் எனினும், அஃது ஒருவன் விற்றுக் கொள்ளுந் தகுதியை உடையதென்க.

விற்றுக் கோள் தக்கது உடைத்து—விலைகொடுத்து வாங்கிக் கொள்ளுந் தகுதியையுடையது.

ஒப்புரவு செய்தலினால் கேடுவருமென்று பிறர் சொல்லினும் அக்கேட்டைத்தன்னை விற்றாயினும் ஒருவன் கொள்ளவேண்டும் என்பதாம்.

தன்னை ஒப்புக்கொடுத்தேனும் அறிவோர் ஒப்புரவைச் செ ய்தற்கு ஒப்புக்கொள்வர் என்பது குறிப்பு.

பொருட்கேடு வருமென்று பிறர் கடுத்துத் தடுப்பினும் அறி வோர் தம்மைக் கொடுத்தேனும் ஒப்புரவென்னும் உயர் நலத் தைக் கொள்ள வேண்டுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இ து மாவலியால் உணரப்படும்.

## கதை.

மாவலி என்பவன் பிரகலாதன் புதல்வனான விரோசனன் என்னும் அசுரவேந்தன் திருமகன். தாய் பெயர் சயதேவி. கொடையும் வீரமும் அடையப் பெற்றவன். மீதலம் பூதலம் பாதலம் என்னும் மூவகை உலகங்களுக்குந் தலைமை பெய்தி இவன் அரசு புரிந்தான். விந்தியாவலி என்னும் தனது அருமை மனைவியோடு கூடி வாழ்ந்து நூறு புதல்வர்களைப் பெற்று எவ்வுலகத்தாரும் போற்றத்தக்க பெரும் புகழ் பெற்றான். இவனது அரசாட்சி



யையும் பிறமாட்சியையும் கண்டு இந்திரன் பொறாமைகொண்டான். இவனைப் பொருது வெல்ல முடியாதென்று தெளிந்து திருமாலிடஞ் சென்று ஒரு சூழ்ச்சியைச் செய்து இவன் பொருள் முழுதுங் கவரும்படி வேண்டினான். மாலுங் குறளாய் இவன்பால் வந்தார் மூன்று அடி மண் தா என்றார். மாற்றாது கொடுக்க மாவலி துணிந்தான். தனக்குக் குருவும் மந்திரியுமாகிய சுக்கிரன் தடுத்தான். "உன்னைக் கெடுக்கக் கருதி இவர் வந்துள்ளார் கொடுக்காதே" என்று தடுத்து அவ்வரசர்க்கு நெஞ்சறியத் தேற்றினான். என் கொடையால் எனக்குக் கேடு வரினும் அதனை நன்றென்று கொள்வேன் என்று அரசன் துணிந்து கொடுத்தான். மாலும் தமது மலரடியால் உலக முழுவதையுங் கொண்டு இவனையும் ஆட்கொண்டார். தன்னைக் கெடுத்தும் ஒப்புரவு செய்த இப்பெருந்தகையின் வள்ளற் குணத்தை உலகம் புகழ்ந்தது. தடுத்துரைத்த வெள்ளியை நோக்கி மாவலி கூறியுரைத்ததனை இதனடியில் வருகின்றன.

வறிக்கொரு வருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினைக்கிழுகோ தகைவில வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்றுப் (1)
வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ என்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால். (2)

(இராமாயணம்)

ஒப்புரவு செய்வதில் மாவலி கொண்டிருந்த திட்பம் இவற்றுன் இனிது தெளிவாம். தன்னை விற்றாவது ஒப்புரவு செய்ய வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

பெருந்தகையாளர் மேகம்போல் கைமாறு கருதாமல் ஒப்புரவு செய்வர். அவர் முயன்றீட்டிய பொருளெல்லாம் தக்கார்க்கே



உதவுவர். ஒப்புரவுபோல் சிறந்தது யாண்டுமில்லை. உலக நடையையறிந்து உதவி செய்யாதவன் பிணத்தோடொப்பவன். உபகாரி செல்வம் ஊருணி நீர்போல் எல்லார்க்கும் எளிதில் பயன்படும். அவ்வூரார் நடுவே நிற்கும் கனிமரம் போல்வதாம். அது மருந்து மரம்போல் நின்று எல்லாருடைய வறுமை நோயையும் நீக்கும். வறுமைக்காலத்தும் அறிவோர் பிறர்க்கு உதவி செய்வார். பிறர்க்கு உபகரிக்கப் பெறாமையே அறிவோர்க்கு வறுமையாம். தம்மை விற்றாயினும் அறிவோர் ஒப்புரவைச் செய்வர்.

௨௨-வது ஒப்புரவறிதல் முற்றிற்று.

## ௨௩-ம் அதிகாரம் ஈகை.

அஃதாவது இல்லையென்று இரந்தார் யாவர்க்கும் இல்லை என்னாது கொடுத்தல். பிறர்க்கு உபகரித்தலாகிய தமக்குக் கடமையாக கருதி யொப்புரவு செய்வோரும் ஒப்பமுடையார் கண்ணே இஃது ஒப்புரவின் பின் வைக்கப்பட்டது. அது புகழையும் இம்மை அறமும் புண்ணியத்தையும் பயக்குமென்க.

221. பாவனை யுயர் போகன் வறியார்க்கீகையாத்தாயில்
கொள்ளவிழையை தந்தான் குமரேசா—தள்ளும்
வறியார்க்கீவதே யீகை மற்றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. (௧)

குமரேசா! போகன் என்பவன் வறியவர்க்கே கொடுத்து வன்று நாயிறுக்குர் போர்வையைக் கொடுத்தான் எனின், வறியவர்க்கு ஒன்றை ஈவதே ஈகை, மற்ற எல்லாம் குறியெதிர்ப்பை நீர்மை உடையது என்க.



குறியெதிர்ப்பை—கைம்மாற்று: அஃதாவது அளவுகுறித்து இகழ்வில் கொடுத்து அவ்வாறே எதிரில் கொள்வது என்க.

எதிர்ப்பை—எதிர்பெறும்படி இடுவது என்னும் ஏதுவான் வந்தது. பொருளுடையார் பதிலுதவி செய்யும் இயல்புடையார் முதலாயினோர்க்குக் கொடுப்பன எல்லாம் ஒருவகைக் கடன்கொடுத்ததாகக் கருதப்படும் என்பார் மற்று எல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து என்றார்.

எதிர் உதவி செய்யமுடியாத வறியவர்க்குக் கொடுப்பதே கொடை. பிற எல்லாம் கைமாற்றாகக் கொடுக்கும் இயல்பினையுடையது என்பதாம்.

இல்லார்க்கு ஈவதே ஈகை என்பது கருத்து.

ஒரு பொருளும் இல்லாதவர்க்குத் தமது உறுபொருளை உதவுவோரே உயர்ந்த கொடையாளர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பேகன்பால் உணரப்படும்.

## கதை.

பேகன் என்பவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவன். மலைநாட்டுக்குத் தலைவன். கண்ணகியென்னும் பெயரினையுடைய ஒரு பெண்மணியை மணந்து களிப்புடன் வாழ்ந்தவன். தாழ்ந்தாரை யுயர்த்துந் தண்ணளியுடையவன். தனது அரிய பொருளையெல்லாம் வறியவர்க்கே கொடுத்தவன். புறத்தே தகுந்த பொருளும் அகத்தே மிகுந்த அருளும் அமையப்பெற்றவன். வறுமைநோய் நீக்கும் அருமருந்தென இவனைப் புலவர் பலரும் போற்றி மகிழ்ந்தார். ஒருநாள் இவனது நகரையடுத்திருந்த குளிர்மலர்ச் சோலையிற் சென்று மாலையில் உலாவினன். அங்கே மயிலொன்று தனது அழகிய கலாபத்தை விரித்து விழைவுடன் ஆடியது. உடல் பனித்து மயிர்சிலிர்த்து ஆடியபின் கூவி நின்றது. அதனைக் கேட்டு உடனே இவன் அருள்மீக்கொண்டான். குளிரால் நடுங்கி அது வருந்திக் கூவியதாகக் கருதினன். பொற்சரிகையிட்ட





தனது விலையுயர்ந்த போர்வையை அதன் மேல் போர்த்தான், நகரை நோக்கி மீண்டான், வறியார்க்கே கொடுத்து அரிய புகழைக்கொண்ட இவனது ஈகையின் இயல்பையும் ஒரு பறவை மாட்டும் அருள்சுரந்து செய்த பெருந்தகைமையையும் உலகம் வியந்து புகழ்ந்தது (இதன் விரிவை புறநானூற்றில் காண்க.)

வானம் வாய்த்த வளமலைக் கவான்

திளிருந்து பெருகிய குருதி நீரால் உறுதி கூறித் தந்தான். மாய முனிவர் கொண்டார். உனக்கு யாது வேண்டும் என்றார். கண்ணன் என்று தெளிந்தும் அவ்வள்ளல் ஒன்றும் கொள்ளவில்லை. அவர் மீண்டும் வேண்டினர். யான் இன்னும் பிறந்தால் இல்லையென்று இரப்போர்க்கு இல்லையென்னாத இதயத்தோடு பிறப்பியென்றன. திருமால் மகிழ்ந்து தன்னுருவம் காட்டி இன்னருள் செய்தார். ஒன்றும் கொள்ளாமல் இனனுயிர்த் துணையாய் நின்ற தன் புண்ணியத்தையும் கொடுத்த அப்புண்ணியன் வண்மையை அமரரும் எண்ணியெண்ணி வியந்தார். (இதன் விரிவைப் பாரதத்தில் காண்க).

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள் மாயா
ஏந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வாய்ந்தவர் என்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈந்தவர் அல்ல திருந்தவர் யாரே. (கம்பர்)

ஈதல் ஒன்றே என்றும் நன்றாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

223. தென்னு குமணனென்றுஞ் செப்பாம லேன்தலைக்
கொள்ளெனமுன் தந்தான் குமரேசா—என்னும்
இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. (௩)

இ.—ள்.

குமரேசா! குமணன் இல்லையென்று சொல்லாமல் தன் தலையையும் ஏன் கொடுத்தான் எனின், இலன் என்னும் எவ்வம் உரையாமையும் ஈதலும் குலனுடையான் கண்ணே உள என்க.

இலன் என்னும் எவ்வம்—வறியன் என்னும் இளிவை.

குலனுடையான்—மேன்மகன்.

இலன் என்னும் இளிமொழியைச் சொல்லாமையும் தன்பா

உள்ளதைப் பிறர்க்கு உவந்து ஈதலும் ஆகிய இவ்விரண்டு நலங்க



ளும் குலமகனிடமேதான் இயல்பாக அமைந்துள்ளன என்பதாம்.

ஏற்றல் தீது ஈதலே நன்று என்று மேற்குறித்த மெய்மை யைக் குலமகன் ஒருவனே குறிக்கொண்டொழுகுவான் என்பார் "குலமகன் கண்ணே உள" என்றார்.

உள என்பது அஃறிணைப் பன்மைக் குறிப்பு முற்று. அஃது உரையாமையும் ஈதலும் என்னும் இரண்டு எழுவாயும் கொள்ள நின்றது.

உள என்னும் பயனிலைக்குப் பன்மை குறித்து ஈதல் ஒன்றையே எழுவாயாகக்கொண்டால் இதில் பலபொருள்கள் கொள்ளப்படும்.

அவை

இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்—வறியன் என்னும் துயர் மொழியைத் தன்முன் ஒருவன் கூறாதபடி கொடுத்தல் எனவும்,

தன்பால் வந்தவன் இலன் என்னும் எவ்வத்தைப் பின்னும் போய்ப் பிறரிடஞ் சொல்லாமல் கொடுத்தல் எனவும்,

இலன் என்னும் எவ்வத்தை வந்தவன்பால் தான் சொல்லாமல் கொடுத்தல் எனவும்,

தன்னிடம் வந்துபோனவன் பின்பு அவனிடம் வருபவர்க்கு இலன் என்று உரையாமல் அவன் கொடுக்கும்படி கொடுத்தல் எனவும்,

தன்பால் வந்தவனைக் குறித்து இவன் இல்லாதவன் என்று இகழாமல் கொடுத்தல் எனவும்,

பொருளிருந்தும் ஈயாதவனாதலால் இவன் இல்லாதவனே

பந்த மாதிய விதிப்படி தண்டனை பணிக்குஞ்
சிந்தை யாதியன விசையின் நீங்கிய செம்மல், (1)
மருவி நோக்கினர் வதனமாம் பங்கய மலர்க்கும்
பாவியேபுவி கலக்குறும் பாவமாம் பனிக்கும்
சூரி மாகிய கவிவலோர் கவியிருள் தனக்கும்
இரவி யாமென விளங்கிய வளங்கொளும் ஏந்தல். (2)

23-ம் அதிகாரம் கதை. 441

இவ்வாறு நலங்களெல்லாம் ஓங்கப் பெற்றிருந்த இப்பெருந்தகைக்குத் தம்பி ஒருவன் இருந்தான். அவன் பெயர் அமணன். பொருளையெல்லாம் இரப்போர்க்குக் கொடுத்து அண்ணன் கெடுக்கின்றான் என்று அமணன் சினந்தான். பின்பு அமர் செய வந்தான். இளையவனிலைமையையறிந்து அனைத்தையும் அவன்பால் கொடுத்துவிட்டுக் குமணன் தனித்து ஓர் வனத்தில் புகுந்து தங்கியிருந்தான். அமணன் அரசுரிமையை அடைந்து மகிழ்ந்தான். அவ்வளவில் அமையாமல் குமணனைக் கொல்லவுங் கருதி அவன் தலையைக் கொணர்வோருக்குப் பொருள் தருவதாகப் பறையறைவித்தான். அவ்வள்ளலைக் கொல்லத் துணிவார் யாரும் இல்லை. இந்நிலையில் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் ஒருவர் குமணனைக் காண வந்தார். காட்டிலிருக்கிறானென்று தெரிந்தார். இருந்த இடத்தில் சென்று கண்டார்.

ஆடெரி படர்ந்த கோடுயர் அடுப்பில்
ஆம்பி பூப்பத் தேம்பசி யுழப்ப
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைதொறுஞ் சுவைதொறும் பால்காணுமல்
குழவி தாய்முகம் நோக்க
மனைவி யென்முகம் நோக்க யானும்
நின்முகம் நோக்கி வந்தனங் குமணா.

என்று தமது வறிய நிலைமையைத் தெரியப் பாடினார். குமணன் கேட்டான். புலவர் நிலைமையைத் தெளிந்தான். அவரது இன்மையை நீக்கத் தன்பால் ஒன்றும் இல்லையே என்று எண்ணி மயங்கினான். தம்பி கூறியுள்ளதை நினைத்தான். உடனே தெளிந்து மகிழ்ந்தான். புலவீர்! என் தலையைக் கொண்டுபோய் என் தம்பி கைக்கொடுத்தால் அவன் உமக்குப் பெருநிதி தருவான். தடையொன்றுமின்றி இதனைக் கொய்து கொண்டுசெல்லும் என்று சொல்லிப் புலவர் கையில் வாளைக்கொடுத்துத் தன் தலையை நீட்டினான். புலவர் பதைத்துப் பரிந்தார். உண்மையுணர்ந்தார். அதன்பின் தமது மதிநலத்தால் இருவரையும் இணைத்துக் குமண



னை அரசனாக்கினார். இலன் என்னும் எவ்வம் உரையாமல் தன் தலையை ஈந்த இப்பெருந்தகையை உலகம் தலைவள்ளல் என்று புகழ்ந்து போற்றியது. (இதன் விரிவைக் குமணன் கதையில் காண்க.)

அந்தநாள் வந்திலை யருங்கலிப் புலவோய்
இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
விலைதனைப் பெற்றுன் வெறுமைநோய் களையே.

இது புலவரை நோக்கிக் குமணன் கூறியது.

இலன் என்னாமல் ஈபவனே குலமகன் என்பது இதனால் கூறப்பட்டது.

224. மன்றோ ரவன்துன்பம் எய்திடினும் வானவர்கள்
கோனிரந்த தெப்போது குமரேசா—தானாக
இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு. (௪)

இ—ள்.

குமரேசா! இந்திரன் வந்து தன்பால் இரந்தபோது நளன் என் துன்பமுற்றான் எனின் இரந்தவரது இன்முகங்காணும் அளவும் இரக்கப்படுதலும் இன்னாது என்க.

இன்னாது—இனிது அல்லாதது. துன்பம் என்றபடி.

இரத்தல்—பிறரிடஞ்சென்று ஈ என்று கேட்டல்.

இரக்கப்படுதல்—இரப்பவர்க்கு ஈயும்படி இருத்தல்.

இரத்தலில் தான் துன்பம் உண்டு ஈதலினும் அஃதுண்டென்றது அதனைச் செய்வாரது தகுதி கருதி என்க.

இரந்தவரது இனிய முகத்தைக் காணும் அளவும் இரக்கப்படுவோருக்கும் துன்பமாம் என்பதாம்.

23-ம் அதிகாரம் ஈகை. 443

தன்பால் வந்து இரந்தவன் தான் கோரித்ததைப் பெற்று அதனால் அவன் முகமலர்ந்து நிற்பதைக்காணும் வரையும் வள்ளல்கள் உள்ளம் மகிழ்வுறாது என்பது கருத்து.

இரப்போர் முகமலர ஈவோர் அகமலரும் என்க. இரந்தவன் விரும்பியது எதுவோ அதைக்கொடுத்து அவனை அனுப்பும்வரையும் இலன் என்னுதல் ஈயும் குலமகனுக்கு இன்னாமை நீங்காதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நளன்பால் உணரப்படும்.

## கதை.

நளன் தமயந்தியை மணஞ்செய்யும் பொருட்டு அவள்தந்தையிருக்கும் நிருதகரையடைந்தான். அரசர் பலரும் அவ்வாறே அங்குவந்து செறிந்தார் வானவரும் வந்தார். வருணனோடு வானவர் தலைவனும் வந்தான். வந்த இந்திரன் நளனது பேரழகை நோக்கி வியந்து மகிழ்ந்தான். அவனையன்றித் தமயந்தி தன்னை விரும்பாளென்று தெளிந்தான். அவனையே தூதனுப்பி அவன் வாயிலாக அவளைப் பெற்றுவிடவேண்டுமென்று இந்திரன் நளன்பால் தந்திரமாக வந்தான். நளன் பணிந்து உபசரித்தான். இந்

திரன் ஒன்று வேண்டி உன்பால் வந்தேன் என்றான். நளன் அதனைக் கேட்டான். அவன் கேட்டதைக் குறிப்பறிந்து கொடுக்க விரும்பினான். ஆனால் விருப்பம் இன்னதென்று தெரிந்திலன். அதனால் பெருந்துயர் அடைந்தான். இரந்தவர் இன்முகம் காணும் அளவும் இரக்கப்படுதலும் இன்றாது என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. (இதன் விரிவை நளன் நூலில் காண்க.

குறிப்பறிந் திதலே கொடைமற் றின்றென
மறுத்தலே கேட்டபின் வழங்க லாதலின்
பெறற்கரும் ஆவியும் பெட்பி னீகுவன்
திறப்பட இவனுளந் தெரிந்த தில்லையால். (நைடதம்.)

இரந்தவரது முகமலர்ச்சியைக் காணும் வரையும் ஈவோர்க்கும் துன்பமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

56



225. அம்பரீ டன்வலிமைக் காற்றமல் கோபமுனி
கும்பிட்டேன் வீழ்ந்தார் குமரேசா—அப்புவியில்
ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலிற் பின். (௫)

இ—ள்.

குமரேசா! அம்பரீடன் வலிமைக்கு ஆற்றாமல் அக் கோபமுனி கும்பிட்டு வீழ்ந்தார் ஆதலின், ஆற்றுவார் ஆற்றல் பசியை ஆற்றல்; அதுவும் அப்பசியை மாற்றுவாரது ஆற்றலிற் பின்னும் என்க.

கோபமுனி—துருவாசர். ஆற்றுவார்—தவஞ் செய்வார்.

ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்—தவஞ்செய்வார்க்கு வலிமையாவது தம் பசியைப் பொறுத்தலேயாம்.

தம் பசியைப் பொறுத்தலே தவஞ்செய்வார்க்கு வலிமை;

அதுவும், பிறர் பசியை நீக்கும் ஈகையாளரது வலிமைக்குப் பின்னேயாம் என்பதாம்.

உறுபசியை அடக்கி அருந்தவஞ்செய்யும் தவத்தினரைவிட பிறர் பசியை நீக்கிய பேருதவி செய்யும் ஈகையாளர் பெரியவர் என்பது கருத்து.

தானஞ்செய்வோன் தவஞ்செய்பவனினும் வலியன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அம்பரீடன் கதையாலும் துருவாசரிடமும் உணரப்படும்.

## கதை.

அம்பரீடன் என்பவன் சூரிய குலத்து வேந்தன். திருமாலை நினைந்து நெடுநாள் தவம்புரிந்து சிறந்த வர பலங்களைப் பெற்றவன். சௌந்தரியென்னும் ஓரழகியை மணந்து சிறந்து வாழ்ந்தான். [illegible] அரசாண்டிருந்தவன். சிறந்த வீரன். அசுரர்களுடன் தனித்து நின்று பொருதவன். இவனது ஆற்றலை



யை நோக்கி அமரரும் போற்றினர். பெருங்கொடையாளி. வறியவரெவரும் இவனை உயிரெனக் கருதினர். தான் உண்ணுகிறதுபோலவே எத்திறத்தவர்க்கும் இனிய உணவை இட்டு மகிழ்வான். ஏகாதசிதோறும் விரதம் இருந்து அதன் முடிவில் அறுபது கோதானஞ் செய்து துவாதசியன்று அதிதிகள் பலருடன் இருந்து உணவு அருந்துவான். ஒரு முறை துருவாசர் வந்தார். இவன் வருக என்று உபசரித்துப் பாரணை செய்ய விரும்பினன். அவர் காளிந்தி நதியில் நீராடி வருவதாகச் சென்றார். அவர் வரவை இவன் எதிர்பார்த்திருந்தான். உணவு அருந்துதற்குரிய காலத்தில் அவர் வரவில்லை. விரதநியமம் தப்பிவிடுமே யென்று சிறிது நீர் பருகினன். முனிவர் வந்தார். உண்மை தெரிந்தார்.

வருமுன் பாரணஞ் செய்தாய் என்று சினந்து தமது தவ வலியால் ஒரு பூதத்தை ஏவினர். அது வெகுண்டு வந்தது. அரசன் செய்து வந்த தானமேன்மையால் தன்கையில் ஓர் ஆழி வந்தது. அதனால் அதனை கொன்றான். அச்சக்கரம் முனிவரையும் கொலைக் குறித்தது. அவர் அஞ்சி ஓடினர். அதுவும் பின் தொடர்ந்து விரைந்தது. முனிவர் ஓடிக் களைத்து மாலிடம் சென்றார். அவர் உன்னை ஆதரிக்க எம்மால் முடியாது. அம்பரீடனிடமே சென்று அடைக்கலம் புகுக இலையேல் அழிவாய் என்றார். முனிவர் மீண்டார். அரசனையடைந்து வணங்கி அடைக்கலம் புகுந்தார். அதன்பின் ஆழி அகன்றது. அரசனுக்கு ஈகையால் எய்தியுள்ள புண்ணிய வலியை முனிவர் எண்ணி வியந்தார். பசியை ஆற்றித் தவம்புரிவாரினும் அதனை மாற்றும் ஈகையாளர் வலியர் என்பதை உலகம் இதனால் உணர்ந்தது.

(இதன் விரிவைப் பாகவதத்தில் காண்க.)

தவத்திலும் ஈகை சிறந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

226. பெற்றனகொண் டேனோ பெருஞ்சித் திரர்பசிநோய்
குற்றமறத் தீர்த்தார் குமரேசா—முற்றுமே
அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (௬)

440 திருக்குமரேச வெண்பா.

இ—ள்

குமரேசா! பெருஞ்சித்திரனார் தான்பெற்ற பொருளைத் தொகுத்து வையாமல் ஏன் அதனால் பிறர் பசியைத் தீர்த்தார் எனின், அற்றார் அழிபசி தீர்த்தல் பெற்றான் ஒருவன் பொருள் வைப்புழி அதுவாம் என்க. வைப்பு உழி—வைக்கும் இடம்.

அற்றார்—பொருளற்றவர்; வறியர் என்க.

அழி பசி—கடும்பசி. குடிப்பிறப்பு விழுப்பம் மானம் முதலிய எல்லா நலங்களும் அழியும்படி பசிசெய்யும் ஆதலான் அஃது அழி என்னும் அடைபெற்று வந்தது.

பொருளைப் பெற்றவன் பின்பு தனக்கு உதவும்படி அதனைத் தொகுத்து வைத்தற்கு உரிய இடமாவது வறியவரது கொடிய பசியைத் தீர்க்க இடுவதேயாம் என்பதாம்.

ஒருவன் பெற்ற பொருளைப் பேரூதியம் தரும்படி வைத்தற் குரியதோர் நல்லிடமிஃதெனக் காட்டிய நுண்ணிய நயம்காணத்தக்கது.

உயிர்களது பசியை நீக்க ஒருவன் உதவுகின்ற பொருளே ஊறுங்கொடியாய்ப் பின் அவனுக்கு நன்றுதரும் என்பதுகருத்து.

குலமகன் பொருள் பெற்றால் பிறர் பசியைத் தீர்ப்பான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பெருஞ் சித்திரனார்பால் உணரப்படும்.

## கதை.

பெருஞ் சித்திரனார் என்பார் இற்றைக்கு இரண்டாயிர வருடங்களுக்கு முன் விளங்கியிருந்த ஒரு சிறந்த புலவர். அதிகமான் முதலான வள்ளல்களைப் பாடியுள்ளார். இவரது இனிய கவிகளெல்லாம் புறநானூறு முதலிய பழைய நூல்களிற் காணப்படும். நல்லறிவாளராகிய இவர்பால் பொல்லாத வறுமையும் பொருந்தியிருந்தது. அதனால் அல்லல் பல அடைந்தார். குமண வள்ளல் இவரது நிலத்தையறிந்து பெரும் பொருள் உதவினார். அதன்பின் மனையை நோக்கி வந்து தன் மனைவியை நோக்கி



னார். தாம் பெற்ற பொருளை எல்லார்க்கும் உதவி வாழும்படி அவளிடம் கூறினார். அவளும் அவ்வாறே ஆற்றி வாழ்ந்தாள். இருவரும் அதனால் என்றும் இன்புற்றார். வறுமைத் துயரால் வாடி வருந்திய பெருஞ்சித்திரனார் பொருள் பெற்றபின் உயிர்களது அரும்பசியை நீக்கிய பெருந்தகைமையை உலகம் புகழ்ந்தது.

பெருஞ்சித்திரனார் தமது மனைவியை நோக்கிக் கூறிய இனிய மொழிகள் இதன் அடியில் வருகின்றன.

நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்
எல்லார்க்கும் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே. (புறநானூறு.)

பிறர் பசியைத் தீர்த்தலே ஒருவன் பொருள் வைக்கும் இடம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

227. பண்டு வனம்புகுந்தும் பாண்டவர்கள் வெம்பசிநோய்
கொண்டிலரே தென்னே குமரேசா—கொண்டதைமுன்
பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்டல் அரிது. (எ)

இ-ள்.

குமரேசா! பாண்டவர்கள் வனம்புகுந்தும் ஏன் பசிநோயை அடையவில்லை எனின், பாத்தூண் மரீஇ யவனைப் பசி என்னும் தீப்பிணி தீண்டல் அரிது என்க.

மருவியவன் என்பது மரீஇயவன் என நின்றது. மருவியவன்—பழகினவன்,



பாத்தூண் மரீஇயவனை—பகுத்து உண்ணுதலைப் பொருந்தினவனை.

பசியைத் தீர்க்கப் பெறாது அறிவொழுக்கங்களை அழித்து இழிவையுந் துன்பங்களையும் பழி வழி நல்கும் அதன் கொடுமை கருதி வெல்க.

பகுத்து உண்டலைப் பற்றி வந்தவை யாண்டும் பசிநோய் தீண்டாதெனபதாம். (இவ்வுண்மை பாண்டவர்பால் காணப்படும்

கதை.

பாண்டவர்கள் காடுபுகுந்து வனவாசம் புரிந்த காலத்தும் இனிய உணவுகளையே அருந்தி இருந்தனர். தருமர் ஒருநாள் சவுனக முனிவரைக் கண்டு வணங்கினார். முனிவர் தருமரது பெருந்தன்மையை வியந்து ஒரு மந்திரத்தை உபதேசித்தார். தருமர் தெளிந்து, அம்மந்திரத்தைக் கொண்டு சூரியனை நோக்கி அருந் தவஞ்செய்தார். சூரியன் தோன்றி ஓர் அற்புதமான பொற்பாத் திரத்தை உதவினன் எவ்வளவு பேர்களைக் குறித்து எண்ணி னும் அவ்வளவினர்க்கும் அன்று இன்னுணவளிக்கும் இயல்பினை யுடையது. அஃது அட்சய பாத்திரம் எனப்படும். தன்னு டனே வந்த பன்னீராயிரம் முனிவர்களையும் தம்மையும் அதனால் ஆதரிக்கலானார். காட்டில் இருந்தும், நாட்டிலும் கிடையாத நல் உணவையே நுகர்ந்திருந்தார். பகுத்துண்டு வாழ்வோரைப் பசிநோய் தீண்டாது என்பதை உலகம் இவர்பால் தெளிந்தது.

(இதன் விரிவைப் பாரதத்தில் காண்க.)

ஈவோர்க்குப் பசிநோய் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது

---

228. ஈரமுடன் மெய்யமல் வீழ்ந்து துன்பமுற்றோன்
கோரைநகர் ஆழ்வான் குமரேசா — பாருலகில்
ஏத்துவக்கும் இயம் அறியார்சொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கணவர். (அ)

குமரேசா! கோனைநகர் ஆழ்வான் என்பவன் இருந்து துன்புற்றான் எனின், தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர் ஈத்து உவக்கும் இன்பம் அறியார் என்க.

ஈத்து என்பது ஈதலை நோக்கி வலித்து நின்றது.

வன்கண்மை — இரக்கமின்மை. வன்கணவர் என்றது இரப்பவர்க்கு இரங்கி ஈயாத இழிஞரை என்க.

தாம் உடைமை — தாம் உடைத்தாயிருக்கும் பொருளை.

ஈத்து உவக்கும் இன்பம் — கொடுத்து மகிழ்தல் என்னும் இன்பத்தை. இனி, கொடுத்து (வறியவர்) மகிழ்தலால் எய்தும் இன்பம் எனவுமாம்.

பிறர் இன்புறக் கொடுத்து அதனால் தாம் எய்தும் இன்பத்தை ஈயாது வைத்திருக்கும் உலோபர் அறியார்கொல் என்பதாம்.

சிறிய பொருளைக் கொடுத்துப் பெரிய இன்பத்தினை எய்தாமல் வறிதே இழப்பது யாது கருதினர் என்பார் "அறியார்கொல்" என்றார். கொல் என்பது ஐயப்பொருள் விளைவாய் குறித்து நின்றது. அறிவோர் கொடுத்து இன்புறுவர். அறிவிலிகள் வைத்திழந்து துன்புறுவர் என்பது கருத்து.

கொடை யின்பத்தை யறியாத மடையரே தம் பொருளைக் கொடாமல் வைத்திழந்து கவல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது கோனைக்கால் ஆழ்வான்பால் காணப்படும்.

கதை.

ஞநப்
௫

சோழநாட்டிலே கோனைக்கால் என்னும் ஊரிலே ஆழ்வான் என்னும் பெயரினையுடைய பெருஞ்செல்வன் ஒருவன் இருந்

தான். இவன் பொருள் மிகப்பெற்றும் அருள் இலனாயினான். கல்வியறிவுஞ் சிறிது எய்தியிருந்தான். பொருள்மேல் பெரும்



பற்றுடையவன். அதனால் அதனை எவர்க்கும் கொடாமல் மிகப் போற்றி வாழ்ந்தான். இரவலரைக் கண்டால் இவன் கரவுடன் அகல்வான். இவன் நிலைமையையறியாமல் புலவரொருவர் இவன் மேல் பல கவிகள் செய்துவந்தார். பாடிப் புகழ்ந்தார். அவர் இகழ்வர் என்று அஞ்சி இவன் ஒரு வருடங் கழித்துவரின் ஒரு யானை தருகின்றேனே என்றான். குறித்த காலத்தில் புலவர் வந்தார். இன்னுஞ் சில காலங்கழித்து வாருங்கள் எதாவது கொடுக்கின்றேன் என்றான். இவ்வகையே பலமுறையுங்கூறி முடிவில் ஒன்றுங் கொடாமல் மறுத்தான். இவன் வன்கண்மையை ஔவை அறிந்தாள். வசை ஒன்று பாடினாள். அதன் பயனாக இவன் பொருள் முழுதும் இழந்தான். ஈதலின்பத்தை யெய்தாதிழிந்தான்.

கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானாய்
எருதாய் முழப்புடவை யாகித்—திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகால் ஓய்ந்ததே
கோரைக்கால் ஆழ்வான் கொடை. (ஔவை.)

உடாஅதும் உண்ணாதும் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்திட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்திட்டுந் தேனீக் கரி. (நாலடியார்.)

ஈதலின்பத்தைப் பேரறிவாளரே எய்துவர் என்பது இதனால் கூறப்பட்டது.

229. என்றம் பலர்சூழ்ந் திருந்தண்ண என்உண்டான்
குன்றையூர் எல்லன குமரேசா—கன்றி
இரத்தலின இன்னுத மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்

இ—ள்.

குமரேசா! குன்றையூர் எல்லன் தனித்துண்ணுமல் என் பலரோடும் கூடியுண்டான் எனின, நிரப்பியதாமே தமியர் உணல் இரத்தலினும் மன்ற இன்னுத எனக.

23-ம் அதிகாரம் ஈகை. 451

நிரப்பிய தாமே தமியர் உணல்—தொகுத்ததைத் தாமே உண்டல். ஏகாரம் பிரிநிலை.

மன்ற என்பது தெளிவுப் பொருளை யுணர்த்தும் ஓர் இடைச் சொல்.மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும் (தொல்காப்பியம்.)

ஈட்டிய வளைவுகளைப் பிறர்க்கு ஈயாமல் தாமே தனித்து உண்ணுதல் இரத்தலினும் உண்மையாக இன்னுது என்பதாம்.

நிரப்பிய என்பதை வினையெச்சமாகக் கொண்டால், யாதாவது, ஒரு பொருளெல்லையைக் குறித்துவைத்து அதனை நிரப்பும் பொருட்டு ஒருவர்க்கும் ஒன்றுங்கொடாமல் தாமே உண்டு உலோபஞ் செய்தல இரத்தலினும் இழிவு என்று கொள்ளப்படும்.

ஈயாது உணணல இரததலினும் தீது எனக.

முயன்று தொகுத்த பொருளைப் பிறர்க்குதவி வாழ்பவனே குலமகன் என்பது குறிப்பு. இஃது எல்லன்பால் காணப்படும்.

## கதை.

எல்லன் என்பவர் தொண்டை நாட்டிலே குன்றையூர் என்னும் நகரிலே பிறந்தவர். வேளாண் மரபினர். பெரிய நிலப்பகுதியைத் தனக்கு உரிமையாகவுடையவர். யாவர்மாட்டும் பேரன்பு வாய்ந்தவர். எல்லாரும் இன்புற ஈந்து வாழ்ந்தவர். இவர் உலையில் அரிசியிட்டால் ஊர்பசி நீங்கும் என்பர். ஆயிரக்கணக்கான மனிதர்கள் தினமும் இவர் இல்லில் வந்து அன்னம் அருந்திச் செல்லுவர். பலரும் புடைசூழ உண்டால் அன்றி இவர் ஒருநாளும் தனித்து உண்ணுவதில்லை. நான்கு திசைகளினும் இருந்து நாளும் இவரை நாடி வருவார் பலர். எவர் வரினும் இனிய முகத்தோடு உபசரித்து அவர் குறித்ததை உடனே கொடுத்தனுப்புவர். இவரைச் சோதிக்கக் கருதிய ஒருவனுக்குத் தமது உடற்றசையையுங் கொடுக்கத் துணிந்தார்.

57

452 திருக்குறட் குமரேச வெண்பா.

ஆலெங்கே யங்கே யரும்பறவை ஆலமர்ந்த
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—கோலஞ்சேர்
செங்கே தகைமணக்கும் செங்குன்றை எல்லனெங்கே
அங்கே யிரவலரெல் லாம். (பொய்யாமொழி)

இதனால் இவரது ஈகைக்குணம் இனிது தெளியப்படும். ஈயாது உண்டல் இரப்பினும் இழிவென்பது இதனால் கூறப்பட

230. ஈதலிசை யாமைக்கேன் இன்னுயிரும் நீக்கநின்றார்
கோதறுகா ளத்தி குமரேசா—பூதலத்தில்
சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
ஈத லிசையாக் கடை. (ய)

இ—ள்.

குமரேசா! காளத்தி முதலியார் ஈதல் இசை யாமைக் காக என் தனது இனிய உயிரையும் நீக்கத்துணிந்தார் எனின், சாதலின் இன்னாதது இல்லை, ஈதல் இசையாது எனின், அதுவும் இனிதாம் என்க.

சாதலின் இன்னாதது இல்லை—சாதல்போலத் துன்பமானது இவ்வுலகில் ஒன்றுமில்லை.

ஈதல் இசை யாக்கடை—ஈதல் முடியாத இடத்து.

ஈதல் முடியாமை எய்துமாயின் அது, சாதல் துன்பத்தினுங் கொடிது என்பதாம்.

காரணம் யாவும் கலக்குற வருகின்ற மரண துன்பமே எல்வகைத் துன்பங்களினும் உயிர்கட்கு மிக்க துன்பமாம் அதனினும் வறியவர் விரும்பியதொன்றைக் கொடுக்க முடியாதவிடத்துக் குலமகனுக்குத் தோன்றுந் துன்பங்கொடிதாம் என்பது கருத்து.

23–ம் அதிகாரம் ஈகை. 453

தன்பால் வந்து இரந்தவனுக்கு இல்லையென்று சொல்வதினும் ஒருவன் இறந்து படுதல் நல்லது என்பார் "ஈதல் இசை யாக் கடை சாதல் இனிது" என்றார்.

கொடுக்க முடியாத இடத்துக் குலமக்கள் தம் உயிரையும் விடத்துணிவர் என்பது குறிப்பு. இவ்வுண்மை காளத்திபால் காணப்படும்.

கதை.

காளத்தி முதலியார் வறியவரெவர்க்கும் உறுதுணையாய் நின்று பேருதவிசெய்து நின்றை என்னும் ஊரில் நிலைத்துவாழ்ந்தார். அதனால் அவரது புகழ் உலகெங்கும் பரவியது. பல திசைகளிலுமிருந்து இரவலர் பலர் நாளும் இவரை நாடிவருவர். அவர் வேண்டிய எல்லாம் இவர் விரும்பியுதவினர். முடிவில் பொருள் வளங்குறைந்தது. வறுமை வளர்ந்தது. உணவும் இன்றி ஒருநாட் பட்டினிகிடந்தார். அந்த இருத்தற்கு நாணினர். மறுநாள் இரவில் தன் மனைவியோடு எழுந்து ஒருவருக்குந் தெரியாதபடி அயலிடஞ்சென்றார். வழியிலிருந்த ஒரு பொது நிலையத்தின் புறந்திண்ணையில் கடும்பசியோடு களைத்துத் தங்கினர். இவர்பால் பரிசில் பெறக்கருதி நின்றையூரை நோக்கிவந்த புலவர் ஒருவரும் அங்கோர் மூலையில் பொருந்தியமர்ந்தார். தன்னைவிடாமல் வருத்துகின்ற வறுமையை முன்னிலைப்படுத்திப் புலவர்,

நீளத் தொடர்ந்தனையே நீங்கா நிழல்போல
நாளும்என் செய்குவாய் நல்குரவே—காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீயெங்கே நானெங்கே
இன்றைக்கே சற்றே இரு. என்றார்.

முதலியார் இதனைக் கேட்டார். புலவர் குறிப்பைத் தெரிந்தார். நாளை இவர் நமது இல்லையடைந்து நாம் இல்லாமையை அறிந்தால் அல்லலுறுவரே என்று ஒல்லை எழுந்தார். மனைவியை யழைத்து விடியுமுன் மெல்ல வீடுவந்து சேர்ந்தார். அரிதின் முயன்று சிறிது உணவை ஆக்கிவைத்தார். புலவரும் வந்தார். முதலியார் அவரை உபசரித்து உணவூட்டினர். புலவர் குறிப்பின்படி கொ



டுத்தனுப்புதற்கு ஒன்றும் இல்லையேயென்று எண்ணி யெண்ணி நொந்தார். இல்லையென்று சொல்வதினும் இறந்துவிடுதல் நல்லது

என்று துணிந்தார். தமது இல்லின் பின்புறத்திற்குச் சென்று இறக்கக்கருதி அங்கிருந்த ஒரு பாம்பின் புற்றில் கையை விடுத்தார். அதிலிருந்த நாகம் கடித்தலைச் செய்யாமல் தன் சிரத்திலிருந்த செம்மணியை அக்கையில் கக்கிற்று. முதலியார் கையை வெளியே இழுத்தார். ஒளிமணியைக் கண்டார். பேருவகை கொண்டார். விரைந்து வந்தார். அதனைப் புலவர்க்கே தந்து போற்றியனுப்பினர். ஈதல் முடியாத இடத்தும் குலமக்கள் சாதல் இனிது என்று கொள்வர் என்பதை உலகம் இவர்பால் கண்டது. இதன் விரிவை இவர் சரிதையில் காண்க

சாதல்வர் கடுந்தயாலுந் தனக்கொரு சாதலின்றிப்
பூதலம் இறக்குங் காறும் புகழுடம் பிருந்து யர்தக்
கோதறு புகழின் யாக்கை கொடையினும் செல்வங்கூர
வாழ்தலை யுடைய ரன்றே வானமும் வணங்குநீரார்.

(விநாயக புராணம்.)

ஈதலின்றி வாழ்தலினும் சாதல் நன்று என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

வறியவர்க்குக் கொடுப்பதே கொடை. ஏற்றல் தீது. ஈதலே நல்லது. இலன் என்னாமல் ஈவோன் குலமகனே யாவன். இரந்தவரது இன்முகங் காணும்வரையும் ஈவோர்க்குந் துன்பமாம். பிறர் பசியைத் தீர்ப்போர் தவசிகளினும் வலியவர். பிறர் பசிக்கு இடுதலே ஒருவன் பொருள்வைக்கும் இடமாம். பகுத்து ஈந்து உண்போனைப் பசிநோய் அணுகாது. கொடாமல் வைத்து இழப்போர் கொடியரேயாவர். ஈயாது உண்ணல் இரத்தலினுந் தீது. ஈதலின்றி வாழ்தலினுஞ் சாதல்

௨௩-வது ஈகை முற்றிற்று.

24-ம் அதிகாரம் புகழ். 455

# உ௪-ம் அதிகாரம் புகழ்.

அஃதாவது தனது குணஞ் செயல்களால் உலகம் என்றும் உவந்து போற்றும்படி ஒருவனுக்கு அமைந்த நிறைந்த கீர்த்தி. இதன் சிறப்பு வீரம் கல்வி நியாயங்களாலும் எய்துமாயினும் ஈகையானே இனிதுதோன்றும் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

231. ஒண்டோள் இயற்பகைதன் தேவியையும் ஈந்தே
கொண்டார் இசையைக் குமரேசா—கண்டாமல்
ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதியம் இல்லை யுயிர்க்கு (க)

இ—ள்.

குமரேசா! இயற்பகையார் தன் தேவியையும் ஈந்து என் இசைபெற்றார் எனின், ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை என்க. ஊதியம்—ஆதாயம்.

இசைபட—புகழ் உண்டாக. அது என்றது புகழை.

ஈதல் வாழ்தல் என்பன தல் ஈற்று வியங்கோள் முற்றுக்கள் ஆதலால் அவை ஈக வாழ்க என ஏவல் மேனின்றன.

ஈக; அதனால் புகழுண்டாக வாழ்க; அப்புகழல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை என்பதாம்.

ஈதலைச் செய்து அதனால் புகழினை எய்தி வாழ்தலே ஒருவன் பிறவிக்குப் பயன் என்பது கருத்து.

ஈதலின்றி வாழ்தலினும் சாதல் நன்று என்று மேற் குறித்த அதனால் யாது பயன் என்பாரை நோக்கி அஃது உயிர்க்கு ஊதியமாகிய புகழையுண்டாக்குமென்று இதில் உணர்த்தினார் என்க.



எதனையும் இல்லையென்னாமல் ஈந்து புகழுற வாழ்வோரே பிறவிப் பயனை யெய்திய பெரியவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இயற்பகையார் பால் உணரப்படும்.

## கதை.

இயற்பகையார் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். சோழநாட்டிலுள்ள காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் மரபில் பிறந்தவர். எவர் வந்து எதைக் கேட்பினும் இல்லையென்னாமல் ஈயும் இயல்பினையுடையவர். குணவதி என்னும் தனது அருமை மனைவியுடன் அமர்ந்து இல்வாழ்ந்துவந்தார். வருங்கால் இவரது புகழினை உலகறியும்படி செய்ய இறைவன் கருதினார். ஒரு காமுகன் போல் வேடங்கொண்டு இவர் பால்வந்தார். அவரை ஓர் அடியவராகவே கருதி இவர் அவர் அடிவணங்கி நின்று யாது வேண்டும் என்றார். "உன் மனைவியே வேண்டும்" என்று அவர் வேண்டினார். இவர் இல்லை என்னாமல் தம் இல்லாளையுந் தந்தார். அவர் கொண்டு சென்றார். இவரது உறவினர் அவரைக் கடுத்துத் தடுத்தார். இவர் வெகுண்டு சென்று அவரனைவரையும் அச்சுறுத்திச் சிறிது தூரம் உடன் சென்று அவ்விருவரையும் அனுப்பினார். மாயவண்ணம் கொண்டுவந்த அவர் மனைவியையும் மருதவண்ணர் தக்க இவர்முன் விடைமேல் தோன்றினார். கண்டு தொழுதார். பின் மனைவியோடு பேரின்பம் எய்தினார். ஈதலும் அதனால் இசைபெற வாழ்தலுமே ஆருயிர்க்குப் பேரூதியம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது.

(விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.)

புகழொன்றே இம்மையில் ஒருவன் எய்துதற்குரிய பெரும் பயன் என்பது இதனால் கூறப்பட்டது.

232\. பாரிகன்ன ஞறியரைப் பல்லோரும் பேரன்பு
கூரவுரைப் பானேன் குமரேசா—பாரில்
உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ். (உ)



இ—ள்.

குமரேசா! பாரி கன்னன் முதலிய வள்ளல்களுடைய புகழை எல்லாரும் என் உவகையொடு மகிழ்கின்றார் எனின், உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்றை ஈவார்மேல் நிற்கும் புகழேயாம் என்க.

பேசுவார் பேசுவன எல்லாம் இல்லையென்னாமல் ஈயும் ஈகையாளர்களுடைய புகழ்களே என்பதாம்.

வள்ளல்கள் புகழ்களே வாய்படைத்த யாவராலும் விரந்து பேசப்படும் என்பது கருத்து.

கல்வியறிவு நிரம்பப் பெறாதவர் வழக்கமான உரையாலும் புலவர்கள் பாட்டாலும் வள்ளல்களுடைய மேன்மையைப் போற்றி மகிழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாரிகன்னன் முதலானவர்பால் காணப்படும்.

கதை.

இரப்பார்க்கு இல்லையென்னாமலீந்து வந்த பாரி கன்னன் குமணன் பேகன் நன்னன் எழினி அதிகமான் மலயமான் ஆய் சோமன் சந்திரன் சுவர்க்கி ஓரி கூவத்தூராரயன் பள்ளிகொண்டான் காரி வரபதியாட்கொண்டான் அந்திமான் சந்திமான் நள்ளி முல்லான் சிபி காளத்தி முதலியார் சீதக்காதி சடையப்ப பிள்ளை முதலிய வள்ளல்களுடைய கீர்த்தியை உரையாலும் பாட்டாலும் உலகம் இன்றும் போற்றிவருவதை எங்கும் காணலாம்.

"கொடைக்குக் கன்னன்"
"சிறுவி முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய பாரி"
"ஈந்து சிவந்தது மால் சீதக் கை;
"ஈர நன்மொழி இரவலர்க்கீந்த காரி"

458 திருக்குறட் குமரேச வெண்பா.

"அமிழ்து விளை தீங்கனி ஔவைக்கீந்த அதிகன்"
"பிறந்த நாட்டொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன்
பெற்றி மறந்தநாள் உண்டோ"
"மன்னவர் வறுமை நோய்க்கு மருந்தன்ன சடையன்"
மாரி யீகை மறப்போர் மலையன்'

என வரும் இவற்றான் ஈவார் மேல் நிற்கும் புகழ் உரையாலும் பாட்டாலும் உயர்ந்து பேணப்படும் உண்மை காணப்படும்.

வள்ளல்களுடைய புகழை எல்லாராலும் வியந்து சொல்லப் படும் என்பது இதனால் கூறப்பட்டது.

233. என்றும் சிபிசுகுணன் இன்புகழே நின்றதிங்கு
குன்றியவென் எல்லாம் குமரேசா—நன்றாக
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். (௩)

இ—ள்.

குமரேசா! சிபி முதலோரது புகழே இவ்வுலகில் நிலை

பெற்றது பிற எல்லாம் என் நிலையாமல் அழிந்தன எனின், ஒன்றா உயர்ந்த புகழ் அல்லால் உலகத்தில் பொன்றாது நிற்பது ஒன்று இல்லை என்க.

ஒன்றா—தன்னோடு ஒப்பது இன்றித்தான் ஒன்றேயாக, ஒப்பற்றதென்க.

ஒன்றா உயர்ந்த புகழ்—ஒப்பின்றாக உயர்ந்த கீர்த்தி.

ஒன்றா என்பதை உலகத்துக்கே அடையாக்கி "நிலையா உல கம் ஆம்.

அரிய புகழைத்தவிர இவ்வுலகத்தில் அழியாமல் நிற்பது வேறு ஒன்றும் இல்லை என்பதாம்.



நிலையில்லாத இவ்வுலகில் புகழ் ஒன்றே நிலைத்துநிற்கும் என்பதும் அஃது ஈகையானே எய்தப்படும் என்பதும் கொடுத்தற்கு அரியதைக் கொடுத்தேனும் அதனைக் கொண்டவரே உயர்ந்தோர் என்பதும் அவரது பேரும் சீரும் உலகமுள்ள அளவும் யாவரானும் போற்றப்படுமென்பதும் இதில் தோற்றி நின்றமை காண்க.

இல்லையென்னுல் எதனையுங்கொடுத்து வள்ளல்கள் எய்திய அரிய புகழ் ஒன்றே இவ்வுலகில் அழியாமல் நிற்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிபி சுகுணன் முதலாயினோர் பால் காணப்படும்.

சுகுணன் என்பவர் தொண்டைமண்டலத்திலே விடூர் என்னும் நகரிலே விளங்கியிருந்த ஒரு வேளாண் மரபினர். தமக்கு உரிய பொருளையெல்லாம் வறியவர்க்கே கொடுத்து மகிழ்வுடன் வாழ்ந்தவர். அவரது வள்ளன்மையையறிய விரும்பிப் புலவர் ஒருவர் வந்து மனைவியைத்தரும்படி கேட்டார். அவர் மாறாது தந்தார். புலவர் வியந்து சுகுணனைத் தந்தையேயென்றழைத்து அவர் மனைவியைத் தாயென வணங்கினர். சேயாகிய என் பால் தாய்தந்த தாதாவே என்று மீண்டும் அவளை அவர் பால்

சேர்த்தார். கொடுத்தற்கரிய உரிமைப் பொருளையும் கொடுத்த அவரது ஈகைக்குணத்தைப் புலவர் எண்ணியெண்ணித் துதித்தார். ஒன்று உயர்ந்த அவர் புகழ் என்றும் நின்று நிலவும்படி நன்று பாடினர். (இதன் விரிவைத் தொண்டை மண்டல சதகத்தில் காண்க.) சிபிபுகழ் நிலைத்தமை மேலே காண்க.

அரிய புகழொன்றே அழியாமல் நிற்குமென்பது இதனால் கூறப்பட்டது.

---

234. வானுலகோர் போற்றியதோர் வண்புறவை வானிலுள்ளார் [ளார்
சேனையும் போற்றுமல் குமரேசா—மான
நிலவரை நீள்புகழ் ஆற்றிற் புலவரைப்
போற்றுது புத்தே ளுலகு. (ச)

58



குமரேசா! வானுலகம் தன்பாலுள்ள தேவரைப் போற்றுமல் பண்டு ஏன் ஒரு பறவையைப் போற்றியது எனின், நிலவரை நீள் புகழ் ஆற்றின் புத்தேள் உலகு புலவரைப் போற்றாது என்க.

நிலவரை—பூமியின்கண். நீள்புகழ்—நெடுங்காலம்நிலைத்து நிற்கும் புகழ். புலவர் என்றது தேவரை. புலம்—அறிவு. அதனைப் பெரிதும் உடையராதலால் அவரனைவரும் புலவர் எனப் பட்டார்.

நிலவரை நீள்புகழ் ஆற்றின்—நிலவுலகிலிருந்து நெடிய புகழைச் செய்யின்.

இந்நிலவுலகிலிருந்து ஒருவன் பெரும் புகழைச் செய்வானு கில் அவனையல்லது தெய்வவுலகம் தன்பாலுள்ள தேவர்களைப் பேணாது என்பதாம்.

புண்ணியத்தால் தெய்வவுடம்பையெடுத்துப் புத்தேளுலகினையெய்தி நிற்கும் தேவர்களினும் ஈகையால் புகழுடம்பையெடுத்து இந்நிலவுலகிலிருக்கும் வள்ளல்கள் சிறந்தவர் என்பது கருத்து.

நெறிநின்றொழுகிய அறிவினையுடையார் மறுமையை மாத்திரம் உரிமையாக உடையவராவர், புகழுடையார் இருமையினும் பெருமையை யெய்துவாராதலான் புத்தேளுலகம் அவரினும் இவரை விரும்பிப் பேணும் என்க. இவ்வுண்மை புகழாற்றிய ஒரு புறாவின்பால் காணப்படும்.

## கதை.

பல்லாயிர வருடங்களுக்கு முன்னர் கிடதமலையையடுத்துப் பெரிய வனம் ஒன்று இருந்தது. அடர்ந்த மரங்களும் சிறந்த செடி கொடிகளும் அதில் நிறைந்திருந்தன. வில்லும் கையுமாய் வேடனொருவன் அங்கு வந்தான், வரவும், பெருமழை பெய்தது. ஓயவில்லை. அதனால் வருந்திக் குளிரால் நடுங்கினான். பறவை



களும் மிருகங்களும் வாடி நொந்தன. நனைந்து மெலிந்த பெண் புறா ஒன்று தரையிலே தளர்ந்து கிடந்தது. வேடனெடுத்துத் தன் வலையிற் போட்டுக்கொண்டு தழைத்த ஓர் மரத்தினடியில் களைத்திருந்தான். இரவும் வந்தது. அம்மரத்தில் தனித்திருந்த ஆண்புறா தனது பேடையைக் காணாது பெரிதும் வருந்தி அடியில் களைத்திருக்கும் வேடன் வலையில் அமைந்திருப்பக் கண்டு கண் கலங்கிக்கொண்டது. அதன்பின் வேடன் மெலிவுக்கு இரங்கிப் பல இடங்களுக்குஞ் சென்று காய்ந்த விறகுகளைக் கொ

ணர்ந்து குவிந்து காட்டுத்தீயைக் கோலில் தாங்கிவந்து மூட்டித் தனது மெல்லிய சிறகுகளால்வீசி நெருப்பை வளர்த்து அவனது குளிரை நீக்கினது. அவனும் நீங்கி நிமிர்ந்தான். உடனே அவன் பசிநோய்க்கு இரையாகப் புறா அதில் பாய்ந்து மடிந்தது. வே டன் கண்டு வியந்து பயந்து தன் வலையில் கிடக்கும் பெண் புறா வை எடுத்து வெளியே விட்டான். தன் துணையைப் பிரிந்திருக்க ஆற்றாது அதுவும் அத்தீயில் விழுந்தது. உடனே விமானம் வர அவ்விரண்டும் தெய்வவுடம்பெய்திச் சேர்ந்து மேலெழுந்தன. இவ்வுலகில் இருந்து நீள்புகழாற்றிய அப்புறவிரண்டையும் புத்தே ளுலகம் புலவரினும் போற்றி மகிழ்ந்தது.

(இதன் விரிவைச் சாந்தி பருவத்தில் காண்க.)

பேடையைப் பிடித்துத்தன்னைப் பிடிக்கவந் தடைந்தபேதை
வேடனுக் குதவிசெய்து விறகிடை வெந்தீ மூட்டிப்
பாடுறு பசியைநோக்கித் தன்னுடல் கொடுத்தபைம்புள்
வீடுபெற் றுயர்ந்தவார்த்தை வேதத்தின் விழுமிதன்றோ

(இராமாயணம்)

புகழுடையாரைப் புத்தேளுலகமும் போற்றும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

235. தண்டார் அரவான் ததிசிபோல் மெய்ப்புகழைக்
கொண்டிலரேன் மற்றோர் குமரேசா—கொண்டாடும்
நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது. (௫)



குமரேசா! அரவான், ததிசிபோல், பிறர் என் பெரும் புகழைக் கொள்ளவில்லை எனின், நத்தம் ஆகும் கேடும் உளது

ஆகும் சாக்காடும் வித்தகர்க்கு அல்லால் அரிது என்க.

திருந்தல் வருந்தல் என்பன திருத்தம் வருத்தம் என நிற்றல்போல் நந்தல் என்பது இங்கே நத்தம் என நின்றது.

நந்தல் என்பது வளர்தல் ஆக்கம் முதலியவற்றைக் குறித்து வரும் ஒரு தொழிற்பெயர். சாக்காடு—சாவு.

போல் என்பதை உரையசையாக்கொண்டு ஆகும் என்பதை ஆங்குப் பெய்து பொருள் கொள்ளும்படி இது நின்றது.

ஆக்கம் ஆகும் கேடும் வாழ்தலாகுஞ் சாவும் வித்தகர்க்கு அன்றி மற்றவர்க்கு எய்துதல் அரிது என்பதாம்.

வித்தகர்—அறிவு, அருள், ஆண்மைகளான் மேன்மை பெற்றவர். அழியும் உடலைக்கொடுத்து அழியாத புகழை அடைதல் எல்லார்க்கும் எளிதன்றாதலான் "வித்தகர்க்கு அல்லால் அரிது" என்றார்.

புகழுடம்மை எடுத்தற்காகப் பூதவுடம்பைக் கெடுத்தலும் அது நிலைத்து நிற்கும்பொருட்டு இறத்தலும் தான வீரர்க்கே அமையும் என்பது கருத்து

உடல் உயிர்களைக் கொடுத்தேனும் மேலோர் புகழினை அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அரவானிடமும் ததீசியாலும் அறியப்படும்.

## கதை.

அரவான் என்பவன் அருச்சுனன் புதல்வன், உலூபி என்னும் நாககன்னியிடம் பிறந்தவன். சிறந்த வீரன். நல்ல அங்கங்களும் எதிர் உரோமங்களும் வாய்ந்தவன். எவராலும்

வெல்லுதற்கரிய மெய்வலிமை யுடையவன். பாரதப் போரில் காளிநருவனை சென்று பகைவரனைவரையும் தொலைத்து வெற்றி பெற விரும்பியிருந்தான். இங்ஙனமிருப்பத் துரியோதனன் போர் தொடங்குமுன் வீரமுறைப்படி களப்பலியூட்ட விரும்பினான். களப்பலி என்பது தனக்கு வெற்றியுண்டாகும்படி சிறந்த ஆண்மையும் நிறைந்த அறிவும் திருந்தியவுருவும் உடலில் எதிரேறிய உரோமமும் உடைய ஒருவனைக் கொண்டுபோய்க் காளி தேவிமுன் நிறுத்தித் தோள் மார்பு தொடை முதலிய அவயவங்களைச் சிறிது சிறிது கொய்து அவளுக்கு மகிழ்வுண்டாகும்படி உதிரமும் தசையும் ஒருவன் ஒருங்கேயிடுவது. மேற்குறித்த இலக்கணங்கள் அரவானுக்கும் கண்ணனுக்குமே அமைந்திருந்தன. கொடியனை துரியோதனன் அரவானிடம் வஞ்சமாக வந்தான். அவனைப் பெரிய தந்தையாக மதித்து அரவான், யாது வேண்டுமென்றான். நீதான் வேண்டுமென்று அந்தீதானவன் சொன்னான். தந்தேன் கொள்கவென்று அம்மைந்தன் இசைந்தான். அதன்பின் கண்ணன் கவர்ந்து அவனை முன் களப்பலி செய்தான். பூதவுடம்பைக்கொடுத்துப் புகழுடம்பை எடுத்த அரவானது கொடை வீரத்தை அமரரும் துதித்தார்.

(இதன் விரிவைப் பாரதத்தில் காண்க.)

இந்திரனுக்கு முதுகென்பை யீந்து புகழுண்டாகும்படி சாக்காடு எய்திய ததீசிபாற் காண்க.

பூதவுடம்பைக் கொடுத்தேனும் புகழுடம்பை ஒருவன் எடுக்கவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

236. பூருவேன் தோன்றிப் புகழ்கொண்டான் எனிருவர்
கூரிகழ்வால் கொந்தார் குமரேசா—பாருலகில்

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. (௬)

குமரேசா! பூரு என்பவன் தனது இளமையையுங் கொடுத்துப் புகழ்கொண்டான்; அவன் தமையர் இகழ்வாயிருந்தார்; ஆகலின், தோன்றின் புகழொடு தோன்றுக; அஃது இலார் தோன்றலின் தோன்றாமை நன்று என்க.

புகழ் என்றது இங்கே அதற்கு ஏதுவாகிய குணத்தைக் குறித்து நின்றது. அஃது இலார்—அக்குணம் இல்லாதவர்.

பிறந்தால் புகழ்க்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அக்குணம் இல்லாதவர் பிறத்தலினும் பிறவாமல் ஒழிதல் நன்று என்பதாம்.

உயிர்க்கு ஊதியமானது புகழ் ஒன்றே ஆதலால் அதனைப் பெற்றவனே மனிதனாகப் பிறந்தவனாவான்; பெறாதவனை, உருவத்தால் மனிதனாயினும் அவன் பிறப்பு பயனற்றது என்பது கருத்து.

தோன்றியபின்பானால் புகழில்லாதவனை ஒருவரும் மதியார் ஆதலால் தோன்றாமை நன்று என்றார்.

மக்களாய்ப் பிறந்தால் புகழ்பெறும்படி பிறக்கவேண்டும்; இல்லையானால், அப்பிறப்பு இழிக்கப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பூருவின் கண்ணும் அவன் தமையரிடமும் உணரப்படும்.

## கதை.

பூரு என்பவன் சந்திரகுல வேந்தனாகிய யயாதியின் புதல்

குமரேசா! உலகன் என்பவன் தன்னை யிகழ்ந்தவரை ஏன் நொந்தான் எனின், புகழ்பட வாழாதார் தம்மை நோவாதே தம்மை இகழ்வாரை நோவது எவனோ என்க.

தம் நோவார்—தம்மை நோவாதவராய். நோவார் என்னும் எதிர்மறை முற்று இங்கு எச்சமாய் நின்றது.

ஈதலைச் செய்து புகழுறவாழ்தலே இல்வாழ்வானுக்குக் கடமையாதலால் அதனைச் செய்யாதவனை உலகோர் இகழ்வர். அங்ஙனம் இகழுங்கால், தன் குறையையுணர்ந்து அவன், தன்னை நோவாமல் இகழ்வாரை நோவதால் பயன் இல்லை என்பதாம்.



தன்னைப், பிறர் இகழ்வாராயின் அதனையுணர்ந்து தான் திருந்தாமல் அவரை அவன் வெறுப்பது அறிவின்மையாம் என்பது கருத்து.

புகழ்பட வாழாதவனை உலகோர் இகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உலகன் பால் உணரப்படும்.

## கதை.

சோழ நாட்டிலே அங்கூர் என்னும் ஊரிலே உலகன் என்னும் பெயரினையுடைய செல்வன் ஒருவன் இருந்தான். வாணிக முதலிய எல்லாத் துறைகளினும் நல்ல திறமையுடையவன் ஆனால் கல்வியறிவு சிறிதும் இல்லாதவன். புன்மையும் வஞ்சமும் பொருந்திய நெஞ்சினன். பொருள்மேல் பெரும்பற்றுள்ளவன். எவரேனும் வந்து எதாவது ஒன்றை ஈ என்று கேட்டால் எமன் வந்து தன்னுயிரைக் கொடு என்று கேட்டதுபோல் மிக நொந்து கவல்வான். இவனது நிலைமையைத் தெரியாமல் இரட்டையர்

னால் இவன் பெயர் இசைதோறும் நின்றது. இவனது குணநலன் களை வியந்து புலவர் பலர்பாடி மகிழ்ந்தார்.

வள்ளிகொண் டான்பயில் வறிக்கொண் டான்பதி
பேரூரலை
வெள்ளிகொண் டான்விடை யேறிக்கொண் டான்விண்
ணவர்க்கமுதம்
துள்ளிகொண் டான்பள்ளில் வறிக்கொண் டான்சுப
சோபனஞ்சேர்
பள்ளிகொண் டான்புகழ் வறிக்கொண் டான்என்று
பார்க்கவென்றே.

(கையாண்டிப் புலவர்)

இசைபெற்றவனே உலகில் வசைபற்றவன் என்பது இத னால் கூறப்பட்டது.

---

239. பண்டைவளங் குன்றியதேன் பார்வன் நகைமுன்
கொண்டிருந்த போது குமரேசா—கொண்ட
வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். (க)

இ—ள்.

குமரேசா! நகைகனைத் தாங்கியிருந்த காலத்தில் ஏன் இவ்வுலகம் வளங்குன்றி இருந்தது எனின், இசையில்லாயாக்கை பொறுத்தநிலம் வசையிலா வண்பயன் குன்றும் என்க.

வசைஇலா வண்பயன் குன்றும்—பழிப்பில்லாத செழிப்பு ள்ள விளைவு குறையும்.

குன்றும் என்னும் வினை பொருளின் தொழில் அது வினைக் குரிய நிலத்தின் மேல நின்றது.

விளை குன்றும் — நிலத்தில் தோன்றும் விளைவுகள் குன்றும்.

புகழில்லாத உடம்பைத் தாங்கிய நிலத்தில் பழியில்லாதனவும் செழிப்புள்ளனவுமான விளைவு குறையும் என்பதாம்.

புகழில்லாதவன் இருக்கும் இடத்தில் வளமான பொருள்கள் விளையா என்பது கருத்து.

புகழில்லாதவன் தோற்றம் உலகத்துக்கே பெருங்கேடாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நரகாசுரனால் உணரப்படும்.

## கதை.

நரகாசுரன் என்பவன் சோதிடம் என்னும் நகரில் இருந்து அரசு புரிந்த ஓர் அசுரவேந்தன். துவட்டாவின் புதல்வியாகிய கசேரு என்பவளை மணந்து காதலின்பத்தைத் துய்த்தான். கொடிய குணமுடையவன். அஞ்சாத நெஞ்சினன். எஞ்சாத வலியினன். பிறர்க்கு இதம் புரிதலைச் சிறிதும் அறியாதவன். பெருங்காமி. பலரும் பிரமிக்கும் அழகிய இளங்குமரிகளைக் கவர்ந்து கொண்டுவந்து தன் நகரிலே வைத்து வலிந்து துய்த்தான். தக்க காவலரை இழந்து இவனால் சிந்தை கலங்கிய மாதர் பலர் வைதமையால் இன்னல்கள் வளர்ந்து பரந்தன. இவன் இருந்த நிலப்பரப்பில் இடை இடையே கொடிய பஞ்சங்கள் தோன்றின. மக்களனைவரும் மிக்க துன்புற்றனர். திருமால் தோன்றி இவனைக் கொன்று தொலைத்தார். அதன்பின் உலகம் மகிழ்ந்தது. அன்று எண்ணெயிட்டு நீராடிய

பல்வகைச் சிற்றுணவுகளையுண்டு நல்லாடை புனைந்து எல்லாரும் களித்தார். இன்றும் அது நடைபெற்று வருகின்றது. அதுதான் தீபாவளியாம். இசையிலா நரகன் தொலைந்தபின் வசையிலா வளங்களை விலர்தந்து நின்றது. (இது பாகவதத்தில் காணப்படும்) புகழ்இல்லாதவன் இருந்த இடமும் விளங்காதென்பது இதனால் கூறப்பட்டது.



(புகழ்

240. மண்புகழ் நன்னன்சேய் வாழ்ந்துயர்ந்தான் நன்னனேன்
கொண்டழிந்தான் என்னே குமரேசா—மண்டும்
வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். (௰)

இ—ள்

குமரேசா! நன்னன்சேய் புகழுற வாழ்ந்தான், நன்னன் வாழ்ந்தும் ஏன் இழிவால் தாழ்ந்தான் எனின், வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார் ஆவர்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர் என்க. வசை—இகழ். இசை—புகழ்.

வசை ஒழிய வாழ்வார்—வசையின்றி வாழ்வார், என்றது புகழ்பெற்று வாழ்வாரை யன்

இசை ஒழிய வாழ்வார்—புகழ் பெறாமல் வாழ்வார்.

புகழ்பெற்று வாழ்பவரே உயிர் வாழ்பவராவர், புகழ் பெறாமல் வாழ்பவர் இறந்தவரேயாவர் என்பதாம்.

செல்வ முதலிய எல்லா நலங்களும் வாய்ந்து சிறந்து வாழ்பவனாயினும் புகழென்னும் மகவைப் பெறவில்லையானால் அவனை இறந்து தொலைந்தவனாகவே மதிக்கவேண்டும் என்பது கருத்து.

இவ்வாழ்க்கைக்குப் பயன் புகழ் ஒன்றே என்பதும் அதனைப் பெற்றவனே உயர்ந்தவன் என்பதும், பெறாதவன் இழிந்த

வனேயாவன் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நன்னன்சேய் இடமும் நன்னன் கண்ணும் காணப்படும்.

## கதை

நன்னன்சேய் என்பவன் வேளிர் குலத் தலைவனாகிய குறுநில மன்னன் புதல்வன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு வருடங்கட்கு முன்னர் என்பர். தொண்டை நாட்



டிலே செங்கண்மா என்னும் நகரிலேயிருந்து இவன் நல்லரசு புரிந்தான். அரசர்க்குரிய உயர் குணங்களெல்லாம் இவனிடம் ஒருங்கே குடிகொண்டிருந்தன. அருந்திறலும் பெருங்கொடையும் திருந்திய பண்பும் பொருந்தி இசை திசை பரப்பி இனிது வாழ்ந்தான். இவனது வீரம் ஈகை அருள் முதலிய குணநலங்களை வியந்து புலவர் பாடியுள்ளனர். அவற்றுட்சில இதனடியில் வருவன;

தொலையா நல்லிசை யுலகமொடு நிற்பப்
பலர்புறங் கண்டவர் அருங்கலந் தரீஇப்
புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகைமாரியும்
இகழுநர்ப்பிணிக்கும் ஆற்றலும் புகழுநர்க்கு
அரசுமுழுது கொடுப்பினும் அமரா நோக்கமொடு
தூத்துளி பொழிந்த பொய்யா வானின்
வீயாது சுரக்கும் அவன் நாண்மகிழ் இருக்கையும்

(பெருங்கௌசிகனார்)

பாடுநர் செலினே,
அருங்கலம் பெறீஇந்த பெருங்கல வெறுக்கை
ஒழியாது சுரக்கும் நன்னன். (அகநானூறு)

இன்னும், வசையொழிய வாழ்ந்த இவனது மாட்சியின்பரப்பு முழுதும் மக்கபடகோம் என்னும் அரிய நூலில் இனிது காணப்படும்.

## கதை 2.

மேற்குறித்த இசைக்குரிசிலின் தந்தையாகிய கன்னன் என்பவன் பெருஞ்செல்வம் பெற்றிருந்தும் இசை ஒழிய வாழ்ந்தான். ஒளவையும் முனிந்து அவன்மேல் வசையொன்றுபாடினார். அதனால் வாழ்ந்திருந்தும் வாழாதவனாய்த் தாழ்ந்து அவமதிக்கப்பட்டான். மகன்பெயர் திசைதோறும் நிற்பத் தன்பெயர் வசையுற்றழிந்தது. வசையொழிய வாழ்ந்தவனே பிறந்தவனாவான், அல்லாத



வன் பிறந்தும் இறந்தவனே என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது.

உயிருடன் இருப்பினும் புகழில்லாதவன் இறந்தவனேயாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

ஒருவன் திரண்டு யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த
உருவமும் புகழுமென்றாங் கவற்றி னாம் காத்தவந்த
மருவிய வுருவமின்றே மறைந்துபோ மற்ற யாக்கை
திருவயர்க் குலகமேத்தச் சிறந்துபின் னிற்குமன்றே.

(சூளாமணி)

(இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்)

புகழ்பெறல் ஒன்றே இவ்வுலகில் ஒருவன் பிறந்துவாழ்ந்த சற்குப் பயன். புகழுடையொருவனை எல்லாரானும் போற்றப்படுவான். அந்தபுகழ் ஒன்றே அழியாது நிற்கும். பத்தேனுலகமும் புகழுடையானையே பேணியழைப்பர். தமது உடல்விடுத்தேனும் மேலோர் புகழுடம்பைப்பெறுவிப்பர் புகழ்பெறாதவன் பிறத்தலினும்பிறவாமைநன்று அவன் எல்லாரானும் இகழப்படுவான். எக்கலைகளைப்பெற்றிருப்பினும் ஒருவன் புகழ்பெறவில்லையானால் அவன் வசையுடையவனேயாவன். அவன் இருந்த நிலமும் விளைவு குறையும். புகழுடையவனே என்றும் உயிருடன் வாழ்பவன், இலலாதவன் இறந்தவனேயாவன்.

24-வது புகழ் முற்றிற்று.

துறவறவியல்.

# ௨௫-ம் அதிகாரம் அருளுடைமை.

அருளாவது எல்லாவுயிர்களிடத்தும் இயல்பாகவே செல்லுகின்ற கருணை. ஈந்து புகழ்பெற வாழ்ந்து வருகின்றமேலோரிடமேபிறவுயிர்களைப் பேணும் இவ் அருளுடைமை உரிமையாக



அமைந்திருக்கும் ஆகலானும் இல்லறத்துக்கு அன்புடைமை போல் துறவறத்துக்கு இன்றியமையாச் சிறப்பினதாதலானும் இஃது ஈண்டு வைக்கப்பட்டது.

241. தொண்ட உடம்புங் கொடுத்தானே ஏன்
கொண்டான் அருளைக் குமரேசா—கண்ட
அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்

குமரேசா! சிமூதன் என்பவன் தன் உடமையையும் கொடுத்து என் அருள்கொண்டான் எனின், செல்வத்துட் செல்வம் அருட்செல்வமே பொருட்செல்வம் பூரியார் கண்ணுமுளவென்க.

பூரியார்—இழிகதார். அருட்செல்வம்—அருளால் வருஞ் செல்வம்; அஃதாவது பிறவுயிர்களைப் பேணி அதனால் எய்தும் மேன்மை.

செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்த செல்வமாவது அருட்செல்வமேயாம்; பொருட்செல்வங்கள் இழிகதாரிடத்தும் உள்ளன என்பதாம்.

புறத்தேயிருப்பதும் அழிவுள்ளதும் வருத்தத்தான் வருவதுமாகிய பொருட்செல்வத்தினும், அகத்தேயுள்ளதும் அழிவில்லாததும் இன்புறத்தோன்றும் இயல்பினதுமாகிய அருட்செல்வமே ஒருவனுக்குச் சிறந்ததென்க.

சிறியாரிடத்தும் பெருந்திவறி சேராழியும் பொருட்செல்வத்திலும் பெரியாரிடத்தே தங்கி உயிர்கள் இன்புறவுயர்கதோங்கும் அருட்செல்வமொன்றே சிறந்ததாதலான் அதனையே ஒருவன் அடையவேண்டுமெயன்பது குறிப்பு.

பொருளுடையவரினும் அருளுடையவரே உயர்ந்தவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிமூதன்பால் உணரப்படும்.

௪௱௪ திருக்குறட் குமரேச வெண்பா.

கதை.

சீமூதவாகனன் என்பவன் மகததேசத்திலிருந்த ஒரு மஹிபதி [illegible] தன்னுயிர்போலவே மன்னுயிர் ஓம்பினன். மரம் செடி கொடி முதலிய ஓரறிவுயிர்க்கும் யாதேனுமோர் [illegible] செய்யினும் அவன் விரைந்துசென்று அவ்வையைப்பரிந்து அகற்றுவான் ஒருநாள் தனியாக ஒரு மலைச்சாரலை யடைந்தான். அங்கே கருடனுக்கும் நாகர்களுக்கும் ஏற்பட்டிருந்த உடன்படிக்கையின்படி ஒவ்வொருவராக முறை வந்து உரிய இடத்தில் அமர்ந்திருக்கின்ற நாககுமாரனைக் கருடன் கவர்ந்துசென்று கொன்று தின்றது. சீமூதன் சென்றிருந்த அன்று முறைப்படி வந்து முன் தங்கியிருந்த ஓர் இளநாககுமாரனைக் கண்டான். அங்கு நிகழுமியல்பினை அவனிடம் வினவியறிந்தான் கலங்கிநிற்கும் அவனது நிலைமையை நினைந்து மிகவும் இரங்கினான். அவனைக்காக்க விரும்பிய அவன் போர்வையைத் தன்மேல் போர்த்துக் குமாரனை யகல அப்பால் போமாறு செய்து தான் குறித்த இடத்தில் படுத்திருந்தான். [illegible] வந்து கருடன் இவனைக்கவர்ந்து சென்று தன் [illegible] இடத்தில் களித்து நின்று தசை முழுவதையும் நசையுடன் உண்டது. அதன்பின் உற்றுநோக்கி வேறொருவன் என்று தெரிந்து நீ யார் என வினவியது. உயிர் நீங்கும் நிலையிலிருந்த சீமூதன் இயல்பினைத் தெய்வ அருளால் அது தெளிந்தது கருடன் வருந்தி சீமூதன் முன்னைப்பழுருவத்தை யெய்தும்படி திருமாலை வேண்ட அவனும் அடைந்தான். பொருட்செல்வத்தை ஒரு பொருளெனமதியாது அருட்செல்வம் பெய்த இப்பேரறிவாளனை அரசரும் போற்றினர். அதுமுதல் அக்கருடனும் கொலையினை விடுத்து அருளுடன் சென்றது. தயாவீரன் என்று வடமொழியில் இவன் போற்றப்படுகின்றான். விரிவை ஆண்டுக் காண்க.

அருட்செல்வமே எல்லாவற்றினுஞ் சிறந்தது என்பது இத

ஒல் கூறப்பட்டது.



242. ஏனோ அருளொன்றே இன்றுணையாக் கொண்டுநின்றோர்
சோனை புத்தர் குமரேசா—நானுக
நல்லாற்றான் நாடி யருளாள்க பல்லாற்றாற்
அஃதே துணை. (2)

-ள.

குமரேசா! புத்தர் அருள் ஒன்றையே துணையாகக்கொண்டு என் உறுதியாக நின்றார் எனின், நல்லாற்றான் நாடி அருள் ஆள்க; பல் ஆற்றான் தேரினும் அஃதே துணையாம் என்க.

அஃதே—அவ் அருளே.

நல் ஆற்றான்நாடி—நல்லநெறியிலே நின்று ஆராய்ந்து, பல் ஆற்றான்—பலவழிகளானும்; அஃதாவது மதவேறுபாடு நூல் வேறுபாடு மக்களுடைய உணர்ச்சி வேறுபாடு முதலிய எல்லாவற்றானும்.

நன்றான நெறியிலே நின்று எவ்வகையாக ஆராய்ந்து தேரினும் அருள் ஒன்றே உயிர்க்கு உறுதுணையாக நிற்கும் ஆதலின் அதனையே ஒருவன் தனக்கு உரிமையாகக்கொண்டு ஒழுகவேண்டும் என்பதாம்.

துணைபோல் காணப்படும் மனைவி மக்கள் ஒக்கல் பொருள் முதலியன எல்லாம் மெய்யாக ஆராயின் பொய்யாகமுடியும் என்பதும், அருள் ஒன்றே உயிர்த்துணையாய் ஒன்றி நிற்கும் என்பதும், அஃதே என்னும் பிரிநிலை ஏகாரத்தால் உணரப்படும்.

மேல், பொருளினும் அருளே சிறந்தது என்றார் இதில் அஃது என்றும் நீங்காது நின்று உதவும் என்றார்.

அருளுடையனாக ஒருவன் ஒழுகவேண்டுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புத்தர்பால் உணரப்படும்.

கதை

புத்தர் என்பவர் இற்றைக்கு இரண்டாயிரத்தைந்நூறு வருடங்கட்கு முன்னர் இப்பரத கண்டத்தின் வடபாகத்தில் கங்கை





யின் கிளைநதியாகிய உரோகிணி என்னும் நதிக்கரையில் விளங்கியிருந்த கபிலபுரம் என்னுந் திருநகரில் அரசு புரிந்த சுத்தோதனன் என்னும் அரசனுக்குத் திருமகனாயவதரித்தார். இவர் தாய் பெயர் மாயாதேவி. மகன் பிறந்த ஏழாம்நாள் இவள் இறந்தாள். சித்தார்த்தன் என்று முதலில் இவர் பெயரிடப்பெற்று வளர்ந்து பருவமுற்றார். பலகலைகளையும் வழுவறக்கற்றார். இவரது உருவ அமைப்பும் வனப்பும் குணங்களும் காண்பவரெவர்க்கும் பெருங்களிப்பூட்டின. பேரருளுடையவர். அரியபிராணிகள் சிறிது வருந்தினும் உடல்நடுங்கி இவர் உள்ளம் பதைப்பார். தேவதத்தன் என்னுந் தன் மைத்துனனோடு ஒரு பூஞ்சோலையில் இவர் உலாவிக்கொண்டிருந்த பொழுது ஒரு பறவையை அவன் எய்தான்; அது தரையில் விழுந்தது. உடனே இவர் உளங்கரைந்து ஓடியெடுத்து அதன் உடலில் பட்டுள்ள அம்பை யரிந்தெறிந்து தனது அழகிய வாயால் ஊதி யூதி அதன் நோவை யாற்றினார்; அது கலங்குவதைக்கண்டு இவர் கண்ணீர் சொரிந்தார். அது பிழைத்துச் சென்றபின் பெருமகிழ்வுற்றார். தேவதத்தனும் இவரது அருளுடைமையறிந்து பெரிதும் நாணினான். நோய்வாய்ப்பட்ட ஒருவனையும், முதிர்ந்து தளர்ந்த மற்றொருவனையும், இறந்துகிடந்த வேறொருவனையும், ஒருநாள் இவர் கண்டார். இரங்கினார். பிணி மூப்பு சாக்காடு நிறைந்ததென்று இவ்வுலகை வெறுத்தார். பெருந்திருவையும் அரம்பையரினும்

சிறந்த அழகியாகிய யசோதரை என்னுந்தனது அருமை மனைவியையும் துறந்து அருளே துணையாகத் தவம்புரிந்தார். அதன் பின் இவர் புத்தர் எனப்பெயர் பெற்றார்.

இதன் விரிவை நீலகேசி முதலிய நூல்களிற் காண்க.

அருளொன்றே உயிர்த்துணை என்பது இதனால் கூறப்பட்டது.

---

243. நாடனொரு நாட்கொண்ட நல்லருளால் துன்பகன்று
கூடினனின் பென்னை குமரேசா—தேடும்
அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். (௫)



இ—ள்

குமரேசா! நாடன் என்பவன் ஒருநாள் கொண்ட அருளினால் வன் துன்பமகன்று இன்பம்பெற்றான் எனின், இருள் சேர்ந்த இன்னா உலகம் புகுதல் அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை என்க.

இருள்சேர்ந்த இன்னா உலகம்—இருள் நிறைந்த துன்பவுலகம்.

அஃதாவது ஒருவகை நரகத்தை. நரகமாவது பாவிகள் தாம் செய்த வினைப்பயனாகிய துன்பங்களை அனுபவித்து வருந்துதற்குரிய இடம். அது, கோரம், அதிகோரம், விபம், ரௌரவம், தாலம், கும்பீபாகம், தமசு, எனப்பலவகைப்படும். அவற்றுள் இங்கே குறிக்கப்பட்டது தமசு என்க. இது எப்பொழுதும் மிக நெருங்கிய இருளையுடையதாய்த் தன்னை அடைந்தவர்க்குப் பொறுத்தற்கரிய துன்பத்தைக் கொடுத்து நிற்கும்.

அருள் நிறைந்த நெஞ்சினை யுடையார்க்கு இருள் செறிந்த துன்பவுலகமென்னும் நரகம் புகுதல் இல்லை என்பதாம்.

அருளுடையார்க்கு நரகம் இல்லையென்க. எனவே அருள் இல்லார்க்கு அஃது உண்மை என்பது பெறப்படும்.

மேல், அருளே ஒருவனுக்குத் துணை என்றார் இதில் அதனை யுடையார் மறுமையில் அடையும் பயனை யுணர்த்தினார்.

அருள் சேர்ந்த நெஞ்சினை அடைந்தபின் ஒருவன் நரகினை யடையான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாடன்பால் உணரப்படும்.

## கதை

நாடன் என்பவன் நிடதமலை யருகில் கானதம் என்னும் ஊரில் இருந்த ஓர் வேடன். இவன் தனது குலமுறைமைப்படி அம்மலைச்சாரலில் வேட்டையாடச் சென்றான். அங்குக் கும்பலாய் இருந்த புறவின் கூட்டங்களில் ஓர் அம்பை எய்தான்.



அதனால் ஐந்து புறாக்கள் சோர்ந்து விழுந்தன. அவை சிறையடித்துத் துடிப்பதை இவன் அருகணைந்து கண்டான். உடனே உள்ளங் கலங்கி கண்ணீர் சொரிந்தான். எவ்வளவு கொடுமை செய்தேன் என்று ஏங்கி இரங்கினான். தன் வில்லை முறித்து வீசி யெறிந்தான். தன் பிறவியை வெறுத்தான். அன்று முதல் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்வதில்லையென்று துணிந்தான். அருள் சேர்ந்த நெஞ்சினனாய் ஆருயிரோம்பினான். முழுவின்பமே முடிவில் அடைந்தான். அருள் சேர்ந்த நெஞ்சினனுக்கு இருள் நரகம் புகுதல் இல்லை என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. அருளுடையார்க்கு நரகம் இல்லையென்பது இதனால் கூறப்பட்டது

244. அன்றாகஞ்சை யுண்டும் அல்லலின்றி யேன்வசவர்
குன்றுஇன் புற்றார் குமரேசா--என்றுமே
மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கிலலென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. (௪)

இ—ள்.

குமரேசா! வசவர் நஞ்சை யுண்டும் துன்பமின்றி என்
இன்பமெய்தினர் எனின், மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு
தன் உயிர் அஞ்சும் வினை இல்லை என்க.

மன்னுதல்—நிலைத்தல். மன் என்னும் அடையான் உயிரி
னது நித்தியத் தன்மை உணரப்படும்.

அருள் ஆள்வாற்கு—அருளையுடையவனுக்கு.

நிலைபெற்ற உயிர்களைப் பேணி அருளைத் தனக்கு என்றும்
உரிமையாக உடையவனுக்குத் தன் உயிர் அஞ்சுதற்கு ஏதுவாகிய
[illegible] உண்டாகாதென்பதாம்.

பிறவுயிர்கள் அஞ்சுதற்கேதுவாகிய கொடுவினையை ஒருவன்
செய்யின், பின் அவன் அஞ்சும்படி வந்து பற்றி அஃது அவனை
வருத்தும் என்பது குறிப்பு.



அருளுடையவனுக்கு அஞ்ச வருவதொரு துன்பம் யாண்
டும் இல்லை என்பது கருத்து. இவ்வுண்மை வசவ தேவர் பால்
உணரப்படும்.

## கதை.

[illegible] தேவர் என்பவர் வடநாட்டிலே கங்காபுரி என்னும்
நகரிலே [illegible]ராசர் என்பவருக்குப் புதல்வராய்ப் பிறந்தார். தா

ப் பெயர் பெற்றவர். இவர், கங்காம்பை என்னும் ஒரு கன்னியை மணந்து இல்வாழ்க்கையிலிருந்தார். பிறிதின் நோயைத் தன் நோய்போல் போற்றும் பொருளுடையவர். செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் பெருவண்மையுடையவர். இவர் இல்லில் இலிங்கத்தெண்பதினாயிரம் அடியவர் ஒரு நாள் உண்டு களித்தார். கொடியவனொருவன் கள்ள வேடந்தரித்து நல்ல அடியவர் போல் அவர் வரிசையில் மெல்லப் புகுந்து உண்ணத் துணிந்தான். உண்மை தெளிந்து அவனைப் பிறர் அடிக்கச் சென்றார். இவர் தடுத்து அவ்வேடதாரியை மெய்யடியவனாகப் பாவித்து நல்லுணவூட்டி அனுப்பினார். இவர் மீது பொறாமையுற்ற அரசன் ஒருவன் இவருக்கு நஞ்சை யூட்டினான். அதனை யுண்டும் அல்லலின்றி யிருந்தார். வெகுண்டு வந்த வெய்ய புலி ஒன்று இவரைக் கண்டதும் மெய் வணங்கி நின்றது. அந்தகற்கேதுவாகிய தீவினை ஒன்றுமின்றி இவர் இன்புற வாழ்ந்தார். அருளுடையார்க்கு அஞ்ச வருந் துன்பம் இல்லை என்பதை உலகம் இவர்பால் ஓர்ந்தது. (இதன் விரிவை வசவ புராணத்தில் காண்க)

தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனாய் இன்பமூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துயர்ந்துபோகுமே.

(சீவக சிந்தாமணி.)

அருளுடையானுக்குத் தீவினை யில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.



245. கண்ட திருக்குறிப்பார் கல்லின்மேல் பாய்ந்துமல்லல்
கொண்டிலர் முன் என்னே குமரேசா—மண்டுமன்ற
அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி. (௫)

குமரேசா! திருக்குறிப்புத் தொண்டர் கல்லின் மேல் பாய்ந்தும் ஒன் அல்லல்கொள்ளவில்லை எனின், அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை என்பதற்கு வளி வழங்கும் மல்லல் மா ஞால மே கரி என்பதாம்.

ஞாலம் என்பது ஆகு பெயராய் அதில் வாழுகின்ற மக்களைச் சுட்டி நின்றது.

வளி வழங்கும் மல்லல் மா ஞாலம்—காற்று இயங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய உலகத்தாரே சாட்சி. வளி—காற்று. மல்லல்—வளம். மா—பெருமை. ஞாலத்துக்கு அடையாய் நின்ற வளி, மல்லல், மா, என்னும் இம்மூன்றும் முறையே மூன்றற் கொன்று ஏதுவாதலை யுய்த்துணர்க.

அருளுடையார்க்கு அல்லல் இல்லை; அதற்குச் சான்று, காற்று உலாவுகின்ற வளமுடைய பெரிய உலகத்தில் வாழ்வாரேயாவர் என்பதாம்.

பிறர்க்கு அல்லலைச் செய்தவரே அல்லலை அடைவர்; அருளுடையார் அதனை யாண்டும் செய்யாராதலான் அஃது அவர்க்கு இல்லையாயிற்று; இல்லாததொன்று என்றும் எவராலும் காணப்படாது; ஆதலான் அதனைக் கண்டு கூறுதற்கு உரியார் ஒருவரும் இலர் என்னும் துணிவால் "ஞாலங் கரி" என்றார்.

அருளுடையொருவன் அல்லலையடைந்தான் என்று உலகத்தில் ஒருவரும் கண்டதில்லை என்பது குறிப்பு.

24-ம் அதிகாரம் அருளுடைமை. 481

அருளுடையான் தானே வலிந்து அல்லலை அடையவிரும்பி

னும் அல்லல் அவரை யடையாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை திருக் குறிப்புத் தொண்டர் பால் காணப்படும்.

கதை

திருக்குறிப்புத் தொண்டர் என்பவர் அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர். தொண்டை நாட்டிலே காஞ்சி மாநகரிலே பிறந்தார். இவர், ஆடை யொலிக்கும் வண்ணார் மரபினர். மெய்யுயிர் மாட்டுக் கருணையுடையவர். சமய இயல்புடைய அடியார்க்கு உதவி புரிந்து வந்தார். மெய்ஞ்ஞானி போல் அருள் புரிந்து வரும் இவரது பெருந் தன்மையை உலகிற்கு உணர்த்த விரும்பி இறைவன் ஓர் அடியவர் போல் வந்தார். குறிப்பு அறிந்து உதவி புரியும் இவர், அவரைக் கண்டார். அவரது பழுத்த ஆடையை வாங்கி வெளுத்துத் தர விரும்பினர். மெய்ப்பா பெற்று வெளுத்துப் பிழியுங்கால் மழை விடாது பெய்தது. குளிரால் நடுங்குவது போல் அவர், உடல் நடுங்கினர். அவரது மெய் நடுங்கும் பொய்த் தன்மையைக் கண்டு இவர் பொருது வருந்தினர். அவரைப் பேண முடியவில்லையே யென்று காளிக் கல்லின் மீது கடுகப் பாய்ந்தார். தில்லை இறைவன் ஒல்லெனத் தோன்றி இன்னருள் புரிந்தே தன்னுருக் காத்தார். கல்லிடை மோதியும் இவர் அல்லலில்லாதவராய் அருளில் எய்திப் பின் பேரின்ப மெய்தினர். குறிப்பறிந்து பிறவுயிர்கட்கு அருள்புரிந்தமையான் இவர் திருக் குறிப்புத் தொண்டர் எனப் பெற்றார். அருளாளர்க்கு அல்லல் இல்லையென்பதை இவர் அன்று காட்டி நின்றார். இதன் விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

அருளுடையார்க்கு அல்லல் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

246\. அன்றேன் சமணர் அருளிங்கி யல்லசெய்தார்
குன்றினர் பின்பேன் குமரேசா—என்றும்
பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்பர் அருணீங்கி
அல்லவை செய்தொழுகு வார். (௬)

இ—ள்.

குமரேசா! முனைவர் அருளை ஒழிந்து அல்லன செய்த சமணர் என் பின்னர் அழிந்தார் எனின், அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார் பொருள் நீங்கிப் பொச்சாந்தார் என்பர் என்க.

அல்லவை—கொடுமைகள். பொச்சாப்பு—மறதி, தீது.

பொருள் என்றது இங்கே உறுதிப் பொருளாகிய அறத்தை என்க. மெய்ப்பொருள் எனினுமாம். பொச்சாந்தார்—மறந்தவர்

அருளைத் தவிர்ந்து கொடுமைகளைச் செய்து ஒழுகுவார் உறுதிப் பொருளை இழந்து தாம் பின் வருந்துமின்றமையை மறந்தவர் என்று நல்லோர் சொல்லுவர் என்பதாம்.

அருளிழந்து தீமைகளைச் செய்வோர் பொருளிழந்து பின் கெடுவர் எனவும் இது பொருள்படும்.

பிறர்க்குத் தீமை செய்யின் அது தமக்கே யாம் என்பதை மறவாதவர் அருள் நீங்கி அல்லவை செய்யார்; ஆதலான செய்தொழுகுவார் பொச்சாந்தார் என்க.

அருளிலாதவர் அறமும் பொருளும் இழந்து பெருந் துன்பம் அடைவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சதமன சமன் முதலிய சமணர் பால் காணப்படும்.

## கதை.

இற்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் பாடலிபுரத்தில் சமணர் பலர் குழுமி இருந்தனர். அவரனைவருங் கொல்லா விரதங் கொண்டவராயிருந்தும செற்ற மிகுதியால் அருள் நீங்கி திருநாவுக்கரசு நாயனாருக்குக் கொடுமைகள் பல செய்தனர். அதன் பயனாக உறுதிப்பொருள் முழுதும் இழந்து அல்லலடைந்தார். அவருட் சிறந்தவராயிருந்த சதமன் சமன் முதலிய குருமார் பலரையும் உண்மை தெளிந்த அந்நாட்டு வேந்தன் ஒறுத்த

சுற்றினன் அது முதல் அவரெல்லாரும் சிதறுண்டு அழிந்தார்.



அருள் நீங்கினர் பொருள் நீங்கிப் புன்மையுறுவர் என்பதை உலகம் இவர் பாலோர்ந்தது.

(இதன் விரிவை அவர் சரிதையில் காண்க)

அருளில்லாதவர் உறுதிப் பொருளையிழந்து பின் வருந்துவர் என்பது இதனால் கூறப்பட்டது.

247. அன்றநாளில் காமந்தன் அவ்வுலகில் இன்பமின்றிக்
குன்றிநொந்தான் என்னே குமரேசா - நன்றும்
அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு (எ)

குமரேசா! காமந்தன் என்பவன் அவ்வுலகில் இன்பம் சிறிதும் பெறாமல் ஏன் பெரிதும் வருந்தினான் எனின், பொருள் இல்லார்க்கு இவ்வுலகத்தில் இன்பம் இல்லையானாற் போல அருள் இல்லார்க்கு அவ்வுலகில் இன்பம் இல்லை என்க.

அ என்னும் சேய்மைச் சுட்டு துறக்கத்தைச் சுட்டி நின்றது. முத்தியை எனினுமாம். அவ்வுலகம் இவ்வுலகம் என்பன இடவாகு பெயர்களாய் ஆண்டும் ஈண்டும் அனுபவிக்கப்படும் இன்பங்களைக் குறித்து நின்றன.

இல் ஆகி ஆங்கு—இல்லையாயினாற்போல்.

பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலகத்தில் இன்பம் இல்லையாயினாற்போல அருள் இல்லாதவர்க்கு அவ்வுலகில் இன்பம் இல்லை என்பதாம்.

பொறிகளின் நுகர்ச்சிக்குரிய உணவு உடை முதலியன எல்லாம் பொருளாலேயே உளவாம்; அஃதொன்று இல்லையானால் அவை யாவும் இலவாம்; ஆதலான் பொருள் இல்லார்க்கு இவ்வுலகத்து இன்பம் இல்லையாயிற்று என்க.



அவ்வுலக இன்பக்கட்கு அருளே காரணம் என்பதை உணர்த்துதற்குப் பொருளை எடுத்துக் காட்டினார் அதன் இயல்பு எல்லார்க்கும் எளிதில் தெரியும் என்பது கருதி.

அருளில்லாதவனுக்கு அவ்வுலகத்து இன்பமில்லை யென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காமந்தன்பால் காணப்படும்.

## கதை.

காமந்தன் என்பவன் சித்திருவன் என்னும் ஒரு தனவணிகன் புதல்வன். தாய் பெயர் சுலோசனை. இவன், குடும்பினி என்னும் ஒருத்தியை மணந்து இல்வாழ்க்கை புரிந்தான். பொருள் வளமுடையவனாயிருந்தும் உளத்தில் அருள் சிறிதும் இலனாய் உயிர்களுக்கு அல்லலே செய்தான். வேதியனொருவனைத் தீதுறக் கொன்றான். தன் செல்வமெல்லாமிழந்தான். பின், பசி நோயால் மெலிந்து முன்னைய நிலைமையை யெண்ணி யெண்ணி யேங்கினான். இறுதியில் இறந்தொழிந்தான். அவ்வுலக இன்பம் இலனாய் நரகில் பெருந்துன்பமெய்தினான். பொருளுடையனாய் இங்குப் பெருமை யெய்தியிருந்த இவன் அருளின்மையால் அங்குச் சிறுமையே யடைந்தான். (இதன் விரிவை விநாயக புராணத்தில் காண்க)

அருளில்லாதவனுக்கு மறுமை யின்பமில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.

248. அற்றபொருள் பூத்தார்பின் ஐவரக்த நாற்றுவரேன்
குற்றமுற்றே தாழ்ந்தார் குமரேசா—உற்ற
பொருளற்றார் பூப்ப ரொருகால் அருளற்றார்
அற்றார்மற் றாத லரிது. (அ)

இ—ள்.

குமரேசா! முன் இழந்த பொருளைப் பின் ஐவர் பெற்றன் நூற்றுவரும் குற்றமுற்றே தாழ்ந்தார் எனின், பொ



ருள் அற்றார் பூப்பர் ஒருகால் அருள் அற்றார், அற்றார் மற்று ஆதல் அரிது என்க. பூப்பர்—தோன்றி விளங்குவர்.

அருள் அற்றார் அற்றார் மற்று ஆதல் அரிது—அருள் இல்லாதவர் அழிந்தாரே யாவர் பின் என்றும் ஆதல் இல்லை.

மற்று என்பது அற்றார் என்னும் வினைக்கு மறுதலையாய் ஆனார் என்பதை விளக்கி நின்றது ஆகலான் அஃது இங்கு வினைமாற்றின் கண் வந்தது. மற்று ஆதல் அரிது—அழியாமல் ஆதல் இல்லை.

பொருளை இழந்தவர் பின் அதனை ஒருகால் பெறினும் பெறுவர் அருளை யிழந்தவர் அழிந்தாரே யாவர் பின் என்றும் ஆதல் என்பதாம்.

இம்மை மறுமை இன்பங்கட்குப் பொருளும் அருளும் முறையே காரணமாமென்று மேலே கூறினர் இதில் அதனினும்

இது சிறந்ததெனபதை பேதுவான் விளக்கினர்.

பொருள் இல்லாதவன் அதனையுடையார் எய்தும் பெருமை யையுணர்ந்து தானும் முயன்று ஒருகால் அதனைப் பெறுதலும் கூடும்; அருளில்லாதவன் கொடுமையே மிகுந்து தெளிவொன்று மின்றி முடிவில் அழிவேயெய்தி ஒழிவான் என்பதாம்.

வறியர் பொருள் பெறினும் கொடியர் நலமடைவதில்லை என்பது கருத்து. இவ்வுண்மை ஐவர்பாலும் நூற்றுவர் கண்ணும் அறியப்படும்.

## கதை 1.

தருமர் முதலிய ஐவரும் நாடிழந்து காடுறைந்து வாடியிருந்தார். பதின்மூன்று வருடங்கழிந்தபின் இழந்த பொருளெல்லாம் எய்தப்பெற்று இன்புற்று வாழ்ந்தார்.

486 திருக்குறட் குமரேச வெண்பா.

## கதை 2.

துரியோதனன் முதலாயினோர் பொருளுடையராய் இருந்தும் அருள் இல்லாராயினர். அதனால் எல்லாராலும் இகழப்பட்டு இழிந்தார். பெருமையெல்லாம் இழந்தார். சிறுமைமுழுதும் அடைந்தார். இறுதியில் இழிவே யெய்தியழிந்தார். அவ்வுலகத்து இன்பம் யாதும் இன்றி நரகத்துன்பத்தையே நண்ணினைந்தார். பொருள் அற்றார் ஒருகால் பூப்பர் என்பதும் அருள் அற்றார் பின் ஆதல் அரிது என்பதும் முறையே இவ்விருதிறத்தார் கண்ணும் உலகம் கண்டு தெளிந்தது

(விரிவு அவர் சரிதையில் தெளிவாம்.)

கலையெலாம் உணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனும்
மலையென உயர்ந்தா னேனும் மனமய லகன்றா னேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய வைய னேனும்
இலகிய இரக்க மின்றேல் எழுநர கடைவ னன்றே.

(பதிபசு பாசவிளக்கம்.)

அருளில்லாதவர் இழிவெய்தி அழிவார் என்பது இது கூறப்பட்டது.

249. அன்று சதானீகன் அறஞ்செய்தும் ஏனிழந்து
குன்றினான் இன்பம் குமரேசா—என்றும்
தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம். (௯)

குமரேசா! சதானீகன் என்பவன் அறஞ்செய்திருந்தும் ஏன் அதன் பயனை யிழந்து துன்பம் எய்தினான் எனின், அருளாதான் செய்யும் அறம் தேரின், தெருளாதான் மெய்ப்பொருளைக் கண்டற்று என்க.



அருளாதான் — அருளில்லாதவன்.
தெருளாதான்—அறிவில்லாதவன்.
கண்டு அற்று—அறிந்தாற் போலும்.

மெய்ப்பொருள் என்றது மெய்ந்நூல்களில் சொல்லப்படுகின்ற உண்மைப் பொருளை; அறப்பொருள் என்க. பரம்பொருளுமாம்.

அருள் இல்லாதவன் செய்யும் அறத்தை ஆராயின் தெளிவான அறிவில்லாதவன் நூற்பொருளை அறிந்தாற்போலும் என்பதாம.

தெளிந்த அறிவில்லாதவன் ஒருகால் மெய்ப்பொருளைக் கண்டானி லும் அஃது அவனுக்கு நிலைபெறாததுபோல நிறைந்த அருளில்லாதவன் அறஞ்செய்யினும அதன் பயனை அவன் அடையான் என்பது கருத்து.

ஒருவன், புறத்தில் எத்துணை அறஞ்செய்யினும் அகத்தில் அருளில்லையானல் அதனால் அவனுக்கு யாதும் பயனில்லை என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சதானீகன் பால் உணரப்படும்.

கதை.

சதானீகன் என்பவன் நாவலந்தீவின் மேல்பாகத்திலிருந்து அரசுபுரிந்த ஒரு முடிபுனை மன்னன். பெருவலி படைத்து நெறியுடன் ஆண்டவன். செயற்கரும் வேள்விகள் பல செய்து முடித்தான். அன்னதான முதலிய சிறந்த அறங்களைச் செய்தான். ஆயினும் குடிகளை வருத்திப் பெரும்பொருள் ஈட்டினன். இவனது அருளின்மையை நினைந்து அறிஞர்பலர் வருந்தினர். அதன் பயனாக இவன் அறப்பயனை இழந்தான். இறந்தபின் நரகதுன்பத்தை யெய்தினன். அருந்தவராகிய பார்க்கவ முனிவர் எமபுரம் சென்றிருந்தபொழுது இவனைச் செக்கிலிட்டு எமபடர் சிதைப்பதைக் கண்டார். முனிவர் வருந்தி யருகில் அணைந்தார்.



அரசே! நீ அறம் பல புரிந்தும் ஏன் இப்பெருந்துயருறுகின்றாய் என்றார். முன்னர் அருந்திறலும் பெருந்திருவும் பெற்றிருந்தும் அருளிலனாயினேன். அதனால் எனது அறப்பயன் முழுதையும் இழந்து இப்பெருந்துயருழந்து பேதுறுகின்றேன் என்றான்.

முனிவர் இரங்கி இந்நிலவுலகில் வந்து அவன் மகனைச் சதுர்த்தி விரதம் கொள்ளச்செய்து அதனால் அவன் பவமொழிந்து உயர் நிலையடையும்படி செய்தார். அருளில்லாதவன் அறஞ்செய்யினும் அதனால் அவன் பயன் எய்தான் என்பதை உலகம் இதனால் உணர்ந்தது. (இதன் விரிவைச் சிவபுராணத்தில் காண்க)

அருளில்லாதவன் அறம் புரியினும் அஃது அவமே அழிவு மென்பது இதனால் கூறப்பட்டது.

250. தாசரதி முன்பரசு ராமன் தன்னிலைநினைந்து
கூசினான் பின்போன் குமரேசா—கூசும்
வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. (ய)

இ—ள்

குமரேசா! தசரத ராமன் முன், பரசுராமன் தனது நிலையினையுணர்ந்து பின் யார்மாட்டும் தீதுசெய்யாமல் ஏன் அடங்கினான் எனின், வலியார்முன் தன்னை நினைக்க தன்னின் மெலியார்மேல் தான் செல்லும் இடத்து என்க.

தன்னை நினைக்க—தனது நிலையினை எண்ணுக.

தன்னினும் வலியார், தன்னை நலிய வரும்பொழுது தான் அவர் முன் அஞ்சி நிற்கும் நிலையினை ஒருவன், தன்னினும் மெலியார்மேல்தான் நலியச்செல்லும்பொழுது நினைக்கவேண்டும் என்பதாம்.

உடற்குத் துணையாகிய பொருள் முயற்சியாலும், உயிர்க்குத் துணையாகிய அருள் உணர்ச்சியாலும் உண்டாம் என்பது கருத்து

பிறர் தன்னை வருத்தவருங்கால் தான் நெஞ்சம் பதைப்பதை ஒருவன் உய்த்துணர்வனாயின் அவன் பிறவுயிர்களை நலியத்துணியான் எனபது கருதி "வலியார் முன் தன்னை நினைக்க" என்றார்.

அருளுடைமையை ஒருவன் அடைதற்கு இது வழியா மென்க.

தன்னுயிர்க்கு இன்னாமையை ஒருவன் உணர்ந்தபின் பிறவுயிர்கட்கு அவன் துன்பம் புரியான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரசுராமன்பால் உணரப்படும்.

கதை.

பரசுராமன் என்பவர் சமதக்கினி முனிவரது தலைமைப் புதல்வர். மாலின் கலையாய் வந்தவதரித்தவர். அருந்தவமும் பெருந்திறலும் அஞ்சா நெஞ்சமும் அமையப்பெற்றவர். சூரிய குலத் தோன்றலாகிய கார்த்தவீரியனை இவர் கொன்றுசென்று தெரிந்து அவன் புதல்வராகிய சயகதுவசன வீரசேனன் என்னும் இருவரும் வந்து இவரது தாதையைக் கொன்று சென்றார். அதனால் இவர் பெருஞ்சினங்கொண்டார். அக்குல முதல்வர் எல்லாரையும் கொன்று தொலைத்தார். இருபத்தொரு தலைமுறையாகக் கருவறுத்து வந்த இவர், தசரத இராமனையும் கண்டு சினந்தார். அப்போர் வீரனால் இவர் வன்மை முழுவதும் இழந்து புன்மையடைந்தார். அவர் முன் அஞ்சி நின்று நெஞ்சம் பதைத்தார். அவரது போராற்றலை வியந்து தொழுது விடைகொண்டு சென்றார். அதுமுதல் தன்னின் மெலியாரை நலியச் செல்லும் கொடுமை நீங்கினார். அருளுடையராய் அருந்தவம் புரிந்தார். வலியார் முன் தன் நிலைமையை நினைக்கவன் மெலியார்மேல் தான் நலியச் செல்லான் என்பது இவர்பால் தெளிய நின்றது.

(இதன் விரிவை இராமாவதாரத்தில் காண்க.)

இறப்ப நமக்கடுத்த எவ்வமோ யாவும்

பிறர்க்குமஃ தாமென்று கொண்மின்—உறக்கருதி
எவ்வா றுமக்குறுதி வேண்டுதிர்நீர் எல்லார்க்கும்
அவ்வாறே எண்ணல் அறம். (பெருந்தேவனார்.)

490 திருக்குறட் குமரேச வெண்பா.

பொருளுடையான் கண்ணதே போகம் அறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்—அருளுடையான்
செய்யான் பரிபாவம் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து. (சிறுபஞ்சமூலம்)

தன்னுயிரைப் போலவே பிறவுயிர்களையும் பேணவேண்டு மென்பது இதனுள் கூறப்பட்டது.

### இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

அருளுடைமையே செல்வங்களெல்லாவற்றினும் ஒருவனுக்குச் சிறந்த செல்வம். அருளே உயிர்க்கு உறுதுணை. அருளை யுடையார்க்கு நரகம் இல்லை. அவர் அஞ்சத்தக்கிய துன்பம் யாண்டும் இல்லை. அவர்க்கு இம்மையில் அல்லல் எதும் இல்லை. அருளிழந்து அல்லவை செய்வோர் பொருளிழந்து பொல்லாங் செய்தவர். அருளிலார்க்கு அவ்வுலகத்து இன்பம் இல்லை. அருளிழந்தவர் அழிவே செய்துள்ளார். அருளில்லாதவன் செய்யும் அறமும் பழுதாம். தன்னுயிர்போலவே பிறவுயிர்களையும் பேண வேண்டும்.

25-வது அருளுடைமை முற்றிற்று.

## உ௬-ம் அதிகாரம் புலான் மறுத்தல்.

அஃதாவது ஊன் உண்ணாமை. புலால்—ஊன். மறுத்தல்—உண்ணாது விடுதல். தன்னுயிரைப்போலவே பிற உயிர்களையும் பேணும் அருளுடையார் கண்ணேதான இவ்வுயர் நலம் இயல்புற அமையும், ஆகலான் அதன்பின் இது வைக்கப்பட்டது.



251. அன்றேறன் அருளின்றி ஆதனென்பான் அன்றிலொன்றைக்
கொன்று சிதைத்தான் குமரேசா— நன்றாகத்
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூன் உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். (க)

குமரேசா! மருவி மகிழ்ந்த அன்றில் பறவையை ஆதன் என்பவன் அருள் இல்லாமல் கொன்றான் எனின், தன் ஊனைப் பெருக்குதற்குத் தான் பிறிதின் ஊனை உண்பான் அருளை எங்ஙனம் ஆளுவான் என்க.

பசுவை உணர்த்தும் ஆ என்னுஞ்சொல் ஆன் என நிற்றல் போல் ஊ என்னும் நெடுங்கணக்கு ஓர் மொழியாய் அமைந்து தசையை உணர்த்தி னகரச்சாரியை பெற்று ஊன் என நின்றதென்க. ஊ என் ஒரு பெயர் ஆவொடு சிவணும்.
(தொல்காப்பியம்)

தன் ஊன் பெருக்கற்கு = தன் உடம்பைப் பருக்கச்செய்தற்கு.
பிறிது ஊன் உண்பான் = பிறிதொன்றின் உடம்பைத் தின்பவன்.
அருள் எங்ஙனம் ஆளும் = அருளை எவ்வகையால் ஆள்வான்?
எங்ஙனம் என்னும் வினா எதிர்மறைமேல் நின்றது.

தன் உடம்பைப் பருக்கச் செய்வதற்குப் பிறிதொன்றின் உடம்பைத் தின்பவன் எவ்வகையால் அருளினை ஆள்வான் என்பதாம்.

ஊனை உண்டவனை ஒருவகையாலும் அருளினை உடையவனு

கான் என்பது குறிப்பு.

தம் உடம்பைத் தாம் பேணுமாறு போல் பிற உயிர்களும் அவற்றின உடம்புகளைப் பேணுமே யென்னும் உணர்வில்லாமல் அவற்றைச் சிதைத்துத் தின்னும் கொடியோர்பால் அருள் ஒரு சிறிதும் உண்டாகாதென்பதாம்.

62



ஊனை உண்போன் அருளுடையனாவானா? என்பாரை நோக்கி இது கூறியுள்ளதாக அமைந்தமை காண்க.

புலாலுண்போன் இரக்கமின்றி உயிர்களை வருத்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆதன்பால் அறியப்படும்.

## கதை.

ஆதன் என்பவன் ஏமகூடம் என்னும் மலைச்சாரலில் இருந்த ஒரு வேடுவன். காடு புகுந்து விலங்குகளையும் பறவைகளையுந் தேடிக்கொன்று அவற்றின் தசைகளையே உணவாகக் கொண்டு வாழ்ந்தான். பிராணிகளெல்லாம் இவனைக் கண்டவுடனே கலங்கி நடுங்கும். ஒரு நாள் வில்லுங் கணையும் வாளும் கண்ணியுங்கொண்டு செழித்த வனமொன்றில் இவன் புகுந்தான். அங்கே ஓர் உயர்ந்த மாக்கிளையில் பெடுஞ் சேவலுமாகிய இரண்டு அன்றில் பறவைகள் ஒன்றோடொன்று மருவி மகிழ்ந்து கொண்டிருந்தன. மூக்கால் கோதியும் சிறகால் அணைத்தும் கழுத்தோடு கழுத்துப் பிணைந்தும் இணைந்திருந்த அவற்றை இவன் கண்டான். காதலால் களித்திருக்கும் அவ் அழகிய பறவைகளின் தசையினை யுண்ண நசைமீக்கொண்டான். மறைந்து நின்று ஒரு கணையை விரைந்து விடுத்தான். அது பட்டது. உடனே அவற்றில் ஒன்று பதைத்து விழுந்தது. துணைபிரிந்த சேவலும் துடித்துச் சோர்ந்தது. அக் கொடிய காட்சியை வான்மீகி முனிவர் கண்டு பெரிதும் இரங்கினார். அருளின்றிக்

கொன்று நின்ற அக்கொடியவனை வெருண்டு வைதார். ஊன் உண்போனுக்கு அருளுண்டாகாதென்பதை உலகர் அவன் பா லுணர்ந்தனர். (இதன் விரிவை வான்மீகத்தில் காண்க)

ஊன் உண்பவனுக்கு அருளில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.

---

252 அன்றேன் உதிரன் அருளின்றி யந்தணனைக்
கொன்றானைத் தின்றான குமரேசா—என்றும்
பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்தின் பவர்க்கு (2)

26-ம் அதிகாரம் புலான் மறுத்தல். 493

இ—ள்

குமரேசா! உதிரன் என்பவன் அருளின்றி ஓர் அந்தண னைக் கொன்று ஏன் தின்றான் எனின், பொருள் ஆட்சி போற்றா தார்க்கு இல்லை யாங்கு அருள் ஆட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை என்க.

பொருள் ஆட்சி—பொருளினை ஆளுதல்.
அருள் ஆட்சி—அருளுடையனாதல்.
அங்கு—அதுபோல; இஃது உவமவுருபு.

பொருளால் பயன் கொள்ளுதல் அதனைப் பேணாதவர்க்கு இல்லையாயினாற் போல அருளால் பயன் பெறுதல் ஊன் தின்ப வர்கக்கு இலலையாம் என்பதாம்.

புலால் உண்பவர்க்கு அருள் உண்டாகாது என்று மேற்கு றித்த உண்மையை இதில், உவமையால் விளக்கினார்.

இம்மை இன்பத்திற்கு ஏதுவாகிய பொருளும் மறுமையின் பத்திற்கு ஏதுவாய அருளும் முறையே போற்றுத லாலும் புலாலுணவைப் போக்குதலாலும் ஒருவனுக்கு உளவாம் என் பதாம்.

கருத்தூன்றிக் காவாமையால் பொருட் கேடும் புலால் மறுக்காமையால் அருட் கேடும் உண்டாம் என்க.

ஊன் உண்போனுக்கு அருளில்லை யென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உதிரன் பால் உணரப்படும்.

உதிரன் என்பவன் ஓர் அரக்கன். வசிட்ட முனிவரது கோபத்தால் விளைந்த சாபத்தை யடைந்தவன். அருந்ததி யென்னும் மலையை யடுத்திருந்த ஒரு பெரு வனத்துட் புகுந்தான். அங்குள்ள விலங்கின் கணங்களைக் கொன்று கொன்று தின்றான். கொடுமையே மிகுந்தான். வனமெங்கும் திரிந்தான்.



ஒரு நாள் புது மணம் புரிந்து தன் மனைவியுடனே அவ் வழியே வந்த ஓர் அந்தணனைக் கண்டான் அவனைத் தின்னக் கருதினான். சினந்து ஓடோடிப் பற்றினான். அவன் மனைவி நடு நடுங்கி அரக்கர் பதியே! என்று கூவி அவன் அடியில் விழுந்தாள். அழுது தொழுதாள். மங்கலப் பிச்சை கருணையொடு தன் செங்கை நீவினாள். உதிரன் அருள் சிறிதுமிலனாய் அவ

னைக் கொன்றான். உயிர் குடித்தபின் ஊன் தின்று சென்றான்.

தன்றுணைத் தடங்கண் நீர்ஒழுகக் கடக்கிற் றனைவிட்
டொழுக நின்றிரக்கிக
அன்றவளைத் திடுக்கச் சொற செவிக் கொலையாளனே யந்தணன்
மைந்தனை விரைவில
கொன்றுடற் குருதி பிழிந்து முன் குடித்துக் கொழுந்தசை
சுரித்தகல்வாயின்
மென்றுடனருந்திப் பைங்கொடிக் கெதிராய் வெள்ளெலும்
பனைத்தையும உமிழ்ந்தான்.

இக் கொடுமையைக் கண்டு மணமகளும் பதைத்து மாய்ந்தாள். ஊன் தின்பவனுக்கு அருளாட்சி யில்லையென்பதை அக் கொடிய உயிரான் அன்று காட்டி நின்றான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

ஊன் தின்பவன் அருளிலியாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

[ண்ணிக்

---

253. வில்வலன் வா தாவியென்பார் மெய்த்தவர்க்குக்கேடெ
கொல்வினையேன் செய்தார் குமரேசா—கொல்லும்
படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை யுண்டார் மனம். (௫).

இ—ள்.

குமரேசா! வில்வலன் வாதாவி என்பவர் ஏன் முனிவர்க்குக் கேடெண்ணிக் கொலை வினையைச் செய்தாரெனின்

ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம், படை கொண்டார் நெஞ்சம் போல் நன்று ஊக்காது என்க.

உடல்சுவை உண்டார் — பிற உடலைச் சுவையாகக் கொண்டார். படை என்றது வில், வாள், ஈட்டி முதலிய கொலைக் கருவிகளை. நன்று என்றது அருளை. எல்லா நன்மைகளுக்கும் அருளே காரணமாதலான் அஃது நன்று என நின்றது.

ஊக்காது — ஒன்றி நோக்காது.

கொலைக்கருவியைத் தம் கையில் கொண்டவர் நெஞ்சம் கொலையையே நோக்குவதல்லது கொல்லாமையை நோக்காது அதுபோல் பிறிதொன்றின் உடலைச் சுவைபட உண்டவர் மனம் அவ்வூன் உணவையே நோக்குவதல்லது அருளை நோக்காது என்பதாம்.

விழிகளால் எளிதில் காணப்படுமென்பது கருதியே உடல் உண்டார் இயல்பை விளக்குதற்குப் படைகொண்டாரை உவமை காட்டினார்.

புலி, ஓநாய், முதலிய கொடிய விலங்குகள் போல் கண்டபடியே உண்ணுபவர் என ஊனை இன் சுவைத் தாக்கியே அருளில் மக்கள் உண்பர் ஆதலான் "சுவை உண்டார்" என்றார்.

ஊனை உண்போர், என்றும் தீவினைகளையே எண்ணுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை வில்வலன் வாதாவியென்னும் இவர்கள் பால் உணரப்படும்.

கதை.

வில்வலன் வாதாவி என்பவர் சூரபன்மனது தங்கையா

கிய அசமுகியின் புதல்வர். தீமையும் வஞ்சமும் செறிந்த நெஞ்சினர். மாயைகள் பலவும் நேயமொடு பயின்றார். பிறவுயிர்களுக்கு இவர் நோயென வளர்ந்தார். பேயெனத் திரிந்தார். பறவைகளையும் விலங்குகளையும் கொன்று தின்று களித்தார்.



பின்னர் மனிதர்களையுந் தின்ன விரும்பினர். அதனால் முன்னவன் முனிவன் போலவும் பின்னவன் ஆடு போலவும் வேடங்கொண்டு முனிவர் வாழும் வனங்களிற் புகுந்தார். முனி வடிவங்கொண்ட வில்வலன் வழியிடையிற் குடிசை யமைத்துத் தவம் புரிபவன் போலிருந்து வருகின்றவர்களை அழைத்து விருந்து செய்வதாகக் கூறி அவ் ஆட்டினைச் சமைத்து அவர் அறியாமல் ஊட்டுவன். உடனே வயிற்றைக் கீறி வாதாவி வெளியே வருவான். இறந்து பட்டவுடம்பை அதன்பின் அவ் இருவரும் தின்னுவர். இவ்வாறு ஊனை விரும்பித் தீமையே புரிந்தார். உடல் உண்டார் மனம் அருளை நோக்காதென்பதை யிவர், அறியக் காட்டி இறுதியில் அகத்தியரால் அழிந்து தொலைந்தார். (இதன் விரிவைக் கந்த புராணத்தில் காண்க)

ஊன் உண்போர் தீவினைகளையே எண்ணுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

254. உற்ற அரிவிசயர் ஊன்தின்றல் பாவமென்றேன்
கொற்றவைமுன் சொன்னார் குமரேசா—பற்றும்
அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். (௪)

குமரேசா! ஊன் தின்னல் பாவமென்று என் காணிமுன் அறிவிசையர் சொன்னார் எனின், அருள் அல்லது, யாதெனின் கொல்லாமை கோறலே ஆகலான் அவ் ஊன் தினல் பொருளல் லது எனக.

அருள் யாது எனின் கொல்லாமையே, அல்லது யாது எனின் கோறலே எனக்கொண்டு காண்க.

அல்லது — அருளல்லது; கொடுமை எனக.
கோறல்—கொல்லுதல்.

26-ம் அதிகாரம் புலான் மறுத்தல். 497

அருளும் அல்லதும் யாது எனின் கொல்லாமையும் கோற லும் ஆம் என முறையே கொள்ளினும் அமையும்.
பொருள் என்றது இங்கே உறுதிப் பொருளாகிய அறத் தை. பொருள் அல்லது—பாவம்.

அருள் கொல்லாமையாம்; அல்லது கொல்லுதலாம்; ஆத லால், அக் கொலையால் வரும் ஊனைத் தின்னுதல் பாவம் என்ப தாம்.

அருளின்மையால் கொலையும், அக் கொலைப் பாவத்தால் ஊனும் உண்டாம் ஆதலால் அதனைத் தின்கை பாவமாம் என்க. ஊன தின்போன், கொலைப் பாவியாய் அருளிழந்து இருள் நர கம் புகுவன் என்பது கருத்து.

ஊன் தின்னல் ஆகிய தீவினையை அருளுடையார் யாண் டும் புரியார் என்பது குறிப்பு. இவ் வுண்மை அறிவிசையர்பால் அறியப்படுமே.

ஊனை விழுங்கினவரை நரகம் விழுங்கி உமிழாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது பகன் பால் காணப்படும்.

### கதை.

பகன் என்பவன் ஓர் அசுரன். ஏக சக்கிரம் என்னும் பெயரினையுடைய ஒரு வனத்திலிருந்து ஆங்குள்ள உயிர்களையெல்லாம் கொன்று அவற்றின் உடல்களைத் தின்று வாழ்ந்தான். அதனால் அங்குள்ள பறவைகளும் விலங்குகளும் தேய்ந்தன. அதன்பின் அதனை அடுத்திருந்த வேத்திரகீயம் என்னும் பதியுள் இரவில் புகுந்து எதிர்ப்பட்ட மக்களையெல்லாம் பதைக்கக் கொன்று பழிபடவுண்டான். அவன் ஊன் உணவால் உயிர்கள் நிலைபேறின்றி அழிவடைவதை அவ்வூரார் நோக்கி உள்ளம் கலங்கி அவனைப் பணிந்து வேண்டினர். நாள்தோறும் ஒரு சகடம் நிறைய அன்னமும், அதனை ஈர்த்துவரும் இரண்டு பகடுகளும், ஓட்டி வரும் ஒருவனும், முறை தவறாமல் அனுப்பும்படி பகன் கட்டளையிட்டான். என் செய்வர் பாவம்; அவரும் இசைந்தார். அவ்வாறே நடந்து வந்தது. வருங்கால், துரியோதனன் செய்த கொடுமைக்குத் தப்பிப் பிழைத்துத் தயங்கிய தருமன் முதலிய ஐவரும் அவ்வூருட் புகுந்தார். ஒதுங்கியிருந்தார். பகன் செய் கொடுமையால் அந்நகர்படும் அழிவை அறிந்தார். அவருள் வீமன் துணிந்தான். சகடத்தைச் செலுத்துபவனாய்த் தானே சென்று அவனைப் பொருது தொலைத்தான். அவனும் அழிந்தான். இழி நரகில் ஆழ்ந்து வெளிவராது அழுந்தினான். ஊன்

63



ஊனை நரகம் விழுங்கி உமிழாது என்பதை உலகம் அவன் பால் உணர்ந்தது. (விரிவைப் பாரதத்தில் காண்க.)

ஊன் உண்பவன், என்றும் நீங்காத நரக துன்பத்தையே

அடையவன் என்பது இதனால் கூறப்பட்டது.

256. வில்லாயல் சூரனுக்கேன் பிணைசுமந்து கொண்டுதந்தார்
கொல்லாத தேவர் குமரேசா—எல்லாந்
தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். (௬)

-ள.

குமரேசா! கொல்லாத தேவர் ஏன் அசுரர்கட்கு பிணைச் சுமந்து கொண்டுவந்து தந்தார் எனின், உலகம் தினல் பொருட்டாற் கொல்லாது எனின், விலைப் பொருட்டால் ஊன் தருவார் இல் என்க.

உலகு, தினல்பொருட்டால் கொல்லாது எனின்—உலகத்தார், ஊனைத் தின்னும் பொருட்டுக் கொல்லாராயின்.

உண்ணுதல் காரணமாக உலகத்தார் கொலை செய்யாராயின் பொருளுக்காக ஊனை விலைசெய்வார் ஒருவரும் இலர் என்பதாம்.

கொலைப்பாவம் கொன்றவனைச் சேருமேயன்றி ஊன் தின்றவனைச் சேராது என்பாரை மறுத்து இஃது உணர்த்தியதென்க.

ஊன் தின்பார் இல்லையாயின் இவ்வுலகில் கொலைவினை சிறிதும் இல்லையாம் என்பது கருத்து.

ஊன்தின்போர் உண்மையானே கொலைப்பாவம் உளவாகின்றது என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இது சூரன் முதலாயினோர்பால் காணப்படும்.

## கதை.

கொலைத்தொழிலைச்செய்யாத தேவர்களும் சூரன் ஏவலால் மீன்களை வாரிக்கொண்டார்கள். ஊன் தின்னும் அசுரரில்லையாதலால் அமரர் அன்று மீன்கொண்டு தந்திலர். அசுரர் தினற்பொருட்டால் கொன்றாரேயன்றி அமரர் விலைப்பொருட்டால் மீன்களைக் கொல்லவில்லை. அம்மீன் கொலைக்கு அசுரர் ஊன்தின்னலையே காரணமாயிருந்தது. அசுரர அழிந்தபின் அமரர் அக்கொலைத்தொழிலைக் கொள்ளவில்லை. ஊன்தின்போர் இல்லையாதல் உயிர்களைக் கொல்வோர் உலகில் இல்லையென்பது அவர்பால் அன்று உணரநின்றது. (விரிவு சரிதையில் தெளிவாம்)

ஊன் தின்னலே கொலைப் பாவத்துக்குக் காரணம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

257. ஊனெனன் றுணர்ந்தவுடன் வெறுத்தேதன் உண்ணவில்லை
கோன்குமர தேவர் குமரேசா—தானெ
உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். (௮)

இ—ள்

குமரேசா! குமார தேவர் ஊன் என்று உணர்ந்தவுடனே என் அதனை உண்ணாமல் வெறுத்து விசினார் எனின், புலால் பிறிது ஒன்றனது புண்; அது உணர்வாரைப்பெறின் அதனை உண்ணாமை வேண்டும் என்க.

புலால் பிறிது ஒன்றன் புண்-ஊன் பிறிதோருடம்பின்புண்.

அது உணர்வார்ப்பெறிய — புண் என்னும் அவ்வுண்மையை உணர்வார் உண்டாயின். பெறின் என்றது அதனை உணர்வார் அரியர் என்பதை உணர்த்தி நின்றது.

உணர்வோர், ஊன் உண்ணார்; உணர்வில்லாதவரே அதனை உண்டு களிப்பர் என்க.



புலால் என்பது பிறிதோருடம்பின் புண்ணே என்னும் உண்மையை உணர்வாரைப்பெறின் அதனை உண்ணாது ஒழித்தல்வேண்டும் என்பதாம்.

தமது உடம்பில் புண் ஒன்று காணப்படின் அதனைத் தீண்டவும் கூசுகின்ற மக்கள் பிறிது ஒன்றன் உடம்பிலுள்ள தசைகுருதி நிணம் முதலியவற்றை அருவருப்பின்றித் தின்னுவதற்குக் காரணம் என்னையோ எனின் அறியாமையேயாம் எனபது கருத்து.

நரி கழுகு நாய் முதலிய இழிந்த பிராணிகளே ஊனை எண்ணாது உண்பனவாம்; அறிவமைந்த மக்கள் அதனை எவ்வகையாலும் உண்ணலாகாதென்பது குறிப்பு.

சிறந்த அமுதத்தோடு கலந்திருப்பினும் ஊன் என்று உணரப்பெறின் அதனை அறிவோர் உண்ணார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குமாரதேவர்பால் காணப்படும்.

## கதை.

குமாரதேவர் என்பவர் சற்றேறக்குறைய இற்றைக்கு முன்

யுணரவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

258. ஊனென் றுணர்ந்த உடன்வசிட்டர் உண்ணாதே
கோனைச் சினந்தார் குமரேசா—ஏனெனில்
செயிரிற் றலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த ஊன். (அ)

இ—ள்.

குமரேசா! ஊன் என்று உணர்ந்தவுடனே வசிட்டர் உண்ணாது வெறுத்து அரசனை வன் வைதார்; எனின், செயிரின் தலைப்பிரிந்த காட்சியார், உயிரின் தலைப்பிரிந்த ஊனை உண்ணார் என்க.

செயிர்—குற்றம். தலைப்பிரிந்த—நீங்கிய.

நீக்கத்தை உணர்த்தும் பிரிவு என்னுஞ்சொல் இங்கே அடைபடுத்து வந்தது. இவ்வாறு வருவதை வடநூலார் உபசர்க்கம் என்பர்.



உயிரின் தலைப்பிரிந்த ஊன்—உயிரின் நீங்கிவந்த ஊன்; பிணம் என்றபடி.

குற்றத்தின் நீங்கித் தெளிந்த அறிவினையுடையார் உயிரின் நீங்கிய ஊனை உண்ணார் என்பதாம்.

மடமையும் கொடுமையுமுடைய அறிவிலிகளே ஊனின் ஈனத்தை யுணராமல் அதனை உண்டு களிப்பர் என்பது குறிப்பு.

ஊனை, உயிர் நீங்கிய பிணமேயென்று உணர்ந்து அதனை எவ்வகையாலும் உண்ணாமல் ஒழிப்பவரே உயர்ந்தோர் என்பது கருத்து.

உணர்வுடையார் ஊனின் இழிவை உணர்வாராதலின் அதனை யாண்டும் தின்னார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசிட்டர்பால் உணரப்படும்.

## கதை.

திருவயோத்தியிலிருந்து அரசுபுரிந்த மித்திரசகன் என்னும் மன்னவன் ஒருநாள் தனது முன்னோர்களை யெண்ணிப் பெருவிருந்து செய்தான். அதில், வசிட்டமாமுனிவரை முதன்மையாக வணங்கி அழைத்தான். முனிவர் வந்தார். அரசன் அவரை உபசரித்து உயர்ந்த ஆசனத்திலிருத்திச் சிறந்த உணவுகளைப் படைக்கும்படி செய்தான். அரசனுக்குப் பகைவனாகிய அரக்கன் ஒருவன் கரவாகவந்து உணவுசெய்பவன்போல் அமைந்து ஒதுங்கியிருந்தான். அவ்வஞ்ச மடைமகன் புனிதமான இனிய உணவுகளோடு ஈன ஊனையும் இன்சுவைத்தாக்கிப் படைத்தான். முனிவர், உண்ணப்புகுமுன் அவ்வுண்மையை உணர்ந்தார். உண்ணாதெழுந்தார். அரசனை நோக்கிப் பெருஞ்சினங்கொண்டார். அரக்கனாகும்படி சபித்தார். வஞ்சமில்லாத மன்னனும் அஞ்சி வருந்தினான். செயிர் நீங்கிநின்ற அறிஞோர் உயிர் நீங்கி வந்த ஊனை உண்ணார் என்பதை முனிவர் உணர்த்தி நின்றார்.

(விரிவை விநாயக புராணத்தில் காண்க.)

26-ம் அதிகாரம் புலான் மறுத்தல் 505

உயர்ந்தோராயினும் ஊனை உண்ணார் என்பது இதனால் ப்பட்டது.

259. வெற்றிமிகு பிம்பசரன் வேள்வியினை யன்றடுத்துக்
குற்றமென்றார் புத்தர் குமரேசா—உற்ற
அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. (௯)

இ—ள்.

குமரேசா! பிம்பசாரன் என்பவன் செய்யும் வேள்வியைத் தடுத்து என் புத்தர் அது தீது என்று உரைத்தார்? எனின், அவி சொரிந்து ஆயிரம் வேட்டலினும், ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை நன்று என்க.

அவியாவது மந்திர முறையோடு தேவர்களை நோக்கி வேள்வித் தீயில் இடுகின்ற நெய் முதலிய இனிய உணவுகள். ஆயிரம் என்னும் எண்ணுப்பெயர் இங்கு அத்தொகையினையுடைய வேள்விகளைக் குறித்து நின்றது. வேட்டல்—ஓமம் செய்தல்.

ஆயிரம் வேட்டலின்—ஆயிரம் வேள்விகளைச் செய்தலினும். ஆயிரம் என்றது இறப்பவும் பல என்னும் மிகுதியை விளக்குதற்கு எனக.

அவிகளைச் சொரிந்து ஆயிரம் வேள்விகளைச் செய்வதினும் ஓர் உயிரினைக் கொலைத்து அதன் ஊனைத் தின்னாமை நன்று என்பதாம்.

பல்லாயிரம் வேள்விகளைச் செய்து அவற்றின் எய்தும் நலத்தினும் ஊன் உண்ணாமையான் ஒருவனுக்கு உளதாம் நலம் பெரிதாம் என்பது கருத்து.

ஊன் உண்ணாமை என்னும் இவ் ஓர் அறமே அரிய பயன்களையெல்லாம் எளிதின் உதவும் என்பது கருத்து. இது பிம்பசாரன் பால் காணப்படும்.

## கதை.

பிம்பசாரன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்கட்கு முன்னிருந்தவன். சிறந்த ஓர் அரசன். கங்கையின் தென்பாலிருந்த இராசகிருகம் என்னும் நகரத்திலிருந்து இவன் அரசுபுரிந்தான். கல்விகேள்விகளில் வல்லுநரான அமைச்சர் பலர் இவன்பால் அமர்ந்திருந்தனர். மனநலமும் இனநலமும் மாண்புறப் பெற்றவன். அங்கநாட்டையும் வென்று அனைவரையுந் தன் குடைக்கீழ்த் தங்கவைத்தான். வருடந்தோறும் முறையாக அரசன் வேள்விகளைச் செய்துவந்தான். புத்தர் ஒருநாள் இவனிடம் வந்தார். அரசே உயிர்ப்பலிசெய்து ஏன் இவ் வேள்வியைச் செய்கின்றாய். எவ்வகையாலும் பிறவுயிர்கள் சிறிதும் வருந்தாவண்ணம் ஒழுகுவதே ஒருவன் அறிவுடைமைக்குப் பயனும். பல்லாயிரம் வேள்விகளைச் செய்து உயர்ந்த பதத்தை யடைந்தவனிலும் ஓருயிரையும் கொல்லாத ஒருவனே சிறந்தவனாவான் என்று அருளுடன் கூறினார். அவரது பயனிறைந்த அருள் மொழிகளை அரசன் கேட்டான். அன்றுமுதல் வேள்வி செய்வதை விடுத்தான். வேட்டையாடலுந் துறந்தான். ஊன் உண்ணாமையென்னும் உயர்ந்த விரதத்தைக் கொண்டான். இவன் நாடுமுழுவதும் இந்நல்லறம் பரவியது. உயிர் செகுத்து உண்ணாமை என்னும் உயர் நலத்தால் இவ்வரசன் வேள்விப் பயனிலும் பெரும்பயனெய்தினான். ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று என்பதை அன்று நின்று காட்டினன். (இதன் விரிவைப் புத்த சரிதையில் காண்க.)

ஊனுண்ணாமை ஒன்றுமே ஒருவனுக்கு எல்லா நலங்களும் ஒருங்கே தரவல்லது என்பது இதனால் கூறப்பட்டது,

260. மண்டுபுகழ் நந்தனார் வான்மிசர் எனுலகம்
கொண்டுதொழ நின்றார் குமரேசா—கண்டதொன் றும்
கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி

தக்க பெரும் பேற்றை மெய்யவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை நக்கீரர் கண்ணப்பர், வான்மீகி பாலும் காணப்படும்.

64



## கதை 1.

நக்கீரர் கொலைத் தொழிலும் புலைப்புசிப்புந் துறந்தமையால் எவ்வுயிர்களும் அவரை இன்புறத் தொழுதன. வானவர்களும் சிரமேற் கைகூப்பித் திரண்டு தொழுதனர்.

(விரிவை அவர் சரிதையில் தெளிக.)

## கதை 2.

வேடர்களோடு கூடிக் களவு முதலிய கொடுந்தொழில் களைச் செய்து திரிந்த வான்மீகியார் மெய்யுணர் வுடையராய்த் தெளிந்தபின் ஒருயிரையுங் கொல்லாதவராய் ஊன் உண்டலை யொழிந்து எவ்வுயிர்க்கும் இனியராய் அருளோடு செய்த அரிய தவத்தைக் கொண்டார். கொலையும் புலையுந் தவிர்ந்தபின் அவரை அமரரும் முனிவரும் அகமகிழ்ந்து தொழுதார். அருளுடையராய்ப் புலால் மறந்தவரை எல்லாவுயிருந் தொழும் என்பதை உலகம் இவர்பால் தெளிந்தது.

கொல்லாமையும் புலாலுண்ணாமையுமுடையாரை உலகமெல்லாம் உவந்து தொழும் என்பது இதனால் கூறப்பட்டது.

உயிர்கள் ஒப்புமின் ஊன்விழைந் துண்ணன்மின்
செயிர்கள் நீக்குமின் செற்றம் இகந்தொரீஇக்
கதிகள் நலனுறுங் கண்டனர் கைதொழும்
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர். (வளையாபதி.)
கொலையும் புலையுங் களவுந் தவிர். (ஔவை.)

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

தன்னுடம்பு பருக்கப் பிறிதொன்றின் உடம்பைத் தின்போன் கொடியனே யாவன். அவனுக்கு அருள் உண்டாகாது. அவன் மனம் திமையையே யெண்ணும். புலால் உண்டல் பெரும் பாவம். ஊனுண்போனை நரகம் விழுங்கி யுமிழாது. ஊன் தின்கையே கொலைப் பாவத்துக்குக் காரணம். ஊன் என்பது பிறிதோருடம்பின் புண்ணென்று தெளிந்து அதனை யுண்ணாது ஒழிதல்வேண்டும்.

27-ம் அதிகாரம் தவம் 503

அறிவுடையார் அதனை யாண்டும் உண்ணார். பல்லாயிரம் வேள்விகளைச் செய்வதினும் ஊன் தின்னாமை ஒன்றே நன்று. அதனோடு புலால் மறுத்தவனை எல்லாவுயிர்களுங் கைகூப்பித் தொழும்.

26-வது புலான் மறுத்தல் முற்றிற்று.

## உஎ-ம் அதிகாரம் தவம்.

அஃதாவது மனத்தைப் புலன்வழிச் செலுத்தாது நலமுற நிறுத்திக் கன்னுயிர்க்கு உறுதுயர் தனிநின்று பொறுத்துப் பிறவுயிர்களைப் பேணும் பெருநலம். புலாலுண்டலையொழிந்து புனிதமெய்திய மனமுடையார்க்கே இஃது இனிது அமையுமாதலான் அதன்பின் வைக்கப்பட்டது.

261. உண்டி துறந்தார் உயிர்க்கிரக்கம கண்ணுவரேன்
கொண்டு புரிந்தார் குமரேசா—மண்டியென்றும்
உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. (க)

இ—ள்.

குமரேசா! கண்ணுவர் தான் வருந்தி நின்று என் பிற

குமரேசா! கும்பகருணன் வருந்தித் தவம்புரிந்தும் என் அதன் பயனை இழந்தான் எனின், தவமும் முன் தவம் உடையார்க்கே ஆகும்; அதனை அஃது இலார் மேற்கொள்வது அவமாம் என்க.

அதனை—அந்தத் தவத்தை. அஃது—அந்த முன் தவமுடைமையை. அவம்—வீண். மேற்கொள்வது—செய்ய முயல்வது.

முன் செய்த தவமுடையார்க்கே தவம் கைகூடும்; அஃது இல்லாதவர் அத்தவத்தை மேற்கொள்வது வீண் என்பதாம்.

தவமும், என்பதிலுள்ள உம்மை அதன் பயனையும் சுட்டி நின்றது ஆதலால் அஃது இறந்தது தழுவிய எச்சவும்மையாம்.

தன்னை முன்செய்த பழகினவனுக்கே ஒருதொழில் இனிது அமைவுறும் அல்லாதவனுக்கு அது நன்கு அமையாது; அது



போல் தவமும், தன்னை முன் செய்துள்ளவனுக்கே தடையின்றி முடிவுறும், இல்லாதானுக்கு இன்புற முடியாது என்க.

முன்னைத் தவமுடையார்க்கே தவம் இனிதாம்; இல்லாதார் மேற்கொள்வது அவமாம் என்றது இதுவரை தவஞ்செய்யாதவர் இப்பொழுதேனுஞ் செய்து பின் வருங்காலத்தில் முன் தவமுடையாராக அவர் அமையவேண்டுமென்பது கருதி என்க.

முதல் நாள் இரவு ஒரு செய்யுளை மனனஞ்செய்தவனுக்கு மறுநாட்காலையில் அஃது எளிதாய்த் தோன்றுதல்போல் முன் செய்தவர்க்கே தவம் சிறந்து முடியும் என்பது கருத்து.

இனி, தவவொழுக்கமுடையார்க்கே தவவேடம் நல்லதாகும் அவ்வொழுக்கமில்லாதார் அதனை மேற்கொள்வது தீதாகும் என

வும் இது பொருள்படும்.

இதில் தவம் ஆகு பெயராய் வேடத்தைக் குறிக்கின்றது.

முன்னை நல்வினையுடையார்க்கே தவம் இனிதாய முடியுமா இல்லாதார் ஊக்கமும் ஆற்றலுமுடையராய் அதனை ஒருவாறு முடிப்பினும் அதன் பயனை இழப்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கும்பகருணன்பால் உணரப்படும்.

கதை

இலங்கையர் வேந்தனுக்கு உடன் தம்பியாகிய கும்பகருணன், எல்லாரையும் அடக்கியாளுதற்குரிய உயர் நிலையினை அடைய விரும்பினன். உயிர்கள்மாட்டு அருளிலனாயினும் பொறிகளை யடக்கினன். கொன்றைக் கானம் என்னும் பெயரினையுடைய ஒருவனத்தையடைந்தான். உணவும் நீருந்துறந்தான். கோடைக்காலத்தில் கொதிக்கின்ற வெயிலிடை நின்றான். மாரிக்காலத்தில் குளிர்கின்ற நீரிலே நின்றான். ஒரு மனமுடையனுப் பிரமனை நாடினன். அழலில் இருந்தும் மழையில் நனைந்தும் அருந்தவஞ்செய்தான். ஆண்டுகள் பதினாயிரம் மாண்டு கழிந்தன. அவன், மனந்தளராது நினைந்ததே செய்தான். அவனது ஆற்



ம் அருஞ்செயலையும் அயன் கண்டது அவன் முன் தோன்றினன். கும்பகருண! நீ வேண்டிய வரம் வேண்டுக என்றான். நன்றான துறக்கபதத்தை அவன் நாடியிருந்தான். உள்ளத்தில் கொள்ள விரும்பியது அதுவாயினும் "நன்றாக உறக்கமே கொடு" என்று குழறிக் கூறினன். அயனும் உடனே கொடுத்தேகினன். அவனும் கொண்டதை நினைந்து குலைந்து நைந்தனன். அருந்தவத்தை வருந்தி முடித்தும் அதன் பயனை யடையாதிழந்தான். முன்னைத் தவமிலார் முயன்றாலும் தவம் இனிது முடி

இல்வாழ்க்கையிலமர்ந்து எவ்வுயிர்க்கும் அன்புடையராய் இன்புடன் வாழ்ந்தார். தாம், முதலில் வணிகராய் இருந்தகாலத்தில் பட்டினத்தடிகள் இவரைத் தமது நிதியறைக்கு தலைவராக்கினர் இவரும் அமைந்து அதனை உரிமையோடு போற்றினர். அடிகள் துறவடைந்தபோது, தம் பொருள் முழுவதையுந் தெருவிடைச் சூறைவிடும்படி சொன்னார். அவ்வாறே இவர் செய்தார், பற்றற்று நின்றார். பல்லுயிர்க்கும இரங்கினர். அடிகள் அகன்ற பின் இவரும் அந்நகரைவிட்டகன்று மனைவியோடு சிதம்பரத்துக்கு வந்தார். அங்குத தங்கினர். பொருளை வருந்தி யீட்டினர். அதனால், விருந்தினரையூட்டினர் அருந்தவரைப் பேணினர். தவம் புரிதற்குரிய மன நிலையைப் பெற்றிருந்தும் அதனை மறந்து இவர், உயிர்கட்கு உதவியே புரிந்தார். தவத்தின உயர்வை உணர்ந்திருந்தும் தாம் செய்யும் தானத்தையே விரும்பி இல்வாழ்ந்திருந்தார். இவரது உபகார நலததை உலகினுக்கு உணர்த்த விரும்பிச் சிவபெருமான் ஒருநாளிரவு இவர் வீடுள் நுழைந்தார். அங்கிருந்த கூழை அன்புடன் உண்டார். மறுநாள் தில்லைப பரமன் திருமேனி முழுதுங் கூழமைந்திருந்தது. கண்டவர் திகைத்தார். உடனே "இது சேந்தனார் ஊட்டிய திருக்கூழ்" என்று ஒருசொல் பிறந்தெழுந்தது. கேட்டவரெல்லாரும் வியந்து சென்று சேந்தனாரைச் சேவடி வணங்கினர். அவரும், துறந்தவர்க்கெல்லாம் துயபுரவு நல்கிச் செப்பமுற வாழ்ந்தார்.

விரிவைத் திருமுறையில் காண்க.

## கதை 2.

சோமர் என்பவர் தினகரன் என்னும் ஓர் அரசன்புதல்வர். அருளும் நீதியும் அமைந்த நெஞ்சினர். பெருங்கொடையாளி.

உயிர்களுக்கு உதவிசெய்தலே தவமெனக் கொண்டார். உணவும் பிறவும் எவர்க்கும் உவந்து உதவினர். பற்றில்லாத உள்ளத்தைப் பெற்றிருந்தும் இல்லறத்தையே இவர் பற்றி நின்றார். தானஞ் செய்வதையே விரும்பித்தன் தவத்தையும் மறந்தார். ஒளவை யாரும் இவரை அன்புடன் பாடினர்.

65

516 திருக்குறட் குமரேச வெண்பா.

நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய். (ஒளவை.)

இல் வாழ்வார் தானத்தையும், துறந்தார் தவத்தையும் இனிது செய்யவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

264. ஏசிச் சிலரை யழித்தார் திரிசங்கைக்
கோசிகரேன் காத்தார் குமரேசா—கூசாமல்
ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும். (௪)

ள.

குமரேசா! கோசிகர் சிலரை வைது தெரித்தார் என் திரிசங்கை வாழ்த்திக் காத்தார் எனின், ஒன்னாரைத் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணின் தவத்தான வரும் என்க.

ஒன்னார்—பகைவர். தெறல்—கெடுத்தல். ஆக்கல்—உயர்த்தல். உவந்தார் என்றது நண்பரை.

பகைவரைக் கெடுத்தலும் நட்பினரை உயர்த்தலும் தவத்

செய்வார் எண்ணுவராயின் அவர்க்கு அவை எளிதில் உளவாம் என்பதாம்.

அருளமைந்த உளமுடையராதலால் தவஞ் செய்வார், தமக்குத் தீங்கு செய்யுங் கொடிய பகைவனையும் கெடுக்க எண்ணார் என்பது கருதி "எண்ணின்" என்றார்.

செற்றமும் பற்றும் நீங்கிய மனத்தினையுடைய தவத்தினர்க்குப் பகைவர் இவர், உறவினர் இவர், என்னும் பகுப்பு இல்லையாயினும் ஏதேனும் ஓர் ஏதுவால் உளராயின் முறையே அவரை அழிக்கவும் ஆக்கவும் அவர், வல்லுநர் என்பதாம்.

27-ம் அதிகாரம் தவம் 517

பட்டினி கிடந்து உடல் வலி நன்றி ஒடுங்கியிருப்பினும் தவமுடையார் எண்ணிய நினையாவை எல்லா வலிமைகளும் அவர்பால் நண்ணும் என்பது கருத்து.

தவத்தினரைப் பகைத்து இகழ்வோர் கேடுற்றழிவர், உவந்து புகழ்வோர் உயர்ந்து வாழ்வர் எனபது குறிப்பு.

செறுத்தாரை அழிக்கவும் சேர்ந்தாரை ஆக்கவும் தவவலியுடையார்க்கு இயலும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது கோசிகர்பால் உரைப்படும்.

கதை.

கோசிகர் அரசைத் துறந்து அடவியிற் புகுந்து தென்திசை நண்ணி அருந்தவம் புரிந்தார். அக்காலத்தில் திருவயோத்தியிலிருந்து செங்கோல் செலுத்திய சூரியகுலத் தோன்றலாகிய திரிசங்கு என்பவன் தனது குருவின் சாபத்தால் உருநிலைமாறி மனமிக மெலிந்து வனமெலாம் திரிந்தான். முடிவில் இவரை வந்து கண்டான். பேருவகை கொண்டான். உவந்து தொழுதான். முனிவர், அவனது இயல்பினை முழுவதும் வினவியோர்ந்தார். இரங்கினர். அவன் அடைந்த சிறுமையை நீக்கி அவனை

அமரருள் ஒருவரை ஆசுக எய்வினர். அதன் பொருட்டு வேள்வி ஒன்று செய்ய விரும்பினர். அங்குள்ள முனிவரை உடனவர அழைத்தார். சிலர் மறுத்து இவரை அவமதித்தார். அவரனைவரும் இழிந்தவராக இவர், நினைத்தார். உடனே வேடு வாகளாயினர். காடுகள்மீதாறும் அலைந்தார். கெடுற்றிழிந்தார். அதன்பின் அரசனை நோக்கினர். "நீ போய்த் துறக்கத்தில் நில்" என எவினர். உடனே மன்னன் ஓங்கி யெழுந்தான். அவ்வுலகை ஒல்லையிலடைந்தான். அங்குள்ள தேவர் அவனைப் புலைய னென்று கருதித் தலைகீழாகத் தள்ளினர். அரசனும் புரண்டு அவனியிலிழிந்தான். அபயம் அபயம் என அஞ்சி அறற்றினன். முனிவர் தெரிந்தார். "நில் நில் நில்" எனச் சொல்லி விரைந்தார். அரசனும் ஆங்கே அமைந்து தொங்கினன். முனிவர் முனிந்தார். வான்முதலனைத்தையுந் தானே படைக்கத் துணிந்தார்.



அவரது தவ வலிமையைக் கண்டு அமரரும் அஞ்சினர். மூவரும் வியந்து அவர் முன்னே தோன்றினர். அத்தாதை ஆகரிக்கும் அவரது அருளையும் தவத்தையும் துதிகளர். பொறுத்தருளுபடி அவரைப் புகழ்ந்து வேண்டினர். திரிசங்கை வானில் தனியிடமொன்றில் அவர் விரும்பியபடியே தங்கும்படி செய்தார். ஒன்றைத் தாழ்க்கவும் உவந்தாரை உயர்த்தவும் தவமுடையார் கண்ணின் உடனே அவர்க்கு அவை உளவாம் என்பதை அனைவரும் அவர்பால் தெளிந்தார். (இதன் விரிவை இராமாயணத்தில் காண்க.)

இன்னும், இவர்பால் ஒன்னாராகி ஒழிந்தாரும் உவந்தாராய் நின்று உயர்ந்தாரும் பலராவர்.

விஞ்சிய வீரவா மித்திர னாலே
அஞ்சொல் அரம்பை அருஞ்சிலையானாள்
தஞ்செசன நீடு தவத்தவர் தம்பால்
வஞ்ச மிழைத்தவர் வாழ்ந்தவர் மண்மேல் (சேதுபுராணம்.)

தவமுடையார் அழிக்கவும் ஆக்கவும் வல்லார் என்பது கூறப்பட்டது.

265. பாலப் பருவத்தே பண்டு தவம் ஏன் முயன்றார்
கோலவுப மன்யு குமரேசா — சீலமுடன்
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

குமரேசா! உபமன்யு என்பவர் இளமைப் பருவத்தே ஏன் பெருந்தவஞ் செய்தார் எனின், வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும் என்க.

வேண்டிய—விரும்பிய பொருள்கள். இது வினையாலணையும் பெயர். ஈண்டு முயலப்படும்—இங்குச் செய்யப்படும்.



தவமே தம் கருமம் என்று கருதி அறிவுடையோரால் செய்யப்படும் ஆதலால் அதனைச் 'செய்தவம்' என்றார். இது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை எச்சம்.

தவத்தால், விரும்பிய பயன்களை விரும்பியவாறே மறுமையில் பெறலாம் ஆதலால், செய்யப்படுவதாய தவம் அறிவுடையோரால் இம்மையிலே முயலப்படும் என்பதாம்.

மேல், பகைத்தவரைக் கெடுக்கவும், அடுத்தவரை உயர்த்தவும் தவம் வல்லது என்றார்; இதில், அதனால் எண்ணியவெல்லாம் எண்ணியவாறே எய்தலாம் என்றார்.

ஆக்கமும், திறலும், சீரும், ஆயுவும், நலனும், மேலாம்,
ஊக்கமும், வீறும், எல்லாம், தவத்தினது ஊற்றம் அன்றே

என்றார் பிறரும்.

எல்லா நலன்களும் தவத்தால் எய்தலாம் ஆதலால் அதனை இளமையிலேயே ஒருவன் விரைந்து செய்யவேண்டுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உபமன்யு பால் உணரப்படும்.

### கதை.

உபமன்யு என்பவர் வியாக்கிரபாத முனிவருடைய புதல்வர். வசிட்டருடைய தங்கையாகிய வசுமதி பால் பிறந்தார். வறுமை வளர வளர்ந்தார். மாவின் பாலையே நாளும் பருகினார். தாய் இவரை எடுத்துச் சென்று தன் தமையனார் வீட்டில் சில காலம் தங்கியிருந்தாள். வசிட்ட பத்தினியாகிய அருந்ததியார் அங்கிருந்த காம தேனுவின் பாலை நாளுங் கறந்து இவர்க்கு நன்கு கொடுத்தார். உண்டு மகிழ்ந்தார். பின், ஊருக்கு வந்தார். அப்பாலையே நினைந்து தாயிடம் அழுதார். என் செய்வாள் பாவம்! வசுமதி வருந்தி முன்னைத் தவமின்மையால் வறுமையில் வாடுகின்ற நமக்குப் பால் எங்கிருந்து வரும் என்று மதலையை நோக்கி மனங் கவன்று மொழிந்தாள். உபமன்யு கேட்டார், எல்லா நலங்களையுந் தவத்தால் எய்தலாம் போலுமென்று துணிந்து வெளியே சென்றார். திரிகூட மலையிலிருந்து இறைவனை நோக்கி



அருந் தவம் முயன்றார். பருவங்கள் பல கடந்தன. முடிவில் பரமன் இவர் முன்னே தோன்றி வேண்டுவதென் என வேண்டிக் கூறினார். இவர், தமது தாய் தந்தையர் பொற்கலத்தில் வைத்துப் பாலடிசில் உண்ணவும், கிளைகள் என்றுந் தம் இல்லில் உறையவும், இருமை இன்பமும் தாம் உரிமையிற் பெறவும், அருள்க என வேண்டினார் அவ்வாறே பரமன் அகமகிழ்ந்தருளித் திருப்பாற் கடலையும் இவர் விருப்புறத் தந்தார். உபமன்யு, தம் தவ நலத்தால், இம்மையில் எல்லா நலங்களையுந் துய்த்து மறுமையினும் வேண்டியன வேண்டியவாறே எய்தி மேன்மையுற்றிருந்தார்.

(இதன் விரிவைச் சிவ ரகசியத்தில் காண்க).

அற்றலிற் றாழ்முடல் அலசப் பற்பகல்

நோற்றவ ரல்லரோ நுவலல் வேண்டுமோ
தேற்றுகி லீர்கொலோ தேவ ராகியே
மேற்றிகழ் பதங்கடொறு மேவுற் றோரெலாம்.

(கந்தபுராணம்).

எவ்வகைப் பொருள்களும் எய வல்லது
செவ்விய தவமதே தெரியின் வேறில்லை
இவ்வுல கத்திலெப் பெயற்று மின்றதே
உவ்வுட லெடுத்தபே றுறுதி யென்பவே.

(திருக்கூவப் புராணம்).

எண்ணியவெல்லாந் தவத்தால் எய்தலாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

266. பண்டுபலர் சிற்றின்பம் பற்றச் சவுனகரேன்
கொண்டுதவஞ் செய்தார் குமரேசா—மண்டு
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு. (௬)

27-ம் அதிகாரம் தவம். 521

இ—ள்.

குமரேசா! பலர் பொருள் இன்பங்களைச் செய்து நிற்ப என் சவுனகர் என்பவர் தவஞ் செய்யச் சென்றார் எனின், தவம் செய்வாரே தம் கருமம் செய்வாராவர்; மற்று அல்லார் ஆசையுட் பட்டு அவம் செய்வார் என்க. அவம்—கேடு.

மற்று அல்லார் என்றது தவம் செய்யாதவரை.

செய்தல் என்னும் வினைக்கு மறுதலையாய செய்யாமையை உணர்த்தி நின்றமையின் மற்று இங்கு வினைமாற்றின்கண் வந்தது.

தவம் செய்வாரே தம் உயிர்க்கு இன்பம் செய்தவராவர் அல்லாதார் ஆசையாகிய வலையுட்பட்டு கேடுசெய்பவரே என்பதாம்.

உயிர்க்கு உறு துணையாய் நின்று பிறவியை ஒழித்துப் பேரின்பத்தைத் தர வல்ல தவத்தைச் செய்யாமல் பொறியின்பங்களை விரும்பிப் பொருள்களைப் பெற முயன்று செய்வோர், ஆசையென்னும் பெரும் காற்றிலகப்பட்டு உணர்விழந்து சுழன்று மேலும் மேலும் பிறந்து பெருந் துன்பத்தை அடைய மருவுவர் ஆதலால் தவஞ் செய்யாதவர் தமக்கே அவஞ்செய்வார் ஆகின்றார் என்க.

தமக்கு நன்மையை நாடுவோர் தவமே செய்யவேண்டுமென்பது குறிப்பு.

தவமே உயிர்க்கு இன்பம் பயக்கத்தக்கது; அத்தவத்தைச் செய்யாதவர் தமக்கே துன்பஞ் செய்தவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சவுனகர் பாலும் சையாதி பாலும் உணரப்படும்.

## கதை.

சவுனகர் என்பவர் பிருகுமுனிவருடைய புதல்வர். வேத முதலிய கலைகளையெல்லாம் ஓதியுணர்ந்தார். உணர்வுமிகுந்தார், உருவம் பருவம் முதலியவற்றுள் தம்மையொத்த அரசபுதல்வர் பலருடன்கூடி அகமகிழ்ந்திருந்தார். உலகப்பொருள்களால் உள



வாம் இன்பம், நிலையில்லாதது என்றறிந்தார். உடலுறும் இன்பத்தை வெறுத்தார் உயிர்க்குறும் இன்பத்தை விரும்பினார். தனிவனம் ஒன்றில் இனிதுறஅமர்ந்தார் வருந்திநின்று அருந் தவஞ்செய்தார். இவருடன் இருந்த அரசகுமாரர் அனைவரும் பொருளின் இன்பங்களைப் பொருந்தச்செய்தார். சிற்றின்பங்களை

முற்றத்துய்த்தார். ஆசையுட்பட்டார். அரசராய் நின்றார். அவருள யயாதி எனபவன் தன் அருமைமகளுடன் ஒருநாள் வேட்டைக்குவந்தான். சவுனகர் இரங்கும் தவவனஞ்சார்ந்தான். அரசன்குமரி அங்கிருந்த ஒருபுற்றினை உற்றுநோக்கினள். அதில் விழிகளின ஒளிகளைக்கண்டாள். ஒருசிறு துரும்பையெடுத்தாள். அவ் ஒளி ஒன்றில் உருவக்குத்தினள். அதனால் அப்புற்றுள் அடங்கியிருந்த சவுனகரது விழியாகலால், அவர் சிறிது வருந்தினர். அதனால் அவ்வனமுழுதும் இருண்டது. அரசனும் பிறரும் நடுங்கி அப்புற்றினையடைந்தார். உற்றதையுணர்ந்தார். உடனே முனிவர் அடியில் அரசன் முடியுறப்பணிந்தான். சவுனகர் பொறுத்துத் தவநிலைநின்றார். யயாதி என்னும் மன்னன் தன் மகளை அம்முனிவருக்கே உகவித்தானும் மெய்யுணர்வுடையவனுய்த் தவஞ்செய்யவிரும்பினன். அமரர் தலைவனாகிய இந்திரனும் வந்துவணங்கச் சவுனகர் தவஞ்செய்து உயர்ந்தார். உடனிருந்த அரசரும் பிறரும் பொருளின்பங்களைச்செய்து ஆசைவலையிற் பட்டு அல்லற்பட்டார். தவஞ்செய்வாரே தமக்கு நன்மைசெய்பவர் அல்லாதவரெல்லாரும் தமக்கே அவஞ்செய்தவராவார் என்பதை உலகம்இவர்பால் ஓர்ந்தது. (விரிவைப் பாரதத்தில்காண்க)

பொருளொடு போகம் புணர்த லுறினும்
அருளுதல் சான்ற அருந்தவஞ் செய்மின்
இருளில் கதிச்சென் றினியிவண் வாரிர்
தெருள லுறினுந் தெருணமின் அதுவே. (வளையாபதி.)

தவஞ் செய்வாரே தம்முயிர்க்கு நன்மைசெய்வார் என்பது இதனால் கூறப்பட்டது.



267. மண்டு புகழ்ச்சிதை வாகிசர் வாசகர்சீர்

கொண்டனரேன் துன்பால் குமரேசா—மண்டிச்
சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. (எ)

இ—ள்.

குமரேசா! சீதை, வாகீசர், மாணிக்கவாசகர் என்னும் இவர்கள் துன்பம் எய்தியதால் ஏன் மேன்மையை எய்தினர் எனின், சுடச் சுடரும் பொன் போல், நோற்கிற்பவர்க்குத் துன்பம் சுடச்சுட ஒளிவிடும் என்க.

நோற்கிற்பவர்க்கு—தவஞ் செய்வார்க்கு. இதிலுள்ள கில் என்னும் இடைநிலை அவர், அதனை ஆற்றும் ஆற்றலையுணர்த்தி நின்றது.

தீ, சுடச்சுட பொன்னுக்கு ஒளி மிகுமாறுபோல், துன்பம் வருத்த வருத்த தவஞ்செய்வார்க்கு மேன்மை மிகும் என்பதாம். பொன்னின் உவமையால் அவர் தன்மை யுணரப்படும்.

பொன்னைத் தீயிடைவைத்து உருக்கி அதனோடு கலந்து நின்ற மாசினை நீக்குவர்; அங்ஙனஞ் செய்தலைப் புடம் இடுதல் என்பர். புடம் இடுந்தோறும் பொன்னுக்கு ஒளியும் மாற்றும் உயர்ந்து தோன்றும், அதுபோல், துன்பந்தோயுந்தோறும் அருந்தவர்க்கு மேன்மையும் ஞானமும் மிகுந்து விளங்கும் என்பார் "பொன் போல் ஒளிவிடும்" என்றார்.

பசி முதலிய உற்ற நோயாலும் பிறர் புரியும் மற்ற நோயாலும் வருந்த வருந்த அருந்தவர்க்குப பெருமையும் ஞானமும் பொருந்தி மிகும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீதை, அப்பர், மாணிக்கவாசகர், என்னும் இப்பெரியார்பால் காணப்படும்.

கதை.

சீதை என்பவர் மிதிலை வேந்தனாகிய சனகன் புதல்வி. திருவின் கலையாய் இவ்வுலகிலவதரித்து இராமபிரானை மணந்து திரு

வயோத்தியிலிருந்து வாழ்ந்தார். இராமன் வனம் புகுங்காலை உடன் புகுந்தார். பஞ்சவடியென்னும் இடத்தில் அமைத்திருந்த இலைக்குடிசையில் தங்கியிருந்தார். இராமனும் இலக்குவனும் நீங்கிய அமையம் பார்த்துவந்து இலங்கையர் வேந்தனாகிய இராவணன் இவரைக் காதலித்து எடுத்துச் சென்றான். சிறையிடை வைத்துத் தன் தீய எண்ணத்தைத் தெரிவித்தான். கற்புத் தெய்வமாகிய சீதை தன் நிறைவழுவாமல் நின்று இராமனை நினைந்து நெடுந்தவஞ் செய்தார். கணவனைப் பிரிந்து இலங்கையிலிருந்த காலத்தில் அவர் அடைந்த துன்பங்கள் பல. முடிவில் இராமன் வானரப்படைகளுடன்வந்து இலங்கையை வளைத்து அரக்கரனைவரையும் இராவணனையுங் கொன்று வென்றி புனைந்தபின் தன் மனைவியையுங் கொணரும்படி செய்தார். சிறையிடையிருந்த சீதையும் விரைவுடன் வந்து தம் கணவனைத் தொழுதார். இராமன், வெகுண்டவர்போல் நோக்கிப் பல வெம்மொழி பகர்ந்தார். அவர் குறிப்பின்படி சீதை தீயிடைக் குதித்தார். தீங்கின்றி நின்றார். சிறந்து ஒளி மிகுந்தார். அவர், கற்பின் நலத்தையும் தவத்தின் திறத்தையும் எல்லாரும் புகழ்ந்து துதித்தார். சிறையிருந்து துன்பமெய்தியதால் சீதையின் அறிவும் பெருமையும் முன்னையினும் சிறந்து விளங்கின.

பொன்னைத் தீயிடைப் பெய்தலப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றலகில்
பின்னைக் காட்டுதற் குரியதென் றெண்ணியப் பெரியோன்.

இது, துன்பத்தால் வருந்தி நின்ற சீதையைத் தேற்றித் தச

ரதன் கூறியது.

## கதை 2.

அப்பர், மாணிக்கவாசகர், என்னும் இவ் அருந்தவர் இருவர்க்கும் சமணரும், பாண்டியனும், செய்த துன்பங்கள் பல. அத்துன்பங்கள் வருத்த வருத்த அவர்க்கு மெய்யுணர்வும் மேன்மையும் மேலோங்கி நின்றன. இவ்வுண்மையை அவர் சரிதையில் உணர்க.



வருந்த வருந்த அருந்தவர்க்குப் பெருஞ்சீர் உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

268. மண்பிபுகழ் நந்திமையேன் மன்னுயிரெல் லாமுவந்து
கொண்டுதொழு கின்ற குமரேசா—கொண்டுநின்ற
தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். (அ)

இ—ள்.

குமரேசா! உயிர்களெல்லாம் நந்தியை என் உவந்து தொழுகின்றன எனின், தன் உயிரைத் தான் அறப் பெற்றானை ஏனைய மன் உயிர் எல்லாம் தொழும் என்க.

தான் அறப் பெற்றானை—தனக்கே முற்றும் உரிமையாகப் பெற்றவனை. என்றது புலன்களோ அவாவி மனவசப்பட்டு அடிமையாகாமல் தனது உயிரின் உயர் நிலையை ஒருவன் தனக்கே உரித்தாகக்கொள்ளலை. ஏனைய மன்னுயிர் என்றது தன்னுயிரைத் தனக்கு உரித்தாகப் பெறாத மற்றைய உயிர்களை. ஏனைய என்பது குறிப்புப் பெயரெச்சம்.

தனது உயிரைப் பொறிகளுக்கு உரிமையாக்காமல் தனக்கே முழுவதும் உரிமையாக்கிக்கொண்டவனை மன்னுயிர்களெல்லாம் மகிழ்ந்து தொழும் என்பதாம்.

பொய்ப் பொருள்களில் புக்குழன்று புன்மையுறாமல் மெய்ப் பொருளை அடைதற்கு ஏதுவாகிய தவத்தைச் செய்தவரே உயிர் பெற்ற பயனை யுற்றவராவர்; மற்றவரெல்லாம் பெற்றவரல்லர் என்பது கருத்து. புறத்தேயுள்ள பொருள் முதலியவற்றைத் தனக்கு உரித்தாகப் பெற முயல்வதினும் உள்ளேயிருக்கும் உயிரையே அவ்வகைபெற ஒருவன் முயலவேண்டுமென்பது குறிப்பு.

உடம்பு பெற்றவரெல்லாம் உயிரைப் பெற்றவரே யெனினும் அவ்வுயிர், உயர்நிலை யெய்தி மெய்யின்பத்தைப் பெறும்படி உயர்வு பெற்றவனே அதனைத் தனக்கு உரித்தாகப் பெற்றவன் என்க.



தவத்தால், உயிரைத் தனக்கு உரித்தாகப் பெற்றவரை உலக மெல்லாம் உவந்து தொழும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்தி தேவர்பால் உணரப்படும்.

## கதை.

நந்திதேவர் என்பவர் சிலாத முனிவருடைய புதல்வர். தாய் பெயர் சித்திரவதியார். தமது பெற்றோர் செய்த அருந்தவத்தின் பெரும் பயனாக இவர் அவதரித்தார். அழகும் அறிவும் அமைதியும் வாய்ந்து எல்லாவுயிர்களும் இன்புற வளர்ந்தார். சைலாதி என்று முதலில் பெயரிடப் பெற்றார். பல்வகைக் கலைகளும் பயின்று தெளிந்தார். உலகப் பொருள்களில் உளப்பற்றற்றார். பொறி வழிச் செல்லும் சிறுமை அகன்றார். மனமொழி மெய்களை இனிது அடக்கினார். சிவமே துணையென்று தவமே புரிந்தார். உதிர் சருகு தின்றும் சிறிது நீர் பருகியும் உடல் வருந்தி நின்றார். பருவங்கள் பல கழிந்தபின் பரமன் தோன்றினார். வேண்டியது என்

என வினவினர். "நின்பால் அன்பே என்பால் அருள்க" என இவர், வேண்டி வணங்கினர். அவர், அதை அருளி அகன்றார். அதன் பின்னும் இவர், அருந்தவமே செய்து அவர்பால் பெரு நலங்களை எல்லாம் பெற்றார். பரமனைப்போலவே திருவுருவமைந்து என்றும் அழிவில்லாதவராய் எல்லாத் தெய்வங்களுக்குந் தலைமைத்தன்மையை யெய்தி சுபஞ்ஞை என்னுந் திரு மனைவியோடு பெருமகிழ்வுற்றார். திருக்கைலையில் நின்று சிறந்து விளங்கினர். அமரரும் போற்றும் உயர்ந்த பதவியில் அமரப்பெற்றார். ஆருயிர் அனைத்தும் இவரை அகமகிழ்ந்து தொழுதன. தன் உயிரைத் தனக்கு உரித்தாகப் பெற்றவனை மன்னுயிரெல்லாம் மகிழ்ந்து தொழும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது.

(இதன் விரிவைச் சிவ புராணத்தில் காண்க.)

தவமுடையானை உலகமெல்லாம் தொழும் என்பது இதனால் கூறப்பட்டது.



269. சாற்றுபுகழ் மார்க்கண்டர் சாருஞ் சுவேதரேன்
கூற்றினையும் வென்றார் குமரேசா—ஏற்றமிகு
கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. (௯)

இ—ள்.

குமரேசா! மார்க்கண்டர் சுவேதர்என்னும் இருவரும்ஏன் தமது தவத்தால் கூற்றையும் வென்றார் எனின், நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்குக் கூற்றம் குதித்தலும் கைகூடும் என்க.

கூற்றம்—எமன். இப்பெயர் உடம்புகளிலிருந்து உயிரை வேறு பிரித்துக் கூறுபடுத்துவோன் என்னும் ஏதுவான் வந்தது.

நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு—தவநிலையாகிய

வலிமையைச் சார்ந்தவர்க்கு கூற்றம் குதித்தலும் கைகூடும்—எம னைக்கடக்கவும் முடியும். உம்மை, அவனைக் கடக்க முடியாமையைக் காட்டி நின்றது. சேர்ப்பட்டவர்க்குங் கைகூடும் என்று காண்க.

தவத்தினாலுண்டாம் வலிமையை யடைந்தவர்க்கு எமனை யுங்கடந்துவிட முடியுமென்பதாம்

கை தலை என்னும் உறுப்பின் பெயர்கள் இதில் வேறு வகை யில் கலந்து நின்றன.

தவமுடையாரை மன்னுயிரெல்லாந் தொழும் என்று மேலே கூறினார்; இதில், அவர், எமனையுங் கடப்பர் என்றார். தவமான து தன்னையுடையாருக்கு அழிவில் நிலைமையை அருளும் என் பது கருத்து.

கடத்தற்கு அரிய எமனையும், தவமுடையார் கடந்து விடு வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மார்க் கண்டர் சுவேதர் என்னும் இவ்விருவர்பாலும் உணரப்படும்.

கதை.

மிருகண்டு முனிவரது புதல்வராகிய மார்க்கண்டர் பதினாறு வது வயதின் முடிவில் தமக்கு முடிவுகாலம் என்பதைத் தெரிந் தார். என்றும் அழியாமல் இருக்கும் நிலைமையை எய்த விரும்பி



னார். தவம் ஒன்றுமே விரும்பிய எல்லாம் விரும்பியவாறே பெற லாம் என்று உணர்ந்தார். உடனே சென்றார். உற்ற நோய் நோற்று உயர் தவஞ்செய்தார். அதன் வலிமையால் எமனையும் கடந்தார்.

உதவிய மிருகண் டேயன் மாலயன்
முதலவர் புகழ்தரு முதன்மை பெற்றனன்
விதிமுறை யவனருள் மிருகண் டொப்பிலோர்
புதல்வனைப் பெற்றனன் புரிந்த நோன்மையால். (1)

அப்பெருந் திருமகன் ஆயுளும் தோன்றிஞல்
தப்பரும் விதியினைத் தணர்ந்து கூற்றுவன்
துப்பினை யகற்றியே தொலைவு கண்டபின்
எப்பொழு தத்திலும் இறப்பின் றாயினன். (2)

(மார்க்கண்டேயப் படலம்.)

## கதை 2.

சுவேதர் என்பார் மாதியன் என்னும் ஒரு வேதியன் புதல்வர். சிறந்த கல்வியும் நிறைந்த அறிவும் திருந்திய பண்பும் பொருந்தப் பெற்றவர். பிறவியில் என்றும் பெருந்துன்பமே என்று தெளிந்தார். உலக வாழ்க்கையை வெறுத்தார். உண்டி முதலியவற்றைச் சுருக்கி உயர்ந்த விரதங்களைக் கொண்டார். அதன்பின் அலைகின்ற மனத்தையடக்கி அருந்தவம் புரிந்தார். புரிந்துவருங் கால் காலமுடிவில் காலன் வந்தான். அவரது அருந்தவங்கண்டான். கலங்கியகன்றான். பின் கூற்றுவன் வந்து கொதித்துப் பிடித்தான். பரமனருளால் அவனே யிறந்தான். அழியாத வாழ்வினைச் சுவேதர் அடைந்தார். இறந்த எமனை எழுப்பித்தரும்படி வேண்டினார். இறைவன் அருள அவனும் எழுந்தான். தவத்தின் ஆற்றலை மிகப்போற்றி யகன்றான்.

தவவலியுடையார் எமனையும் கடப்பர் என்பதை உலகம் இவர்பால்கண்டது. (இதன் விரிவை இலிங்கபுராணத்திற்காண்க.)



தவத்தினில் அமர்புரி சமனை வெல்லலாம்
தவத்தினில் எழுகடல் தமையும் உண்ணலாம்
தவத்தினில் வடவரை களைந்து தாக்கலாம்

தவத்தினில் அனலமும் தரிக்க லாகுமே.

(திருக்கூவப் புராணம்.)

தவவலியால் எமனையுங் கடக்கலாம் என்பது இதனால் கூறப் பட்டது.

270. பண்டு பலரிலராய்ப் பாடுரிந்தார் பாணனேன்
தொண்டான் திருவைக் குமரேசா—மண்டி
இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். (ய)

இ—ள்.

குமரேசா! பலர் வறுமையால் வாடினார் பாணன் என் பேருக திருவைப்பெற்றி அரசனைப் பாடிப்பான் எனின், இலர் பல ராகியகாரணம் நோற்பார் சில் நோலாதவர் பலர் என்க.

இலர்—வறியவர். பொருள் இல்லாதவர் என்னும் ஏதுவான் வந்தது. நோற்பார்—தவஞ்செய்வார். நோலாதவர்—தவஞ்செய்யா தவர். இலர் பலர் ஆகிய காரணம்—வறியவர் பலர் ஆதற்குக் காரணம். ஆகிய என்பது இந்த எதிர்கால வினையெச்சமாய் நின்றது.

பொருளுடையவர் சிலராகவும் பொருளிலவாதவர் பலராக வும் ஆதற்குக் காரணம் தவஞ்செய்வார் சிலரும் தவஞ்செய்யா தவர் பலருமாயமைந்தமையேயாம் என்பதாம்.

செல்வர் சிலராகவும், வறியர் பலராகவும், இவ்வுலகில் காணப் படுகின்றாரே யிதற்குக் காரணம் யாது என்பாரை நோக்கி யிது கூறியுள்ளதாகக் காண்க.

ஒத்த பிறப்பினையுடைய மக்களுள்ளே சிலர் மாத்திரம் செல்வம்பெற்றுச் சிறந்து வாழவும், பலர் வறுமை மிக்குவருந்தித்

தாழவுப், அமைந்தமைக்குக் காரணம் தவஞ்செய்தலும் செய்யாமையுமேயாம் என்று காட்டித் தவத்தின் நலத்தை இஃதுணர்த்தியதென்க.

இனி, துண்ணிய அறிவு இன்மையே வறுமை அஃதுடைமையே பெருஞ் செல்வம் எனப்படும் ஆகலால் அவ் அறிவினது இன்மை உண்மைகளும் கண்டுகொள்ளப்படும்.

முற்பிறப்பில் தவஞ்செய்தவரே இப்பிறப்பில் செல்வராய்த் திகழ்வர்; செய்யாதவர் வறியராய்த் திரிவர் என்பது கருத்து.

தவம், ஏமபயத்தை நீக்கி இறுதியில் பேரின்பத்தை ஆக்கும் என்றுமேலேகூறினர்; இதில் அது, பெருந்திருவையும் இங்குப்பொருந்த நல்குமென்றார். தவம் ஒன்றே இருமையினும் இன்பமெய்துதற்குரிய உரிமைகளையெல்லாம் ஒருங்கே உதவும் ஆகலால் அதனை ஒருவன் விரைந்து செய்துகொள்ளவேண்டுமென்பது குறிப்பு. தவஞ்செய்தவரே செல்வராய்ச் சிறந்து வாழ்வார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாணன்பால் காணப்படும்.

கதை.

பாணன் என்பவன் பலியின் புதல்வன். சோணிதபுரம் என்னும் திருநகரில் இருந்தவன். அசுரகுலத் தோன்றலாகிய இவன், தந்தை பிறந்தபின் தனிநின்று வாழ்ந்தான். புண்ணியமொன்றே எண்ணிய எலலாம் தரும எனறு தன் புந்தியிலுணர்ந்தான். இறைவனை நினைந்தான். நிறையுடன் ஒழுகினன். வருந்தி நின்று அருந்தவம் புரிந்தான். பருவங்கள் பல அழிந்தபின் பரமன் தோன்றினர். அவரருளால் இவன் பெருந்திரு வெய்தினன். அமரரும் போற்றும் உயர் நலமடைந்தான். அரசுரிமையடைந்து ஆருயிர் ஓம்பினன். தன் மரபில் தோன்றினவரும் வேறு பலரும் இல்லாதவராய்த் தன்னை வணங்கித்தாழ்ந்து நின்றார். இவன் மாத்திரம் செங்கோல செலுத்திச் சிறந்து வாழ்ந்தான். முடிவில், பரமன் அருகே நின்று பணிபுரியும் உயர்பதம் பெற்

ஞன். தவத்தனாலேயாருமாக தான் பெற்ற செல்வம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து மகிழ்ந்தது.



திருவும், அறிவும், தவத்தாலே வருமென்பது இதனால் கூறப் பட்டது.

உய்த்தொன்றி யோர்தந் துழவுழு தாற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குற லென்னொக்கும்
மெய்த்தவம் இல்லான் பொருளொடு போகங்கட்
கெய்த்துழந் தேதான் இடர்ப்படு மாறே. (வளையாபதி.)

பிறந்தனர் பிறந்துசாலப் பெருகினர் பெருகிப்பின்னை
யிறந்தன ரென்பதல்லால் யாவரும் இன்றுகாறும்

மறைந்துயிர் வாழாநின்றார் இல்லையால் வாழிநெஞ்சே
சிறந்தது தவத்தின்மிக்க தின்மையே சிந்திகண்டாய்.

(சூளாமணி)

அழகு, இளமை, மேன்மை முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்த தெய்வமகளிர் பலர் எளியராய் வந்து பணிகள் புரிய, அரக்கியர் தலைவியராய் நின்று இலங்கையில் நிலவுவதைக் கண்ட அனுமான், அவரது தவப்பயனை வியந்து கூறியதாகக் கம்பர் தீட்டிக் காட்டிய இன்கவி ஒன்று ஈண்டுக் காணத்தக்கது.

ஈட்டுவார் தவமலான்மற் றீட்டினால் இயைவதின்மை
காட்டினார் விரியாலிந்து காண்கிற்பார் காண்மினம்மா
பூட்டுவார் முலைபொருத பொய்யிடை நையப்பூநீர்
ஆட்டுவார் அமரர்மாதர் ஆடுவார் அரக்கர்மாதர்.

தவமுடையவரே திருவினை அடைவர் என்னும் உண்மையை உணர்த்துகின்ற இதன நயத்தை ஊன்றியுணர்க.

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

உறுநோய் பொறுத்தலும் பிறவுயிர்கட்கு அருள்புரிதலுமே ஒருவனுக்கு அருந்தவமாகும. முன் தவமுடையார்க்கே அஃது எளிதில் கைகூடும். இல்லறத்தார்க்குத் தானம்போல் துறவறத்தார்க்குத் தவமே சிறந்தது. அதனால் அழிக்கவும் ஆக்கவும் வல்ல ஆற்றல்கள் உளவாம். எண்ணிய எல்லாம அஃது இன்புற நல்கும். தவஞ்செய்வாரே தன்னுயிர்க்கு நன்மை செய்தவராவர். சுடச்சுடப் பொன ஒளிவிடுவதுபோல் துன்பம் உற உறத் தவஞ் செய்வார் சிறந்து விளங்குவர். தவமுடையானை உலகமெல்லாம் உவந்து தொழும். தவமுடையார் எமனையும் கடப்பர். அவரே செலவமெல்லாமெய்திச் சிறந்து வாழ்வர்.

உஎ—வது தவம் முற்றிற்று.

---



# உஅ-ம் அதிகாரம் கூடாவொழுக்கம்.

அஃதாவது தவத்தோடு பொருந்தாத ஒழுக்கம். உள்ளத்தில் ஒழுக்கம் இலராயிருந்தும் தவமுடையார்போல் புறத்தே பொய் வேடங்கொண்டு உலகத்தாரை வஞ்சித்தொழுகும் இவ்வன் கண்மை, இருமையினும் பெருங்கேடு பயக்குமாதலால் மெய்த் தவமுடையார் இப்பொய்யொழுக்கத்தை அறவே ஒழிக்கவேண்டுமென்பது கருதி இஃது ஈண்டுவைக்கப்பட்டது. அதிகாரமுறைமையும் இதனானே தெளிவாம்.

---

271. பண்டுமுத்த நாதன் படிற்றொழுக்கை எல்லாரும்
கொண்டிழித்தார் என்னே குமரேசா—மண்டுகின்ற
வஞ்ச மனத்தான படிற்றொழுக்கம் பூதங்கள்

ஐந்தும் அகத்தே நகும். (க)

குமரேசா! முத்தநாதனது படிற்றொழுக்கத்தை ஏன் எல்லாரும் நகைத்து இழித்தார் எனின், வஞ்சமனத்தானது படிற்று ஒழுக்கத்தைப் பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும் என்க.

படிறு என்பது பொய் களவு வஞ்சம் என்பவற்றைக்குறித்து வரும் ஒரு சொல். படிறு ஒழுக்கம் என்பது படிற்றொழுக்கம் என நின்றது. படிற்றொழுக்கம்—கள்ளவொழுக்கம்.

பூதங்கள் ஐந்தாவன நிலம், நீர், தீ, வளி, வான் என்பன. இவற்றின் சேர்க்கையானே உடம்பு முதலிய எல்லாப் பொருள் களுந் தோன்றியுள்ளன.

வானின் குணமாகிய ஒலியைச் செவியானும், வளியின் குணமாகிய ஊற்றை மெய்யானும், தீயின் குணமாகிய ஒளியைக் கண்ணானும், நீரின் குணமாகிய சுவையை வாயானும், நிலத்தின் குணமாகிய நாற்றத்தை மூக்கானும், நுகர்ந்து உயிர்க்கு உறுதுணை



யாயிணைந்திருக்கும் மனத்தின்கண் ஐம்பெரும் பூதங்களும் அறுவாயமர்ந்துள்ளன. அவையறியாத மறைபொருள் யாண்டும் இல்லை; இவ்வுண்மையை உணராமல் எவரும் காணார் என்று கருதி வஞ்ச மனத்தான் கொள்ளும் கூடாவொழுக்கத்தை அவைகண்டு அவனது மடமையை நினைந்து அவன் காணாமல் தம்முள்ளே நகைக்கும் ஆதலான் "பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்" என்றார்.

வஞ்சங்கலந்த மனத்தையுடையவனது படிற்றொழுக்கத்தை ஐம்பெரும் பூதங்களும் அறிந்து தம்முள்ளே சிரிக்கும் என்பதாம்.

ஆருவது ஒன்று இன்மையால், ஐந்தும் என்றார். இது மூர்றும்மை. இனி, பிறர் புறத்தே நகைப்பர், பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும் எனக்கொண்டால், எச்சவும்மையாம். ஐம்பூதங்களும் இறைவனுருவாய் எங்குங்கலந்து நின்று எல்லாவற்றையும் யாதலால் எவரும் அறியார் என்று கருதிக் கூடாவொழுக்கத்தை ஒருவன் கூடலாகாதென்பது குறிப்பு.

அகத்தே தீயஎண்ணங்கொண்டு புறத்தே தவவேடங்கொள்வோன் பழிபே யெய்தி யிழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை முத்தநாதன்பால் உணரப்படும்.

## கதை.

முத்தநாதன் என்பவன் கொங்கு நாட்டின் கீழ்பால்இருந்த ஒரு குறுநில மன்னன். செருக்கும் வஞ்சமும் சேர்ந்த நெஞ்சினன். அழுக்காறுள்ளவன். ஆசை மிக்கவன். கொடுங்கோலனாகிய இவன், அக்காலத்தில் திருக்கோவலூர் என்னுந் திருநகரிலிருந்து செங்கோல் செலுத்திவந்த மெய்ப்பொருளார் மீது மிகப் பகைமை கொண்டான். அவரை வென்று அவரது நாட்டைக் கைக்கொள்ளக் கருதினன். படையுடன் சென்று மிடலுடன் பொருதான். போரில் வலிதொலைந்து புறமுதுகிட்டான். பல முறையும் வந்தான். ஒரு பயனுமின்றி மீண்டான். அப்புண்ணிய வேந்தன் பெருமையை இப்புல்லியன் எண்ணி யெண்ணிப் புழுங்கினன். வஞ்சனையாலன்றி நேர்நின்று அவரை வெல்ல முடியாதென்று தெளிந்தான். தவமுடையார்போல் பொய்வே



டங்கொண்டு அம்மெய்ப்பர்பால் வந்தான். அவர், இவன் காவமியாது முனிவர் எனக்கருதித் தம் அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார். தனியிடம் புகுந்தவுடனே இக்கொடியோன் தன் கையில் மறைத்துவைத்திருந்த வாளால் அவர்தலை துணிபடவீசிக்

கொலைவினை செய்தான். உயர்ந்த வேடத்தைக் கொண்டிருந்தும் தீவினையால் இவன் இழிந்து தொலைந்தான். குற்றமுற்ற நெஞ்சி னர் கொள்ளும் வஞ்சவேடத்தால் யாதும் பயனில்லையென்பதை உலகம் இவன்பால் கண்டது. (இது பெரியபுராணத்திலுள்ளது.)

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோம் என்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொல் என்றஞ்சி
அங்கம் குலைவ தறிவு. (குமர குருபரர்.)

தீயர் கொள்ளும் மாய வேடத்தைக் கண்டு மயங்கலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

272. குன்று வுயர்தோற்றம் கொண்டும் அதிசூரன்
குன்றினன் என்னே குமரேசா—என்றேனும்
வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின். (உ)

இ—ள்.

குமரேசா! அதிசூரன் நீறுதோய்ந்த மெய்யினனாய் உயர்ந்த தோற்றம் உற்றும் ஏன் இழிந்தான் எனின், தான் அறிந்த குற்றத்தில் தன் நெஞ்சம் படின், வான் உயர் தோற்றம் எவன் செய்யும் என்க. வான் உயர்தோற்றம்—வான்போல் உயர்ந்த தவவேடம்.

வானை உவமை கூறியது தோற்றத்தின் உயர்ச்சி தோன்ற என்க. அறிகுற்றம்—அறிந்த குற்றம். இது வினைத்தொகை.

தான் குற்றமென்று அறிந்ததின் கண்ணே தன் நெஞ்சம் பொருந்துமாயின் வான்போல் உயர்ந்த தவவேடம் என்னபயனைச் செய்யும் என்பதாம். அதனால் யாதும் பயனில்லை என்றபடி.



மனத்தின்கண் மாசுடையார் புறத்தில் எத்துணை உயர்ந்த தவ

வேடத்தைத் தாங்கியிருப்பினும் அதனால் அவர்க்குப் பயனில்லை என்பது கருத்து. தீய நெஞ்சினர் கொண்ட வஞ்ச வேடத்துக்கு அஞ்சவேண்டாம் என்பது குறிப்பு.

சிறந்த தவவேடத்தை ஒருவன் பொருந்தியிருப்பினும், தன் நெஞ்சம் குற்றத்தின் கண்ணே பொருந்துமாயின் அவன் எல்லாராலும் இகழப்பட்டு இழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை அதிசூரன்பால் உணரப்படும்.

### கதை.

அதிசூரன் என்பவன் சோழமண்டலத்தைச் சார்ந்த எயினன் என்னும் ஊரிலே சான்றார் குலத்திலே பிறந்தவன். பொறாமையும் வஞ்சமும் பொருந்திய நெஞ்சினன். இவன் காலத்தில் ஏனாதிநாதர் என்னும் பெரியார் ஒருவர் அக்குலத்தில் தோன்றி நலத்துடன் வாழ்ந்திருந்தார். அவர், அஞ்சா நெஞ்சினர். குன்றா அன்பினர். பின்றாவென்றியர். சிவனடியாரைச் சிவமென நினைக்கும் தவநலமுடையவர். வாள்வித்தையில் வல்லவர். அதனைப் பிறர்க்குப் பயிற்றுவித்து அதனால் வரும் ஊதியங்கொண்டு அருந்தவரைப் பேணித் தாமும் அருளுடன் வாழ்ந்தார். இங்ஙனம் வாழ்ந்துவருங்கால், வாள்வலியில் தன்னினும் சிறந்து விளங்குகின்றார் என்று கருதி அவர்மேல் இவன் பொறாமைகொண்டான். புறங்கூறி வந்தான். பின் வெல்ல முயன்றான். பலமுறை முயன்றும் பழுதுற நின்றான். ஒடுங்கி நொந்து கொடுஞ் சூழ் செய்தான். தனியான இடத்துக்கு வரும்படி அவரைப் போர்க்கு விளித்து அழைத்தான். அவரும் அங்கு சென்று இவனை யெதிர்பார்த்து நின்றார். ஏனாதிநாதர் சிவனடியாரைச் சிவனென மதிக்கும் இயல்புடையார் ஆதலால், இக்கொடியவன் அவ்வடியவர் போல் தவவேடங் கொண்டான். நீறுதோய்ந்த மெய்யினனாய்

வாறுயர் தோற்றத்தோடு இப்பொய்யன் அம்மெய்யர்முன் அணு
கும்வரையும் தன் கையிலிருந்த கேடகத்தால் தன் முகத்தை மறை
த்துச் சென்றான். அவர், இவன் மீது தம் வாளினை வீச அடி



பெயர்த்தார். உடனே தன், பொய்வேடத்தை இவன் பொருந்தக்
காட்டினன். அவர் கண்டு மதித்தார். இவன்பால் அன்பு கொ
ண்டார் அவ்வமையம் இத்தீயவன் பாய்ந்து அத்தூயவர் தலை
யைத் துணித்தான். இறைவன் அருளால் அவர் உயர்பதமெய்
தினர். சிவவேடங் கொண்டும் இவன், அவமோசிழிந்தான். தான்
அறிந்த குற்றத்தின் கண் தன் நெஞ்சு வீழுமாயின் வாறுயர்
தோற்றத்தால் ஒருபயனும் அவனுக்கு இல்லையென்பதை உலகம்
இவன்பால் உணர்ந்தது. (விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.)

உள்ளந் திரிபின் வெளிவேடத்தால் பயன் இல்லையென்
பது இதனால் கூறப்பட்டது.

273. மாதவன்போல் இந்திரனோன் வல்லுருவந் தாங்கிவந்து
நோது புரிந்தான் குமரேசா—ஏதும்
வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. (க.)

இ—ள்.

குமரேசா! இந்திரன் என் மாதவன்போல் உருவந்தாங்
கிவந்து காதல் இன்பத்தைத் தீதுறத் துய்த்தான் எனின், வலிஇல்
நிலைமையான் வல் உருவம் பெற்றம் புலியின் தோலை போர்த்து
மேய்ந்தற்று என்க பெற்றம்—பசு.

பைங்கூழ் என்றது உணவுப்பொருள்களை யுதவுகின்ற நெற் பயிர் முதலான பசிய பயிர்களை.

வல் உருவம்—வலிய கோலம். அஃதாவது மனத்தின் வழிப் பட்டு மெலியாமல் அதைத் தன்வழிப்படுத்தும் வலியுடையார் கொள்ளும் தவவேடம். இங்கு வலி என்றது அறிவின் திண்மையை

மனத்தைத் தன்வசப்படுத்தும் வலியில்லாத இயல்பினையுடை யான் அவ்வலியுடையார் வேடத்தை மேற்கொள்ளல் பசு, புலி யின் தோலைப் போர்த்துப் பசும் பயிர்களை மேய்ந்ததை ஒக்கும் என்பதாம்.



காமம் தன்னுள்ளே தோன்றி கலிய அதனை அடக்குதற்கு உரிய தவவலி இல்லாதிருந்தும், தவமுடையார்போல் வஞ்சவேடங் கொண்டு பிறர் அறிந்து ஐயுறாவாறு மறைந்து சென்று தான் விழைந் ததை விரைந்து துய்ப்பார், பெரியனுக்கு, இயல்பாகவே வலி யில்லாதிருந்தும் வலியுடைய புலியின் தோலைப் போர்த்துத் தனக் குரிய புல்லைவிட்டுப் பிறர்க்குரிய பயிர்களைப் பரந்து மேயும்பட்டிப் பசுவை இங்கு ஒப்புறக் கூறினார். இஃது இல்பொருளுவமையாம். அஃதாவது எக்காலத்தும் இல்லாத ஒன்றினை இருப்பதாக்கொண்டு ஒரு பொருளுக்கு உவமையாக அமைத்து உரைப்பது. இதனை வடநூலார் அபூத உவமை என்பர். பசு, புலியின்தோலைப் போர் த்தல் என்றும் இல்லை என்பது நன்று தெளிவாம்.

பசு, புலித்தோலைப் போர்த்து ஒருவன் பைங்கூழை மேய் வதைக் காணினும், புலி புல்லைத் தின்னுது என்னுந் துணிவானும்

நெருங்கினால் அடித்துவிடுமே என்றும் அச்சத்தாலும் எவரும் அதனை அகற்றாது அகல்வர்; அதுபோல் வேடமுடையார் தீயொழுக்கம் புரியார் என்று நம்பியும், அவர் தவவலியுடையார் என அஞ்சியும் அவரை உலகோர் ஒன்றுங் கூறாதபோற்ற அவர், தன் கருதலை நிறைவேற்றிக் களித்துத் திரிவர் என்பதாம்.

உள்ளத்தில் தோன்றி நலியும் காமத்தை அடக்கலாற்றாது புறத்தில் தவமுடையார்போல் வேடங்கொண்டு பிறர்க்குரிய மகளிரை விழைதல் பெருந்தீது என்பதும் அத்தீயவொழுக்கம் தன்னையுடையானுக்குப் பழியையும் துன்பத்தையும் வழுவாமல் பயந்தேவிடுமென்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இந்திரன்பால் உணரப்படும்.

### கதை.

தன் மனத்தை யடக்குதற்கு உரிய தவவலியில்லாத இந்திரன் அவ்வலியினையுடைய கோதமரைப்போல் உருவங்கொண்டு அவருடைய மனைவியாகிய அகலிகைபால் வந்து அவளை வஞ்சித்து மருவினான். அதனால் என்றும் குன்றாத பழியினை யெய்தினான்.



எவரும் அறியார் என்று கருதிக் கரவாக நின்று தீயொழுக்கம் புரியினும் அஃது எல்லாராலும் அறியப்பட்டு இழிவே பயக்கும் என்பதை உலகம் இவன்பால் ஓர்ந்தது. (விரிவை மேலேகாண்க.)

கூடாவொழுக்கத்தால் கேடேவரும் என்பது இதனால் கூறப்பட்டது

274. பண்டுதவ வேடமுற்றும் பார்த்தன் சுபத்திரையைக்
கொண்டகன்றான் என்னே குமரேசா—கொண்ட
தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து

இ—ள்.

குமரேசா! தவ வேடத்தை மேற்கொண்டிருந்தும் பார்த்தன் ஏன் சுபத்திரையை மறைத்துக் கொண்டு போனான் எனின், தவம் மறைந்து அல்லவை செய்தல் வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்து அற்று என்க.

புதல்—தூறு: அஃதாவது செடி கொடிகளின் செறிவு.

புள்—பறவை. சிமிழ்த்தல்—பிடித்தல். பிணித்தலுமாம். தவம் என்றது ஆகுபெயராய் இங்கு அதன் வேடத்தை யுணர்த்தி நின்றது. அல்லவை என்றது தான், கொண்டவேடத்துக்கு இயல்பல்லாத கூடா ஒழுக்கங்களை.

தவம் மறைந்து—தவவேடத்தின் கண்ணே மறைந்து நின்று.

அல்லவை செய்தல்—தவம் அல்லாதவற்றைச் செய்தல்.

சிமிழ்த்து அற்று—பிணித்ததை ஒக்கும்.

தவவேடத்தின் கண்ணே மறைந்து நின்று தவம் அல்லாதவற்றை ஒருவன் செய்தல், புதரின் கண்ணே மறைந்து நின்று வேட்டுவன் புட்களைப் பிணித்தாற்போலும் என்பதாம்,

28-ம் அதிகாரம் கூடாவொழுக்கம் 539

வெளிவேடங்கொள்ளும் வெய்யரைப் பழிவேட்டர் என்று ஒழிக்கவேண்டும் என்பது குறிப்பு.

மேல், அகத்தில் காமமுடையவன் புறத்தில் தவவேடங்கொள்ளல் பசு, புலித்தோலைப் போர்த்ததை ஒக்கும் என்றார். இதில் அவன், பறவைகளைப் பிடிக்கும்பொருட்டுப் புதரில் மறைந்து நிற்கும் வேட்டுவனை ஒப்பன் என்றார்,

கூடாவொழுக்கத்தானது உருவமும் செயலும் இவ் இருவகை உவமைகளாலும் விளக்கப்பட்டன.

அடிகள் காட்டிய இவ்வுவமையை கச்சியப்பவள்ளல் தம் பாவில் காட்டியுள்ளமை இதனடியில் வருவதால் காணப்படும்.

கேட்டியால் அந்தணுள கேடிலா எம்பிரான்றன்
மாட்டொரு சிறிதுமன்பு மனத்திடை நிகழ்ந்ததில்லை
காட்டுறு புள்ளின்ருழல் கவருவான் புதன்மேற்கொண்ட
வேட்டுவ னியல்போன் மேலோன் வேடம்நீ கொண்டதன்மை.

உமாதேவி தவம் புரிந்தகாலத்தில் பரமன் ஒரு தவயோகி போல் வந்து, அவரது திருவுள நிலையை உலகறியும்படி அவரிச் சிவநிந்தையாகச் சில மொழிகள் பகர்ந்தார். அம்மை பொருது வெகுண்டு அவரைநோக்கி, தவவேடமுடையராயிருந்தும் இவ்அவ மொழி புகலும் உமது செயலைநோக்கின் புதர்மறைந்து புட்களைக் கவரும் பொல்லா வேடனது புல்லிய இயலை ஒத்திருக்கின்றது. ஆதலால், செல்லும் செல்லும் என்றுசொல்லுங்கால் இது, சொல் லியதென்

கருதியதைக் கைக்கொள்ளும் பொருட்டு அரிய தவவேடத்தை மேற்கொள்வாருஞ் சிலர் உளர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை அருச்சுனன்பால் அறியப்படும்.

கதை.

அருச்சுனன் என்பவன் தருமர் முதலிய ஐவருள் ஒருவன். பங்குனித் திங்களில் உத்திரநாளில் இந்திரமந்திரத்தால் குந்தியிடம் பிறந்தவன். சிறந்த போர்வீரன். வில்வித்தையில் இராகவனுக்கு அடுத்தவன். பார்த்தன், தனஞ்சயன், பற்கு





னன், கிரீடி, விசயன், சவ்வியசாசி, வீபற்சு, அருச்சுனன், கிருட்டினன், சுவேதவாகனன் எனப் பத்துபெயர்களை யுடையவன். இவையெல்லாம் இவனுக்கு ஏதுவால் வந்தன. ஒரு காலத்தில் இவன், ஓர் ஏதுவால் இந்திரப்பிரத்தம் என்னும் தன் நகரத்தை

விட்டுத் தீர்த்தயாத்திரைக்குச் சென்றான். பல நதிகளிலும் நீராடி மகிழ்ந்து இறுதியில துவாரகையை அடைந்தான். கண்ணன் தங்கையாகிய சுபத்திரையின் பேரழகைக் கேட்டு அவள் மேல் பெருங்காதல் கொண்டான். பெற்றாரும் உற்றாரும் அவளைத் துரியோதனனுக்கு மணமுடிக்கக் கருதியிருந்தனர். அதனைமுன்னர் அவளை இவன் கைக்கொள்ள விரும்பினான். காவிதோய்ந்த ஆடையை உடுத்து தண்டுங் கமண்டலமுங்கொண்டு ஒருமாதவன் போல் வேடங்கொண்டு அங்கோர் மலைச்சாரலில் தங்கிக் கண்ணனைக் கருதினான். அவரும் வந்தார். உண்மை தெளிந்தார். பலராமன் முதல் அவர் மரபினர் அனைவரும் முனிவர் என்று கருதி மனமுறப் பணிந்தார். சில நாட்கள் கழிந்தபின்னர் அவருக்குப் பணிசெய்துவரும் படி சுபத்திரையைத் துணையாக வைத்தார். விரும்பியது கிடைத்ததென்று விசயன் பெருமகிழ்வெய்தினான். பணிவிடை செய்து வருங்கால் காதல் மொழிகளும் இடையிடையே கலந்து நிகழ்ந்தன. இயல்பாகவே சுபத்திரை அருச்சுனன்மீது மையல் கொண்டிருந்தாள். தவமறைந்திருந்தவர் தன்மையை அறிந்தாள். விழைந்திருந்ததை இருவரும் விரைந்துடன் துய்த்தார். பருவங்கண்டு ஒருநாள் அவளை உடன்கொண்டகன்றான். பலராமர் முதலிய அனைவரும் தவமறைந்து அல்லவை செய்தான் என்று அவனை மிக இகழ்ந்து நொந்தார். வேடன் புதரில் மறைந்து நின்று பறவைகளைப் பிணித்தல்போல் சிலர் தவவேடத்தில் மறைந்து நின்று தாம் கருதிய மகளிரை மணந்து தகவர் என்பதை உலகம் அருச்சுனன்பால் உணர்ந்தது. எத்துணை சிறந்தவர்களாயினும் தவமறைந்து அவம்புரிதலால் அவர் பழிக்கப்படுவாராதலால் அதனை ஒழிக்கவேண்டும் என்பது கருத்து. இதன் விரிவைப் பாரதத்தில் காண்க.

கூடா ஒழுக்கம் கூடாதென்பது இதனால் கூறப்பட்டது.

275. பற்றற்றோர் போன்று படிவமுற்ற வில்வலனென்
குற்றமுற்று மாய்ந்தான் குமரேசா — முற்றவே
பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்
றேதம் பலவுந் தரும். (௫)

குமரேசா! பற்று அற்றவர்போல் வேடங்கொண்ட வில்வலன் பழியுற்று அழிந்து ஏன் இழிதுயருற்றான் எனின், பற்று அற்றேம் என்பார் படிற்று ஒழுக்கம் எற்று எற்று என்று பழிக்கத் தக்க ஏதங்கள் பலவுந் தரும் என்க.

எற்று எற்று என்று—என்ன பாவஞ் செய்தேன், என்ன பாவஞ் செய்தேன் என்று தானே வருந்தி இரங்கும் வகை.

ஏதம் பலவுந் தரும்—துன்பங்கள் பலவற்றையும் கொடுக்கும்.

எற்று எற்று என்று ஏதம் பலவுந் தரும் என்பது, கொல்லு கொல்லு என்று பிறர் சொல்லி இகழும்படியான துன்பம் பலவும் தரும் எனவும் பொருள்படும்.

மனத்தில் பற்று அறாதிருந்தும், "யாம் பற்று நீங்கினேம்" என்பாரது வஞ்சவொழுக்கம், என்ன செய்தோம் என்ன செய்தோம் என்று பின் அவர் வருந்தி இரங்கும் வகை பல துன்பங்களையும் அவர்க்குக் கொடுக்கும் என்பதாம்.

கூடாவொழுக்கம் பின், தனக்கே கேடு விளைக்குமாதலால் அதனைச் சிறிதும் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

வேடத்தால் உலகத்தாரை வஞ்சித்து அதனால் இன்புற்று வாழ்வோர் பின் தாமே வாய்விட்டு அலறிப் பெருந்துன்பத்தால் வருந்தி மாள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வில்வலன்பால் உணரப்படும்.

## கதை.

வில்வலன் என்பவன் எல்லாந் துறந்தவன்போல் நடித்து

செய்து முடிவில் அகத்திய முனிவரைக் கண்டான். அருந்தவத்திற் சிறந்த அப்பெருந்தகையிடத்தும் அஞ்சாது நின்று வஞ்சம் புரிந்தான். முனிவர் தெளிந்து பெருமுனிவு கொண்டார். தருப்பை ஒன்றை எடுத்து அவனமேல் வெறுப்புடன் எயினர். அதனால் அவன் ஆவி தீர்ந்தான். நரகினிலாழ்ந்து பின் பிறவியில் வீழ்ந்தான். வறுமையும் நோயும் வருத்த வருந்தினன். ஏன் செய்தேன என் செய்தேன் என்று பின் ஏங்கி இரங்கினன். தன் பழவினையை நினைந்து அழுதழுது நொந்தான். பற்று அற்றேம் என்பாரது படிற்றொழுக்கம் ஏற்று ஏற்று என்று இரங்கும்படி அவர்க்கே பின் ஏதம் தரும் என்பதை இவன் எய்தக் கண்டான்.

படிற்றொழுக்கம் பின்பு தனக்கே பெருந்துன்பந்தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

[வர்ந்தேன்
276. மாதவன்போல் வந்தமதன் மாண்பொருளெல் லாங்க
கோதுசெய்து சென்றன குமரேசா—யாதொன்றும்
நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல். (௬)

இ—ள்.

குமரேசா! மதன் என்பவன் மாதவன்போல் வந்து வஞ்சித்துத் தருமதத்தனையும் இரக்கமின்றிக் கெடுத்து என் ஒடி மறைந்தான் எனின், நெஞ்சில் துறவார், துறந்தார்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணார் இல் என்க. வன்கணார்—கொடியார்.

உள்ளத்தில் பற்றுக்களை வைத்துக்கொண்டு துறந்தார்போல் புறத்தில் பொய்வேடம் பொருந்தி வஞ்சித்து வாழ்வாரைப்போல் கொடியவர் உலகத்து இல்லை என்பதாம்.

நெஞ்சு நேர்மையில்லாரது வஞ்சவேடத்தைக் கண்டு மயங்கலாகாது என்பது குறிப்பு.

28-ம் அதிகாரம் கூடாவொழுக்கம் 543

உள்ளத்தில் துறவு இன்றிக் கள்ளவேடம்பூண்டு உலகத்தாரை வஞ்சிக்குங் கூடாவொழுக்கத்தவர், தம்மை நம்பி அடுத்தவர் பொருளை யெல்லாங் கவர்ந்து நன்றியும் அருளுமின்றி அவர்க்குப் பெருங் கேடு விளைக்குங் கொடியர் ஆதலால் அவரை "வன்கண்ணர்" என்றார். இவ்வுண்மை மதன்பால் காணப்படும்.

## கதை.

மதன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னர் கலிங்க நாட்டிலே மதங்கபுரி என்னும் நகரிலே யிருந்தான். மனநலமில்லாதவன். சொல்வலியால் எவரையும் மயக்க வல்லவன். பொல்லாத சூழ்ச்சிகள் எல்லாந் தெரிந்தவன். இவன் ஒருநாள் தலையை முண்டிதஞ் செய்து, காதில் குண்டலமணிந்து கழுத்தில் கண்டிகை புனைந்து, மெய்முழுதும் வெண்டிருநீறு பூசி கையில் சிறிய தண்டு ஒன்றை ஏந்தி, முற்றத்துறந்த முனிவன்போல் தோன்றி, அந்நாட்டிலுள்ள அரிபுரம் என்னும் நகரினை யடைந்து தனியான ஓரிடத்தில் தங்கினான். மறுநாள் தருமதத்தன் என்னுந் தனவணிகன் இல்லினையடைந்தான். அவன் இக்கொடியவனை அடியவர் என்று மதித்து அம்மனைக்கண் ஆதரித்து உணவருத்தினான். இவன் உண்டு மகிழ்ந்தான். பற்றற்றவன்போல் நடித்துத் தத்தனை நோக்கினான். அன்பனே "யான் முற்

றத்துறந்தவன். நின் அவாவிற்காக ஈண்டு வந்துளேன். இரும்பு முதலிய இழிந்த பொருள்களையெல்லாம் உயர்ந்த பொன்னாக்குவேன். அருந்தவஞ் செய்கின்ற நான் உனக்கு ஏதாவது தரும்படி விரும்பினேன். உன்பால் உள்ள பொருளெல்லாங் கொணர்க. நின் இல்லில் வைத்தற்கு இடம் இல்லையென்று சொல்லும்படி அவற்றை மிகப் பெரிதாக்கி நினக்கின்று தருவேன்." என்று மாயமொழிகள் பல நேயமொடு புகன்றான். தத்தன் நம்பித் தன் பொருளெல்லாந் தந்தான். அவ்வளவில் அமையாமல் தம் முன்னோர் நிறுவிய தரும வுரிமைகளையும் விற்று அதன் பெயரியல்பினை விளக்கினான். வந்தவன் கொண்டு வாதஞ் செய்வதுபோல் ஏதஞ் செய்தான். உருக்கிய குகையை நெருப்பிடை வைத்தான். பெரும்புகை செறிதரும் மருந்தொன்றையிட்டான். புகையால் தத்தன்



பொறிகலங்கி நின்றான். அவ்வமயம் இவன், பொய்க் குகையொன்றைப் பொருக்கென வைத்து அக்கொப்பக் குகைதன்னை மெல்ல மறைத்தான். புகையையும் அணைத்தான். நாலாறு நாட்களுள் வருவதாக நயமொழி புகன்றான். தன்னை மும்முறை வலம்வந்து வணங்கச் செய்தான். பாவம்! தத்தன் சுற்றிவந்து வணங்கித் துவண்டு நின்றான். குகையிலிட்ட பொன், மூன்று நாட்களுள் நூற்றெட்டு மாற்றும் என்று பொருந்தமொழிந்து பொய்யிவன் ஒழிந்துபோனான். குறித்த நாளில் தத்தன் குகையைப் பார்த்தான். மிகையே கண்டான். வருந்தி விழுந்தான். மடிந்து தீர்ந்தான். அற வுரிமைகளை விற்றமையால் கரும தத்தன் மதமிகுந்த யானையாய் மாறிப் பிறந்து வனத்தில் திரிந்தான். உணவையும் உண்டு பொருளையும் கொண்டு நன்றி சிறிதுமின்றித் தன்னை நம்பினவனுக்கு இருமையினும் பெருங்கேடு விளைத்த கொடியனுதலால் நெஞ்சிற் றுறவின்றி துறந்தார்போல் வந்த அவ்வஞ்சனை வன்கண்ணன் என்று வையம் இகழ்ந்தது. அவனும் மாய்ந்தான். நரகில் ஆழ்ந்தான். இதன் விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

கொடியார் எவரினும் கூடாவொழுக்கத்தாரே கொடியார் என்பது இதனால் கூறப்பட்டது.

277. சீதைபால் மாதவன்போல் சென்றான் இராவணனுட்
கோதுகொண்டும் என்னே குமரேசா—ஓதும்
புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து. (எ)

இ—ள்.

குமரேசா! சீதைபால் மாதவன்போல் வேடங்கொண்டு வந்த இராவணன் என் தன்னுள்ளத்தில் தீய எண்ணத்தைக் கொண்டிருந்தான் எனின், புறம், குன்றி கண்டு அனையரேனும் குன்றி மூக்கின் அகம் கரியாரை உலகம், உடைத்து என்க.



குன்றி என்பது ஒருவகைக் கொடி. அஃது இங்கு ஆகுபெயராய் அதன் கொட்டையை உணர்த்தி நின்றது. நுனியில் கறுத்து மற்றது சிவந்து உருட்சியாயிருத்தலின் அதனைக் குன்றி மணி என்பர்.

புறம் குன்றி கண்டு அனையர் எனும்—புறத்தில் குன்றிமணியைக் கண்டாற்போல செம்மையான வேடத்தையுடையராயினும்.

குன்றி மூக்கின்—குன்றி மணியின் மூக்குப்போல.

அகம் கரியார்—மனம் இருண்டிருப்பார். கருமை இங்கு தீமைமேல் நின்றது.

குன்றி மணியைப்போல் புறத்தில் செம்மையுடையராய்க் காணப்படினும் அதன் மூக்குப்போல அகத்தில் கருமையுடையாரை இவ்வுலகம் உடைத்தாயுள்ள தென்பதாம்.

உள்ளந் தீயாரும் நல்லார்போல் வேடம்பொருந்தி இவ்வுலகில் திரிவர் ஆதலால் அவரை அஞ்சி அகலவேண்டு மென்பது குறிப்பு.

காவிதோய்ந்த ஆடையையுடுத்து புறத்தில் பற்றற்றவர்போல் நடித்து அகத்தில் காமமுடையராய் அறிவிழந்து திரியும் வேடதாரிகளுக்குக் குன்றிமணியை ஒப்புக்கூறியது, செம்மையும் கருமையும் சேர்ந்திருக்கும் அதன் தன்மை கருதி என்க.

நல்ல வேடத்தை மெய்யிலும் தீய எண்ணத்தை நெஞ்சிலும் உடையாரும் இவ்வுலகத்தில் உளராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராவணன்பால் உணரப்படும்.

## கதை

இராவணன் சீதைமேற் காதல் பூண்டு அவளிருந்த சோலைக்குவந்து அருந்தவன்போல் வேடங்கொண்டு அவள்முன் சென்





றான். அவளும் அவனை முனிவனென்றே கருதி இனியமொழிகள் பகர்ந்து எதிர்கொண்டழைத்தாள். ஏத்தித் துதித்தாள். இருக்கையும் ஈந்தாள். அவ்வஞ்சனும் இருந்தான். அவ்வஞ்சியை நோக்கி நோக்கித் தன் நெஞ்சங் களித்தான். உரியவர் வருவரோ எனவு பெரிதும் விசாரித்தான். ஆசைமீக்கூர்ந்தான். நீர்

யாரப்பா? என்றான். அகம் கரியனாய்ப் புறம் செய்யனாய் வந்த அவ்வெய்யவன் தீமையை, அம்மெய்யவள் ஓர்ந்திலள் ''நான் சனகன் மாமகள். பெயர் சனகி, காகுத்தன் மனைவி'' என்று அம்மறுவில் கற்பினாள் மறுமொழி தந்தாள். இருந்தவன் போன்று இருந்தவன் இவற்றையெல்லாங் கேட்டான். தானும் சிலபுகன்றான். பின், வானும் வையமும் வருந்த அவளை வாரியெடுத்துச் சென்றான். நெஞ்சு கரியாரும் வஞ்ச வேடங்கொண்டு உலகில் உலாவுவர் என்பதை அவன் உணர்த்தி நின்றான்.

உள்ளும் புறமும் ஒவ்வாத கள்ள வேடத்தாரை உணர்ந்து நீக்கவேண்டுமென்பது இதனால் உணர்த்தப்பட்டது

278. பண்டொருவன் ஆசான் பணம்பறிக்கப் பொய்வேடம்
கொண்டுவந்தா னன்றோ குமரேசா — கொண்ட
மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். (அ)

இ—ள்.

குமரேசா! முன், ஒருவன் தன் குருவின் பொருளைக் கவரும் பொருட்டு என் வேடங்கொண்டு மறைந்து வந்தான் அனின், மாசு மனத்தது ஆக மாண்டாராய் நீராடி மறைந்தொழுகும் மாந்தர் பலர் இவ்வுலகில் உளர் என்க.

மாசு மனத்தது ஆக—குற்றம் மனத்தின்கண் அமைந்திருக்க. மாண்டார் நீர் ஆடி—மாட்சிமையுடையார் போல நீரின் மூழ்கி. இனி, மாண்டாரது நீர்மையைப் பொருந்தி எனவும் இது பொருள்படும். நீர்மையென்றது தவத்தின தன்மையை.

மனத்தின்கண் மாசு உடையராயிருந்தும், மாட்சிமையுடையார் போன்று நீரில் மூழ்கிப் புறத்தே தவவேடங்கொண்டு அதன் கண் மறைந்து நின்று ஒழுகும் மாந்தர் பலர் உளர் என்பதாம்.

உள்ளத்தில் அழுக்கு இருக்க அதனை ஒழிக்காது உடல் அழுக்கைக் கழுவிக் கள்ளவேடங்கொண்டு நல்லார்போல் நடிக்கும் பொல்லாதாரும் பலர் இவ்வுலகில் உளராதலால், அவரை அறிந்து அகற்றவேண்டுமென்பது கருத்து.

உள்ளம் மாசுற உடல்மாசு கழுவிப் பிறர்பொருள் கவர்ந்து கரவுடன் ஒழுகும் பழியர் பலருளர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை தேவசன்மன் பாலும், திவகன் கண்ணும் தெளியப்படும்.

## கதை.

இற்றைக்கு எண்ணூறு வருடங்கட்கு முன்னர் மகதநாட்டிலே மாகபுரி என்னும் ஊரிலே தேவசன்மன் என்னும் வேதியன் ஒருவன் இருந்தான். அவன் வறுமை மிக்கவன். வஞ்சித்து வாழத் தன் நெஞ்சத்தெண்ணினான். துறவிபோல் வேடங்கொண்டான். அருள் பெற்றவன்போல் நடித்துப் பொருள்பெற்வர்பால் சென்றான். அருந்தவன் என்று மதித்து அனைவரும் அவனுக்கு அன்பு செய்து வந்தார் அவர்பால் தொகுத்த பொருளையெல்லாம் பொற்காசுகளாக மாற்றி உள்ளே துளையுள்ள தண்டு ஒன்றில் எவரும் அறியாமல் செறித்து என்றும் அதனைத் தன் கைக்கொண்டிருந்தான். பரம்பொருளினும் அவ் அரும்பொருள் மீதே அவன் பற்று மீக்கூர்ந்தான். என்றும் எவரிடமும் அத் தண்டை எனைத்துணையும் நல்கான். இவ்வாறு ஒழுகி வருங்கால் அத்தண்டின் தன்மையைத் திவகன் என்னும் ஒருமிண்டன் தேர்ந்தான். அதனைக் கைக்கொள்ள விரும்பினன். தக்கார் போலத் தானும் தவவேடம் பூண்டான். பொன்னூறு தண்டுகொண்ட அப்பொய்யன்பால் வந்தான். பொருந்த வணங்கி அருந்தவன் போல் நடித்தான். தொண்டுசெய்வதாகத் தொழுது அடிஅடைக்

, தான். குருவும் சீடனுமாய் அவ் இருவரும் அமைந்தார். ஆண்டு

69



ஒன்று கழிந்தது. இருவரும் ஒருவன் இல்லிடைச் சென்று தம் இருப்பிடம் மீண்டார். வேடச்சீடன் தன் தலையிலிருந்த துரும்பு ஒன்றை எடுத்தான். "அந்தோ! அவ் அன்பன் மனைத் துரும்பு என் தலையிலிருந்தது, யான் அறியாமல் கொணர்ந்தேன். பெரும்பாவம் செய்தேன், என்செய்வேன்! குருநாதா", என்று அழுது தொழுது பின்பு ஓடினான். அவ் இல்லிடையே அதனை மெல்ல எறிந்துவிட்டு ஒல்லையில் வந்து தன் குருவின் அடியினை யடைந்தான். அப்பாவந்தீர அருள் செய்ய வேண்டினான். எவரையும் நம்பாத அப்பொய்க் குருவும், வியந்து அன்று முதல் அவனை நம்பினான். தன் கைத்தண்டையும் அவன் கையில் தந்து வாங்கத்தானே இசைந்தான். கொடுத்தலும் வாங்கலும் அடுத்து அடுத்து நிகழ்ந்தன. குறி பார்த்திருந்து அத்தண்டை ஒருநாள் சீவகன் கொண்டே போயினான். கருத்தில் அருளில்லாத இவன் தன் கையிலிருந்த பொருளையுமிழந்தான். மருளுறவுமுழந்தான்.

"பிறர் மனைத் துரும்பு கொள்ளான்
பிராமணன் தண்டு கொண்டான்"

என்று அந்த நாடெங்கும் ஒரு மொழி ஓர் உயர்ந்தது. சீவகனும், தேவசன்மனும் மனத்துறவின் மாசற்றும் மாண்டார் நீராடி. மறைந்தொழுகி வாழ்ந்ததை உலகம் தெரிந்து இகழ்ந்தது.

உள்ளத்தில் இழுக்கிருக்க உடலழுக்கைக் கழுவுவதால் பய ' என்பது இதனால் கூறப்பட்டது.

279. கண்டமான் செவ்விதென்ற காகுத்தன் பின்செயலாற்
கொண்டனன்றீ தென்றே குமரேசா—மண்டும்
கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். (௯)

இ—ள்.

குமரேசா! முன் கண்ட மானைச் செவ்விது என்று கொண்ட காகுத்தன் பின் ஏன் அதன் செயலால் தீயதென்று



தெளிந்தான் எனின், கணைகொடிது, யாழ்கோடு செவ்விது, ஆங்கு அன்ன வினைபடு பாலால் கொளல் வேண்டும் என்க.

காகுத்தன்—இராமன்; ககுத்த மரபில் பிறந்தவன் என்பதாம். இவ்வாறு வருவதை வடநூலார் தத்திதாந்த நாமம் என்பர். தாசரதி என்பதும் அது.

கணை—அம்பு. கோடு—வீணைத்தண்டம்.

ஆங்கு அன்ன—அவ்வகையே கொடியர் செவ்வியர் என்பன.

வினைபடு பாலால் கொளல்—தொழில்படு வகையால் தெளிந்து கொள்க. செவ்விய கணை கொலைத் துன்பத்தையும் கோடிய யாழ் இசை இன்பத்தையும் கொடுத்து நிற்றலால், கொடியர், செவ்வியர், என எவரையும் வடிவால் துணியாது செயலால் தெளிக என்பதை அன்ன என்னும் வினைக் குறிப்பால் விளக்கினார்.

அம்பு, வடிவத்தால் செவ்விது, ஆயினும் தொழிலால் கொடிது; யாழ், கோட்டால் வளைந்தது ஆயினும் செயலால் செவ்விது; அவ்வகையே தவம்புரிவோரைக் கொடியர் செவ்வியர் என அவரவர் வினைபடு வகையால் அறியவேண்டும் என்பதாம்.

இவர், நல்லவர்; இவர், தீயவர்; என எவரையும் வேடத்தால் மதிக்கலாகாது. அவர் அவர் செயல்களால் அறியவேண்டுமென்பது கருத்து.

மாசு மனத்தது ஆ் அறக்கவர் போல் மறைந்தொழுகும் மாந்தர் பலர் உலகில் உளர், அவரை அறிந்து நீக்கல் வேண்டுமென்று மேலே கூறி, அவரை அறியும் விதத்தை இதில் உவமையால் விளக்கினர்.

உருவத்தால் செவ்வியர் போன்று வந்தவர், பின் செயலால் கொடியராய்க் காணப்படின் உடனே அவரை ஒழித்து மீளவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது மாரீசன் பால் உணரப்படும்.



கதை.

மாரீசன், மானாகி வந்துசீதைமுன் நின்றதைக்கண்ட இராமன் அதனது உருவச் செவ்வியைக்கொண்டு நல்லதென்றே துணிந்து பற்றும்படி பின்சென்று நெடுந்தூரம் போனபின் அதன் செயலால் கொடுந் தீமை தெளிந்தார். பின் தம்மைக் கொண்ட அம்பை அதன் மெய்க்கொள்ள விடுத்தார். திரும்ப வந்தார். அதனால் நேர்ந்த தீமையால் நொந்தார்.

காயம்வே றாகிச் செய்யுங் கருமம் வேறாயிற்றன்றே
வாயுமே யென்னின் முன்னம் எண்ணமே இளவற்குண்டே
ஆயுமே லுறுதல் செல்லாம் அரக்கரானவர்கள் செய்த
மாயமேயாய தேநான் வருந்தியதென்றான் வள்ளல்.

ர், தான் செவ்விது என்று கொண்ட மாயமானின் வினைபாடு பாலால் அதன் தீமை கண்டபோது இராமன்சொன்னது.

வேடதாரிகளின் இயல்பினை அவரது செயல்களான் உணர

வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

280. பண்டுதவ வேடமொன்றும் பற்றார் சகரேசர்
கொண்டார் உயர்வேண் குமரேசா—கொண்ட
மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். (௭)

இ—ள்.

குமரேசா! சகரேசர் என்பவர், உயர்ந்த தவவேடம் ஒன்றுங்கொள்ளாமல் என் சிறந்து நின்றார் எனின், உலகம்பழித்ததை ஒருவன் ஒழித்துவிடின், மழித்தலும் நீட்டலும் அவனுக்கு வேண்டா என்க.

மழித்தலும்— தலைமயிரைக் களைதலும், வழித்தல் என்பதும் அது.



நீட்டலும்—களையாது வைத்து மயிரைச் சடையாக்கி நீட்டலும். உலகம் பழித்தது—உயர்ந்தோர் பழித்துக்கூறிய குற்றத்தை. தீமை நன்மைகளைத் தெரிந்து கூறவல்லார் உயர்ந்தோரே ஆதலானும் "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றதனாலும் உலகம் என்பது ஈண்டு உயர்ந்தோர்மேல் நின்றது.

சிலர் மொட்டையடித்தும், சிலர் சடைவளர்த்தும் துறவியாவர். சைநமதத்தைச் சார்ந்தவர் துறவு கொள்ளுங்கால் மயிரை ஒவ்வொன்றாகப் பறித்து நீக்குவர். மொட்டைச்சாமி, சடைச்சாமி என்று பெயரெடுப்பதிலும், ஒழுங்கச்சாமி என்று உயர்ந்தோர் புகழுமாறு ஒழுகுவதே நன்மை என்பது கருத்து.

உயர்ந்தோர் குற்றமென்று விலக்கிய தீய ஒழுக்கத்தை நீக்கி விடின் மொட்டையடித்தலும் சடைவளர்த்தலும் வேண்டா என்

பதாம்.

உள்ளத்தில் உள்ள குற்றத்தை ஒழிக்காமல், உடலிலமைந்த மயிரை ஒழிப்பதால் பயனில்லை என்பது குறிப்பு.

துறந்தவர்க்கு வேடத்தினும் ஒழுக்கமே சிறந்தது என்க. உள்ளும் புறமும் ஒப்ப நின்ற நெறிவழுவாதொழுகும் அறிவுடையார், வேடமின்றியும் தவப்பயனை யெய்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுமித்திரர்பால் உணரப்படும்.

## கதை.

சுமித்திரர் என்பவர் வடநாட்டிலே பரணி என்னும் ஊரிலே இருந்த ஒரு வேதியர். பெருமானிடத்தே பேரன்புடையவர். வேதமுதலிய கலைகள் பலவும் ஓதியுணர்ந்தவர். கமலை என்னும் கன்னியை மணந்து இல்வாழ்ந்திருந்தார். அறிவும், அருளும் அமைதியுமுடையவர் வறுமையும் இவரை உரிமையாக் கொண்டது. வறியவராயினும் ஒழுக்கத்தில் பெரியவராதலால் அனைவரும் இவரை அன்புடன் ஆதரித்துவந்தார். பலருதவியால் நலமுற வாழும் இவர்மீது சிலர் பொறாமை கொண்டார். அத்தீயவர், ஒருநாளிரவில் இவர் இல்லில் தீயிட்டு மறைந்தார்.



பிறரால் இகழப்படாத தன்மையை எய்த விரும்புகின்றவன் யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்துக்கொள்ளக் கருதாவகை தன் நெஞ்சினைக் காக்கவேண்டும் என்பதாம். இனி, எள்ளாமை என்பதை எள்ளி என்னும் எச்சத்தின் எதிர்மறையாத் திரித்து, வீட்டினை இகழாது விரும்புவான் என்பான் எனைத்தொன்றும் கள்ளாமையைத் தன் நெஞ்சினைக் காக்க எனவும் பொருள் கொள்ளப்படும். 'வீட்டினை' என்னும் வினைக்குரிய செயப்படுபொருள் இதில் வருவிக்கப்பட்டது.

களவே இழிவினுள் எல்லாம் இழிவாம் என்பது கருத்து.

எனைத்தொன்றும் என்றதனால் அரிய கல்விப் பொருளையும் முறையானன்றிக் களவாகக் கொள்ளக் கருதலாகாதென்பதும், கருதின அதனால் இழிவே வரும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கன்னன்பால் காணப்படும்.

## கதை.

கன்னன், வில் வித்தையைத் துரோணரிடம் கற்க விரும்பினன். அவர் ஓர் ஏதுவால் அதற்கு இசைந்திலர். அதன்பின் அவன் பரசுராமர் பால் பயிலக் கருதினன். அவர், அரசர் மரபினர்பால் பெரும் பகைமை பூண்டவராதலால் தன்னை அந்தணன் எனக் காட்டிக் கன்னன் அவரையடைந்தான். அவரும் நம்பி அன்புடன் பயிற்றினர். கன்னன் பயின்றுவருங்கால் ஒரு நாள் அழகிய பூஞ்சோலை ஒன்றில் தானும் குருவும் தனியாயுலாவினர். முடிவில், கன்னன் தொடையில் தம் தலையை வைத்துப் பரசுராமர் துயின்றார். அவ்வமயம் கன்னனது வஞ்சத்தை வெளிப்படுத்தக் கருதி இந்திரன் வண்டுபோல் வந்து அவன் தொடையில் புழையுறும்படி குடைந்தான். உதிரஞ் சிதறியொழுகினும் கன்னன் அஞ்சா நெஞ்சினனாய் அசையாதிருந்தான். குரு விழித்தார். குருதியைக் கண்டார். இதற்கு ஏது யாது என வினவினர். வண்டின் செயலை வணங்கி உரைத்தான். குரு வியந்தார். இத்துணைத்திண்மையும் ஆண்மையும் வேதியர்க்கு உண்டோ என்று ஐயங்கொண்டார், கன்னனை நோக்கினர்.



"அந்தணன் அல்லை; நீ யார்! உண்மையை ஒழியாது உரை" என உவந்து கேட்டார். நிகழ்ந்தன எல்லாம் கன்னன் நெறியே கூறினன். களவாகக் கற்றதனால் இவ்வித்தை பலியாமல்போகக் கடவதுஎன்று சபித்தார். எல்லாரும் என்னாவமோ என்று கன்

என் கவன்று மீண்டான். எனைத்தொன்றையும் வஞ்சித்துக் கொள்ளா வகை தன் நெஞ்சைக் காத்தலே நன்று என்று தெளிந்தான். விரிவு பாரதத்தில தெளிவாம்.

யாதொரு பொருளையும் களவினால் கொள்ளக் கருதலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

282. பண்மலர் கள்ளத்தால் பற்றிப் பார்த்தனும்
கொண்டனன்றீ தென்னே குமரேசா—கொண்டுநின்ற
உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கொள்வேம் எனல். (உ)

குமரேசா! பார்த்தன் என்பவன் பலரைக் கள்ளத்தால் கொண்டதால் என் பெருந் தீது கொண்டான் எனின், உள்ளத்தால் உள்ளலும் தீதேயாம், ஆதலால் பிறன பொருளைக் கள்ளத்தால் கொள்வேம் எனல் என்க.

உள்ளலும் தீதே—கருதலும் பாவமே. உம்மை இழிவு சிறப்பு.

பிறன் பொருளைக் கள்ளத்தால் கொள்வேம் எனல்—பிறனுடைய பொருளைக் களவால் கொள்வேம் என்று கருதற்க. எனல் என்பது ஈண்டு எதிர்மறை வியங்கோளாய் நின்றது.

ஈ, எனல் என்பதைத் தொழிற் பெயராகக்கொண்டு, பிறன் பொருளைக் கள்ளத்தால் கொள்வேம் என்னலே உள்ளத்தால் உள்ளலுந் தீதே எனவுங் கொள்ளலாம்.





பிறனொருவன் பொருளைக் களவினால் கொள்ளவேண்டுமே

ன்று கருதினும பாவமாம எனபதாம்.

மேல், களவால் பழிவரும் என்றார்; இதில அதனைக் கருதி னும் பாவமாம் என்றார்.

களவினை, உள்ளினும் கொள்ளினும் உடனே பெருந் தீமை யுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரா ந்தகன்பால் உரைப்பபடும்.

## கதை.

பராந்தகன என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன் உறையூரை ஆண்டவன். இவன் அரசுபுரிந்து வருங்கால் சாரமா முனிவர் என்னும் பெரியவரொருவர், செவ்வந்தி பலவை ப்பரமனுக்கு அணிய விரும்பி அதன் மூலங்களை அரிதின் முயன் றுகொண்டு வந்து தனியிடத்தில் வைத்து அவற்றைப் பெரிதும் போற்றிவந்தார். பருவமுற்றபின் அவற்றில் நறுவிய மலர்கள் தோன்றின. மாவலன் என்னும் அரசனுடைய ஏவலன் ஒருவன் அம்மலர்களை முனிவர் அறியாவணை கவர்ந்துகொண்டுவந்து அர சனுக்குத் தந்தான். முனிவர் தெரிந்து அரசன்பால் வந்து பூசை யினை செய்த புன்மையைப பொருந்த உணர்த்தினர். உணர்ந் தும் அரசன் ஒன்றும் சொல்லாது அதற்கு உடன்பட்டிருந்தான். முனிவர் நாளுமட பொறுத்தார். மேலும் மேலும் பூவின் களவு பொருந்தி மிகுந்தது. கள்ளககால் வருவதின்று தெளிந் தும் கள்ளாமல் அரசன் கொள்ளுகின்றனனே என்று முனிவர் கொதித்தார் உடனே அங்கு மண்மாரி பெய்தது. அவனும் மாண்டான். நகரமும் அழிந்தது. தான் கள்ளாதிருந்தும் கள் ளத்தால் வந்ததைக கொள்வேமென்று கருதியதால் அரசன் பெருங் கேடடைந்தான். பிறன் பொருளைக் கள்ளத்தால் கொ ள்வேம் என்று கருதினும் தீதாம் என்பதை உலகம் பராந்தகன் பால் தெளிந்தது. *விரிவை அவன் சரிதையில் தெளிக.

களவினைக் கருதினும் தீதாம் என்பது இ
டப்பட்டது.

---



283 அன்று களவால் அடைந்தவெல்லாம் ஒழிந்து
குன்றினார் சாரர் குமரேசா—என்றும்
களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும். (௩)

குமரேசா! களவினால் அடைந்த செல்வமெல்லாம் இழந்து ஏன் சாரர் குன்றினார் எனின், களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து ஆவது போலக் கெடும் என்க.

அளவு இறந்து ஆவதுபோலக் கெடும்—வரம்பு கடந்து வளர்வதுபோலத் தோன்றி அழியும். ஆவதுபோல அளவு இறந்து கெடும் எனக் கூட்டி ஆவதுபோலத் தோன்றி அளவு கடந்து கெடும் என்று கொள்ளினும் அமையும். அஃதாவது களவால் ஆகிய ஆக்கத்தோடு தன்னை ஆக்கினவன் முன் ஆக்கியிருந்த அறம் புகழ்களும் ஒருசேர அழியும் என்பது கருத்து என்க.

களவினால் உளதாகிய செல்வம் மிகப் பெருகுவதுபோல் தோன்றிப் பழியையும் பாவத்தையும் நிறுவி விரைவில் அழியும் என்பதாம்.

களவினால் பழியும் பாவமும் உளவாம் என்று மேலுணர்த்தியதை நோக்கி, அவை வரினும் அதனால் பொருள் உண்டாகுமல்லவா? என்பாரை நோக்கி இது கூறியதென்க.

களவால் கொண்ட பொருளோடு, தம் பொருளையும் அறத்தையும் இழந்து கள்வர் துன்புறுவர் என்பது இதில் உணர்த்தப்

பட்டது. இவ்வுண்மை சுகன் முதலிய சாரர்பால் உணரப்படும்.

## கதை.

இற்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் மதுரையம்பதியில் அரசுபுரிந்திருந்த வீரபாண்டியன் என்னும் வேந்தர் பெருமானுக்கு அழகிய காமக்கிழத்தியர் பலரிருந்தனர். அப்போக



மாதர்பால் சுகன், மதனன், சுகுணன், சோமன், விக்ரமன், வீரசேனன், வீரசேகரன், வீரகாமன், விசயன், சயதரன், எனப்புதல்வர் பதின்மர் தோன்றி வளர்ந்தார். சாரப் பிறந்ததால் இவர் சாரர் எனப்பட்டார். அதன்பின் தன் இன்னுயிர்த் துணைவியாகிய தன் மனைவியும் உலகம் மகிழ்வுற ஒரு குலமகனைப் பெற்றாள். அரசன், பெருவகை பூத்துக் குமரனைப் போற்றிவருங்கால் ஒருநாள் வேட்டைமேல் சென்று அங்கோர் புலிவாய்ப்பட்டான். அனைவரும் ஏங்கி அழுதிரங்கினர். சுகன் முதலிய புன்மக்கள் பதின்மரும் அற்றம் நோக்கி நிதியறைக்குட் புகுந்து மணிமுடியையும், அணிகலன்களையும் கவர்ந்துகொண்டு மறைந்து சென்றார். அமைச்சர் அக்குல மகனுக்கு மணிமுடி சூட்ட விரும்பி அணி அறையைத் திறந்தார். அங்கிருந்த மணி மகுடத்தைக் காணாது மதி மயங்கி நொந்தார். முன்னர் வழுதி மருமகனாகி இவ்விருநிலம்புரந்த அம் முழுமுதற்பரமனே ஒரு வணிகனாய் வந்து மரகத முதலிய மணிகள் ஒன்பதையும் அணி பெறத் தந்து மன்னன் மகனுக்கு மகுடம் புனைமின் என்று வாழ்த்தி மறைந்தார். அனைவரும் வியந்து பரமனைத் துதித்து அவரருளியபடியே மணிமுடி சூட்டி அரசிளங் குமரனுக்கு அபிடேக பாண்டியன் எனப் பெயரும் புனைந்தார். தோன்றலும் மன்னுயிர்க்கெல்லாம் இன்னுயிர்த் துணையாய்த் தோன்றி விளங்கினன். தனக்கு ஒரு

வகையில் துணைவர்போலத் தோன்றியிருந்த பகைவர் பதினமரை யும் பற்றிக் கொணர்ந்து அவர் கவர்ந்தனவெல்லாம் உவந்து வாங் கினன். களவால் வந்த பொருளோடு தம் பொருளையும் இழந்து பழியும் பாவமுமெய்தி அவரனைவரும் அந்த நகரை விட்டு அகன் றொழிந்தார். களவினால் ஆகிய ஆக்கம் ஆவதுபோலத் தோன்றி அளவிறந்து கெடும் என்பதை உலகம் அவர்பால் ஓர்ந்தது. விரி வைத் திருவிளையாடலில் மாணிக்கம் விற்ற படலத்தில் காண்க.

களவால் வரும் பொருள் பழியை விளைத்து விரைவில் அழி வுறும் என்பது இதனால் கூறப்பட்டது.

---



284. மாகில் மணிக்களவால் மந்திரிதன் இன்பதும்போய்க்
கூசிநொந்தான் என்னே குமரேசா—நீசம்
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். (ச)

இ—ள்.

குமரேசா! ஒரு மணியின் களவால் கனகேசன் என் னும் அமைச்சன், என் தனது உயர்ந்த பதத்தை இழந்து இழிந் து நொந்தான் எனின், களவின் கண்ணே கன்றிய காதல், விளை வின் கண்ணே வீயாத விழுமத்தைத் தரும் என்க.

கன்றியகாதல்—மிகுந்த ஆசை.
விளைவின்கண்—பயன்தரும்பொழுது. விளைவு ஆகுபெயர்.
வீயா விழுமம் தரும்—தொலையாத துன்பத்தைக்கொடுக்கும்

டுத்துத் தான் ஒன்றை வைத்துக்கொண்டான். அவ் ஒன்றை ஏன் கொள்ளாது தள்ளினாய் என்று கூட்டாளி கேட்டான். நம்மிருவர்க்கும் பங்கிடுவதற்கு இசையாது ஆகலால் அதனை விடுத்தேன் என்றான். மன்னன் அவனது மனநலத்தை வியந்து, பெயர் ஊர் முதலிய யாவும் தெரிந்து பிரிந்தான். மறுநாள் அமைச்சனை அழைத்து நமது நிதியறை களவால் கொள்ளை செய்யப்பட்டதாகக் காணப்படுகின்றது நீ போய் அதனைக் கண்டு வாரும் என்றான். அமைச்சன் சென்று ஆய்ந்தான். விழுமிய மணிகள் மூன்றுவைத்திருந்த அழகிய பேழையுள் ஒன்றே யிருக்கக் கண்டான். கள்வர் அதனைக் காணாது விட்டனர் என்று கருதி அதனை கைக்கொண்டு மறைத்து மன்னன் முன் வந்து "அரசே உயர்மணி மூன்றும் கொள்ளை போயின" என்று கூசாது கூறினான். அரசன் முன்னர்க் குறித்த கள்வனை அழைத்து அவையிலிருத்தி நிகழ்ந்தவை முழுவதும் பலரும் அறியும்படி விளக்கி அவன் கொண்டிருந்த ஒன்றையும், தன்பாலிருந்ததையும், அவை முன்னே வைத்து அமைச்சனை நோக்கி நின்பால் உள்ளதையும் இடுவை; என்று நேரே கூறினான். அவன் உள்ளங்கலங்கி அவ் இருமணியையும் வெளியே வைத்துப் பெருநாணமுற்றான். அதன்பின் அவனது நலமனைத்தையுங் கவர்ந்துகொண்டு அரசன் அவனைச் சினந்தகற்றினான். அவனும் சீர்மையும் சிறப்பும் இழந்து தேம்பிச் சென்றான். களவின் கண்ணே கன்றிய காதலையுடையவர்



அதன் விளைவின் கண்ணே தொலையாத துன்பத்தை அடைவர் என்பதை உலகம் அவன்பால் உணர்ந்து தெளிந்தது. இது கன்னமூலத்திலுள்ளது.

களவை விரும்பினோர் முடிவில்லாத துன்பத்தை முடிவில் அடைவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

285. கண்டார்பொன் மூவர் கருணையின்றி யேனிருவர்
கொண்டோடி மாய்த்தார் குமரேசா — மண்டும
அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். (ரு)

இ—ள்.

குமரேசா! மூவர் கண்ட பொன்னை ஏன் இருவர் அருளின்றி வஞ்சித்துக்கொண்டு போனார் எனின், பொருள் கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார்கண், அருள்கருதி அன்புடையராதல் இல் என்க.

பொச்சாப்புப் பார்ப்பார்கண்—மறவியை எதிர் பார்த்திருப்பாரிடத்து. அருள் கருதி அன்புடையராதல்—அருளின் மேன்மையை அறிந்து அதன்பால் அன்புடையராய் ஒழுகுதல். இறைவன் அருளை எய்தக்கருதி உயிர்களோடு அன்புடையராய் ஒழுகுதல் எனவும் இது பொருள்படும். அன்புடையார்க்கே அவனருள் உண்டாமென்க.

பிறர் பொருளைக் கவர்ந்துகொள்ளக் கருதி அவர் மறந்திருக்குஞ் சமயத்தை எதிர்பார்த்திருக்கும் வன்கணார்மாட்டு அருள் கருதி அன்புடையராய் ஒழுகுதல் இல்லை என்பதாம்.

கள்வரிடத்து அருளும் அன்பும் உளவாகா என்பது கருத்து. பிறர் சோர்வு பார்த்துப் பொருளைக் கைக்கொள்ளக் கருதிச்செல்லும் கள்வர், தம் கருத்துக்கு மாறாக எதிர்ப்பட்டார்பால் கொலை முதலிய பழிபடு வினைகள் பலவும் துணிவுடன் செய்வாராதலால் அருள்கருதி அன்புடையராதல் அவர்க்கு அமையாதென்க.



கள்வர், அருள் சிறிதும் இலராய்ப் பொருளையே விரும்பிப் பொல்லாதன எல்லாம் புரிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை ககன் முதலிய கள்வர் மூவர்பால் காணப்படும்.

## கதை.

ககன், காடன், சலன் என்னும் மூவர் கலந்து சென்று பிறனொருவன் பொருளை இரவில் கவர்ந்து வந்து பொதுவில் வைத்திருந்தார். ஐந்து நாட்களுக்குப் பின்னர் அதனைப் பங்கிடக் கணித்தார். தாம் இருந்த இடத்துக்கு அயலிலுள்ள ஓர் ஊரில் சென்று நல்ல சிற்றுணவுகளை வாங்கிவரும்படி சலனிடம் மற்றிருவரும் கூறினர். அவனும் இசைந்து அங்குச் சென்று சிறிது உண்பொருள் கொண்டு மீண்டான். மீளுங்கால் அவ்விருவரையும் ஒழித்து அப்பொருளைத் தான் ஒருவனே கைக்கொள்ளக் கருதினன். அதனால் தன் கையிலிருந்த சிற்றுண்டியில் கொஞ்சம் நஞ்சைக் கலந்து கொண்டுவந்தான். அவன் வருமுன் அங்கிருந்த இருவரும் அவனைக்கொன்று அதனைத் தம் இருவர்க்கே உரிமையாக்கிக்கொள்ளக் கருதியிருந்தார். வந்தவன் உணவைத் தந்து உவந்திருந்தான். சிறிதுபொழுது சென்றபின் முன் கூட்டியபடியே மறைந்து நின்று ககன் அவனை வெட்டி வீழ்த்தினன். அதன்பின் ககனும் காடனும் களிமிக்கூர்ந்து அவ்வுணவினையுண்டு அப்பொருள்கொண்டு போனர். உடனே விடந்தலைக்கேறி ஒருங்கே மாண்டார். பொருள் கருதும் கள்வர்க்கு அருள் கருதும் தன்மையில்லை யென்பதை அப்புன்மையோர் மூவரும் பொருந்தக் காட்டினர். (இதனை மித்திரபேதத்தில் காண்க.)

அருளும், அன்பும், கள்வர்பால் இல்லையென்பது இது கூறப்பட்டது.

---

286. மாசில் வசவரின்முன் வந்தும் களவெழுவர்
கூசாதேன் செய்தார் குமரேசா—பேசும்
அளவின்கண் நின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர். (கூ)

29-ம் அதிகாரம் கள்ளாமை. 563

-ள.

குமரேசா! மாசில்லாத வசவரது இல்லின் முன்னே வந்தும், ஏன் எழுவர் கூசாது களவொழுக்கம் கொண்டார் எனின், களவின் கண்ணே கன்றிய காதலவர், அளவின் கண்ணே நின்று ஒழுகல் ஆற்றார் என்க.

அளவு—நிறை. அஃதாவது நக்க இன்ன தகாதன இன்ன என்று ஒக்க உணர்ந்து அதின் வழுவாது ஒழுகும் நேர்மை.

அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார்—நிறையின் கண்ணே நின்று ஒழுகுதலைச் செய்யார்.

ரீ, அளவு என்றதைக் காட்சி, கருதல் முதலிய அளவைகளாக்கொண்டால், உலகியலையும் உயிரியலையும் உணர்வியலையும் அளவையாலறிந்து அதில் வழுவாது ஒழுகல் ஆற்றாரெனவுமாம்.

களவின் கண்ணே மிக்க வேட்கையையுடையவர், நேர்மையான நெறியின் கண்ணே நிலைத்து ஒழுகமாட்டார் என்பதாம்.

களவில் ஆசையுடையவர் முறையான வழியில் ஒழுகார் என்பது கருதது. இவ்வுண்மை கஞ்ஞன முதலிய எழுவர்பால் காணபபடும.

கதை.

கஞ்ஞன் முதலிய கள்வர் எழுவர் முன்னொருகாலத்தில் பங்காபுரியிலிருந்த மாதவராகிய வசவ தேவரது இல்லிற்கு வந்

தனர். அங்கே சிவனடியவரோடு உடனிருந்து உண்ண விரும்பித் தாங்களும் அடியார்போல் கள்ள வேடந் தரித்து உள்ளேபோனர். அங்கிருந்தவரனைவரும் இலிங்கதாரணமுடைய வீரசைவராதலால், இவர்களும் கத்தரிக்காய்களை மறைத்து மார்பில் தொங்கவிட்டுக்கொண்டு தொடர்ந்துபோயிருந்தார். இவ்வுண்மையைச் சிலர் அறிந்து கள்வர் என்று காட்ட அருள் வள்ளலாகிய வசவதேவர் அக்காய்களனைத்தும் சிவலிங்கங்களாகக் கருதினர். அவ்



வணமே ஆயின. கள்ள வேடந் தரித்துவந்த அப்பொய்யரெல்லாம் மெய்யராகிப் பொருந்தி விளங்கினர். தாம் பழகிவந்த களவியல்பால் சோற்றின் பொருட்டுமே நெறி தவறி வந்தார் என்று அனைவரும் அவரை இகழ்ந்து வசவ தேவரது மாண்பினைப் புகழ்ந்தார். களவின் கண்கன்றிய காதலுடையவர் அளவினகண் நின்றொழுகமாட்டார் எனபதை அவ் வெழுவரும் அன்று காட்டி நின்றார். (விரிவை வசவர் சரிதையில் காணக.)

வெள்ள வேணிப் பெருந்தகைக்கு யாதொசெய்படிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த கள்வரெல்லாங் களங்கமறும்
உள்ளமொடு மெய்யடியா ராகவுள்ளத் தருள்ளூருள்
வள்ளலாகும் வசவேசன் மலர்த்தாள் தலையால் வணங்குவாம்.
(பிரபுலிங்க லீலை.)

இது, கள்வர்பால் வசவேசர் செய்த வண்மையை வியந்து சிவப்பிரகாசர் கூறியது.

களவில் ஆசையுடையார் அளவிறந்து நிலை செய்வார் என்பது இதனுல் கூறப்பட்டது.

287. அன்றோன் களவை அடியார்செய் யாரென்றார்
தனற்க சேரா குமரேசா—என்றும்
களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல். (எ)

குமரேசா! குலசேகராழ்வார் பரனடியவர் களவினைச் செய்யார் என்று வன் உறுதியாகச் சொன்னார் எனின், களவு என்னும் காரறிவாண்மை அளவு என்னும் ஆற்றல் புரிந்தார் கண் இல்லை என்க.

காரறிவு—இருண்ட அறிவு.

29-ம் அதிகாரம் கள்ளாமை. 565

என்றது தனக்கு நன்மை இன்னதென்று உணராத ஒருவ மருண்ட அறிவினை.

அளவு என்னும் ஆற்றல் புரிந்தார் கண் இல்—நேர்மை என்னும் வன்மையைப் பொருந்தினர்மாட்டு இல்லை.

அளவு என்னும் பெருமையைப் பொருந்தினரிடத்துக் களவு என்று சொல்லப்படுகின்ற மருண்ட அறிவு இல்லை என்பதாம்.

நல்ல அறிவினையுடையவரிடத்துக் களவு செய்தற்குரிய பொல்லாத அறிவு பொருந்தாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேரமன்னன்பாலிருந்த திருமாலடியவர்பால் தெளியப்படும்.

கதை.

திருவஞ்சைக் களம் என்னும் திருநகரிலிருந்து செங்கோல் செலுத்திய குலசேகரன் என்னும் சேரர் பெருமான் மாலடிக்கே மனம் குழைந்த மாதவராதலால் அவரது ஆதரவில் பாகவதர்கள் பலர் குழுமியிருந்தனர். அடியவர் பக்கல் அவ் அரசர் பெருமான் ஆற்றிவருகின்ற அருமைகளைக் கண்டு அமைச்சர்கள் பொறாமைகொண்டார். அரசன் விலையுயர்ந்த நவமணி மாலை ஒன்றை அரசமாளிகையிலிருந்து ஒருநாள் எடுத்து மறைத்து வைத்துக்கொண்டு, வைணவர்களே அதனைக் களவு செய்திருப்பார்கள் என்று அரசனிடம் சென்று அமைச்சர்கள் அறிவித்தார். இவ் இழிந்த தொழிலை அடியார்கள் செய்யார் என்று அரசன் சினந்து அமைச்சரையே வெறுத்தான். மாலடியவர் நெறி நின்று ஒழுகிய அறிவுடையவராதலால் களவு என்னும் இழிமையை ஒருபோதும் செய்திலார். இஃது என் உளந்தெளிந்த உண்மையாம். உலகறிய இதற்கு நானே உறுதி கூறுவேன் என்று துணிந்து ஒரு குடத்தில் நாகப் பாம்பை அடைத்து அவை நடுவே இருத்தும்படி செய்து, எப்பால் உள்ள வைணவர் மனம் மொழி மெய் என்னும் திரிகரணங்களும் புனிதராயிருப்பது உண்மையாயின் இப் பாம்பு என்னைக் கடியாதிருக்கக்கடவது



என்று பலரும் காண அக்குடத்துள் தமது செங்கையையிட்டார். அது யாதொரு ஊறுஞ் செய்யாது அத்திருக்கரத்தைச் சுற்றிக்கொண்டு கடகம்போல் விளங்கியது. அனைவரும் வியந்து அரசையும் அடியவரையும் புகழ்ந்தார். அமைச்சர்கள் நடுங்கி அடிவணங்கி மன்னிக்கும்படி மன்னனை வேண்டினர். அளவு என்னும் ஆற்றல் புரிந்தார் கண், களவு என்னும் கார் அறிவு என்பதை அரசன் அன்று உலகறிய உணர்த்தி

(விரிவை ஆழ்வார் சரிதையில் காண்க.)

ஆரங்கெடப்பரன் அன்பர்கொள் ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே.

(மணக்கால் நம்பி.)

மேற்குறித்தவுண்மை இதனால் இனிது தெளிவாதல் காண்க.

களவு என்னும் தீமை நல்லோர்பால் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

288. திண்டோட் சயிந்தவன்றன் தீரநெஞ்சிற் புன்கரவுங்
கொண்டுநின்றான் என்னே குமரேசா—உண்டாம்
அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. (அ)

இ—ள்.

குமரேசா! சயிந்தவன் தனது வீரம் பொருந்திய நெஞ்சில் என் வஞ்சம் பொருந்தி நின்றான் எனின், அளவு அறிந்தாரது நெஞ்சத்து அறம் நிலைபெறுதல் போல களவு அறிந்தாரது நெஞ்சில் கரவு நிலைபெறும் என்க.

கரவு—வஞ்சனை. களவு அறிந்தார்—களவையே பழகினவர்.



அளவு அறிந்தார்—உண்மையை அளந்து தெளிந்து அதனையே பழகினவர்.

நெறி அறிந்தவர் நெஞ்சில் அறம் நிலைபெறுமாறுபோல், களவறிந்தவர் நெஞ்சில் வஞ்சனை நிலைபெறும் என்பதாம்.

களவு என்னும் காரறிவானது பேரறிவாளரை அணுகாது என்று மேலே கூறினர், இதில், அவர் நெஞ்சில் அறம் நிலைபெற்

ருற்போல அக் கள்வர் நெஞ்சில் கரவு நிலைபெறுமென்றார்.

எவ்வளவு உயர்ந்த நிலையினை யெய்தியிருப்பினும் களவையே பழகினவர் உள்ளத்தில் வஞ்சம் ஒழியாது நிற்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சயிந்தவன்பால் உணரப்படும்.

## கதை.

சயிந்தவன் என்பவன் சிந்து தேசத்து வேந்தன். சயத்திரதன் என்னும் பெயரினையுடையவன். துரியோதனன் தங்கையாகிய துச்சளையை மணந்தவன். நல்ல போர்வீரனாயிருந்தும் இவன் நெஞ்சில் வஞ்சம் நிலைத்திருந்தது. பாண்டவர் காமிய வனத்திலிருக்குங்கால இவன் ஆண்டுச் சேனையுடன் சென்றான். ஐவரும் நீங்கிய அமையம் பார்த்துத் துரோபதைபால் அணுகினான். அவ்வுத்தமி இவனை உபசரித்து நாட்டிலுள்ளார் நலங்களை நன்கு வினவினாள். சிறிது பொழுது கழிந்தபின் அவ்வஞ்சியை இவ்வஞ்சன் வலிந்து கவர்ந்து விரைந்து சென்றான். அந்நல்லாள் அழுகுரலைக் கேட்டு ஐவருந் தொடர்ந்தோடி யிவனைப் பிடித்துப் பிணித்து இழிவினை பலவுஞ் செய்து கழுதைமேல் ஏற்றி அத்தினபுரியை நோக்கி அனுப்பிவிட்டுப் பத்தினியைத் தேற்றிக்கொண்டு பண்டுபோல் அமைந்து பண்புடனிருந்தார். களவு என்னும் காரறிவாண்மையால் அளவில்லாத துன்பத்தையும், அவமானத்தையும் இவன் அடைந்தான். கொடுவினை செய்திருந்தும் இவனைக் கொல்லுதல் தீது என்று ஒழித்து ஐவரும் அறங்குறித்து நின்றார். சிறந்த அரசனாயிருந்தும் களவையே பழகியதால் இவன் நெஞ்சில் கரவுடையனாய்க் கடும் பழி பூண்டான்.

ிசுஅ திருக்குறட் குமரேச வெண்பா.

விரிவைப் பாரதத்தில் காண்க.

நல்லோருள்ளத்தில் நேர்மையும், கள்வருள்ளத்தில் கரவும் குடிகொண்டிருக்குமென்பது இதனால் கூறப்பட்டது.

289. அன்று களவால் அமிழ்துண்டார் ஏனுடனே
குன்றி யழிந்தார் குமரேசா—என்றும்
அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். (௯)

குமரேசா! அன்று களவால் அமிர்தத்தையுண்டவர் என் உடனே அழிவுற்றார் எனின், களவு அல்ல மற்றைய தேற்றாதவர், அளவு அல்லாதவற்றைச் செய்து ஆங்கேவீவர் என்க.

மற்றைய என்றது களவல்லாத வேறு நல்ல முயற்சிகளை.

களவு அல்ல மற்றைய தேற்றாதவர்—களவல்லாத பிற நெறிகளை அறியாதவர். களவை அன்றி வேறொன்றையும் அறியாதவர் எனினுமாம்.

அளவு அல்ல செய்து—அளவு அல்லாத தீமைகளை நாண்டி.

இந்த அளவு வரைதல் அறிவால் ஆய்ந்து அளக்க நெறியின்.

ஆங்கேவீவர்—அப்பொழுதே கெடுவர். கெடுதல் ஒருதலை என்பதை ஏகாரம் உணர்த்தி நின்றது.

களவினலன்றிப் பொருள் பெறுதற்குரிய வேறு நெறிகளை அறியாதவர் நெறியல்லாத நினைவுகளை நினைந்து உடனே கெடுவர் என்பதாம்.

களவே பயின்றவர் கடிதே கெடுவர் என்பது கருத்து.

கள்வர்க்கு இழிவும் அழிவும் உடனே உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராகு கேதுக்கள் பால் அறியப்படும்.



கதை.

இராகு என்பவன் விப்பிரசித்தி என்னும் ஓர் அசுர வீரனுடைய புதல்வன். தாய் பெயர் சிம்மிகை. தம்பி கேது. திருமால் மோகினி உருவங்கொண்டு அசுரர்களை மயக்கி அமிர்தத்தை அமரர்களுக்குப் பருக்கிக்கொடுக்கும்பொழுது இராகுவும், தம்பியும் அமரர்போல் உருமாறி ஆங்குப் புகுந்து அவ் அமிர்தத்தைக் களவாகக்கொண்டு ஒளிந்து உண்டார். உண்ணுங்கால அவ்வுண்மையைத் திருமாலுணர்ந்து தமது கையிலிருந்த சட்டுவத்தால் அடித்தார். அவ்வடியால் இராகுவின் தலை துணிபட்டது. அமிர்துண்டநலத்தால் தலையும் உடலும் இருவடிவாகி இலங்கின்றன. தப்பிச்சென்ற தம்பியின் பெயரையே அத்தலையின் உடலுக்கு நலமுற இட்டார். தம்மைச் சுட்டிக்காட்டிய சூரியசந்திரராகிய அவ் இருவரிடம் இராகு கேதுக்கள் என்னும் இவ் இருவரும் பெரும் பகைகொண்டு பொங்கி நொந்தார். களவையே பயின்றவர் அளவில்லாத சிறுமைகளைச் செய்து ஆபத்தடைந்து கெடுவர் என்பதை உலகம் இதனால் உணர்ந்தது. (ஸ்ரீவைக கந்தபுராணத்தில் காண்க.)

கள்வர் கடிதில் கெடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

290. பண்டேன் வசுக்கள் பசுக்களால் தம்முடம்பும்
கொண்டனவும் தீர்ந்தார் குமரேசா — அல்லுறினறு
கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேளுலகு. (ம)

இ—ள்.

குமரேசா! வசுக்கள் எண்மரும் தமது உடம்பும் உயர்நிலையுமேன் களவினால் ஒருங்கே இழந்தார் எனின், கள்வார்க்கு உயிர் நிலையும் தள்ளும்; கள்ளார்க்குப் புத்தேள் உலகும் தள்ளாது என்க

உயிர்நிலை—உடம்பு. உயிர் நிற்றற்கு இடம் என்னும் ஏது வான் வந்தது. கள்வார்க்கு—களவினைச் செய்வார்க்கு. உயிர் நிலை, உலகு, என்னும் ஈரிடத்தும் நிற்கவேண்டிய உம்மைகள் தொக்குநின்றன.

கள்வார்க்கு உயிர் நிலையும் தள்ளும்—கள்வர்க்குத் தமது உடம்பும் தவறும். என்றது மரண தண்டனையை அரசன் கள்வர்க்கு விதிப்பன் என்பது கருதி.

கள்வர்க்குத் தமது உடம்பும் தவறிவிடும்; களவு செய்யாதவர்க்கு, தெய்வவுலகமும் தவறாது கிடைக்கும் என்பதாம்.

கள்வர் இம்மையில் மரண தண்டனையை அடைந்து மறுமையில் நரகம் புகுவர்; கள்ளாதவர் இங்குப் புகழும் இன்பமும் எய்திப் பின்பு புத்தேளுலகமும் பொருந்துவர் என்பது கருத்து.

களவினை விரும்புவோர் தாம் பெற்றுள்ள உயர் நலமெல்லாம் ஒருங்கேயிழந்து இழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பிரபாசன் முதலிய வசுக்கள் எண்மர் பாலும் உணரப்படும்.

## கதை.

வசுக்கள் என்பவர் திசைகாப்பாளர்போல் என்றும் எண்மராய் நின்று விளங்கும் தெய்வ மரபினர். அனலன், அனிலன், ஆபத்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் என்பன அவர்கட்குப் பெயர்களாம். இவருள் பிரபாசன் என்பவன் தன் மனைவியாகிய வசுமதிபால் பெருங் காதலுடையவனாதலால் அவள், விரும்பிய எவற்றையும் விரைந்துகொண்டு தந்து அவள் இன்புறுவதைக் கண்டு தான் இன்புறுபவன். ஒரு நாள் காம தேனுவைக் கொண்டுவரும்படி வசுமதி கணவனிடம் கூறினாள். பிரபாசன் இசைந்து தன் துணைவர்

எழுவருடன் கூடி கள்ளிரவில் வசிட்டர் மனைக்கு வந்தான் அங்குத் தங்கியிருந்த அத்தெய்வப் பசுவை அவர் அறியாவகை கவர்ந்துசென்றான்; மனைவி பால் தந்து மனமகிழ்ந்திருந்தான்.



விடிந்த பின் வசிட்டர் மெய் யுணர்வால் ஆய்ந்து மெய்ம்மையைத் தெளிந்தார் உயர்ந்தவரா யிருந்தும், களவு என்னும் இப் பழிவினையைச் செய்ததால் அவரனைவரும் இழிந்தவராகும்படி சபித்தார். அவ்வாறே அவரனைவரும் தெய்வவுருவினையிழந்து இந்நிலவுலகை நோக்கி யிழிந்தார். அயனிடு சாபத்தால் நிலை யிழந்து வரும் கங்கா நதியை இடை வழியில் கண்டார். அவள் அடிகளை வணங்கினர். அந் நதி மடந்தை அவர்களுக்கு அருள்புரிவதாக ஆதரவு கூறினள். அவ்வாறே தான் கன்னையாய்த் தோன்றிச் சந்தனுவை மணந்த காலயில் தன் வயிற்றில் தோன்றிய புதல்வர் எழுவரையும் புவியில் தோன்றுவண்ணம் தொலைத்துப் போக்கினள். பிரபாசன்மட்டும் பிறந்து வளர்ந்தான். முன்னைப் பெண்வழிச் சென்று பிழை செய்தமையால் பின்னைப் பெண் இன்பம் இன்றிப் பெரு நாள் இருந்தான். இவனே வீடுமன் எனக, கள்வார்க்கு உயிர் நிலையும் தள்ளும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பாரதத்தில் தெளிக.

கள்வர், கள்ளாதார், என்னும் இருவர்க்கும் உளவாம் பயன் இதனால் ஒருங்கு கூறப்பட்டது.

(இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.)

பிறருடைய பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கருதாவகை தன் நெஞ்சினைக் காக்கவேண்டும். களவினை உள்ளத்தால் உள்ளினும் பெருந் தீங்கு உண்டாம். களவினால் உண்டாம் செல்வம் பழியை விளைத்து விரைவில் அழிவை அடையும். களவின்

மீது காதலுடையவர் அளவில்லாத துன்பங்களையடைவர். களவு செய்வோர் உள்ளத்தில் அருள் உண்டாகாது. நெறி நின்று ஒழுகும் சேர்மையை அவர் அடையமாட்டார். களவென்னும் நிலைமையை அறிவுடையார் அணுகார். நல்லோர் உள்ளத்தில் அறம் நிலைத்திருத்தல்போல் தீயோர் உள்ளத்தில் களவு நிலைத்திருக்கும். களவே பயில்வோர் அழிவே அடைவர். கள்வர்க்கு மரண தண்டனையும் இழி பிறப்பும் உளவாம். களவு செய்யார்

72



தவர் புகழும் இன்பமும் பொருந்திப் புத்தேளுலகத்தை அடைவர் என்பனவாம்.

29-வது கள்ளாமை முற்றிற்று.

# ௩௰-ம் அதிகாரம் வாய்மை.

அஃதாவது உண்மையினது தன்மை. உள்ளம், வாய், மெய் என்னும் மூன்றிடத்தும் இது தோன்றுமாதலால் உண்மை, வாய்மை, மெய்ம்மை என உரைக்கப்படும். கள்ளம் இல்லாத உளமுடையார்க்கே பொய் சொல்லாமை என்னும் இந் நல்லறம் நன்கு அமையுமாதலால் கள்ளாமையின் பின் வைக்கப்பட்டது.

291. உள்ளதே சொன்னன் உயர்தருமன் பொய்யனென்று
கொள்ளநின்றான் என்னே குமரேசா—தள்ளாத
வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல். (௧)

இ—ள்

குமரேசா! உள்ளதையே சொல்லியும் தருமர் ஏன் பொய்யர் என்று கொள்ளநின்றார் எனின், வாய்மை எனப்படுவது யாது எனின், யாதுஒன்றும் தீமை இல்லாத சொற்களைச் சொல்லுதலேயாம் என்க.

தீமை யாதொன்றும் இலாத சொலல்—தீங்கு சிறிதும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதல்; இலாத என்பது எண்ப் பெயராய் நின்றது.

மெய்ம்மை என்று சொல்லப்படுவது யாது எனின், பிறிதோருயிர்க்கு யாதொரு தீமையும் பயவாத சொற்களைச் சொல்லுதலேயாம் என்பதாம்.



உள்ளதை உள்ளதாகவும், இல்லதை இல்லதாகவும் சொல்லுதல் வாய்மையன்று, பிறவுயிர்கட்குத் தீமை சிறிதும் இல்லாத சொற்களைச் சொல்லுதலே வாய்மையாம் என்றபடி.

உண்மை இஃதென்று இதில் உணர்த்திய நுண்மையை ஊன்றி உணர்க.

உள்ளபடியே நிகழ்ந்ததை ஒருவன் சொல்லினும் அதனால் பிறர்க்குத்தீமை விளையுமாயின் அவன்பொய்யின் பயனை எய்துவான் என்பது கருத்து. இவ் வுண்மை தருமர் பால்காணப்படும்.

## கதை.

பாண்டவர்கட்கும் துரியோதனன் முதலானவர்கட்கும் பெரும் போர் தொடங்கி நடந்துவருங்கால் பதினைந்தாம் நாட் போரில் துரோணரைக் கொல்லக் கருதிய கண்ணன் அவ் வில் வீரனை

வெல்வது அரிது என்று தெளிந்து வெய்ய சூழ்ச்சி ஒன்று செய்தார். அவருடைய மகனாகிய அசுவத்தாமன் பொருது இறந்தான் என்று தருமர் வாயால் சொல்லப்படின், அச் சொல்லால் உள்ளங் கலங்கி வில்லெடாது மெய் மறந்து நிற்பர், அவ்வமையம் அவரை வெல்லலாம் என்று துணிந்து தருமரையணுகி அவ்வகையே சொல்லும்படி வேண்டினர். 'பொய்யினால் ஆள்வது இந்தப் புவிகொலோஎன்று' அவர், வெறுத்து மறுத்தார். மாளவதேயத்து மன்னனாகிய இந்திரவன்மன் ஏறிவந்த மத யானை ஒன்று அன்று மாள நேர்ந்தது. அதற்கும் அசுவத்தாமா என்றே பெயரிடப்பட்டிருந்தது. உண்மையில் நிகழ்ந்ததாதலால் அதையேனுஞ் சொல்லுக என்று கண்ணன் தொடர்ந்து மொழிந்தான். என் செய்வார் தருமர்; இசைந்தார்.

"அத்தனே அடுவல்லாண்கம அச்சுவத்தாமா என்னும்
மத்தவா ரணத்துக் கையோ மாருதி சிங்கமானான்" என்று பக்கமறக்கூறினர். இவ் ஒலியைக் கேட்டவுடனே தன் மகனே இறந்தான் என்று துரோணர் கம்பித்து தன் வில்லையும் கணையையும் வீசியெறிந்து வெறிதே நின்றார். அவ்வமயம் திட்டத் துய்ம்னன் விட்



ட கணையால் அவர் தலை துள்ளி விழுந்தது. மெய்யே விரதமாக வுடைய தருமரும் பொய் புகன்றார் என்று ஒரு புன்மொழி பரந்தது. அதன் பயனாகத் தருமர் ஒருமுறை நரகத்தைக் காணும்படி நேர்ந்தது. உண்மையாக நிகழ்ந்ததைக் கூறினும் பிறிதோருயிர்க்குத் தீமை பயக்குமாயின் அது பொய்ம்மையாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

கற்கொண்டு கன்மழைமுன் காத்தகள்வன் கட்டுரைத்த
மொழிப்படியே கருதார் போரில்
முற்கொண்ட விரதமறந் தியாருங்கேட்ப முரசயர்த்தோன்
பொய்சொன்னான் முடிவிலந்தச

சொற்கொண்டு வெறுங்கையனும் அளவிற்றிட்டத்
தம்மனை நின்றகுருத்துரோகி கொன்றான்
விற்கொண்டு போர்நினைந்தால் இவனேயல்ல விண்ணவர்க்கும்
எந்தை தனை வெல்லலாமோ.

(பதினைந்தாம் போர்ச்சருக்கம்.)

இது, தம் தந்தையாரை வஞ்சனையால் கொன்ற வகையினை யறிந்து அசுவத்தாமன் வருந்தி யுரைத்தது.

வாய்மை இன்னதென்பது இதனால் வகுத்துக் கூறப்பட்டது.

292. மாதர் கலைக்கோட்டு மாமுனிபால் பொய்யுரைத்தும்
கோதடையார் என்னே குமரேசா—தீதுடைய
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின் (உ.)

இ.-

குமரேசா! கமலை சுலோசனை என்னும் மாதரிருவரும் கலைக்கோட்டு முனிவர்பால் பொய்யுரை புகன்றும் என் நன்மை யெய்தினர் எனின், புரைதீர்ந்தநன்மை பயக்கும் எனின், பொய்ம்மையும் வாய்மை இடத்தவாம் என்க.



புரை தீர்ந்த நன்மை—குற்றம் நீங்கிய நன்மை.

குற்றமற்ற நன்மையைக் கொடுக்குமாயின், பொய்ம்மைச் சொற்களும் வாய்மைச் சொற்களின் பாலவாம் என்பதாம்.

பொய்ம்மை என்பது பால் பகா அஃறிணைப் பெயராதலால் இடத்த என்னும் பலவின்பால் முற்றுக்கேற்ப இங்குப் பன்மையாய் நின்றது.

தீமையிலாத சொல்லே வாய்மை என்று மேலே கூறினர் இதில், அச்சொல் பொய்ம்மையாயிருப்பினும் மெய்ம்மையாம் என்றார்.

பிறர்க்குத் தீமையில்லாதபடி விநோதமாக ஒருவன் பொய் கூறினும் அது பாவமாகுமாதலால் அதனை விலக்குதற்கு நன்மை பயக்குமெனின் என்றார்.

தனக்கு நன்மை பயக்குமாறு ஒருவன் பொய் கூறி அதுவும் வாய்மை இடத்தவாம் என்று இதனை வலிந்தெடுத்துக்காட்டி வாய்ப் பறை கொட்டலாகாதெனபது "புரைதீர்ந்த" என்னும் அடையால் தெளியப்படும்.

பிறர்க்கு யாதொரு தீமையும் இல்லாமலும், கேடேனும் சாவேனும் அடையநின்றதோருயிர் அவற்றினின்றும் நீங்கி இன்புறுமாறு எழுகின்ற பொய்ம்மையே அறிவுடையோரால் மெய்ம்மையாகக் கருதப்படும் என்பது கருத்து.

பொய்ம்மையாயினும் புரைதீர்ந்த நன்மை பயக்குமாயின் அது மெய்ம்மையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கமலை சுலோசனை என்னும் இருவர்பாலும் காணப்படும்.

## கதை.

கமலை சுலோசனை என்னும் மாதர் இருவரும் உரோமபதன் என்னும் அரசனுடைய திரு நகரிலிருந்தவர். அழகால், பாடலால், ஆடலால் சிறந்தவர். கல்வியறிவோடு சொல்வன்மையும்



வாய்ந்தவர். கலைக்கோட்டு முனிவரின், தன் நாட்டில் மழைவரும் என்று கலைஞர் கூறியதைக் கேட்டு அம்முனிவரைக் கொணரும் வகையாதென்று அரசன் கவலுங்காலையில் இம்மகளிரிருவரும் எழுந்து யாம் ஏகி அவ் அருந்தவனைக் கொண்டுவருகின்றோம்

என்று கூறிச் சென்றார். மாந்தரை விலக்குகள் என்று உன்று மனத்தனைப், மாதவத்தனைப் உலக நாட்டமின்றி உணர்வையே நாடி நிற்கும் அவ் உயர்தவனை பணுகித் தாமும் அருந்தவர்போல் நடித்து இனிய மொழிகள் பல அவர் மனங்கொள மொழிந்தார். நாள் பல கழிந்தபின் தம் பொய்ம்மைச் சொற்களால் அம் மெய்ம்முனிவனை மயக்கித் தம் நகருக்கே கொணர்ந்தார். மாதவன் வருகையால் மழையும் பெய்தது. அரசனும் பிறரும் அறிந்து ஓடிவந்து அருந்தவனை வணங்கினர். மங்கையர் பொய்ம்மையால் மயங்கி வந்தோம் என்று முனிவர் தெளிந்தார். முனிவுகொண்டார். அடிகள் எய்தியதால் யான் எய்தியிருந்த கேடு நீங்கி அளவிலின்ப மெய்தினேன் என்று அரசன் போற்றினான். முனிவர் முனிவு நீங்கி இனிதருள் செய்தார். தமது பொய்ம்மையால் புரைதீர்ந்த நன்மையை விளைவித்த அம்மாதர் நலம் பல பெற்று நன் மதிபுற்றார்.

உம்மையின் மறுமைதன்னில் உறுபயன் இரண்டும் பார்க்கின்
இம்மையில் விளங்கும் யார்க்கும் அவரவர் இயற்கையாலே
மெய்ம்மையே ஒருவர்க்குற்ற விபத்தினை விலக்குமாகிற்
பொய்ம்மையும் மெய்ம்மைபோலப் புண்ணியம் பயக்குமாதோ.

(பாரதம்.)

பொய்யும், நன்மை பயக்குமாயின் மெய்யாம் என்பது இதனால் கூறப்பட்டது.

293. வேதாவும் தாழைபுமுன் வெய்யதொரு பொய்புகன்றேன்
கோதடைந்து சொந்தார் குமரேசா—ஏதேனும்
தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். (க.)

இ.—ள்.

குமரேசா! அயனும், தாழையும் வெய்ய பொய்யை முன் புகன்று, பின் என் துன்பமெய்தி நொந்தார் எனின், தன் நெஞ்சு அறிவதைப் பொய்யற்க; பொய்த்தபின், தன் நெஞ்சே தன்னைச் சுடும் என்க.

தன் நெஞ்சு அறிவது பொய்யற்க—தன் மனம் அறிந்ததை மறையாது மொழிக.

ஒருவன், தன் மனம் அறிந்ததொன்றனைப் பொய்யாது மொழியவேண்டும்; பொய்த்தானாயின் தன் மனமே பின் தன்னை வருத்தும் என்பதாம்.

ஏகாரம் உரிமையை விளக்கி நின்றது. சுடும் என்றது துன்ப மிகுதி தோன்ற என்க.

மனம் அறிந்ததை மறைத்து, மாறென்று கூறின், அம்மனமே கரியாய் நின்று பெருந் துன்பத்தை விளைவிக்கும் ஆதலால் அதனை ஒருவன் மறந்தும் கூறலாகாதென்பது கருத்து.

பிறர் அறியார் என்று கருதி ஒருவன் பொய் கூறின் அது பின் உலகறிய வெளிப்பட்டு அழியாத பழியையும் தொலையாத துன்பத்தையும் அவனுக்கு நிலையாகக் கொடுக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரமன் பாலும் தாழை மலர் பாலும் உணரப்படும்.

கதை.

ஆதிபூமியில் அழலுருவாய்த் தோன்றிய இறைவனது திரு
முடியை அறிந்து வருவதாக மாலிடம் வாது கூறி அயன், அன்
ன வடிவங்கொண்டு மேலெழுந்து பறந்தான். பல்லாயிர வரு
டங்கள் கழிந்தும் ஒரு சிறிதுங் காணாது உளந் தளர்ந்து சோர்
வும் ஊக்கம் விடாமல் மேன்மேல் உயர்ந்து சென்றான். செல்
லுங்கால் விரைந்து தாழ்ந்து வருகின்ற தாழம் பூ ஒன்றை இடை



யே கண்டான். "நீ யார் எங்கிருந்து வருகின்றாய்" என்று அத
ன் இயல்பினை வினவினான். அது தெய்வ மலராதலால், தன் திரு
வாய் திறந்து "யான், தவ நலத்தால் தாழம் பூவாகிப் பரமன் திரு
முடியிலிருந்தேன், ஓர் இழுக்கால் அதிலிருந்து வழுவி வீழ்ந்தே
ன், சாற்பதினாயிர வருடங்களாயின இழிந்துபோகின்றேன்" என்
று உணர்த்து மொழிந்தது. அயன் கேட்டு அஞ்சித் தன் கருத்து
முற்றாதென்று தெளிந்து தன் இயல்பினை அதற்கு உணர்த்தி,
தான் பரமன் முடியினைக் கண்டதாகத் தன்னுடன் வந்து மாலி
டம் உறுதிசொல்லும்படி அதனைப் பெரிதும் வேண்டினான். அது
வும் இசைந்து, அவ்வாறே வந்து மாலிடம் கூற, அயனும் காணுது
ஆம் என மொழிந்தான். உடனே ஒளியுருவாய் நின்ற தனிமலை
படீர் என்று வெடித்து "பொய், பொய்" என்று உலகறிய ஒலித்
தது. அயனும் கைதையும் அஞ்சி நடுங்கினர். உள்ளந் தீய உயி
ருந் தேம்பினர். ஈசன், அயனை எசி நோக்கி

"வாசமா மலரவ உனக்கு மண்ணின் மேல்
பூசையும் கோயிலும் போக என்றனன்."

அதன்பின் தாழம் பூவை நோக்கி

"கைதையே இவனொடு கரவு நீயுரை
செய்ததால் நீண்டிலேம் என்று நீர்த்தனன்." என்றான்.

இவற்றைக் கேட்டு,

அவ் இருவரும் பொய்ம்மையாலெய்திய புன்மையை எண்ணி

வெண்ணி யேங்கினர். பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும் என்பதை அவர் அன்று உணர்ந்து காணினர்.

பிறரறியார் என்று ஒருவன் பொய்கூறின், அது பலரும் அறியத் தோன்றி அவனுக்குப் பழியையும் துன்பத்தையும் விளைவிக்கும் என்பதை உலகம் அவர்பால் உணர்ந்தது.

அன்னிய கிளையுமில்லும் அரும்பெறன் மகவும் அன்பும்
இன்னியசிரும் மிக்க செல்வமுந் திறலுந் தேசும்
எண்ணிய பொருள்கள் யாவும் இயற்றிய தவமுமேனைப்
புண்ணியம் அனைத்துஞ்சோப் பொய்ம்மையாற் பொன்றுமன்றே
(பாரதம்.)



தன் நெஞ்சே தன்னை வருத்துமாதலால் பொய்யை ஒருவன் யாண்டும் கூறலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

294. வள்ளலரிச் சந்திரனேன் வையத்தா ருள்ளமெல்லாங்
கொள்ளநின்றான் இன்றுங் குமரேசா—என்னளவும்
உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். (ச)

இ—ள்.

குமரேசா! அரிச்சந்திரன் உலகிலுள்ள எல்லாருடைய உள்ளங்களிலும் ஏன் இன்றும் நின்றுளான் எனின், உள்ளத்தால் ஒருவன் பொய்யாது ஒழுகின், உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் அவன் உளனும் என்க.

பொய்யாது ஒழுகின்—பொய் கூறாது ஒழுகுவனாயின். ஒழுகின் உளன் என்று காண்க.

தன் உளம் அறிய ஒருவன் பொய் சொல்லாது ஒழுகுவனுயின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் அவன் உளனுவன் என்பதாம். மெய்யுடை ஒருவனை உணர்வுடையாரெல்லாரும் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றுவாராதலால் "உள்ளத்துள் எல்லாம் உளன்" என்றார்.

மேல், தன் நெஞ்சறியப் பொய்த்தவனை அந்நெஞ்சே சுடும் என்றார்; இதில், அங்ஙனம் பொய்யாதானை உலகிலுள்ளார் உள்ளங்களெலாம் உவந்து போற்றுமென்றார்.

பொய் சொல்லாத ஒருவன் எக்காலத்தும், எவ்விடத்தும் எல்லாராலும் புகழ்ந்து போற்றப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அரிச்சந்திரன்பால் உணரப்படும்.

கதை.

அரசர் பெருமானாகிய அரிச்சந்திரன் கோசிகர் செய்த பொல்லாத சூழ்ச்சிகள் எல்லாவற்றினும் நிலை கலங்காமல் நின்று



பொய்யாதொழுகினர். அதன் பொருட்டுப் பதியும் நிதியும் இழந்து, தனது அருமை மனைவியையும் இனிய புதல்வனையும் பிரிந்து, தானும் பறையனொருவனுக்கு அடிமைப்பட்டுச் சுடலை காத்து நின்று, பொறுத்தற்கரிய பெருந்துயரங்களை அடைந்து அகங்குழைந்திருந்தார். அந்நாள், முனிவர் வந்து கரவுடன் நின்று ஒரு பொய் புகலின் இத்துன்பங்களெல்லாம் உனக்கு நீங்குமென்று தனக்கு இனியவர் போன்று மொழிந்தார். அவ்வமையத்தும் இவர் நெஞ்சினாலும் பொய்யை நினையாது நின்றார். அதன் பயனாக முதல்வர் மூவரும் இவர் முன்னே தோன்றி இன்னருள் புரிந்தார். இழந்தன எல்லாம் எய்தி இன்புற்றார். நாடகசாலைகளிலும் இவர் சரிதம் நடிக்கப்படுகின்றது. இவ் ஐயனைப் "பொய் சொல்லா மெய்யன்" என்று உலகம் இன்றும் போற்றிவருகின்றது.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் அவன் உளனும் என்பதை உலகம் இவர்பால் கண்டது.

(விரிவை அரிச்சந்திர புராணத்தில் காண்க.)

செய்ம்மை யம்மையில் உயிர்க்கொரு துணையெனச் சிறந்த
வாய்மை யாலகந் தூய்மையாம் மற்றில புறத்தைத்
தூய்மை செய்வது நீரலாற் சொல்லின்வே றுண்டோ
நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக் கறிதி. (1)

புலையனும் விரும் பாதவிப் புன்புலால் யாக்கை
நிலையெனா மருண் டியரினும் கெடுதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரிக்கும்
கலையு ணர்ந்தநீ யெமக்கிது கழறுவ தழகோ. (2)

இம்மை யம்மையி டெனமறை பொலன்கொள இயம்பும்
மும்மை யுந்தரும் முறையுடைத் தெனுமில முரணி
எம்மை யாழ்வயிற் றடக்கியிட் டெழ்கலா எரிவாய்
வெம்மை கூர்நர குய்க்கினும் மெய்ம்மையை விடேமால். (3)

30-ம் அதிகாரம் வாய்மை. 591

பதி யிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதி யிழந்தனம் இனியெமக் குளதென நினைக்கும்
கதி யிழக்கினும் கட்டுரை யிழக்கிலே மென்றா
பதி யிழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான். (1)

இவை, ஒரு பொய்யேனும் சொல்லுக என்று முனிவர் சொன்னபோது மன்னவன் சொன்னவை.

பொய்யாத ஒருவனை உலகமெல்லாம் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றும் என்பது இதனால் கூறப்பட்டது.

295. பண்டு மனம்பொருந்தப் பாஞ்சாலி மெய்புகன்று
கொண்டாள்சீர் என்னே குமரேசா — உண்டாம்
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. (௫)

இ—ள்.

குமரேசா! பாஞ்சாலி மனம்பொருந்த மெய் சொல்லி என் அதனால் மாண்பு எய்தினள் எனின், மனத்தொடு வாய்மை மொழியின், தவத்தொடு தானம் செய்வாரின் தலை என்க.

மனத்தொடு வாய்மை மொழியின்—உளம் பொருந்த உண்மையைச் சொல்லின். செய்வாரின் தலை—செய்பவரினும் சிறப்புடையன்.

மேல், பொய்யாதொழுகுவானை உலகம் போற்றுமென்றார்; இதில், அருந்தவரினும் பெருங்கொடையாளிகளினும் அவன், சிறந்தவன் என்றார். பொய் சொல்லாதவன் புகழும் அறமும் பொருந்தி விளங்குவான் என்பது கருத்து.

மனம் பொருந்த மெய்ம்மையை ஒருவன், சொல்லுவனாயின் அவன், தவமும் தானமும் ஒருங்கே செய்வாரினும் சிறந்தவனாவன் என்பதாம்.



வனம் புகுந்து தவம்புரிவாரினும், இல் இருந்து தானஞ்செய்வாரினும், மெய் சொல்வோரே மேலோர் என்றபடி.

பொறிகளை அடக்கியும், வருந்தி ஈட்டிய பொருளை வரையாது கொடுத்தும் எய்துகின்ற பயனை மெய்ம்மையொன்றுமே

ஒருவன் எய்தலாம் என்பது குறிப்பு.

மனம் பொருந்த மெய் சொல்லோர் மாதவரினும் மாண்பு டையவர்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரோ பதைபால் உணரப்படும்.

## கதை.

துரோபதை என்பவள் பாஞ்சால தேசத்து அரசன் புதல்வி. அதனால் பாஞ்சாலி என்று பெயர் பெற்றாள். இவள் பாண்டவரை மணந்து அவரோடு வனம் புகுந்து வருந்தி வாழுங் காலத்தில் ஒருநாள் அமித்திர முனிவருக்கு உரியதும் அருமையு டையதும் இனியதுமாகிய விழுமிய நெல்லிக்கனி ஒன்றைக் கண்டு உண்ண விரும்பினாள். உடனே அருச்சுனன் அதனைக் கொய்து கொடுத்தான். தருமர் கண்டு அதனியல்பைத் தெரிந்து முனி வர், முனிவரே என்று கலங்கித் தம்பியருடன் கலந்து கண்ண னைக் கருதினர். உடனே கண்ணனும் வந்து உண்மையை உணர்ந்து அவரை உரிமையோடு நோக்கி நீங்கள் அறுவரும் உங்கள் உள்ளத்தில் உள்ளதை ஒளியாது மொழியவேண்டும் என்றார். தரு மர் முதலிய ஐவரும் தம் மனத்தியல்பைத் தனித்தனி மொழிந் தார். அதன்பின் பாஞ்சாலி "அழகும் ஆண்மையும் வாய்ந்த கணவர் எனக்கு ஐவர் அமைந்திருந்தும் என்மனம் அமைதியின்றி இன்னும் ஒருவனை நாடுகின்றது; விழுமிய என் உள்ளமே இங்ங னம் விழைவுயாயின் மற்ற மங்கையரை எங்ஙனம் நம்புவது" என்று மகளிரது உணர்தற்கரிய மன நிலையை யாவரும் உணரு மாறு தன் நெஞ்சையே சான்று காட்டி உணர்த்தினள். உள்ள த்தின் இயல்பை உள்ளபடி சொல்லிய பாஞ்சாலியின் வாய்மை யின் மாண்பினை யாவரும் புகழ்ந்தார். விழுந்திருந்த பழம் எழுந் துபோய்ப் பொருந்திநின்றது. உற்றது சொன்னால் அற்றது

பொருந்தும் என்ற ஓர் உயர்மொழி அன்று உதித்தெழுந்தது. மனத்தோடு வாய்மை மொழிந்ததால் தவத்தொடு தானஞ்செய் வாரினும் பாஞ்சாலி தலைமையுடையளாய் விளங்கினள்.

(வில்லிப் பாரதத்தில் காண்க.)

உவமந் தீர்த்திடு வாய்மையொன் றேயுறின் உலகிற்
றவமுந் தானமும் ஒருங்குறச் செய்தவிற் றலையாய்ப்
பவம கன்றுநான் மறைமுடி வாவிய பரம
சிவனரும்பதம் பெறும்படி யுயர்த்திடுந் தெரியின்.

(திருக்கூவப் புராணம்.)

தவஞ் செய்வாரினும் பொய் சொல்லாதவரே உயர்ந்தவர் என்பது இதனால் கூறப்பட்டது.

296. போத உதத்தியனேன் பொய்யாமை பூண்டதனால்
கோதிலறங் கொண்டான் குமரேசா—தீதகன்ற
பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா அறமுந் தரும். (க)

இ.—ள்.

குமரேசா! உதத்தியன் என்பவன் பொய்யாமை ஒன்றனே எல்லா அற நலங்களையும் ஏன் ஒருங்கே எய்தினன் எனின், பொய்யாமை அன்ன புகழ் இல்லை; எய்யாமை எல்லா அறமும் தரும் என்க.

எய்யாமை என்பது, அறிதல், மெலிதல், இளைத்தல், என்பவற்றை உணர்த்திவரும் எய்த்தல் என்பதன் எதிர்மறை. இஃது இங்கு எச்சமாகி வருந்தாமல் என்னும் பொருளில் வந்தது. இனி, எய்யாமைஎன்பதற்கு அறியாமை என்றே பொருள் என்று கொண்டு பொய்யாமையானது எல்லா அறங்களையும் தன்னையுடை

யானுக்குளவரும் அறியாவகை தானே கொணர்ந்து கொடுக்கும் எனவும் இது பொருள் கொள்ளப்படும்.



எய்யா மையே அறியா மையே. என்றது தொல்காப்பியம்.

ஒருவனுக்குப் பொய்யாமையை ஒத்த புகழ் இல்லை; அவன் வருந்தாதபடி எல்லா அறங்களையும் அது தானே கொணர்ந்து அவனுக்குக் கொடுக்கும் என்பதாம்.

கொடை, வீரம், முதலியவற்றாலும் புகழ் உண்டாம் ஆம் பொய் சொல்லாமையால் ஒருவனுக்கு எய்தும் புகழ் போல் அது சிறந்ததில்லை என்பார் "பொய்யாமை அன்ன புகழ் இல்லை" என்றார். புகழ் சுண்டிக் காரிய ஆகு பெயராய்த் தான் தோன்றுதற்குரிய காரணத்தின்மேல் நின்றது. வள்ளல், வீரன், கல்வியாளன், எனப் பெயரெடுப்பதினும் பொய் சொல்லாதவன் என்று பெயர் பெறுவதே ஒருவனுக்குப் பெருஞ் சிறப்பாம் என்பது கருத்து.

பொய்யாமை, புகழையும் அறத்தையும் பொருந்தப் பயக்கும் என்றதனால் பொய்த்தல், பழியையும் பாவத்தையும் இழிவுடன் கொடுக்கும் என்பது பெற்றாம்.

மேல், வாய்மையுடையான் தானம் தவம் செய்வாரினும் மேன்மையுடையான் என்றார்; இதில், அவன் வருந்தாவண்ணம் எல்லாப் புகழறங்களையும் ஒருங்கே பொருந்தி இருமையினும் இன்பமெய்துவான் என்றார்.

பொய்யாமை ஒன்றனே எல்லா நலங்களையும் ஒருவன் பொருந்தி விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ்வுண்மை உதத்தியன்பால் உணரப்படும்.

## கதை.

உதத்தியன் என்பவன் கோசல நாட்டிலிருந்த தேவதத்

தன் என்னும் ஒரு வேதியன் புதல்வன். தாய் பெயர் உரோகிணி. பெற்றோர் கல்வி பயிலும்படி இளமைப் பருவத்தே ஓர் நல்லாசிரியன்பால் இவனை உய்த்தார். இவனுஞ் சென்று பயின்றான். வயது பன்னிரண்டாகியும் ஓரெழுத்தேனும் இவன் உணரிலன். கல்வியை வருந்தி முயன்றும் அதனைக் கூடா



மையால் இவன்கலங்கி சோர்ந்தான். தாயும் தந்தையும் தம்முள்ளே வருந்தினா. அவர் காணுந் தோரம் இவன், நாணங்கொண்டான். கல்லா உடம்பினும் கல்லே நலமென்று சொல்லி வெறுத்து ஒருநாளிரவு மெல்ல எழுந்து இல்லைவிட்டகன்று வனமொன்றில் புகுந்து தனியே வாழ்ந்தான். எவ்வகையாயினும் பொய் சொல்லலாகாதென்று துணிந்திருந்தான். ஆண்டுகள் பல கழிந்தும் இவன் ஆண்டே தங்கினான். முனிவர் பலரும் இவன் இயல்பினை முற்றுந் தெளிந்து சத்திய விரதன் என்று இவனுக்கோர் தனிப பெயரிட்டார் வேட்டையில் தப்பித் தன முன்னேயோடித் தன் குடிசையின் அயலிருக்கும் ஒரு புதரில் மறைந்த முள்ளம் பன்றியை ஆதலன் என்னும் வேடனொருவன் தேடி வந்தான். அடிச்சுவடு கண்டு இவனை அணுகிக் கேட்டான். உள்ளதைச் சொன்னால் அப் பன்றியை இவன் கொன்றேவிடுவான். சொல்லவில்லையானால் பொய்யனாய்ப் போவனே என் செய்வேன் என்று ஏங்கித் தன் நெஞ்சமுருகிக் கண்ணீர் சொரிந்தான். உடனே உலக மாதாவாகிய தேவி இவன் முன்னே தோன்றி "சத்திய விரத! நீ எண்ணிய எல்லாம் எண்ணியவாறே பெறுவாய்; அஞ்சற்க;" என்று அருள் செய்தகன்றாள். வேடனும் கேட்டு வியந்து நடுங்கினன் அதுமுதல் வேட்டஞ் செய்தலை விடுத்தான். சத்திய விரதனும் எல்லாக் கலைகளிலும் வல்லுநனாய்ப் பெருந் திருவெய்தித் தந்தை தாயரை அணுகி அன்பு செய்தொழுகி அரும்

புகழ் படைத்து என்றுங் குன்றாத இன்பமெய்தினன். எல்லாப் புகழறங்களும் பொய்யாமையால் ஒருவன் எய்யாமல் எய்துவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது.

(இதன் விரிவைத் தேவிபாகவதத்தில் காண்க.)

பொய் சொல்லாதவனுக்கு எல்லா நலங்களும் ஒருங்கே உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

297. ஓரறமும் செய்யான் உயர்ந்தான்பொய் யாமையொன்றால்
கோரனென்பான் என்னே குமரேசா—சீருடைய
பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (எ)



இ-ள்.

குமரேசா! கோரன் என்பவன் ஓர் அறமுஞ் செய்யாதிருந்தும் பொய்யாமை ஒன்றானே ஏன் எல்லா நலங்களையும் எய்தினன் எனின், பொய்யாமை பொய்யாமை ஆற்றின், பிற அறங்கள் செய்யாமை செய்யாமை நன்று என்க.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின்—பொய் சொல்லாமையையே பொய் சொல்லாமையையே ஒருவன் செய்ய வல்லனாயின்.

இடைவிடாதபடி மெய்யையே என்பார் இருமுறைகூறினர். அதனைக் கடைபோகக்காக்கும் அருமை கருதி ஆற்றின் என்றார்.

பொய் கூறாமை என்னும் நன்மையை ஒருவன் இடைவிடாது செய்து வருவானாயின் அவன், வேறு அறங்கள் செய்யவே வேண்டாம் என்பதாம்.

வருந்திச் செய்யவேண்டிய தானம், தவம், முதலிய பிற

அறங்களின் பெரும் பயன்களெல்லாவற்றையும் பொய்யாமை ஒன்றே எய்யாமை எய்துவிக்கும் ஆதலால் அதனையே செய்தல் நல்லது என்பார் "அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று" என்றார். அடுக்குகள் ஈரிடத்தும் உறுதியை உணர்த்திநின்றன.

இனி, பொய்யாமையைப் பொய்யாமல் ஆற்றின், பிற அறம் செய்யாமையைச் செய்யாமை நன்று எனவும் இது பொருள்படும். இதில், பொய்யாமல் என்பது வழுவாமல் என்பதையும், செய்யாமை செய்யாமை என்னும் இரண்டெதிர்மறையும் சேர்ந்து செய்தல் என ஓர் உடன்பாட்டையும், குறித்தன என்க.

பொய் சொல்லாமை என்னும் ஓர் அறத்தைத் தனக்கு உரிமையாகக் கொண்டவன் வேறு அறங்கள் யாதும் செய்யாவிடினும் அவற்றின் அரும் பயனைத்தும் அவன் ஒருங்கே அடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோரன்பால் தெரியவரும்.

கோரான் என்பவன் கொங்கு நாட்டிலே வல்லம் என்னும் ஊரிலே யிருந்தவன. களவு முதலிய இழிதொழில்கள் பலவுஞ் செய்து வாழ்ந்துவந்தான். வருங்கால கனிகர் என்னும் முனிவ ரொருவரைக்கண்டு இனிய மொழிகள் புகன்றான். அவர், இவன் மீது அருளுடையராகி இவனது தீய ஒழுக்கங்களைத் தெரிந்து இரங்கினர். தீவினைகள் துனபத்தைப்பயக்கும் ஆகலால் அவற் றை ஒழிக என்று மொழிந்தார். இவனும் ஒன்றையும ஒழிக்கா தொழுகினான். களவு முதலிய யாவும் விடமுடியாது பொய் மைமாத்திரம்சொல்லாதிருப்பேன்என்று குருமுன உறுதிசொல்லி னான். குரு இசைந்து சென்றார். பொய் கூறலாகாதென்ற அவ் ஒரே துணிவினால் அவன் பழகிவந்த இழிவினைகளெல்லாம் தாமே ஒழியலாயின. இவனது மன நலத்தையும் வாய்மையின் மாண் டையும் அந்நாட்டுச் சிற்றரசன் ஒருவன் தெரிந்து இவனைத் தனக் கு அமைச்சனுக்கிக்கொண்டான. இவனும் சிறந்த புகழும் நிறைந்த இன்பமுமெய்தி உயர்ந்து விளங்கினான். பொய் கூறாமை என்னும் புண்ணியத்தையுடைய ஒருவன், வேறு அறங்கள் செ ய்யாவிடினும் அவற்றின் பயனை அவன அடைவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இது கன்னமூலத்தில் காணப் படும்.

மெய்யே கூறுவோன் வேறோரறமுஞ் செய்யவேவேண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

298. மண்டு புகழ்ப்பாதன் மாசின்மை கண்டறிந்தார்
கொண்டமெய்யால் அன்னே குமரேசா—கொண்ட
புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். (அ)

இ—ள்.

குமரேசா! பரதனது மனது தூய்மை அவனது வாய்மையால் வெளிப்பட்டமையால், புறத் தூய்மை நீரான் அமையும்; அகத் தூய்மை வாய்மையால் காணப்படும் என்க.

புறம்—உடம்பு. அகம்—மனம். ஒருவனது உள்ளத்தின் தூய்மை அவன் சொல்லுகின்ற மெய்ம் மொழிகளாலே உணரப்படும்; ஆதலால் "அகம் தூய்மை வாய்மையால் காணப்படும்" என்றார்.

புறம் தூய்மை நீரையின்றி அமையாது. அதுபோல் அகம் தூய்மை வாய்மையையின்றி அமையாதென்க. கருத்துப் பொருளை விளக்குதற்குக் காட்சிப் பொருளை எடுத்துக் காட்டினார்.

நீரால் உடம்பு புனிதமாம்; அதுபோல் வாய்மையால் மனம் புனிதமாம் என்பதாம்.

வெளிமாசு நீரானும், உள்மாசு மெய்ம்மையானும் ஒழியுமென்றமையால் இருவகைத் தூய்மையும் ஒருவன் எய்தவேண்டுமென்பது கருத்து.

ஒருவனது மனத்தின் தூய்மை அவன் மெய்ம் மொழியால் உணரலாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரதன்பால் உணரப்படும்.

கதை.

இராமபிரானுடைய அருமைத் தம்பியாகிய பரதன்

மு.—வி.

குமரேசா! தசரதன் சத்தியகாமன் என்னும் இருவரும் மெய்ம்மையைத் தம் உயிரினும் உயர்வாகக் கருதி என் கைக்கொண்டார் எனின, எல்லா விளக்கும் விளக்கு அல்ல சான்றோர்க்குப் பொய்யாத விளக்கே விளக்காம் என்க.

நெய்விளக்கு, மணிவிளக்கு, கற்பூர விளக்கு முதலிய விளக்குகள் பலவுள்ளமையால் "எல்லா விளக்கும்" என்றார்.

பொய்யாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் ஈறு கெட்டுப் பொய்யா என நின்றது.

590 திருக்குறட் குமரேச வெண்பா.

பொய்யா விளக்கு—பொய் கூறாமையாகிய விளக்கு.

எல்லா விளக்குகளும் விளக்காகா [illegible] பொய்யாமையாகிய விளக்[illegible]

மேல், வாய்மையை நீராய் உவமித்தார், இதில், அதனை நெருப்பாக உருவகித்தார். விளக்கு உலகப் பொருள்களை விளக்கும்; மெய்ம்மை பரம்பொருளை விளக்கும்; ஆதலால் அவ்வுரிமை தோன்ற இதில், அவற்றைப் பொருந்தவைத்தார்.

சூரியன், சந்திரன், தீ என்னும் பேரொளிகளும் இயன்ற அளவிலமைந்து விளங்கும் எல்லா விளக்குகளும் புறத்திருளை மாத்திரம் நீக்கி உலகப் பொருள்களைத் தோன்றச்செய்யும், பொய்யாமை அகத்திருளை நீக்கி, அறிதற்கரிய அவ் ஒரு பொருளையும் அறியும்படி செய்யும் ஆதலால் அவ் எல்லாவற்றினும் இம்மெய் விளக்கையே உயர்வாகக்கருதி அறிவோர் உரிமையாக்கொள்ளவேண்டுமென்பது கருத்து. வாய்மை தூய்மைக்கும், அது பான

ருள் அடைதற்கும் ஏதுவாம் என்க.

பொய்யாமையுடையவரே பொன்றாத புகழைப் பொருந்தி விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தசரதன்கண்ணும் சத்தியகாமன்பாலும் காணப்படும்.

## கதை.

மெய்ம்மையைக் கடைபோகக் காத்தவருள் தசரதர் தலைநின்றவர். தான் சொல்லியிருந்த ஒரு சொல்லை மறுத்தற்கு நாணிக் கண்ணினும் உயிரினும் சிறந்த [illegible] தனது தலைமகனைப் பிரிந்தார். உண்மை [illegible] அரிய வுயிரையுந் துறந்தார். பொய்யாமையை யாண்டும் இவர் பொய்யாமற் செய்த அருஞ் செயல்களை இராம கதையில் பல இடங்களிலும் காணலாம். வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளற்றூயவன எனவும், கைத்த சொல்லால் உயிரிழந்தும புதல்வர்ப் பிரிந்தும கடைபோட மெய்த்த வேந்தன் எனவும், மெய்யினுக்கு



இன்னுயிர்ந்துபோய் வானுளெய்திய மன்னவன் எனவும், பொய்ப் பகையே மெய்க்கு அணியே புகழின் வாழ்வே எனவும், வாய்மை மாண்பால் இவர் வாழ்த்தப் பெறுவார். விரிவை இராமாயணத்தில் தெளிக.

## கதை 2.

சத்திய காமன் என்பவன் சாவாலி என்னும் ஓர் முனிவன் புதல்வன். மெய்ம்மையையே என்றும் விரும்பி நின்றுளதலால் இப்பெயர் அவனுக்குக் காரணந்தான் வந்தது.

பொய்ம்மையே பாவமெல்லாம் விளைதரு பூமியாகும்

பொய்மையே பிறவியெல்லாம் புகப்புரி வித்துமாகும்
பொய்மையே வறுமையெல்லாம் போதரப் புரிவதாகும்
பொய்மையே நரகமெல்லாம் புகுதரப் புகுத்தாநிற்கும்.

என்னும் உண்மையை இனிது தெளிந்து அதனை யாண்டும் தீண்டாது அருந்தவம் பூண்டவன். வாய்மையின் வழுவாத அவனது தூய்மையை அமரரும் முனிவரும் அகமகிழ்ந்து புகழ்ந்தார். இங்குக் குறித்த இருவரும் பொய்யாமையைப் பொய்யாமல் ஆற்றி அதனால் என்றும் பொன்றாத புகழினை யெய்தினர். சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு என்பதை உலகம் இவர்பால் பொருந்தக் கண்டது.

மெய்ம்மை ஒன்றே மேலோர்க்கு விளக்கு என்பது இதனால் கூறப்பட்டது.

---

300. மாறில் சகாதேவன் வாய்மையினை யன்னையென்று
கூறினான் என்னை குமரேசா—தேறின்று
யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை யெனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. (ம)

கு.

குமரேசா! சகாதேவன் வாய்மையே தனக்குத் தாய் என்று ஏன் கூறினான் எனின், யாம் மெய்யாக் கண்டவற்றுள் எனைத்தொன்றும் வாய்மையின் நல்ல பிற இல்லை என்க.



யாம் மெய்யாக் கண்டவற்றுள்—யாம் உண்மையாகக் கண்டவற்றுள். வேதம் முதலிய எல்லா நூல்களினும் வாய்மை ஒன்றே நலைமையாக நிலவுகின்றதென்பதும், அதனின் மிக்க நன்மை யாண்டும் இல்லை என்பதும் கூறுவார் "யாம் கண்டவற்றுள் வாய்

மையின் கல்லபிற இல்லை" என்றார். "யாம" என்று காமே சான்ருய் நின்று உண்மையின் தன்மையை உணர்த்திய தேவரது தெளிவையும் தகவையும் இதில் ஊன்றி உணர்க.

யாம், உண்மையாகக் கண்ட அறங்களுள் எவ்வகையானும் வாய்மைபோல மேன்மை வாய்ந்தது வேறு எதுவும் இல்லை என்பதாம்.

வாய்மையே எல்லா நலங்களுக்கும் தாய்மையாயுள்ளது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சகாதேவன்பால் உணரபபடும்.

## கதை.

சகாதேவன் தன் உள்ளத்தியல்பைக் கண்ணன்பால் உரைக்கும்பொழுது வாய்மையைத் தாயாகவும், தத்துவ வுணர்வைத் தந்தையாகவும், தருமத்தைத் துணைவனாகவும், கருணையைத் தோழனாகவும், அமைதியை மனைவியாகவும், பொறுமையை மகனாகவும, தான் கருதியிருப்பதாகத் தெரியவுணர்த்தினன். மற்றெல்லாரினும் தாய் எப்படி மக்களுக்குச் சிறந்தவளோ அப்படியே மற்றெல்லா அறங்களினும் வாய்மையே சிறந்த தென்று மதித்து அதனைப்போற்றி ஒழுகினன். அதனால் சகாதேவன் புகழும் அறமும் பொருந்தி விளங்கினன். இதனைப் பாரதததில் தெளிக.

மெய்ம்மையே எல்லா அறங்களினும் மேலானது என்பது இதனால் கூறப்பட்டது.

வாய்மை யென்னுமி தவ்றி வையகம்
தூய்மை யென்றுமொன் றுண்மை சொல்லுமோ
தீய்மை தானதிற் தீர்த லன்றிமீ
யாய் மெய் யாகவே றறைய லாவதே. (இராமாயணம்)

பொய்யன் மின்றுமின் பொய்யின்மை பூண்டுகொண்
டையமின்றி அறநெறி ஆற்றுமின்
வையகம் மெய்த்தன வைகுமென் றொன்றிக்
கவ்வை யில்லுல கெய்துதல் கண்டதே. (வளையாபதி)

---

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

வாய்மை என்பது குற்றமில்லாத சொற்களைச் சொல்லுதலே யாம். பொய்ம்மையாயினும் குற்றந்தீர்ந்த நன்மை பயக்குமாயின் அது மெய்ம்மையாம். ஒருவன் பொய்கூறின் அவன் உள்ளமே அவனைச் சுடும். பொய்கூறாத ஒருவனை உலகத்தாரெல்லாரும் தம் உள்ளத்தில் வைத்துப் போற்றுவர். வாய்மையே சொல்பவன் தவந்தானங்கள் செய்வாரினும் உயர்ந்தவனாவான். புகழறங்களெல்லாம் பொய்யாமையானே எய்யாமல் உளவாம். பொய்சொல்லாதவன், எல்லா அறங்களையும் எய்தி மகிழ்வான். வாய்மையானே எவர்க்கும் மனத்தூய்மையுண்டாம். மெய்ம்மை ஒன்றே மேலோர்க்கு விளக்காம். எல்லா அறங்களினும் வாய்மையே சிறந்தது மெனப்படுவதாம்.

௩௰-வது வாய்மை முற்றிற்று.

## ௩௧-ம் அதிகாரம் வெகுளாமை.

அஃதாவது சினத்தைச் செய்யாமை. அறிவைக் கலக்கிப் பழிபாவங்களை விளைத்துத் தன்னையுடையானுக்கு அழிவையே கொடுக்கும் இவ் இழிகுணம் களவும் பொய்யும்போல் அறவே விலக்குதற்கு உரியதாகலின், கள்ளாமை பொய்யாமைகளின்பின் வைக்கப்பட்டது.

---

[தைக்
301. தென்னுபுகழ் அல்லமனர் செல்லிடத்தும் வெஞ்சினத்

கொள்ளாத தென்னே குமரேசா — தள்ளாமற்
செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென். (௩)



இ—ள்.

குமரேசா! அல்லமனார் தன் சினம் செல்லும் இடத்தும் ஏன் அதனைக் கொள்ளாதிருந்தார் எனின், செல் இடத்துக் காப்பானே சினம் காப்பான்; அல் இடத்துக் காக்கின் என? காவாக்கால் என் என்க. செல் இடத்து—பலிக்கும் இடத்து.

சினம்காப்பான் காப்பான்—வெகுளியைக் காப்பவனே காப்பவனாவான். அல் இடம் என்றது சினம் செல்லுதற்கு இயலாத இடத்தை. தன் சினம் பலிக்கும் இடத்தில் அதனைத் தடுப்பவனே அறிவால் சிறந்தவனாவான்; வினைப் பலியாத இடத்தில் அதனைத் தடுத்தாலென்? விடுத்தாலென்? என்பதாம். வினாக்கள் தடுத்தல், விடுத்தல்களால் யாதும் பயனில்லை என்பதை விளக்கி நின்றன.

ஒருவனுடைய சினம், தன்னினும் மெலியார்பாற் சென்றே நலிவு செய்யுமாதலால் அதனைச் செல் இடம் என்றும், மற்றை வலியார்கண் அது பலியாதாதலால் அதனை அல் இடம் என்றும் கூறினர். செல்லும் கோபம், செல்லாக் கோபம் என இடவகையால் சினம் இரு வகைப்படும் எனக.

மெலியவர் மேற்செல்லும் தனது வலிய கோபமே கொடுந் தீமைக்கு ஏதுவாகுமாதலால் அதனை அறவே ஒருவன் ஒழிக்க வேண்டுமென்பது கருத்து.

தன் கோபம் செல்ல வல்ல இடத்தும் அதனைச் செலுத்தாது அடக்கினவனே அறிவால் சிறந்தவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அல்லமா பால் அறியப்படும்.

கதை.

அல்லமர் என்பவர் வன்ளிகாவை என்னுந் திரு நகரிலே இறைவன் கலையாய் அவதரித்தவர். தாய் பெயர் சுஞ்ஞானி. தந்தை பெயர் நிராங்காரன். அவ் இருவரும் செய்த அருந் தவப பயனல் அவர்க்குப் புதல்வராய்த் தோன்றினர். ஆருயிர்க்



கெல்லாந் தலைவராய் நின்று அருள்புரிக்தொழுகினர். இவர் இளமைப் பருவத்தே [illegible] வோரிடங்கட்குஞ் சென்று நல்ல நீதி கள் தெளிந்து எல்லாரும [illegible] மைபெய்துமாறு [illegible] அருந் தவக்கொள்கையில் திருகதிவிளங்கினர். காமம் வெகுளி முதலிய இழிகுணங்கள் சிறிதுமிலலாத பெரியவராகியஇவர், ஒருநாள் சித் தராமர்என்னும் கருமயோகியைக் காணவிரும்பி அவர்திருநகருட் புகுந்தார். அங்கோர் குளத்தைத் தோண்டிக்கொண்டிருந்த அவருடைய பணியாளராகிய சில ஒட்டாகளைக்கண்டு "தலைமை யில்லாத உங்கள் தலைவன் எங்குள்ளான" என்று தம் தலைமை தோன்றக்கேட்டார். இதனைக் கேட்டவுடனே ஒட்டர்கள் வெ ர்ந்து சினந்தார். தொட்டதை விடுத்து அவர் கிட்டவந்தார். வைது தெளித்தார். அல்லமரை வளைந்து கொதித்தார். சிலர் கட்டுமின் என்று கடித்தார். சிலர் வெட்டுமின் என்று விரைந் தார். இனனுஞ சிலர் எறிமின் எய்யுமின் என்று எழுந்தார். பினனுஞ்சிலர் குடுமின கொல்லுமின் என்று குவிந்தார். வேறு சிலர் அவரது வெண்பல்லைத தட்டுமின் எனறார். இங்ஙனம் வாய் கொண்டமட்டும் வைததோடமையாது அப்பொல்லாத ஒட்டர் கம அல்லமர்மேல் கல்லும் எறிந்தார். தம் ஒரு சொல்லால் அவ் அனைவரையும் ஒருகொடியில் ஒருஙகே சுடவல்ல தவ வலியுடை யராயிருந்தும சிறிதும் வெகுளாமல் அக்கொடியவர் எறிந்த கற் களின் குவியன்மேல் தம் தவமாண்பால் ஊறு ஒரு சிறிதுமின்றி உவந்து நினறார். அவ்வெய்யவராணைவரும அஞ்சி நடுங்கி அகன்று ஓடினர். செல் இடத்தும தம் சினத்தைச் செலுத்தாமல் காத்த

அல்லமரை எல்லாரும் போற்றினர். (இதன் விரிவை பிரபுலிங்க லீலையில் காண்க.)

கொடிபல செறிந்தகல் குவியக் குன்றென
முடிமிசை நின்றனன் முத்தன் அல்லமன்
புடவியின் உடனிழல் புகைப்ப அந்நிழல்
கடிதினின் மீமிசை காணுந் தன்மைபோல்

இதனுள் மேற்குறித்த வுண்மை இனிது புலனாதல் காண்க.





வலியவனிடத்தும் ஒத்தான் மாட்டும் வெகுளி காத்தல் பயனில்லைசெய அறநிலையைப் பொருந்தாது தளர்வார் தம்பால் கலியுறு வெகுளியை காத்தல் எளியவர்பால் மெலியவனிடத்து காக்கும் வெகுளிப்ப அறமென்பார். மெலியவர் மீது வெகுளாதவரே மேலோர் என்பது இதனால் கூறப்பட்டது.

302. செல்லாச் சினத்திரிக்கார் செல்லிடத்தும் கோபிக்கரேன்
சொல்லுதலேல் செய்யார் குமரேசா—பல்லிடத்தும்
செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனின் தீய பிற. (உ)

இ—ள்.

குமரேசா! கோபிகர் தம்சினம் செல்லாத இடத்தில் இருக்கின்றார்; செல்லும் இடத்தும் ஏன் கோபப்படுவதை எய்தினார் என்னின், சினம் செல்லாத இடத்துத் தனக்கே தீதாம், செல்லும் இடத்தும் அதனின் தீய பிற இல்லை என்க.

எளியவரை வெகுளின் அளவில்லாத தீமைகள் உளவாம் என்பார் "செல்லிடத்தும் அதனின் தீய பிற இல்" என்றார்.

அதனின் தீயபிறஇல்—அச்சினத்தினும் தீயன வேறு இல்லை.

ஒருவன் சினம், தன்னினும் வலியார்பால் பலியாதாதலால் அதனைச் செல்லா இடம் என்றும், மெலியார்பால் பலிக்கும் ஆதலால் அதனைச் செல்லும் இடம் என்றும் கூறினார்.

ஒருவன் சினம் வலியார் மாட்டு எழின் தனக்கே தீதாம்; எளிய மெலியார்மேற் செல்லின் அதனினும் பெருங்கேடு உண்டாம் என்பதாம்.

" வலியார்மேல் ஒருவன் சினங்கொள்ளின் கன்மேலடித்த கழி போல் தானே கெடுவான், எளிய மெலியார் மேல் செல்லின் அவர்



நலிய அதனால்தான் பழியும் பாவமும் எய்தி இழிவான் ஆதலால் எவ்விடத்தும் சினம் தீதே பயக்கும் என்பது கருத்து.

இவ்வுண்மை விசுவாமித்திரர்பால் உணரப்படும்.

## கதை.

விசுவாமித்திரர், வசிட்டர்மேற் சினந்து வல்லமர் புரிந்தார். அவ் அமரில், தமது உடல் வலியும், படை வலியும், பிற வலியும் தொலைத்து தம் அருமைப் புதல்வரனைவரையும் இழந்தார். மறுபடியும் மாதவம் புரிந்து மாண்பெய்தினார். அதன் பின்னரும் அரிச்சந்திரன் பொருட்டு அவரோடு மாறுபட்டுத் தம் தவத்தில் பாதியிழந்து பழிப்பும் எய்தினார். ஒருவன் சினம் தன்னினும் வலியார்மேல் எழின், அதனால் தனக்கே கேடு வருமென்பதை இவர் உணர்ந்து வருந்தினார். செல்லாத இடத்துச் சினம் தீதாமென்பதை முனிவர்சிலரும் இவர்பால் தெளியலாயினார். திரிசங்குவின்பொருட்டுத் தாம் செய்யவிரும்பிய வேள்வியை அவமதித்த வசிட்டருடைய மக்களை வேடர்களாகச் சபித்தார். தம்சொல்லை

குமரேசா! சாந்தலிங்கர் யாவர்மாட்டும் வெகுளியைக் கொள்ளாதது என்னே எனின், யார்மாட்டும் வெகுளியை மறத்தல் வேண்டும்; தீய பிறத்தல் அதனான் வரும் ஆதலால் என்க.

யார்மாட்டும் வெகுளியை மறத்தல்—யாவரிடமும் வெகுளியை ஒழிக. மறத்தல் என்பது ஈண்டு உடன்பாட்டு வியங்கோளாய் மறக்க என்னும் பொருள் மேல் நின்றது. வெகுளி என்பது மனத்தில் தோன்றும் ஓர் இழிகுணமாதலால் அதில் அது தோன்றுவண்ணம் ஒழிக்கவேண்டு மென்பார் "வெகுளியை மறத்தல்" என்றார். எல்லாப் பழிபாவங்களையும் வெகுளி விளைக்கும் ஆதலால் "தீயபிறத்தல் அதனான் வரும்" என்றார். வெகுளியே தீமைக்குக் காரணம் என்பது குறிப்பு.

எல்லாத் தீமைகளும் வெகுளி ஒன்றனே உளவாம், ஆதலால் யாவரிடமும் அதனை ஒருவன் செய்யலாகாதென்பதாம்.

எளியவர் வலியவர் என்னும் இருவர்மாட்டும் வெகுளலாகாதென்று மேலே கூறினர்; இதில், உலகிலுள்ள யாவர்மாட்டும் அதனைச் செய்யலாகாதென்றார்.

உயர்ந்தவர், தாழ்ந்தவர், ஒத்தவர், என்னும் முத்திறத்தார் மாட்டும் எத்திறத்தானும் ஒருவன் வெகுளலாகாதென்பதுகருத்து அறிவுடையவர் யாவர்மாட்டும் வெகுளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாந்தலிங்கர்பால் உணரப்படும்.



## கதை.

சாந்தலிங்க சுவாமிகள் என்பவர் இற்றைக்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்னர்க் கொங்கு நாட்டிலே யிருந்தவர். சிறந்த வீர சைவர். அடக்கம் பொறை அருள் முதலிய உயர் குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவர். பலநூற் புலமையும்

விழுமிய இனிய செஞ்சொற்களால் அழகிய கவிகள் பாடும் தலைமையும் இவர்பால் அமைந்திருந்தன. ஞானம்பிகை என்னும் ஓர் உத்தமியை மணந்து இல்லறத்திலிருந்து சிலகாலம் வாழ்ந்து பின் துறவியாயினர். சிவஞான தேவர் என்னும் பெரியார் ஒருவர்பால் அருளுபதேசம் பெற்றார். புறமும் அகமும் புனிதமுடையராய் எவ்வுயிர்கட்கும் இனியராய் விளங்கினர். ஆருயிர்மாட்டுப் பேரருளுடையவர். அருந்தவக் கொள்கையில் திருந்திய தன்மையர். இவர் சமாதியிலிருந்து வெளிவருங்கால் எவரை நோக்கினும் அவர்தம் புன்மை நீங்கி மெய்யுணர்வுடையராய் மேலான நன்மை எய்துவரென்பர். வெகுளியை எவரிடமும் எனைத்துங் கொள்ளாது சாந்த சீலராயிருந்தமையால் இவரைச் சாந்தலிங்கர் என்று உலகம் வாழ்த்தி நின்றது. பெரியவரொருவர் ஒருநாள் இவர்பால் வந்து "வசிட்டர் விசுவாமித்திரர் துருவாசர் முதலிய அருந்தவர்களும் ஏன் வெகுளியைப் பொருந்தி நின்றார்கள்" என்று வினவினர். சுவாமிகள் "தாம் செய்த வினைப்பயன்களை இறைவன் அருவமாய் நின்று உயிர்களை முன்னிலையாக்கொண்டு ஊட்டுகின்றான் என்று தெளிந்திருந்தும் அவர்கள் வெகுளி கொண்டுவது என்னகாரணமோ யான் அறியேன்" என்று புன்னகைசெய்தார். கொலைமறுத்தல், வைராக்கியசதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், என்னும் நான்கு விழுமிய நூல்கள் இவரால் செய்யப்பட்டுள்ளன. கோயம்புத்தூருக்கு மேல்பாலுள்ள பேரூர் என்னும் திருநகரில் இவர் சமாதியாயினர். இவர் பெயரால் அங்கு மடம் ஒன்று இன்றும் சிறந்து விளங்கிவருகின்றது. யார்மாட்டும் வெகுளியை மறத்தலே அறவோர்க்கழகு என்பதை உலகம் இவர்பாலுணர்ந்தது.

வெகுளியை ஒருவரிடமும் கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

304. தீதுபகை யேதுமில்லாச் சித்தார மன்சினத்தாற்
கோதடைந்தான் என்னே குமரேசா—போதும்
நகையும் உவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையும் உளவோ பிற. (௪)

குமரேசா! பகை ஏதும் இல்லாத சித்தாரமன் என் சினத்தால் தீதுற்றான் எனின், நகையையும் உவகையையும் கொல்லுகின்ற சினத்தினும் பகை பிற உளவோ என்க.

நகை—முகமலர்ச்சி. உவகை—மனமகிழ்ச்சி.

சினத்தின் பிற பகையும் உளவோ—சினத்தைப்போல வேறு பகைகளும் உளவோ. இல்லைஎன்பதை ஓகாரம் உணர்த்தி நின்றது.

முகமலர்ச்சியையும், மனமகிழ்ச்சியையும் அழித்தொழிக்கின்ற சினத்தைப்போலத் தீயபகை ஒருவனுக்கு வேறு யாதும் இல்லை என்பதாம்.

சினம் தோன்றுங்கால் அகம் புறம் என்னும் ஈரிடத்தும் அமைந்துள்ள இனிய இயல்புகளை அறவே அழிக்கும் ஆதலால் சினம், நகையும் உவகையும் கொல்லும் என்றார். பொறுமை, அறியாமை முதலியவற்றால் புறத்தேயிருந்து துயர்விளைக்கும் பகைவரினும் உள் இருந்தே தன் உணர்வின்பங்களை அழிக்கும் வெகுளியே ஒருவனுக்குக் கொடும்பகை என்பது கருத்து.

பகைவரைப் பகைவரென்று வெகுளற்க; அவ் வெகுளியே

உனக்குப் பெரும் பகை என்றபடி. புறப்பகைவரினும் அகப் பகையாகிய வெகுளியே தனக்குப் பெருங் கேடு விளைக்கும். ஆத லால் அதனையே ஒருவன் அறிவால் அடக்கவேண்டுமென்பது குறிப்பு.



வெகுளியை ஒருவன் அடக்காவிடின், அதனால் அவனுக்கு இழிவும் துன்பமும் உளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சித்தராமனால் உணரப்படும்.

## கதை.

சித்தராமன் என்பவர் கருநாட தேசத்திலுள்ள சொன்ன லாபுரம் என்னும் நகரில் இருந்தவர். திருவும் அறிவும் சேரப் பெற்றவர். சிறந்த வீரசைவர். சித்திகள் செய்து சிறப்புப்பெற் றவர். பல நூல்களையும் பயின்று தெளிந்தவர். தாம் செய்கின் ற நற்கருமங்களே பரமுத்திக்குக் காரணம் என்று கருதிப் பெரி தும் அவற்றையே போற்றிவந்தார். தத்துவ ஞானமே முத்திக்கு ஏதுவென்று உணராதிருந்த இவரது மன நிலத்தை உணர்ந்து உண்மையை இவர்க்கு உணர்த்த விரும்பி அல்லம தேவர் என்னும் அருள்வள்ளல் ஒருநாள் இவர்பால் வந்தார். சரியை, கிரியை, யோகம், என்பன ஞானம் உண்டாதற்கு ஏதுவேயாதலால் இதனை யுணராது கன்மங்களை அவற்றையே கருதிச் செய்பவர் கயவராவ ரென்று இவரது அமைதியை அறிய அல்லமர் அருளினர். இதனைக் கேட்டவுடனே சித்தராமர் சினந்து கோபித்தார். தவத்திற் பெரியராய நம்மை அவமதித்தாரே என்று கருதியும், தம் பணி யாளர்களாகிய ஒட்டர்கள் உரைத்ததையுங் கேட்டும் ஆற்றாமல் இ வர் பெருஞ் சினங்கொண்டு தமது யோக மகிமையால் ஒரு பெரு

நெருப்பை அவர்மேல் ஏவினர். அத் தீ அவரை ஒன்றுஞ் செய்யாமல் சித்தராமரது நகரத்தையே பற்றி எரித்தது. இவர் அஞ்சி நடுங்கி அவர் அடியில் விழுந்தார். அதன்பின் அவர் அருள்செய்தகன்ருர். தன் சினத்தால் தானடைந்த துன்பத்தை நினைந்து வருந்தி பின் அதனைத் துறந்து விளங்கினர். விரிவைப் பிரபுலிங்க லீலையில் காண்க.

தன் சினமே ஒருவனுக்குக் கொடும் பகையாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

---



305 கண்டோன் இரணியன்றன் சேய்மேற் சினந்ததனுல்
கொண்டான் அழிவென் குமரேசா—கொண்டாடும்
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். (௫)

இ—ள்.

குமரேசா! இரணியன் தன் மகன்மேற் சினந்ததனுல் என் அழிந்தான் எனின், தன்னைத்தான் காக்கின் சினம் காக்க; காவாக்கால் சினம் தன்னையே கொல்லும் என்க.

தன்னைத்தான் காக்கின்—தன்னைத் துன்பம் அடையாவண்ணம் ஒருவன் காக்கவிரும்பின், சினம் காக்க—சினத்தை மனத்திலெழாவண்ணம் தடுத்து நீக்குக.

துன்பம் யாதொன்றும் தன்னை அடையாதிருக்குமாறு ஒரு

என் விரும்புவனாயின், அவன் வெகுளியைக் கொள்ளலாகாது கொள்ளின் அஃது அவனையே கொன்றுவிடும் என்பதாம்.

வெகுளியால் துன்பமே விளையுமென்பது கருத்து.

வெகுளி, தன்னையுடையானது அறிவைக் கெடுத்துப் பழி பாவங்களை விளைத்து இருமையினும் அவனுக்குப் பெருந் துன்பத்தை நல்கும் என்பார் "சினம் தன்னையே கொல்லும்" என்றார்.

ஒருவன் வெகுளி அடைந்த முகமலர்ச்சியையும், மனமகிழ்ச்சியையும் கொல்லும் என்று மேலே கூறினர்; இதில், அவனையே அது கொன்றுவிடும் என்றார்.

இன்பத்தைக் கொள்ள விரும்புவோன் கோபத்தைக் கொள்ளலாகாதெனபது குறிப்பு.

வெகுளி தன்னையுடையானுக்கு அழிவையே விளைவிக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரணியன்பால் உணரப்படும்.



## கதை.

இரணியன் என்பவன் திதியிடம் தோன்றிய அசுரகுலத் தோன்றல். பொன்னிறமுள்ளவனாதலால் இப்பெயர் இவனுக்கு இடப்பட்டது. இரணியம்—பொன். எல்லா அண்டங்களையும் தனக்கே உரிமையாக்கொண்டு அரசபுரிந்தவன். ஒப்பற்ற உடல் வலியுடையவன். ஆண்மையில், திண்மையில், எவருந் தனக்கு நிகரில்லாதவன். யாண்டும் எவராலும் எவற்றாலும் எவ்வகையாலும் இறவாவண்ணம் உயாவரம் பெற்றவன். உயிர்களெல்லாம் தன் பெயரையே சொல்லித் துதித்து வாழும்படி ஆணை செலுத்தினன். இவன், கயாதி என்னும் பேரழகுவாய்ந்த ஒரு மாதை

பண்டித கிலாதன், சமகிலாதன், அநுகிலாதன், பிரகலாதன் என நான்கு புதல்வர்களோடு சிம்மிகை என்னும் ஒரு புதல்வியையும் பெற்றான். எல்லா நலங்களையும் ஒருங்கே எய்திப் பெரு மகிழ்வோடு இவன் பேரரசு புரிந்து வருங்கால் தன் புதல்வனான பிரகலாதன் வேதம் ஓதப்புகுந்து முதலில் மாலின் பெயரையே மாலற ஓதினான். அதனால் அவன்மேல் இவன் கோதித்தான். அம்மாயன் எங்குள்ளான் என்று சினந்தான். எங்கும் உள்ளான் என்று அவ் இளைஞன் இசைத்தான். அவனை இங்குக் காட்டுக; இல்லையானால் உன்னைக் கொல்வேன் என்று சினந்து அடுத்திருந்த ஒரு கம்பத்தில் தன் அடலுடைவாளையால் பொடிபட அடித்தான். அதிலிருந்து அரி, நரசிங்கமாய்த் தோன்றி இவனைக்கொன்று தொலைத்தார். சினத்தை ஒருவன் காவாக்கால் அஃது அவனையே கொல்லும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இதன் விரிவு இராமாயணத்தில் இரணியன் வதைப் படலத்தில் இனிது காணப்படும்.

சினம், தன்னைக் கொண்டவனையே கொல்லும் என்பது இதனால் கூறப்பட்

¹ 306. வெற்றித் திரிசங்கேன் வெஞ்சினத்தால் தன்குருவைக்
குற்றமுறத் தீர்ந்தார் குமரேசா—உற்ற
சினமெனனும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும். (சு)
70



இ—ள்.

குமரேசா! திரிசங்கு மன்னன் தன் குருவையும் ஏன் சினத்தால் பிரிந்தான் எனின், சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி, இனம் என்னும் ஏமப் புணையைச் சுடும் என்க.

புணை—மரக்கலம். சேர்ந்தாரைக்கொல்லி என்றது நெருப்பினை. தன்னை அடுத்தவற்றை அழிப்பது என்னும் காரணம் பற்றி இதற்கு அப்பெயர் இடப்பட்டது. இனம் என்றது தனக்கு உறுதியை உணர்த்தும் உற்றார் முதலிய நல்லினத்தை.

இனம் என்னும் ஏமப் புணையைச் சுடும்—இனம் என்று சொல்லப்படுகின்ற இனிய மரக்கலத்தையும் சிதைக்கும். இறந்தது தழுவிய எச்சவும்மை இதில் தொக்குநின்றது.

நெருப்புத் தன்னைச் சேர்ந்தாரை மாத்திரம் எரித்துத் தொலைக்கும், சினம் சேர்ந்தாரையும் சேராதாரையும் சேர அழிக்கும். ஆகலால் அதனினும் கொடியதாக அஞ்சி ஒழிக்கவேண்டுமென்பது குறிப்பு.

துன்பக்கடலில் வீழ்ந்து வருந்தாவண்ணம் இன்பக்கரையில் ஏற்ற வல்ல இனிய நல்ல துணை என்பார், ஏமப்புணை என்றார்.

சினம் என்னும் தீ தன்னை அடுத்தவரையேயன்றி அவரை அடுத்தவரையும் கெடுத்துவிடும் என்பதாம்.

தனக்கு இதத்தைச் செய்ய வல்ல குருமார் முதலிய நல்லோரையும் சினமுடையான் தன் சினத்தின் தீமையால் இழந்து வருந்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திரிசங்குவால் உணரப்படும்.

### கதை.

திரிசங்கு என்பவன் சூரிய குலத்தோன்றலாகிய சத்திய விரதன் புதல்வன். சத்திய சீலராகிய அரிச்சந்திரன் தந்தை. இவன் சத்தியவதி என்னும் உத்தமியை மணந்து அரசுபுரிந்து வருங்கால் ஒருநாள் தம் குலகுருவாகிய வசிட்டரையணுகி

உடலோடு தான் துறக்கத்தில் புகவேண்டுமென்று வேண்டினன். அதற்கவர் இப்பூத வுடம்போடு அங்குப் போதல் கூடாது ஆக லால் இதனை ஒழிந்து இறந்தபின் நீ போகலாமென்றார். "என்மனங் கொண்டதைச் செய்ய தரவில்லையானால் நீர் என்ன குரு" என்று அரசன் சினங்கொண்டான். உம்மால் இயலவில்லையானால், யான் கருதியதைத் தருதற்குரிய பெரியார் ஒருவரைக்கொண்டு அரு மகம் ஒன்று புரிந்து யான் எண்ணியதை எண்ணியாங்கே எய்து வேன் என்று எதிர்த்து மொழிந்தான். உடனே முனியாதமுனி வரும் முனிவுகொண்டார். வழி வழி வந்த எனக்கும் இழிமொழி தந்தாய் ஆதலால் நீ நீசனுகக் கடவையென்று ஏசிச் சினந்தார். அரசன் அவ்வாறே தனது அழகிய வடிவமாறி உடனே புலைய னுன். முனிவரும் பிரிந்து ஒரு தனிவனம் புகுந்தார். தமக்குரிய இனத்தின் நலத்தை இருவரும் தம் தம் சினத்தால் இழந்தார். சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம் என்னும் ஏமப்புணை யைச் சுடும் என்பதை உலகம் இவ்விருவர்பாலும் உணர்ந்தது. (விரிவை இராமாயணத்தில் காண்க.)

தன்னையடுத்தவரையெல்லாம் சினம் தீயைப்போல் கெடுத்து விடும் என்பது இதனால் கூறப்பட்டது.

307. கொண்டசினம்பொருளாக்கொண்டார் பின் வாசிட்டோர்
தொண்டரேன் கேடு குமரேசா—பண்டு
சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. (௭)

இ—ள்.

குமரேசா! சினத்தையே தனக்குத் துணையாகக் கொண் டிருந்த கொங்கணர் என் வாகையால் அதனையிழந்து இழிந்தார் எனின், சினத்தைப் பொருள் என்று கொண்டவன் கேடு நிலத்து அறைந்தான்கை பிழையாத அற்று என்க.



சினத்தைப் பொருள் என்று கொண்டவன்—சினமே தனக்கு உறுதிதரும் பொருள் என்று கொண்டவன். பொருள் என்றது உரிமை தோன்ற நின்றது.

பிழையாத அற்று—தப்பாத வாறுபோல். இதில் அகரம் குறைந்து நின்றது. கொண்டவன் கேட்டுக்கு அறைந்தான் கையை உவமை காட்டியது தவறாது என்பதை உணர்த்துதற்கென்க.

நிலத்தின்கண் அறைந்தவன் கை அதில் தப்பாது படுதல் போல் சினத்தையுடையவன் கெடுதல் தப்பாது என்பதாம்.

தனது வலிமையையும் பெருமையையும் உலகில்காட்டுதற்கு சினமே உரிய துணை என்று கருதி அதனையே எவரிடமும் காட்டு கின்றவன் தவறாது கெடுவான் என்பதை நிலத்து அறைந்தான் கையால் தேவர் எடுத்துக்காட்டிய நயத்தை கண்டு சிறிது நிலைத் துக் காண்க.

சினமுடையவன் தனது பெருமையை விரைவிலிழந்து தவ றாது கெடுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண் மை கொங்கணர்பால் உணரப்படும்.

## கதை.

கொங்கணர் என்பவர் கொங்கு நாட்டிலிருந்த ஒரு சித்தர்

ரில் பிறந்தவர். இவரது காலம் இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகளுக்கு முன்னதாகும். இவர், அணிமா, மகிமா முதலிய அட்டமா சித்திகளும் அடையப் பெற்றவர். ஒரு காலத்தில் தம் உடலழுக்கைத் திரட்டித் திருமழிசையாழ்வார்முன் வைத்து அதனை ஒருசிறு பொன் மலையாகப் பொருந்தக் காட்டினார். இவர் போக முனிவர்பால் பேரன்புடையவர். அவர் கருதியவெல்லாம் உரிமையினுதவி அவரோடு உவந்திருந்தார். பின் அவரைப்பிரிந்து ஓர் அடவியிற் புகுந்து ஐம்பொறியடக்கி அருந்தவம் புரிந்தார். புரிந்துவருங்கால் ஒரு கொக்கின் எச்சம் இவர்மேல் பட்டது. இவர் அதனை நிமிர்ந்து பார்த்தார். உடனே அஃது எரிந்து கரிந்தது. தமது மகிமையைத் தாமே வியந்து எவரையும் தமது



சினத்தால் வெல்லலாம் என்று அதன்பின் துணிந்தார். சினமே பொருளெனக்கொண்டு வனமெலாந் திரிந்தார். அறியாதவர்க்கெல்லாம் தம் ஆற்றலையுணர்த்தினார். ஒருநாள் திருவள்ளுவநாயனார் திருமனை முன் நின்று பலிதருக என்றார். அவ்வமயம் நாயனாருக்குப் பணிபுரிந்திருந்தமையால் வாசுகியம்மையார் உடனே வரவில்லை. சிறிது பொழுது கழிந்தபின் பலிகொண்டு வந்தார். விரைவில் வரவில்லையே என்று கருதிச் சித்தர் அம்மையைச் சினந்து விழித்தார். அக்கற்புத் தெய்வம் அவர் தன்மையைத் தெளிந்து புன்னகை செய்து "கொக்கென்று பார்த்தீரோ கொங்கணவரே" என்றுகூறியருளினார். சித்தர் அம்மையாரது மெய்யுணர்வையும் மேன்மையையுந் தெளிந்து நடுங்கிப் பணிந்தார். நாணிச் சென்றார். சினத்தால் சித்தர் சீரிழந்தார் என்று அனைவரும் சிரித்து இகழ்ந்தார். சினத்தையே பொருளென்று கொண்டவன் தப்பாது கெடுவான் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைச் சித்தர் சரிதையில் காண்க.)

சினமுடையான் தப்பாது கெடுவான் என்பது இதனாற்கூறப் பட்டது.

---

308. எள்ளித் துயர்செய்தும் ஏனோ சிவஞானர்
கொள்ளவில்லை கோபம் குமரேசா—தள்ளி
இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (அ)

இ.—ள்.

குமரேசா! சிவஞான தேசிகர் தனக்குப் பெருந் துன்பஞ் செய்தவனிடத்தும் ஏன் வெகுளியைச் செய்யவில்லையெனின் இணர் எரி தோய்வு அன்ன இன்னா செயினும் வெகுளாமை புணரின் நன்று எனக.

இணர் என்பது பூங் கொத்தை உணர்த்தும் ஒரு சொல், அஃது ஈண்டு அக் கொத்தைப்போற் செறிந்த பல தீச்சுடர்களைக் குறித்து நின்றது.



இணர் எரி—கற்றைத் தீ; என்றது பல சுடர்கள் நெருங்கிய தொகுதியான பெருந் தீயை. எரி என்றது துன்பத்தின் கொடுமையையும், இணர் என்னும் அடை அதன் மிகுதியையும் உணர்த்தி நின்றது. தனக்குத் துன்பஞ் செய்தானிடத்தும் வெகுளியைச் செய்யாமல் பொறுத்திருக்க யார்க்கும் முடியாதாகலின் "புணரின்" என்றார்.

தொகுதியான பெருந்தீ வந்து தோய்ந்தாற்போல ஒருவன் மிகுதியான துன்பத்தைச் செய்தானாயினும் அவனையும் வெகுளாமை ஒருவனுக்கு அமையுமாயின் அது நன்று என்பதாம்.

சினத்தையே பொருளென்று கொண்டவன் கெடுவான் என்று மேலுணர்த்தியதை நோக்கி, அதனை அங்ஙனம் கொள்ளாவிடினும் தமக்குக் கொடுமை செய்தானிடத்தேனும் அதனைச்செய்.

பலாகாதா? என்று ஐயுறுவார்க்கு இஃது அருளியதென்க. இன்றுசெயினும் வெகுளாமை நன்று என்றார் புகழும் அறமும் அதனால் உளவாம் என்பது கருதி.

தனக்குத் துன்பஞ் செய்பவனிடத்தும் வெகுளியைச் செய்யாதிருப்பவனே மேலான நன்மையை எய்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவஞான தேசிகர்பால் உணரப்படும்.

### கதை.

சிவஞான தேசிகரென்பவர் இற்றைக்கு நானூறு ஆண்டுகட்கு முன்னர் வடநாட்டிலே பெருமுக்கல் என்னும் மலையினை அடுத்த ஒரு சிற்றூரில் இருந்த அம்பலவை என்பவருடைய புதல்வர். பொறுமை அடக்கமுதலிய உயர் குணங்களெல்லாம் இயல்பாகவே அமையப் பெற்றவர். பாலசித்தர் என்னும் ஞானயோகிபால் அருளுபதேசம் பெற்று இருவகைப் பற்றுமற்று பொம்மபுரம் என்னும் நகரில் சித்திகள் பல செய்து சிறந்து விளங்கியிருந்து பின் விருத்தாசலத்தை அடைந்து வறியவர் பிணியாளர் கொடியவர் மூடவர் முதலானவர்களையும் அடியவராக்கி அருள் புரிந்தார். புரிந்துவருங்கால், கூனிமேடு என்னும் ஊரிலிருந்த



நாசரீகல் என்னும் மகமதியசாதி ஒருவன் இவர்மீது பொறாமையுற்று இவர்க்கு அல்லல் பல செய்தான். கொல்லவும் முயன்று கொடுந்தொழில் செய்தான். தமது தவமகிமையால் அவ்வெல்லாவற்றினும் இவர் தப்பி உய்ந்தனர். அக்காலத்தில் செஞ்சியிலிருந்து அரசுபுரிந்த திரியப்பநாயகன் என்பவனை அணுகி இவர்மீது அவன் அடாப்பழி புகன்றான். அவ்வேந்தனும் செற்றமுற்று வந்து தேசிகரது குற்றமற்ற தன்மையை யுணர்ந்து நற்றாள் தொழுதான்.

கபந்தனென்றர். இங்ஙனம் சொல்லாலும் செயலாலும் தமக்குப் பெருந்துன்பங்களைச் செய்துவந்த அக்ஞானிகள்மீது இவர் சிறிதும் வெகுளாமல் அவனுக்கு இதமே செய்தார். இவரது சினமின்மையையும், மன நன்மையையும் தெளிந்து அவனும் வந்து இவர் அடிகளை வணங்கி அடியவனுஞன். அனைவரும் இவரது பொறுமையை வியந்து புகழ்ந்து போற்றினர். இவரும் எல்லா நலன்களுமெய்தி இறுதியில் சிவின்பமெய்தினர். தனக்கு இன்னுதவற்றைச் செய்தார் கண்ணும் வெகுளாமலிருத்தல் அமைபுமாயின் அது ஒருவனுக்கு நலமாம் என்பதை உலகம் இவர் பால் உணர்ந்தது. விரிவை மயூராசல புராணத்தில் உணர்க.

மிகு தீங்கு செயினும் வெகுளாதிருத்தலே ஒருவனுக்கு நலமாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

309. பண்டு வெகுளாப் பரத்துவரேன் எண்ணியதைக்
கொண்டார் உடனே குமரேசா—கொண்டாடி
உள்ளிய வெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். (௯)

இ—ள்.

குமரேசா! தாம் நினைத்தவற்றை எல்லாம் பரத்துவாசர் ஏன் நினைத்தவுடனே பெற்றுர் எனின், உள்ளத்தால் வெகுளியை உள்ளான் எனின், அவன் உள்ளிய எல்லாம் உடனே எய்தும் என்க.

610 திருக்குறட் குமரேச வெண்பா.

உள்ளத்தால் வெகுளி உள்ளான் எனின்—நெஞ்சால் வெகுளியை நினையானுயின். மேல், வெகுளாமை எய்தின் ஒருவனுக்கு நன்று என்றர், இதில், அவன் கருதியன எல்லாம் அதனுல் எய்தும் என்றர.

மனத்தால் வெளியை ஒருவன் நினையாநின் அவன் நினைத் தவற்றையெல்லாம் உடனே பெறுவான் என்பதாம்.

எண்ணியவெல்லாம் எண்ணியவாறே ஒருவன் எய்தவேண்டு மாயின் அவன் வெருளியை எண்ணலாகாது என்பது கருத்து.

சினத்தை ஒழித்தவனுக்கு நினைத்தனவெல்லாம் உடனே கிடைக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரத்துவாசர்பால் உரைப்பபடும்.

## கதை

பரத்துவாசர் என்பவர் உதத்திய முனிவருடைய புதல்வர். தாய்பெயர் மமதை. இவர் சிறந்த தவ வொழுக்கம் வாய்ந்தவர். உயிர்கள் மாட்டுப பேரருளுடையவர். முனிவிலாத முனிவ ரென்று இவரை அனைவரும் புகழ்வார். பரமபொருளிடத்தே என்றும் கய உளத்தையிருத்தியதால இவர் பரத்துவாசரெனப் பெற்றார். இதுபொழுது பிரயாகை என வழங்கப்படுகின்ற இடமே பண்டு இவரிருந்து தவம்புரிந்த தலமாம். இராம மூர்த்தி இராவணனைவெட்டையாடி வானரசேனைகளுடன் திருவயோத்தியை நோக்கி மீளுங்கால் அவரை எதிர்கொண்டு சென்று தமது தவச் சாலைக்கு அழைத்துவந்து இனிய உபசாரங்கள் செய்து அரிய விருந்து ஒன்றை இவர் ஆற்ற விரும்பினர் தெய்வ வுல கத்தில் எய்தியிருக்கும் இனிய பொருள்களெல்லாம் தம்மிடம் எய்தும்படி எண்ணினர். அவ்வாறே சுரபி சிந்தாமணி அமிழ்தம் முதலிய போகப் பொருள்களெல்லாம் உடனே எய்தின. அவற் றால் அரசர் முதல் அடியவரீறாக அச்சேனையிலுள்ள அனைவரு க்கும ஒருபடியாக உயர்ந்த இன்பத்தை யூட்டினர். எல்லாரும் உண்டு மகிழ்ந்தார். இவரது மனநலத்தையும் தவ வலத்தையும்

வியந்து இராமமூர்த்தியும் புகழ்ந்து போற்றினர். உள்ளத்தால் வெகுளியை உள்ளாதவர்க்கு உள்ளியன எல்லாம் உடனே எய்தும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவை இராமாயணத்தில் காண்க.

வெகுளியில்லாதவர்க்கு விரும்பியன எல்லாம் விரைவில் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

310. நின்றோட் சகரர் சினத்திறந்தார் அஞ்சுமான்
கொண்டான் உயர்வேன் குமரேசா—மண்டி
இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. (௰)

இ—ள்.

குமரேசா! சகரர் சினத்தால் இறந்தார்; அஞ்சுமான் என் வெகுளாது உயர்ந்தான் எனின், சினத்தின் இறந்தார், இறந்தாரை அனையர்; சினத்தைத் துறந்தார் துறந்தார் துணை என்க.

இறத்தல் என்பது மிகுதல் சாதல் கடத்தல் என்பவற்றை உணர்த்தி நிற்கும். சினத்தின் இறந்தார் இறந்தார் அனையர்—சினத்தின் மிக்கவர் செத்தவரோடொப்பர். இதில் சினம் இடைநிலைத்தீவகமாய் நின்று இருமருங்கினும் சென்றிசைந்தது.

சினத்தைத் துறந்தார்—வெகுளியை விட்டவர்.

துறந்தார் துணை—சாதலை ஒழித்தாரை ஒப்பர்.

சினத்தை மிகுத்தவர் செத்தவரையும், அதனை விடுத்தவர் சாகாதவரையும் ஒப்பர் என்பதாம்.

வெகுளி யுடையவர், உயிருடையராயினும் தாம் பிறந்த பயனை இழத்தல் நோக்கி அவரை இறந்தவர் என்றும் அஃதில்லாதவர் மெய்யுணர் வுடையராய் அழிவி லின்பத்தை அடைவ ரென்பது கருதி அவரை இறவாதவர் என்றும் கூறினர் என்க,

612 

எரிநிகர் வெகுளிபொங்க மயக்கம்வந் தெய்தும் எய்தத்
தெரிபவை சிதையும் உள்ளந் தெரிந்தவை சிதைந்தபோதே
உரியதன் உணர்வுமாயும் உணர்வுமாய்ந் தொழிந்தவாறே
அரியவென் றறிஞர்போற்றும் அனைத்துமாய்ந் தொழியுமன்றே.
(பகவற்கீதை.)

வெகுளி மிக்கவர்க்கு வீடு பெறுதல் அரிது என்பதை இதனுணர்க. இனி, துறந்தார் என்பதற்கு துறவிகள் என்று பொருள்கொண்டால், வெகுளியை மாத்திரம் துறந்தவர், எல்லாவற்றையும் துறந்த பெரியாரோடொப்பர் என்று கொள்க.

வெகுளியுடையவர் இறப்புத் துன்பத்தையும், அஃதில்லாதவர் இறவா இன்பத்தையும், எய்துவரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சகரர் பாலும் அஞ்சுமான் கண்ணும் உணரப்படும்.

## கதை 1.

திருவயோத்தியிலிருந்து அரசுபுரிந்த சகர மன்னனுக்கு சுமதியென்னு மனைவிபால் இறைவனருளால் அறுபதினாயிரம் புதல்வர்கள் தோன்றினர். அவரனைவருக்கும் ஒரு தொகையாகச் சகரர் என்றே பெயர். உருவில், திருவில், உரனில், உணர்வில் ஒருநிகரானவர். விரிந்த அறிவு இலராயினும் சிறந்த ஆண்மையுடையவர். ஒருவரையொருவர் பிரிதல் இலராய் யாண்டுச் செல்லினும் ஒருங்கே செல்வர். பாதலத்திலிருந்து அருந் தவம் புரியுங் கபில முனிவரைக் கண்டு அவரது மனநிலையை உணராது அவர்மேற் சினமீக் கூர்ந்தார். அனைவரும் அதனால் ஒருங்கே அழிந்தார். சிறந்த பிறவியை எய்தியிருப்பினும் இறந்த சினத்தார் இறந்தவரே யாவர் என்பதை இவர் அன்று உணர்த்தி ஒழிந்தார்

## கதை 2.

அஞ்சுமான் என்பவன் சகர மன்னனுடைய பேரன். பொறுமையும் அறிவும் பொருந்திய பண்பினன், திண்மையுள்ள



வனாயினும் யாவர்மாட்டும் தண்மைமிக்கவன். சகரர் இறந்தமையைத் தெரிந்து தாம் புரிகின்ற பரிவேள்விக்கு இடையூறு வந்ததேயென்று கலங்குகின்ற தன் பாட்டனாகிய சகரனைத் தேற்றிவிட்டுப் பாதலத்தில் புகுந்து கபில முனிவரைக் கண்டு அவரது அடிகளிற் பணிந்து இனிய மொழிகள் பல அவர் உவகையுற மொழிந்தான். இவனது மன நலத்தையுஞ் சினமகன்ற தன்மையையும் முனிவர் தெளிந்து இனிதருள்செய்து பரியையும் உதவினார். அதனைப் பெற்றுவந்து அருமகம் முடித்து அரசனுக்கு மகிழ்வூட்டித் தனது அமைதியினாலக்கால் அருந்தவரும் போற்றத்தக்க பெரும்பதத்தை அடைந்தான். சினமுடையவர் அழியுந்துயரையும், அஃதில்லாதவர் அழியா இன்பத்தையும் பெறுவார் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவை இராமாயணத்தில் காண்க.

---

(இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.)

செல்லும் இடத்தும் தன் சினத்தைக் காப்பவனே சிறந்தவனாவான். செல்லும் இடம், செல்லாத இடம், என்னும் ஈரிடத்தும் சினம் தீமை பயக்கும். யாவர்மாட்டும் சினத்தை ஒருவன் ஒழித்தல் வேண்டும். மன மகிழ்ச்சியையும், முக மலர்ச்சியையும் சினம் அறவே தொலைக்கும். அதனை அடக்காதவனை அது கெடுத்தேவிடும். அதனையுடையவன் தனக்குரிய நல்லினத்தையெல்லாம் இழப்பான். அதைக் கொண்டவன் தப்பாமல் தன்ப

த்தைக் கொள்வான். தீயைப்போல் வந்து பிறர் துன்பஞ் செய்யினும் சினங்கொள்ளாமையே ஒருவனுக்கு உயர் நலமாகும். வெகுளி இல்லாதவனுக்கு உள்ளியவெல்லாம் உடனே உளவாம். சினம் மிகுந்தவர் செத்தவரோடு ஒப்பர். அதனைத் துறந்தவர் அழிவில்லின்பத்தைப் பெறுவர் என்பனவாம்.

31வது வெகுளாமை முற்றிற்று.

---



# ௩௨-ம் அதிகாரம் இன்னா செய்யாமை.

அஃதாவது துன்பமானசெயல்களைப் பிறவுயிர்கட்கு எவ்வகையானுஞ் செய்யாமை. இன்னாமை—துன்பம். இஃது இனிமை என்பதன் எதிர்மொழி. வெகுளி, அறியாமை, தன்னயக் கருதல், மறதி என்பவற்றால் இது நிகழுமாயினும் பெரும்பாலும் வெகுளி பற்றியே விளையுமாதலால் அது தோன்றினும் இது செய்யலாகாதென்பதை உணர்த்துதற்கு வெகுளாமையின்பின் வைக்கப்பட்டது.

---

311. உற்றமுன்னோன் இன்னா வுறவனென எளிலக்கோ
குற்றமற நீத்தார் குமரேசா—முற்றும்
சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். (க)

குமரேசா! அரச செல்வத்தைப் பெறுவதாயிருந்தும் தன் அண்ணனுக்கு இன்னா செய்வலாகாதென்று எண்ணி என் அதனை இளங்கோ துறந்தார் எனின், சிறப்பைத் தருகின்ற செல்வத்தைப்பெறினும் பிறர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை மாசு அற்றாரது கோள் என்க.

சிறப்பு என்பதற்குப் பொருள் ஈண்டு இயல் நோக்கிக் கொள்க. கோள்என்பது புறங்கூறல், இடையூறு, கிரகம், கோட்பாடு, குணம் என்பவற்றை உணர்த்துமொரு சொல். அஃது ஈண்டு கோட்பாடு என்பதைக் குறித்து நின்றது.

மாசு அற்றார் கோள்—குற்றம் அற்றாரது துணிவு.

சிறப்பைத் தருகின்ற செல்வத்தைப் பெறுவதாயினும் பிறர்க்குத் துன்பத்தைச் செய்யாமை குற்றமற்றாரது துணிவு என்பதாம்.

32-ம் அதிகாரம் இன்னா செய்யாமை. 615

எத்தனைச் சிறந்த செல்வமாயினும், பிறர்க்குத் துன்பஞ் செய்து அதனால் எய்துவதாயிருப்பின் அதனை மனந் தூயார் விரும்பார் என்பார் "செல்வம் பெறினும் இன்னா செய்யாமை மாசற்றார் கோள்" என்றார். இன்னா செய்யாமையே குற்றமற்றாரது குணம் என்பது குறிப்பு.

இனி, சிறந்த செல்வத்தைப் பெற்றிருப்பினும் பிரர்க்குத் துன்பஞ் செய்யாமை மாசு அற்றார்க்கு இயல்பு எனினும் பொரு

க்கும். ஒருவனுக்கு இம்மைக்குரிய எல்லாச் சிறப்புகளையும் செல்வம் நல்கும் ஆதலால் அது சிறப்பு ஈனும் என்னும் அடைபெற்று வந்தது. எத்தனை அறிவுடையாரையும் சித்தத்தைத் திரித்துச் செருக்கை மிகுத்துப் பிறர்க்குத் தீங்கு செய்யும்படி செல்வம் தூண்டுமாதலால் அது பெறினும் மாசற்றார் இன்னா செய்யார் என்றார். இன்னா செய்யும்படி செல்வம் செய்யும் என்பதை உம்மை விளக்கி நின்றது. எவ்வளவு சிறந்த செல்வமாயினும் பிறர் துன்புற வருவதாயின் அதனை அறிவோர் விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளங்கோ பால் உணரப்படும்.

## கதை.

இளங்கோ என்பவர் சேர நாட்டிலே வஞ்சி நகரத்திலிருந்து செங்கோல் செலுத்திய சேரலாதன் என்னும் அரசனுடைய புதல்வர். தன்னுடன்பிறந்த முன்னோனாகிய சேரன் செங்குட்டுவனோடு சேர்ந்து வளர்ந்து யாவர்மாட்டும் ஆர்ந்த அன்பினராய் அமர்ந்து விளங்கினார் அரியணை அமர்ந்து திருவுடன் விளக்கும் அரசன் முன்னர் இவ் இருவரும் இருப்ப ஒருநாள் நிமித்திகன் ஒருவன் வந்தான், வணங்கி நின்றான். குமரர் இருவரையும் அமர நோக்கிப் பின் அரசனை நோக்கினான். அரசே! "நும்புதல்வர் இருவரில் அரசுரிமையை யெய்துதற்குரிய நலங்களெல்லாம் இளங்கோவுக்கே அமைந்துள்ளன ஆதலால் அவனே இனி அரசனாவான்" என்று அறைந்து சென்றான். மூத்தவனுக்கே அரச உரிமை என்னும் முறைமை மாறியதோ என்று செங்குட்



டுவன் சினந்து சென்று மனந்திரிந்தான். அதனை இளங்கோ உணர்ந்தார் தம்மால் அண்ணனுக்கு இன்னல் வந்ததே என்று வருந்தி அதனை அவனடையாவண்ணம் தாம் துறவினை அடைந்

தார். வஞ்சியின் கீழ்பாலிருந்த திருக்குணவாயில் என்னும் தலத்திலமர்ந்து தவத்திலிருந்தார். உயர்ந்த சிறப்பைத் தருகின்ற சிறந்த அரச செல்வம் தமக்கு வருவதாயிருந்தும் முன்னோனைத் தும் இன்னாமைக்கு இரங்கி அருளுடன் துறந்த இப்பெரியாரது மாசற்ற தன்மையை அனைவரும் வியந்தார். துறவுகொண்டபின் இளங்கோவடிகள் என்றும் சேர முனி என்றும் இவரைப் புகழ்ந்து போற்றினர். சிலப்பதிகாரம் என்னும் சிறந்த காவியம் இவரால் இயற்றப்பட்டது. இவரது மதி நலமும், மனநலமும், அருளுடைமையும் இந்நூலில் பலஇடங்களிலும் புலனாகின்றன. பிறர்க்குத் துன்பமான செயல்களைப் பெரியோர் எவ்வகையிலும் செய்யார் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைச் சரிதையில் காண்க.)

தமக்குப் பெருஞ் செல்வம் வருவதாயினும் பெரியோர் பிறர்க்குத் துன்பமானவற்றைச் செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

312. செற்றங்கொண் டின்னாமுன் செய்தார்க்கும் செய்திலரேல்
கொற்றக் குடியார் குமரேசா—முற்றும்
கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். (உ)

குமரேசா! செற்றங்கொண்டு இன்னாதவற்றைத் தமக்குச் செய்தாரிடத்தும் கொற்றங்குடி உமாபதியார் என் அதனை மறுத்துச் செய்யவில்லை எனின், கறுத்து இன்னா செய்த அக்கண்ணும் மறுத்து இன்னா செய்யாமையும் மாசு அற்றார் கோள் என்க. தொக்கு நின்ற உம்மைமேலதைத் தழுவிநின்றது.

கறுத்தல்—வெகுளிக் குறிப்பு.

கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. (தொல்காப்பியம்.)

செய்த அக்கண்ணும்—செய்த அவ்விடத்தும். செய்தவன் கண்ணும் எனவும் பாடம்.

இன்னாதவற்றைத் தமக்கு ஒருவன் வெகுண்டு செய்தவிடத்தும் அவற்றைமாறி அவனுக்குச்செய்யாமை மாசற்றாரது இயல்பு என்பதாம்.

செல்வம் பெறினும் பிறர்க்குத் துன்பமான செயல்களை மாசற்றார் செய்யார் என முன் மேலே கூறினார்; இதில், தமக்குத் துன்பஞ்செய்தாரிடத்தும் அதனை அவர் செய்யார் என்றார்.

சினங்கொண்டு பிறர் இன்னாசெய்யினும் அதனை மனங்கொள்ளாது பெரியோர் மறப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உமாபதி சிவாசாரியர்பால் உணரப்படும்.

## கதை.

உமாபதி சிவாசாரியர் என்பவர் சோழநாட்டிலே தில்லையம்பதியிலே அந்தணர் குலத்திலே அவதரித்தவர். வேதங்கள், சிவாகமங்கள், இதிகாச புராணங்கள், முதலிய பல கலைகளிலும் தலைமையான புலமை வாய்ந்தவர். அருள், அடக்கம் பொறை முதலிய அரிய குணங்களெல்லாம் அமையப் பெற்றவர். மறைஞான சம்பந்தர் என்னும் பெரியாரொருவர் பால் அருளுபதேசம் பெற்று இறைவனருளையே நாடி இளமையிலேயே தவநெறி ஒழுகினர். சாதி முதலியவற்றின் இழிவரம்புகளைக் கடந்து

பரகத நோக்குடன் யாவர்மாட்டும் பேரருளுடையராய்ப் பொருந்தி விளங்கினார். தமது முறைப்படி ஒருநாள் பொன்னம்பலவருக்கு இவர் பூசை செய்யப் போயினர். தில்லைவாழந்தணரெல்லாருஞ்சேர்ந்து இவரைக் குலமுறை தவறினவரென்று பழிமொழி பகர்ந்து பணி செய்யலாகாதென்று தடுத்துத் தம் குழுவினின்று விலக்கினர். அவ்வளவிலமையாது இவரது செயல்களையும் இ



ழிவு செய்தனர். ஐயம் நீங்கிய மெய்யுணர்வுடைய இவ் ஐயரது பெருமையைச் சிறிதும் அறியாமல் அவர் செய்த அல்லல்கள் மிகப் பல. இவர் யாதுஞ் செய்யாது அமைதியோடு அப்பதியைவிட்டகன்று அதன் கீழ்பாலிருந்த கொற்றங்குடி என்னும் சிற்றூரையடைந்து தனி முதலை நாடித் தனியே யிருந்தார். மறுநாள் தில்லை வேதியர் அம்பலத்திற் சென்று பூசை செய்தற்கு ஆதி அறையைத் திறந்தார் அந்த அம்பலவாணரைக் கண்டிலர். அஞ்சி நடுங்கி அயர்ந்தார். உடனே "யாம் உமாபதி பால் உவந்திருக்கின்றோம்" என்று ஓர் ஒலி இறைவன் அருளால் வானில் ஒலித்தெழுந்தது. வேதியர் கேட்டு வெருண்டோடி உமாபதியாரை வணங்கித் தம் ஊருக்கழைத்தார். அருள் வள்ளலாகிய இவர் யாதும் கூறாமலடைந்தார். அம்பலவாணரும் ஆங்கு வந்தமர்ந்தார். நாள் பல கழிந்த பின் மீண்டு சென்று உமாபதியார் கொற்றங்குடியே குடியாக் கொண்டார். பெற்றான் என்னும் ஓர் உத்தமனுக்கு முத்தி கொடுக்குமாறு ஒரு பாவை எழுதிப் பெருமான் ஏவ அதனைப் பெற்று இவர் அவ்வாறே செய்தார். அப்பாட்டு இதனடியில் வருகின்றது.

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படிமிசைநற்
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து

முத்தி கொடுக்க முறை.

இங்ஙனம் இறைவனருளை நிறையப்பெற்று உண்மை நெறி விளக்கம், சிவப்பிரகாசம், திருவெண்பா, நெஞ்சுவிடுதூது முதலிய அரிய நூல்கள் பல அருளிச்செய்து யாவர்க்கும் இனியனவே செய்து இசை பெற்றிருந்தார். வெறுத்துத் துயர் விளைத்தவரிடத்தும் பொறுத்து அருள் செய்த இவரது மனத் தூய்மையை அனைவரும் போற்றிப் புகழ்ந்தார். கறுத்து இன்னா செய்தவரிடத்தும் மாசற்றார் மறுத்து இன்னா செய்யார் என்பதை உலகம் இவர் பால் உணர்ந்தது (விரிவை இவர் புராணத்தில் காண்க.)

எவரிடமும் மேலோர் இன்னாதனசெய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.



313. திண்டோள் நிமிவசிட்டர் சிறியின்னா செய்துதுன்பம்
கொண்டார்பின் என்னே குமரேசா—பண்டொன்றும்
செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமந் தரும். (௩)

-ள்.

குமரேசா! நிமியும் வசிட்டரும ஒருவர்க்கொருவர் இன்னாசெய்து பின் ஏன் இருவரும் இடும்பை எய்தினர் எனின், செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்த பின் அஃது உய்யா விழுமம் தரும் என்க.

செய்யாமல் செற்றார்—ஒருவன் யாதொரு துன்பமும் முன்பு செய்யாதிருக்க அவன்மேற் சினந்து துன்பம் செய்தவர்.

உய்யா விழுமம் தரும்—கடக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

முன் யாதொரு துன்பமும் தான் செய்யாதிருக்கத் தன்மேற் செற்றங்கொண்டு துன்பஞ் செய்தவர்க்கும் ஒருவன் அதனைச் செய்வனாயின் அவனுக்குக் கடக்கமுடியாத துன்பத்தை அச்செயல் கொடுக்கும் என்பதாம்.

கறுத்து இன்னா செய்தார்க்கும் மேல் மறுத்து இன்னா செய்யலாகாதென்றார்; செய்தாலென்னை? யென்பார்க்கு அதனால் தொலையாத துன்பம் உளவாம் என்று இதில் உணர்த்தினாரென்க.

இன்னாமை இன்னாமையையே ஈனுமாதலால் அதனை எவ்விடத்தும் எவ்வகையானும் செய்யலாகாதென்பதும், செய்யின் செய்தார்க்கே அது துன்பத்தை விளைக்கும் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நிமியின்கண்ணும், வசிட்டர் பாலும் உணரப்படும்.

நிமி என்பவன் சூரியகுலத் தோன்றலாகிய இக்குவாகுவின் புதல்வன். அமரரும் வியக்கத்தக்க அருந்திறல் படைத்த





வன். சிறந்த போர்வீரன். மலர்தலை யுலகிற்கு உயிரென இருந்து இசை திசை பரப்பி வசையற ஆண்டவன். துறந்தவர் தம்மினும் தூய்மை வாய்ந்தவன். இவன் சத்திரவேள்வி ஒன்று செய்யவிரும்பி வசிட்டரை அதற்குத் தலைவராயிருக்கும்படி அழைத்தான். இந்திரன் வேள்வி ஒன்று புரிகின்றான் அங்குச் சென்று வருகின்றேன் என்று அவர் சொல்லிப் போயினர். கௌதமரைக் கொண்டு தனது வேள்வியை நிமி இனிது முடித்தான். அத்திரி, பிருகு, அங்கிரா முதலிய முனிவர்களையும் அங்கு வந்திருந்த மன்னர்களையும் தண்ணளியோடு அனுப்பிவிட்டு வேள்வியின் இளைப்பால் மென் துயில்புரிந்தான். வசிட்டர் வந்தார். "யான்

வருவதற்கு முன் வேறொருவனைக்கொண்டு வேள்வியை முடித்தான், யான் வந்திருந்தும் இங்கு வந்து காணாத மன்னன் என்னை அவமதித்தான்" என்று முனிவர் மனங்கொதித்து "அவன் ஆவி தீர்க" என்று சாபங் கூறினார். அமைச்சர் எழுப்ப நிமி எழுந்து நிகழ்ந்ததையறிந்து தான் ஒன்றுஞ் செய்யாதிருந்தும் தன்மேற் சீறி இன்னா விளைத்தாரே என்று முனிவரை வெறுத்து "அச்சாபம் உன்னையும் சார்க" என்று மன்னவன் சபித்தான். இருவரும் இறந்து இன்னுடல் கழிந்தார். பிரிந்து நொந்து பின் பிறந்து வருந்தினர். செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்யின் அச்செயல் உய்யா விழுமம் தரும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

என்னைமுன் வரித்துப்போன யான்வருவதற்கு முன்போர்
அன்னியன் றன்னைக் கொண்டாங் கருமகம் நடாத்துகின்ற
மன்னவன் காண நான்றான் வந்திடப் புறப்படாதோன்
தன்னுடல் விடுக ஆவி யெனமுனி சபித்தான் அன்றே.

அனையவன் சபிக்கக்கேட்ட அரசர்கோன் அழலிற்பொங்கித்
தன்வரவறியேன்பாயல் சார்ந்துநித்திரைநான பண்ண
என்னையந் நியாயத்தாலே வெரிவித்த சாபம் அன்னோன்
தன்னையுஞ் சார்கவென்று சபித்தனன் தவத்தின் மிக்கான்.

(உத்தரகாண்டம்.)



இவற்றால் மேற்குறித்தவுண்மை இனிது புலனாதல் காண்க.

இன்னாத செயல் எவ்வகையாலும் தன்னைச் செய்தார்க்கே துன்பம் விளைக்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

314. பண்டு சுயோதனனைப் பாண்டவரேன் கட்டவிழ்த்துக்
கொண்டுவந்து விட்டார் குமரேசா—மண்டிவந்து
இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். (௪)

குமரேசா! தமக்கு இன்னா செய்தவனாகிய துரியோதனை கட்டவிழ்த்துக்கொண்டுவந்து ஏன் ஐவர் இனியன செய்து விடுத்தார் எனின், இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர் நாண நன்னயம் செய்துவிடவேயாம் என்க.

நன்னயம்—இனியவை. நல் நயம் எனப் பிரித்துக் காணினும் பொருத்தமாம்.

நன்னயம் செய்துவிடல்—இன்புறும் நலங்களைச் செய்து விடுக. விடல் என்பது உடன்பாட்டு வியங்கோள்.

தனக்குத் துன்பம் செய்தாரை ஒருவன் தண்டிக்கவல்லது அவர் தாமே நாணும் வகை அவர்க்கு இன்பம் செய்துவிடுதலே யாம் என்பதாம்.

தான் யாதும் செய்யாதிருக்க தனக்குத் தீது செய்தானுக்கு இன்னா செய்யினும் தீதாம் என்று மேலே கூறினர்; இனி அவன் பால் செய்ய வேண்டுவதுதான் யாது எனபார்க்கு இது கூறினரென்க.

தமக்கு இன்னாதன செய்தானுக்கும் அறிவோர் இனியனவே செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாண்டவர்பால் உணரப்படும்.



கதை.

பாண்டவர்கள் வன வாசஞ் செய்யுங்காலத்தில், துரியோதனன் தன் செல்வ நலத்தையும் சிறப்பையும் அவர்க்குக் காட்ட விரும்பிச் சிறந்த அணிகளும் உயர்ந்த ஆடைகளும் அணிந்து மனைவிமக்களும் உரிய துணைவரும், கன்னன் சகுனி முதலிய நண்பரும் நால்வகைச் சேனையும் புடைசூழ எழுந்து வனம் புகுந்து அவர் தங்கியிருக்கும் இடத்தைச் சார்ந்தான். நறுவிய மலர்கள் நிறைந்த ஓர் இனிய வாவியை யணுகித் தமது படைகளோடு நீராடினின்றான். தனது அழகிய மகளிரோடு அங்கு வந்திருந்த சித்திரசேனன் என்னும் வித்தியாதரனுக்கும் இவனுக்கும் வாதம் நிகழ்ந்தது. முதலில் சொற்போர் தொடங்கி முடிவில் விற்போர் நிகழ்ந்தது. அதில் அனைவரையும் வென்று துரியோதனனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு சித்திரசேனன் தேர்மேலேறி வான்மேல் போனான். வஞ்ச நெஞ்சன் அஞ்சி அலறினான். அவனது அபயக் குரலை அறன் மகன் கேட்டார். மன மிக இரங்கித் துணைவரையனுப்பினார். காலினும் கடுகி நால்வரும் ஓடினார். வான்வழிச் செல்வோன் மேல் வாளி தூவினர். அருச்சுனனைக் கண்டு தன் நட்புரிமையை நினைந்து தான் பிடித்திருந்த சிறையினை விடுத்து இனிய மொழிகள் புகன்று அவன் மகிழ்வுடன் சென்றான். துரியோதனனைக் கொண்டுவந்து தருமர் முன் விடுத்தார். இவரும், அவனை அன்புடன் தழுவி அரிய கனிகளை யூட்டி யினிய உபசாரங்களைச் செய்து அவர்தவரோடு வாழ்த்தியனுப்பினார். சொல்லுதற்கரிய பெருந் துன்பங்களைத் தான், அவர்க்

குச் செய்திருக்கும் தனக்கு அவர் அன்று செய்த நன்றிகளை நினைந்து நினைந்து நாணங்கொண்டான். ஆயினும், காட்டிலிருந்து இவ்வளவு சுகமாக வாழ்கின்றார்களே என்னும் புல்லிய பொறாமையும் அவனுள்ளம் புகுந்திருந்தது. தமக்கு இன்னாதவற்றைச் செய்த கொடியவனான துரியோதனனுக்கும் இனியவற்றையே செய்து அன்புடன் விடுத்த தருமர் முதலிய ஐவரது மன நலங்களை அனைவரும் போற்றினர். விரிவைப் பாரதத்தில் காண்க.

32-ம் அதிகாரம் இன்னா செய்யாமை. 623

தமக்கு இன்னா செய்தவர்க்கும் இனியன செய்வோரே பெரியோர் என்பது இதனால் கூறப்பட்டது.

315. தின்டோட் பவணனேன் சிற்றுயிர்நோய் கொண்டாலும்
கொண்டான் துயரம் குமரேசா—கொண்ட
அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போல் போற்றாக் கடை. (௫)

இ—ள்.

குமரேசா! சிற்றுயிர்கள் சிறிது துன்புறக் கண்டாலும் பவணமாதேவன் ஏன் பெரிதும் வருந்திப் போற்றினான் எனின், பிறிதின நோய் தம் நோய் போல் போற்றாக் கடை அறிவினான் ஆகுவது உண்டோ என்க. இல்லை என்பதை ஓகாரம் உணர்த்தி நின்றது. அறிவுக்குப் பயன் இதில் அறிந்துகொள்க.

பிறிதின் நோய்—பிறிதோர் உயிர்க்கு உறும் நோய்.

போற்றாக் கடை—பேணாதவிடத்து.

பிறர் நோய் என்னாது பிறிதின் என்று அஃறிணையாற் கூறியது நுண்ணிய வுடம்புகளையுடைய எறும்பு புழு முதலியவற்றை

யும் தம் உயிர்போல் பேணவேண்டுமென்று கருதி என்க.

பிறிதோருயிர்க்கு வரும் நோயைத் தம் உயிர்க்கு வந்ததாக்க் கருதிக் காவாதவிடத்து மக்கள் அறிவினால் ஆவதொரு பயன் யாதும் இல்லை என்பதாம்.

நல், இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலிய செயல்களாலும் சிற்றுயிர்கள் வருந்தாவண்ணம் உற்றறிந்து ஒழுகவேண்டுமென்பது கருத்து. பிறவுயிர்களைத் தன் உயிர்போல் பேணாதவன் எவ்வளவு அறிவுடையவனாயினும் அவனை அறிவில்லாதவனாகவே கொள்ளவேண்டுமென்பது குறிப்பு.



பிறவுயிர்கள் சிறிது வருந்தினும் அறிவுடையார் பெரிதும் இரங்கி அவற்றைப் பேணுவரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பவணமாதேவன்பால் உணரப்படும்.

கதை.

பவணமாதேவன் என்பவன் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தாதகி காட்டிலே யிருந்த பூமி திலகம் எனனும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். அருளும் பொறையும் அறிவும் நிறைந்தவன். எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணியொழுகிய புண்ணிய சீலன். இவனுடைய அருமை மனைவிக்குச் சயமதி என்று பெயர். அவள்பால் நலமெலாம் திரண்ட ஒருகுலமகன் பிறந்தான். பருவமெய்தி அவன் இளவரசாய பின் அழகிய மகளிர் ஐவரை மணந்து அரும போகந் துய்த்தான். துய்த்துவருங்கால் பொய்கை ஒன்றில் பொருந்தியிருந்த ஓர் அன்னப் பார்ப்பை அவர்பால் தந்தான். அவர் பெற்றுப் பெருமகிழ்வுற்றுக் காலில் மணியணி புனைந்து பாலமுதூட்டி மார்போடணைத்து இனிது பேணிவந்தார். அதனை ஒரு நாள் அரசன் கண்டான். இனிது பேணி

னும் தாயினை யிழந்து மறுகி நிற்கும் அதன் கோலநிலையுணர்ந் தான். நொந்து துடித்தான். அந்தோ! "குழந்தாய் என்ன பாவஞ் செய்தாய்!! இவ் இளங் குஞ்சை ஏன் இவ்வாறு இனம் பிரித்து வருந்துகின்றாய். இது சாலவுந் தீது" என்று சொல்லி அதன்பாலணுகி அதனை உற்றுநோக்கி உள்ளங்கலங்கினான். மன்னனது பேரருளையும் மனப்பண்மையும் கண்டு மைந்தன் அஞ்சி நடுங்கி அதனை விரைந்தெடுத்துச் சென்று முன் இருந்த வாவியில் விடுத்தான். சிறு துயருற்ற ஒரு பறவைக்காகப் பெருந் துயரெய்திய தந்தையின் பண்பையே பின் தானுங் கொண்டான். பிறவுயிரையும் தன்னுயிர்போலக் கருதிப் போற்றலே ஒருவன் அறிவுக்குப் பயன் என்பதை உலகம் பலவுமா தேவன் பால் உணர்ந்து மகிழ்ந்தது. (மிதிலைச் சிந்தாமணியில் காண்க.)

பிறவுயிர்களையும் தன் உயிர்போல் கருதிப் பேணாவிடத்து ஒருவனது அறிவால் பயனில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---



316. பற்றியகை அன்னம் படுதுயர்கண் டேனுடனே
கொற்றநளன் விட்டான் குமரேசா—எற்றேனும்
இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல் (சு)

குமரேசா! தன் கையிற் சிக்கிய அன்னம் அடைந்த இன்னலைக் கண்டு இரங்கி ஏன் நளன் அதனை விடுத்தான் எனின், இன்னா என தான் உணர்ந்தவற்றை பிறன்கட் செயல் துன்னாமை, வேண்டும் எனக. துன்னல்—நெருங்கல்.
பிறன்கண் செயல்—பிறனிடத்துச் செய்தலை.

துன்னாமை வேண்டும்—பொருந்தாமை வேண்டும்.

துன்பமென்று தான்உணர்ந்தவற்றைப் பிறனிடத்து ஒருவன் செய்யலாகாதெனபதாம்.

மேல், பிறவுயிரையும் தன் உயிர்போல் பேணி ஒழுகுதலே ஒருவன் அறிவுக்குப் பயன் என்றார்; இதில், துன்பமானவை என்று உணர்ந்தவற்றை எவரிடமும் அவன் செய்யலாகாதென்றார்.

தாம் துன்பமென்று உணர்ந்ததை அறிவுடையார் பிறரிடஞ் செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இது நளன்பால் உணரப்படும்.

## கதை.

நளன் ஒருநாள் மாலையில் தனது அழகிய பூஞ்சோலையில் புகுந்து உலாவினான். அங்குள்ள விரும்பிய வளங்கள் பலவுங்கண்டு முடிவில் அதனிடையே அமைந்திருந்த பலாத் தடத்தை யணுகினான். பொன்னிறமுள்ள தெய்வ அன்னம் ஒன்று தழைவுறு சிறகால் தன் தலையினை மறைத்து உடல் வளைந்து ஒரு கால் ஊன்றி செந்தாமரை மலரொன்றில் நின்று தூங்கிற்று. அந்த அரச அன்னத்தின் எழிலையும், நலத்தையும், வியந்து பதுங்கிச் சென்று அரசன், தன் கையாற் பற்றினான். கைப்படு சிறை அன்



னம் கலங்கி வெருவிப் புலம்பித் துடித்தது. அது துன்புறுவதைக் கண்டு மன்னன் துன்புற்று என்ன தீமை செய்தேன் என்று தன்னை நொந்தான். தெய்வ அன்னம் ஆதலால் அதனை நோக்கி இன்னுரை சில புகன்று நன்னயஞ் செய்து எங்கும் ஏகென இசைந்து விடுத்தான். இன்னா எனத் தான் உணர்ந்தபின் அறிவோர் அதனைப் பிறர்மாட்டுச் செய்யார் என்பதை உலகம் நளன்பால் உணர்ந்தது. விரிவை நைடதத்தில் காண்க.

கைப்படு சிறையன்ன கலங்கி வாய்வெரீஇ
துப்புறழ் தோலடி துடிப்பத் துன்புற

றெய்ப்பொடு சிறையடித்தேக லாமையின்
மைப்புய லனையகை மலிறக் கொத்திறால். (1)
அளிக்கொரு கடலனை அத்தனைக்கண்டுகண்
துளித்திடு தண்புனற் றுவலை விழத்தவிற
றளிர்த்ததென சிறையனாந் தளாவு நீங்கியுட
களித்தது காவலன் கருணை நோக்கியே. (2)

ஆகுலத் துடனமட வனத்தை நோக்கி நின
சேகுறு பொனனிறச் சிறகா நோக்குறும
மோகமே பிடித்தனன முழுதும நோக்கினன
ஏகுதி யேகென இறை விடுத்தனன. (3)
(அனனத்தைக் கண்ணுற்ற படலம்.)

இவற்றுல மேற்குறித்த உணமை இனிதுதெளிவாதல் காண்க.

உணர்வுடையார் பிறவுயிர்கட்குத் துயர் வினை செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

317. தக்தும் உயிரென்றேன் ஈாணிக் குசேலர்முன்
குாதி கடந்தார் குமரேசா—முாதும
எனைத்தானும எஞ்ஞான்றும யார்க்கு மனத்தானும்
மாணு செய்யாமை தலை. (எ)



இ—ள்.

குமரேசா! சிற்றுயிர்களுக்கும் சிறிதும் வருந்தாவகை தெரிந்து என் குசேலர் முன் சென்றார் எனின், எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும மனத்தான் ஆம் மாணு செய்யாமை

என்க.

மாணு என்றது மாண்பு இல்லாதன என்று அறவோர் விலக்கியுள்ள இழி செயல்களை. எனைத்தானும் — சிறிதாயினும்.

மனத்தான் ஆம் மாணு — மனம் அறிந்த துன்பங்களை,

மனத்தானும் என்று பாடங்கொண்டால் பிறர்க்குத் துன்பமான செயல்களை நெஞ்சினாலும் நினைக்கலாகாது என்று கொள்க.

எக்காலத்தும் யாவர்க்கும் சிறிதேனும் துன்பமான செயல்களை மனமாரச் செய்யாமையே ஒருவனுக்கு தலையான அறம் என்பதாம்.

செல்வம் அதிகாரம் முதலிய நலன்களை யெய்தித் தன் செல்வாக்குச் செல்ல வல்ல காலத்தும் என்பார் "எஞ்ஞான்றும்" என்றார். யார்க்கும் என்றது எளியவர் மெலியவர் முதலிய யாவர்க்கும் என்பது கருதி.

ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவருக்கும் எவ்வகையானும் துன்பமான செயல்களை ஒரு சிறிதும் ஒருவன் செய்யலாகாதென்பது கருத்து. இவ்வுண்மை குசேலர்பால் காணப்படும்.

குசேலர் கண்ணனைக் காணக் கருதி துவாரகையின் இராச வீதியில் செல்லுங்காலத்தில் இரு புறங்களிலும் வரிசையாக வைத்திருந்த குளிர்ந்த மரங்களின் நிழலில் செல்லாமல் வெளியிடையே சென்றார். நிழல்வழி நடந்தால் வெயிலுக்கு ஒதுங்கி அங்கு அடைந்திருக்கும் ஊர்வனவாகிய சிற்றுயிர்கள் துன்புறுமே என்று இரங்கித் தன் மேனி மேல் வெயிற்பட வெம்பியும்

79



உயிர்களைப் பேணினார். வெயிலின் கொடுமையை ஆற்றாது இரு கரங்களையும் விரித்துத் தம் தலை மீது கவித்துக்கொண்டு [illegible] நடந்தார். எனைத்தானும் மனத்தானும் இன்னா அறிவோர்

எவ்வுயிர்க்கும் செய்யார் என்பதை உலகம் இவர்பால உணர்ந்தது.

முன்னும் பார்க்கும் முதிரொலி தோன்றலால்
பின்னும பார்க்கும் பெருநிலத் தூருயிர
உன்னும் பார்க்கும் உறுவர் குழாமெலாம்
இன்னும் பார்க்க எழுநிடும் சீர்த்தியான். (1)

சீதகீழற் செலிற் சிற்றுயிர்த் தொகை
போதச் சாய்புமென் றெணணிய புத்தியான்
ஆதவந் தவழ் ஆறு நடந்திடும்
காத லன்னை விரிதநுக் கவிநதரோ. (2)

இவற்றால் மேற குறித்த வுண்மை இனிது தெளிவாதல்

இன்னாத செயல்களைச் சிறிதும் யார்மாட்டும் செய்யாமையே
பேரறம் என்பது இதனால் கூறப்பட்டது.

318. மண்டுதுயர் தானறிந்தும் மாரிதத்தன் என்பிறர்க்குக்
கொண்டுசெய்தான் இவனு குமரேசா—கொண்டுநிறை
தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். (அ)

குமரேசா! துன்பத்தைத் தான் அனுபவித்து அறிந்தும் மாரிதத்தன் என் பிறர்க்கு அதனைச் செய்தான் எனின், தன் உயிர்க்கு இன்னாமை தான அறிவான், மன் உயிர்க்கு இன்னா செயல் என்கொலோ என்க.

என்கொலோ என்றது அறிந்திருந்தும் அறிவிழந்து செய்கின்ற அவனது அறியாமைக்கு இரங்கி என்க.

பிறர் செய்யும் இன்னல்கள் தன் உயிர்க்குத் துன்பமாந் தன்மையை அனுபவித்து அறிகின்றவன் பிறவுயிர்கட்கு அவற்றைச் செய்கல் யாது காரணத்தானோ என்பதாம்: அறியாமையே காரணம என்பது கருத்து.

அறிவிலிகளே பிறவுயிர்கட்குத் துன்பமான செயல்களைச் செய்வார் என்பதும் அறிவுநிறைந்த மக்கள் அவற்றையாண்டுஞ் செய்யார் எனபதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை மாரிதத்தன்பால் உணரப்படும்.

மாரிதத்தன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் மகத நாட்டிலே இராசமாபுரம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். இண்ணிய அரசுரிமையும் நுண்ணிய அறிவில்லாதவன். எவர் எதைச சொல்லினும் அதை நம்பியுழல்வான். இவன், வசந்தகால மொன்றில தன படைகள் புடைசூழ ஓர் அழகிய பூஞ்சோலைக்குட் சென்றான். அங்கே தொங்கிக்கொண்டிருந்த தெனனங்குரும்பை ஒன்று காற்றிலலைப்புண்டு இவன் தலைமேல் விழுந்தது. அதனால் நொந்து துடித்தான். குடிகள் சிலர் வந்து அரசே! இஃது இவ்வனத்தேவதையாகிய தேவி செய்த ஏவல் ஆதலால் அவள் மகிழுமாறு பூசைசெய்யவேண்டுமென்றார். அதற்கு என்செய்வதென்றான். பன்றி, கோழி, முதலியவற்றைக் கொன்று பலியிடுக என்றார். அவ்வாறே செய்தான். அவ்வமயம் அவ்வழியே சென்ற அபயருசி என்னும் முனிவரொருவரைக் கண்டான். அவரையும் கொணர்ந்து நா

பலியிட்டால் தேவி மிக மகிழ்வான் என்று கருதிச் சண்டகருமன் என்னும் ஒரு தண்டத் தலைவனை விடுத்து அவரைக் கொண்டு வரும்படி செய்து காளிமுன் நிறுத்தி வாளினை எடுத்தான். அப் பெரியவர் சிறிதும் கலங்காமல் நின்று புன்னகை செய்தார். வெட்



டத் துணிந்த அரசன் வியந்து முன்வந்தான். என் சிரித்தாய் என்று வினவ நின்றனர். "இளமைப் பருவத்தில உன் கையில் வைத்திருந்த தேங்காயொன்றை விநோதமாக ஒருவன் தலையில் வீழ்த்தினாய். அவ்வினைப்பயனே இன்று உன் தலையில் அது விழும்படி செய்தது. அதற்காக இன்று பலவுயிர்களைக் கொன்றாய். இக் கொலையால் நீ எத்தனை தலைமுறை கொலையுண்டு கெழுவாயோ என்று கருதியும், உன் உயிர்க்கு உற்ற அச்சிறு துன்பத்தை உணர்ந்தும் பிறவுயிர்கட்கு இப்பெருந்துன்பத்தைப் புரிகின்ற உன அறியாமைக்கு இரங்கியும், யான் நகைத்தேன்" என்றார். கேட்டான் அரசன். அஞ்சி நடுங்கி அவர் அடியில் விழுந்தான். அருளுடையனாகி அன்றே துறந்தான். மன்னுயிர்க்கு இன்னாசெயல் மடமையாம் என்பதும் அதனை அறிந்தோர் செய்யார் என்பதும் இவன்பால் உணர நின்றன. விரிவை யசோதரீபத்தில் காண்க.

பிறவுயிர்கட்குத் துன்பஞ்செய்வோர் அறிவிலிகளே யாவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

319. கூடல்சேர் கோவலனைக் கொன்றோன் இராகுலன்பின்
கூடினான் துன்பேன் குமரேசா—நாடிப்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். (௯)

இ.—ள்.

குமரேசா! முன் கோவலனைக் கொல்வித்த காவலனும்

இராகுலனும் பின் ஏன் தாமே கொலையுண்டிறந்தார் எனின், பிறர்க்கு இன்னா முற்பகலிற் செய்யின் தமக்கு இன்னா பிற் பக லில் தாமே வரும் என்க.

முன்பகல், பின்பகல், என்பன ஒரு பகலின் முற்பகுதியை யும் பிற்பகுதியையும் என்க.

பிறர்க்குத் துன்பமானவற்றை ஒருபகலின் முற்பாகத்தில் ஒருவன் செய்வானாயின் தமக்குத் துன்பமானவை பிற்பகலில் அவர் செய்யாவிடினும் தாமே வரும் என்பதாம்.



செய்த தீவினை செய்தவனையே சென்று சேர்தல் ஒருதலை யாதலால் தாமேவரும் என்றார். பிற்பகல் என்றது விரைவில் வரும் என்பதை உணர்த்துதற்கு என்க.

துன்பமான செயலைப் பிறர்க்கு ஒருவன் செய்யின் அச்செ யல் அவனுக்கே பின்பு துன்பமாய் முடியும் என்பது இதினுணர் த்தப்பட்டது. இவ்வுண்மை நெடுஞ்செழியன் கண்ணும் இராகு லன்பாலும் உணரப்படும்.

## கதை 1.

நெடுஞ்செழியன் ஆராயாமல் கோவலனை முன்பு கொல் லும்படி செய்தான். அதனால் பின்பு தானே துன்புற்று மாய்ந் தான். இன்னா, தன்னைச் செய்தானையே சென்று பற்றித் துன்பு றுத்தும் என்பதை உலகம் இவன்பால் நன்குணர்ந்தது.

கோப்பெருந் தேவி கொடுவினை யாட்டியேன்
யாவுந் தெரியா இயல்பினே னாயினும்
முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகற் காண்குறூஉம் பெற்றிகாண். —சிலப்பதிகாரம்.

மன்னன் தேவியை நோக்கிக் கண்ணகி கூறிய இவ்வுண்மை

மொழிகளால் மேற்கூறித்த உண்மை தெளிவாதல் உணர்க.

## கதை 2.

இராகுலன் என்பவன் காந்தார நாட்டிலே இடவயம் என்னும் திருநகரிலிருந்து அரசபுரிந்த அத்திபதி என்னும் அரசனுடைய புதல்வன். தாய் பெயர் சீலபதி. இவன், அறிவிலும், ஆண்மையிலுஞ் சிறந்து பருவமெய்தினான். இலக்குமி என்னும் ஓர் உத்தமியை மணந்து இன்பந்துய்த்து இனிது வாழுங்கால் பிரமதருமர் என்னும் முனிவரொருவருக்கு அமுதருத்த விரும்பி விழுமிய வுணவுகளை விரைவில் ஆக்குக என்று சாகன் என்னும் மடைத்தொழில் வல்லானுக்கு முதனாள் ஆணைதந்தான். மறு



நாள் அவன் சிறிது தாமதமாகிவந்து அட்டில்புகுந்து அடுதொழில் முயலுறான். முனிவருக்கு வேண்டிய இனிய உணவுகளை இன்னும் ஆக்கவில்லையா! என்று இராகுலன் முனிந்தான். அச்சத்தால் அவன் அடிதடுமாறி அங்கிருந்த கலங்கள் ஒலிபட விழுந்தான். விழுந்ததைக்கண்டும் இரங்காமல் தனது வாளால் அவனது தோளும் தலையும் துணிபட வெட்டினான். இவனும் பாம்பொன்று கடிக்கப் பின்பு பதைத்து மாய்ந்தான். தான் செய்திருந்த நல்வினைப்பயனால் கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்து பெரியவனாகிச் சிறந்து விளங்கிவருங்கால காஞ்சனன் என்னும் வித்தியாதரன் ஒருவன் தன் மனைவியை விரும்பினான் என்று மாறுபட மதித்து இவனது தோளும் தலையும் துணிபடத் தன் வாள்கொண்டு வெட்டினான். இவனும் அடிபட்டுயிர் துறந்தான். முன்பு தன் பணியாளனைத் தான் கொன்றபடியே பின்பு தான் கொலையுண்டிறந்தான். பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா பிற்பகல் தாமேவரு மென்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. இதன் விரிவை மணிமேகலையில் காண்க.

பிறர்க்கின்னா செய்தலிற் பேதைமை யில்லை
பிறர்க்கின்னா தென்றாற் பேரிட்டு — தமக்கின்னா
வித்தி விளைத்து வினைவிளைப்பக் காண்டலிற்
பித்தும் உளவோ பிற. (அறநெறிச்சாரம்.)

அல்லித்தாள் அற்றபோதும் அறாதநூ லதனைப் போலத்
தொல்லைக்கண் உடம்புநீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப் புக்குப் பின்னின்
றெல்லையில் துன்பவெந்தீச் சுட்டெரித் திடுங்க ளென்றே.
மணி.)

ஒருவன் பிறர்க்குத் துன்பஞ்செய்யின் தனக்கே பின்பு அது துன்பமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---



320. வண்டுகட்கு நோய்செய்த மாண்டவியர் பின்கொடுநோய்
கொண்டுநொந்தார் என்னே குமரேசா — மண்டி ப்
நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். (௰)

இ—ள்.

குமரேசா! வண்டுகட்கு முன் நோயினைச் செய்த மாண்டவியர் பின் தாம் கொடுநோய் கொண்டு ஏன நொந்தார் எனின், நோய் எல்லாம் நோயினைச் செய்தார் மேலவாம் ஆதலால் நோயின்மை வேண்டுபவர் நோயினைச் செய்யார் என்க.

நோய் எல்லாம் — துன்பங்களெல்லாம்.

நோய் செய்தார் மேலவாம்—பிறர்க்கு உயிர்க்குத் துன்பங்களைச் செய்தார்கண்ணே சேர்வனவாம்.

துன்பங்களெல்லாம் பிறவுயிர்கட்குத் துன்பங்களைச் செய்தார்கண்ணே சேர்வனவாகும்; ஆதலால் துன்பமின்மையை விரும்புகின்றவர் பிறர்க்கு உயிர்க்குத் துன்பத்தைச் செய்யார் என்பதாம்.

தம் உயிர்க்கு இன்பத்தை விரும்புகின்றவன் பிறவுயிர்க்குத் துன்பத்தைச் செய்யலாகாது என்பது குறிப்பு.

முற்பகலில், பிறர்க்கு ஒருவன் துன்பம் செய்யின், பிற்பகலில் அஃது அவனுக்கே துன்பமாய் வரும் என்று மேலே கூறினார்; இதில், அவ் வுண்மையை உணர்ந்து தனக்குத் துன்பமின்மையை வேண்டுகின்றவன் எவ்வுயிரிடத்தும் அதனைச் செய்யாதிருக்கவேண்டுமென்று உணர்த்தினார்.

நோய் செய்தவரே நோயினை அடைவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாண்டவியர்பால் உணரப்படும்.

## கதை.

மாண்டவியர் என்பவர் மறையவர் மரபினர். இவரது காலம் இற்றைக்கு ஐயாயிரம் வருடங்கட்கு முன்னராகும். இவர், இள



மைப் பருவத்தில் அளவில்லாத அல்லல்களைப் பிறவுயிர்கட்குச் செய்தார். மீன் தவளை முதலிய சில நீர்வாழினங்களையும் வண்டு தும்பி முதலிய சில புன்சிறு பறவைகளையும் பிடித்துக் கூரிய முட்களை அவற்றின் உடல்களிற் புகுத்தி அவை துடிப்பதைக்கண்டு இவர் நகைத்துக் களிப்பர். பருவமுற்றின பலகலை தேர்ந்து நல்லவரானார். இல்லறம் துறந்து துறவறம் புகுந்தார். தனியிடமொன்றில் இனிதமர்ந்தார். பொறிகளை யடக்கி இறையருள் நாடினார். இவர் இவ்வகை யிருக்கையில் சாளுவ தேசத்து அரசனது மாளிகையில் கள்ளர் சிலர் புகுந்து கொள்ளை செய்து மீண்டு இவரிருக்கும் பாழ் மண்டபத்தை யடைந்து கிடைத்த பொருள்

களைப் பங்கு செய்துகொண்டிருந்தார். உடனே அவ்வரசனுடைய போர்வீரர்கள் பின்தொடர்ந்து குறித்த இடத்தை அடைந்தார். கள்வர் அங்கிருந்த புதரொன்றிற் புகுந்து மறைந்தார். வந்த வீரர்கள் அங்குக் கண்மூடி யோகத்திலிருந்த இவரைக்கண்டு பக்கத்தில் சிதறிக்கிடந்த அணிகளையும், மணிகளையுந் தெரிந்து இவரைக் கள்வர் தலைவனென்றே கருதிப் பிடித்துத் தம காவலன்பால் காட்டினர். காவலன் சினந்து இவரைக் கழுவில் ஏற்றும்படி கட்டளையிட்டான். உடனே ஏற்றினர். முனிவர் கதறித் துடித்தார். உதிரம் சிதறித் துளித்தது. வழுவில்லாத முனிவரைக் கழுவில் ஏற்றுதற்குக் காரணம் யாதென்று தேவர் சிலர் காலனை வினவினர். இளமைப் பருவத்தில் வண்டினுடல்களில் முட்களை யேற்றினமையே காரணமென்று காலன் கூறினன். அவ்வுண்மையைத் தம மெய்யுணர்வால் முனிவரும் உணர்ந்தார். அறியாப்பருவத்தில் அறிவில் உயிர்கட்குச் சிறுநோய் செய்த அப்பெரியாரும் பின் பெருநோயுற்றார் நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் என்பதை அறிஞர் சிலர் இவர்பாலுணர்ந்து பிறவுயிர்கட்கு நோய் செய்யாதொழுகினர். அதனால் பின் நோயிலராய் உயர்ந்தார். (இதன் விரிவை மாண்டவியத்தில் காண்க.)

தனக்குத் துன்பமின்மையை விரும்புகின்றவன் பிறர்க்குத் துன்பஞ் செய்யலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---



(இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.)

எதுவரினும் பிறர்க்கு இன்னாதவற்றைப் பெரியோர் செய்யார். சினந்து ஒருவன் தமக்குத் துன்பஞ் செய்யினும் மாறி அவன்பால் அதனை உயர்ந்தோர் செய்யார். காரணமின்றித் தன

அதத் துன்பஞ் செய்தவனிடத்தும் தான் அதனைச் செய்யாமையே ஒருவனுக்கு நன்மையாம். தனக்கு இன்னாதன செய்தார்க்கு ஒருவன் இனியவானவை செய்துவிடின் அதுவே அவர்க்குத் தண்டனையாம். பிறர்க்கின்னா செய்யத் தன் நோயபோற் போற்றாதவே [illegible] றிவன் [illegible] கருப பயனும். தான் துன்பம் என்று உணர்ந்தவை [illegible] யாண்டும் செய்யலாகாது. எவரும் எவர்க்கும் சிறிதளவும் துன்பஞ்செய்யாது ஒழுகுதலே ஒருவனுக்குத் தலையாய அறமாம். தனக்குத் துன்பமென்று உணர்ந்தவைதான் வைப் பிறவுயிர்க்குச் செய்பவன் உணர்வில்லாதவனே யாவன். முற்பகலில் பிறருக்கு ஒருவன் துன்பம் செய்யின், பிற்பகலில் அத்துன்பம் அவனுக்கே வரும். துன்பங்களெல்லாம் தம்மைச் செய்தாரைக் கண்டே வினை சேர்வனவாகும். தனக்குத் துன்பமின்மையை விரும்புகின்றவன் பிறர்க்கு அதனைச் செய்யலாகாது என்பதாம்.

32-வது இன்னா செய்யாமை முற்றிற்று.

## ௩௩-ம் அதிகாரம் கொல்லாமை.

அஃதாவது யாதோர் உயிரையும் எவ்வகையானும் கொல்லுதலைச் செய்யாமை. முனிவின்றி யாவர்மாட்டும் இனியவை புரிந்து புனிதமெய்தியவர்க்கே கொல்லாமை என்னும் இந்நல்லறத்தைக் கொண்டொழுக வலிமையுமாதலால் வெகுளாமை இன்னா செய்யாமைகளின் பின் இது வைக்கப்பட்டது.

321. கொன்றிழிந்த வேடன்பின் கொல்லாமையானுயர்ந்தேன்
குன்றுஇன் புற்றன் குமரேசா—என்றும

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். (௩)

80



குமரேசா! கொல்லுதலைச் செய்து இழிந்து நின்ற வேடன் பின் கொல்லாமையால் என உயர்ந்து இவ்வுயர்வுற்றான் எனின்? அறவினை யாது எனின் கொல்லாமை; கோறல், பிறவினை யெல்லாம் தரும் என்க. பிறவினை என்றது—பாவச் செயலை.

கோறல் பிறவினை எல்லாம் தரும்—கொல்லுதல் பாவச்செயல்கள் எல்லாவற்றையும் கொடுக்கும்.

கொல்லாமையே அறச்செயல்; கொல்லுதல் பாவச்செயல்கள் எல்லாவற்றையும் கொடுக்கும் என்பதாம்.

கொல்லாமை ஒன்றனால் எல்லா அறங்களின் பயனையும் ஒருவன் கொள்ளலாம் என்பதும், எல்லாப் பாவங்களின் பயனையும் கொல்லுதல் ஒன்றே கொடுத்துவிடும் என்பதும் கூறியபடி.

அறம் பாவங்களிவையென தேவர் அருளிய அருமையை இதில் ஆய்ந்து உணர்க. எல்லா அறங்களின் பயனையும் ஒருவன் ஒருங்கே கொள்ளவேண்டுமாயின் கொல்லாமை என்னும் விரதத்தை அவன் கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

கொல்லுதல் என்னும் புன்மையை விடுத்துக் கொல்லாமை என்னும் நன்மையை ஒருவன் கொள்வானாயின் எல்லா நலங்களையும் அவன் எளிதிலெய்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விபுலனால் உணரப்படும்.

## கதை.

விபுலன் என்பவன் ஓர் வேடுவர் மரபினன். இமயமலையை அடுத்திருந்த உமைய கானனும் வனத்திலிருந்தவன். கொல்லுதல் என்னும் புல்லிய செயலையே கொண்டு உயிர் வாழ்ந்தான்.

பல் உயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை என்க.

பகுத்து உண்டு—உண்பதனைப் பசித்த உயிர்கட்குப் பகுத்துக்கொடுத்து உண்டு. வினைக்கேற்ற செயப்படுபொருள் இதில் வருவிக்கப்பட்டது. பல் உயிர் ஓம்புதல்—பல உயிர்களையும்



பேணல். ஊர்வன நீர்வாழ்வன முதலிய எல்லா வுயிர்களையும் என்பார் பல் உயிர் என்றார். இதில் முற்றும்மை தொக்கது.

எல்லாம் தலை—எல்லாவற்றினும் சிறந்தது.

உண்டு ஓம்புதல் எல்லாவற்றுள்ளும் தலை என்று கொண்டு காண்க. பகுத்துக் கொடுக்கவும் பசித்து ஒப்பவும் தான் உருந்து வாழவேண்டுமாதலால் அறத்திற்கெல்லாம் முதன்மையான உண்டி என்பது உற்று நின்றது. ஓம்புதல் இங்ஙனம் அவன் வாழ்தல் நன்று என்பது குறிப்பு.

தமக்குக் கிடைத்த உணவைப் பசித்தவர்க்குப் பகுத்துக் கொடுத்து எஞ்சியதை உண்டு பல உயிர்களையும் பாதுகாத்தல் நூலோர் திரட்டிய அறங்களெல்லாவற்றிலும் தலையாய அறம் எனபதாம்.

பசித்த மக்கட்குத் தம் உணவைப் பகுந்தூட்டிப் பல் உயிர்களையும் பரிந்து பேணுவோரே சிறந்த அறமுடையவராய் உயர்ந்து விளங்குவரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நல்லியக்கோடனிடமும் சத்தப்பிரகதன்பாலும் உணரப்படும்.

இது, நல்லியக் கோடனை யாழ்கிளர் பரிசில் பெற்றுமீண்ட பாணனொருவன் மற்றொருவனை நோக்கிக் கூறியதாக அவன் பகுத்துண்டு உயிரோம்பிய திறம் இதனால் பகுத்துணரப்படும்.

## கதை 2.

சதுர்ப்பிரத்தன் என்பவன் ஓர் உத்தம உணர்வினன். சிலர் வேதியன் என்பர். சிலர் இவனை அரசமரபினன் என்பர். சுமதி என்னும் மனைவியோடுகூடித் தனியிடமொன்றில் இனிதுற வாழ்ந்தான். மிகவும் வறியவன். சுகேசன் என்று இவனுக்கு ஒரு குமாரனிருந்தான். அவனும் பருவமெய்திக்கமலை என்னும் ஒரு கன்னியை மணந்தான். தனது உரிமை மனைவியையும் இனிய மகனையும் அருமை மருகியையும் இவனே ஆதரித்து வந்தான். பொருள்பெறு முயற்சியில் புகாமல் அருளையே நாடி நின்றான். அதனால் மிகவும் வறியவனானான். ஆயினும் செம்மையில் வழுவாது நன்மையில் நின்று பல்லுயிரோம்பி இயன்ற அளவில் இல்லறம் புரிந்தான். அரிதின் முயன்று வந்து



ஆங்கே வாணவைக் காக்கை முதலிய பறவைகளுக்கெல்லாம் ஊட்டியபின்பே இவன் உண்டு மகிழ்வான். ஓரறிவுயிர்க்கும் இவன் ஓர் ஊறுசெய்தறியான். பிறவுயிர்கள் வருந்தக்கண்டால் இவன் உள்ளம்பதைத்துக் கண்ணீர் உகுப்பான். பஞ்சகாலமொன்றில் இவன், ஐந்துநாட் பட்டினி கிடந்தான். ஆறாவதுநாள் மாலையில் அரிதாய்க் கிடைக்கப்பெற்ற அரிசிமாவைப் பக்குவஞ்செய்து நான்கு பிண்டங்களாக்கி மனைவி முதல் மூவருக்கும் கொடுத்துத் தானும் உண்ண முயன்றான். இவனது மனநிலையை உணர விரும்பி

தருப்பேகலைதை ஒர் அதிதிபோல வந்து அருகில் நின்றது. தான் உணவை யெடுத்தனை அதற்கு உவந்து கொடுத்தான். அதுகொண்டு உண்டு பின் சாறுகென்றது. மனைவியும் தன்னதை மாறாது கொடுத்தாள். அதுவும் போதாதெனறது. மகனும், மருகியும் உரியதை முறை முறை கொடுத்தார். அவைத்தையும் உண்டு இவரது அருட்குணங்களை வியந்து அவ்வறக் கடவுளும் அகமகிழ்ந்து அகன்றது. இவ்வனைவரும் அன்றே ஆருயிர் துறந்தார் பின் பிறவா இன்பம் பெற்று மகிழ்ந்தார். பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலே அறங்களெல்லாவற்றுள்ளும் சிறந்ததென்பதை உலகம் இவர் பாலுணர்ந்து தெளிந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே. மணிமேகலை

உயிர்களைப் பேணுதலே தலையாய அறமென்பது இதனால் கூறப்பட்டது.

323. கண்ட பசுவொன்றைக் காப்பாற்ற ஆமகனும்
கொண்டான்பொய் என்னே குமரேசா—கண்டறிந்தால்
ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. (ங)

33-ம் அதிகாரம் கொல்லாமை. 641

குமரேசா! பசு ஒன்றைக் கொலையுறாமல் காத்தற்பொருட்டு ஆபுத்திரனும் ஏன பொய்யைப் பொருந்தினன் எனின், ஒன்றாக நல்லது கொல்லாமை; பொய்யாமை மற்று அதன் பின்சார நன்று என்க. ஒன்றாக—முதலவையாக. அதன் பின்சார—அக்கொல்லாமையின் பின் நிற்க.

எல்லா அறங்களினுஞ் சிறந்த முதன்மையாய் இருத்தற்கு உரியது கொல்லாமையே என்பதும் அதனை அடுத்து நிற்றற்குரியது வாய்மையே என்பதும் கூறுவார் கொல்லாமை ஒன்றாக நல்லது; பொய்யாமை அதனைச்சார நன்று; என்று கூறினர். இங்ஙனங் குறித்து கூறியது அவ்விரண்டறங்களின் இயல்பு நோக்கியென்க.

கொல்லாமையே முதன்மையாக நல்லது; பொய்யாமை அதன் பின்னாக நன்றாமென்பதாம்.

கொல்லாமையை முதலாவதாகவும் பொய்யாமையை இரண்டாவதாகவும் அறங்கள் கொண்டுள்ளன என்பது குறிப்பு. மக்களுள் அரசனும் அமைச்சனும்போல, அறங்களுள் கொல்லாமையும் வாய்மையும் சிறந்தன என்க.

பொய்யாமை யுடையவன் வேறோர் அறமும் செய்யவே வேண்டாம் என்றும், அஃதொன்றே அறப்பயன் யாவும் ஒருங்கே உதவுமென்றும், யாம் மெய்யாக் கண்டவற்றுள் வாய்மைபோல நல்லது வேறு இல்லை என்றும், மேலே அருளி இதில் எல்லா அறங்களினும் கொல்லாமையே நல்லது என்று கூறலை யுணர்வின், பிறிதோருயிர்க்கு நன்மை பயக்கும் வழி பொய்யாயிருப்பினும் மெய்யாயும், நன்மை பயவாவழி மெய்யாயினும் பொய்யே யாகியும் இதனை நோக்கி அது திரிந்து நிற்றலால் இதன்பின் சார்ந்து நிற்கவே அது நன்றாம் என்றது அமையுமென்க. அறங்கள் பலவினும் வாய்மையே சிறந்தது, அதனினும் கொல்லாமை உயர்ந்தது என்ற அடிகள் அருண்மாண்பை இதில் ஆய்ந்துணர்க.



கொல்லாமை ஒன்றையே அறிவுடையார் தலைமையாகக்கொள்ளுவரென்பதும், அதனைக் காக்கும்பொருட்டு பொய்யாமை முதலிய உயரறங்களையும் நெகிழவிடுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ் உண்மை ஆபுத்திரன்பால் உணரலாகும்.

## கதை.

ஆபுத்திரன் தன் தாயை பிறந்தபின் பாண்டி நாட்டிலுள்ள வயனங்கோடு என்னும் ஊரிலிருந்த பூதி என்னும் அந்தணன் பேணியிருந்து வளர்ந்துவந்தான். அறிவு நிறைந்த உள்ளத்தனாகிய இவன் ஒருநாள் தெருவிடைச் செல்லுங்கால் அங்கோர் மறையவன் வீட்டில் வேள்வியில் கொல்லும்பொருட்டு மாலைசூட்டிக் கொணர்ந்து வைத்திருக்கும் ஆவினைக் கண்டான். கொலைநவில் வேட்டுவர் கொடுமரம் அஞ்சி, வலையிடைப்பட்ட மானை போன்று, அஞ்சிநின்று அழைக்கும் அதன் அருந்துயர் தெரிந்து, நெஞ்சு நடுங்கிற்று இவன் நெடுங்கண்ணீருகுத்தான். அந்தணீர்! இந்த ஆவை இன்று கொன்றுவிடுவீரோ' என்று கலங்கி அவ்வாவைக் காப்பாற்றும்பொருட்டுப் பொய்யாக இவனும் போயதாக எண்ணினன். உள்ளங்கரந்து ஆவொடு ஒருபுடையொதுங்கியிருந்து யாவருமறியாதபடி இரவில் அதனைக் கவர்ந்து சென்றான். சிலர் தொடர்ந்து பின்சென்று இவனைப்பிடித்து இப்பொய்படு களவினை நீ ஏன் புகுந்து செய்தாய் என்று கடிந்து மொழிந்து கொடுந்துயர் செய்தார். கொல்லாமையுடைய இவன் அப்பொல்லாதவர்களை நோக்கினன்.

நோவன செய்யன்மின் நோவன கேண்மின்
விடுநில மருங்கிற் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்றம் என்னை
முதுமறை அந்தணிர் முன்னியது உரைமோ?



என்று இன்னுரை பகர்ந்து எல்லா அறங்களினும் கொல்லாமை

யே சிறந்தது என்று உணர்த்தினன். பொய்யாமையினும் கொல்லாமையே முதன்மையானதென்று ஆபுத்திரன் அன்று கொண்டிருந்த திண்மையை அனைவரும் கொண்டாடி மகிழ்ந்தார். (விரிவை மணிமேகலையில் காண்க.)

கொல்லாமையே எல்லா அறங்களினும் தலையானதென்பது கூறப்பட்டது.

324. நாடி மருளசங்கர் நல்லதென்று கொல்லாமை
கூறி நின்றார் என்னே குமரேசா!—தேடியென அறும்
நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி. (ச)

குமரேசா! மருளசங்கரதேவர் கொல்லாமை ஒன்றே நல்லதென்று ஏன் கூடி நின்றார் எனின், நல் ஆறு எனப்படுவது யாது எனின், யாது ஒன்றும் கொல்லாமை சூழும நெறி என்க.

யாதொன்றும்—யாதோருயிரையும். ஓரறிவுயிரையும் என்றபடி. சூழ்தல்—கருதல், வளைதல்.

கொல்லாமை சூழும் நெறி—கொல்லாமையென்னும் நன்மை சூழ்ந்த நெறி. தன்னையுடையானுக்கு நன்மை பயத்தலின் நல் ஆறு என்றார்.

கொல்ாமை என்னும் நலஞ்சூழ்ந்த நெறியே பேரின்ப வீட்டை அடைதற்கு நேரான நல்ல நெறி என்பதாம்.

'கொல்லாமை சூழாத நெறி பொல்லாத நெறியென்று கொள்க. முத்தி நிலத்தைச் சேர்தற்கு நல்ல வழி யாது? என்

பாரை நோக்கி இது கூறியதாகக் காண்க.



644 திருக்குறட் குமரேச வெண்பா.

கொல்லா விரதத்தைக் கொண்டவர்க்கே அழிவில்லாத இன்ப வீடு எளிதில் எய்தும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மருளசங்கரர் பால் உணரப்படும்.

## கதை.

மருளசங்கரர் என்பவர் சிறந்த ஒரு ஞான யோகி. பேரருளுடையவர் ஓரறிவுடைய கொடி செடிகளுக்கும் இவர், கொடுமை செய்தறியார். செற்றம் நீங்கிய பற்றறு பண்பினர். கனி காய் கிழங்கு முதலியவற்றை எவரேனும் கொணர்ந்து உண்ணும்படி கொடுப்பின் அவற்றின் உருவமும் அழகும் சிதையுமே என்று இரங்கி அவற்றை உண்ணாது விடுவர். வசவ தேவரது திருமனையில் சிவனடியவர் உண்டு மிகுந்த எச்சில் இலைகளை யிடுகின்ற குழியின் கண் அமர்ந்திருந்து பசி வந்தபோது அதிலுள்ள எச்சிலுணவைச் சிறிதுண்டு பெரிது உவந்திருப்பர். முத்தரான இவர் ஒன்றுமறியாப் பித்தர்போல் இருப்பதை அல்லம தேவரறிந்து கொல்லா நலத்தை இவர் கொண்டிருக்கு மாண்பை எல்லாருக்கும் உணர்த்தினர் அல்லல் யாதுமின்றி இவர் அழிவில் வீட்டையடைந்தார். கொல்லாமை சூழும் நெறியே வீட்டினை அடைதற்கு நல்லாறென்பதை இவர் உலகினுக்கு உணர்த்தினர். விரிவைப் பிரபுலிங்க லீலையில் காண்க.

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லவர் மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே. (தாயுமானவர்)

கொல்லாமையே வீட்டினை அடைதற்கு நல்ல நெறி என்பது இதனால் கூறப்பட்டது.

325. பண்டு துறந்தார் பலருள்ளும் புத்தரேன்
கொண்டார் உயர்வைக் குமரேசா—கொண்ட
நிலையஞ்சி நீத்தாருள் எல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.



குமரேசா! துறந்தார்பல ருள்ளும் புத்தர்மட்டும் சிறந்து நின்றார் எனின், நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம், கொலை அஞ்சிக் கொல்லாமை சூழ்வான் தலை யென்க. சூழ்தல்—எண்ணுதல், மறவாது குறிக்கொள்ளுதலை இங்கு அது குறித்து நின்றது.

பிணி, மூப்பு, இறப்பு முதலிய துன்பங்களெல்லாம் பிறப்பின் கண்ணே அணி அணியாக அமைந்துள்ளன என்று அதன் நிலைமை அறிந்து அஞ்சுதலே துறந்து அடங்குதற்கு ஏதுவாகுமாதலால் அம் முறை கருதி நிலை அஞ்சி நீத்தார் என்றார்.

கொல்லாமை சூழ்வான் தலை—கொல்லாமை என்னும் விரதத்தைக் கொள்வோனே உயர்ந்தவன்.

பிறப்பின் நிலைமையை அஞ்சித் துறந்தவர் எல்லாருள்ளும் கொலையின் தீமையை அஞ்சிக் கொல்லாமையாகிய நன்மையைக் கொண்டவனே உயர்ந்தவன் என்பதாம்.

அஞ்சுதல் நீத்தலுக்கும், கொலை அஞ்சுதல் கொல்லாமைக்கும் காரணமாதல் காண்க. சூழ்வான் என்றார் கருதினும் பெருமையாம் என்று கருதி.

கொல்லா விரதமுடையவன் இல்லறத்திருப்பினும், துறந்தார் எல்லாரினும் அவன் சிறந்தவன் எனினும் அமையும்.

உலகைத் துறந்தவரெவரினும் கொலையைத் துறந்தவன் சிறந்தவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பு

பால் உணரப்படும்.

## கதை.

அருள் வள்ளலாகிய புத்தர், அரசைத் துறந்து சிறந்த ஞானியாய் அருந் தவம் புரிந்து வேணுவனம் என்னும் தனியிடமொன்றில் இனிது அமர்ந்திருந்தார். அங்கிருந்த துறவிகளெல்லாரும் இவரது குண நலங்களையும் கொல்லாமையையும் தெ



ளிந்து அடி தொழுது அன்பு செய்தார். பின்பு அடியவராயினர். அருள்நிறைந்த இவரது இனிய மொழிகளால் ஒருநாள் தொள்ளாயிரம பேர் துறவிகளாயினர். பல்வேறிடங்கட்குஞ் சென்று கொல்லா நலத்தையே கொள்ளும்படி எல்லாருக்குஞ் சொல்லினர். அனைவரும் இவர் சொல் வழி ஒழுகினர். கொல்லாமை என்னும் நல்லறம் உலக முழுவதும் மிகவும் பரவியது இவரால் என்னலாம். பல்லாயிரம் துறவிகள் புடைசூழ விளங்கி இரணியவதி என்னும் ஆற்றின் கரையில் எண்பதாவது வயதில் தமது அழகிய திருவுடம்பைத் துறந்து அழிவிலின்பத்தை அடைந்தார். அக்காலத்தில் அந்தக் குழுமியிருந்த சீத்தாரனைவரும் நெஞ்சங் கலங்கி அவரது பிரிவை ஆற்றாது அலறி அழுதார்.

மருளறுத்த பெரும்போதி மாதவனைக் கண்டிலமால்
என் செய்கேம் யாம்
அருளிருந்த திருமொழியால் அறவழக்கங் கேட்டிலமால்
என் செய்கேம் யாம்.
பொருளறிந்த அருந்தவத்துப் புரவலனைக் கண்டிலமால்
என் செய்கேம் யாம்
தெருளிருந்த கொல்லாத திருவினையாம் தெரிந்திலமால்
என் செய்கேம் யாம்.

என்று எல்லாரும் புலம்பித் தவித்தார். இவரது திருவுடம்பை எரித்தபின் என்பையும் சாம்பரையும் தனித் தனி எடுத்துச் சென்று பொதிந்துவைத்து ஆலயம்புனைந்து வழிபாடுசெய்தனர். கொல்லாமை சூழ்வான் எல்லாரினும் தலை என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவு சரிதையில் தெளிவாம்.

கொல்லா விரதமுடையவன் எல்லாரினுஞ் சிறந்தவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

33-ம் அதிகாரம் கொல்லாமை. 647

326. கொல்லாத காரையினைக் கூறருள்சேர் நாகனையேன்
கொல்லவில்லை கூற்றம் குமரேசா—நல்லதென்று
கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று. (கூ)

குமரேசா! கொல்லாமையை மேற்கொண்ட காரையின் மேலும், நாகன்மீதும் கூற்றவன் ஏன் செல்லவில்லை எனின், கொல்லாமையே மேற்கொண்டு ஒழுகுவானது வாழ் நாள் மேல் உயிர் உண்ணும் கூற்று, செல்லாது என்க.

மேற்கொண்டு—விரதமாகக் கைக்கொண்டு.

ஒருயிரையும் கொல்லாத போறமுடையான் பின் பிறவா இன்பம் பெறுவனாதலால் அவனது வாழ்நாள் மேல் கூற்றுச் செல்லாதாயிற்று. கொல்லா நலமுடையவர் கூற்றால் கொல்லப்

படார் என்பது குறிப்பு.

கொல்லாமையை விரதமாக மேற்கொண்டு ஒழுகுவானது வாழ்நாள் மேல் உயிர் உண்ணும் கூற்றுச் செல்லாது என்பதாம்.

உயிரை உடம்பிலிருந்து பிரித்துக்கொள்ளும் இயல்பினையுடைய கூற்று அதனை உண்டதாகக் கூறியது அவனது துணிவும் கொடுமையும் தோன்ற என்க. உண்ணுதற்கு உரியதல்லாத உயிரை இங்ஙனம் குறித்தது உபசாரமாகும்.

உண்டற் குரிய வல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே. (தொல்காப்பியம்.)

கொல்லாமை என்னும் நல்லறமுடையவர் எமபய நீங்கி ஈறில் இன்பத்தை எய்துவரென்பது கருத்து. இவ்வுண்மை காரையிடமும், நாகன்பாலும் காணப்படும்.



## கதை 1.

பண்டொரு காலத்தில் மதுரைப்பதிக்குத் தென்பால் அடர்ந்த வனமொன்றிருந்தது. அதில் குளிர்ந்த நீர் நிலை ஒன்று விளங்கியிருந்தது. இரையின்றி மெலிந்த செங்கால் காரையொன்று அங்குவந்து தனியாகத் தங்கியிருந்தது. முனிவர்கள் அப்பொய்கையில் புகுந்து தோய்ந்து எழுங்கால் அங்குள்ள மீன்களுக்கு ஊறு ஒன்றும் செய்யாது அவர்கள் உதவி செய்வதை இக்காரை கண்டது. நல்லறிவு பிறந்து அன்று முதல் யாதொன்றையும் கொல்லலாகாதென்று துணிந்தது. மீனுணவு துறந்து மெலிந்து தளர்ந்தது. ஆயினும் ஒன்றையும் கொல்லாது உணர்வோடிருந்

து பின் மதுரையையடைந்து பொற்றாமரை என்னும் நற்றடம் புகுந்து கொண்ட விரதம் குலையாதிருந்தது. எல்லாம் அறியும் கூடற்பரமன் அதன் கொல்லா நலத்தை வியந்து அழிவில்லாத முத்தியை அதற்கு அருளினர். தன் கொல்லா நலத்தால் கூற்றைக் கடந்து அந் நாரை எய்திய பேற்றைப் புகழ்ந்து அனைவரும் போற்றி மகிழ்ந்தார். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

பிரிவறக் கொன்று தின்னும் கடைப்படும் பிறப்புநாரை
வானுறு தேவாகி வான்தொழ இருப்பக் கண்டீர்
கருதீர் என்றும்பொல்லாக் கடையராயினுங் கொல்லாமல்
அரனைவந் திப்ப ரேல்வான் ஆள்வதற் கையமின்றே.

(பழைய திருவிளையாடல்.)

## கதை 2.

நாகன் என்பவன் தண்டகவனத்திலிருந்த ஒரு வேடுவன். விப்பிரதன் என்றும் இவனுக்கு ஒரு பெயருண்டு. மான், முயல் முதலிய விலங்கினங்களை முதலில் இவன் கொன்று வாழ்ந்தான். ஒருநாள் முற்கல முனிவரைக் கண்டான். அவரையும் கொல்ல வெகுண்டான். அவர், இவனைநோக்கி மக்கட் பிறப்பின் அருமையையும் கொல்லாமையால் எய்தும் நன்மையையும் எளிய நடையில் இனிய மொழிகளால் தெளிய வுணர்த்தினர். அவனு



உணர்ந்தான். அன்றுமுதல் யாதோருயிரையும் கொல்வதில்லையென்று உறுதிகொண்டான் ஓரறிவுடைய கொடி செடிகளுக்கும் ஊறு செய்யாது இவன் ஒடுங்கியிருந்தான். உதிர்ந்த சருகும் தின்னலாகாதென்று உயர்ந்த அருளைக் கொண்டான். இவனது கொல்லா மாண்பை மகிழ்ந்து விநாயகப் பெருமான் தோன்றித்

தம்போல் தெய்வவுருவை இவன் எய்தும்படி திருவருள் செய்து புருசண்டி என்று ஒரு பெயரும் தந்தார். கொல்லாமையை மேற்கொண்டிருந்த இவன் அதன் பயனாக அத் தெய்வ வுருவை எய்தி அப் பெயருடன் சிறந்து விளங்கி என்றுங் குன்றாத இன்பத்தை அடைந்தான் விரிவை முனிவர்சரிதையில் காண்க.

கொல்லாமை மேற்கொண் டொழுகுவார் வாழ்நாள் மேல் உயிருண்ணுங் கூற்றச் செல்லாது என்பதை உலகம் இவ்வேடன் கண்ணும், அக் காரையிடமும், உணர்ந்து மகிழ்ந்தது.

கொன்றமுன் தின்றாகன் கொல்லாமைமேற்கொண்டன்று
நின்றதால் இறவாஇன்பம் நிலைபெறப் பெற்றனம்மா
நன்றறி மக்களிந்த நலமுணர் கிலாயந்தோ
கொன்றபின் கூற்றங்கொல்லக் கும்பிவீழ்ந் தழுந்தலென்னே.

(தனியன்.)

கொல்லாமையுடையவர் கூற்றால் கொல்லப்படார் என்பது இதனால் கூறப்பட்ட

327. நீதிமன்னன் சேயுயிரை நீக்கவஞ்சி வனமைச்சன்
கோதிலுயிர் நீத்தான் குமரேசா—மேதினியில்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (எ)

இ—ள்.

குமரேசா! மனு நீதிகண்ட சோழனுடைய திருமகனது உயிரை நீக்குதற்கு அஞ்சி சத்திய சீலன் ஏன் தன் உயிரை நீக்கி



னான் எனின், தன் உயிரை நீப்பினும், பிறிதோர்இன் உயிரை

நீக்கும் வினையைத் தான் செய்யலாகாதென்க.

தன் உயிர் நீப்பினும்—தன் உயிர் நீங்கினுமாயினும்,

செய்யற்க—செய்யாதொழிக.

தன் உயிர் நீங்கினும் பிறிதோர் இன் உயிரை நீக்கும் வினையை ஒருவன் செய்யலாகாது என்பதாம்.

மேல், கொல்லாமையை ஒருவன் யாண்டும் விரதமாகக்கொள்ளவேண்டுமென்றார் ஆயின், ஊனை விரும்பிக் கொல்லாவிடினும் தன்னைக் கொல்லவந்ததையாவது கொல்லலாகாதா? என்பார்க்கு இது கூறியதென்க. இங்ஙனங் கூறியது தன் பாவங் கழிந்து மறுமை இன்பத்தை அவன் பெறுவன் என்பது கருதி.

ஊனைவேட்டுவந்த ஒருவன் கொல்லா விரதங்கொள்க என்றதை உணர்ந்து அதனை உண்ணவில்லையானால் தன் உயிர் போய்விடுமே! என்று கூற, "உன உயிர் நீங்கினும் பிறிதோர் இன் உயிரை அது நிறை உடம்பிலிருந்து நீ நீக்காதே" என்று அவனை நோக்கி இஃது அருளியதெனினும் அமையும்.

தன் உயிர் போனாலும் அறிவுடையார் பிறிதோருயிரைக் கொல்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியசிலன்பால் உணரப்படும்.

## கதை.

சத்திய சிலன் என்பவன் மனுச் சோழ மன்னனுடைய முதல் அமைச்சன். நிறைந்த அருளும், சிறந்த அறிவும் உடையவன். பசுவின் கன்றைக் கொன்றதால் தன் மகனைக் கொல்லும்படி மன்னன் இவனுக்குக் கட்டளையிட்டான். இவன் அவனது இன் உயிரை நீக்குதற்கு நாணித் தன்உயிரையே நீக்கினன். இவனது கொல்லா மாண்பையும், மனவுறுதியையும், வியந்து அனைவரும் இரங்கினர். இறந்த உயிரை இறைவனருளால் பின் இவன் எய்தப்பெற்றான். தன் உயிர் நீப்பினும் மேலோர் பிறி

அது ஓர் இன் உயிரை நீக்கார் என்பதை இவன் அன்று உணர்த்தி நின்றான். (கிரிலைப் பெரிய புராணத்தில் காண்க.)

என்றும் எவ்வகையானும் பிறிதோருயிரை மேலோர் கொல்லார் என்பது இதனால் கூறப்பட்டது.

328. கொன்றுசெய்யும் வேள்விகொடிதென்றேன் கும்பமுனி
குன்ற வுரைத்தார் குமரேசா—என்றுமே
நன்றாகும் ஆக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கங் கடை. (அ)

இ—ள்.

குமரேசா! கொலைபுரிந்து வேள்விசெய்தல் தீதென்று அகத்தியனார் ஏன் அன்று கூறினார் எனின், நன்று ஆகும் ஆக்கம் பெரிது ஆம் எனினும் சான்றோர்க்குக் கொன்று ஆகும் ஆக்கம் கடை என்க.

செல்வம் உயர்ந்த நலங்களை உளவாக்கும் ஆதலால் அது நன்றாகும் எனனும் அடைபெற்று வந்தது. இனி, நன்மையும் ஆகும் ஆக்கமும் பெரிதாம் எனினும் அமையும்.

கொன்று ஆகும் ஆக்கம் கடை—கொல்வதால் உண்டாகின்ற செல்வம் இழிவானது.

கொன்றாகும் ஆக்கம் என்றது வேள்வியால் எய்தும் செல்வத்தை. அதில் கொலைவினை கலந்திருத்தலால் சான்றோர் அதனை விரும்பார் என்பது கருத்து.

இன்பமிகும் செல்வம் பெரிதாம் எனினும் கொல்வதால்

வரும் செல்வம் மேலோர்க்கு இழிவாம் எனபதாம்.

வேள்வி செய்யின், நன்மையுண்டாகும், ஆக்கமும் பெரி தாம என்றாலும் கொலையுறு வினை என்று அருளுடை அறவோர் அதனைப் புரியார் என்பது கருத்து.

82

652 திருக்குறட் குமரேச வெண்பா.

ஆடு, பசு. குதிரைகளுள் ஒன்றைக் கொன்று அதன் வயிற் றுக்குள் இருக்கும் வபை என்னும் வெள்ளிய நிணம் ஒன்றை எடுத்து ஓமத் தீயில் மடுத்து இந்திரனை நோக்கி மந்திர புரியின் இன்பமாகும் துறக்கச் செல்வம் எய்தலாம் என்று விதித்திருப்பி னும், பிறவுயிர்களையும் தம் உயிர்போல் பேணும் அருளுடையார் அக் கொலை வினையால் எய்தும அவ் ஆக்கத்தை வெறுத்து இகழ் வாராதலால், "சான்றோர்க்குக் கொன்று ஆகும் ஆக்கம் கடை" என்றார். சான்றோர்க்குக் கடை என்றதனால் அதனைத் தலை என்று கொள்வோரின் நிலை காணலமையும்.

தன் உயிர் நீப்பினும், பிறிதோர் இன் உயிர் நீக்கும் வினை செய்யற்க என்று மேற்கூறியதை நோக்கி, வேள்விக்கட் செய்ய லாமென்று விதித்துள்ளதே எனின், அவ்விதி சுறில் இன்பத்தை எய்த விரும்பிய பேறிவாளர்க்கு விலக்காமென்று ஓதில் உணர்த்

எண்பதினாயிரம் வெண் பொற்காசு பெறத்தக்க நன் முத்து ஒன்று இச்சிப்பியில் உள்ளது; இதனைச் சிதைத்து நீ அதனை எடுத்துக்கொள்க என்று சித்தர் ஒருவர் ஒருநாள் புத்தர்பால் கொடுத்தார். அவர், "அந்தோ! இந்தக் கொலை வினையால் அந்தமில் இன்பத்து அழிவில் வீடு எனக்கு வருவதாயினும யான் அதனை வேண்டேன்" என்று அருளுடன் அகன்றார். இப் பெரியாரது கருணைப் பண்பு கண்டு அதுவும் இவ்வமையத்து மிக வும் கருதத்தக்கது. இவ்வமையம் என்றது 1926 மார்ச்சில் இவ் ஊரில் முதலமேட்டை நிகழ்ந்த காலத்தை என்க.

பெருநலந்தருவதாயினும் ஒருயிரைக் கொல்லுந் தீமையை உயர்ந்தோர் கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அகத்தியர்பால் அறியப்படும்.

கதை

முன்னொருகாலத்தில் முனிவரும் பிறரும் குழுமி ஒரு பெருவேள்வி செய்ய விரும்பி ஆடு ஒன்றை அங்குக் கொணர்ந்தார்.



அகத்தியர் கண்டார். ஐயகோ உயிர்க் கொலை தீது என்று மறுத்தார். அசங்கொண்டு அருமகம் புரிக என்று வேதத்தில் கூறியுள்ளதே என்று அவரனைவரும் கூறினர். அசம் என்பது ஆட்டையும் மூன்று ஆண்டின் நெல்லையும் குறிக்கும் இருபொருளொரு சொல். அம்மூவாண்டு நெல்லே வேதத்திலுள்ள அசம் என்னும் சொல்லுக்குப் பொருள். இவ் உண்மையை உணராமல் ஏன் படுகொலை புரிந்து கெடுகின்றீர்கள் என்று பரிந்து உணர்த்தி அவ் ஆட்டினை அகற்றித் தாங் கூறியவாறே வேள்வியை முடித்து அவிதனைக் கொண்டே அமரருக்கு அவியளித்தார். கொலைவினை நிகழாமல் செய்யும் வேள்வியே தலைமையானதென்று மலைவறக் கூறி அனைவரும் நலமுற அருள்புரிந்தனர். கொன்று ஆகும் ஆக்கம், சான்றோர்க்குக் கடையாம் எனுமுண்மை அன்று உலகம் அகத்தியர்பாலுணர்ந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

கொலையால் வருஞ் செல்வம் பெரிதாமாயினும் பெரியோர் அதனை விரும்பார் என்பது இதனால் கூறப்பட்டது.

329. பண்டு பராசர்தம் பாலரையும் ஏனரெரிந்தேன்
கொண்டார் கொலையால் குமரேசா — கொண்ட
கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. (க)

குமரேசா! தம்முடைய மக்களையும் கொலை வினையால் ஈனரென்று பாராசர் என் பழித்தார் எனின், கொலை வினையரா கிய மாக்கள் புன்மை தெரிவார் அகத்து புலை வினையர் என்க.

கொலை வினையர்—கொலைத் தொழிலை யுடையவர்.

புலை வினையர்— அக் கொலையால் வரும் ஊனைத் தின்னும் டையவர்.

654 திருக்குறட் குமரேச வெண்பா.

மாக்கள் என்றார் மக்கள் அறிவு பாழ்போனமையின். பிற வுயிரையும் தம் உயிர்போல் பேணி ஒழுகுவோரே மக்களாவார் என்க.

புன்மை தெரிவார் அகத்து—இழிவினைத் தெளிவார் நெஞ் சத்தில்,

கொலைத் தொழிலினராகிய மாக்கர், அறிவுடையார் மனத் தில் புலைத் தொழிலினராக மதிக்கப்படுவாரெனபதாம்.

பிறவுயிர்களை அருளின்றிக் கொல்லுகின்ற பழியின் இழி வை உணர்கின்றவரே உயர்ந்தவரென்பதும், அவருள்ளம் அக் கொலையாளரைப் புலையரென்று இகழ்ந்து தள்ளும் என்பதும் கூறுவார், “புன்மை தெரிவார் அகத்துப் புலைவினையர்” என்றார்.

ஆவுரித்துத் தின்று வருவோர் சாதிப் புலையர் என்றும், ஆருயிர்களைக் கொன்று திரிவோரும், வேறு ஊன்களைத் தின்று மகிழ்வோரும், கன்மப் புலையரென்றும் வேறுபாடு காண்க.

கொலை வினையாளரைக் கன்ம சண்டாளர் என்று கருதவே ண்டுமென்பது கருத்து.

பிறப்பால் உயர்ந்தவராயினும், கொலைத் தொழிலைப் புரிவ

ரேல் ஈனர்களென்று அறிவுடையோரால் அவர் இழிக்கப்படுவ ரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தத்தன் முதலிய அறுவர்பால் காணப்படும்.

**கதை.**

தத்தன், அனந்தன், சதுமுகன், நந்தி, பருதி, மாலி என்னும் இவ் அறுவரும் பராசர முனிவருடைய புதல்வர்கள். இச் சிறுவர்கள் அனைவரும் ஒருங்கு சேர்ந்து ஒருநாள் சரவணப் பொய்கையை அணுகி விளையாடினார். நீரில் பாய்ந்து நீந்தியும் மலர் பல கொய்து மகிழ்ந்தும் உலாவினார். தவளை முதலிய நீர்வாழுயிர்களை இரக்கமின்றி எறிந்து கொன்றார். அதன்பின் அதிலுள்ள மீன்களைப் பிடித்துக் கோரைப் புல்லிற் கோத்துக் குதித்



துத் திரிந்தார். அவ்வமையம் பராசர முனிவர் அங்கு நீராடவந்தார். குழந்தைகள் செய்த கொலை வினையைக் கண்டார். உளங் கலங்கினர். நல்ல மரபிற் பிறந்திருந்தும் இப் பொல்லாத செயல்களைப் புரிந்தீர் ஆதலால் ஈன மீன்களாகி நீவிரனைவிரும் இழிந்து தொலைமின் என்று சினந்து மொழிந்தார். அவரும் அவ்வாறே ஆகி யுழன்றார். உயர்ந்த குலத்தில் தோன்றியும் தாம் புரிந்த கொலை வினையால் இழிந்து கெட்டார். கொலை வினையராகிய மாக்கள் புன்மை தெரிவார் அகத்துப் பலை வினையாராவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

கொலையிலான் உதவும்அன்னம் கூறிற்பே ரமுதமாகும்
கொலையுளான் உதவுமன்னம் கூறின்வல் விடமதாகும்
புலையர் தம் மனையி லுண்போன் புலையனு மாறுபோலக்
கொலையர்தம் மனையி லுண்போன் கொலைஞனே யாவனன்றே.
(பதிவிளக்கம்.)

கொலை வினையாளரைக் கன்ம சண்டாளர் என்று அறிவோர் கருதுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

330. பண்டு கவந்தன் பழியுடம்பும் தீவாழ்வும்
கொண்டுழந்தான் என்னே குமரேசா—கொண்ட
உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். (ய)

குமரேசா! கவந்தன் பழி உடம்பும் இழி வாழ்வும் கொண்டு என் உழந்தான் எனின், செயிர் உடம்பில் செல்லாத் தீ வாழ்க்கை யவர் உயிர் உடம்பில் நீக்கியார் என்பர் என்க.

செயிர் உடம்பு—குற்றமான உடம்பு; அங்கஹீனமும் உறுப்புக் குறைவும் நோயும் உடையது.



செல்லாத் தீ வாழ்க்கை—இனிது நடவாத கொடிய வாழ்க்கை; என்றது வறுமையும் சிறுமையும் மலிந்த வாழ்க்கையை.

பிணி நிரம்பிய பழி யுடம்பும் வறுமை மிகுந்த இழி வாழ்க்கையும் உடையாரை உயிர்களை உடம்பில் நின்று நீக்கின கொடியவரென்று பெரியோர் மொழிவர் என்பதாம்.

மேல், கொலைவினையரைக் கன்மப்புலையர் என்று கருதவேண்டும் என்றார் இதில், அவர் பின்பிறப்பில் இயல்பாகவே புலையராவர் என்றார். முற் பிறப்பில் உயிர்களைக் கொன்றவர் பிற் பிறப்பில் தொழு நோய் தழுவிய பழியுடம்பும் அழிதுயர் மிகுந்த இழி வாழ்க்கையும் அடைந்து வருந்துவர் என்பது கருத்து.

கொலைவினையால் வறுமையும் நோயும் தொடருமாதலால்

அதனை ஒருவன் அறவே ஒழிக்கவேண்டும் என்பது குறிப்பு.

உடம்பும் ஈன வாழ்க்கையும் கொலை வினையாளர்க்கு உளவாம என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கவந்தன்பால் உணரப்படும்.

கதை.

கவந்தன் என்பவன் தண்டகவனத்திலிருந்த ஓர் அரக்கன் இவன், முற் பிறப்பில் தனு என்னும் பெயரினையுடைய ஒரு காந்தருவனாயிருந்தான். மிக்க செருக்குடையவன். உயிர்களை இரக்கமின்றிக் கொன்றான். விலங்கினங் களுக்கும் மக்களுக்கும் இவன் வெந்துயர் செய்தான். தூலசிரசு என்னும் முனிவருக்கும் கனிதுயர் புரிந்தான். அவர், இவனை அரக்கனாகச் சபித்தார். அங்ஙனமேயாகி அருயிர்களைக் கொன்று தின்று திரிந்தான். இவன் கொடுமையை யறிந்து சினந்து இந்திரன் தன் குலிசத்தால் இவன் தலையில் புடைத்தான். அதனால் இவன் தலை உடலில் புகுந்தது. அன்றுமுதல் இவனுக்குக் கவந்தன் என்று பெயர் வந்தது. தலையில்லாத குறை உடலுக்குக் கவந்தம் என்று பெயர். எழுந்து திரிதற்கு இயல்பில்லாத ஈன வுடம்புடன் தண்டக வனத்தில் கிடந்து கண்ட வுயிர்களைக் கைக்கொ



ண்டு தின்று தயங்கியிருந்தான். உயிர்களை உடம்பில் நின்று நீக்கினவர்க்கு செயிர் உடம்பும் தீ வாழ்க்கையும் உளவாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இராம இலக்குவரால் இவன் சாபம் நீங்கப் பின் மேன்மை எய்தினான். விரிவை இராமாயணத்தில் காண்க.

கொலை வினையாளர்க்கு இழி பிறப்பும் ஈன வாழ்க்கையும் எய்தும் என்பது இதனால் கூறப்பட்டது.

சிலையினன் மாக்கள்கொன்று செழுங்கடல் வேட்டமாடி
வலையினால் மீன்கள்வாரி வாழுயிர்க் கூற்றமான
கொலைஞரைக் கும்பிதன்னுட் கொழுந்தழ லழுத்தியிட்டு
நலிகுவர் காணுநாளும் நரகரை நாமவேலோய். (1)
வயிரமுள் நிரைத்துநீண்ட வார்சினை யிலவமேற்றி
செயிரிற்றி மடிப்பர்கீழாற் சென்னுனைக் கழுவிலேற்றி
மயிருக்கொன் றூசலாக்கி வகைத்தகைத் திவர்மன்னு
உயிரைப்பே துறுத்தமாந்தர் உயிரைப்பே துறுக்குமாறே (2)
(சீவகசிந்தாமணி)

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

கொல்லாமையே அறவினையாகும். கொல்லுதல் எல்லாப் பாவங்களையும் கொடுக்கும். உயிர்களைப் பேணுதலே தலையாய அறம். எல்லா அறங்களிலும் சிறந்து முதலில் நிற்றற்குரியது கொல்லாமையே. எல்லையில்லாத இன்ப வீடடைதற்குக் கொல்லாமை ஒன்றே நல்ல நெறியாம். துறந்தவரெவரினும் கொல்லாமையுடையவரே சிறந்தவராவர். கொல்லாவிரதியர் மேல் கூற்றுவன் செல்லான். தன் உயிர் நீங்கினும பிறவுயிரைத் தான் நீக்கலாகாது. கொலையால் வரும் செல்வம் பெரிதாமாயினும் அதனைப் பெரியோர் கொள்ளார். கொலை வினையாளரைக் கன்ம சண்டாளரென்றே கருதவேண்டும். அதனையுடையவர் ஊன உடம்பும் ஈன வாழ்க்கையும் எய்தி உழல்வார்.

௩௩-வது கொல்லாமை முற்றிற்று.





## ௩௪-ம் அதிகாரம் நிலையாமை.

அஃகாமைத் தேற்ற முடையனயாவும் நிலையா என்னும் உண்

மை. கொல்லா விரதத்தைக் குறிக்கொண்டொழுகிய நல்லறிவா ளர்க்கே இவ்வுண்மை இனிது புலனும் ஆதலால் இஃது அதன் பின் வைக்கப்பட்டது.

331. கொண்டவுடல் நிற்குமென்ற கோரக்கர் சீரிழந்து
கொண்டார இழிவேன் குமரேசா—கண்டறிந்தும்
நிலைாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. (க)

இ—ள்.

குமரேசா! தனது உடல் என்றும் நிலைநிற்கும் என்று துணிவுகொண்டிருந்த கோரக்கர் ஏன் அதனால் இழிவுகொண்டார் எனின், நில்லாதவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை கடை என்க.

நில்லாதவற்றை—நிலையில்லாத பொருள்களை.

நிலையின என்று உணரும்—நிலையுடையன என்று கருதுகின்ற. புல் அறிவு ஆண்மை கடை—புல்லிய அறிவினை ஆளுந் தன்மை இழிவானது. தன்னை யுடையானைக் கீழ்மைப்படுத்துமாதலால் அது கடையாயிற்று. தான மயங்கி அறிந்ததையே மெய் என்று துணிந்து அது முனைந்து நிற்குமென்பது ஆண்மைத் தொடர்பால் அறியப்படும்.

நிலையில்லாத பொருள்களை நிலையுடையன என்று கருதுகின்ற புல்லிய அறிவுடைமை அறிவோர்க்கு இழிவாம் என்பதாம்

அநித்தமான யாக்கை முதலியவற்றை நித்தமென்று கருதி அவற்றின் மேல் பற்று வைப்போர் முடிவில் குற்றமே கண்டு —"ந்து தாழ்வராதலால் "புல்லறி வாண்மை கடை" என்றார்,



புல்லறிவு இழுக்கே பயக்குமாதலால் அதனை ஒருவன் ஒழிக்கவேண்டுமென்பது குறிப்பு. பொருள்களின் இயல்பை மயலற உணரும் நல்லறிவுதலையானதால் புல்லறிவு கடை எனப்பட்டது.

நிலையில்லாத இயல்பினை யுடைய உடம்பு முதலியவற்றை நிலைநிற்குமென்று கருதிக் களிப்பவர் சிறுமைப் படுவர் என்பது கருத்து. இவ்வுண்மை கோரக்கர்பால் காணப்படும்.

## கதை.

கோரக்கர் என்பவர் சயிலமலைச் சாரலிலிருந்து காய சித்தி செய்துகொண்டு வந்த ஒரு யோக சித்தர். இவர், தமது சித்தின் இயல்பால் எவ்வகையாலும் சிதைவுறாதபடி உடல் வலி பெற்றிருந்தார். அதனால் என்றும் அது நிலைபெறுமென்று நம்பியிருந்தார். இவரது புல்லறிவாண்மையைப் போக்குதற்கு நல்லறிவாளராகிய அல்லம தேவர் ஒரு நாள் இவர்பால் வந்தார். சிறிது போழ்து வினவினர். சித்தர், என் உடல் என்றும் அழியாது நின்று நிலவும் என்றார். மின்னின் நிலையில மன் உயிர் யாக்கைகள் என்னும் மெய்ம்மையை நீர் இன்னும் உணர்கிலீர்போலுமென்று அல்லமர் புன்னகை செய்தார். யாது கூறினும் அவர் வாது மீறினர். அதன்பின், காணப்படுகின்ற பொருள்களின் மூலகாரணங்களையும், அவை யாவும் அழியும் இயல்பின என்னும் உண்மையையும், விண்ணில் எறிந்த கல் மண்ணில் விழுதல் தப்பாதவாறுபோல்

தோற்றமுடையன யாவும் தொலையும் எனனும் தன்மையையும் அவர் உணர்ந்து தெளியுமாறு உயர்த்தினர். சித்தர் உணர்ந்தார். நில்லாதவற்றை நிலையின என்று இதுவரை தாம் நினைந்து நின்றது இழிந்ததென்று தெளிந்து கெடுகொண்கொண்டார். உடற்பற்று அற்று உயர் வீடெய்தினர். (விரிவைக் கோரக்கர் கதியில் காண்க.)

பிறந்த ஆக்கமோன் நிறந்திடாப் பெருமையும் உடைத்தோ
எறிந்த வான்சிலை வீழ்ந்திடா திருப்பதிங் கில்லை
செறிந்த காரியம் என்பதென் றுயிலுஞ் சிதையும்
இறந்திடாதுகா ரணமெனப் பலவேதே யென்றும். (1)

88



மருந்தினாலுடல் நித்தமா மென்றுநீ வருத்த
திருந்து வாழுகாட பன்மைகொண் டமறி வேறில்லை
பொருந்தி நீயுடல் அழிந்திடாதென்பது பொருந்தா
தருந்தவா! இனி வீடுவேண் டெனறனன் ஐயன். (2)

இவை, கோரக்கரை நோக்கி நல்லமாருளியன.

நிலையில்லாதனை நிலையென உணர்தல் அறிவோர்க்கு வாமென்பது இதனால் கூறப்பட்டது.

332. வென்றமிகு சூர்முதலோர் மேலான செல்வமெல்லாம்
குன்றிவேன் போன குமரேசா—குன்றாக
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. (உ)

குமரேசா! சூரபன்மன், இராவணன், முதலியபேரரசர் பெருஞ் செல்வமெல்லாம் என் நிலையாமல் போயின எனின், பெருஞ் செல்வம், கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே; அதன் போக்கும், அது விளிந்தற்று என்க.

கூத்தாட்டு அவை என்றது நாடகசாலையை. குழாம்—கூட்டம்.

அது விளிந்தற்று—அக் கூட்டம் போயினாற்போலும்.

ஆக்காலத்தில் ஒருவனுக்குப் பெருஞ் செல்வம் வருவது எதுபோல்வதெனின் கூத்தாடுகின்ற இடத்தில் கூட்டம் கூடுவது போலும் என்பார், "பெருஞ் செல்வம் கூத்தாட்டு அவைக் குழாத்து அற்றே" என்றார்.

தான இருத்தற்குரிய காரணம் இருக்கும்வரையுமே செல்வம் நிற்கும் என்பதை உவமை உணர்த்தி நின்றது.

ஒருவனிடம் பெரிய செல்வம் வந்து சேர்தல், கூத்தாடுகின்ற அரங்கின்கண் கூட்டம் வந்து சேர்தல்போலும்; அச்



செல்வம் குலைந்து போதல் அக் கூட்டம் கலைந்து போதல் போலும் என்பதாம்.

ஆக்காலத்தில் செல்வம் ஒருவன் பால் பல வழிகளாலும் வந்து சேர்ந்து பின் போங் காலத்தில் அவனை விட்டு ஒருங்கே அது போய்விடுமாகலால் அறிவுடையார் அதனை நிலையென்று கருதலாகாதென்பது கருத்து.

மேல், நிலாதவற்றை நிலையென்றுணர்தல் புல்லறிவென்றார்; இதில், அந்நிலையாத ஒன்றின் நிலைமையை உவமையால் விளக்கினார்.

செல்வம் என்றும் நிலைத்திராதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சூரபன்மன் கண்ணும், இராவணன்பாலும் உணரப்படும்.

## கதை 1.

அண்டமாயிரத் தெட்டையும் தனியர சாட்சி
கொண்டு வைகினன் குலத்தொடும் அமரர்தங் குழுவைத்
தொண்டுகொண்டனன் யாவர்வந் தெதிர்க்கினுந் தொலையேன்
உண்டுகொல் இவன் எனக்குநே ராகவே ஒருவர்.

என்று இறுமாந்திருந்த சூரபன்மனது பெருஞ் செல்வமும் முடிவில் அவனையகன்று சென்றது.

## கதை 2.

இலங்கையர் வேந்தனாகிய இராவணன் பதினாயிரம் ஆண்டுகள் அருந்தவம் புரிந்து அதன் பயனாகப் பல்வகைப்பட்ட செல்வங்களும் தாமே வந்து தன் பால் படிந்து நிற்கப் பெற்றான். முடிவில் அனைத்தும் ஒருங்கே இழந்து தானும் அழிந்தான்.

மரமடங்கலும் கற்பகம் மனையெலாங் கனகம்
அரமடந்தையர் சிலதியர் அரக்கியர்க் கமரர்
உரமடங்கினர் தொழும்பரா யுழல்பவரொருவர்
தரமடங்குவ தன்றித் தவஞ்செய்த தவமால்.



மரகதத்தினும் மற்றுள மணியினும் வனைந்த
குரகதத்தடத் தேரினம் அவைபயில் கொட்டில்
இரவி வெள்கின் நிலைக்கின்ற இயற்கையவென்றால்
நரகம் ஒக்குமால் நன்னெடுந் துறக்கமிந் நகர்க்கு.

என்னும்படி சிறந்து விளங்கிய இலங்கைச் செல்வமும் பின் சிதைந்து தொலைந்தது.

புலைமேலுஞ் செலற்கொத்துப் பொதுநின்ற செல்வத்தின்
புன்மைத் தன்மை
நிலைமேலும் இனியுண்டோ நீர்மேலைக் கோலமெனும்

நிலைமைத் தன்றே
தலைமேலுந் தோண்மேலும் தடமுதுகிற் படர்புயத்தும்
தாவி யேறி
மலைமேனின் றாடினபோல் ஆடினவால் வானரங்கள்
வரம்பிலாத.

தன் பெருஞ் செல்வத்தை யிழந்து இராவணன் பட்டபோது இது கூறியதென்க. செல்வம் கூத்தாட்டுக் களம் போல் திரண்டுவந்து பின் சிதைந்துபோம் என்பதை உலகம் இவர்பாலுணர்ந்தது. விரிவை இவர் சரிதைகளிலுணர்க.

செல்வம் என்றும் நிலையாதென்பது இதனால் கூறப்பட்

333. தண்டார்க் கலயனார் தாலிவிற்றும் ஆக்கறமே
கொண்டுசெய்தார் என்னே குமரேசா—மண்டியென்றும்
அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். (௩)

இ—ள்.

குமரேசா! குங்குலியக் கலயனார் தாலியை விற்றும் என் அப்பொழுதே அறத்தைச் செய்தார் எனின், செல்வம் அற்கா இயல்பிற்று அது பெற்றால் அற்குப ஆங்கே செயல் என்க.



அற்கா—நிலைநில்லாத. அற்குப—நிலைநிற்கின்ற.

செயல் என்பது இங்கு உடன்பாட்டு வியங்கோளாய் நின்றது.

அற்கா என்றது அல்கல் என்னும் வினையடியாய்ப் பிறந்த எதிர் மறைப் பெயரெச்சம். அல்கல் என்பது நிலைத்தல், தங்கல், சுருங்கல்களை உணர்த்தும்

செல்வம் அற்கா இயல்பிற்று— செல்வம் நிலையாத இயல் பினையுடையது. அற்குப என்றது நிலையான அறங்களை.

செல்வம் நிலைத்து நில்லாத இயல்பினையுடைது; அதனைப் பெற்றால் நிலையுடைய அறங்களை அப்பொழுதே செய்க என்பதாம்.

கூத்தாடுக் கூட்டம்போல் செல்வம் விரைவில் நீங்கு மென்று மேலுரைத்தார்; அது நீங்கிவிடுமுன்னே அதனால் செய்யவேண்டியது என்னஎன்பதை இதில் உணர்த்தி அருளினர்.

நிலையில்லாத பொருள் தம் கையில் எய்தப் பெற்றால் னே நிலைநிற்கின்ற அறங்களை அதனால் அறிவுடையார் செய்து கொள்கவென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலயனார் பால் உணரப்படும்.

## கதை.

கலயனார் என்பவர் சோழ நாட்டிலே திருக்கடவூர் என்னுந் தலத்திலே, வேதியர் குலத்திலே பிறந்தவர். சிறந்த செல்வமு டையவர். பிறவுயிர்களையுந் தம் உயிர்போல் எண்ணிப் பேணுந் தண்ணளியுடையவர். இவர் அத்தலத்தில் விளங்கும் திருக்கோ விலுட் சென்று நாளும் வாசனைத் தூபம் இட்டு ஈசனைப் போற் றிவந்தார். உயிர்கள் மாட்டு ஆராருளும் பரமன் மாட்டுப் பேரன் பும் கொண்டு ஒழுகிவருங்கால் இவர், செல்வந்தேய வறுமை மிக் கது. அதனால் மிக வருந்தினர். ஆயினும், உயிர்களுக்குச் செய் யும் உதவியிலும் பரமனுக்குப்புரியும் பணியிலும் சிறிதுங் குறை க்கிலர். குடும்பத்தோடு இரண்டு நாட்களைப் பட்டினி கிடந்தார்.



மூன்றும் நாள் தமது அருமை மனைவியார் பெரிதும் இரங்கித்

தாலியை எடுத்து உணவுப் பொருள்கள் வாங்கி வரும்படி இவர் கையில் கொடுத்தார். இவரும் அதனைக் கொண்டு சென்றார். செல்லுங்கால் ஒரு வணிகன் கொண்டுவந்துள்ள குங்கிலியப்பொதியை இடையே கண்டார். நிலையாத உடம்பைப் பேணுதலினும் நிலையுள்ள அறத்தைப் பேணுதலே நலம் என்று துணிந்தார். ஈசனுக்குத் தூபம் இடுதற்கு மிகவும் இனிதாமென்று மகிழ்ந்து அவ்வாசனைப் பொருளையே வாங்கினார். நிலை நில்லாத இயல்பினையுடைய செல்வம் தம் கையில் எய்தப் பெற்றால் அறிவுடையார் அது கொண்டு நிலையான அறங்களையே செய்துகொள்வர் என்பதை இவர் அன்று உணர்த்தி நின்றார். மங்கிலியம் கொடுத்துக் குங்கிலியம் கொண்டதால் அன்று முதல் இவர் குங்கிலியக் கலயனார் என்று கூறப்பட்டார். அத்தகு இயல்பினதான செல்வம் அமையப்பெற்றால் அறிவோர் அப்பொழுதே அதனால் அறத்தைச் செய்வர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

முல்லை முகைசொரிந்தாற் போனறினிய பாலடிசில் மகளிரேந்த
நல்ல அருமையால் கால்வாயும் பொற்கலத்து நயந்துண்டார்கள்
அல்லலுடைய அடகிடியின் ஓட்டகத்தே தம்பில்வார்க் கண்டும்
செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின் கண்டீர்.

சீவக சிந்தாமணி.

செல்வம் நில்லாது ஆதலால் உடனே அதனால் அறஞ் செய்தல்வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

334. மாசில் உரோமமுனி வாழ்நாள் கணிபெற்றும்

நினைரேன் வாழக் குமரேசா—கேளுமாம்
நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.



குமரேசா! உரோமமுனி நீண்ட ஆயுள் நாளைப் பெற்றிருந்தும் ஏன் வாழ்நாட்கு நாணினார் எனின், நாள் என ஒன்று போல் காட்டி உயிர் ஈருவாள் அஃது உணர்வார்ப் பெறின் என்க. ஈர்தல்—அரிதல், பிளத்தல்.

நாள் என்றது பகல் இரவு என்று கதிரவனால் கணிக்கப் பட்ட காலக் கூறுபாட்டை. நாள் என—நாளென்று.

ஒன்றுபோல் காட்டி—ஒரு பொருள்போல் காட்டி.

உயிர் ஈரும் வாள்—உயிரை ஈர்கின்ற வாளாயுள்ளது.

உயிரானது ஈரப்படுவதொரு பொருளன்றாயினும் அஃது உற்று நிற்கும் உடம்பைப்பிரித்தலால் நாள் அதனை ஈரும் என்றார்.

அஃது உணர்வார்ப் பெறின்—அவ் உண்மையை உணர்வார் உளராயின். பெறின் என்றது அவ் உணர்தலின் அருமையை உணர்த்தி நின்றது. அஃது எனனுங் குற்றியலுகரம் செய்யுள் நோக்கி அதுவென நின்றது.

நாளென்று காலவரையறையாகிய ஒரு பொருள் போல் தன்னைக்காட்டி உயிரை ஈர்கின்ற வாளாயுள்ளது அவ் உண்மையை உணர்வார் உளராயின் என்பதாம்.

உணர்வுடையார் வீழ் நாள் படாமல் நாளும் நன்றே ஆற்றுவர்; உணர்வில்லாதவர் பொழுதைப் பழுதே போக்கி முடிவில்

இழிவே அடைவர் என்பது குறிப்பு.

நாளானது வெளித் தோற்றத்தில் ஒரு கால அளவைபோல் காணப்படினும், உண்மையில் உயிர்களை அரிந்துகொண்டிருக்கின்ற வாளாகவே உள்ளது; ஆதலால் அதன் கழிவை நும் அழிவெனக் கருதி அழிவிலின்பத்தை அடைதற்குரிய வழிகளை அது கழியுமுன் தேடுமின் என்று உணர்வுடைய மக்களை நோக்கி இஃதுணர்த்தியதென்க.



நாளின் கழிவை உயிரின் கழிவாக உணர்வோர் உணர்வ ரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை உரோம முனிவர்பால் உணரப்படும்

## கதை.

உரோமமுனிவர் என்பவர் புசுண்ட முனிவருடைய புதல்வர். அருந்தவமுடையவர். இவர் உடம்பு முழுவதும் நீண்ட மயிர்கள் அடர்ந்திருந்தமையால் இவருக்கு இப்பெயர் வந்தது. முற்றத் துறந்தவர். நீண்ட ஆயுளைப் பெற்றிருந்தும் ஒன்றினிடத்தும் பற்றிலலாமல் நிலையாமையையே நினைந்து நெடுந்தவம் புரிந்தார். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய இந்நான்கு யுகங்களுஞ் சேர்ந்தால் ஒரு சதுர்யுகமாகும். அது நாற்பத்து மூன்று இலக்கத்து இருபதினாயிர வருடங்களையுடையது. இத்தகைய சதுர யுகங்கள் பல்லாயிரங் கழிந்தால் பிரமாவுக்கு ஆயுள் முடிவாம். அவர் அழியும்பொழுது இம்முனிவருக்கு மயி ரொன்று உதிரும். இவருடம்பில் முப்பத்து மூன்று கோடி மயிர்கள் இருந்தனவாம். அவை முற்றும் உதிரின் இவர் இறந்து முடிவர். நாரதர் முதலிய முனிவர் பலரும் இந்திரன் முதலிய அமரர் சிலரும் இவரது தவச்சாலைக்கு வந்து நெடிய வாழ்நாளையுடைய நீர் ஏன் இச்சிறிய குடிசையில் இருக்கின்றீர் என்றார்.

நாளும் கழிந்துகொண்டு போகின்ற ஆயுளை நிலையெனக் களித்தல் மிகவும் இழிவாகும். என்னினும் மிக்க ஆயுளையுடைய ஒருவர் உளர். அவருக்கு அட்டகோண முனிவர் என்று பெயர். என் உடலிலுள்ள மயிர் முழுதும் உதிர்ந்து நான் முடிவடையும்பொழுது அவருக்கு ஒரு கோணல் நிமிரும். அவ்வாறு, அவ் எட்டும் நிமிர்ந்தால் அவர் இறந்துவிழுவார். அவரைப்போய்க் காண்மின் என்றார். அனைவரும் விரைந்து அவர்பால் வந்தார். நிலையாமையை நினைந்தே நெடுந்தவம் புரிகின்ற அவர் நிலைமையைக் கண்டார், நெடுநாண் கொண்டார். நாளின் கழிவை உயிரின் கழிவாகவே உணர்வுடையார் உணர்வரென்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது.

விரிவை முனிவர் மான்மியத்தில் காண்க.



பாளையாந் தன்மைசெத்தும் பாலனாந் தன்மைசெத்தும்
காளையாம் பருவஞ்செத்தும் காமுறும் இளமைசெத்தும்
மீளுமிவ் வயதுமின்னே மேல்வரு மூப்புமாகி
நாளுநாட் சாகின்றாமால் நமக்குநாம் அழாததென்னோ.
(குண்டலகேசி.)

தினங்கள் செலச்செல ஏதோபெற்றனபோல் களிக்குநெஞ்சே
தினங்களோடு
கணந்தோறும் உன் ஆயுளுநாள் கழிவதுணராய் உயிர்தீர்
காயஞ்சேரும்
வனங்கடுகி வாவென்ன விளித்தன்பால் தினநெருங்கும்
வண்மையுன்னி
முனங்கொளறி யாமையைநீ இனங்கொள்ளா தறஞ்செய்ய
முயலுவாயே. (நீதிநூல்.)

நாளின் கழிவை உயிரின் கழிவாகவே உணரவேண்டுமென்பது இதனால் உணர்த்தப்பட்டது.

335. மண்டு புகழ்க்கட்டு வாங்கன் விரைந்தேனே
கொண்டுசெய்தான் நன்மை குமரேசா—கொண்டாடும்
நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். (ஞ)

இ.—ள்.

குமரேசா! கட்டுவாங்கன் ஏன் விரைந்து தவஞ் செய்தான் எனின், நாச்செற்று, விக்குள் மேல் வாரா முன் நல் வினை மேற் சென்று செய்யப்படும் என்க. விக்குள்—விக்கல். விக்கல் மேல் எழும்பொழுது நாஎழாது ஆதலால் "நாச் செற்று விக்குள் மேல் வாராமுன்" என்றார்.

மேற்சென்று செய்யப்படும்—விரைந்து செய்யப்படும்; வாழ் பாட்டுக்கேற்ற எழுவாய் இதில் வருவித்துக்கொள்க.

84



உயிர் உடம்பை விட்டுப் பிரியுங் காலத்தில் தோன்றுகின்ற துன்பக் கூறுபாடுகளுள் மிக்கது ஆய விக்கல் தோன்றுமுன்னே வீட்டிற்கேதுவாகிய நல் வினையை விரைந்து செய்யவேண்டு மென்றது அது தோன்றியபின் யாதும் செய்யமுடியாதென்பது

நாவை அடக்கி, விக்குள் மேல் எழுவதற்கு முன்னே அறிவுடையோரால் வீட்டிற்கு உரிய அறம் விரைந்து செய்யப்படும் என்பதாம்.

மேல், நெருநல் உளனொ ஒருவன் இன்று இலனுவன் என்றார்; இதில், அவ் இன்மை வருமுன்னமே நன்மை செய்க என்றார். உண்மையை உணர்ந்து உறுவனவற்றை விரைவில் செய்க

என்ற அடிகள் அருள் மாண்பை இதில் ஆய்ந்துகொள்க.

கருவிகள் தளராதிருக்கும்பொழுதே உயிர்க்கு உறுதியான நன்மையை ஒருவன் விரைந்து செய்துகொள்ளவேண்டுமென்பது கருத்து.

நிலையில்லாத உடல் நிலைத்திருக்கும்பொழுதே நிலையான அறத்தை அறிவுடையார் செய்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் உண்மை கட்டுவாங்கன் பால் உணரப்படும்.

## கதை

கட்டுவாங்கன் என்பவன் சூரியகுலத்து வேந்தனுகிய விசுவகின் குமரன். சிறந்த போர்வீரன். இவனுடைய மகன் பெயர் தீர்க்கபாகு. மனைவி சதமதி. இவன், மன்பதை இன்புற மாநிலம் புரந்தான். அக்காலத்தில் அசுரருடன் அமராற்ற ஆற்ருது அமரர் சிலர் இவன்பால் வந்து துணைவர வேண்டினர். இவன் சென்று அசுரரை அடக்கவென்று அமரருக்கு உரிய மேன்மையை உதவினன். அதனுல் இந்திரன் மகிழ்ந்து "வென்றிவேந்தே! உனக்கு வேண்டுவது யாது" என்ருன். இவன் எனக்கு ஆயுள் முடிவு எப்பொழுது என்று நீ அறிந்து கூறுக



என அவனை அமைந்து வேண்டினன். அவன் யோகவுணர்வால் நோக்கி "ஐயகோ! இன்னும் இரண்டுநாழிகைதானே உள்ளது" என்ருன். மன்னன் மாநகர் வந்தான். அரியவை யாவும் ... பிணுகவி அறவினையெல்லாம் விரைவினில் செய்தான், ... தெளிந்தான். பற்றற்ருனையே பற்றி நின்று தவஞ்செய்து ... முத்தியடைந்தான. வித்துள் மேல் வருமுனமே நல் ... அறிவோர் விரைந்து செய்வரென்பதை உலகம் இவனபால் ... ந்து மகிழ்ந்தது. (விரிவைப் பாகவதத்தில காண்க.)

இளமையும் எழிலும்வானத் திரவிலின் செல்வமுமாயுர்
வளமையுங் கிளையுமவாரி புதியகன வரவுபோலும
வெளிப்படை விளங்கெவியும் ஆபுவுமெனறு விடடுக்
குளபகலுங்கஞ் செய்வர் உணர்விறுத் பெரியோர்.

(மேருமந்தர புராணம்,)

இளமையும் நிலையாவால் இன்பமும்நின்ற வல்ல
வளமையும் அஃதேபால் வைகலுந் துன்பவெள்ளம்
உளவென நினையாதே செல்கதிக்கென்று மென்றும்
விளைநிலம் உழுவார்ப்போல வித்துநீர் செய்துகொண்மின்.

(வளையாபதி)

புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியேசெய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளலறச்
சென்றான் எனப்படுத லால்.

(நாலடியார்)

பசிவந்தபின்நெல்லை விதைப்பதுபோல் வீடுறல் [illegible]
கசியும்போததைபலிக்க ஆறுவெட்டலபோலுமாம்போலும [illegible]
விசிகநூல் கற்கமுயல் வதுபோலும் பெயிருசி [illegible]
இசிவுகொண்டுசாங்காலத்தெப்படிநீஅறம்புரிவாய் [illegible]

இக்கிச் சா முன்னே நல் வினையை விரைந்து [illegible] மென்பது இதனால் கூறப்பட்டது.

---



336. பண்டு மணமகளைப் பத்தினியைக் கைப்பிடித்தான்
கொண்டஅன்றேன் மாண்டான் குமரேசா—கண்ட
நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்

-ள்.

குமரேசா! மணமகனாகி மகிழ்ந்து நின்றவன் அன்றே ஏன் பிணமகனாகி இழிந்துபோனான் எனின், ஒருவன், நெருநல் உளன்; இன்றுஇல்லை என்னும் பெருமையை இவ்வுலகு உடைத்து

ஒருவன் நெருநல் உளன்—ஒருவன் நேற்று உளனாயினன்.
இன்று இல்லை—இன்று இல்லையாயினன்.

என்னும் பெருமை என்றது இகழ்ச்சிக் குறிப்பு, உலகோர் சொல்லின்மேல் வைத்து இஃதுணர்த்தியதென்க.

ஒருவன் நேற்றுப் பிறந்தான் இன்று இறந்தான் என்று சொல்லும்படியான நிலையாமையையே இவ் உலகம் நிலையாகக் கொண்டுள்ளது என்பதாம்.

"நேற்று இருந்த ஒருவன், இன்று இல்லையானான்" என்னும் பெருமைதான் இவ்வுலகில் மிகுதியாகவுள்ளது ஆதலால் உள்ள போதே உயிர்க்கு உறுதியைச் செய்துகொள்ளுக என்பது குறிப்பு, இறத்தலும் பிறத்தலும் இரு பாலார்க்கும் உளவாயினும் உயர்வுபற்றி ஒருபால்மேல்வைத்துக் கூறினார்.

மேல், விக்குள் வருமுன்னே வேண்டியதை விரைந்துசெய்க என்றார்; மூப்பு வந்த பின்னர்தானே அது வரும் என்று அயர்த்து இராதே என்று இதில் அருளினார் என்க.

இன்று இருந்தான் தன் கேள் அதை இப்பொழுது ஒருவன் இறந்துபோனான் என்று இவ்வுலகில் அடிக்கடி சொல்லப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தனதன்பால் ஈரப்படும்.

## கதை.

தனதன் என்பவன் மதுரையிலிருந்த ஒரு வணிகர் குல மகன். இவன்காலத்தில் குலோத்துங்க பாண்டியன் அரசுபுரிந்தான். தனது மரபுக்குரிய மங்கை ஒருத்தியை இவன் மணம் புரிந்தான். பெற்றாரும் உற்றாரும் பிறரும் புடைசூழ்ந்து மகிழத் திருமணம் அழகுற நடந்துகொண்டிருந்தது; அப்பொழுது அங்கோர் இளங் கன்றையுடைய பசு ஒன்று வெருண்டோடி வந்து இவன்மேற் பாய்ந்து விரைந்து சென்றது. அதனால் குடர் சரிந்து இவன் உடனே மாண்டான். மணமகனாயிருந்தவன் பிண மகனானான். இனிது இருந்தான் இப்பொழுது இறந்தானே என்று அனைவரும் கலங்கி அழுது துடித்தார். நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்பதினும் மிக்க நிலையாமையை இவன் பால் உலகம் அன்று கண்டது. விரிவைத் திருவிளையாடலிற் காண்க.

ஓட்டியபல் லிளைதுவன்றி ஒல்லொலிமங்கலந் தொடங்கக்
கொட்டியபல் லியமுழங்கக் குழுமியவோ சையின் வெருண்டு
கட்டியதாம் பிறப்புனிற்றுக் கற்றாவொன்றெதிர்ந் தோடி
முட்டியதால் மணமகனை முடித்ததால் அவனி. (1)
மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலியாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை
உணர்வுடையார் பெறவுணர்வொன் றுமிலார்க்கொன் றுமிலை. (2)

இவற்றால் மேற்குறித்த உண்மை தெளிவாதல் காண்க.

மன்றல் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க்காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை

ஒலித்தலும் உண்டாமென் றுய்ந்துபோமாறே
வலிக்குமாம் மாண்டார் மனம். (நாலடியார்)

நிலையாமையே இவ் உலகில் நிலையாக உள்ளதென்பது இத னால் கூறப்பட்டது.

---



337. கோடி கருதிக் குதித்தான் சயத்திரதன்
கூடினான் சாவேன் குமரேசா—கூடி
ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல. (எ)

இ—ள்.

குமரேசா! வெற்றி பெற்றேமென்று தன் வாழ்வைக் குறித்துப் பல கோடி எண்ணிய சயத்திரதன் ஏன் உடனே மாண்டான் எனின், ஒருபொழுதும் வாழ்வது அறியார், கோடியும் அல்ல பல கருதுப என்க.

கருதுப—எண்ணுவர். கோடி ஓர் எண்: அஃதாவது நூறு நூறாயிரம். உம்மை இழிவு சிறப்பு. கோடியும் அல்ல பல என்றது மனத்தில் தோன்றும் எண்ணங்கள் அளவிடலரியன என்பது க(

அறியார் கருதுப என்று கூட்டுக. கருதுப என்பதைப் பெயராகக் கொண்டு கருதப் படுவன பல என்று காணினும் அமையும்.

ஒரு பொழுதளவும் தாம் நிலையாயிருந்து வாழ்வேமென்பதை உணராதவராயிருந்தும் கோடியினும் பலவாய எண்ணங்களை அறிவிலார் கருதுவர் என்பதாம்.

அற்ப வாழ்வையும் அற்ப அறிவையுமுடைய மக்கள் கற்ப கோடி காலம் வாழ்வார் போன்று பல கோடி எண்ணங்களை நினைந்து நினைந்து நெஞ்சு புண்படுவர் என்றபடி.

உலண்டு கூடு கட்டி யாங்கு அறிவிலார் பல கோடி நினைவுகளால் மனக்கோட்டை கட்டி மகிழ்வர்; அறிவுடையார் தமது நிலையாமையின் நிலைமையைத் தெளிந்து நிலையானதையே நினைந்து நிற்பர் என்பது கருத்து.

34-ம் அதிகாரம் நிலையாமை. 673

ஒரு கணமேனும், இவ்வுலகில் நிலைத்திருப்போம் என்னும் மை தமக்குத் தெரியாதிருந்தும் பல கோடி எண்ணங்களை நினைந்து களித்து அறிவிலார் அழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை சயத்திரதனபால் உணரப்படும்.

கதை.

சயத்திரதன் பாரதப் போரில் பதின்மூன்றும் நாளில் அருச்சுனனுடைய மகனாகிய அபிமன்னனைக் கொன்றுவிட்டான். அதனால், அருச்சுனன் சினந்து மறுநாள் பொழுதுபடுமுன் அவனைக் கொல்வதாகவும், இல்லையானால் நெருப்பில் விழுந்து தான முடிந்து செல்வதாகவும் சூளுரை புகன்று துணிந்திருந்தான். முறைப்படி மறுநாள் போர் தொடங்கினது. அன்று சயத்திரதனை நடுவே வைத்து எண்பதினாயிரம் தேர் வீரர்களை அவனைப் புடை சூழநிறுத்தப் பல்லாயிரங்கோடி போர்வீரர்களை அதனமேல் நிறுத்தத் துரோணர் படைத் தலைவராய் நின்று, காலவகைச் சேனைகளையும் நடத்தப் பொருதார். இருபத்தெட்டு நாழிகையா

கியும் அவனை இருக்க இடத்தையுங் கூட அருச்சுனன் பொருந்தப்பொற்றிலன். சாரதியாயிருந்த கண்ணன் தன் சக்கராழியால் கதிரவனை மறைத்தான். உலகம் இருண்டது. துரியோதனன் முதலானவர் மகிழ்ந்து சயத்திரதனை ஓர் அழகிய தேரில் அலங்கரித்துவைத்து "சயம் சயம்" என்று முழங்கிக் குதித்து அருச்சுனன் முன்னே நிறுத்தினர். "உடன்படிக்கைப்படி பொழுதுபோய்விட்டது இனித் தீயில் விழுந்து அருச்சுனன் இறந்து படுவான்; அவன் இறந்தவுடன் தருமர் முதலிய நால்வரும் தொலைவர்; அவர்கள் தொலைந்தபின் படைகளனைத்தும் பறந்துபோம்; அதன் பின் அரசு முழுவதும் நம் அரசனுக்கே உரியதாகும்; அதனால் புகழும் வெற்றியும் பொருவருஞ் செல்வமும் யான் பெற்று மகிழ்ந்து பெருஞ் சிறப்படைவேன்" என்று இவ்வண்ணம் பல கோடி எண்ணங்களைச் சயத்திரதன் கருதிக் கருதிக் களித்தான். கதிரவன் மறையவில்லை யென்னும் உண்மையைக் கண்ணன் விசயனுக்கு உணர்த்தி 'விடுக அம்பு' என விரைந்து நின்றார். உணர்ந்து வீரனும் உடனே விட்டான். துள்ளி நின்றவன் தலை துள்ளி எழுந்தது. ஒருபொழுதளவும் தாம் வாழ்வதை அறியாதிருக்கும்



கோடியினும் பலவாய எண்ணங்களை அறிவிலிகள் எண்ணியெண்ணி மகிழ்வர் என்பதை உலகம் அன்று இவன்பால் உணர்ந்தது. (விரிவைப் பாரதத்தில் காண்க.)

> உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
> எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
> மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
> சாந்துணையுஞ் சஞ்சலமே தான். (ஔவை.)

முன்னொரு காலத்தில் நாகன் என்னும் வேடனொருவன் வேட்டைக்குச் சென்றான். அங்கோர் யானையைக்கண்டு அதன்

மேல் அம்பினை எய்தினன். அதனால் அது மாண்டு விழுந்தது. வேடன் வியந்து அதன்பால் விரைந்து சென்றான். அங்குக் கிடந்த பாம்பு அவன் காலில் கடித்தது. அதனை வில்லால் அடித்தான். அது மடிந்தது. விடந்தலைக் கேறி வேடனும் மடிந்தான். சிறிதுபொழுது கழித்து நரி ஒன்று அங்கு வந்தது. பெருமகிழ்வு கொண்டது. யானை ஆறு மாதங்கட்கு உணவாகும், வேடன் மூன்று நாட்களுக்கு அமையும், அரவம் இன்றைக்குக் காணும், என்று கருதி நரி அன்று கொண்ட உவகைக்கு அளவேயில்லை. சுற்றிச் சுற்றி வந்தது. நரம்பால் கட்டியுள்ள வில்லின் நாணியை முதலில் தின்னக் கருதி நுனிப் பக்கம் இருந்த நரி அதனைக் கடித்தது. நாண் இற்றவுடன் வில் விலாந்து எற்றியது. அதனால் நரி மாண்டது. தன் மனைவியுடன் வந்து அவ்வனத்தில் உலாவிநின்ற மன்னன் இந்நிகழ்ச்சியைக் கண்டு நாமும் இவ்வாறுதானே பல கருதி மாள்கின்றோம் என்று நிலையாமையை அஞ்சி உடனே துறவுகொண்டான். இதுவும் கண்டு கருதத்தக்கதாதலான் இதனடியில் காட்டப்பட்டது.

கரியொரு திங்களாறு கானவன் மூன்றுநாளும்
இரிதலைப் புற்றுநாகம் இன்றுணும் இரையாமென்று
விரிதலை வேடன்கையில் விற்குதை நரம்பைக்கவ்வி
நரியனுர் பட்டபாடே நாங்களும் படுவர்மாதோ.

(நரி விருத்தம்)

தம் நிலைமையை உணராமலே அறிவிலிகள் பல கருதுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

338. கூடிவந்த தன்மனைவி கொண்டவுயிர் காணாதேன்
கூடுபட்டுங் கண்டான் குமரேசா—நாடின்
குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. (அ)

இ—ள்.

குமரேசா! தேவசன்மா, தன் உடன் வந்த மனைவியின் உயிரைக் காணாது என் உடம்பை பட்டும் கண்டான் எனின், உடம்போடு உயிரிடை நட்பு, குடம்பை தனித்து ஒழியப் புள் பறந்தற்று என்க. குடம்பை—பறவைக் கூடு.

புள்—பறவைகளெல்லாவற்றிற்கும் பொதுவான பெயர்.

உடம்போடு உயிரிடை நட்பு—உடம்புக்கும் உயிர்க்கும் உளதாய உறவு. உயிருடை எனவும் பாடம்.

புள் பறந்தற்று—பறவை பறந்து போன தன்மைத்து.

நட்புப் பறந்தற்று என்று காண்க. உயிர்க்கும் உடம்பிற்கும் அமைந்துள்ள உறவின் தன்மையை உணர்த்துதற்கு நட்பு என்றார். அதன புன்மை குறிப்பாலிழிக்கப்படுதலால் இது குறிப்பு மொழி என்க.

குடம்பையை விட்டுப் பறவை பறந்து போதல் போல் உடம்பினை விட்டு உயிர் பிரிந்துபோம் எனபதாம்.

உடம்பு தனியே கிடக்க உயிர் பிரிந்து போதல் எதுபோல்வ தெனின், கூடு தனியே கிடக்கப் பறவை பறந்து போதல் போலும் என்பார் "உயிரிடை நட்பு, புட் பறந்தற்றே" என்றார்.

உடம்பு தனித்தொழிய உயிர் போதலை உணர்த்துதற்குப் புள்ளை உவமை காட்டியது அதன் இயல்பு நோக்கி என்க.

குடம்பையும் புள்ளும், உடம்பிற்கும் உயிர்க்கும் இதில் முறையே ஒப்பாய் நின்றன.

இனி, உடன்தோன்றல், ஒன்றாய் இற்றல், காலம் வந்துழிப் பிரிந்துபோதல், பின் அதில் புகாது ஒழிதல ஆகிய உடலுயிர்க ளின் செயல்கள் முட்டைக்கும், அதனுள் இருக்கும் புள்ளுக்கும் பொருந்திநிற்றலால் குடம்பையை முட்டை என்று கொண்டு பொருள் காணினும் அமையும்; ஆயினும், முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்பட்டுத் துவண்டு கிடக்குமே யன்றிப் பறந்துபோதல் இல்லாமையானும், அவ்வமயம் அது புள் என்று பெயர்கொள்ளாமையானும், "புள் பறந்தற்று" என்பதே இங்குச் சிறந்தமையானும், இவ் அரிய அமைவில ஒருவகை எளிய அமையின்மையும் அமைந்துள்ளது என்க.

உடம்பைத் தனியே ஒழித்துவிட்டு ஒருவரும் அறியாவண்ணம் உயிர் ஒளிந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கமலவதியால் உணரப்படும்.

## கதை.

இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் மதுரையின் வடகிழக்கிலுள்ள திருப்பத்தூர் எனும் நகரில தேவ சன்மா என்னொரு வேதியனிருந்தான். அவன் கமலவதி என்னும் கன்னியை மணந்து இல்வாழ்க்கை புரிந்துவருங்கால் ஒருநாள் தன் மாதுலனைக் காண விரும்பி மனைவியையும் குழவியையும் உடன்கொண்டு மதுரையை நோக்கி வந்தான். நெறியிடையிருந்த ஓர் ஆலமா நிழலில் அவ் இருவரையும் இருத்திவிட்டு அவர்க்காக நீர் நாடிச் சென்றான். அவ் ஆலமரத்தின நுனியில் முன்னரே கோக்கிக் கிடந்த அம்பு ஒன்று காற்றால் அலைப்புண்டு கீழே இருந்தவன் மேலே விழுந்தது. அதனால் அவன் உயிர் துறந்தான்.

சென்றவன் நீர்கொண்டு திரும்பி வந்தான். அயில்பட்ட மயில் போல் உயிர்போய்க் கிடக்கும் அவ் அழகியைக் கண்டு அருயிர் பதைத்தான். கலங்கி அறிவழிந்து கதறி அழுதான். இவ் அழகிய உடம்பிலிருந்து பழகிய அவ் உயிர் எவ்வாறு போயிற்றோ என்று ஏங்கி நொந்தான். பருவம வந்துழிக்குடம்பையை விட்டுப் பறந்து செல்லும் பறவைபோலக் காலம் வந்து



ழி உடம்பை விட்டு உயிர் பிரிந்து போய்விடும் ஆதலால் நீ வருந் திவாய்விடாதே என்று சிலர் மொழிந்து தேற்றினர். உடம்பிற்கும் உயிர்க்கும் உளதாய நட்பின நிலைமையை இவன் உணர்ந்து தெளிந்து குழந்தையோடு தன் மனையடைந்தான. (விரிவைக் கூடற்காண்டத்தில் காண்க)

கேளாதே வந்து கிளைகளாய் இற்றோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. (நாலடியார்.)

விடம்பயில் மயிர்மெய் வரிபுக் கிருளை
குடம்பையும் தானென்னல் கொள்கைத்தே கொலாம்
கடம்பயில கூத்தினை நடிக்கும் ஐவர் வாழ
உடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ. (தநிச.)

உடம்போடு உயிர்கொண்நின்ள உறவின் இயல்பு இதனால் உரைக்கப்பட்டது.

339. அன்றிறந்த சக்கியவான் அல்லிருக்கை யன்பிறந்து

குன்றுமெழுந்தார் குமரேசா!—என்றும்
உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. (கூ)

குமரேசா! அன்று இறந்த விழுந்த சத்தியவானும் விருத்தையும் ஏன் உடனே பிறந்து எழுந்தார் எனின், சாக்காடு உறங்குவதுபோலவும்; பிறப்பு உறங்கி விழிப்பதுபோலும் என்க.

சாக்காடு— இறப்பு. காடு தொழிற்பெயர் விகுதி.

இறத்தல் உறங்குதலையும் பிறத்தல் உறங்கி விழித்தலையும் ஒக்கும் என்பதாம்.

678. திருக்குறட் குமரேச வெண்பா.

உறங்குவதையும் விழிப்பதையும் இறப்புக்கும் பிறப்புக்கும் ஒப்பிட்டார் இயல்பாகவும் விரைவாகவும் உயிர்கட்கு அவை மாறி மாறி உளவாம் என்பது கருதி.

கூட்டை விட்டுப் பறவை போதல்போல் உடம்பினை விட்டு உயிர் போம் என்று மேலே கூறினர்; இதில், அவ்வுயிர் மீண்டும் மீண்டும் உடம்பெடுத்து நின்று மாண்டு மாண்டு தோன்றும் என்பதை உவமையால் விளக்கினர்.

நீரோடு தட்பமும், நெருப்போடு வெப்பமும் எப்படி இயல்பாக அமைந்துள்ளனவோ அப்படியே உடலோடு சாக்காடு உறைந்துள்ளது என்க.

உறக்கமும் விழிப்பும் போல் இறப்பும் பிறப்பும் உயிர்கட்கு மாறி மாறி வருமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியவானிடமும், விருத்தையாலும் உணரப்படும்.

## கதை 1.

சத்தியவான் தனது மனைவியாகிய சாவித்திரியுடன் நீரதம்

என்று புலம்பியழுதார். அவ்வமயம் அங்குக் குச்சக முனிவர் வந்து தம் தவ மகிமையால் அவ்வுயிரை மறலியிடமிருந்து மீட்டுக் கொணர்ந்தார். உடனே அஃது அவ் உடலிற் புகுந்தது.

உடற்குள்உயிர் வந்திட—லும்புகுந்ததும்மெய் யுணர்வுசிறி
துயிர்த்த காசி
துடித்தனகால் பதைத்தனாகம் நலங்கிமுகம் விளங்கியதால்
துவண்ட தாகம்
எடுத்தனகை அசைந்தனதோள் இமைத்தனகண் விரித்தனவா
யினைய காலை
மடக்கொடியும் துயிலுணர்ந்தாள் போலெழுந்தாள் எல்லோரு
மருங்கிற் சூழ்ந்தார்.

இவ்விருத்தையே மார்க்கண்டருடைய தந்தையின் தந்தையாகிய மிருகண்டு முனிவருக்கு மனைவியாயினள். உறங்குவதுபோலும் இறப்பு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு என்பதை உலகம் இவ்விருவர் பாலும் அன்று உணர்ந்து தெளிந்தது. விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

இறப்பும் பிறப்பும், உறக்கமும் விழிப்பும்போல் மாறி மாறி வருமென்பது இதனால் கூறப்பட்டது.



340. கண்டோர் சசித்துவசன் செப்பவுயிர் பல்லுடம்பு
கொண்டலைந்த தென்னே குமரேசா—கொண்டுநிற்கும்
புக்கில் அமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு.

குமரேசா! சசித்துவசனது மெய் உயிர், பல உடம்புகளிலும் புகுந்து அலைந்தது ஏனின், உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு புக்கில் அமைந்தின்று கொல் என்க.

புக்கில்—புகுந்து நிலையா யிருக்கு மிடம்.
அமைந்தின்றுகொல்— அமைந்ததில்லை போலும்.

துச்சில்—ஒதுக்கிடம்; அஃதாவது இரவலாக ஒதுங்கித் தங்கும் இடம். துச்சில் இருந்த உயிர்க்குப் புக்கில் அமைந்ததில்லை என்றது பல்வகை உடம்புகளினும் புகுந்து அஃது ஒன்றினும் நில்லாது நீங்குமென்பது கருதி.

நிலையான உயிர், நிலையாயிருத்தற்கு ஒரு நிலையான நல்ல இல்லம் அதற்கு இதுகாறும் அமைந்ததில்லை என்பது கருத்து.

நிலையில்லாத உடம்புள் நிலைத்திருக்கும்பொழுதே நிலையேறுடைய தன்மையை ஒருவன் பெறவேண்டுமென்பது குறிப்பு.

உடம்புகளுள் இரவலாக ஒதுங்கித் தங்கியிருக்கும் உயிர்க்கு என்றும் நிலையாகப் புகுந்து இருத்தற்கோர் இடம் இன்னும் அமைந்ததில்லையோ என்பதாம். புக்கில் அமைந்ததாயின் துச்சில் இருந்த உயிர் அலையாதென்பது தெளிவாதலால் கொல்லோ என்றது ஐயமாயிற்று. நிலைபெற்ற இல்லாகிய வீட்டினை அடையும்வரையும் உயிர் நிலையின்றி அலையும் என்பது கருத்து.

ஓர் இல்லில் ஒதுக்குக் குடியிருப்போர் அவ் இல்லிற்குரியவர் விரும்பும்வரையும் இருந்து வெறுத்தவுடனே வெளியேறி விடுவர்; அதுபோல், கொடு நோய்களுக்கு உரிய இடமாயுள்ள உடம்புகளுள் உயிர் புகுந்து ஒதுங்கியிருந்து அவை அடங்கியி



ருக்கும் வரையும் அமர்ந்து அவை நிலை திரிந்தவுடனே அகன்று போய் அவ்வாறே மாறி மாறி அலைந்துவரும் என்க.

ஒதுக்குக் குடியிருக்கின்ற ஒருவனுக்கு அவ் வீடு எவ்வளவு உரிமையுடையதோ அவ்வளவே உயிர்க்கு உடம்போடு உளதாய உறவு என்பது குறிப்பு.

பல்வேறு உடம்புகளுள்ளும் புகுந்து சிறிது காலந் தங்கி ஒன்றிலும் நிலையின்றி உயிர் திரிந்து வரும் என்பதைப்

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

என்னும் அருள்மொழிகளினிது விளக்குகின்றன.

ஒரு நிலையில் நில்லாமல் உடல்கள்தோறும் உயிர் புகுந்து மீளும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சசித்துவசன் பால் உணரப்படும்.

## கதை.

சசித்துவசன் என்பவன் இற்றைக்குப்பல நூற்றாண்டுகட்கு முன்னர்ப் பல்லவதேயத்தை ஆண்டிருந்த ஒரு மன்னவன். நல்ல சீலமுள்ளவன். இவனுடைய மனைவி பெயர் சுசாந்தை. இவ்விருவரும் கணவனும் மனைவியுமாய் முன்னர்ப்பல உடம்புகளிலும் புகுந்திருந்து பொருந்தியின் புற்றார். பின்னர் வணிகமரபில் தோன்றி மருவிவாழுங்காலத்தில் அடைவாயுவு என்னும் ஓர் நோயால் அவன் ஆவிதீர்ந்தான். மனைவி வருந்தி அழுதாள். அவ்வமையம் அங்கு வந்த சவுபரி என்னும் முனிவரொருவர் இரக்கமுற்று அவனை எழும்படி மொழிந்தார். அவரது தவமாண்பால அவனும் எழுந்தான். மிகுதியாகப் புலால் தின்றுவந்த பாவத்தால் அவ்விருவரும் பின் கழுகுகளாய்ப் பிறந்து காடன் என்னும் வேடனொரு



வன் கண்ணியிற்சிக்கிக் கண்டகி நதிக்கரையில் கொல்லப்பட்டார். வேடன் அவற்றையறுத்துச் சுட்டு ஊனை உண்டு எஞ்சிய என்புகளை நதியில் வீசியெறிந்தான். அந்நதியிற்கலந்த கலத்தின் பயனாக

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

நில்லாதவற்றை நிலையென்று உணர்தல் புல்லறிவாகும். செல்வம் கூத்தாட்டுக் கூட்டம்போல் திரண்டுவந்து பின் பிரிந்துபோம். அது நிலையாக நில்லாதாதலால் உடனே அதனால் அறம் செய்து கொள்ளவேண்டும். நாளினை நம்முயிரை அறுக்கும்வாள் என உணர வேண்டும். மூப்பு வருமுன்னரே நல்வினையை விரைந்து செய்துகொள்ளவேண்டும். நேற்று இருந்தான் இன்று செத்தான் என்னும் பெருமைதான் இவ் உலகில் மிகுதியாக உள்ளது. ஒரு கணமேனும் உயிர், உடலோடு கூடி வாழும் என்பதை ஒருவரும் அறியார். குடம்பையை விட்டுப் பறவை பறந்துபோதல்போல் உடம்பினைவிட்டு உயிர் பிரிந்துபோய்விடும். இறப்பும், பிறப்பும் உறக்கமும், விழிப்பும் போல் மாறி மாறி வரும். ஒருடம்பினும் உயிர் நிலையாக நில்லாது.

௩௪-வது நிலையாமை முற்றிற்று.

# ௩௫-ம் அதிகாரம் துறவு.

அஃதாவது உடல்முதல் உலகினுள்ள எல்லாப் பொருள்களின்மேலும் உளதாய பற்றுக்களை அறவே விடுதல். உற்ற பொருள்களெல்லாம் முற்றும் அழியும் எனனும் உண்மையுணர்வு உதித்த பின்னரே இஃது உதிக்கும் ஆதலால் நிலையாமையின் பின் நிறுத்தப்பட்டது. அதிகார இயைபும் இதனானே தெளிவாம்.

341. பெற்றசெல்வம் எல்லாம் பிருகசதன் என்துறந்து
குற்றமற நின்றான் குமரேசா—உற்றறிந்தே
யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். (௧)

குமரேசா! அரச செல்வம் முழுவதும் நீங்கிய பிருகாதன் ஏன் யாதொரு நோதலும் இலனாய் அமைதியுற்றிருந்தான் 85



எனின், யாதனின் யாதனின் நீங்கியான், அதனின் அதனின் நோதல் இலன் என்க.

நோதல்—துன்பம். நீங்கியான்—துறந்தவன்.

யாது என்னும் வினாப் பெயர் அன்சாரியையும் இன் உருபும் அடைந்து யாதனின் என நின்றது. அஃது என்னும் சுட்டுப் பெயர் ஆய்தம் கெட அன்சாரியையும் இன் உருபும் பெற்று அதனின் என நின்றது. பொருள்கள் பலவாகலின் அடுக்கியருளினார்.

துறந்தவனுக்குத் துன்பம் இல்லை என்பார் நீங்கியான் நோதல் இலன் என்றார்.

யாதொரு பொருளின் நின்றும் யாதொரு பொருளின் நின்றும் ஒருவன் பற்று நீங்கினான், அதனின் நின்றும் அதனின் நின்றும் வருகின்ற துன்பம் அவனை அடைதல் இலன் என்பதாம்.

பொருள்கள் மேல் உள்ள பற்றுக்களை ஒருவன் எவ்வளவுக்கு எவ்வளவு விடுகின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு துன்பத்தில் நின்று அவன் விடுபடுகின்றான் என்பது கருத்து.

உலக வாழ்க்கையில் பற்று நீங்கினவனுக்குத் துன்பம் நீங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிருகாதன்பால் உணரப்படும்.

பிருகாதன் என்பவன் விதேகநாட்டு வேந்தன். அழகும்

வீரமும் அழகையும் பெற்றவன். பேரறிவுடையவன். தேவ விரதன் என்னும் புதல்வனைப் பெற்றுச் சிறந்து வாழ்ந்து வருங் கால் ஒரு நாள் மேன் மாடத்தில் நிலா முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்தான். முதிர்ந்து உதிர்ந்த மா இலை ஒன்று தன்முன் விழக் கண்டான். தனது அழகிய கையால் அதனை எடுத்தான். தளிராயிருக்கும்பொழுது அது பெற்றிருந்த அழகும் செவ்வி யும் இப்பொழுது எங்கே போயின என்று அதன் முதுமையை நினைந்து தன் பிறவியை முனிந்தான். துறவினை விரும்பினான்.

### 35-ம் அதிகாரம் துறவு. 685

எரிபுரை எழில்தாய இளந்தளிர் இரண்டொளின்
மரகத உருவமெய்தி மற்றது பசலைகொண்டு
கருகிலை யாகிவீழ்ந்து சரிந்திடல் முதல்கண்டும்
வெருவிலர் வாழ்துமென்பார் வெளிறறிவினை விலக்கலாமோ.

என்று அவ்விலையின் இயல்பால் நிலையாமையை உணர்ந்து இரங்கி அரசுரிமைகளை ஒவ்வொன்றாக நீக்கினான். முடிவில் தன்னுடைய புதல்வனுக்கு முடி புனைந்து முடியா இன்பத்தைக் காண அடைய முயன்றான். அனைத்தையும் துறந்து அடவியிற் புகுந்து ஆசுகளை நோக்கி அருந்தவம் புரிந்து திருந்திய ஞானியாய்ச் சிறந்து விளங்கினான். பற்று இல்லாதவனாயிருக்கும் மனத்தைப் போல பனி மதியும் பதுமங்கடோறும் பொற்றிரள்சேர் இந்திரனார் அகம் அடையார் என்று தான் உணர்ந்து மகிழ்ந்தான். துன்பம் யாதும் இன்றி இன்பமெய்தி யிருந்தான். பொருள்கள்மேல் பற்று நீங்கினவனுக்குத் துன்பம் நீங்கும் என்பதை இவனே பொருந்தித் தெளிந்தான். (விரிவை மைத்திராயணி உபநிடதத்தில் காண்க.)

உறவு தந்தைதாய் ஒண்டொடி மாதரார்
சிறுவர் வண்புவி செல்வம பெரும்புகழ்
பிறவினும் படும் ஆசை பிரிந்தமெய்த்

துறவின் அல்லது துன்பம் அகலுமோ. (திருக்கூவப்புராணம்)

பற்று நீக்கினவனுக்கே துன்பம் நீங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

342. பண்டேன் இளமைப் பருவத்தே சங்கரர்மேற்
கொண்டார் துறவைக் குமரேசா—மண்டலம்
வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல. (உ)



குமரேசா! சங்கரர் ஏன் இளமைப் பருவத்தே துறவினை மேற்கொண்டார் எனின், துறந்தபின் ஈண்டு இயற்பால பல; அவை வேண்டின் உண்டாகத் துறக்க என்க.

ஈண்டு இயற் பால—இம்மையில் உளவாம் இயல்பினையுடையன.

பின்னர் நெடுங் காலம் உளதாயிருக்கும்படி முன்னமே ஒருவன் துறக்கவேண்டும் என்பார் "உண்டாகத் துறக்க" என்றார். என்றது இளமையிலேயே பற்று நீங்குக என்பதாம்.

காலம் உண்டாகவே காதல் செய்து உய்மின் என்றபடி. இன்பம் வேண்டின் இளமையிலேயே துறவு கொள்க; துறவு அடைந்தபின் இங்கு எய்தும் முறைமையையுடைய நலங்கள் பல என்பதாம்.

துறவால் துன்பம் நீங்குமென்று மேலே கூறினர்; இதில் அஃது அளவிலின்பத்தை உளவாக்குமாதலால் இளமையிலேயே அதனை அடைக என்றார்.

பேரறிவுடையவர் இளமைப் பருவத்தே துறவினை அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சங்கராசாரியர்பால் உணரப்படும்.

சங்கராசாரிய சுவாமிகள் இற்றைக்கு ஆயிரத்துத் தொளா யிரத்து எழுபது ஆண்டுகட்குமுன்னர்க் கேரளநாட்டிலே, காலடி என்னும் நகரிலே, வேதியர்குலத்திலே சிவகுரு என்பவருக்குப் புதல்வராய் ஈசுரவருடம் வைகாசிமதியில் அவதரித்தார். தாய்பெ யர் ஆரியாம்பாள். சிவ கலையாகிய இவர் இளமையிலேயே உயர் கலை பலவும் ஓதாதுணர்ந்தார். இவரது அழகும், அறிவும் குண நலன்களும் எவருடைய உள்ளங்களையும் கவருந் தன்மையன. காளைப் பருவத்தை இவர் எய்துமுன்னரே தந்தையார் காலம்



போயினர். உலகப் பொருள்களில் ஒரு பற்றும் இன்றி உயர்ந்த துறவொழுக்கத்தை இவர் கொண்டார். அதனைக் கண்டு தடுத்த தமது அருமைத் தாய்க்கு இதம் பல கூறித் தனியே இருந்துவி ட்டுப் பல இடங்கட்குச் சென்றார். அற்புதங்கள் பல அருளு டன் புரிந்தார். மிக வறுமையுற்றிருந்த அயாசிதர் என்னும் ஓர் அந்தணன் மனைவிபால் தாம் பிச்சையாக ஏற்ற ஒரு நெல்லிக்கனி யின் பொருட்டு அவ் இல்லம் எங்கும் பொன் மாரி பெய்வித்தார். நெடுங்காலம் வருந்தியிருந்த சதகிய சாதகன் என்னும் ஓர் அரச னுக்குப் புத்திரப் பேற்றை அருளினார். பரதகண்டம் முழுவது ந் திரிந்து முனிவர் பலரைக் கண்டு இனியவுரைகளாடி மதங்கள் பலவற்றையும் மறுத்துத் தம் மதத்தையே அணிபெற நிறுத்தி னார். அரிய சுருதிப் பொருள்களைத் தமக்கு உறுதிப் பொரு ளென எவரும் எளிதில் உணருமாறு தெளிவுறத் திருத்தினார். பல்லாயிரவரைத் தம சொல் வழி ஒழுக்கினார். பதுமபாதர், மண் டல மிசிரர், ஆனந்தகிரி, அத்தாமலகர் என்னும் இந்நால்வரும் அன்புறு சீடராய் எப்பொழுதும் இவரை அணுகியிருந்தனர். கேதாரம், சகந்நாதம், துவாரகை, பதரிகாச்சிரமம் முதலிய இட ங்களில் தம் பெயரால் மடங்களை நிறுவித்தமது அருமைச் சீடர்க

ளை அவைகளில் அமரச் செய்து மைசூர் நாட்டிலுள்ள ஒரு மலையின் சாரலில் ஓர் உயர்மடம் புதுக்கிக் கலைமகள் பீடத்தை அங்கு நிலைபெற அமைத்துத் தாம் நிலைபெற்ற இன்பத்தை மலைவுற எய்தினர். அப்பதி இப்பொழுது சிருங்ககிரி என்று வழங்கப்படுகின்றது. இவரது மத போதனை உலகமெங்கும் பரவியுள்ளது. "வேதாந்த சூரியன், வியாக்கியான வீரியன், அருங்கலை விநோதன், அந்தணர் சிந்திதன், பூமண்டல ஆசாரியன், புரையறு துறவினன்" என்று இவரை அனைவரும் புகழ்ந்தார். உலக குரு என்று உலகம் இன்றும் இவரைப் போற்றி வருகின்றது. இளமையில் துறந்தவர், அதனால் உளவரம் உயர் நலங்களை நெடுங்காலம் அடைவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைச் சங்கர விசயத்தில் காண்க.)

688 திருக்குறட் குமரேச வெண்பா.

காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.
(திருவாசகம்)

துறந்தவனுக்கு இளமையிலேயே பல நலங்களும் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

343. வெற்றிமிகு சீவகனேன் மேவியிளமை லாமொருங்கே
குறறமென விட்டான் குமரேசா— முற்றும்
அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு. (௩)

குமரேசா! தான் கொண்டிருந்த செல்வ முழுவதையும் ஏன் சீவகன் ஒருங்கே துறந்தான் எனின், ஐந்தன் புலத்தை அடல்வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல்வேண்டும் என்க.

அடல்—கொல்லுதல், கெடுத்தல், சமைத்தல், பொருதல். ஐந்து என்றது மெய், வாய், கண், முதலிய ஐம்பொறிகளை. ஐந்தன் புலத்தை அடல்வேண்டும்—ஐம்பொறிகள் வழியாக அடைகின்ற சுவை முதலிய ஐந்து புலன்களையும் அடுதல் வேண்டும். உலக இன்பங்களை நுகர்தற்காகத்தான் முன் விரும்பித் தொகுத்தவற்றை எல்லாம் அறவே துறக்கவேண்டுமென்பார் "வேண்டிய எல்லாம் ஒருங்குவிடல் வேண்டும்" என்றார்.

பொறிகளின் வாயிலாக அடைகின்ற ஐம்புல நுகர்ச்சிகளையும் கெடுத்தல் வேண்டும்; அவற்றிற்காகத் தான் விரும்பிக்கொண்டிருந்த எல்லாவற்றையும் ஒருங்கே விடுத்தல் வேண்டும் என்பதாம்.

35-ம் அதிகாரம் துறவு. 639

புல்லிய புலநுகர்ச்சிகள், எல்லையில்லாத அல்லல்களுக்கே ஏதுவாகுமாதலால் பிறவித்துன்பங்களை அறுக்க நின்ற துறவோர் அவற்றை அறவே முதலில் வெறுக்கவேண்டும் என்பதும் அவற்றிற்கு உரிமையாயிருந்த பொருள் முழுவதையும் ஒருங்கே துறக்கவேண்டும் என்பதும் கருத்து.

அடலும் விடலும், அகத்தும் புறத்தும் முறையே அமையும் என்க

அகத்தே பொறிகளை அடக்கிப் புறத்தே உள்ள பொருள்களையெல்லாம் அறவோர் அகலவிடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீவகன்பால் உணரப்படும்.

சீவகன் என்பவன் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரியிலேயிருந்த சச்சந்தன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகன். அறிவும் அழகும் ஆண்மையும் வாய்ந்தவன். சிறந்த போர்வீரன். இளமையும் எழிலும் இயைபுற அமைந்த காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்சரி, இலக்கணை என்னும் தனது மனைவியர் எண்மரோடும் இனிதமர்ந்து எல்லா நலங்களையும் நன்கு நுகர்ந்து இன்பமுற்றிருக்குங்கால், ஒருநாள் அவர்களனைவரையும் உடன்கொண்டு அழகிய பூஞ்சோலை ஒன்றில் புகுந்து அதன் வளமெலாங்கண்டு மகிழ்ந்து முடிவில் ஒரு பலாமரத்தின் அடியில் தேவியர் சூழச்சிறந்து வீற்றிருந்தான். அவ்வமயம் ஓர் ஆண்குரங்குத் தான் கவர்ந்து கொணர்ந்த பலாப்பழத்தைப் பிதிர்த்துச் சுளைகளை யெடுத்துத் தன் காதல் மந்தியைக் கனிந்து தழுவி உண்ணும்படி உவந்து கொடுத்தது. உடனே அச்சோலையைக் காப்பவன் ஓடிவந்து அவைகளை ஓட்டிவிட்டு அக்கனியைக் கவர்ந்து தானே உண்டு களித்தான். அதனைக் கண்டிருந்த சீவகன் புலனுகர்வின் இழிவையும் அதனால் உயிர்களுக்கு விளையும் பழியையும், தெளிந்து தன் தந்தையைக்கொன்று கட்டியங்காரன் கவர்ந்த அரசை



தான் வென்று கொண்டதுபோல் கடுவனைக் கலக்கிக் காப்பாளன் கவர்ந்துவாழும் இவ் உலகவாழ்க்கை நிலையற்றதென்று உணர்ந்து ஆருயிர்த்துணைவிகளையும், அரசுமுதலிய அரிய நலங்களையும் ஒருங்கே துறந்து அடவியில் புகுந்து அருந்தவம் புரிந்தான். மெய்யுணர்வுடையவர் ஐம்புலன்களையும் அட்டு வேண்டிய எல்லாம் ஒருங்கே விட்டுவிடுவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவை முத்திஇலம்பகத்தில் காண்க.

இன்கனி சுவருமந்தி கடுவனோ டிரியவாட்டி
நன்கனி சிலதனுண்ண நச்சுவேல் மன்னனோக்கி
என்பொடு மிடைந்தகாமம் இறுபொடு வெறுத்துநின்றான்
அன்புடை அரிவை கூட்டம் பிறனுழைக் கண்டதொத்தே. (1)

கைப்பழம் இழந்தமந்தி கட்டியன் காரனொத்த
திப்பழந் தாரந்துகொண்ட சிலதனும் என்னையொத்தான்
இப்பழம் இன்றுபோகத் தின்பமே போலுமென்று
மெய்ப்பட வுணர்வு தோன்றி மீட்டிது கூறினானே. (2)

வேட்கைமை யென்னும் நாவிற் காமவெந் தேறன்மாந்தி
மாட்சி யொன்றுமின்றி மயங்கினேற் கிருளைநீங்கக்
காட்டினார் தேவராவர் கைவிளக்கதனை யென்று
தோட்டியால் தொடக்கப்பட்ட சொரிமதக் களிற்றின் மீண்டான் (3)

இவை, மெய்யுணர்வு தோன்றிய பொழுது சீவகன் சொன்னவை.

புலன்களை அடுதலும் எல்லாவற்றையும் ஒருங்கே விடுதலுமே சிறந்த துறவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

344 ஓர்நாய் உடைமைக்கும் ஒங்குபுகழ்ப் பத்ரகிரி
கூர்கோவேன் கொண்டார் குமரேசா—தேரின்
இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து. (௪)

இ—ள்.

குமரேசா! ஒரு நாயைத் தனக்கு உடைமையாக வைத்திருந்த பத்ரகிரியார் பின் ஏன் அதனை மடைமை என்று கருதி வருந்தினர் எனின், ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பு ஆகும்; உடைமை மற்றும் பெயர்த்து மயல் ஆகும் என்க.

நோன்பு என்றது இங்கு அதனைச் செய்வார் மேல் நின்றது.

ஒன்று இன்மை நோன்பிற்கு இயல்பாகும் — ஒரு பொருளும் இல்லாமையே தவம் செய்வார்க்கு இயல்பாகும்.

மற்றும் பெயர்த்து மயல் ஆகும்—மீண்டும் மறுபடியும் மயக்குதற்கு ஏதுவாகும்

மெய்யுணர்வுடையவராய்த் துறந்து சென்றவர் ஏதேனும் ஒன்றை உடையவராயிருப்பின், அப்பற்று மறுபடியும் அவரை மயக்கத்தில் ஆழ்த்திவிடும் ஆதலால், "உடைமை மற்றும் பெயர்த்து மயலாகும்" என்றார்.

இன்மை, இயல்பாகும்; உடைமை, மயலாகும்; என்று காண்க.

முத்தியை எய்த விரும்புவார் தாம் பெற்றுள்ள பொருள் முழுவதையும் முற்றும் விடவேண்டுமென்று மேலுரைத்த அதனை விதிக்கால் ஒன்று உடையராயினும் அஃது அவர்க்கு நன்றாகாதென்று இதில் உணர்த்தினர் என்க.

இன்மையே தவமுடையார்க்கு நன்மையாம் என்பது கருத்து.

ஒரு பொருளும் இல்லாமையே தவஞ் செய்வார்க்கு இயல்பாகும்; ஏதேனும் ஒன்று உடைமை அவர்க்கு மீண்டும் மயலாகும் என்பதாம்.

இவ்வுலகில் இன்மை இழிவையும் உடைமை உயர்வையும் மக்கட்கு அடைவிக்கும்; ஆயினும், பிறவா இன்பம் பெற விரும்பிய பெரியோர்பால் அம் முறை மாறி நிற்கும் என்க.

தவஞ்செய்பவர் யாதாயினும் ஒரு பொருளை உடையராக விருப்பின் அதனால் அவர்க்கு இழிவே வருமென்பது இதில் கீர்த்தப்பட்டது. இவ்வுண்மை பத்ரகிரியார்பால் உணரப்படும்.



### கதை.

பத்திரகிரியார் தாம் பெற்றிருந்த அரசு செல்வ முழுவதையும் முற்றத் துறந்து திருவாலயை அடைந்து தனியான இடத்தில் அமர்ந்து தவம்புரிந்திருந்தார். இருக்குங்கால், ஒரு நாய் இவர்பால் நன்றியறிவோடு நணுகி யிருந்தது. உச்சிப்போதில தாம் உண்டு மிகுந்த பிச்சைச் சோற்றை அதற்கும் இட்டு அன்பு செய்து வந்தார். தமக்குத் திருவருள் புரிந்த ஞானமூர்த்தியாகிய பட்டினத்தடிகளும் அத்தலத்தில் எழுந்தருளி யிருந்தார் அவர், இவரது இவ்வன்பை ஒழிக்க விரும்பித் தம்பால் பிச்சைக்கு வந்த ஒரு யோக சித்தரை நோக்கி, "அதோ ஒரு சமுசாரி இருக்கின்றான் அவன்பாற் செல்க" என்று அருளி யிருந்தார். சித்தர் வந்து பத்திரகிரிபால் பிச்சை கேட்டார் என்பால் ஒன்றும் இல்லையே என்று அவர்பால் அன்போடு சொன்னார். நீ பெரிய சமுசாரி என்று அங்கிருவர் கூறி விடுப்ப யான் தேடி வந்தேன் என்று அம்மன்னு மாதவர் இன்னுரை பகர்ந்தார். என

கையில இருந்த ஓடும், காயும், அலவோ என்னை இங்ஙனம் எண்ணும்படி செய்ததென்று வருந்தி, அவ் இரண்டையும் ஒருங்கே ஒழித்தார். ஒன்றும் இன்மையே துறவோர்க்கு நன்று என்று அடிகள் சுட்டிக்காட்டியதை அவர் அறிந்து தெளிந்தார். துறந்திருந்தும் ஒரு நாயின் உடைமையால் தாம் அடைந்த இழிவினை எண்ணி இரங்கினர். துறவோர்க்கு உடைமை முடைமையாம் என்பதை இவர் அன்று உலகறிய உணர்த்தினர். (விரிவை இவர் சரிதையில் காண்க)

மனைவியர் மக்களில் வாஞ்சை யுண்மையே
புனைதரு கலமெல்லாம் போக்கித் தாழ்த்திடும்
மனைவியர் மக்களில் வாஞ்சையின்மையே
புனைதரு பரகதி பொருந்த உய்க்குமே. (சாசிரகசியம்)

ஒன்றும் இன்மையே துறவோர்க்கு நன்று என்பது இதனுல் கூறப்பட்டது.

---



345 பூவனையும் பொற்கலனும் போக்கியபர் பட்டணத்தார்
கோவணமேன் கொண்டார் குமரேசா—பூவுலகில்
மற்றும் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றூர்க் குடம்பும் மிகை.

குமரேசா! பூவணையையும், பொற்கலன்களையும் துறந்து பட்டினத்தார் ஏன் கோவணம் கொண்டார் எனின், பிறப்பு

அறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை; ஆனபின் மற்றும் தொட-ர்ப்பாடு எவன் கொல் என்க

பிறப்பு அறுக்கல் உற்றார்—பிறவியை நீக்குகின்ற துறவோர். உடம்பின் உரிமைச் சிறப்பை உம்மை உணர்த்துகின்றது. மற்றும் தொடர்ப்பாடு என்றது மனைவி, மக்கள், துணைவர், ஒக்கல் இல்லம் முதலிய வேறு சில புறப்பொருள்களை. பிறப்பினை அஞ்சிப் புறப்பொருள்கள் எல்லாவற்றையுந் துறந்து பேரின்பத்தை எய்தற்கு விரைகின்ற தூய உயிர்க்கு, வினையுள்ள அளவும் விடாது நிற்கும் உடம்பு தடையாயிருக்குமாதலால் அது மிகையாயிற்று என்க. உற்றார்க்கு மிகை என்று உணர்க.

பிறவி அறுக்க நினைக்கும் துறவிகட்கு தம் உடம்பே மிகையாகத் தோன்றும் எனின், வேறு பொருள்களை அவர் [illegible] என்பதாம் வெறுத்து நீக்குவர் என்பதை விளக்குகின்றது.

?, தம் உடம்பையே மிகை என்று கருதவேண்டிய துறவிகள் மற்றுஞ் சில பற்றுக்களை உற்று நிற்பது என்ன பயன் கருதியோ எனவும் இது பொருள்படும்.

எல்லாப் பொருள்களையுந் துறந்து, உடம்பையும் மிகை என்று துறவோர் கருதியார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை பட்டினத்தார்பால் காணப்படும்.

694 திருக்குறட் குமரேச வெண்பா.

கதை.

அரசரும் விரும்பத்தக்க பெருந் திரு உடையராய் எல்லா நலங்களையும் இனிது நுகர்ந்திருந்த பட்டினத்தார், உலகப் பொருள்கள் ஒன்றும் நிலையா என்னும் உண்மை உணர்வு உதித்த உடனே தாம் பெற்றிருந்த எல்லாப் பொருள்களையும் முற்றத் துறந்து பற்றற்று நின்றார். தனியிடம் ஒன்றில் இனிதுற அமர்ந்து அடிகள் ஒரு நாள் அகமகிழ்ந்திருந்தார். பண்டு இவரோடு பழகியிருந்த அரசனொருவன் கண்டு அருகில் வந்து நின்று பூவணையையும், பொற்கலன்களையும் ஒழித்துவிட்டு ஒன்றும் இல்லாதவராய் ஒடுங்கியிருக்கும் நீர் இதனால் என்ன பயன் கண்டீர் என்று இரங்கிக் கேட்டான். "எல்லாமுடைய நீ நின்று சொல்லவும், ஒன்றுமில்லாத நான் இருந்து கேட்கவும் ஏற்றதொரு பயனை யான் இன்று கண்டேன் இனி எல்லாங்காண்பேன்." என்று இவர் எதிர்மொழி தந்தார். அடிகளது அகத்துறவையும், அருட்பெருக்கையும் அரசன் அறிந்து அகமகிழ்ந்தகன்றான். அடிகள் பல இடங்களிலுந் திரிந்து முடிவில் திரு ஒற்றியூரை அடைந்து தாம் உற்றிருக்கும் உடம்பு நீங்கு வரையும் பொறுத்திராமல் அதனுடனே சமாதியில் அடங்கி மறைந்தார் துறவோர் தம் உடம்பையும் மிகை என்று கருதி வீட்டினை அடைய விரைவர் என்பதை உலகம் இவர்பால் அமையக் கண்டது. விரிவை இவர் நூல் காண்க.

என்பினை நரப்பிற் பின்னித் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணகம் பொழுகி நாறித்
துன்பநோய் வெற்றிருக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
வன்பினை யுடம்பே ஆவி வருத்திடும் பிணிவேறில்லை.

(காஞ்சிப்புராணம்).

நாயினுக் கிரையோ நரியினுக் கிரையோ நருணைடக்(
பிறம்பற்

குமரேசா! சரபங்கர் அயனுலகத்தையும் தள்ளி அதனினும் உயர்ந்ததின் கண்ணே புகுந்தார் எனின், யான் எனது என்னும் செருக்கை அறுப்பான், வானோர்க்கு உயர்ந்த உலகு புகும் என்க.

செருக்கு அறுப்பான் — மயக்கத்தை ஒழிப்பவன்.



வானோர்க்கு உயர்ந்த உலகம் என்றது, முத்தி உலகத்தை. யான் எனது என்னும் செருக்கு என்றது அனை உடம்பைத் தான் என்றும், ஒழியும் பொருளைத் தன்னுடையது என்றும் கருதிக் களிக்கும் மயக்கத்தை. அதனை அறுத்தலாவது நிலையாமையாகிய அவற்றின் இயல்பினையுணர்ந்து அவற்றின் மேல் வைத்துள்ள பற்றுக்களை அறவே ஒழித்தல். அவை அகப்பற்று எனவும், புறப்பற்று எனவும் உரைக்கப்படும். அறுப்பான் புகும் என்று காண்க.

யான் எனது என்னும் மயக்கத்தை அறுத்தவன், வானவர்களும் அடைதற்கரிய முத்தியுலகத்தை அடைவான் என்பதாம்.

எல்லா உலகங்களினும் மேம்பட்டுள்ள வீட்டுலகத்தை ஒருவன் அடையவேண்டுமாயின் அவன் இவ்வுலகப்பற்றுக்களை அறவே ஒழிக்கவேண்டுமென்பது குறிப்பு.

அகம் புறம் என்னும் இருவகைப் பற்றுக்களையும் விட்டவர் இந்திரன் முதலிய இறைவர் பதங்களையும் எய்தாமல் அந்தமிலின்பத்து அழிவில் வீட்டையே எய்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சரபங்கர்பால் உணரப்படும்.

கதை.

என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவு இராமாயணத்தில் காண்க.

சிறுகாலை யிலா நிலையோ திரியா
குறுகா நெடுகா குணம் வேறுபடா
உறுகால் கிளர் பூதமெலா முடினும்
மறுகா நெறி மெய்யுவன் வாழுடையாய்

இஃது, அயனுலகம் வருக என்று அமரர்கோன் அழைத்த பொழுது சரபங்கர் சொல்லியது. சித்தியுலகின் இயல்புகளையும் தத்துவ ஞானிகளது சத்த நிலைகளையும் இதில் உய்த்து உணர்க.

இருவுலகப் பற்றுக்களையும் விட்டவரே இன்ப வீட்டினை எய்துவரென்பது இதனால் கூறப்பட்டது.

347 பண்டு சவுபரியும் பற்றொன்று பற்றியதால்
தொண்டரேன் துன்புற்றார் குமரேசா—மண்டியுற்றும்
பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. (ரு)



இ—ள்.

குமரேசா! சவுபரி என்பவர் பற்று ஒன்று பற்றியதால், ஏன் துயரம் உற்றார் எனின், பற்றினைப் பற்றி விடாதவர்க்கு இடும்பைகள் பற்றி விடா என்க. பற்றுதல்—இறுகப்பிடித்தல்.

விடாதவர்க்கு—விடாதவரை. குவ்வுருபு இதில் ஐயுருபாகக் கொள்ளப்பட்டது. யாதன் உருபிற் கூறினும் பொருள் செல்லும் வழியே உருபு செல்லும் எனக. விடாதவரை விடா

என்று காண்க.

பிறவித் துன்பம் தன்னைப்பற்றுதொழிய ஒருவன் விரும்புவனாயின் தான் பற்றி நிற்கும் உலக இச்சைகளை அவன் ஒருங்கே ஒழித்துவிடவேண்டுமென்பது கருத்து.

பற்றுக்களைப் பற்றி விடாதவர்களைத், துன்பங்களும் பற்றி விடா என்பதாம்.

இருவகைப் பற்றையும் அறவே விடுத்தவர் சரிபேின்பத்தை எய்துவர் என்று மேலே கூறினர். அவற்றை விடவில்லையானால் என்ன என்பாரை நோக்கி விடாதவரைத் துன்பங்கள் விடா எனறு இதில் உணர்த்தினர் என்க.

'தனக்கு இன்பந் தருமெனறு கருதி உலகப் பொருள்கள் மேல் ஒருவன் பெருங் காதல் கொள்வனாயின், அஃது அளவில்லாத பிறவித் துன்பங்களை என்றும் அவனுக்கு உளவாக்கும் ஆதலால் "பற்றினை விடாதவரை இடும்பைகள் விடா" என்றார்.

பற்றினையுடையவர் துன்பங்களை அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை சவுபரியால் உணரப்படும்.

## கதை.

சவுபரி என்பவர் மேதாமித்திரர் என்னும் ஓர் அரசரையுடைய புதல்வர். இவர் மனோரமை என்னும் கன்னியை மணந்து இல்லறத்திருந்து இன்புற்று வாழ்ந்து பின் பிறவிக்கஞ்சி அஞ்சி



கொடுந்துறவடைந்தார். தவவலத்தால் பலநலங்களும் எய்தினவிய இவர், ஒருநாள் யமுனை நதியையடைந்தார். அதன் அகன்கரை மருங்கே உலவினர் அதில் இரண்டு மீன்கள் ஒனறோடு ஒன்று கலந்து மகிழ்வதையும், பல குஞ்சுகள் அவற்றை அணைந்து நிற்றலையும் கண்டார். காதலோடு மீண்டார். அங்

கோர் பனிமலர்ச் சோலையில் அன்றிலொன்று தன் பெடையை மருவி ஆரா அன்போடு அணைந்து நிற்பதையும் அமைந்து கண்டார். மையல் கொண்டார். தாமும் அவ்வாறே பெண் இன்பம் பெற எண்ணி விரைந்தார். உற்ற துறவை ஒழித்துவிட்டுப் பற்றுடன் சென்றார். மாந்தாதாவின் புதல்வியர் பலரைத் தம் மதி நலத்தால் மணந்தார். அமைந்த இன்பத்தை அவர்பால் அமர்ந்து துய்த்தார். தாம் அடைந்த காதலால் இடும்பைகள் பல தம்மை அடையக் கண்டார். பற்றே பிறவித் துயரங்கட்குக் காரணம என்பதைத் தாம் உற்றறிந்தார். அதனபின் உற்ற பற்றையெல்லாம் முற்றும் ஒழித்துவிட்டு உண்மைப் பொருளையே நாடி உயர் தவஞ் செய்தார். பற்று நீங்கினவர்க்கே துன்பம் நீங்கும் என்பதையும் அதனை விடாதவரைத் துயரங்கள் விடா என்பதையும் உலகினுக்கு இவர் உணர்த்தி நின்றார். விரிவைப் பாகவதத்தில் உணர்க.

பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது பின்னது
அற்றோர்க் குறுவது அறிகென் றருளி. (மணிமேகலை)

பற்று நீங்காதவர்க்குத் துன்பங்கள் நீங்கா என்பது இதனால் கூறப்பட்டது.

---

348 சிற்றம் பலர்முத்தி சேர்ந்தார் சிவகுமர்
குற்றமுற்றார் என்னே குமரேசா—முற்றத்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். (அ)

குமரேசா! சிற்றம்பல நாடிகள் முத்தியை அடைந்தார்; சிவசருமர் ஏன் துயரம் பொருந்தி நின்றார் எனின், தீரத் துறந்தார் தலைப்பட்டார், மற்றையவர் மயங்கி வலைப்பட்டார் என்க.

படிதல்—கூடுதல், அடைதல். தீரத்துறந்தார்—முற்றத் துறந்தவர். தலைப்பட்டார்—முத்தியை அடைந்தார். மற்றையவர் என்றது உலகப் பற்றுக்களை ஒழியாதவரை. வலை யானது சனனப் பிறப்பினை கம்பிரும்பியாய்த்து உரிமையோடு திரிய ஒட்டாது விலங்குகளையும் பறவைகளையும் தன்னகப்படுத்தி இன்னல் தருகின்ற வலைபோல், தமக்கு இயல்பான உயர்நிலை எய்திப் பேரின்பத்தினை நுகர ஒட்டாதபடி உயிர்களைப் பிணித்து வருத்தலின் பிறப்பு வலை எனப்பட்டது. இஃது உருவகம். தலைப்பட்டார் என்று இறந்த காலத்தாற் கூறியது விரைவும் தெளிவும் பற்றி என்க.

முற்றத்துறந்தார் முத்தியை அடைந்தார்; அங்ஙனம் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையில் அகப்பட்டார் என்பதாம்.

மேல், பற்று விடாதவரைத் துன்பம் விடாது என்றார்; அதனை விட்டவரது உயர்வையும், விடாதவரது இழிவையும் இதில் விளக்க உணர்த்தினர்.

பற்றறத் துறந்தவர் வீட்டினைப் பொருந்தி மெய்யின்புறுவர் என்பதும் அங்ஙனம் துறவாதவர் பிறவியிற் சிக்கிப் பெருந்துன்புறுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ் உண்மை சிற்றம்பல நாடிகள் பாலும், சிவசருமர் கண்ணும் தெளியப்படும்.

## கதை.

சிற்றம்பல நாடிகள் என்பவர் சற்றேறக்குறைய இற்றைக்கு

அறுநூற்று இருபது ஆண்டுகட்கு முன்னர் தொண்டை நாட்டிலே தோன்றியிருந்தவர். கருவி நூல்களும், அறிவு நூல்களும் கசடறக் கற்றவர். நல்ல செல்வமுள்ளவர். தம்மாயில் இருந்த ஒரு



சிறந்த இளம் பெண் இறந்துபோயினள். அவளைச் சுடுதற்கு உறவினரோடு முறைப்படி இவர் உடன் சென்றிருந்தார். அங்குச் சிதறிக் கிடந்த பலவகை எலும்புகளையும் பார்த்து நோக்கினார்: எத்தனை நன்மக்கள் இங்கு எரிந்து மறைந்தனரோ என்று இரங்கி நொந்தார். இவ் உலக நிலையினை எண்ணி நைந்தார்.

தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர்
முதியோர் என்னான் இளையோர் என்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப இவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்
கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ.

என்னும் இவ் அருமைப் பகுதியை நினைந்து நினைந்து நெடுமூச்செறிந்தார். அன்று முதல் உலகப் பொருள்களில் ஒரு பற்றுமின்றி உண்மையை நாடி ஒடுங்கியிருந்தார். இவரது மனநிலைமையைக் கண்டு பலர் துறவிகளாகி இவரை அடுத்திருந்தார். முற்றத் துறந்த இவரைத் தம் இல்லிற்கு எழுந்தருளச் செய்து ஒருவர் விருந்து செய்தார். அடியவரோடு அடிகளிருந்து அருந்துங்கால் அவசரத்தில் அறியாமல் அவ் அன்பர் அங்கிருந்த வேப்பெண்ணெயை நெய்யென எடுத்து இலையிற் படைத்தார். நிரம்பத் துறந்த இவர், யாதும் கூறாது அமைதியோடு உண்டார். பிறரும் அவ்

வாரே உன்னைச் சிவசருமர் என்பவர் மாததிரம் "இது வேம்பின எண்ணெய் மிகவும் கசக்கின்றது" என்று வெகுண்டுமொழிந்தார். அடிகள் அவரது பற்று அறுந் தன்மைக்கு இரங்கி அவரைத் தனியே பிரித்துவிட்டு இனிதே சென்று சிலகாலந் தங்கியிருந்து தன்னைப் பின்பற்றிவந்தவரோடு ஒருங்கே சமாதியாய் உயர்பதம் அடைந்தார். சிவசருமர் பற்றறுமையால் இறந்து பிறந்து பின்வரு ந்தியுழன்றார். முற்றத் துறந்தவர் முத்தியை அடைவர் என்பதை யும், அங்ஙனம் துறவாதவர், பிறவியில் படிவர் என்பதையும் உல



கம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது. (விரிவைச் சிவப்பிரகாசத் தில் உணர்க).

முற்றத் துறந்தவரே முத்தியை எய்துவர் என்பது இதனால் கூறப்பட்டது.

349 உற்றபற்றை முற்றும் ஒழித்தமணி மேகலையேன்
குற்றமில்லீ டுற்றாள் குமரேசா—உற்றுநின்ற
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். (௯)

-வி.

குமரேசா! பற்றுக்கள் முற்றும் விட்ட மணிமேகலை என் வீட்டின்பத்தைப் பற்றினள் எனின், பற்று அற்ற கண்ணே பிறப்பு அறுக்கும்; மற்று நிலையாமை காணப்படும் என்க.

பற்று என்றது உடம்பின் கண்ணும், பொருள்கள் மேலும், வைத்துள்ள இச்சையை. பற்றெனப்படுவது பசை இவ அறிவே என்றதின் காண்க. மற்று என்றது அறுதல் என்னும் வினைக்கு மறுதலையாய் நின்றது. நிலையாமை என்றது பிறப்பினை.

மற்று நிலையாமை காணப்படும்—பற்று அறுதபொழுது பிற.

விமே் காணப்படும். இருவகை அறுதல்களும் ஒருங்கே நிகழும் என்பதை ஏகாரம் உணர்த்தி நின்றது. இரவு நீங்கியபொழுதே இருள் நீங்குவது போல், பற்று நீங்கியபொழுதே பிறவி நீங்கி விடும் என்க. பற்றே பிறப்புக்குக் காரணம் என்பது கருத்து.

இருவகைப் பற்றும் ஒருவனுக்கு அற்றபொழுதே அஃது அவன பிறப்பினை அறுக்கும்; அவை அறாதபொழுது அழிவுறும் பிறப்பே அவனுக்குக் காணப்படும் என்பதாம்.

அறும் எனற்பாலது அறுக்கும் என எதுவின்மேல் நின்றது. ஒருவன், இருவகைப் பற்றையும் அறவே விடுவானாயின், அவன் பிறவியினின்று விடுபட்டு வீட்டினை அடைவான் எனபது கருத்து.



பற்றின்மையே பிறவிக்குக் காரணம் என்பதும், அஃது இல்லாதவர்க்குப் பிறப்பு இல்லை என்பதும், இதில் உணர்த்தப்பட்ட இவ் உண்மை மணிமேகலையால் உணரப்படும்

## கதை.

மணிமேகலை என்பவள் கோவலனுக்கு மாதவியிடம் பிறந்தவள். அழகு நிரம்பிய விழுமிய உருவினள். மணிமேகலை என்னும் காப்பியத்தின் தலைவி. சிறந்த கல்வியும், திருந்திய சிலமும் பொருந்தப் பெற்றவள். இளமையிலேயே மெய்யுணர்வுடையவளாய் உலக இன்பங்களை அறவே வெறுத்தாள். தனது அட்டழகைக் கண்டு காமுற்று நிறை உதய குமரனுக்கு மெய்யுணர்வு உதயமாகுமாறு பல இத மொழிகளை இனிது கூறினாள். தன பாட்டியாகிய சித்திராபதி என்பவள் உலக இன்பங்களில் தன்னை உட்படுத்தப் பல வகை முயன்றும் ஒனறிலும் மயங்காது உணர்வுடன் சென்றாள். ஒடுங்கியிருந்து அருந்தவம் புரிந்தாள். அதன் பயனாகத் தனது பழம் பிறப்பையும் உணர்ந்து தெளிந்தாள். முற்பிறப்பில தனக்குக் கணவனாயிருந்தவனும, இப்பிறப்பில்தன் மீது

பெருங் காதலால் வாருகுபவனுமாகிய உதயகுமரன் ஒருநாள் இவளை அணுகி உன் இளமைக்கும், பொழுதுக்கும் சிறிதும் இயல்பில்லாத கடுந் துறவை நீ ஏன் கொண்டாய் என்று

-னே அவனை இவள், உவந்து நோக்கினள்.

பிறத்தலும் மூத்தலும் பிணிப்பட் டிரங்கலும்
இறத்தலும் உடையது இடும்பைக் கொள்கலம்
மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து
மிக்க நல்லறம் விரும்புதல் புரிந்தேன். என்றும்,

வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கிற் புலால் புறத்திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடம் குற்றக்கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கவலைக் கையாறழுங்கல்



தவலா உள்ளம் தன்பால் உடையது
மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து
மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய். என்றும்,

அவன் உணர்வுற ஓதி உணர்த்தினள். பல்வேறிடங்கட்குஞ் சென்று தன் கல்வி நலத்தால் எல்லா மதத்தினரையும் எதிர்த்துரையாடிப் பற்று அற்றவர்க்கே பிறவியறும் என்னும் உண்மையை அனைவரும் ஒப்ப உணர்த்தித் துறவு நிலை நின்று தான் வழுவாதொழுகிப் பிறவா இன்பம் பெற்று மகிழ்ந்தாள். பற்று அற்றவர்க்குப் பிறப்பு அறும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து தெளிந்தது. விரிவை மணிமேகலையில் காண்க.

அற்றது பற்றெனில், உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில், அற்றிறை பற்றே. (திருவாய்மொழி)

பற்று நீங்கினவர்க்கே பிறவி நீங்கும் என்பது இதனால் கூறப்

பட்டது.

---

350 பற்றகன்ற காரைக்காற் பத்தினியேன் பற்றிநின்றார்
குற்றமற்றான் பற்றைக் குமரேசா—முற்றுகப்
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (ய)

குமரேசா! எல்லாப் பற்றுக்களையும்விட்ட காரைக்கால் அம்மையார் ஏன் இறைவன் தாளைப்பற்றி நின்றார் எனின், பற்று அற்றான் பற்றினைப் பற்றுக; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு என்க.

பற்று அற்றான் என்றது இறைவனை. பற்று—ஆசை, அன்பு தொடர்ச்சி, பிடித்தல் முதலியவற்றை உணர்த்தி நிற்கும்.

பற்று என்றது இங்கு அவ் இறைவன் அருளிய ஞான நெறியை. பற்றுக—பற்றிக்கொள்க. என்றது தியானம்செய்தலை.

ஒருவன் பற்று விடவேண்டுமானால் பற்றற்றான் பற்றினையே அவன் விடாது பற்றவேண்டுமென்பது கருத்து.



இயல்பாகவே பற்று அற்று விளங்கும் இறைவனது அருளியல்களைப் பற்றிக்கொள்க; விடாது வந்த உனது பற்று விடுதற்குக் கெடாது நின்ற அவற்றையே விடாது பற்றுக என்பதாம்.

மேல், பற்று அற்ற கண்ணே பிறப்பு அறும் என்றார்; அப் பற்று அறுதற்குப் பற்றுக்கோடாகப் பற்றவேண்டியது இன்னது என்பதை இதில் இனிது உணர்த்தினர்.

எல்லாப் பற்றுகளையும் விட்டவர் இறைவனருளையே பற்றி நின்று ஈறில் இன்பம் எய்துவரெனபது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை காரைக்கால் அம்மையால் காணப்படும்.

கதை.

காரைக்கால் அம்மை என்பவர் இத்துறைக்குப் பல ஆற்றான் கேட்கு முன்னர்க் காரைக்கால் என்னும் ஊரிலிருந்த தனதத்தன் என்னும் வணிகர் தலைவனுடைய அருமைத் திருமகள்; புனிதவதி என்று பெயரிட்டு இந்த அம்மையைப் போற்றி வளர்த்தார். பருவமெய்தியபின் நாகபட்டினத்திலிருந்த பரமதத்தன் என்னும் வணிகன் ஒருவனுக்கு மணம்புரிவித்து இந்த அம்மையோடு அம் மணமகனையும் தம் நகரிலேயே அமர்ந்து வாழும்படி பெற்றோர் பேணிச் செய்தார். இருவரும் மகிழ்ந்து வாழ்ந்து வருங்கால், பரமதத்தன் இரண்டு மாங்கனிகளைக் கொணர்ந்து மனைவிபால் தந்தான். அம்மை பெற்று வைத்திருக்குங்கால் ஓர் அடியவர் வந்தார். உணவோடு ஒரு கனியை உண்ண உதவினர். பின்னர்த் தலைவன் வந்து உணவுகொள்ளுங்கால் ஒன்றை அரிந்து உணவுடன் வைத்தார். அவன் உண்டபின் இன்னும் ஒன்று கொண்டுவா என்றான். அம்மை உளங்கலங்கி யான் செய்வேன் என்று வருந்தி நிற்கையில் தன்கையில் ஒரு பழம் திருவருளால் பொருந்தி நின்றது. இறைவனருளை வியந்து அதனையும் இட்டார். நாயகன் உண்டான். அமுதினும் இஃது இனியசுவையினையுடையது, யான் தந்தவற்றுள் ஒன்று அன்று; இதன் உண்மை யாது என்றான். அம்மை அஞ்சி உண்மை உரைத்தார்; அவன் மீண்டும் தெளிந்து அம்மையாரது மாண்பினை வியந்து அதுமுதல் அவரை மனைவியாகக் கொள்ளாது வேறொருத்தியை மணந்து விலகி



வாழ்ந்தான்; அவ் உண்மையை உணர்ந்த அம்மையார் எல்லாப் பற்றுக்களையும் அறவே விட்டு இறைவன் அருளையேபற்றி நின்று உடம்பிலுள்ள தசை முழுதும் உதிரும்படி செய்து என்புருவாய் நின்று அன்புபூண்டு திருவாலங் காட்டில் பரமனது திருநடம் கண்டு அவரது அழகிய திருவாயால் "அம்மையே" என்று அழைக்கப்பெற்று முடிவில்லாப் பதத்தை முடிவில் அடைந்தார். அவர் பற்றையே பற்றி நின்று தம் பற்று முற்றும் அற்றார். எல்லாப்பற்றுக்

களையும் விடுத்து இறைவனருளையே பற்றி நின்ற பெரியோர் பேரின்புறுவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

பரமனது அருளையே துறவோர் பற்றி நிற்கவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

நீரநும தென்றிவை வேர்முதல் மாய்த்திறை
சேர்மின உயிர்க்கது நேர்நிறை யில்லே. (திருவாய்மொழி)

போகவாசனைப் பிக்கொடி முளைத்தெழு மூலம்
சோகமாகும் இருந்தர சவலதோ நூழல்
ஆக்கமுதல யாமென்ன தனது மனஞானம்
ஏகமாகிய பராபரன் தோன்றிலு மிறக்கும்
(ஞானவாசிட்டம்)

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

எவ்வளவுக்கு எவ்வளவு உலகப்பொருள்களில் ஒருவன் பற்று நீங்குகின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு அவனுக்குத் துன்பங்கள் இல்லாம். அறவுடையவர் இளமையிலேயே துறவினை அடைவர். புலன்களை அடக்குதலும் எல்லாப் பொருள்களையும் ஒருங்கே விடுதலும் சிறந்த துறவாம். ஒரு பொருளும் இல்லாமையே துறந்தார்க்குப் பெருக்கமாகும். உற்ற உடம்பினையும் துறவோர் பற்றினை வையார். இருவுலகப்பற்றும் இலாத பேர் இடையூறுகளை எய்தி மழுவர். பற்று நீங்காதவர்க்குத் துன்பங்கள் நீங்கா. முற்றத் துறந்தவரே முத்தியை அடைவர். பற்றற்றபொழுதே ஒருவன் பிறப்பும் அறுபடும். பரமன் அருள் நெறியையே துறவோர் பற்றவேண்டும்.

35-வது துறவு முற்றிற்று.

## 36-ம் அதிகாரம் மெய்யுணர்தல்.

# ௩௬-ம் அதிகாரம் மெய்யுணர்தல்.

அஃதாவது மெய்ப்பொருளியல்பை மெய்யாக உணர்தல். ஐயமும், மயக்கமும் கலந்த அறிவு பொய்யுணர்வு ஆதலால் இது மெய்யுணர்வு என நின்றது. இதனைத் தத்துவ ஞானமென்பர். தத்துவம்—உண்மை. பொய்ப் பொருளைத் துறந்து மெய்ப் பொருளைப் பற்றி நிற்கும் மேலோரது தூய உள்ளத்தேதான் இம்மெய்யுணர்வு தோன்றுமாதலால் துறவின் பின் இது வைக்கப் பட்டது.

351. தண்டார்ச் கலபனுர் தக்கனுர் புன்பிறப்பேன்
கொண்டார் மருளால் குமரேசா—கண்ட
பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணுப் பிறப்பு. (௧)

இ—ள்.

குமரேசா! கலபன், தக்கன் என்பவர் ஏன் தமது மயக் கவுணர்வால் இழி பிறப்பை எய்தினுர் எனின், பொருள் அல்ல வற்றைப் பொருள் என்று உணரும் மருளான் மாணுப் பிறப்பு உளதாம் என்க.

மருள்—மயக்கம். மாணுப் பிறப்பு—மாண்பு இல்லாத பிறப்பு. மாணு என்றது பிறப்பின் அல்லல் இயல்பினைப் பொது வாக உணர்த்தி நின்றது.

பொருள் அல்லாதவைகளைப் பொருள் என்று உணருகின்ற மயக்கத்தினுலே இன்பமில்லாத பிறப்பே உளதாம் என்பதாம்.

மெய்ப் பொருள், பொய்ப் பொருள் எனப் பொருள் இரு வகைப்படும். நித்தப் பொருளாகிய பரம்பொருளல்லாத மற் றப் பொருள்களெல்லாம் பொய்ப் பொருள்களேயாம் அவற்றை

குவோர் துன்பப் பிறப்பையே தோய்ந்து தியங்குவர் என்பது கருத்து. பொருள்களின் உண்மையை உள்ளவாறு உணர்கின்ற தெருளுணர்வால் பிறவி நீங்கிவிடும் என்பது குறிப்பு. இவ்வுணர்வை வடநூலார் நித்தியாநித்தியவஸ்து விவேகம் என்பர்.

எத்துணைச் சிறந்தவராயினும் விபரீத உணர்வினையுடையவர் பிறவியினை அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுலபன் கதையால், தெளிவாக உணரப்படும்.

## கதை. 1.

சுலபன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் அவந்தி நாட்டை ஆண்டுவந்த ஒரு வேந்தன். பல கலைகளிலும் நல்ல பயிற்சியுள்ளவன். அழகும் ஆண்மையும் அமையப் பெற்றவன். அருங் குணங்களும் பெருக உற்றும் ஒருங்கமைந்த கலையை என்னும் ஓர் அழகியை மணந்து ஆரா அன்போடமைந்து வாழ்ந்தான். உலக இன்பங்களே நிலை என்று கருதினை; மறுமை நலங்களையும் இருவினைப் பயன்களையும் மதியாது திகழ்ந்தான். தனது கல்வியறிவினைத்தையும் அவ்வழியில் செலுத்தி இவ்வாழ்ந்து வருங்கால் மதுசூதனன் என்னும் முனிவர் ஒருவர் இவனயல் வந்தார். அவரது தூய ஒழுக்கத்தையும், தவவேடத்தையும் இவன், எள்ளி நகைத்தான். அவர் அதனைப் பொறுக்காமல் சினந்து இவனை ஒருதாகச் சபித்தார். இவனும் உடனே ஆயினான். இதனைக் கண்ட கலையை தன் கணவனை இகழ்ந்ததை ஒரு பொருளெனக் கருதி உணர்வுடைய முனிவரும் இப் பெரும் பழி செய்தாரே என்று சினந்து தன் கற்பின் மகிமையால் அவரைக் கழுதையாகும்படி சபித்தாள். அவரும் இவளைப் பேய்ச்சி ஆகெனப் பொங்கி மொழிந்தார். இருவரும்

அவ்வாறே இழி நிலையடைந்தார். ஒரு நாள் அப்புலைச்சி தன் மடியில் வைத்திருந்த பசும் புல்லை அவ்வெருது சேர்ந்தது. அவ் வெருதின் வாய்ப் புல்லை அக்கழுதை பற்றியது. அம்மூவருக்கும் கலாம் நிகழ அங்கிருந்தவர் அவற்றை வெருட்டி ஓட்டினர். அவை வெருண்டு துடிக்கால் கழுதை வாயிலிருந்த புல் அங்கிருந்த



ஒரு பிள்ளையார் மீது தள்ளி விழுந்தது. அன்பர் சாத்தும் அறுகம் புல்லைப்போல் அவ் எச்சிற் புல்லும் பிள்ளையார் மேல் இசைந்து நின்றது. அதனால் அம் மூவரும் தம் பழம் பிறப்பையுணர்ந்து முதல்வரானால் உயர் பதம் பெற்றனர். இருவினைப் பயன்களையும் அவற்றை செலுத்தும் முழுமுதற் பரமனையும் நம்பாமல் உலக இன்பத்தையே பொருளென்று கொண்டதால் அரசனும், தன்னை அரசன் இகழ்ந்தானே என்று நாணலாகாத உடம்பை யான் என்று கருதியதால் முனிவரும் வினை விளைவுதனை உணராமையால் கலையும் இழி பிறப்படைந்தார். இவ் உண்மையை உணர்ந்து முனிவர் சிலர் இரங்கினர். பொருளல்லவற்றைப் பொருள் என்று உணர்வாரைத் இழிவுறும் பிறப்பே உளதாம் என்பதை உலகம் இதனால் உணர்ந்தது. (விரிவை விநாயகர் மான்மியத்தில் காண்க.)

## கதை 2.

பரம் பொருளை மெய்ப் பொருள் என்று மதியாமல் பொருளல்லாதவற்றையே பொருள்என்று கொண்டதால் தக்கன் மாண்டிழந்து வன்பிறப்பெய்தினான். ஆட்டுப்பிறப்பை அடைந்தானே தக்கன் தன் கேட்டை உணர்வால் என்று உடன் இவனைக் காட்டி மொழிந்தது. விரிவைத் தக்க காண்டத்தில் காண்க.

மெய்யுணர்வு இல்லாதவர் வெவ்விய பிறவிகளையே எய்துவர் என்பது இதனால் கூறப்பட்டது.

352. கண்டமயல் நீங்கியபின் காசிபரேன் பேரின்பம்
கொண்டவராய் நின்றார் குமரேசா—பண்டும

மாசறு காட்சி யவர்க்கு. (உ)

இ—ள்.

குமரேசா! தாம் கொண்ட மயக்கம் நீங்கிய பின் காசி



பர் என் பேரின்பம் கொண்டவராய் நின்றார் எனின், மருள் நீங்கி மாசு அறுகாட்சியவர்க்கு இருள் நீங்கி இன்பம் பயக்கும் என்க.

மருள்—மயக்கம். காட்சி—பார்வை, தோற்றம், அறிவு.

மாசறு காட்சி என்றது மெய்யுணர்வை.

மாசு அறு காட்சியவர்—குற்றமற்ற உணர்வினையுடையவர்.

இருள் என்றது பிறவியை. அறியாமை மிகுந்து அச்சமும் கவலையும் அல்லலும் நிறைந்துள்ளன ஆதலால் பிறவி, இருள் எனப்பட்டது. நீக்கி என்பது நீங்கி என மெலிந்து நின்றதாக்கொண்டு பயக்கும் என்னும் வினைக்கு ஏற்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. இனி, நீங்கிப் பயக்கும்என்பதைத் தன் வினையாக்கொண்டால் துன்பம் நீங்கி இன்பம் உண்டாகும் என்று கொள்க.

குற்றமற்ற உணர்வினை ஒருவன் உடையவனாயின் அம் மெய்யுணர்வு அவனுக்குப் பிறவித் துன்பத்தை நீக்கிப் பேரின்பத்தைக் கொடுக்கும் என்பதாம்.

மருள் நீங்கின் இருள் நீங்கும்; மாசறு காட்சி இன்பம் பயக்கும் என்க. மேல், பொய்யுணர்வால் பிறப்பு வருமென்றார்; இதில், மெய்யுணர்வு பிறவியை நீக்கிப் பேரின்பத்தைத் தரும் என்றார்.

துன்ப நீக்கமும் இன்பப் பேறும் மெய்யுணர்வால் உள

வாம் என்பது கருத்து.

மருள் நீங்கி மெய்யுணர்வு எய்தினோர் இருள் நீங்கி இன்பம் பெறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை காசிபர் பால் உணரப்படும்.

## கதை.

காசிபர் என்பவர் பிரமாவின் தலைமைப் புதல்வரான மரீசியின் புதல்வர், தாய் பெயர் கலை. அயனருள் முழுவதும் இவர் அமையப் பெற்றவர்; பேரருளுடையவர். அதிதி, திதி, தனு,



அருட்டை, சுதை, கழை, சுரபி, விநதை, மதி, இளை, கத்துரு, குரோதவசை, தாம்பிரை என்னும் தக்கன் புதல்வியர் பதின்மூவரை மணந்து இனிது வாழ்ந்து அமரர், அசுரர், மனிதர் முதலிய பல்கோடி வகையினரையும், அவர்பால் தோன்றச் செய்தார். தமது ஆண்மைத் திறத்தால் உலக முழுவதையும் பரசுராமர் தமக்கு உரிமையாக்கிக்கொண்ட காலத்தில் அவரால் இன்னல் மிகுமென்று கருதி அவரிடமிருந்து இப்பூமியை இவர் தானமாகக் கொண்டார். அன்றுமுதல் இவ் உலகிற்கு இவர் பெயரால் காசினி என்று ஒரு பெயரும் தோன்றிற்று. அதன் பின் இல்லற நிலையை அகன்று துறவு நிலையில் புகுந்து அருந்தவக் கொள்கையில் திருந்திய தன்மையராய்ப் பொருந்தி விளங்கினர். அக்காலத்தில் அசுரேசன் மகளாகிய சுரசை என்பவள் இவரால் தமது மரபினர் உயர்வர் என்று கருதி இவரைத் தன் வயப்படுத்தித் தழுவ விழைந்து இவரது தவ வனம் சார்ந்தாள். விழுமிய உருவுடன் தனியே வந்து அழகொழுக நிற்கும் இவளைக் கண்டவுடனே முனிவர் உணர்வெல்லாம் கலங்கி உள்ளம் உருகினர். மெள்ள நெருங்கினர். ஆசை நோயைக் கூசி மொ

மொழிந்தார். "வழியே கண்ட ஓர் வனிதையை வலிய வந்து விழைவது நம்போன்ற தவ நல முடையார்க்குத் தகுதியாகுமா! சிறந்தவராகிய நீர் இவ் இழிந்த எண்ணத்தை எம்பால் இனி மொழியாதகலுமின்" என்று முனிந்தவள் போன்று முனிந்து மொழிந்தாள். அவள் யாது கூறினும் இவர், அவள்மேல் காதல் மீறினர்.

பன்னெடுந்தவம் பற்பக லாற்றியான்
முன்னினின்றது முத்திபெற் றுய்ந்திட
அன்னதேபெற் கருள்செய வந்தனை
உன்னை மேவலன் றேவுயர் முத்தியே. என்று முனிவர் சித்தந் திரிந்தார். அவளும் கருதியது எய்துமென்று களித்து தழுவிச் சூரபன்மன் முதலிய அசுர குலம் முற்றையும் அடங்கப்பெற்று அகன்று சென்றாள். அவளது பிரிவை நினைந்து பெரிதும் நொந்தார். தன்னை மறந்து தனி மயல் கொண்டார், இழி



யவர் போன்று தியங்கியுழன்றார். இவரது அவிச்சையை நீக்க அயனார் தோன்றி அருளுடன் நோக்கினர்.

வேதமும் கலைகளும் உணர்ந்து மேலதாம்
ஏதமி லொப்பிய முனிவ நீயொரு
மாதுதன் பொருட்டினால் மையல் எய்தியே
போதறு நெறியோ பேதை மாக்கள்போல். என்று மேவி மொழிந்தார். முனிவர் கேட்டார். தன் இழி நிலைக்கு இரங்கினர். உற்ற மயக்கமும் முற்றும் ஒழிந்தார். உணர்ந்து தெளிந்து பின் உயர்வின்புற்றார். மருள் நீங்கி மாசறு காட்சியவர்க்கு இருள் நீங்கி இன்பம் பயக்கும் என்பதை உலகம் அன்று இவர் பால் உணர்ந்தது. விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

353 மாதில் கருவூரர் வானத்தின் மேலெல்லாம்

கூறிநின்றார் என்னே குமரேசா—ஆறாத
ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து. (௫)

இ—ள்.

குமரேசா! கருவூரார் இவ்வையகத்திருந்தும் என் வானத்தின் சீரெல்லாம் வழுவறக் கூறினார் எனின், ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தினும் வானம் நணியது உடைத்து என்க.

ஐயம்—சந்தேகம். அஃதாவது ஒன்றினும் துணிவு தோன்றாது உழன்று திரியும் உணர்வு.

வானம்—மேலுலகம் ஈண்டு அது வீட்டுலகத்தைக் குறித்து நின்றது. நணியது—அணுகி நிற்பது.

ஐயம் நீங்கித் தெளிந்த மெய்யுணர்வினையுடையவர்கட்கு இந்நிலவுலகத்தினும் அவ்வீட்டுலகம் அணுகி நிற்கும் இயல்பினையுடையது என்பதாம்.



மெய்யுணர்ந்தவர், இவ்வுலகத்திருப்பினும் மேலான பேரின்பத்தை விரைவில் எய்துவாராதலால் அவர்க்கு இவ்வையத்தினும் வானம் நணியது ஆயிற்று என்க.

மெய்ம்மையை ஐயமறத் தெளிந்தவர் பொய்யுலகத்தில் அழுந்தாமல் மெய்யுலகத்தையே பொருந்தி நிற்பர் என்பது கருத்து. இவ் உண்மை கருவூரர்பால் காணப்படும்.

கதை.

கருவூரார் என்பவர் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் சோழநாட்டிலே கருவூரிலே சோமநாதர் என்னும் வேதியர்க்குப் புதல்வராய்த் தோன்றினார். இவர், இளமையிலேயே பல நூல்களையும் வழுவற உணர்ந்து அறிவு நிலையிற்புகுந்து பிறவி

திர முயன்று பெருந்தவம் புரிந்தார் உலகுயிர்களின இயல்புக ளையும் இறை அருளையும் தமது யோக முதிர்ச்சியால் உணர்ந்து தெளிந்தார். ஒரு பற்றுமின்றி உவந்து திரிந்தார். சாதி குலம் பிறப்பு, இறப்பு, பந்தம், துறக்கம் எனனும் இவற்றில் பிணிப் புண்டு உயிர்கள் தம் விளக்கிடாக அலைந்து திரிவதை நினைந்து இரங்கி நீதிகள் சில நிலைபெற ஓதினர். வானம் முதலிய எல்லா உலகங்களிலும் நிகழுகின்ற நிகழ்ச்சிகளை இருந்த இடத்திலிருந் தே தமது யோகவுணர்ச்சியால் உணர்ந்து உரைத்தார். பரமனை நோக்கி அன்புறு பாடல்கள் பல அருளுடன் பாடினர். அவை திருவிசைப் பா என்று இதுபொழுது வழங்கப்படுகின்றன. தாம் எய்தியிருந்த வையப்போல வானத்திலும் புகுந்து உலாவி அற்பு தங்கள் பல அருளுடன் புரிந்தார். முடிவில் அவ்வூர் ஆலயத் துட் புகுந்து அருளொளியில் இரண்டறக் கலந்தார். இவரது மேன்மையை வியந்து அனைவரும் இவரைக் கருவூர்த் தேவர் என்று புகழ்ந்து போற்றினர். ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு விட்டுலகம் விரைவில் எய்தும் என்பதை உலகம் இவர்பால் உண ர்ந்தது. விரிவைக் கருவூர்ப் புராணத்தில் காண்க.

ஐயமறத் தெளிந்தவர்க்கு வீட்டின்பம் விரைவில் எய்தும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

714 திருக்குறட் குமரேச வெண்பா.

354 சென்றுணர்ந்தும் மெய்கண்ட தேவரெதிர் சந்தியார்
குன்றிநின்றார் என்னே குமரேசா—நன்றாக
ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. (௪)

இ—ள்.

குமரேசா! நல்ல உணர்வு எய்தியிருந்தும், மெய் கண்ட தேவர் முன் அருணந்தியார் ஏன் தம் சீர் குன்றி நின்றார் எனின் ஐயுணர்வு எய்தியக் கண்ணும் மெய்யுணர்வு இல்லாதவர்க்கு அதனால் பயம் இன்று என்க.

ஐயுணர்வு—ஐவகையுணர்வு. அஃதாவது மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளாலும் அறியும் அறிவு.

மெய்யுணர்வு—மெய்ப்பொருளை உணரும் உணர்வு.

பயம் இன்று—பயன் இல்லை. ஏகாரம் இசை நிறைவோடு இரக்க முந்தோன்ற நின்றது. தேற்றம் எனினுமாம்.

ஒருவன் ஐயுணர்வினை எய்தியவிடத்தும் அவன்பால் மெய்யுணர்வு இல்லையானால் அவனுக்கு அதனால் யாதும் பயன் இல்லை என்பதாம்.

இனி, ஐந்தறிவும் புலன்களமேற் செல்லாது தன்வயமாகி போர்நிலையில் உறையப் பெறினும், மெய்யுணர்வு இல்லாதவர்க்கு அதனால் பயன் இல்லை எனினுமாம். இதில் ஐந்தறிவு என்றது ஐம்பொறிகட்கு மூலமாய மனத்தை. எய்துதற்கருமையை உம்மை இதில் விளக்கி நின்றது.

ஐயுணர்வு உடையராயினும் மெய்யுணர்வு இல்லையாயின் அதனால் யாதும் பயனில்லை யென்றார் இருளை நீக்கி அஃது இன்பம் பயவாமையின்.

எவ்வளவு உணர்வினை எய்தியிருப்பினும் மெய்யுணர்வு இல்லாதவர் அதனையுடையார் முன் ஒடுங்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மெய்கண்டார் கண்ணும், அருணந்தியார் பாலும் அறியப்படும்.

## கதை.

மெய்கண்ட தேவர் என்பவர் இற்றைக்கு எழுநூறு ஆண்டுகட்கு முன்னர் நடுநாட்டிலே திருப்பெண்ணை கடகம் என்னும் திருநகரிலே வேளாளர் குலத்திலே அவதரித்தவர். இவர் கருவிலேயே திருவினையுடையவர். தந்தையார் பெயர் அச்சுத களப்பாளர். சுவேதவனப் பெருமாள் என்று பெயரிடப்பெற்று திருவெண்ணெய் நல்லூரிலே தமது மாதுலர் வீட்டிலிருந்து வளர்ந்து வந்தார். குழவிப்பருவத்தே பரஞ்சோதி முனிவர்பால் அருளுபதேசம் பெற்றுப் பொல்லாப் பிள்ளையார் அருளால் எல்லாந் தெளிந்தார் அதனால் மெய்கண்ட தேவர் என்னும் சிறப்புப்பெயர்பெற்றார். இவர் மெய்யுணர்வுடையவராய் மேவியிருக்குங் காலத்தில் தமக்குங் குலகுருவும், ஆதி சைவகுல திலகரும், பல்வேறு வகைப்பட்ட கலைகளையெல்லாம் ஒருங்கே கற்ற பெரும்புலவரும் உயர்குண சீலரும், சகலாகம பண்டிதர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவரும் ஆகிய அருணந்தி சிவாசாரியார் என்பவர் ஒருநாள் இவர்பால் வந்தார். இளஞ் சூரியன்போல் விளங்கி அமைதியுற்றிருக்கும் சுவேதவனப் பெருமானைப் பார்த்தார். ஆசிரியராகிய தம்மை இவர் வணங்கவில்லையேயென்று எண்ணினர், மனச்செருக்கோடு எதிர்த்து நின்று மதர்த்து நோக்கி ஆணவமலத்தின் இலக்கணம் என்னை எனறு இவரை அவர் வினவினர். நின்போலவே முனைந்து நிற்கும் என்னும் பொருள் புலப்படத் தமது சுட்டுவிரலை நீட்டி அவரையே இவர் சுட்டிக் காட்டினர். ஆசாரியர் உணர்ந்தார். தாம்கொண்டிருந்த முனைப்பைத்துறந்தார். இவரது அடிகளை வணங்கி அருளுபதேசம் பெற்றுப் பொய்யுணர்ந்தோன புன்மையெல்லாம் போக்கியெனை மனிதாண்ட மெய்யுணர்வே என்று இவரது மேன்மையை வியந்து துதித்தார். எவ்வளவு உணர்வு உடையவராயினும் மெய்யுணர்வு இல்லையானல் பயனில்லை எனவும் மெய்யுணர்ந்தோரே மேலோர் எனவும் உணர்ந்து தெளிந்தார். இவ் இருவரும் சந்தான குரவர் வரிசையில் நின்று

சிவஞான போதம், சிவஞான சித்தியார் என்னும் இரு பெருநூல்களை இயற்றியருளினர். இவர் சரித விரிவைச் சந்தான குரவர் புராணத்தில் காண்க.

90

716 திருக்குறட் குமரேச வெண்பா.

எவ்வளவு உணர்வுடையராயினும் மெய்யுணர்விலரேல் அதனால் பயனில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

355 பண்டுகண்ணன் மெய்வடிவே பார்த்துச் சகதேவர்
கொண்டுணர்ந்தார் என்னே குமரேசா—கண்டவற்றுள்
எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (ஐ)

இ—ள்.

குமரேசா! பல வடிவமாகித் தோன்றினும் கண்ணனது மெய் வடிவையே சகதேவன் ஏன் பார்த்து உணர்ந்தான் எனின், எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதே அறிவு என்க.

எத்தன்மைத்து ஆயினும்—எவ்விதமாகத் தோன்றினும்.
அப்பொருள் என்றது பொருள்கள் பலவாதலின் என்க.
காண்பதே அறிவு என்று காண்க.

மேல், ஒருவன் ஐயுணர்வு எய்தியிருப்பினும் மெய்யுணர்வு இல்லேல் அதனால் பயனில்லை என்றார்; அம் மெய்யுணர்வுதான் யாது என்பார்க்கு அதன் இலக்கணத்தை இதில் விளக்க உணர்த்தினர் என்க.

யாதொரு பொருள் எவ்விதமாகத் தோன்றினும் அப்பொருளினது உண்மைத்தன்மையை ஆய்ந்து காண்பதே மெய்யுணர்வு ஆன்மாம்.

காணப்படுகின்ற பொருள்களினுடைய பெயர் வடிவங்களைக்

கண்டு மயங்காது ஆ ர்றின் மூலகாரணங்களை முன்னி உணர்வதே ஒருவனுடைய மெய்யுணர்வுக்குப் பயன் என்பது கருத்து.

மண்ணால் செய்யப்பட்ட ஒரு பொருளைக் காணின் குடம் சட்டி என்று வழங்கி வருகின்ற அதன் பெயரையும் உருவத்தையும் குறித்து நில்லாமல், அதற்கு முதற் காரணம் மண் எனவும்



அதற்குக் காரணம் நிலம் எனவும், அதற்குக் காரணம் நீர் எனவும் இவ்வாறே மற்றக்காரணங்களையும் கண்டு சென்றால் முடிவில் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயுள்ள முழுமுதல் ஒன்று காணப்படும். அம் மெய்ப்பொருட் காட்சியால் கண்டு வாராநெறியும் அறிவின்பமும் எளிதில் உளவாகும். ஆதலால் அம்மெய்யுணர்வையே பிறவிப் பயனாக ஒருவன் பெறவேண்டும் என்பதாம்.

மெய்யாகிய பொருளை ஐயமறக் கண்டவனே மெய்யுணர்வுடையவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை சகதேவன்பால் உணரப்படும்.

கதை.

பாரதப்போர் நிகழாதிருக்கற்கு ஏதாவது உபாயமிருந்தால் சொல்லுக என்று சகதேவனை நோக்கிக் கண்ணன் ஒருநாள் எண்ணிச் சொல்லினான். மாயவன் கூறிய இம் மாயமொழிகளைக் கேட்டு அத்தூயவன் நகைத்தான். ஏன் நகைத்தாய் என்று அவ் எந்தல் இசைத்தான். விரித்த கூந்தலை முடிக்கற்குத் திரௌபதையும், குறித்த சபதத்தைத் தொலைத்தற்கு அருச்சுனனும், அடுத்து வெல்வதற்குக் கன்னனும், பாரின் பாரத்தைத் தீர்த்தற்கு நீயும் அப்போரின் முடிவையே பொருந்தி நிற்கின்றீர்; நீவிர் நால்வரும் இல்லையானால் அப்போரும் இல்லையாம். ஆதலால் அம் மூவரையும் கொன்று உன்னையும் கட்டினால் வாராமல் காக்கலாம் மாபாரதம் என்றான். எல்லாம் முடித்தாலும் என்னை நீ எவ்வாறு கண்டுணர்ந்து கட்டுவாய் என்று கண்ணன் பகர்ந்து பதிற

யிச வடிவம் கொண்டு பார்த்து நின்றான். தோன்றி நின்ற வடிவங்கள் எல்லாவற்றையும் விடுத்துக் கண்ணனது மெய் உருவத்தையே கண்டு தெளிந்து சகதேவன் கருத்தில் பிணித்தான். கண்ணன் அவனது மெய்யுணர்வை வியந்து அவன் எண்ணிய யாவும் இனிதின் உதவினன். ஒரு பொருள் எத்தன்மைத்தாய்த் தோன்றினும் அப்பொருளினது மெய்யின் தன்மையை மெய்யாகக் காண்பதே மெய்யுணர்வு என்பதை உலகம் காண இவன் அன்று உணர்த்தி நின்றான். (விரிவைப் பாரதத்தில் காண்க.)

இன்னதுதான் மெய்யுணர்வு என்பது இதனால் கூறப்பட்டது:



356 கண்டார்முன் மெய்ப்பொருளைக் கற்றமணி வாசகர்பின்
கொண்டார்வீ டென்னே குமரேசா—மண்டருளால்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. (௬)

இ—ள்.

குமரேசா! மாணிக்கவாசகர் மெய்ப்பொருளைக் கண்டவுடன் ஏன் வீட்டினை எய்தினர் எனின், கற்று ஈண்டு மெய்ப்பொருளைக் கண்டார், மற்று ஈண்டு வாரா நெறியைத் தலைப்படுவர் என்க.

மற்று ஈண்டு வாராநெறி—மறுபடியும் இப்பிறப்பிற்கு வாராத வழியினை. என்றது முத்தி நெறியை,

மெய்ப்பொருள்—மெய்யான பொருள்: என்றது இறைவனை, அழிவு இல்லதோர் ஆனந்தப்பொருள் என்றபடி.

தலைப்படுவர்—அடைவர்.

மெய்ப்பொருளை அறிந்த மெய்யுணர்வினர்க்குப் பின்பு பிறப்பு இல்லை என்பது கருத்து.

ஈண்டு வாரா வழியருள்புரிபவன்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவிசாராமே

கள்ளப்புலக்குரம்பை கட்டழிக்க வல்லான், என வரும் இவற்றை ஈண்டு உணர்க. கற்ற இப்பிறப்பில் மெய்ப்பொருளை உணர்ந்தவர் மீண்டு இவ் உலகில் வாரா நெறியினை அடைவர் என்பதாம்.

எல்லா உயிர்க்கும் இறைவனேயாயினும், கல்லாதார் நெஞ்சத்துக் காண ஒண்ணாதே எனவும், கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியே எனவும், கற்றவர் வனைத்துத் திரிபுரம் எரித்தோன் கற்றவர் கருத்தினால் காண்போன் எனவும், வருவனவாற்றால் கல்வியே மெய்ப்பொருளைக் காண்டற்குரிய மெய்யுணர்வைப் பயக்குமென்பது காணப்படுமாதலால் காண்டலுக்குக் கற்றல் முதன்மையாய் நின்றது. கற்றுக்கண்டார் தலைப்படுவர் என்று காண்க.

## 36-ம் அதிகாரம் மெய்யுணர்தல். 719

மேல், மெய்ப்பொருளைக் காண்பதே மெய்யுணர்வு என்றார் அவ்வுணர்வால் பயன் என்னை எனின் பிறவியை நீக்கித் தன்னையுடையானுக்கு அது வீட்டைபத்தைக் கொடுக்கும் என்று இதில் உணர்த்தினார் என்க.

இப்பிறப்பில் மெய்ப்பொருளைக் கண்டவர் மீண்டு ஈண்டு வந்து பிறவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை மாணிக்கவாசகர்பால் உணரப்படும்.

### கதை.

நூல் பல கற்று ஞானவுணர்வெய்திச் சீலம் நிறைந்து சிறந்து விளங்கித் தெளிந்து நின்ற மாணிக்கவாசகர் அரசனுணையால் பரிகள் வாங்கும் பொருட்டுத் திருப்பெருந்துறையை அடைந்த காலத்தில் அங்கு இவரை ஆட்கொண்டருளுமாறு வந்து சிவகணங்களை புடைசூழ மனுடவடிவந் தாங்கிக் குருந்த மரத்தடியில் குருமூர்த்தியாய் வெழுந்தருளியிருந்த அவ் ஒரு மூர்த்தியைக் கண்டார்; உள்ளம் உருகினார். அவரது ஒண்மலரடியை வணங்

து வணங்கித் துவண்டு நின்றார். அம் முழுமுதற் பரமன் இவரது விழுமிய அன்பை வியந்து மகிழ்ந்து வீட்டுநெறியை விளக்க உணர்த்தினார், அதனால் இவர் பிறவி நீங்கினார். கண்டு மெய்ப்பொருளைக் கண்டவர் மீண்டு பிறவார் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைத் திருவாதவூரர் புராணத்தில் காண்க

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா அமுதா யமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கு மொளி. (1)

இரந்திரந் துருக என்மனத் துள்ளே எழுகின்ற சோதியே இமையோர்
சிரந்தனிற் பொலியுங்கமலச்சேவடியாய் திருப்பெருந்துறையுறை சிவனே
நிரந்தரா காயம் நீர்நிலம் தீகால் ஆய்அவை அல்லையாய் ஆங்கே

720 -திருக்குறட் குமரேச வெண்பா.

கரந்தோர் உருவே களித்தனன் உன்னைக் கண்ணுறக் கண்டு கொண்டின்றே (2)

இவை மெய்ப்பொருளைக் கண்டபின் தாம் எய்திய மெய்ந்நெறியை வியந்து மாணிக்கவாசகர் அருளியன.

மெய்ப்பொருளை அறிந்தவர்க்குப் பிறப்பு இல்லை என்பது நூல் கூறப்பட்டது.

357 இன்போட் டிகழ்ந்தவசன் செங்கலன்மன் உள்ளுணர்ந்தேன்
கொண்டபிறப் பற்றார் குமரேசா—தண்டாமல்
ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. (எ)

குமரேசா! உண்மைப் பொருளை உணர்ந்து தெளிந்தால் சித்தவசன் சிற்கவன்மன் என்பவர் ஏன் தம் பிறப்பு நீங்கினர் எனின், ஒருவன் உள்ளம் ஓர்ந்து உள்ளதை ஒருதலையாக உணரின் அவனுக்குப் பேர்த்துப் பிறப்பு உள்ள வேண்டா என்க.

ஓர்ந்து—ஆராய்ந்து. இஃது ஓர்தல் என்னும் வினையடியாகப் பிறந்தது. ஓர்தல்—ஆராய்தல், தெளிதல்.

உள்ளது என்றது மெய்ப்பொருளை; என்றும் நிலையாயிருப்பது என்றபடி. ஒருதலையா—தெளிவாக.

மெய்ப்பொருளைக் கண்டவர் பிறவியைக்காணார் என்று மேற்கூறியதை நோக்கி ஐயுறுவார் உளராயின் அஃது உள்ளதாக ஒருதலையாக நீவிர் உள்ளவேண்டாம் என்று அவரை நோக்கி இஃது உணர்த்தியதென்க.

ஒருவன் உள்ளம் மெய்ப்பொருளைத் தெளிய ஆராய்ந்து உணருமாயின் அவனுக்குப் பின்பு பிறப்பு உளதாக நினைக்க வேண்டாம் என்பதாம்.

36-ம் அதிகாரம் மெய்யுணர்தல். 721

உள்ளம் உள்ளது உணரின், பிறப்பு உள்ளதாக உளளவேண்டா என்றது மெய்ப்பொருளை நதெளிந்து சிந்திப்பவர்க்குப் பிறப்பு இல்லை என்பது கருதி என்க.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், பாவித்தல் என்னும் இந்நிலைகள் யாவும் முறையே பிறப்பினை நீக்கும் பெருமையுடையன. உள்ளதை ஒருதலையாக உணர உணர அவ் உள்ளம் உயிரினும் அவ் உயிர் மெய்ப்பொருளினும் கலந்து இரும்புண்ட நீர்போல் திருப்பாதடங்கிவிடும் ஆதலால் அது பின்பு பிறவாதென்க.

மெய்ப்பொருளையே ஒருவன் சிந்தித்திருப்பனாயின், அவ

ஙக்கு பின்பு பிறப்பு இல்லையென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை சிகித்துவசன் கண்ணும், சிந்தவன்மன்பாலும் உண ரப்படும்.

## கதை

சிகித்துவசன் என்பவன் மாளவதேயத்து மன்னன். இவ னது காலம் இற்றைக்கு ஆறுயிர ஆண்டுகட்கு முன்னர் என்பர். இவன் மனைவிபெயர் சூடாலை. மிக்க மெய்யுணர்வுடையவள். அவ ளால் இவன் ஞானவுபதேசம் செய்யப்பெற்றான். மெய்ப்பொருள் பொய்ப் பொருள் என்னும் இருவகைப் பொருள்களின் இயல்பு களையும் மயலறத் தெளிந்தான். அதன்பின் அரசுமுதலிய ஆசை தனையும் துறந்தான். மறுமை ஆசையும் இகந்தான். உள்ள மெய்ப்பொருளையே உளத்திற்கொண்டான். உணர்ந்து தெளிந்து உவந்து பாவித்தான். பின்பு பிறப்பு நீங்கிப் பேரின்பமுற்றான். முதற்பொருளை உணரின் பிறப்பு நீங்கும் என்பதை அவன் உண ர்த்தி நின்றான். விரிவை வாசிட்டத்தில் காண்க.

## கதை 2.

இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் மதுரையின் வடமேற்கில் ஓர் அடர்ந்தவனம இருந்தது. அதில் விலங்கினங் களும், பறவைக்கூட்டங்களும் மிடைந்திருந்தன. முற் பிறப்பில் நான் வலியவனாயிருந்து மெலியவர்க்குச் செய்த தீவினைப் பயு



னால் சிங்கவன்மன் என்னும் அரசனொருவன் கரிக்குருவியாகி அங்குக் கலந்திருந்தான். அதனை மற்றப் பறவைகளெல்லாம் கொத்தித் துன்புறுத்தின. அது நடுங்கி ஓடித் தனியாக ஒரு ஆலமரத்தில் அடங்கியிருந்தது. சிவனடியார் சிலர் ஒருநாள் அதன் அடியில் அமர்ந்து மதுரைப்பெருமான் அருளைப் புகழ்ந் தார். மறைந்திருந்த பறவை அம்மொழிகளைக் கேட்டது. மகிழ்

ந்து பறந்து மதுரையை அடைந்தது. கூடற் பரமனையே தன் உள்ளம் கூடப்பெற்றது. ஓர்ந்த பொருளையே குருநாதனாக உணர்ந்து நின்றது. அதனால் அதனது பிறவி அறவே தீர்ந்தது. ஒருவன் உள்ளம் உள்ளதை ஓர்ந்து உணரின் அவனுக்குப் பிறப்பு இல்லை என்பதை உலகம் இதன்பால் கண்டது; விரிவைத் திருவிளையாடலில் கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்த படலத்தில் காண்க.

மற்றது கேட்டுக் கொடியபுள் வலிய கவலாய் ஞானம்
பெற்றது பறவையாகிப் பிறந்ததும் பிறவித் தேற்றம்
உற்றது காமிச் சன்மம் ஒழிப்பதற் காவோ வில்லென்
சொற்றதே உறுதியென்றா னவ்வுகொண் டெழுந்ததன்றே (1)
குருமொழி பயின்றமுள் வாய்க் குருவிதன் குலனுந்தன்போல்
அருமறை முதல்வனிந்த ஆற்றலால் பறவைக்கெல்லாம்
பெருமைசால் வலியான் என்னும் பெயரவா யுலகின் மன்னக்
கருமணி கண்டன் செய்யபாத கனைகழ லடிசேர்ந்தன்றே. (2)

இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாதல் காண்க.

ஒருவனுள்ளம் மெய்ப்பொருளை அடையின் அவனைப்பிறப்பு அடையா என்பது இதனால் கூறப்பட்டது.

---

[தற்கேன்
358 தேடரிய செம்பொருளைத் தேர்ந்துபொன் னனையாள் காண்ப
கோடிவகை செய்தாள் குமரேசா—பீடில்
பிறப்பென்னும் பேதைமை நீக்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பதறிவு. (அ)

இ—ள்.

குமரேசா! பொன்னனையாள் என்பவள் பரம்பொருளைக்



காண்பதற்கு ஏன் பெருங்கவலை கொண்டாள் எனின், பிறப்பு என்னும் பேதைமை நீங்க சிறப்பு என்னும் செம்பொருளைக் காண்பதே அறிவு என்க.

பேதைமை— அறியாமை; அஃதாவது உண்மையை அறியாமை. பேதைமை பிறப்பிற்குக் காரணமாதலால் அதனையே பிறப்பென்றார்.

சிறப்பு என்னும் செம்பொருள்— சிறந்தது என்று சொல்லப்படுகின்ற செவ்விய பொருள்; அஃதாவது பரம்பொருள் என்க. எல்லாவற்றினும் சிறந்ததாய வீட்டின்பத்திற்குக் காரணமாய் என்றும்கோடாமல் நின்று நிலவுதலால் அது சிறப்பு எனவும் செம்பொருள் எனவும் நின்றது.

பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமை நீங்குமாறு முத்திக்குக் காரணமாகிய மெய்ப்பொருளைக் காண்பதே ஒருவனுக்கு மெய்யுணர்வு என்பதாம்.

பேதைமையே பிறவிக்குக் காரணம் என்பதும், அது நீங்கினால் பிறவி நீங்கிவிடும் என்பதும் இதனடியில் வருவனவற்றால் இனிது காணப்படும். பேதைமை மீளச் செய்கைமீளும்; செய்கை மீள உணர்ச்சி மீளும்; உணர்ச்சி மீள அருவுரு மீளும்; அருவுரு மீள வாயில் மீளும்; வாயில் மீள ஊறு மீளும், ஊறு மீள நுகர்ச்சி மீளும்; நுகர்ச்சி மீள வேட்கை மீளும், வேட்கை மீளப் பற்று மீளும், பற்று மீளக் கருமத்தொகுதி; மீளும்கருமத் தொகுதி மீளத்; தோற்றம் மீளும்தோற்றம் மீளப்; பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச், சாக்காடவலமாற்றுக்கவலை, கையாறென்றிக்கடையில் துன்பம், எல்லாமீளும் இவ்வகையான் மீட்சி, யாதிக்கண்டமாகும் என்ப; பேதைமை செய்கை என்றிவையிரண்டும், காரண வகைய ஆதலானே. எனவரும் மணிமேகலையின் அமிழ்மொழிகளை ஈண்டு மனங்கொண்டுணர்க.

செம்பொருளைக் காண்பவர்க்கு வெம்பிறவி நீங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பொன்னனையாள்பால் உணரப்படும்.

91

## கதை

பொன்னனையாள் என்பவள் மதுரையின் கீழ்பாலுள்ள திருப்பூவணம் என்னும் திருநகரில் இருந்தவள். உருத்திர கணிகையர் மரபில் உதித்தவள். அழகும், குணமும், அறிவும் நிறைந்தவள். குழலினும் யாழினும் நல்லிசை வாய்ந்தவள். பெருந்திரு உடையவளாய்ச் சிறந்து விளங்கிய இவள், உலக இன்பங்களை அறவே வெறுத்து உண்மைப்பொருளையே உளங்கொண்டிருந்தாள். சிவனடியாரைச் சிவனென மதித்தாள். நாளும் அவர்க்கு நல்லுணவூட்டினாள். தன் பிறப்பினை நினைந்து பெரிதுங் கவன்றாள். பிறவா இன்பம் பெற மிகவிழைந்தாள். பரமனருளையே பாவித்து வந்தாள்; அவ் உருவிலா ஒருவனை உருவிலுங் காண உருகியுழந்தாள். இவளது சித்தந் தேர்ந்து இறைவர் ஒரு சித்தராய்த் தோன்றி விரும்பிய பொன்னை அருளி மறைந்தார். வடிவில்லான் வடிவத்தை அதனால் ஆக்கினாள். கருவில் அமைத்த அவ் உருவைக் கண்ட அளவில் அவள் கொண்ட உவகைக்கு அளவேயில்லை. தன் அகத்தில் குறித்திருந்ததையே புறத்தில் கண்டாள். அவ் உருவ அழகினைப் பருக நோக்கினாள். ஆர்ந்த அன்போடு அதன் கன்னத்தைத் தன் கையால் அள்ளி முத்தங் கொண்டாள். ஓர் ஆலயம் புதுக்கி வைத்து அதனைத் தன் அகத்தில் பாவித்தாள். அப்பாவனையால் தன் பிறப்பு நீங்கிப் பேரின்பமுற்றாள். சிறப்பு என்னும் செம்பொருளைக் காண்பார்க்குப் பிறப்பு நீங்கும் என்பதை இவள் உணர்த்தி நின்றாள். முத்தங் கொள்ள இவள் அழுத்திய கைத்தழும்பை அம்மூர்த்தியின் கபோலத்தில் இன்றுங் காணலாம். விரிவைத் திருப்பூவணத் தலபுராணத்திலும் திருவிளையாடலிலுங் காண்க.

மழவிடை யுடையான்மேனி வனப்பினை நோக்கி அச்சோ

அழகிய பிரானே யென்று அள்ளிமுக் தக்கொண்டன்பிற்
பழகிய பாலையாளுப் பரிவினுற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னுள் கழித்தபின் விடுபெற்றுள்.
(திருவிளையாடல்)



பிறவி நீங்கும்படி மெய்ப்பொருளைக் காண்டலே மெய்யுணர்வுக்குப் பயன் என்பது இதனுல் கூறப்பட்டது.

359 சண்டேசர் தாளெறிந்தும் சார்தருநோய் சாராமல்
கொண்டாரிசிர் என்னே குமரேசா—உண்டான
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். (கூ)

இ—ள்.

குமரேசா! சண்டேசர் தம் தந்தையின் தாளினை வாளால் எறிந்தும் என் அத்தீயினை நோய் அவரைச் சாரவில்லை எனின், சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின் சார்தரு நோய் அழித்து மற்றுச் சார்தரா என்க.

சார்பு—இடம், பற்று, குணம்.

முதலில் சார்பு என்றது இறைவனை என்க. எல்லாப்பொருள்களும் தன்னைச் சார்தற்கு இடமாய் நிற்பது என்னும் ஏதுவான் வந்தது. சார்பு உணர்ந்து—மெய்ப்பொருளை உணர்ந்து.

சார்பு கெட ஒழுகின்—பற்று அற ஒழுகுவனுயின்.

மற்றுச்சார்தரா—பின்சாரமாட்டா.

சார்தரும் நோய் என்றது தம்மைச் செய்தவனைச் சார்ந்து துன்புறுத்துதற்குக் காலம் ஓர்ந்து நிற்கும் வினைத்துன்பங்களை.

பரம்பொருளை உணர்ந்து ஒருவன் பற்றற ஒழுகுவனுயின், அவனைப் பற்றநின்ற நோய் அவன் நிலையினை அழிந்துப்பின்பற்ற மாட்டா என்பதாம்.

உணர்ந்து ஒழுகின் நோய் சாரா என்று காண்க.

தனக்கு என்றும் நிலையான சார்பினை உணர்ந்து நிலையில்லாத பொருள்கள்மேல் தான்வைத்துள்ள சார்பு கெடுமாறு பொறிக



ளையடக்கி ஒருவன் ஒழுகுவனாயின், அவன் பிறவி நோய் நீங்கிப் பேரின்பம் அடைவான் என்பது கருத்து.

இறைவன் அருளைச் சார்ந்து இருவகைப்பற்றுக்களும் அறு தற்குரிய ஞான நெறியில் நிலைத்து ஒருவன் ஒழுகவல்லனாயின், அவனை எவ்வகை வினைத்துன்பங்களும் சாரமாட்டா என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சண்டேசுரர்பால் உண ரப்படும்.

## கதை.

சண்டேசுரர் என்பவர் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர் சோழமண்டலத்திலே திருச்சேய்ஞலூரிலே கா சிப கோத்திரத்திலே தோன்றியிருந்த எச்சதத்தன் என்னும் ஒரு விச்சைவேதியனுக்கு எச்சமாகித் தோன்றினர். தாய்பெயர் பவித்திரை; விசாரசருமர் என்று பெயரிட்டுப்பெற்றோர் இவரைப் பேணி வளர்த்தார். இளமையிலேயே கலைகள் பலவும் நலமுற உணர்ந்து ஆருயிர்மாட்டுப் பேரருளுடையராய் அடக்கி ஒழுகி னர். வழக்கமாக அவ்வூர்ப் பசுக்களை மேய்த்துவந்த இடைய னொருவன் ஒருநாள் தன்னைப் பாய்ந்த பசு ஒன்றை ஓங்கி அடித் தான். அதனை இவர் கண்டார், அருள்மிகக் கொண்டார், அன்று முதல் அவனை நீக்கிவிட்டு அவ் ஆநிரையைத் தாமே மேய்க்க இசைந்து அன்புடன் போற்றிவந்தார். பசுக்கள் முன்னையினும் பால் மிகுதியாகக்கொடுத்தன. ஊரார் அனைவரும் உவந்து புகழ்ந் தார். மேய்ந்து நிற்குங்கால் பசுக்கள் மடிகளிலிருந்து பால்

பொழிவதைக் கண்ட விசாரசருமர் அதனைக் குடத்திலேந்தி மண்ணியாற்றங்கரையிலுள்ள மணலைச் சிவலிங்கமாகச் செய்து அதன்மேல் மஞ்சனம் ஆட்டி மகிழ்ந்து போற்றினர். இதனைச் சிலரறிந்து இவர் தந்தைபால் வந்து "நும் மகன் எங்கள் பசுவின் பாலை வீணாக மணலில் விட்டுத் தொலைக்கின்றான்" என்று வெகுண்டு கூறினர். மைந்தன் செயலைக் காணும் பொருட்டுத் தந்தையார் ஒருநாள் மறைந்து வந்தார். பூசையும் முறையே பொருந்தி நடந்தது. மறைந்து நின்றவர் சினந்து வந்து மகனைக் கோலால்



அடித்துப் பாலின் குடத்தைக் காலால் உதைத்தார். சருமர் வருந்தி அங்குக் கிடந்த ஒரு சிறு கோலை எடுத்து வீசினார். அது கூரிய மழுவாய்ச் சென்று அவரது காலைத் துணித்தது. ஐயர் அலறி விழுந்தார். அம்மெய்யர் மேன்மை பூசையில் முனைந்து நின்றார். சார்பை உணர்ந்து தந்தையிடத்தும் சார்பு இன்றி ஒழுகிய அம் மைந்தன் தன்மையை வியந்து உடனே பரமன் உமையோடு விடைமேல் தோன்றி அவரை அருளோடு தீண்டினார். பரமனருளையே உடனே சருமர் எய்தினார். "எம்மை வழிபடுவோர்க்கு எப்போதும் நின்று நீயே அருள் புரிக" என்று தம் அருளின் இயல்பை அவர்க்கு அருளி அகன்றார். அன்று முதல் அவர் சண்டேசுரர் என்னும் பெயருடன் விளங்கி உயிர்களுக்குத் தண்ணளி புரிந்து பிறவி நோய் நீக்கிப் பேரின்பம் துய்த்தார். சார்பை உணர்ந்து ஒருவன் சார்பு கெட ஒழுகின் சார்தரு நோய்கள் அவனைச் சாரா என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

மெய்யுணர்வோடு நெறிநின்று ஒழுகுவோரை வினைத் துன்பங்கள் சாரா என்பது இதனுள் கூறப்பட்டது.

---

360 உற்றநோய் ஒன்றும் உறுதேன் கறிக்கண்ணர்

குறையில்இன் புற்றார் குமரேசா—பற்றிநின்ற
காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய். (ம)

இ—ள்.

குமரேசா! கதிக்கண்ணர் யாதொரு துன்பமுமின்றி என் உயர்ந்த இன்பத்தை எய்தினர் எனின், காமம், வெகுளி, மயக்கம் என்னும் இம்மூன்றனுடைய நாமம் கெட நோய் கெடும் என்க. நாமம்—பெயர். நோய்—துன்பம்.

காமம் வெகுளி முதலிய இழிகுணங்களே துன்பங்கட்குக் காரணமாகும் ஆதலால் அவை அறவே இல்லையானால் அத்துன்



பங்களும் இலவாம் என்பார் "மூன்றன் நாமம்கெட நோய்கெடும்" என்றார். காமம் இல்லை எனிற் கடுஞ்சினமும்
நாமம் இல்லை நரகமும் இல்லையே. என்றார் கம்பரும்.

இச்சைக்கு இடையூறு நிகழ்ந்த இடத்தேதான் வெகுளி தோன்றும் ஆதலால் அது காமத்தின் பின் நின்றது. தாய் முன் செய்கள் நிற்றல்போல் தமக்குக் காரணமாய மயக்கத்தின் முன் இவை இரண்டும் வைக்கப்பட்டன.

ஆசை கோபம் அவிச்சைஎன்னும் இம்மூன்றனுடைய பெயருங் கூட ஒருவனிடம் நில்லாமல் நீங்குமாயின் பிறவித் துன்பம் அவனை விட்டு நீங்கிவிடும் என்பதாம்.

துன்பங்கள் தன்னைத் தொடராமலிருக்க ஒருவன் விரும்புவனாயின் அவன் காமம் வெகுளி முதலிய குற்றங்களை அறவே ஒழிக்கவேண்டும் என்பது குறிப்பு.

காமமும் வெகுளியும் ஒழிந்தால் பிறவி நோய் ஒழியும் என்பது இதனால் கூறப்பட்டது.

ஆசைசற் றிருக்கிடின் அநிமித்தம் வந்
தோசைசால் வெகுளியும் ஒருங்கு நண்ணிடும்
மாசையார் அஃதற மயக்க முற்றும்
ஈசையார் அடிக்கலப் பிரிக்கும் இன்னலே. (காசிரகசியம்)

ஈடுறு பிறவியும் வினைகள் யாவையும்
காட்டிய தினையதோர் காமமாதலின்
வாட்டமில் புந்தியான் மற்றது நேர்மினை
விட்டினர் அல்லரோ வீடு சேர்ந்துளார். (கந்தபுராணம்)

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

மெய்ப்பொருள் அல்லவற்றை மெய்ப்பொருள் என்று உணருகின்ற மயக்க உணர்வால் பிறப்பு உண்டாகும். மயக்கம் நீங்கி மெய்யுணர்வடைந்தவர் பிறப்பு நீங்கிப் பேரின்பம் அடைவார். ஐயந் தீர்ந்த மெய்யுணர்வோர்க்கு வையமதனிலும் வானுலகு அணித்தாம். எவ்வளவு உணர்வுடையராயினும் மெய்யுணர்வு இல்



லாதவர்க்கு மேன்மை இல்லை. பொருள்களின் உண்மையை உள்ளவாறு அறிதலே மெய்யுணர்வாகும். மெய்ப்பொருளை உணர்ந்தவர் மீண்டு பிறப்பினை அடையார். உண்மைப் பொருளை ஒருவன் உள்ளந்தெளிய உணரின் அவனுக்குப்பிறப்பே இல்லை. வெம்பிறவி நீங்குமாறு செம்பொருளைக்காண்பதே ஒருவன் மெய்யுணர்விற்குப் பயனும். தனக்கு நிலைபெற்ற சார்பாய இறைவனையுணர்ந்து தன் சார்புகெட ஒருவன் ஒழுகுவனாயின் அவனை வினைத் துன்பங்கள் சாரா. ஆசை வெகுளி மயக்கம் என்னும்

இம் மூன்றையும் அறவே ஒருவன் ஒழிப்பனாயின் அவனுக்குத் துன்பமே இல்லை.

௩௬-வது மெய்யுணர்தல் முற்றிற்று.

# ௩௭-ம் அதிகாரம் அவாவறுத்தல்.

அஃதாவது ஆசையை ஒழித்தல். மெய்யுணர்வெய்தி மெய்ப்பொருளை உணரினும், பொய்ப்பொருள்கள் மேல் முன் பொருந்தியிருந்த ஆசை சிறிது இருக்குமாயின், அது பிறவிக்கு வித்தாய்ப் பெருகி வளர்ந்து பின் பெருந்துயர் விளைக்கும் ஆதலால் அதனை அறவே ஒழிக்கவேண்டுமென்பதை யுணர்த்துதற்கு இஃது ஈண்டு வைக்கப்பட்டது. நிலையாமையை யறிதல் உலகைத் துறத்தற்கும், மெய்ப்பொருளை உணர்தல் பொய்ப்பொருளவாவைப் போக்குதற்கும் முறையே ஏதுவாகுமாதலால் அதிகார நிலைகளும் அம்முறையில் நின்றன.

361 கண்டமான் பாற்சிறிது காதலுற்ற தாற்பாதர்
கொண்டார் பிறப்பேன் குமரேசா—கொண்ட
அவாவென்ப எல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. (க)
37-ம் அதிகாரம் அவாவறுத்தல். 731

இ—ள்.

குமரேசா! ஒரு மான் மேல் வைத்த அவாவால் பாதர் ஏன் பிறப்பினை அடைந்தார் எனின், எல்லா உயிர்கட்கும் எஞ்ஞான்றும் தவா அப் பிறப்பு ஈனும் வித்து அவாவேயாம் என்க.

தவா என்பது தவுதல் என்னும் வினை அடியாகப் பிறந்த

தமக்கும் பிறர்க்கும் உதவாது
இலைபயிர கநிபுட். என்றதுங்காண்க.

அவாவே பிறவிக்குக் காரணம் ஆகலால் பிறவியை அறுக்க நின்ற துறவோர் அதனை அறவே ஒழித்திலராயின் அறுக்கவியலாதவர் என்பது கருத்து. அருந்தவக் கொள்கையிற் சிறந்தவராயினும் அவாவினைச் சிறிது உடையவராயின் அதனால் அவர் பிறப்பினை அடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரதர் பால் உணரப்படும்.

கதை.

மனுகுல வேந்தராகிய இடபசிக்கனுக்கும் சயந்திக்கும் புதல்வனாய்த் தோன்றி இந்நிலவுலக முழுவதும் தனக்கே உரிமையாகப் பெற்றுப் பன்னெடுங் காலம் பரிவுடன் ஆண்ட பரத மன்னன் பருவமுதிர்ந்த பின் அனைத்தையும் துறந்து அடவியிற் புகுந்து அருந்தவம் புரிந்தார். புரிந்து வருங்கால் ஒரு நாள் கண்டகி நதியை அடைந்தார். சூல் முதிர்ந்த மான் ஒன்று அதில் நீர் பருக வந்தது. அங்குத் தோன்றிய ஒரு சிங்க முழக்கத்தால் தன் கருப்பம் வீழ அது கலங்கி மாய்ந்தது. தாய்மான் மாயக் குட்டி தனியே தத்தளித்துத் தவித்தது. அதனை அரச முனிவராகிய பரதர் கண்டார். அகமிக உருகினார். அதனை அணைத்தெடுத்துத் தமது தவச்சாலைக்குக் கொணர்ந்தார். அளவில்லாத காதலை அதன் மேல் வைத்தார். தமது அரிய ஞான உணர்ச்சி முழுதும் அச்சிறிய மானை வளர்ப்பதில் சென்றது. நெடுங்காலம் அருந்தவம் கிடந்து பெற்றெடுத்த ஓர் அரசிளங் குழவியைப் போல் அதனை இவர் பேணி வருங்கால் தமது உடம்பு நீங்குங் காலம் வந்தது. இளமான் பிரிவை நினைந்து நினைந்து இவர் உள

மிக உருகினர். பின் உயிரும் பிரிந்தது. அம்மான்மேல் வைத்த அவாவினால் பின்பு ஒரு மானாகவே பிறந்தார். மதிநலங்குன்றாது வனங்களில் திரிந்து பின்னாளில் மடிந்து பின் ஆங்கீரசகோத்



திரத்தில் அங்கிரா என்னும் ஓர் அந்தணனுக்குப் புதல்வனாய்த் தோன்றி அவாவினால் எய்திய அல்லலையுன்னி அதனை அறவே ஒன்றும் அறியாத பித்தர்போல திரிந்து பின் பிறவாப் பேறடைந்தார். அவாவே பிறப்பு எனும் வித்து என்பதும் அஃதற்றவர்க்கே பிறப்பு அறும் என்பதும் உலகம் இவர்பால் தெளிந்து கண்டது.

(விரிவைப் பாகவதத்தில் காண்க)

திரிபொருள் நெய்சொரி யற்ற செஞ்சுடர்
எரிதரும் இருதுயர் விலக்கு மாறுபோல்
விரிபுமுக் குணத்தொடு மேவில் மாயமாம்
உரைதரு பிறவியை ஒழிப்ப தில்லையே (1)

பன்னுமுற் பிறப்பினில் பரதன் என்னையாய்
இந்நிலம் புரந்திடா அகற்றி யாவும்விட்டு
உன்னரிய தவத்தொடும் ஒழுகும் நாளிலோர்
கன்னிமானுழை மனம் கலந்திருந்ததால் (2)

அவ்வுழை உருவமும் அடைந்து விட்டபின்
இவ்வுருவெடுத்தனன் இன்னம் ஒன்றுமோ
கவ்வைசெய் மனங் கதுவாது நின்றவா
செவ்விபோய் பயந்தடுஞ் செலவு மாற்றியே. (3)

இவை ரகுகுணனை நோக்கிச் சடபரதர் கூறியன. இவற்றால் மேற்குறித்த உண்மை இனிது தெளிவாதல் காண்க. அவாவே பிறப்பிற்கு வித்து என்பது இதனால் கூறப்பட்டது.

---

362 வேறொன்றும் வேண்டார் விரும்பிப் பிறக்கவேன்
கூறின்பம் கொண்டார் குமரேசா—தேறியே
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது

இ—ள்.

குமரேசா! ஒரு பொருளையும் தாம் வேண்டாதவராயி ருக்கும் பிருங்கி முனிவர் ஏன் பேரின்பத்தை அடைந்தாரெனின்,



வேண்டுங்கால் பிறவாமை வேண்டும் அது வேண்டாமையை வேண்ட வரும் என்க. அது என்றது பிறவாமையை.

வேண்டத்தக்கதும், வேண்டியதை எய்தும் நெறியும் இதில் விளக்கியுள்ளமை காண்க.

பெரியோர் உள்ளம் ஒன்றை விரும்புங்கால் பிறவாமையை யே விரும்பும், அப்பிறவாமை ஒரு பொருளையும் விரும்பாமை யை விரும்ப அவருக்குத் தானே எய்தும் என்பதாம்.

இனி, ஒருவன் ஒன்றை விரும்புங்கால் பிறவாமையையே வி ரும்பவேண்டும்; அது விரும்பாமையை விரும்ப தானே அவனுக் கு வரும் எனவும் இது பொருள்படும்.

அவா இல்லாதவர்க்குப் பிறப்பின்மை தானே யுண்டாகும் என்பது கருதது.

மேல் பிறவிக்குக் காரணம் காட்டினார்; இதில் பிறவாமைக்கு உபாயங் கூ

வேண்டாமையால் வேண்டியது வரும் என்று அடிகள் உண ர்த்திய உண்மையை இதில் ஊன்றியுணர்க. மெய்யுணர்வுடைய வர் எதையும் விரும்பாமல் பிறவாமையையே வேண்டுவரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிருங்கி முனிவர்பால் உணரப்படும்.

கதை

பிருங்கி என்பவர் முற்றத்துறந்த ஓர் முனிவரர். நெடுங் காலம் கடுந்தவம் புரிந்தவர். எல்லாத் துன்பங்களுக்கும் இச்சை

வே காரணம் என்பதை இனிது தெளிந்து அதனை அறவேஒழித்து உண்மைப் பொருளையே உளங்கொண்டிருந்தார். பிறவி நீக்கத்தையே பெற்றிட விழைந்தார். இவர் தமது யோக மகிமையால் மேருவையடைந்தார். அங்கு அருளுருவாகி பிறையோடு எழுந்தருளியிருக்கும் இறைவனைக் கண்டார். தேவியைவழிபடின் உலக இன்பங்களெல்லாம் எளிதில் எய்திவிடும் என்பது கருதி அவற்



றை வேண்டாதவராய் ஐயனைமாத்திரம் வலம்வந்து வழிபட்டார். அம்மை சிறிது சினமுடன் அம்முனிவரை நோக்கத் தமது கருகிய உடல் வலி குன்றி உதிரமும் தசையும் வறுமையே உதிர்ந்தன. முனிவர் தளர்ந்தார் உடனே ஒரு காலும் கோலும் அவர்க்குக் கை ஊன்றுதல் உதவி அம்மைக்கு வணக்கத்தை உணர்த்தினர். பிருங்கிருஷி தனையே இப்பிழையினை மன்னித்தென்று கருதி அம்மை அருள்செய்யும் பொருட்டு ஐயன் இடங் கலந்திருந்தார். அதனையே அர்த்தநாரீசன் என்பர். மீண்டும் முனிவர் வேறொன்றையும் வேண்டாமல் பிறவாமையையே வேண்டி வணங்கினர். அவரது அவா அற்ற தன்மையை வியந்து அம்மையும் அருள்புரிந்து வாழ்த்தினார். முனிவர் பின் பிறவாமையையே பெற்று மகிழ்ந்தார். மெய்யுணர்வுடையவர் பிறவாமையையே வேண்டுவர் என்பதும் அவா இல்லாதவர்க்கே அஃதுண்டாகும் என்பதும் உலகம் இவர் பால் கண்டது. (விரிவை சிவரகசியத்தில் காண்க)

அவா அற்றவர்க்கே பிறப்பு அறும் என்பது இதனால் கூறப்பட்

363 மேலாகும் கன்னிகையும் வேண்டாதேன் வேதசரர்
கோலமுறாச் சென்றார் குமரேசா—சாலவுடன்
வேண்டாமை யன்ன விழுச் செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில. (௩)

இ—ள்.

குமரேசா! வேதசார் என்பவர் அரச செல்வத்தையும் அரசிளங் குமரியையும், வேண்டாமென்று விடுத்து ஏன் விரைந்து சென்றார் எனின், 'வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை யாண்டும் அஃது ஒப்பது இல்லை என்க.

வேண்டாமை அன்ன—அவாவாமை போன்ற.

விழுச் செல்வம்—மேலான செல்வம்.

ஈண்டு யாண்டு என்பன இவ்வுலகத்தையும் அவ்வுலகத்தை



யும் குறித்து நின்றன. யாண்டு என்றது எவ்வுலகத்தும் இல்லை என்று கொள்க. உம்மை இறந்தது தழீஇயது.

அவாவின்மையானது தன்னையுடையவனுக்கு அளவில்லாத பெருஞ்சிறப்பினை அமைய நல்கும் ஆதலால் அது விழுச்செல்வம் என நின்றது. கவலையாதுமின்றி இருமையினும் இன்பம் பயக்கும் அருமையை விழுமிய என்னும் அடை விளக்கி நின்றது.

மேல், வேண்டாமையால் பிறவாமையுண்டாம் என்றார் இதில் விழுமிய செல்வமாய் நின்று இம்மையிலும் அது மேன்மையைத் தருமென்றார். துறக்கத்தின் இருப்பினும் அவாவுடையவர் மேலும் மேலும் விரும்பிக் கலக்கத்தையே யடைவராதலால், அவா இன்மையன்ன நன்மை யாண்டும் இல்லையாயிற்று.

செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவா எனப்படுமே. என்றதங் காண்க.

அவாவாமையை ஒக்க செல்வம் இவ்வுலகத்தில்லை; அவ்வுலகத்தும் அதனை ஒப்பது இல்லை என்பதாம்.

இல்வாழ்வார் செல்வத்தாலும் துறவிகள் அவாவின்மையாலும் சிறப்புறுவர் என்பது குறிப்பு. செல்வமுடைமையும் அவாவின்மையும் இருவகை நிலையார்க்கும் முறையே உரிமையாம் என்க. அவா இன்மையே அறிவோர்க்கு விழுமிய செல்வம் என்பது கருத்து.

மெய்யுணர்வுடையவர் அவாவின்மையையே விழுமிய செல்

ளா. தன் கையில இருந்த மலர்மாலையை இவருக்குச் சூட்டு தற்கு விரைந்து வந்தாள். இவர் வேண்டாமென்று வெறுண்டு சென்றார். அவளைத் தொடர்ந்து அடவியையடைந்தாள். அவளை நோக்கித் தம் மனைஉறுதியை உணர்த்தி இதம பல மொழிந்தார். அவள் உணர்ந்தாள். அரசை வெறுத்துத் தவநெறி நின்றாள். சிறந்த அழகியையும் உயர்ந்த பாகவியையும் ஒருங்கே வேண்டா மென்று வெறுத்துச் சென்ற இவர் துறவின் பெருமையை அமரரும் வியந்தார். அவாவில்லாதவர் இருமையிலும் பெருமை எய்துவர் என்பதை உலகம் இவர்பால் கண்டது. (விரிவைப் பாரதத்தில் காண்க.)

அவா இன்மைபோல் மேன்மையான செல்வம் வேறெங்கும் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

738 திருக்குறட் குமரேச வெண்பா.

364 மாசில் தமசிவயர் வாய்மையொன்றே வேண்டி-யெல்லாம்
கூசியேன் நீத்தார் குமரேசா—தூய்தன்று
தூஉய்மை யென்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். (௪)

குமரேசா! தமசிவாயர் யாதொர் அவாவுமின்றி மெய்ப் பொருள் ஒன்றையே என் மேவி நின்றார் எனின், தூய்மை என் பது அவா இன்மையே; அது வாய்மை வேண்ட வரும் என்க.

அளபெடைகள் இசை நிறைக்க நின்றன.

தூய்மை என்றது முத்தியை; மாசற்றது என்பதாம்.

வாய்மை என்றது கடவுளை; மெய்ப்பொருள் என்றபடி.

அவா இன்மையை மேல் விழுமிய செல்வம் என்றார்; இதில் அதுவே முதநியின்பம எனறார்.

முக்தி என்று சொல்லப்படுவது அவாஇன்மையேயாம்; அது மெய்ப்பொருளை விருமபத தானே எய்தும் என்பதாம.

ஆசை இன்மையே முக்தி என்பதும் அது மெய்ப்பொருளைச் சிந்தித்தலால தானே வந்துசேரும என்பதும் இதன் கருத்தாமெனக. இனி, தூய்மையைச் சுத்தம் என்றும வாய்மையைச் சத்தியம எனறும கொண்டால், சுத்தம எனபது ஆசையின்மையாம; அது சத்தியத்தை விரும்பத் தானே உண்டாம் என்று கொள்க. அவா இல்லாதவர்க்கே பேரின்பம் உண்டாம எனபது குறிப்பு.

அவாவற்று மெய்ப்பொருளைப் பற்றினோர் பிறவா இன்பத்தை விரைவில்எய்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை நமசிவாயர் பால் உணரப்படும்.

37-ம் அதிகாரம் அவாவறுத்தல், 789

## கதை.

நமசிவாயர் எனபவர் சற்றேறக்குறைய இற்றைக்கு அறுநூறு ஆண்டுகட்கு முனனர்த் திருவண்ணாமலையி லிருந்தவர். அக்காலத்தில துறவியாய்த் தனித்திருந்த குகை நமசிவாயர் என்

பற்று அற்றவராகார் எனவும் இது பொருளாயிற்று.



அவா இல்லாதவரே பிறவா இன்பத்தைப் பெறுவர் எனவும், அதனையுடையவர் பிறவித் துன்பத்தையே அடைவர் எனவும் இஃதுணர்த்தியதென்க. விதி, மறை, என்னும் இருவகையானும் அவா அறுதலது சிறப்பு இதில் விளக்கப்பட்டது.

அவா அற்றவர்க்கே பிறவி அறும் என்பதும் அஃது அறாதவர்க்குப் பிறவி அறாது என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நாரதர் கண்ணும், கபி முதலானோர்பாலும் உணரப்படும்.

## கதை

நாரதர் என்பவர் பிரமாவின் மானச புதல்வர். முனிவர்களுள் முதன்மை வாய்ந்தவர். நெடுங்காலம் பெய்யாதிருந்த மழை இவர் பிறந்தவுடனே பெய்ததால் இவருக்கு நாரதர் என்று பெயர் வந்தது என்பர். நாரம்—நீர். யாழ் இசையில் இவர் மிகவும் வல்லவர். பாரதீயம் என்னும் ஓர் இசை நூலை இயற்றியுள்ளார். இவரது யாழுக்கு மகதி என்று பெயர். முற்றத் துறந்தவர். தத்துவவுணர்வினர். ஒரு நிலையின்றி எவ்வுலகங்களிலும் இனிது திரிபவர். மனிதர்களாயினும் தேவர்களாயினும் செருக்குக் கொள்வாராயின், உடனே சென்று அவர்களது சிறுமையை வெளிப்படுத்தித் திருத்துகின்றவர். இவரது நடை, உடை, பாவனை, சொல், செயல் எல்லாம் விநோதமானவையாம். இவருக்குக் கலகப்பிரியனென்று ஒரு பெயரும் உண்டு. ஆயினும் இவர் மூட்டும் கலகங்கள் முடிவில் உயிர்களுக்கு நலம் புரிவனவாகும். இவர் செய்துள்ள மித்திர பேதங்கள் அளவிடலரியன. அவையாவும் இறுதியில் இதமாகவே காணப்பட்டன. இவரது பெயரைக் கேட்ட அளவில் அமரர் முதல் அனைவரும் அகமகிழ்வடைவர். அவாவே எல்லாத் துன்பங்கட்கும் காரணம் என்பதை இனிது தெளிந்து அதனை இவர் அறவே அறுத்தார். அத

ளும் பிறவி நீங்கப் பெருகலமுற்றார். அரிச்சந்திரன், தருமன், சித்திரகேது, முதலிய அரசர் சிலரும், சுகர் அரிய சுவர் முதலிய முனிவர் பலரும் இவரது ஞான மொழிகளைக் கேட்டு மேன்மையடைந்தனர். அவா அற்றவர்க்கே பிறவி அறும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைப் பிரமகைவர்த்தத்தில் காண்க.)



## கதை 2.

கபி, இமசரன், குலோசனன், நூடன், பிகன், பிதுர்வர்த்தி, சொருபன் என்னும் இவ் எழுவரும் பாரத்துவாசருக்குப் புதல்வராய்த் தோன்றித் துறவிகளாயினர். கார்க்கய முனிவரை யடுத்துக் கலைகளைப் பயின்றார் ஆயினும், பொறியிச்சைகளை அவாவி அறிவில் செயல்கள் புரிந்தார். அதனால் இவர்களெல்லாரும் வேடராகப் பிறந்தார் வெம்பழி அடைந்தார். அவா அறுதவர்க்குப் பிறவி அறுமென்பது உலகர் இவர்பால் எளிதே கண்டது. விரிவைச் சிவமகாபுராணத்தில் காண்க.

அற்றான் என்று சொலப்படுவோன் ஆசையற்றான் ஒருவனே
மற்றுகாவினஃதொழிய வைகளம் பிறவெல்லாம்
செற்றனனெனினும் அவையாக்குஞ்செயிர்த்தன் பகைனோயன்றி
உற்றார் வணக்கும் அவன்போல ஒழிந்தான்கொல்லோவுறுபிறவி
(குசேலோபாக்கியானம்)

அவா நீங்காதவர்க்குப் பிறவி நீங்காதென்பது இதனால் கூறப்பட்டது.

---

366 கூடுமவா வுக்கஞ்சிக் கோசிகரும் மாதவரும்
கோடியேன் செய்வரார் குமரேசா—நாடியென்றும்
அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா. (க)

இ—ள்.

வடபுலத்துத் திசையை நண்ணி அருந்தவம் புரிந்திருக்குங்கால் இவரது தவ நிலையைச் சிதைக்க விரும்பி இந்திரன் திலோத்தமையை அனுப்பினன். அவளும் இசைந்து ஆங்கு வந்து இருந்தவர் முன்னே பொருந்தினள். அவ்வுருவ அழகைக்கண்டு இவர் உளங்கரைந்துருகினர். மன நிலை குலைந்து மயல் மிகக் கொண்டார். அவள் இணங்க, உவந்து அணைந்து மகிழ்ந்தார். அவளது போகக் கடலில் புகுந்து தாழ்ந்திருந்த இவர் சிறிது காலம் போனபின் போதத் தோன்றப்பெற்றார். தம் பிழைக்கு இரங்கினர் பொங்கி எழுந்தார். அவரின் கொடுமையை அஞ்சி நடுங்கினள். இவ்வஞ்சம் இந்திரன் செய்ததென்றுணர்ந்து அவ்வஞ்சியை நோக்கி வஞ்சினங் கொண் டனர் புன்மகளாகென்று அப் பெண்மணியைச் சபித்தார். அங்கிருந்தால் இன்னும் வஞ்சம் நிகழுமென்று



அஞ்சி அகன்றார். தென்திசையையடைந்து திருந்திய தவத்தைச் செய்து தெளிந்திருந்தார். அங்கும் தமது உள்ளத்தில் அவாவும் வெகுளியும் அரும்புவதை அஞ்சி அதனையகன்று மேல திசை நண்ணினர். ஆண்டும் அஞ்சி அதனைவிட்டகன்று வட திசை புகுந்து திடமுடனிருந்து யாம்தாரணையும் தாமமும் பழுவா வண்ணம் அஞ்சிக்காத்து எவரும் அடைதற்கரிய உயர்பதம் அடைந்தார். அவாவை அஞ்சிக் காப்பதே துறவோர்க்கு அறம் என்பதை இவர் உணர்த்தி நின்றார் (விரிவை இராமாயணத்தில் காண்க.)

## கதை 2.

மாரதர் என்பவர் வசிட்டரது மரபில் தோன்றியவர். சிறந்த நெறியொழுக்கமுடையவர். இவர் மேருவின் தென்பால மாநகர கவாடபுரியிலிருந்தார். விண்மேல் தெய்வத்தருகுரிய விழுமிய கலங்கலெல்லாம் ஒருங்கே மேவியிருந்த இவர்பால் விபுதை என்னும் ஓர் அசுர கன்னிகை வந்தாள். அசுர குலத்துக்கோர் தலைமையான புதல்வனைப் பெறக்கருதி அசுர குருவாகிய சுக்கிரரே அவ

ளை இவரிடம் அனுப்பினர். அவளது அழகினைக் கண்டு முனிவர் அழுங்கி மொழுகாய் அவா மேற்கொண்டார். அருகிலணைந்து உருகி மொழிந்தார். அவள் இசைவுற மருவி கசையுற இருந்தார். நாள் பல கழிந்த பின் நல்லுணர்வெய்தினர். ஆசை நோயால் தாமடைந்த மாசினையோர்ந்தார். அஞ்சி நடுங்கி அவளை அகல விடுத்தார். இவரைத் தோய்ந்த நலத்தால் அவள்பால் கயமுகன் தோன்றினன். தமது இழிநிலையினை எண்ணி எரியுறு தளிர்போல் வாடி இன்னலங்கடலுட்பட்ட முனிவர், வேறோரிடத்தை அடைந்து ஆசையை அறவே நீக்கி ஈசனை நோக்கி அருந்தவம் புரிந்தார். அவாவின் வஞ்சத்தை அஞ்சி அகற்றலே அறிவோர்க்கு அறம் என்பதை உலகம் இவர்பாலும் உணர்ந்தது (விரிவைக் கந்த புராணத்தில் காண்க.)

மெய்யவா புணர்தல் முடிவாக வேண்டுங் கருவி யெலாம் பெற்றுச்
செப்பமுத்தி யடைவதற்குச் சிறந்தவளோ மறைவழிப்



பையநுழைந்து பவமீட்டும் பாய்ந்திக்கெடுக்க வல்லதவா
ஐய அதனுக்குளநடுங்கி அஞ்சிக்காத்தல் அறிஞர் தொழில்.

(குசேலோபாக்கியானம்)

அவாவை [illegible] க்கு அறம் என்பது இதனால் கூறப்பட்டது.

367 சாரும் அவாவறுத்த தக்கார்க் கிறைவரின்பம்
கூறின்றார் ஏனோ குமரேசா—நேரும்
அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். (எ)

இ—ள்.

ஒருநாள் இவரைக் கண்டு ஒன்றுமிலாதிருந்தும் எல்லாமடைந்த வர்போல் இன்பமெய்தியிருக்கும் இவரது நிலைமைக் கண்டு வியந்து "உடை கோவணமுமா யின்றி எதனுல் இங்ஙனம் உவந்திருக்கின்றீர்" என்று பணிந்து வினவினன். முனிவர் அருளுடன் நோக்கி அவாவின் நிலைமையும் அதனை அறுத்தார்க்கு உளவாம செல்வங்களையும் பல உதாரணங்களால் இனிது விளக்கினர். அரசனும் உணர்ந்து அவா அற்று உயர்ந்தான். அருந்தவம் புரிந்து வருந்தியடையவேண்டிய உயர்ந்த பதங்களை இருந்த இடத்திருந்தே இவர் வருந்தாதடைந்தார். அமரரும் முனிவரும் இவரது அவாவற்ற தன்மையை வியந்து போற்றினர். அவா சிறிதும் இலாதஇவர் எண்ணிய நலங்களை எண்ணியாங்கெய்தி அழிவிலின்பத்தை முடிவில் அடைந்தார் அவாவினை அறவே அறுத்தவர் விரும்பியன எல்லாம் விரைவில் அடைவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது. (விரிவை பாகவதத்திற் காண்க.)

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்

ஆசை படப்பட ஆய்வரும் துன்பம்
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே (திருமந்திரம்.)

37-ம் அதிகாரம் அவாவறுத்தல். 747

அவா இல்லாதவர்க்கு எல்லா நலங்களும் எளிதிலுளவாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

368 அன்று மழிசையின்பம் ஆர்ந்தார் அவாவுற்றுக்
குன்றினரேன் நால்வர் குமரேசா—என்றும்
அவாவில்லார்க் கில்லாகும் துன்பம் அஃதுண்டேல்

தவாஅது மேன்மேல் வரும். (அ)

குமரேசா! பொருளை விரும்பாமல் சென்ற திருமழிசை யாழ்வார் இன்பமுற; அதனை அவாவி நின்ற நால்வர் என் துன்ப முற்றார் எனின், அவா இல்லார்க்குத் துன்பம் இல்லாகும்; அஃது உண்டேல் தவாது மேலமேல் வரும் என்க.

அஃது என்றது அவாவை.

தவாது—குன்றாது. மேல் மேல் வரும்—இடைவிடாமல் வரும்.

அது என்னுஞ் சுட்டு துன்பத்தைக் குறித்து நின்றதாக் கொண்டு தவா அது எனப் பிரித்துக் காணினும் பொருத்தமாம்.

அவா இல்லாதவர்க்கு யாதொரு துன்பமும் இல்லை; அஃது உண்டாயின் எல்லாத துன்பங்களும் முடிவின்றி இடைவிடா மல் வரும் என்பதாம்.

துன்பங்கட்கெல்லாம் அவாவே காரணமாதலால் அதனை யுடையார்க்கு அவையுளவாதலும அஃது இல்லார்க்கு அவை இலவாதலும் இயல்பாம் என்க.

ஆசையில்லாதவர்க்குத் துன்பம் இல்லையென்பதும், அதனை யுடையவர்க்குத் துன்பம் உண்டாம்என்பதும் இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை திருமழிசையாழ்வார் கண்ணும் சிறுக னன் முதலிய நால்வர்பாலும் உணரப்படும.





## கதை.

திருமழிசையாழ்வார் என்பவர் திருமாலடியவருட் சிறந் தவராகிய ஆழ்வார்கள் பன்னிருவருள் ஒருவர். இவரது காலம் இற்றைக்கு எணணூறு வருடங்கட்கு முன்னாகும. சிலர் துவாபர யுகத்திறுதி பிற்பகுதியில் சித்தார்த்தி வருடம தைமாதத்

தில பிருது முனிவரது தவமகிமையால் ஓர் அரம்பையால் இவர் தோன்றினர் என்பர். பேணுவாரின்றி வனத்தில் தனியே கிடந்து அழுதுகொண்டிருந்த இவரை வேடனொருவன் எடுத்துச் சென்று தன் மனைவியால் தந்து இனிது வளர்த்தனன். பருவம் எய்தியபின் மனைவியைத் துறந்துபோய்த் தனியேயிருந்தார். அருந்தவர்களெவரும் வியந்துபோற்றத்தக்க தெளிந்த ஞானியாய்ச் சிறந்து விளங்கினர். எல்லாச் சித்திகளும் இவரெய்தியிருந்தார். மாலைப்பொழுதில் தனியே செல்லுங்காலத்தில் வழியே கிடந்த பல பொற்காசுகளைக் கண்டு "ஆட்கொல்லியா கிடக்கின்றது" என்று சொல்லி அகன்று சென்றார். வாணிகத்தின்பொருட்டு அவ்வழியே வந்த சிறுகணன், சேனன், பலகன், தேவகன் என்னு மநால்வரும் அச்சொல்லைக் கேட்டு அந்த இடத்தை அடைந்தார். கிடந்ததைக் கண்டார். இப்பொன்னை விரும்பாமல் விரைந்து சென்றவன் பித்தனபோலும் என்று எள்ளி நகைத்து அவற்றை எடுத்துச் சென்று அங்கோர் தனி இடத்தை அடைந்து நால்வரும் பங்கிடத் துணிந்தார். உண்டபின் பகுந்துகொள்ளலாம் என்று சிறுகணன் கூறினன். பலகனும், தேவகனும் அயலிருந்த நகரில் அன்னம் வாங்கச் சென்றார். போனபின்னர் இருக்க இருவரும் அப்பொன்னைத் தமக்கே உரிமையாக்கக் கருதி அவ் இருவரையும் கொல்லத் துணிந்து குறிக்கொண்டிருந்தார். சென்றவரும் அதனைத் தாமே கொள்ளவிரும்பியதால் திரும்புங்கால் சோற்றில் மிகுதியாக நஞ்சைக் கலந்து கொணர்ந்தார். வந்தவர் தந்ததை இருந்தவர் வாங்கினர். அவ் இருவரையும் நீர் கொண்டுவர ஏவினர். அவர் கூவத்திலிறங்கி நீர் மொண்டு நிற்குங்கால் குப்புறத் தள்ளி அவரை மேலெழாதபடி செய்து இவ்



இருவரும் மீண்டுவந்தார் இருந்த உணவை விரைந்து உண்டார் விட வேகத்தால் உடனே மாண்டார். அவர் இலராய் அகன்று சென்ற திருமழிசையார் யாதொரு துன்பமும் இன்றி அகமகிழ்ந்திருந்தார். அவ்வுடைய நால்வரும அடியோடு மாண்டார்.

அவா இல்லார்க்குத் துன்பம் இல்லை என்பதையும், அதனையுடைய வர் முடிவில்லாத துன்பத்தை அடைவர் என்பதையும், உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவை ஆழ்வார் சரிதையில் காண்க.)

அவாவே துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்பது இங்கு கூறப்பட்டது

369 என்றுமறா இன்பத்தை எய்தினன் பிருகுமுனி
குன்றல் கொண்டார் குமரேசா—என்றுமே
இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துட் துன்பங் கெடின். (௯)

குமரேசா! அவா நீங்கியபின் பிருகுமுனிவர் என்றும் அழியா இன்பத்தை எய்தினர் எனின், அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின், இன்பம் இடையறாது ஈண்டும் என்க.

துன்பத்துள் துன்பம்—துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க துன்பம். அவாவையே துன்பம் என்றது அதன் இயல்பும் தீமையும் கருதி என்க.

அவா என்று சொல்லப்படுகின்ற பெருந் துன்பம் ஒருவனுக்குக் கெடுமாயின், இன்பமானது அவன்பால் இடையறாது வந்து பெருகும் என்பதாம்.

ீ, ஈண்டும் என்பதைப் பெயராகக் கொண்டால் உலகத்தும் இன்பம் இடையறாது என்று கொள்க. இதில் உம்மை ஈண்டும் என்பது தோன்றநின்றமையின் எச்சவும்மையாம்.



அவாவை ஒழித்தவன் அழிவில்லாத இன்பத்தை இடையறாது எய்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வு

ண்மை பிருகு முனிவர்பால் உணரப்படும்.

## கதை.

பிருகு என்பவர் அந்தணர் மரபில் தோன்றிய ஓர் அருந் தவர். பிரமாவின் மானசபுத்திரருள் ஒருவர் எனபர். எல்லாக் கலைகளிலும் வல்லவர். பிறந்தபொழுதே பேரொளியுடையரா யிருந்தமையால் இவர் பிருகு என்று பெயரிடப் பெற்றார். புலோமசை, கியாதி என்னும் மனைவியரிருவரை மணந்து முதலில் இவர் இல்லறம் புரிந்தார். முற்றத் துறந்த முனிவரர்களும் இவரது சிறந்த தவ ஒழுக்கத்தைக் கண்டு புகழ்ந்து போற்றினர். திருமாலோடு அமர் புரிந்திளைத்த அசுரர் சிலர் இவருடைய முதல் தேவியிடம் வந்து அடைக்கலம் புகுந்தார். அந்த அம்மையாரோர் அல்லலும் அடையாதபடி அவர்கட்கு அருள் புரிந்தனுப்பினள். அதனால் மால் சினந்து அவளை மடியச் சபித்தார். அவள் மாண்டதையறிந்து முனிவர் மாலை நோக்கி "நீர் மண்மேற் பிறந்து மனைவியைப்பிரிந்து வருந்துவீர்" என்று சபித்தார். அதன் பயன்தான் இராமாவதாரத்தில் நிகழ்ந்தது என்பர். இறந்த மனைவியைத் தமது தவ மகிமையால் முனிவர் எழுப்பிக்கொண்டார். பின்பு துன்பங்களே மலிந்துள்ளன என்று கருதிப் பிறவியை வெறுத்தார். எல்லாத் துன்பங்கட்கும் அவாவே காரணம் என்று தெளிந்து அதனை அறவே அறுத்தார். அதனால் அல்லல் யாதுமின்றி ஈண்டும் அமர்ந்து இன்புற்றிருந்து பின் மீண்டு வாரா மேன்மையை மேவினர். அவா ஒழியின் இருமையினும் இன்பம் மிகும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. விரிவைத் தேவிபாகவதத்தில் காண்க. அவா ஒழியின் அளவில்லாத இன்பம் உளவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

370 அன்றேன் அரியசுவர் ஆசையற்ற அப்பொழுதே
குன்றாஇன் புற்றார் குமரேசா — என்றுமே
ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். (ம)

இ—ள்.

குமரேசா! அரியசுவர் என்பவர் அவா நீங்கிய அப்பொழுதே என பிறவா இன்பம் பெற்றார் எனின், ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும் என்க.

ஆரா பேரா என்பன ஆர்தல் பேர்தல் என்னும் வினையடியாகப் பிறந்த எதிர்மறை யெச்சங்கள்.

ஆர்தல்—நிறைதல். பேர்தல்—நிலைதிரிதல்.

ஆரா இயற்கை அவா—நிரம்பாத இயல்பினையுடைய ஆசையை.

பேரா இயற்கை என்றது முத்தியை; என்றும் நிலைதிரியாத இயல்பையுடையதாதலால் அஃது இங்ஙனம் கூறநின்றது.

ஒருகாலும் நிறைதலில்லாத இயல்பினையுடைய அவாவினை ஒருவன் ஒழித்துவிடுவானாயின் அப்பொழுதே அஃது அவனுக்கு வீட்டின்பத்தைக் கொடுத்துவிடும் என்பதாம்.

அவா நீங்கியபொழுதே ஒருவனுள்ளத்தில் பேரின்பம் ஓங்கிவிடும் என்பது கருத்து.

ஒருகாலும் நிறையாத அவாவினை ஒழித்தவர் என்றும் நிலையான இன்பத்தை எய்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அரியசுவர் பால் உணரப்படும்.

அரியசுவர் என்பவர் தக்கனுடைய புதல்வர்கள். தாய்

பெயர் வேதவல்லி. இறைவனருளால் பதினாயிரவராக இவர்



இசைந்து தோன்றினர். இவரனைவருக்கும் ஒரு தொகையாக அரியசுவர் என்றே பெயர். உருவிலும், குணத்திலும், அறிவிலும், அழகிலும், ஒரு நிகரானவர். தக்கன் விருப்பியாங்கு படைப்புத் தொழிற்குரிய உயர்ந்த பதவியைத் தாம் அடைய வேண்டி இவர் தவத்திற்கேகினர். விந்த மலைச் சாரலில் விளங்கியிருந்த ஓர் அழகிய பொய்கையை அடைந்து தாம் விரும்பியதை மேவ அருந்தவம் புரிந்தார். ஆண்டுகள் பல கழிந்தபின் ஆண்டு நாரதர் வந்தார். தவம் புரி பாலரை வியந்து நோக்கினர். "யாது வேண்டி இம் மா தவஞ் செய்கின்றீர்" என்றார். அவரனைவரும் உற்றதை யுரைத்தார். முனிவர் இரங்கினர். "எத்துணை சிறந்த பதவியாயினும் அதில் துன்பங்கள் நிறைந்தே யிருக்கும். துன்பம் கலந்த ஒன்றை இன்பமெனலாகுமா? மாசற்ற இன்பத்தையே நீர் மருவுதல் வேண்டும். அஃது ஆசையற்றவர்க்கே அமைவதாகும். உணர்வோர் பெறும் பயன் அவ்வுயர் நலமேயாம்" என்று உண்மையை உணர உரைத்தார். அவரனைவரும் உணர்ந்தார். உற்ற அவாவை முற்றும் ஒழித்தார். முத்தராகி உடனே முத்தியை அடைந்தார். நிறையாத அவா நீங்கியபொழுதே நிறைவான பேரின்பம் உண்டாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைக் கந்தபுராணத்திலும் பாகவதத்திலும் காண்க.)

ஆராத அவா அற்றபொழுதே போராத இன்பம் பெருகும் என்பது இதனால் கூறப்பட்டது.

நன்றாய் ஞானங்கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாமீர்த் [ந்து
தொன்றாய்க்கிடந்தஅரும்பெரும்பாழ்உலப்பிலதனையுணர்ந்துணர்
சென்றாங் கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றால்

அன்றே அப்போதே வீடும் அதுவேவீடு வீடாமே.

(திருவாய்மொழி.)



மாடத்துளான் அல்லன் மண்டபத்தான் அல்லன்
கூடத்துளான் அல்லன் கோயிலுள்ளான் அல்லன்
வேடத்துளான் அல்லன் வேட்கைவிட்டார் நெஞ்சின்
மூடத்துளே நின்று முத்திதந்தானே. (திருமந்திரம்)

(இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்)

அவாவே பிறப்பிற்கு வித்து. அவா இல்லாதவர்க்குப் பிறவாமையுண்டாம். அவா இன்மையே அறிவோர்க்கு அரும்பெருஞ் செல்வம். அதுவே முத்தியின்பமாம். அவா அற்றவரே பிறப்பு அற்றவராவர். தன் நெஞ்சிற் புகாவண்ணம் அவாவை அஞ்சிக் காக்கவேண்டும். அவா இல்லாதவர்க்கு எல்லா நலங்களும் எளிதில் உளவாம். அவா இலாதவர் இன்பத்தையும் அதனையுடையவர் துன்பத்தையும் அடைவர். தொலையாத அவா தொலையின் நிலையான இன்பம் விளையும். அது நீங்கிய அப்பொழுதே என்றும் நீங்காத இன்பம் எய்தும்.

௩௭-வது அவா வறுத்தல் முற்றிற்று.

## ௩௮-ம் அதிகாரம் ஊழ்.

அஃதாவது வினையின் விளைவு. வினையாவது மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கரணங்களினின்று தோன்றுகின்ற நினைவு, சொல், செயல்கள். அவை நல்லனவாயின் நல்வினையாம். தீயனவாயின் தீவினையாம். நல்வினை இன்பத்துக்கும் தீவினை துன்பத்துக்கும் காரணமாகும். கடவுள் வாழ்த்து முதல் அவாவறுத்தல் ஈறாக உரைத்தன யாவும் துன்பம் நீங்கி இன்பம் எய்தும் நெறிகளையே இனி உணர்த்தின; 'முன்பு செய்த நல்வினையே பின்பு நல்லூழாய் இன்பம் விளைக்குமாதலால்

இதுவரை செய்யாதொழியினும இனிமேலாவது அதனையே ஒருவன செய்யவேண்டும் என்பதும, அடுத்துவருகின்ற பொருள், இன்பங்கட்கும் அவ் ஊழே காரணமாகும என்பதும், உறுதியாக உணாததவேண்டியே இஃது இறுதியாக சண்டு வைக்கப்பட்டது. அதிகார முறைமையும் இதனானே புலனும்.

---

754 திருக்குறட் குமரேச வெண்பா.

371 அன்றறுவர் தீயின் றகன்றார் மடிகொண்டு
குன்றினரோன் மற்றோர் குமரேசா—என்றுமே
ஆகூழாற் றோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்றும் மடி. (1)

-ள்.

குமரேசா! வீமன் முதலிய அறுவரும் தீயின்று அகன்றார்; சகனை முதலிய எழுவரும் என் மடிகொண்டு மாய்ந்தார் எனின், ஆகும் ஊழால் அசைவின்மை தோன்றும்; கைப்பொருள் போகும் ஊழால மடி தோன்றும் என்க.

ஆகு ஊழ், போகு ஊழ் என்னும் வினைத்தொகைகள் பொதுவாய் நின்று பெயரெச்சப் பொருளை மாத்திரம் உணர்த்தாமல் காரணப் பொருளவாய் நின்றன.

அசைவின்மை என்றது முயற்சியை. அசைவு—மடி.

ஒருவன் செய்த நல்வினை பின்பு நல்லூழாயும், தீவினை தீயூழாயும் விளைந்து அவனது இன்பதுன்பங்கட்கு முறையே காரணமாகுமாதலால் அவை ஆகூழ் எனவும், போகூழ் எனவும அமைந்து நின்றன.

க்கபபொருள் ஆகற்கு ஏதுவாகிய ஊழால் ஒருவனுக்கு முயற்சி உண்டாப; அஃது அழிதற்கு ஏதுவாகிய ஊழ் நேர்ந்தால் மடியுண்டாம் என்பதாம்.

பொருள் ஆகி வருதற்கும், அஃது அழிந்து தொலைதற்கும் ஊழே காரணம் என்பது கருத்து.

நல்லூழ் உடையவர் முயற்சியுடையராய் உயர்ச்சியடைவர் என்பதும், தீயூழ்உடையவர் மடிமிகுந்து அழிவுறுவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை வீமன்கண்ணும் சகன் முதலிய எழுவர்பாலும் உணரப்படும்.



துரியோதனனது புன்மைக்கு இரங்கி வீடுமர் முதலியோர் பாண்டவர்களைக் காசியில் சிறிதுகாலம் தங்கியிருக்கும்படி செய்தார். துரியோதனன் சூழ்ச்சியால் புரோசனன் என்னும் மந்திரியும் அவரோடு பொருந்தியிருந்தான். நாள் பல கழிந்த பின் மெழுகால் இவன் அங்கோர் மாளிகை அமைத்து ஐவரையும் அதில் குடியேறச் செய்து உடன் வாழ்ந்திருந்தான். அவர் அயர்ந்து தூங்குங்கால் அவர் மாயும் வகை அதில் தீயை வைத்தற்கு இவன் அமையம் நோக்கியிருந்தான். இங்ஙனம் இருக்குங்கால் துரியோதனன் அவர்களை விரைந்து கொல்லக்கருதி சகன், நரன், சலன், சாகுலன், வலன் என்னும் வேடர் ஐவரை அழைத்து விடம் அருத்திக்கொன்றுவரும்படி ஐயாயிரம் பொற்காசுகளைக் கொடுத்து விடுத்தான். அக்கொடியவரைவரும் ஒருதாய் வயிற்றிற் பிறந்தவர். சாசனி என்னும் தம் தாயையும் அழைத்துக்கொண்டு தேன் விற்பவர் போல் அங்குவந்து சேர்ந்தார். பொழுதும் போயிற்று. விடிந்தபின் பார்ப்போம் என்று அம் மாளிகையின முன்புறத்தில தங்கினர். தாம் கொண்டுவந்த விடங் கலந்த தேனையும், பரிசிலாகப் பெற்ற பொருளையும் பொதிந்துவைத்துக்கொண்டு சிறுதுநேரம் சென்றபின் அயர்ந்து தூங்

கினர். பாதி இரவில் வீமன் எழுந்தான். இங்கிருந்தால் என்றேனும் தீங்கு நிகழுமென்று கருதி தமையனரையும் தாயையும் உடன்கொண்டு வெளியே போயினன். போனவுடன் தீயும் பொங்கி எழுந்தது. மாளிகை முழுதும் தீந்து கரிந்தது. கைப்பொருளும்போய், வேடரும், தாயும், விரகனும் வெந்து தொலைந்தார். இவரும், தாயும் அகன்று பிழைத்தார். மடிகொண்டார் பொருளிழந்து மாண்டார். மடியில்லார் பின் முடிபுனைந்தாண்டார். ஆகூழால் ஒருவனுக்கு முயற்சி தானே உண்டாகும் என்பதையும், போகூழால் மடி தோன்றும் என்பதையும் உலகம் இவர்பால் ஒருங்கே கண்டது. (விரிவைப் பாரதத்தில் காண்க.)

முயற்சியும் மடியும் ஒருவனுக்கு ஊழானே உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

95



372 பண்டுநளன் பேதைமையாற் பாரிழந்தான் புட்கரனேன்
கொண்டுவந்தான் செல்வம் குமரேசா—மண்டிவந்து
பேதைப்படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை. (௨)

குமரேசா! நல்லறிவுடைய நளன் அறிவு திரிந்து தன் அரசினை இழந்தான்; புல்லறிவுமிக்க புட்கரன் என் அதனைப் பெற்று மகிழ்ந்தான் எனின், இழவூழ் பேதைப்படுக்கும்; ஆகலூழ் உற்றக்கடை அறிவு அகற்றும் என்க.

உற்றக்கடை—பொருந்தியபொழுது.

இழவூழ்—இழத்தற்கு ஏதுவாகிய ஊழ்.

ஆகல் ஊழ் அறிவு அகற்றும்—ஆதற்கு ஏதுவாகிய ஊழ் அறிவை விரிக்கும். அகற்றல்—விரித்தல், நீக்கல், தூரத்தல.

நல்லறிவாளரைப் புல்லறிவினராக்கவும், புல்லறிவாளரை நல்லறிவினராக்கவும ஊழ் வல்லது எனபார் "இழவூழ் பேதைப் படுக்கும ஆகலூழ் அறிவு அகற்றும" என்றார்.

இழவூழ் ஒருவனுக்கு அறியாமையையுண்டாக்கும்; ஆகலூழ் உற்றவிடதது அறிவை விரிக்கும் எனபதாம்.

மேல், பொருள் வருதற்கும், குறைதற்கும் ஏதுவாகிய முயற்சியும் மடியும ஊழானே வரும் என்றார்; இதில் ஒருவனது அறிவைச் சுருககவும், பெருக்வும் அது வல்லது எனறார்.

நல்ல அறிவினையுடையராயினும் தீயூழ் அடைந்தால் தம் அறிவெலாம் இழந்து இழிவடைவர் என்பதும், அறிவிலராயினும் நல்லூழ் உற்றால் எல்லா அறிவுமுடையராய் உயர்வடைவர் என்பதும, இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை நளன்கண்ணும், புட்கரன்பாலும உணரப்படும்.

38-ம் அதிகாரம் ஊழ். 757

கதை.

நல்லறிவாளனாகிய நளன் பேரழகுடைய தமயந்தியை மணந்து இனபுற்று வாழுங்கால புட்கரன் என்னும் பெயரினையுடைய குறுநில மன்னன் ஒருவன இருந்தான. அவன் ஆசையும், பொறாமையும், அச்சமும் அமைந்தவன்.

நஞ்சினும் கொடியவன் நாளுந் தீமையே
நெஞ்சினில் உடையவன் நீதி யில்லவன்
வஞ்சனை சூதுபொய் மாயம வல்லவன்

அஞ்சையும் ஆறென அகத்தில் கொண்டவன். என்றபடி புல்லிய குணங்கள் எல்லாமுடைய இவன், கலியின சூழ்ச்சியால் நளன்பால் வந்தான். தன் முடி படியிற் பட அவன் அடியில விழுந்தான். அவன இருக்க என்றுரைத்த பின் இவன் இனிதிருந்தான் சூதாட வரும்படி நளன்பால் இவன ஏகாமல் ஏகினன் எய்தும நல்குரவினுக்கு இயைந்த தூது; வெமபொய்யினுக்கு அருந் துணை; புன்மைக்கு ஈன்ற தாய்; மெய்யினுக்கு உறுபகை; என்று சூதின் நிலைமையை நன்குணர்ந்திருந்தும் நளன் எதும ஆராயாமல அவனுடன் ஆட இசைந்தான, அதில் தனது அரசு முழுவதும் இழந்தான். கல் அறிவு சிறிதுமில்லாத புட்கரன விரிந்த அறிவுடையனுப் அதனை வென்று கைக்கொண்டான. தீயூழால் நளன் பேதையனுகிப் பெரும்பொருளிழந்தான். நல்லூழால் அறிவு மிகுந்து புட்கரன் அரசை அடைந்தான் எல்லா அறிவும் உடையனுயினும இழவூழ் உற்றவிடத்து ஒருவனுக்கு அறிவுகுன்றும் என்பதையும், அறிவிலனுயினும' ஆகலூழ் உற்றால் அவனுக்கு அறிவு விரியும் என்பதையும், உலகம் இவ்இருவர்பாலும் ஒருங்கே கண்டது. (விரிவை நளசரிதையில் காண்க.)

ஆவது விதியெனின் அனைத்தும் ஆயிடும்
போவது விதியெனின் எவையும் போகுமால்
தேவருக் காயினும் தீர்க்கத் தக்கதோ
ஏவரும் அறியொணு ஈசற் கல்லதே, (கந்தபுராணம்.)

758 திருக்குறட் குமரேச வெண்பா.

ஒருவன் அறிவைக் குறைக்கவும் விரிக்கவும் ஊழ் வல்லது என்பது இதனுல் கூறப்பட்டது.

373 இன்றோள் இராமனுமேன் தோராமல் மான்பின்போய்க்
கொண்டான் துயரம் குமரேசா—தண்டாமல்

நண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும். (௯)

இ—ள்.

குமரேசா! நூல் பல கற்ற இராமரும் என் ஆராயாது மான்பின் சென்று துன்பம் எய்தினர் எனின், நண்ணிய நூல் பல கற்பினும், மற்றும் தன் உண்மையறிவே மிகும் என்க.

உண்மை என்றது ஊழை. பால், முறை, தெய்வம், விதி நியதி, உண்மை, கன்மம், என்பன ஊழையே யுணர்த்திவரும் ஒரு பொருட் சொற்கள்.

நண்ணிய நூல்—நன் பொருள்களை உணர்த்துகின்ற நூல்; அஃதாவது தன்னைக் கற்பவருடைய அறிவை மிக்க நுட்பமாக்குந் திறனுடையது. உம்மை சிறப்பு உம்மை.

உண்மை அறிவு—ஊழறிவு. முன்னரே செய்துபோந்த வினையினால் தோன்றி நிலைபெற்றிருத்தலின் இஃது இப் பெயர் பெற்றது.

நண்ணிய நூல்கள் பலவற்றையும் ஒருவன் கற்றிருப்பினும் பின்னும் அவனுக்குத் தன் ஊழறிவே மிக்குத் தோன்றும் என்பதாம்.

நூலறிவு சாலவுடைய மேலோராயினும் தீயூழ் அணுகின் தமது உயர் மதி மயங்கி அதன் வயமாகி நன்றென ஒன்றை நயந்துசெய்து பின் இரங்கி மெலிவர் என்பது கருத்து.

38-ம் அதிகாரம் ஊழ். 759

மேல், ஒருவனது அறிவைச் சுருக்கவும், பெருக்கவும் ஊழ் வல்லது என்றார்; இதில் நூலறிவையும் அது கீழ்ப்படுக்கும் என்றார் கல்லார் அறிவை ஊழ் கலக்குமேயன்றி, நூல் வல்லார் அறிவை அஃது என்செய்யும் என்பார்க்கு இஃது இயம்

பியமெதன்க,

சிறந்த அறிவுடைய உயர்ந்தவர்களையும் ஊழ் தன் வயப்படுத்திவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இராமரால் உணரப்படும்.

## கதை.

இராமபிரான் பஞ்சவடியில் தங்கியிருக்குங் காலத்தில் சீதையை வஞ்சித்துக்கொள்ளக் கருதிய இராவணன், அழகிய ஒரு மான் வடிவங்கொண்டு சீதைமுன் போய் நில் என மாரீசனை ஏவினன். அவனும் அவ்வாறே ஆகி வந்தான். சீதை கண்டாள். ஆசை கொண்டாள். அப் பொன்மானைப் பற்றித்தரும்படி தன் நாயகனை வேண்டினள். இராமரும் இசைந்து சென்று அப் பொன் மானை நோக்கிப் பெரிதும் வியந்தார். அதன் அழகில் மயங்கி ஆவல்மிக கூர்ந்தார். பிடிக்கத் துணிந்தார். அடுத்து நின்ற தம்பி தடுத்து வணங்கி "அண்ணா, இம்மானின் வடிவையும், அழகையும், ஒளியையும், இயல்பையும் ஊன்றி நோக்கினால் ஒருமாயம் என்றே எனக்குத்தோன்றுகின்றது. மாரீசன் என்னும் அரக்கனே இவ் வடிவங் கொண்டு இங்கு வந்துள்ளான் என்று எண்ணுகின்றேன். இதன்பால் சென்ற விருப்பத்தை அடிகள் அறவே ஒழித்தல் வேண்டும்" என்று மிகவும் நயந்து மொழிந்தான். இராமர், ஒன்றுந் தேராமல், அதனை மெய்ம்மான் என்றே நம்பி இதம் பல கூறித் தம்பியை இருத்திவிட்டு அதன் பின்பே சென்றார். ஆண்டிலும் அறிவிலும் இளையவனாகிய இளையவனுக்கு உண்மை தோன்றவும், நுண்ணிய நூலறிவுடையாரெல்லாரும் எண்ணிப் போற்றுகின்ற புண்ணிய மூர்த்தியாகிய இராமருக்கு அது தோன்றாமல் அம் மான் பின் போய் அல்



லல் பல எய்தி அகம் கரைந்திரங்கினர். நூல் பல கற்பினும் ஊழறிவே மிகும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிக்

தது. (கிரிலை ஆரணிய காண்டத்தில் காண்க.)

இம்மான் இலிலத்தினில் இல்லையெனு
எம்மானி தெனச்சிறி தெண்ணல் செயான்
செம்மானவள் சொற்கொடு தேமலரோன்
அம்மா னும் அருத்திய னுயி

நோக்கிய மானைநோக்கி நுதியிழை மகிழ்வின்றுன்றுந்
தூக்கிலை நனறிகென்றன் அதனைபொருள் சொல்லலாகும்
சேக்கையின அரவுநீங்கிப் பிறந்தது தேவர்செய்த
பாக்கிய முடைமையன்றோ அன்னது பழுதுபோமே. (கம்பர்.)

இவை, மானை நோக்கியபொழுது இராமனைக் குறித்துக் கூறியன. இக்கவிகளில் அமைந்துள்ள அழகுகளையும், பத நயங்களையும், பொருள் வளகைகளையும் ஆய்ந்து மகிழ்க.

நூலறிவையும் ஊழ் கீழ்ப்படுத்தும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

374 தெள்ளியனும் இன்றும் துரோணன் துருபனிடம்
கொள்ளவந்தான் என்னே குமரேசா—கொள்ளும்
இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. (ச)

இ—ள்.

குமரேசா! துரோணர் அறிவுடையரா யிருந்தும் பொருள் இலராகித் திரு ஒன்றே உடைய துருபனிடம் ஏன் வந்தார் எனின், உலகத்து இயற்கை இரு வேறு; ஆதலால் திரு வேறு தெள்ளியர் ஆதலும் வேறு என்க.

ந—செல்வம். தெளிவு—அறிவு.

திரு வேறு—செல்வமுடையராதலும் வேறு.

தெள்ளியர் ஆதலும் வேறு—அறிவுடையராதலும் வேறு.

திருவும் தெளிவும் ஒருவனைபால் ஒருங்கே அமைந்திருத்தல் அரிது என்பார் உலகத்தியற்கை இருவேறு என்றார்.

உலகத்தின் இயல்பு இரண்டு வகை; ஆதலால் திருவுடையராதலும் வேறு அறிவுடையராதலும் வேறு என்பதாம்

மேல், நூலறிவையும் ஊழ் வேறுபடுத்தும் என்றார்; இதில், அறிவுடையார்க்குப் பொருள் இன்மையையும் பொருளுடையார்க்கு அறிவின்மையையும் அஃது அளித்து நிற்கும் என்றார்.

திருவும் அறிவும் ஊழானே வரும். எனினும் அறிவிலார் சிலர் செல்வராகவும் அறிவுடையார் பலர் வறியராகவும் பெரும்பாலும் இவ்வுலகில் காணப்படலான் ஒன்றற்காகும் ஊழ் ஒன்றற்கு ஆகாது என்பதை இஃது உணர்த்தியதென்க.

அறிவும் திருவும் ஒருவன்பால் ஒருங்கே அமைவது அரிதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துரோணனாலும் துருபனாலும் உணரப்படும்.

## கதை

துரோணர் என்பவர் பரத்துவாசருடைய புதல்வர். இவர் பிறப்பு மிகவும் வியப்புறத்தக்கது. பரத்துவாசர் ஒருகால் திலோத்தமையைக் கண்டார். அவள்மேல் பெருங் காதல்கொண்டார். அதனால் தமது வீரியம் வெளிப்பட அதனை அங்கிருந்த ஒரு துரோணத்தில் விடுத்தார். துரோணம் என்பது பதக்கு நீர் கொள்ளும் ஒரு கும்பத்துக்குப் பெயர். அதிலிருந்து இவர் தோன்றியதனால் இவருக்குத் துரோணர் என்று பெயர் வந்தது என்பர். இவர், எல்லாக்கலைகளிலும் வல்லவர். நல்ல சீலமுள்ளவர்.

ஈரேழ் விஞ்சைத்திறனும் ஈன்றோன் தன்பாலெய்தி
நீரேழுலகை யாவும் நிறைந்தகேள்வி நெஞ்சன்



பாரேழெண்ணும் படைகள் பரசுராமன் தன்பால்
ஓரேழ் பகலிலுலகுக் கொருவனெனக் கற்றான்

இத்தகைய பேரறிவுடைய இவர் யாதொரு பொருளும் இல்லாத வராயிருந்தார். இவர் கிருபி என்னும் ஓர் அழகியை மணந்து ஒரு புதல்வனைப் பயந்தார். துணைவியையும் குழவியையும் பேண முடியாமல் நாணி வருந்தினர். தனது பழைய நண்பனாகிய துருபனிடம் வந்தார். அவன் பெருந் திருவுடையனாய்ச் சிறந்து விளங்கினும் போதிய அறிவு பொருந்தப் பெறாதவன். அவன் பால் இவர், தம் வறுமையைக் கூறி ஏதேனும் ஒன்று தருக என்றிரந்தார். அவன், இல்லை போ என்று ஒல்லை மொழிந்தான். எள்ளி நகைத்தான். இவர் இரங்கி மீண்டார். பின் இயன்றதைச் செய்தார். அறிவுள்ள இவர் பொருள் இலராகவும், தெளிவில்லாத துருபன் திருவுடையனாகவும், திகழ்வதைக் கண்டு அனைவரும் இரங்கினர். அறிவுடையார்க்காகும் ஊழ் செல்வமுடையார்க்கு ஆகாது, செல்வமுடையார்க்கு ஆகும் ஊழ் அறிவுடையார்க்காகாது என்பதை உலகம் இவ் இருவர் பாலும் அன்று உணர்ந்து தெளிந்தது. (விரிவைப் பாரதத்தில் காணுக.)

திருவையும் அறிவையும் ஊழ் இருவேறு வகையாகத் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

375 சாதுவன்முன் நன்றாய்த் தாழ்ந்தான்பின் தீதடைந்துங்
கோதகன்றான் என்னே குமரேசா—ஆதலினால்
நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. (ரு)

இ—ள்.

குமரேசா! நல்ல உபாயங்களைச் சூழ்ந்து கொண்டும் சாதுவன் தாழ்ந்து போனான்; பின் தீயவரைச் சார்ந்து நின்றும் ஏன செல்வம் பெற்றான் எனின், செல்வம் செயற்கு நல்லவை எல்லாம் தீயவாம்; தீயவும் ஊழ் வயத்தான் நல்லவாம் என்க.



ஊழ் வயத்தான் என்பது இதில் வருவிக்கப்பட்டது. நல்லவை எல்லாம் என்றது செல்வத்தை ஈட்டுதற்கு உதவியான கருவியின் நலன்களை.

செல்வத்தை ஒருவன் ஈட்டுங்கால் நல்லவை எல்லாம் தீயனவாய் நின்று அழிக்கவும்; தீயவை எல்லாம் நல்லனவாய் நின்று ஆக்கவும் ஊழ் செய்விக்கும் என்பதாம்.

நல்ல காலத்தில், நல்ல இடத்தில், நல்லவிதமாகச் சூழ்ந்து செய்யினும் நல்லூழ் இல்வழி அவை யாவுந் தீயனவாய்க் கேட்டை விளைக்கும் என்பதும், அக்காலம் முதலியன தீயனவாயினும் நல்லூழ் உற்றால் அவை நலமுடையனவாய் நின்று ஆக்கத்தைப் பயக்கும் என்பதும் இதன் கருத்தாம் என்க.

மேல், அறிவில்லார்க்குத் திருவையும் திருவில்லார்க்கு அறிவையும் ஊழ் சேர்க்கும் என்றார்; இதில், அது நல்லதைத் தீயதாக்கவும் தீயதை நல்லதாக்கவும் வல்லதென்றார்.

தீயூழ் உற்றால் ஒருவனுக்கு நல்லவுந் தீயவாகும் என்பதும் நல்லூழுற்றால் தீயவும் நல்லவாகும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. (இவ்வுண்மை சாதுவன்பால் உணரப்படும்.)

கதை.

சாதுவன் என்பவன் பெருநிதியுடைய ஒரு வணிகர் தலைமகன். இவன் மனைவி பெயர் ஆதிரை. சிறந்த கற்புடையவள். அவளுடன் அமர்ந்து இவன் இல்வாழ்ந்து வருங்கால் போகவதி என்னும் ஒரு தாசி வசப்பட்டுத் தன் செல்வ முழுதும் சோர இழந்தான். பின் தேறி வருந்தினான். மீண்டும் பொருள் தேட விரும்பி நண்பர் சிலருடன் கலந்து நல்ல ஓரையில் கப்பலேறிச் சென்றான். இடை வழியில் வந்த கடு வளியால் அக்கப்பல் உடைந்தது. அதிலிருந்தாரனைவரும் பெருந் துயரடைந்தார். பலர் மாண்டார். சிலர் திருவருளால் கரை சேர்ந்தார். அங்கு ஒடிந்து விழுந்த பாய்மரத் துண்டைச் சாதுவன் பற்றிக் கிடந்





தான். அஃது அலைகளால் அலைந்தலைந்து ஒரு மலையினை அடைந்தது. அதற்கு நாகர் மலை என்று பெயர். அதனில் உள்ளவர்கள் உடையில்லாதவர்களாய்க் கொடிய குணமுடையராய் எதையும் தின்னும் இயல்பினரானவர். அந்நாகர்கள் அயர்ந்து சேர்ந்த இவனை விரைந்து கொல்ல வந்தார். இவனது இனிய மொழிகளைக் கேட்டு இரங்கிக் கொண்டுபோய்த் தம் தலைவன் முன் விடுத்தார். தலைவனும் இவனது நிலைமையைத் தெளிந்தான். எமக்காம் நல்லறம் எடுத்துரை என்றான்.

நன்று சொன்னாய் நன்னெறிப் படர்குவை
உன்றனக்கு ஒவ்வார் நெறியறம் உரைக்கேன்
உடைகல மாக்கள் உயிருய்ந் தாங்குறின்
அடுதொழில் ஒழிந்தவ ராருயிர் ஓம்பி
மூத்துவிளி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்
தீத்திறம் ஒழிகெனச் சாதுவன் உரைக்கவ
அவனும், எம்மோர்க்காகும் இவ்வறஞ் செய்கேம்
ஆங்கதற் காகும் அரும்பொருள் கொள்கெனப்
பண்டும் பண்டும் கலங்கவிழ் மாக்களை

உண்டேடம் அமர்கா உறுபொரு ளீகெனை
விளாமரம் மென்துகில் விழுத்திக் குப்பையோ
டுவைஇவை கொள்கென எடுத்தனன் கொடுத்தான்.

அப்பொருளனைத்தையும் பெற்றுக்கொண்டு அதனை யடுத்துவந்த சந்திரதத்தன் என்னும் ஒரு வணிகனது கப்பலிலேறித் தன்னக நகர் அடைந்தான். நல்லனவற்றைத் தீயனவாக்கி அல்லல் அளிக்கவும், தீயனவற்றை நல்லனவாக்கிச் செல்வம் விளைக்கவும், ஊழ் வல்லதென்பதை உலகம் இவன்பால் கண்டது. (விரிவை மணிமேகலையில் காண்க)

நல்லதைத் தீயதாக்கவும், தீயதை நல்லதாக்கவும் ஊழ் வல்லது என்பது இதனால் கூறப்பட்டது.

---



376 கட்டி வைத்தும் தத்தன்முன் கைவிட்டான் ஏலேலன்
கொட்டியுமேன் பெற்றான் குமரேசா — முட்டப்
பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம. (சு)

ள்.

குமரேசா! தருமதத்தன வருந்திக் காத்தும் தன் பொருளை இழந்தான்; ஏலேலன் கடலிடைச் சொரிந்தும் ஏன் தன் கைவரப் பெற்றான் எனின், பால் அல்ல பரியினும் ஆகாவாம்; தம உய்த்துச் சொரியினும் போகா என்க

பால்—ஊழ். பரிதல்—வருந்திக் காத்தல்.

பால் அல்ல—ஊழால் தமக்கு உரிமையில்லாத பொருள்கள்.

தம—தமக்கு உரிமையான பொருள்கள்; தம்முடையன என்றபடி.

ஊழால் தமக்கு உரிமையில்லாத பொருள்களை வருந்திக் காப்பினும் அவை நில்லா; தமவாய பொருள்களை வெளியே கொண்டு போய்ச் சொரிந்து விடினும் தம்மை விட்டு அவை போகா என்பதாம்.

செல்வம் நிலைத்தலும், போதலும் ஊழால் ஆகுமேயன்றி மக்களது காத்தல் ஒழிதல்களால் அமையா தென்பார் "பால் அல்ல பரியினும் ஆகா; தம சொரியினும் போகா" என்றார்.

ஊழால் தம்முடையதல்லாத பொருள் கண்ணூன்றிக் காத்தாலும் நில்லாது, தமவாயது கடலிடை எறிந்தாலும் போகாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமதத்தன் கண்ணும் ஏலேலன் பாலும் உணரப்படும்.

## கதை 1.

தருமதத்தன் என்பவன் கலிங்க நாட்டிலே அரிபுரம் என்னும் நகரிலேயிருந்த தேவதத்தன் என்னும் ஒரு வணிகனுடைய



தலைமகன். பெரும்பொருளுடையவன். ஆயினும் சிறந்த அறிவில்லாதவன். எவர் எதைச் சொன்னாலும் அதை நம்பி யுழல்

வான். பொருள்மேல் பெரும் பற்றுடையவன். கண்ணினும் உயிரினும் சிறந்ததாக அதனை எண்ணிக்காத்துவந்தான். வருங்கால் இரசவாதி என்று ஒரு வஞ்சகன் இவன்பால் வந்தான். அவன் செய்த வஞ்ச வினையினால் இவன் வருந்திக் காத்துவந்த பொருள் முழுவதையும் தன் கண்முன்னே வறிதே இழந்தான். அதனால் இறந்தான். பால் அல்ல பரிசினும் ஆகாவாமையான் பதை உலகம் இவன்பால் கண்டது. (விரிவைக் கந்த புராணத்தில் காண்க.)

## கதை 2.

வணிக குல திலகராகிய ஏலேலசிங்கர் பிறவும் தம்மேபோல் பேணி நெறி வழுவாது வாணிகம் புரிந்துவருங்கால் இடையே பஞ்சம் தோன்றிற்று. அதிலும் நெஞ்சங் கோடாமல் நிறை உண பொருள்களை உயிர்கள் இன்புற இனிது உதவிவந்தார். அதனால் பெரும் பொருள் திரண்டது. அதிலொரு பெரும் பகுதியை எடுத்துப் பொன்னாக மாற்றி உருக்கிப் பொற் கல்லாகச் செய்து அதன்மேல் "இஃது ஏலேலசிங்கனது" என்று எழுதி அதனைக் கடலிடை எறிந்தார். இங்ஙனம் செய்யும்படி நமது நாயனாரே கட்டளையிட்டனரென்பர். எறிந்த அப் பொற் பாளம் நாள் பல கழிந்தபின் ஒரு மீனால் விழுங்கப்பட்டது. அம் மீன் ஒருவன் வலையிற் பட்டது. ஈர்த்துப் பிளந்தான். அதன் வயிற்றிற் கிடந்து பாசி படிந்து ஒளி மழுங்கியிருக்கும் அதனைக் கண்டான். இன்னதென அறியாது எடுத்துச் சென்று துறைமுகத் தலைவராகிய சிங்கரிடமே சேர்த்தான். அவரும் கடற் கல் எனவே மதித்துப் புறங்கடையிலே கால் கழுவுதற்கு உதவியாகப் போடச் செய்தார். நாள் பல கழிய அதன்மேல் மாசு தேய்ந்தது. ஒரு நாள் அதனை உற்று நோக்கினர். தம் பெயரினைக் கண்டார். பெருமகிழ்வு கொண்டார். அதனை வியந்தெடுத்துப் புனைந்து போற்றினர். ஏலேலசிங்கன் பொருள் எறிந்தாலும் போகாது என்று அன்றுமுதலாக ஒரு சிறந்த பழமொழி இன்

றும் வழங்கொருகின்றது. தாம் உய்த்துச் சொரியினும் போகா என்பதை உலகம் இவர்பால் கண்டது.

செல்வம் நிலைத்தலும் போதலும் ஊழானே ஆம் என்பது கூறப்பட்டது.

377 ஊடி அமுதசுரர் உண்ணத் தொழிந்ததேன்
கோடி தொகுத்துமே குமரேசா—நாடி
வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது. (எ)

குமரேசா! அமிழ்தைத் தாம் வருந்தித் தொகுத்தும் ஏன் அசுரர்கள் அதனை நுகராது ஒழிந்தார் எனின், வகுத்தான் வகுத்த வகை அல்லால், கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது என்க. மிகுதியை விளக்குதற்குக் கோடி என்றார்.

வகுத்தான் என்றது ஊழை. தன்னைச் செய்த உயிரையே வினைப் பயன் சேர வகுத்தலின் அஃது இப் பெயர் பெற்றது. வகுத்தது என்னாது வகுத்தான் என உயர்திணையாக் கூறியது அதன் வன்மை கருதி என்க.

உம்மை சிறப்பும் எச்சமும் தெரிய நின்றது.

பொருள்களைக் கோடி கோடியாக ஒருவன் சேர்த்தாலும் ஊழ் வகுத்த வகை அல்லால் அவற்றை அவன் அனுபவிக்கமுடியாது என்பதாம்.

வகுத்தான் என்பதற்குக் கடவுள் என்று பொருள்கொண்டால் வினைப் பயன்களை உயிர்களுக்கு ஊட்டுவிக்கும் இறைவன் முன்னம் வகுத்தபடியன்றி ஒருவன் பெரும் பொருளைத் தொகுத்தாலும் அதனை அவன் நுகர முடியாதென்று பொருள் கொள்க;

பொருளை மிகுதியாகத் தொகுத்தும் அதனைச் சிறிதும் துய்க்காமல் வறிதே வைத்திருக்கும் சில செல்வரை நோக்கி இதற்குக் காரணம் யாது என்று கருதுவார்க்கு இஃது அருளியதெனக.

பொருளை ஒருவன் வருந்தியீட்டினும் திருந்த இருந்து நுகர்ந்து மகிழ்தற்குரிய ஊழ் இல்லையானால் அதன்பயனை அவன் உண்ணமுடியாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை அசுரர்கள்பால் உணரப்படும்.

## கதை.

அசுரர் உடல்வாங்கிக் கடல் கடைந்து அமிர்தந் திரட்டினர். பின்பு தமருடனிருந்து அனைவரும் அதனை நுகரவிரும்பினர். அதுபொழுது திருமால் ஒரு மோகினி வடிவங்கொண்டு அவர் முன்னே நின்றார். அம் மோகினியின் பேரழகையே நோக்கி அசுரர் பேதுற்று நின்றார். அவ்வமையம் இந்திரன் முதலிய அமரரனைவரும் அவ் அமிர்தினை அமர்ந்து நுகர்ந்தார். மகிழ்ந்தெழுந்து பின் மறைந்து போனார். வருந்தியீட்டியும் அமிழ்தைத் துய்க்கப்பெறாமல் அசுரர் துன்புற்றுழந்தார். கோடி தொகுத்தாலும் நுகர்தற்குரிய ஊழ் இல்லையானால் அதன் பயனை உண்ணமுடியாதென்பதை இவர் அன்று உணர்த்தி நின்றார்.

மதியினை மலரச்சூழ்ந்து வருந்தித்தாம் படைக்கப்பட்ட
நிதியினை நுகர்துமென்று நினைத்தினி திருந்தபோழ்திற்
பதியினைக் கலங்கிச்சென்று பறித்துத்தாம் பிறர்க்குநீட்டும்
விதியினை விலக்கலாற்றா மெலியவால் வெளியவோரார்.

(சூளாமணி)

செல்வமிருந்தாலும் ஊழ்இல்லையானல் அதனை நுகரமுடியா தென்பது இதனல் கூறப்பட்டது.



378 தள்ள வறுமையுறினும் சத்திமுத்தர் நற்றுறவு
கொள்ளாத தென்னே குமரேசா—உள்ளித
துறப்பார்மற் றுப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின். (அ)

குமரேசா! ஒரு பொருளும் இல்லாதிருந்தும், அறிவு மிக்க சத்திமுத்தர் ஏன துறவினைக் கொள்ளாதிருந்தார் எனின், உறற்பால ஊட்டா கழியும் எனின் துப்புரவு இல்லார் துறப்பார் என்க.

துப்புரவு—துய்த்தற் குரிய பொருள்கள்.

உறற்பால—உறுதற்பாலனவாய துன்பங்கள்.

ஊட்டா கழியும் எனின்—உறுவியாது ஒழியுமாயின்.

துறவு என்பது உள்ளன எல்லாம் ஒருங்கே விடுதலையாம், அவ் விடுதலை இயல்பாகவே அமையப் பெற்றிருந்தும் சிலர் ஏன துறவுகொள்ளாமல் வறிதேயிருக்கின்றார் எனின், அதற்குக் காரணம் ஊழ் வலிமையாம என்று அவரை நோக்கி விளக்குணர்த்தியதென்க.

உறுகற்பாலவாயதுன்பங்களை ஊழ் ஊட்டாது ஒழியுமாயின் துய்த்தற்குரிய பொருளில்லாதவர் துறந்து செல்வர் என்பதாம்.

மேல், பொருளிருந்தாலும் ஊழ் இல்லையானல் நுகரமுடியாதென்றார்; இதில், ஒரு பொருளும் இல்லையானலும் ஆகூழ் இல்லையானல் துறவும் கொள்ளமுடியாதென்றார்.

இல் வாழ்ந்திருந்து இன்பம் நுகர வேண்டினும் துறந்து சென்று பயனபெற விரும்பினும் ஊழ் இன்றியமையாதென்

பது கருத்து.

ஒன்றும் இல்லாமையே துறவுக்கு இயல்பாகுமாயினும் வாழ் இல்லானால் அஃது ஒருவனுக்கு உண்டாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் உண்மை சத்தி முத்தர் பால் உணரப்படும்.



## கதை.

சத்திமுத்தப் புலவர் என்பவர் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் சோழநாட்டிலே சத்திமுத்தம் என்னும் ஊரிலிருந்தவர். வறுமையிலும் நல்ல பண்பாளர். அடக்கம் பொறை முதலிய உயர் குணங்களும் அமையப் பெற்றவர். அருமையான கவிகளை விரைவில் பாட வல்லவர். இந்நலங்களெல்லாம் அமைந்திருந்தும் மிக்க வறுமையும் இவரை மேவியிருந்தது. "வெறும் பானையும் அரிதாய் வீட்டில் வரும் எறும்புக்கும் அற்பகம் இல்லை" என்று தம் வறுமையைக் குறித்து இவரே சொல்லி நொந்துளார். வறுமைப் பிணியால் வாடி ஒரு நாள் இவர் மதுரைப் பதியையடைந்தார். அங்கோர் பாழ்மண்டபத்தில் பசியுடன் கூடிப் படுத்துக்கிடந்தார். நடுயாமத்து மாறுவேடம் பூண்டு நகரியல் அறியுமாறு வழுதி வேந்தன் அதனருகே வந்துகொண்டிருந்தான். அவ்வமயம் இரண்டு நாரைகள் ஆகாயத்தில் பறந்து சென்றன.

நாராய்! நாராய்! செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயுநின் மனைவியும் தென்றிசைக் குமரியாடி
வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்திமுத்த வாவியுட் டங்கி

நன்கவர்க் கூரை கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்கும் எனமனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடையின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழையாளனைக் கண்டனம் எனுமே.

என்று நாரையை நோக்கிப் புலவர் தம் இயல்பை விரித்தார். மன்னன் கேட்டுத் தான் கருதியிருந்த நாரையின் கூர்வாய்க்கு



நேரிய உவமை அதில் நேர்ந்திருப்பதை வியந்து புலவருக்கு வேண்டிய நலங்களை விரும்பியுதவினான். இல்லாதவராயிருக்கும் நல்லறிவாளராகிய இவர், துறவிற் செல்லாது நின்றார். அதனை நினைந்து பின் இவரே இரங்கினார். ஊழ் இல்லையாயின் வறுமையுறினும ஒருவன் துறவினையடையான் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்தது. (விரிவைப் புலவர் சரிதையில் காண்க.)

ஊழ் உதவாவழி ஒருவனுக்குத் துறவும் உறியாதென்பது கூறப்பட்டது.

379 அன்றுதுயர் எய்துங்கால் அல்லலின்றிச் சச்சந்தன்
குன்றுபோல நின்றான் குமரேசா—என்றுமே
நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். (௯)

இ—ள்.

குமரேசா! இன்பமெய்தி நின்ற சச்சந்தன் பின்பு தன்

பழுதாங்காலும் அல்லலின்றி ஏன் அமைந்து நின்றான் எனின், நன்று ஆங்கால் நல்லவாக் காண்பவர் அன்று ஆங்கால் அல்லற் படுவது எவன் என்க. நன்று—நன்மை. அன்று—தீமை.

நல்வினை விளையுங்கால் அதன் பயனாகிய இன்பங்களை தாக நுகர்பவர் எனைத் தீவினை விளையுங்கால் அதன் பலனாய துன்பங்களையும் இணங்கி அனுபவியாமல் உணங்கி உளைவது எதற்காக என்பதாம்.

இன்பமும் துன்பமும் தாம் செய்த வினையின்படியே வரும் அவற்றுள் ஒன்றுக்கு இசைந்து மகிழ்தலும் மற்றொன்றுக்கு அசைந்து நெகிழ்தலும் அறிவுடையாருக்குத் தகுதியன்று ஆதலால் "அன்று ஆங்கால் அல்லற்படுவது எவன்" என்றார். வினைப்பயன் துய்க்காமல் தொலையாதாதலால் அதற்கு வருந்துவதால் பயனில்லை என்பது குறிப்பு.

97



கடலிடை நிற்குமொருவன் அஞ்சினும் அஞ்சாவிடினும் அலைகள் அடியாமல் அகலா; அதுபோல் பிறவியில் நிற்பவன வேண்டினும் வேண்டாவிடினும் வினைப்பயன்கள் உறுதல் ஒழியா எனக.

எதுவரினும் அறிவுடையார் இசைந்து அனுபவிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சச்சந்தன் பால் உணரப்படும்.

கதை.

சச்சந்தன் என்பவன் ஏமாங்கத நாட்டு வேந்தன். இராசமாபுரி என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். அரசுக்குரிய எல்லா நலங்களும் அமையப் பெற்றவன் இவனது காலம் இற்

றைந்த பூவாரி ஆனைக்கட்கு முன்னமேயெனபர். பொழுகியாவிய விசையை யையமைந்து இவன் பெருநலம் துய்த்துவருங்கால் கட்டியங்காரன் என்னும் அமைச்சன் கொடுஞ் சூழ்ச்சியால் அரச பதவியைத் தனைசப்படுத்தினன். பின போர் செய்ய வந்தான். அவ்வமையம் நிறைந்த கருப்பவதியாயிருந்த மனைவி அஞ்சி நடுங்கினாள். அவளை இவன் அணைத்துத் தேற்றினன். நமது நல்வினைப்பயனால் இந்திர திருவுடனிருந்து இதுவரை இன்பந் துய்த்தோம். இனி நம் தீவினைப்பயன் சேர நின்றது. அதனை அஞ்சுவதால் பயன் யாதும் இல்லை. ஓடினும் ஒளிப்பினும் ஒடுங்கி நிற்பினும், கூடுமே வினைப்பயன் குறுகும் என்பர். ஆகலால் எது வரவேண்டுமோ அது வருக எனமனம் விடுத்து எது அகல வேண்டுமோ அது அகலுக என்று இணங்கியிருப்பதே உணர்ந்தோர்க்கழகு என்று அவள் உளம் உணர்த்தினன். வினைப் பயனை உவந்து அனுபவித்தான். அறிவுடையார் வினைத் துன்பங்கட்கு அஞ்சி அல்லலுழவார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. (சீவகச் சிந்தாமணியில் காண்க)

சாதலும் பிறத்தல் தானும் தன்வினைப் பயத்தினாகும்
ஆதலும் அழிவுமெல்லாம் அவைபொருட்கியல்புகண்டாய்.
நோதலும் பரிவும் எல்லாம் நுண்ணுணர் வின்மையன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத்தோளியென்றான்.

இது, மனைவி அச்சமுற்றபோது சச்சந்தன் சொன்னது. அன்று அக்கால் இவன் அல்லற்படாது நின்ற உண்மை இதனால் இனிது தெளிவாதல் காண்க.

ஊழின் பயன் எதுவாயினும் அதனை இனிதாகக் கொள்வோனே அறிவாளன் என்பது இதனால் கூறப்பட்டது.

38-ம் அதிகாரம் ஊழ் 773

380 சிந்துபதி முற்சூழ்ந்தும் தேர்ந்துயிர் சிந்தநின்றும்
குந்திமேவன் மாய்ந்தார் குமரேசா—முந்துகின்ற
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று

குமரேசா! சிந்து தேசத்து வேந்தனும், பரீட்சித்து மன்னனும், விளைவுகளை விலக்குதற்குரிய சூழ்ச்சிகளை முன்னதாகவே சூழ்ந்திருந்தும் ஏன் அழிவினை எய்தினர் எனின் ஊழிற் பெருவலி யாஉள; மற்று ஒன்று சூழினும் தான் முந்துறும் என்க. வலி என்பது ஆகு பெயராய் அதனையுடையவற்றைக் குறித்து நின்றது

சூழ்தல்—எண்ணுதல்; அஃதாவது விதியை விலக்குதற்கு உரிய உபாயத்தைக் கருதித் துணிதல்.

மற்று ஒன்று சூழினும்—பிறிதோர் உபாயத்தை எண்ணினும் உண்மை செய்யினும் என்பதைச் சுட்டி நின்றமையால் எச்ச உம்மையாம்,

தான் என்றது ஊழை. முந்துறும்—முன்னதாக நிற்கும். ஊழை விலக்குதற்கு ஏதாவது ஓர் உபாயத்தை எண்ணினும் ஊழ் அதனினும் முற்பட்டுத் தன் பயனை ஊட்டிவிடும் ஆதலால் அவ்வூழ்போல மிக்க வலிமையுடையன யாவை உள எனவாம். யாதும் இல்லை என்பது கருத்து.

மேல், நல்லூழின் பயனை மகிழ்ந்தனுபவிப்பது போல் தீயூழின் பயனையும் அமைந்தனுபவிப்பதே அறிவுடைமைக்கு அழகாம் என்றார். அத் தீயூழை ஏதாவது ஓர் உபாயத்தால் விலக்கிவிடலாகாதா? என்பாருக்கு இஃதுரைத்ததென்க.

வினை விளைவுகளை விலக்குதற்கு வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்யினும் ஊழானது அவையனைத்தையுங் கடந்துவந்து தனபய

னைத் தப்பாது கொடுத்துவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வண்ணம் விருத்தச்சத்திரனை கணைலும் பரிசித்து பாலும் உணரப்படும்.



## கதை.

விருத்தச்சத்திரன் என்பவன் சிந்து தேசத்து வேந்தன். சயத்திரதன் தந்தை. தன் மகன் இன்ன நாளில் இறந்து படுவான் என்று கனவினாலும் அசரீரியாலும் முன்னமே யுணர்ந்தான் அதுமுதல் அவ்வண்ணம் விரைந்து சூழ்ந்து சமந்த பஞ்சகம் என்னும் தனியிடத்தை அடைந்து தென்திசைநோக்கியிருந்து இயமனை நினைந்து "என்மகனுடைய தலையை எவன்தரையில்வீழ்த்துகின்றானோ அவனது தலை உடனே வெடிக்கக் கடவது" என்று உளத்திற் குறித்து உரிய மந்திரங்களை உரைத்துக்கொண்டிருந்தான், இங்ஙனம் இருக்குங்கால் அத்தினபுரியில் நடந்த பாரதப் போரில் பதினான்காம் நாள் மாலையில் சயத்திரதன் தலை அருச்சுனன் கணையால் துணிபட்டது. அப்பொழுது சிந்துமன்னன் சூழ்ந்திருக்கும் உண்மையைக் கண்ணன் உணர்த்தினான். உணர்ந்த விசயன் அத் தலை கீழே விழாதபடி அம்பினை ஏவிக் கண் மூடி மந்திரம் புரிகின்ற தந்தையின் கையில் வீழ்த்தினான் பாவம்! விழித்து நோக்காமல் யாதோ! என்று அதனை அவன் கீழே எறிந்தான். அது தரையில் படவும் அவன் தலை பொடிபட்டது. ஊழை விலக்குதற்கு முற்சூழ்ந்திருந்தும் அதனினும் அது முற்பட்டு நின்றது அதனால் இருவரும் பட்டார். ஊழின் பெருவலியை உலகம் இவன்பால் உணர்ந்தது. விரிவைப் பாரதத்தில் காண்க.

## கதை 2.

பரிச்சித்து என்பவன் அருச்சுனன் குமாரனாகிய அபிமன்னுடைய புதல்வன். தாய் பெயர் உத்தரை. இவன் கருப்பத்திலிருக்கும்பொழுது பாரத யுத்தம் நடந்தது. அசுவத்தாமன் பாண்டவர் மரபு நாசமாகும்படி மந்திர முறையோடு ஓர் அம்பை எவினான். அது உத்தரை வயிற்றிலிருக்கின்ற இக்கரு

வையும் அழிக்கும்படி கிளம்பி வந்தது. கண்ணன் அருவாய்ப் புகுந்து அதனை அகட்டி நீக்கினன். மாலின் பரிசம் கருவிலேயே பட்டதால் இவனுக்குப் பரிச்சித்து என்று பெயரிட்டனர் என்பர். இவன் நல்ல நீதியுடையவன். சிறந்த போர் வீரன். பொறையும் அருளும் பொருந்திய நெஞ்சினன, வனத்திலிருந்த சமீக முனிவர்பால் விளையாட்டாக இவன்செய்த சிறுபிழைக்காக "ஏழு நாட்களுள் பாம்பு கடித்து மடிவாய்" என்று அம்முனிவருடைய புதல்வராகிய சிருங்கி முனிவர் சாபமிட்டனர். அதனை உணர்ந்த இவன், அவ் வினை விளைவை விலக்குதற் பொருட்டு அறிஞர் பலருடன் கலந்தாராய்ந்து ஒரு பிராணியும் அருகில் அணுகாதபடி ஒழுகிய புணையில் சிலருடன் அமர்ந்துபோய்க் கடலிடையிருந்தான். யாதும் அருகில் அணுகாவாறு அனைவரும்



மிக்க ஆயத்தமாயிருந்தனர். குறித்த காலம் வந்தது. கார்க்கோடகன் என்னும் பாம்பு அரசனைக் கடிக்க எழுந்தது. அரசன் முன்னுற ஆய்ந்திருக்கும் தன்மையை யுணர்ந்தது. எலுமிச்சம் பழம்போல உருவெடுத்துக் கடலில் விழுந்தது. அலையால் அலைந்து அலைந்து அலைந்து புணையின் அருகே அணைந்தது. ஊறு ஒன்றும் இல்லையென்று தேர்ந்திருந்த அரசன் வாங்கு வரும் இப் பழத்தை உற்று நோக்கினன் தன் கையால் உடைதெடுத்தான். பழமாயிருந்தது பாம்பாய்க் கடித்தது. மன்னன்

தடித்தான். உடனே மாண்டு விழுந்தான். ஊழை விலக்குதற்கு முற்சூழ்ந்து மிக்க எச்சரிக்கையாயிருந்தும் மன்னன் ஊழ்வயப்பட்டான். மற்றொன்று சூழினும் ஊழ் முந்துறும் என்பதை உலகோர் இவன்பால் உணர்ந்து தெளிந்தார். (விரிவைப் பாகவதத்தில் காண்க)

முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார். (கந்தபுராணம்)

அதிசயம் ஒருவரால் அமைக்க லாகுமோ
துதியறு பிறவியின் இன்ப துன்பதான்
விதிவச மென்பதை மேற்கொள் ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ. (இராமாயணம்)

ஊழை விலக்க எவராலும் முடியாதென்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

ஆகும் ஊழால் முயற்சி தோன்றும். போகும் ஊழால் மடி உண்டாம். நல்லூழ் அறிவைக் கொடுக்கும்; தீயூழ் அதனைக் கெடுக்கும். நூல் பல கற்பினும் ஊழறிவே மிகும். திருவையும் அறிவையும் ஊழ் இருவேறு வகையாய் நின்று உதவும். தீயதை நல்லதாக்கவும், நல்லதைத் தீயதாக்கவும் ஊழ் வல்லதாம். செல்வம் நிலைத்தற்கும் போதற்கும் ஊழே காரணம். செல்வம் பெறினும் நல்லூழ் இல்வழி அதனை நுகரமுடியாது. ஊழ் உதவாவழித் துறவும் உதியாது. வினைப்பயனை எதுவரினும் அதனை உவந்து அநுபவித்தலே உணர்வோர்க்கு அழகு. ஊழை விலக்க ஒருவராலும் முடியாது. ஊழின் வலியே உலகில் மிக்கது.

௩௮-வது ஊழ் முற்றிற்று.

அறத்துப்பாலும் இப்பாலுடன் முடிந்தது.

---

# அறத்துப்பாலின் திரட்டுப்பால்.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கனுள் முன்னதாகிய அறத்தின் இயல்பை உணர்த்திய தால் இஃது அறத்துப்பால் என நின்றது. அறத்துப்பால் என்பதற்கு அறத்தை உணர்த்தும் பகுதி என்பது பொருள். அறமாவது நல்லன செய்தலும் அல்லன ஒழிதலுமாம். அதனை இல்வாழ்க்கை, துறவு, என்னும் இருவகை நிலைகளிலுமிருந்து செய்யலாம். கடவுள் வாழ்த்துமுதல் ஊழ் ஈறாக முப்பத்தெட்டு அதிகாரங்களால் அதன் இயல்புகள் இதில் விளக்கப்பட்டுள்ளன.

## நூலின் முன்னுரை.

உலகு, உயிர் எவற்றிற்கும் முதல்வர் ஒருவர் உளர். அவர் எங்கும் நிறைந்தவர். யாவும் வல்லவர் என்றும் உள்ளவர். இன்பருளினர். அவரை அன்புடன் நினைத்தலே நம் அறிவுடைமைக்குப் பயன். அவர் மழை வடிவாய் நின்றும் உயிர்களைப் பேணுகின்றார். அம்மழையாலேதான் இவ் உலகம் நிலை பெறுகின்றது. பொறிகளை அடக்கி அரியன செய்வோரே இவ்வுலகிற் பெரியவராவர். அவர் அருள்நெறி ஒழுகலே அறநெறியாகும். அவ் அறத்தை இல்வாழ்க்கையில் இருந்து செய்வதே எவர்க்கும் நல்லது.

## இல்லறம்.

கற்புடைய மங்கையை மணந்து நன்மக்களைப்பெற்று, ஒக்கல்பால் மிக்க அன்புடையனாய்ப் பெரியவர், வறியவர் முதலிய எவரையும் பேணி, உணவும் உடையும் உறையுளும் உதவி, இன்சொல் இயம்பி, பிறர் செய்த நன்றியை நினைந்து, நடுநிலை நின்று அடக்கமுடையனாய், ஒழுக்கம்பேணி, பிறருடைய மனைவியரை விழையாமல், பொறையை மேற்கொண்டு, பொறாமையை ஒழித்துப், பிறர் பொருளை விரும்பாமல், புறங்கூறாமல், பயனில சொல்



லாமல், தீவினைக்கு அஞ்சி, ஒப்புரவறிந்து, இயன்றவரை ஈதலைச் செய்து, புகழ்பெற வாழ்வோனே இல்லறத்தான் ஆவான்.

## துறவறம்.

ஆருயிர்மாட்டுப் பேரருளுடையனாய், ஊனுணல் ஒழிந்து உயர் தவம்புரிந்து, வஞ்சமுங் களவும் நெஞ்சாற் கொள்ளாமல், வாய்மைகாத்து, வெகுளியை ஒழித்து, இன்னாசெய்யாமல், ஒன்றையுங் கொல்லாமல், நிலையாமையை நினைந்து, நெடுந்துறவடைந்து, மெய்யுணர்வு எய்தி அவாவினை அறுத்துப்பிறவி அறநிற்போனே துறவறத்தான் ஆவான்.

## ஊழ்.

இவ் எல்லாவற்றிற்கும் ஊழே காரணமாதலால் அவ் உண்மையை உணர்ந்து நல்லொழுக்குரிய நல்வினைகளையே மனமுவந்து நாடிச்செய்தல் வேண்டும்.

## உறுதி.

பிறருடைய மனைவியரை நயவாமலும் புறங்கூறாமலும் உள்ளவரே இல்வாழ்வோருட் சிறந்தவர். மெய்யுணர்வுடையராய் அவாவினை ஒழித்தவரே துறவோருள் உயர்ந்தவர். இவ் இருவகை நிலைகளிலும் நின்று தலைசிறந்த இவ் உயர்நலங்களை அடைந்தவர் எல்லா நலங்களையும் இங்கு எளிதில் அடைந்து அழிவில் வீட்டை முடிவில் அடைவர். இவ்வுண்மையைப் பாலில் நெய்போல் இப்பாலில் காண்க.

உள்ளீர் நமரங்காள் ஓதுந் திருக்குறளாம்
தெள்ளமிழ்த மாந்தித் தெளிமின்கள்—மெள்ள மெள்ள
எல்லா நலங்களும்வந் தெய்துறுமக் கணமேதான்
வல்லான் அருளும் வரும்.

வள்ளுவப் பெருந்தகை மாணடி வாழ்க.

---



## அறத்துப்பாலில் அடங்கியுள்ளவை.

---

---